

# பரிசு பெறும் அகிலன்



நம்முடைய அகிலன் லட்ச ரூபாய்ப் பரிசு பெற்றிருக்கிறார். 'கலைமகள்' இதை அறிந்து இதயபூர்வமான உணர்ச்சியுடன் களிப்பு அடைகிறது. பாரதீய ஞானபீடத்தினர், பாரத நாட்டு மொழிகளில் உண்டான புதிய இலக்கியப் படைப்புகளில் சிறந்த ஒன்றுக்கு ஆண்டு தோறும் லட்ச ரூபாய் பரிசாக அளித்து வருகிறார்கள். இந்த ஆண்டு 11-ஆவது முறையாக இந்தப் பரிசு வழங்கப் பெறுகிறது. இந்த முறை தமிழ் நாட்டு எழுத்தாளருக்குக் கிடைத்தது பற்றித் தமிழ் நாடு முழுவதுமே மகிழ்ச்சி அடைகிறது. அகிலன் எழுதிய சித்திரப் பாவை என்ற நாவலுக்குப் பரிசு கிடைத்திருக்கிறது.

'கலைமகள்' சிறப்பாக மகிழ்வதற்குக் காரணம் இருக்கிறது. அகிலனுடைய 'பெண்' என்ற நாவலுக்குக் கலைமகளைத் தோற்றுவித்த அமரர் நாராயணசாமி ஐயரவர்களுடைய பரிசு 1946-ஆம் ஆண்டு கிடைத்தது. அப்போது அகிலனுக்கு வயசு 24. அதற்கு முன்பிருந்தே கலைமகளில் அவர் சிறுகதை எழுதிவந்தார். பரிசு பெற்ற நாவலுக்குப்பின், நெஞ்சின் அலைகள், வாழ்வு எங்கே, பொன் மலர், எங்கே போகிறோம் என்ற நாவல்கள் கலைமகளில் வெளியாயின. இப்போது 'பால் மரக் காட்டினிலே' என்ற நாவல் வெளியாகிக் கொண்டிருக்கிறது.

'பெண்'ணுக்காக அவர் பெற்ற பரிசு கன்னிப் பரிசு. அதன்பின் தமிழக அரசின் இரண்டாயிரம் ரூபாய்ப் பரிசு கிடைத்தது. அதற்குப் பிறகு சாகித்திய அகாதமியின் ஐயாயிரம் ரூபாய் பரிசு பெற்றார். சென்ற ஆண்டு செட்டிநாட்டரசர் அமரர் அண்ணாமலை செட்டியார் நினைவுப் பரிசாகிய பத்தாயிர ரூபாய் கிடைத்தது. இப்போது பாரதீய ஞானபீடத்தின் லட்ச ரூபாய்ப் பரிசு கிடைத்திருக்கிறது. இப்படிப் படிப்படியாக அவர் பெற்று வரும் பரிசுகள் அவர் தம் எழுத்தில் படிப்படியாக வளர்ந்து வருவதைக் காட்டுகிறது.

அகிலனுடைய நாவல்களும் சிறுகதைகளும் பல இளைய உள்ளங்களைக் கவர்ந்திருக்கின்றன. புதிய படைப்புக்களைப்பற்றிக் கவலைப்படாதிருந்த பல்கலைக் கழகங்கள் விழித்துக்கொண்டு இந்தக் கால இலக்கியங்களைக் கவனிக்கத் தொடங்கியிருக்கின்றன. சிறுகதைகளையும் நாவல்களையும் பாடமாக வைத்துவருகிறார்கள். ஆராய்ச்சித் துறையிலும் இக்கால இலக்கியங்களை அலசி ஆராய்ச்சி செய்யும் செயல் தோன்றியிருக்கிறது.

சென்ற ஆண்டு மதுரைப் பல்கலைக் கழகத்தில் அகிலனுடைய நூல்களின் ஆய்வரங்கு நடந்தது. அவருடைய நூல்களை டாக்டர் பட்டம் பெற மாணாக்கர்கள் ஆராய்ந்து வருகிறார்கள். பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் அவருடைய படைப்புக்கள் இப்போதுதான் புகுந்திருக்கின்றன. பல ஆண்டுகளாகத் தமிழ் மக்களின் உள்ளத்தில் அவர் சிறந்த எழுத்தாளராகக் குடியேறினார். அவருடைய எழுத்துக்கள் அவர்கள் உள்ளத்தைக் கவர்ந்தன. இளைஞர்கள் அவற்றில் ஈடுபட்டுப் படித்தார்கள்; மகிழ்ந்தார்கள்; அவற்றைப் பற்றி உரையாடினார்கள். அதன் பிறகே கல்விச்சாலைகளில் அந்தக் காற்று வீசத் தொடங்கியது.

சென்ற ஆண்டு மலாயா அன்பர்கள் இவரைத் தங்கள் நாட்டுக்கு அழைத்துப் பாராட்டினார்கள். பல இடங்களில் பேசி, தாயகத்தின் கலைத்தூதராய் மலாய் மக்களின் அன்பைப் பெற்ற குதூகலத்துடன் திரும்பி வந்தார். அதன் பயனாகவே "பால்மரக் காட்டினிலே" என்ற நாவல் உருவாயிற்று.

## தீபாவளி மலர்

எங்கள் அதிபர் திரு ராமரத்தினம் அவர்கள் மறைவை முன்னிட்டு இந்த ஆண்டு தீபாவளி மலரை வெளியிடவில்லை என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

---

1922-ஆம் ஆண்டு புதுக்கோட்டை ஸம்ஸ்தானத்தைச் சார்ந்த பெருங்கோளூரிற் பிறந்த திரு அகிலன் எஸ். எஸ். எல். சி. வரையில் படித்தார். தேசிய உணர்ச்சியில் அவர் ஊறினர். பிறகு ரெயில்வே மெயில் ஸார்ட்டராக வேலை பார்த்தார். மிக இளைய வயசிலேயே சிறுகதைகள் எழுதத் தொடங்கினர். முதல் முதலாக அவருடைய 'காசு மரம்' என்ற கதை கலைமகளில் வெளிவந்தது. அப்போதே அவருக்கு எழுத்துலகில் ஒரு சிறந்த எதிர்காலம் உண்டு என்பதைப் பலர் உணர்ந்தார்கள். பிறகு நாவல்களை எழுதினர். அவருடைய நாவல்களிற் சில சினிமாவாக வந்திருக்கின்றன. இந்திய மொழிகளிலும் உலகத்து மொழிகளிலும் அவருடைய சிறுகதைகளும் நாவல்களும் வெளியாகியிருக்கின்றன. அவர் தம் பெயருக்கு ஏற்ப 'அகிலம்' அறியும் ஒருவர் ஆகிவிட்டார். அவருடைய இயற்பெயர் அகிலா[…]டம். அகிலன் என்று சுருக்கிப் புனை பெயரா[…] வைத்துக்கொண்டார். அதுவே இப்போ[…] நிலைத்துவிட்டது. அவர் இப்போது சென்[…] அகில இந்திய ரேடியோவில் பேச்சுத் து[…] இயக்குனராக இருக்கிறார்.

அவருக்கென்று ஒரு நளினமான ந[…] உண்டு. கதை சொல்லும் பாணியிலே ஒ[…] மெருகு இருக்கும். சமுதாயத்தில் புரையோடி[…] கிடக்கும் அக்கிரமங்களைக் கண்டு பொறுக்கா[…] உள்ளம் அவருடைய உள்ளம். அவருடை[…] நாவல்களிலும் சிறுகதைகளிலும் அந்[…] உள்ளக் குமுறல் வெளியாகியிருப்பதை[…] பார்க்கிறோம். அமைதியும் பண்பும் நிறைந்[…] பாத்திரங்களைப் படைக்கும் அவர் பே[…] கொந்தளிப்பும் குமுறலும் உடைய பாத்[…]ரங்களையும் படைக்கிறது. எல்லாவற்றினூடு[…] காந்திய நோக்கு இழையோடுவதைக் கா[…]லாம்.

அகிலன் இன்னும் இளைஞரென்றே சொல்[…] வேண்டும். லட்ச ரூபாய் பரிசு பெற்ற பிற[…] அவருக்குப் பொறுப்பு அதிகமாகியிருக்கிறது[…] இன்னும் அதிகமாக அவர் எழுத வேண்டு[…] இறைவன் திருவருளால் அவர் இன்னு[…] பல்லாண்டு உள்ளமும் உடம்பும் உரம் பெற்[…] வாழவேண்டுமென்று வாழ்த்துகிறோம். பா[…]தீய ஞான பீடத்தினருக்கும் நம்முடை[…] நன்றியையும் வாழ்த்தையும் தெரிவித்து[…] கொள்கிறோம்.

ட்டுக்குள் நுழையுமுன்:

மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் அழைப்பைப் பெற்று, சென்ற மே-ஜூன் மாதங்களில் மலேசியாவில் நான்கு வாரங்களும் சிங்கப்பூரில் ஒரு வாரமும் சுற்றுப்பயணம் செய்து வந்தேன். அங்கே செல்வதற்கு முன்பே மலேசியத் தமிழர்களைப்பற்றி-குறிப்பாக ரப்பர்த் தோட்டத் தொழிலாளர்களாக வாழும் தமிழர்களைப்பற்றி - அறிந்து

விருந்தெல்லாம் ஓரளவு மாறுபட்டவை, மலேசியாவில் உள்ள ரப்பர்த் தோட்டங்கள். சில அடிப்படை அமைப்பு முறைகளில் வேண்டுமானால் ஒற்றுமை இருக்கக்கூடும். மலேசிய ரப்பர்த் தோட்டங்களுக்கென்று சில தனிப் பிரச்னைகள் உள்ளன.

இன்று பெரும்பாலான ரப்பர்த் தோட்டத் தொழிலாளர் மலேசியக் குடிகளானாலும், அவர்களுடைய மூதாதையர் அனைவருமே இந்த மண்ணிலிருந்து அந்த மண்ணுக்குக் குடிபெயர்ந்தவர்கள்.

# பால்மரக் காட்டினிலே

## அகிலன்

கொள்ளும் ஆவல் எனக்கு ஏற்பட்டிருந்தது. மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள் சிலர் எழுதிய கதைகளில் அந்த ரப்பர்த் தோட்டத்து மண்ணின் மணம் கமழக் கண்டேன். அது என் ஆவலை மேலும் தூண்டிவிட்டது.

மலேசியாவுக்கு நான் சென்றபோது, வெள்ளைக்காரர்களுக்குச் சொந்தமான ஏதாவது ஒரு தோட்டத்தில் சில நாட்களாவது தங்கியிருக்க விரும்பினேன். தொழிலாளர் வாழ்க்கையை உடன் இருந்து கவனிக்க வேண்டும் என்ற விருப்பம் எனக்கு. அது அப்படியே நிறைவேறாவிட்டாலும், மூன்று நான்கு தோட்டங்களில் சுற்றிப் பார்த்து அவர்கள் வாழ்க்கை நிலையை ஓரளவு தெரிந்துகொள்ள முடிந்தது. கண்டு, கேட்டு, படித்து எவ்வாறெல்லாம் அறிந்துகொள்ள முடியுமோ அவ்வாறெல்லாம் அறிந்துகொள்ள முயன்றேன்.

இலங்கையிலுள்ள தேயிலைத் தோட்டங்கள், நம் நாட்டிலுள்ள சில காபி - தேயிலைத் தோட்டங்கள் இவற்றி

ஆங்கிலேயத் தோட்ட முதலாளிகளின் தூண்டுதலின் பேரில் அங்கு ஒப்பந்தக் கூலிகளாய் அழைத்துச் செல்லப்பட்டவர்கள். இன்று அங்கு உருவாகி வளர்ந்து வரும் இளைய பரம்பரை அந்த மண்ணையே சொந்த மண் என்று போற்றும் பரம்பரை.

இங்கிருந்து சிலர் தொழில் நடத்தவும், வாணிகம் செய்யவும், உத்தியோகம் பார்க்கவும் அங்கே சென்றுள்ளார்கள் என்றாலும், அவர்கள் சரியாக வேரூன்றாதவர்கள். இளம் தலைமுறையினரான தோட்டத் தொழிலாளர்களில் பெரும்பாலோருக்கு இந்தியாவுடன் எந்தத் தொடர்பும் கிடையாது. அங்கேயே ஆழமாக வேரூன்றி, நாட்டையும் செழிக்க வைத்து, தாங்களும் செழித்துத் தழைத்து வளர வேண்டியவர்கள்.

ஆனால் அவர்களில் பலர் அந்தக் காலத்தில் எப்படிக் காடுகளுக்குள் ஒதுங்கியும் ஒடுங்கியும் வாழ்ந்தனரோ அப்படியே இன்றும் வாழ முற்படுகின்றனர். விடுதலை பெற்ற மலேசியா, கல்வி, தொழில்,

புதிய

தொடர் கதை



வேளாண்மை, கலாசாரம் ஆகியவற்றில் தீவிரமான மறுமலர்ச்சி பெற்று வளரத் துடிக்கிறது. இந்தத் துடிப்பால் அதன் மக்களுக்குப் புதிய வாய்ப்புக்களும் ஏற்படுகின்றன; புதிய அறைகூவல்களும் எதிர்ப்படுகின்றன. இவற்றையெல்லாம் அங்கே தோட்டப்புறங்களில் வாழ்பவர்களும் புரிந்துகொண்டு, நாட்டையும் வளர்த்துத் தாங்களும் வளரவேண்டும் அல்லவா?

மலேசியாவின் மக்கள் தொகை சுமார் ஒரு கோடி என்றால், அதில் பாதிக்கும் சற்று அதிகமானவர் மலாய் மக்கள்; பாதிக்கும் சற்றுக் குறைவானவர் சீன இனத்தவர்; சுமார் பத்துச் சதவீதம் பேரே இந்திய வம்சத்தினர். இவர்களில் பெரும்பாலோர் தமிழர்கள். இப்படிப்பட்ட தமிழர்களில் பாதிப் பேர் தோட்டப் புறங்களில் வாழ்கிறார்கள்.

ஆகவேதான் நான் பால்மரக் காட்டு வாழ்க்கையை என் கதைக்குக் கருவூலமாகக் கொண்டுள்ளேன். இந்தக் கதையை அவர்களில் பலர் படித்துப் புரிந்துகொள்ள முடியுமா என்பதுகூடச் சந்தேகமே. நடுத்தர வயதைத் தாண்டியவர்களில் பலர் மிகக் குறைந்த அளவே கல்வி பயிலும் வாய்ப்பைப் பெற்றவர்கள்.

ஆனால் இளைய தலைமுறை அங்கே மெல்ல மெல்லத் தலைதூக்கி வருவது நம்பிக்கை அளிக்கிறது. இந்தக் கதையையேகூட இன்னும் ஆழத்தோடும், மண்ணின் மணம் கமழவும் சொல்லத் தகுதி பெற்றவர்கள் மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள். ஏனெனில் அந்த மண் அவர்கள் சொந்த மண்.

எனினும் அந்த வாழ்க்கையில் பழக்கப்பட்டுவிட்ட அவர்களை விட, முதல்முறையாக அதன் புதுமையைக் கண்டு, நெஞ்சில் சிறை செய்துகொண்டு வந்திருப்பவன் நான். அந்தப் புதுமை உணர்வும் அவர்களிடம் நான் கொண்டுள்ள மெய்யான அன்புந்தான் எனக்கு இதை எழுதும் துணிவைத் தந்துள்ளன.

இங்கு வாழும் தமிழ் மக்கள் அங்கு வாழும் தமிழ் மக்களைப் புரிந்துகொள்ள வேண்டுமென்பதற்காகவே நான் இதை எழுதுகிறேன்.

இங்குள்ளவர்களுக்கு மலேசிய ரப்பர்த் தோட்டம், அதன் சூழ்நிலை, சுற்றுப்புறம், வாழ்க்கை முறை முதலியவற்றையெல்லாம் சற்று நிதானமாகச் சொல்லிக்கொண்டு போகவேண்டும். மலேசியத் தமிழர்கள் வெறும் குறிப்பால் உணர்ந்து கொள்ளக் கூடியதைத் தமிழ் நாட்டவருக்கு விளக்கிச் சொன்னால்

வட்டாரத் தமிழ்ச் சொற்களை நான் இதில் மிகுதியாகப் பயன்படுத்தவில்லை.

வெறும் பொழுதுபோக்குச் சுவையை மட்டும் நம்பி வேகமாய்க் கதை படிப்பவர்கள் அல்லர் 'கலைமகள்' வாசகர்கள். வாழ்வதற்கென்று கப்பலேறிக் கடல் கடந்து சென்று, இன்றும்கூட நன்றாக வாழமுடியாமல் வாயில்லாப் பூச்சிகளாய் நிற்கும் ஓரினத்தின் வரலாற்றுச் சிறுதுளியை இதில் நான் படம் பிடிக்க முனைந்துள்ளேன். கதைக்குப் பின்னே உள்ள வாழ்க்கையை நோக்குமாறு என் வாசகர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

என்னுடைய குறைபாடுகளை நான் மூடி மறைக்கவில்லை. நான் எழுதும் வாழ்க்கையில் நேரடியான அநுபவம் பெறாதவன். தோட்டப்புறங்களில் வாழாதவன். ஆனாலும் தமிழ்நாட்டு எழுத்தாளன் ஒருவன் மேற்கொள்ளும் முதல் முயற்சி இது. இதுவரை இங்குள்ள எழுத்தாளர் யாரும் நமக்கு ரப்பர்த் தோட்டங்களில் வாழும் மலேசியத் தமிழர்களை அறிமுகம் செய்து வைக்கவில்லை. அந்த வகையில் இந்த நாவல் ஒரு முன்னோடியாக இருந்தால் போதும். எதிர்காலத்தில் மலேசியத் தமிழ் எழுத்தாளர்களிடமிருந்து வெளிவரப்போகும் தலைசிறந்த - தோட்டப்புற வாழ்க்கை கொண்ட - நாவல்களுக்கு காலத்தால் சருகாய் உதிரும் இந்த நாவல் சிறிதளவு உரமாகப் பயன்படுமானால், அதையே நான் பெற்ற பெரும் பேறாகக் கருதுவேன்.

இப்படி ஒரு நாவல் எழுத வேண்டுமென என்னை மலேசியாவில் தூண்டிக் கொண்டே இருந்தவர்கள், என்னைத் தோட்டப்புறங்களுக்கு அழைத்துச் சென்றவர்கள், அவர்கள் வாழ்க்கையை அறிமுகம் செய்தவர்கள், தோட்ட வாழ்க்கையைப் பற்றிய நூல்களையும் புகைப்படங்களையும் எனக்குத் தேடித் தந்தவர்கள் ஆகிய பலப் பல நண்பர்கள் எனக்குப் பேருதவி செய்திருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் எங்ஙனம் நன்றி செலுத்துவது?

மலேசியாவுக்குப் புறப்படுவதற்கு முன்னால், 'நாவலோடு வந்து சேருங்கள்' என்று ஆசி கூறி அனுப்பினார்கள், 'கலைமகள்' ஆசிரியர் திரு கி. வா. ஜ. அவர்கள். அவர்களுக்கும் 'கலைமகள்' அதிபர் திரு நா. ராமரத்தினம் அவர்களுக்கும் என் வாசகர்களுக்கும் நான் கூறும் பதில், ''இதோ நாவலைத் தொடங்கிவிட்டேன்!'' என்பதுதான்.

பொன் விளையும் பூமியான மலேசியாவின் ரப்பர்த் தோட்டங்களில், பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு நிகழ்ச்சியை நாம் முதன் முதலில் காணச் செல்வோம். ரப்பர்த் தோட்டங்களைச் சில வெள்ளைக்கார முதலாளிகள் துண்டு போட்டு விற்றுவிட்டுக் கப்பலேற முயன்ற காலம் அது.

வாருங்கள், நாமும் கப்பலேறிக் கடல் கடந்து செல்வோம். கரையை எட்டி நகரங்களைக் கடந்து, பால்மரக் காட்டுக்குள் நுழைவோம்.

## 1. விக்டரி எஸ்டேட்

பொழுது இன்னும் விடியவில்லை. இருள் இன்னும் விலகவில்லை. ஆனால் புலரும் வேளை மெல்ல மெல்ல நெருங்கிக் கொண்டுதான் இருந்தது. சற்று நேரம் போனால் தோட்டத்துக்குள்ளிருந்து ரப்பர் 'பாக்டரி'யின் நாலு மணிச் சங்கு ஊதத் தொடங்கிவிடும்.

சிரம்பான் நகரத்துக்கு வடக்கே பத்து மைல் தொலைவில் ஒரு சிறுசாலையைப் பார்த்தவாறு அந்த 'விக்டரி எஸ்டேட்'டின் நுழைவாயில் இருக்கிறது. முகப்பை மட்டும் பார்த்துச் செல்பவர்களுக்கு, அது தனக்குள்ளே பெரியதோர் செயற்கைக் காட்டையே வளைத்துக்கொண் டிருக்கிறது என்ற விவரம் தெரியாது.

உள்ளே புகுந்து செம்மண் பாதை வழியே நடந்தால், திடீரென நாம் நடுக்காட்டுக்குள் வந்து விட்டதுபோல் உணர்வோம். காட்டின் வாய் வழியே அதன் அகன்று பரந்த வயிற்றுக்குள் விழுந்துகொண் டிருக்கும் நினைவு நமக்கு வராமல் போகாது. நம்மைச் சுற்றிலும் - முன்னும் பின்னும் பக்கவாட்டிலும் - ஒரே மரங்கள், மரங்கள், மரங்கள். நூல் பிடித்து நட்டு வளர்த்ததுபோல் வரிசை வரிசையாகப் பல்லாயிரக் கணக்கான மரங்கள். நாம் நடக்க வேண்டும்; மேலே மேலே நடந்து போய்க்கொண்டே இருக்க வேண்டும்.

வலதுபுறம் ஒரு மண்மேட்டுப் பொட்டலின்மேல் தெரிவதுதான் வெள்ளைக்கார மானேஜர் துரையின் பங்களா. குறுக்கே சிறு பாலம் வருகிறது. கீழே தண்ணீர் சலசலத்தோடும் சத்தம் கேட்கிறது. மேலும் நடந்தால் ரப்பர்ப் பாலை அரைத்துத் தகடுகளாக மாற்றும் ரப்பர் பாக்டரி தொலைவில் தெரிகிறது. இன்னும் நடந்து, அதையும் கடந்து, செம்மண் பாதையில் விரைந்து செல்ல வேண்டும்.

இதோ, ரப்பர்த் தொழிற்சாலையிலிருந்து நாலு மணிச் சங்கு கூக்குரலிடத் தொடங்கி விட்டது. தொலைவில் லயத்தில் முடங்கிக் கிடக்கும் தோட்டத் தொழிலாளர்களைத் துயில் எழுப்பும் உதயகீதமான பூபாளம் இதுதான்.

செம்மண் பாதை கப்பும் கிளையுமாகப் பிரிந்து செல்கிறது. ஒருபுறம் மாரியம்மன் கோயில், மற்றொருபுறம் கள்ளுக்கடை, வேறொருபுறம் தமிழ்ப் பள்ளிக்கூடம், அங்கங்கே தோட்டத்துச் சிறு அதிகாரிகளின் வீடுகள், சினிமாக் காட்டும் பொட்டல், மருத்துவமனை முதலியன அங்கே தெரிகின்றன.

இன்னும் தொடர்ந்து நடக்க வேண்டும். முகப்பிலிருந்து மூன்று மைல் தொலைவு நடந்தால் அங்கே தொழிலாளர்க் குடியிருப்புக்களான 'லயன்கள்' தென்படுகின்றன. மரப் பலகைகளால் இணைத்துக் கட்டப்பட்டு, மேலே தகரக் கூரை வேய்ந்த ஒருவகைப் பரண் வீடுகள். கீழே மரக் கம்பங்கள் நட்டு, வீட்டுக்கு வீடு தடுப்புச் சுவர்களைப் போன்ற பலகை அடைப்புக்கள். மேலே வரிசை

ரிசையான அறைகள். அறைகளுக்கு ன்னே உள்ள நீண்ட வராந்தா, நாலு டும்பங்களுக்குப் பொதுவானது. ஒவ்வொரு டும்பத்துக்கும் மேலே ஓர் அறை; அதற்குக் ழே உள்ள தரைப் பகுதி. குடும்பத்தில் ரண்டு பேராக இருந்தாலும் சரி, பத்துப் பராக இருந்தாலும் சரி. அதுதான் வீடு.

சங்கொலி முழக்கத்தை அடுத்து, தலையில் ண்டாசும் கைகளில் அரிக்கேன் விளக்கும் டியுமாகக் காவற்காரன் சத்தமிட்டுக் கொண்டும், கைத் தடியால் வீட்டுப் பலகை ளைத் தட்டி ஓசை எழுப்பிக்கொண்டும் செல்கிறான். சோம்பேறிக் கோழிகள் ழித்துக் கொண்டு கொக்கரக்கோ என்று கூவுகின்றன. லயத்தில் அங்கங்கே ஆட்கள் ழித்தெழும் அரவம் கேட்கிறது. மாடிக்கு டியில் பெஞ்சுகளின் மேலும், மேலே அறைகளுக்குமுன் வராந்தாவிலும் முடங்கிக் டெக்கும் ஆண்கள், போர்வைகளை நன்றாக இழுத்துவிட்டுக் கொண்டு, 'முதல் சங்கு தானே இது?' என்ற அலட்சியத்தோடு மற்றொரு குட்டித்தூக்கம் போட முயல் கிறார்கள்.

பெண்களால் இப்படி இருக்க முடியுமா? அவர்கள் வீட்டு வேலை, குழந்தை குட்டிகள், வெளிவேலை இவ்வளவையும் சேர்த்துச் செய்தாக வேண்டும். ஆண்களைப் போல் காலை நேரத்துச் சோம்பலின் சுகத்தை அவர்களால் அநுபவிக்க முடியாது.

வீரப்பன் வீட்டில் முதலில் விழித்துக் கொண்டவள் அவன் மனைவி வேலம்மாள் தான். எழுந்தவுடன் சிம்னி விளக்கையும் அரிக்கேன் விளக்கையும் ஏற்றினாள். பத்தடிக்குப் பன்னிரண்டுள்ள அந்த அறைக் குள் அவள் குடும்பத்தில் பெரும்பகுதி நெருக்கியடித்துக் கொண்டு கிடந்தது. செல்லம்மாளையும் கமலத்தையும் மெல்லப் பற்றி உலுக்கினாள். கைக்குழந்தை ராஜா எழுந்து உதயராகம் பாடிவிடக் கூடாதே என்ற கவலை அவளுக்கு. பிடித்துக்கொண் டால் விடமாட்டான். நடேசனையும் அவள் எழுப்பவில்லை. வெளி வராந்தாவில் படுத் திருந்த பாலனுக்குச் சங்கொலி கேட்ட வுடனேயே விழிப்பு வந்துவிட்டது. தானாக எழுந்து கீழே வந்தான். கீழே பெஞ்சுகளில் அவன் அப்பா வீரப்பனும் அண்ணன் முத்துவும் முடக்கிக் கொண்டு கிடந்தார்கள்.

அடுத்தாற்போல் வேலம்மாளும் பெண் குழந்தைகளும் விளக்குகளோடு மரப்படிகளில் இறங்கிக் கீழே வந்தார்கள். பெரிய தகரத் தொட்டியில் நிரப்பியிருந்த தண்ணீரை மொண்டு பல் விளக்கி முகம் கைகால் கழுவி னார்கள். சுறுசுறுப்போடு விறகுகளை அடுக்கி அடுப்புப் பற்றவைக்கவும், தேநீர் போடவும், சமையல் செய்யவும் தொடங்கினார்கள். வேலைகளைப் பெண்களிடம் பகிர்ந்து கொடுத்துவிட்டுத் தன் கைக்குழந்தை ராஜா வைக் கவனிக்க மேலே சென்றாள் வேலம் மாள். அவளுடைய நாற்பத்தைந்தாவது வயதில், கமலத்துக்குப் பின்னால், ஆறேழு வருட இடைவெளிக்குப் பின்பு பிறந்த எட்டாவது குழந்தை ராஜா. வெந்நீரில் பால் தூளையும் சர்க்கரையையும் கலந்து ராஜாவுக்குப் புகட்டிக்கொண்டே, "காலங் கெட்ட காலத்திலே இது வேறே ஒண்ணு!" என்று தனக்குள் சலித்துக்கொண்டாள்.

பாலனுக்கு இருபது வயதிருக்கும். காலை நேரத்துக் குளிர் ஓரளவு அவனுக்கு நடுக் கத்தைக் கொடுத்ததென்றாலும் அதை அவன் சட்டை செய்யவில்லை. பல் விளக்கக் கரித் தூளை எடுத்துக் காகிதத்தில் மடித்துக் கொண் டான். துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டான். செருப்பை மாட்டிக்கொண்டு அரிக்கேன் விளக்கோடு குளிப்பதற்குப் பொதுக்குளியல் அறைக்குக் கிளம்பினான்.

லயத்துக்கப்பால் ஆண்களுக்கென்றும் பெண் களுக்கென்றும் தனித்தனியே பொதுவான ஒதுங்குமிடமும் குளியல் அறையும் கட்டியிருந் தார்கள். அந்த நேரத்தில் அங்கு வந்து யாரும் குளிப்பதில்லை. தோட்டங்களில் வேலை பார்த்து விட்டு வருபவர்களுக்குப் பிற்பகல் தான் குளிப்பதற்கு வசதியான நேரம். பாலன் கூட இடைக்காலத்தில் மரம் வெட்டிய போது அந்த வேளையில்தான் குளிப்பான்; ஆனால் அவன் இப்போது தோட்டத்துத் தமிழ்ப் பள்ளிக்கூடத்தின் ஆசிரியர்.

சில்லென்ற பச்சைத் தண்ணீரில் அவன் குளித்து முழுகிக்கொண் டிருக்கும்போது ஐந்து மணிச் சங்கு ஊதியது.

இந்தச் சங்கொலி கேட்டபின் லயமெங் கும் ஒரே பரபரப்பு. அநேகமாக எல்லா ருமே விழித்துக் கொண்டுவிட்டார்கள். கைக் குழந்தைகளின் அழுகுரல், கண்காணிகளின் அதட்டல், தெரு நாய்களின் சத்தம் எல்லாம் ஒன்று சேர்ந்து கொண்டன.

வீரப்பனும் முத்துவும் விழித்துக்கொண்டு அவசரம் அவசரமாகப் பல் விளக்கி முகம் கழுவினார்கள். சிறிய மரப் பெட்டியிலிருந்த திருநீற்றை எடுத்து நெற்றியில் பூசிக் கொண் டான் வீரப்பன். கமலம் சுடச்சுடத் தேநீரை அலுமினியத் தம்ளர்களில் ஊற்றினாள்; ஆளுக்கொன்றாய் எடுத்துப் பருகும் வேளையில் அங்கே பாலனும் வந்து சேர்ந்தான்.

காலை வேளையில் தேநீரைப் பருகும்போது வழக்கமாக ஏற்படும் கதகதப்பும் உற்சாக மும் சில நாட்களாகவே அந்த வீட்டில் உள்ளவர்கள் யாருக்கும் ஏற்படுவதில்லை. மாடாய் உழைத்துவிட்டு வந்து படுத்த அலுப் புத் தீர்வதற்கு முன்பே, காலைச் சங்கொலி யைக் கேட்டவுடனேயே, அந்த நினைவும் அவர்களுக்குள்ளே ஒரு கேள்விக் குறியாகப் புகுந்து விடுகிறது. புழுவாய்க் குடையத் தொடங்கி விடுகிறது.

தேநீர் பருகிக்கொண் டிருந்த பாலனைப் பார்த்து வீரப்பன் சொன்னான்: "அடுத்த தோட்டத்திலிருந்து நேத்து ராத்திரியே கச முசன்னு பேச்சு வந்திச்சு. நோட்டீஸ் குடுக் கப் போறாங்கன்னு சொல்றாங்க; குடுத்தாச் சுன்னும் சொல்றாங்க. ஒண்ணும் சரியாத் தெரியலே."

எந்த நினைவுகள் பாலனை அரித்தெடுத் தனவோ அதே நினைவுகள் அவன் தகப்பனை யும் அரித்தன போலும்.

"அப்படியே இன்னிக்கு அடுத்த தோட் டத்துக்குப் போய் உன் அக்கா வீட்டையும் மாமா வீட்டையும் பார்த்திட்டு வா. லட்சுமி யையும் பழனியையும் பார்த்து நிலைமையைத் தெரிஞ்சுக்க."

''சரிப்பா'' என்று சொல்லிவிட்டு உடை மாற்றிக் கொள்ள மேலே போனான் பாலன். அவன் தம்பி நடேசன் இன்னும் எழுந்திருக்க வில்லை. முக்காடு போட்டுக் கொண்டு நன்றாகத் தூங்கினான். வயது அவனுக்குப் பதினாறு இருக்கும். படிப்பும் வரவில்லை. வேறு எந்த வேலையும் இல்லை. வெளிக்காட்டு வேலைக்கும் அவனை எடுத்துக் கொள்ள மறுத்து விட்டார்கள்.

தோட்ட வேலைக்குப் போகிறவர்கள் அங்கிருந்து ஐந்தரை மணிக்குக் கிளம்பவேண்டும். பள்ளிக்குப் புறப்படும் பாலனும் கமலமும் மெதுவாகச் செல்லலாம். பதினைந்து வயதுச் செல்லம்மாள் தன்னையும் கவனித்துக்கொண்டு தன் ஒன்பது வயதுத் தங்கை கமலத்துக்கும் தலை வாரிவிட்டாள். வேலம்மாள் தன் கைக் குழந்தையை வீரப்பனிடம் கொடுத்துவிட்டு, சுடுசோற்றில் குழம்பை விட்டுக் கிளறி அலுமினிய டிபன் பாத்திரங்களில் நிரப்பலானாள். வெளியே தெருவில் நின்றபடி கிழட்டுச் சின்னையா கங்காணி அவர்களை விரட்டி முடுக்கிக்கொண் டிருந்தான். செல்லம்மாளைத் தவிர, மற்றவர்கள் அந்த வீட்டில் அவனுடைய 'காங்கை'ச் சேர்ந்த ஆட்கள். வீரப்பன், வேலம்மாள், முத்து ஆகிய மூவரும் அவன் தலைமையில் வேலை செய்பவர்கள். செல்லம்மாள் மட்டுமே 'வெளிக்காட்டு வேலை'க்குச் செல்கிறாள்.

பால் வெட்டப் போகிற வீரப்பன் தன் கத்தி, உலர்ந்த ரப்பரைச் சேகரிக்கும் மூங்கிற் குடுவை, பால் சேகரிக்கும் பெரிய வாளி முதலியவற்றை எடுத்துக்கொண்டான். வேலம்மாள் நீண்ட மூங்கிற் கழியில் இருபுறமும் வாளிகளைத் தொங்கவிட்டுத் தோளில் தூக்கிக் கொண்டாள். முத்துவும் தயாரானான். எல்லாரும் வேலைக்குப் பெயர் பதிவு செய்து கொள்ள 'மஸ்டர்' களத்துக்குப் புறப்பட்டார்கள்.

செல்லம்மாளுக்குத் தன் சிறிய தம்பி ராஜாவை 'ஆயாக் கொட்டகை'யில் கொண்டு போய்விட வேண்டிய வேலை இருந்தது. அவளும் அவனை இடுக்கிக்கொண்டு கிளம்பினாள். நீண்ட சதுரமான கொட்டகை ஆயாக் கொட்டகை. மேலே தகரம் வேய்ந்திருந்தார்கள்; சுற்றிலும் மூன்றடி உயரத்துக்குப் பலகையால் சுவர்போல் அடைத்திருந்தார்கள். கொட்டகைக்குள் சில துணித் தொட்டில்கள் தொங்கின. குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள இரு ஆயாக்கள் இருந்தனர். வேலைக்குச் செல்லும் தாய்மார்கள் தங்கள் வேலை நேரத்தில் குழந்தைகளை விட்டுச் செல்வதற்கான கூடம் அந்த ஆயாக் கொட்டகை. கைக் குழந்தைகளைத் தவிர, மூன்று நான்கு வயதுச் சிறுவர் சிறுமியருங்கூட அங்கே காணப்பட்டார்கள்.

மஸ்டர் களத்தில் பதினாறு பேர் கொண்ட ஒவ்வொரு 'காங்கு'ம் தன் கங்காணிக்கு முன்னால் நின்றுகொண் டிருந்தது. 'மஸ்டர் கிராணி' ஜோசப் பெயர்ப் பட்டியலுடன் மேசைக்கருகில் நாற்காலியில் உட்கார்ந்திருந்தான். தங்கள் தங்கள் காங்கில் அன்றைக்கு உடல்நலக் குறைவாலோ, வேறு காரணங்களாலோ வேலைக்கு வரமுடியாதவர்களுக்குத் 'திட்டி' சொன்னார்கள் கங்காணிகள். வேலைக்கு வராதவர்களின் இடத்துக்கு அங்கு நின்றுகொண் டிருந்த பதில் ஆட்களில் சில[ர்] அனுப்பப்பட்டார்கள். மரம் வெட்டும் ஒ[வ்]வொருவருக்கும் நானூறு நானூற்றைம்ப[து] மரங்கள் என ஒதுக்கியிருந்ததால், ஓர் ஆ[ள்] குறைந்தாலும் பால் எடுப்பது குறைந்துவிடு[ம்].

ஆறு மணிக்கெல்லாம் மரக் காட்டுக்கு[ள்] மறைந்தார்கள் தொழிலாளர்கள். மி[க] தொலைவிலிருக்கும் பகுதிகளுக்குச் செல்லு[ம்] சிலர், தங்கள் வாளிகளுடன் அங்கிருந்த லா[ரி]யில் ஏறிக்கொண்டார்கள். லாரியும் புழு[தி] மண்ணைக் கிளப்பிக்கொண்டு நகர்ந்தது.

அவரவர் மரங்களை நாடிச் சென்று, கீற[ப்]பட்ட பகுதிகளின் பட்டைகளைச் சீவி[க்] கிண்ணங்களில் பால் வடியச் செய்யவேண்டும். ஒவ்வொரு மரமாக இப்படி முதலில் சீ[வி]விட்டுக்கொண்டே வரவேண்டும். இதற்கு[ள்] காலை பத்துப் பத்தரை மணியாகிவிடும். பிறகு அங்கேயே மரக்காட்டில் காலை ஆகார[ம்] நடக்கும். சாப்பிட்டவுடன் மீண்டும் பாலை[ச்] சேகரிக்க வேண்டும். கிண்ணத்துப் பால் சி[று] வாளிக்கு வந்து பின்னர் பெரிய வாளிக்கு[ம்] மாற்றப்படும். அங்கிருந்து அதைக் கொண்டு போய் நிறுத்துக் கணக்குக் கொடுப்பார்கள். அளவுக்குத் தக்கபடி நாள்தோறும் கூலி பதி[வு] வாகும். தினக்கூலிதான். மாதச் சம்பளம் இல்லை.

செல்லம்மாள் மட்டிலும் தோட்டத்து இளைஞர்களுடன் வெளிக்காட்டு வேலையில் ஈடுபட்டிருந்தாள். புதர்களை வெட்டுவது, காடாய் மண்டும் லாலான் புல் போன்றவற்றை அழிப்பதற்கு மருந்து தெளிப்பது போன்ற வேலையே வெளிக்காட்டு வேலை.

வீரப்பனின் குடும்பத்தைச் சேர்ந்த மற்ற மூவரும் அந்தக் காட்டுக்குள் பால் வெட்டுவதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

## 2. நோட்டீஸ்

லயத்து வீட்டில் பாலன் கண்ணாடிக்கு முன்பு நின்று தலை வாரிவிட்டுக் கொண்டான். 'பான்ட்டை' எடுத்துப் போட்டுக்கொண்ட பின் சட்டையை அணிந்துகொண்டு கீழே வந்தான். மூன்றாம் வகுப்புப் படிக்கும் கமலம் பள்ளிக்குப் புறப்பட்டுத் தன் அண்ணனுக்காகக் காத்து நின்றாள்.

சைக்கிளில் பின்புறம் கமலத்தை ஏற்றிக் கொண்டு அவள் பையையும் தங்கள் சாப்பாட்டுப் பாத்திரத்தையும் முன்னால் மாட்டிக் கொண்டு, வெளியே தெருவுக்கு வந்தான்.

எதிரில் வந்துகொண் டிருந்த மளிகைக் கடை இஸ்மாயில், ''உனக்குச் சேதி தெரியுமா?'' என்று கேட்டான்.

''என்ன?''

''புலி வரப்போகுது வரப்போகுதுன்னு சொன்னானே, அது கடைசியிலே நம்ப தோட்டத்துக்கு அடுத்த தோட்டத்துக்கு வந்திடிச்சு. அது இங்கேயும் வந்து பாயப் போகுதோ, அத்தோட நிக்கப் போகுதோ, தெரியலே.''

''என்ன இஸ்மாயில்?''

''அடுத்த தோட்டத்திலே நேத்துச் சாயங்காலம் எல்லாருக்கும் நோட்டீஸ் குடுத்திட்டாங்களாம்.''

இதைக் கேட்டவுடன் சைக்கிளைப் பற்றியிருந்த பாலனின் கரம் நடுங்கியது. [illegible]

ட்டில் நடந்து செல்
ம்போது ஒரு புலி
திர்ப்பட்டால் எப்
டிக் கிலிபிடித்து
ட்டுமோ அப்படி
ந்தச் செய்தி அவனை
ட்டி வைத்தது.

இஸ்மாயில் அங்கே
ற்கவில்லை; போய்
ட்டான்.

சைக்கிளில் ஏறிச்
சல்லக்கூடிய மன
லையில் அப்போது
ாலன் இல்லை. தள்ளிக்
காண்டே மெல்ல
டந்தான். 'மாமா
வாட குடும்பம் என்ன
ஆகும்? அக்காளோட
டும்பம் என்ன ஆகும்?
இனிமேல் அவுங்க எப்
படிப் பிழைக்கப்
போறுங்க? ஆமா,
ாளைக்கு இதே கதி
இந்தத் தோட்டத்துக்
ம் வந்திட்டா....?'

இந்த நோட்டீஸ்
விவகாரம் பல தோட்
டங்களை அப்போது
அலைக்கழித்துக் கொண்
டிருந்தது. மலைநாட்டுக்
தச் சுதந்தரம் வந்ததை



அடுத்து, பல வெள்ளைத் தோட்ட முதலாளிகள் தங்கள் தோட்டங்களை விற்று விட்டு வெளியேறத் தலைப்பட்டிருந்தனர். அவர்களுடைய பெரிய பெரிய தோட்டங் களை அப்படியே விலைக்கு வாங்கக்கூடியவர்கள் மலேசியாவில் குறைவு. தோட்டங்களைப் பகிர்ந்து, துண்டு போட்டு விற்றுல்தான், மலாய்க்காரர்களிடமோ சீனர்களிடமோ தள்ளிவிட முடியும் போலிருந்தது. துண்டு போடுவதற்கு முன்னுல் தொழிலாளர்களை வெளியேற்றியாக வேண்டும். துண்டு போடப் பட்ட தோட்டங்களுக்கு மிகக் குறைவான ஆட்கள் இருந்தால் போதும். எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்பு ஒப்பந்தக் கூலிகளாகக் கொண்டு வரப்பட்டவர்கள்தாமே இவர்கள்? ஓடாய் உழைத்துத் தேய்ந்தவர்களின் உழைப் பும் பறிக்கப்பட்டு, அவர்கள் நடுத்தெரு வுக்கு விரட்டப்பட்டால் யாருக்கென்ன கவலை? அவர்கள் இருந்தால் என்ன, இறந் தால்தான் என்ன?

நடந்தே பள்ளிக்கூடத்துக்குப் போன பால னுக்கு அங்கே வகுப்பில் பாடம் நடத்த ஓடவில்லை. தலைமை ஆசிரியர் சண்முகத்திடம் சென்று விவரம் சொல்லி, தான் உடனடி யாக அடுத்த தோட்டத்துக்குப் போக வேண்டும் என்றுன். விடுமுறைக்கு எழுதிக் கொடுத்தான். கமலத்திடம் சென்று, பள்ளிக் கூடம் முடிந்தவுடன் அவளை நேரே வீடு திரும்பச் சொன்னுன். சைக்கிளை எடுத்துக் கொண்டு அடுத்த தோட்டத்துக்குக் கிளம்பி னுன்.

மேட்டுப்பாங்கான நெடுஞ்சாலையில் ஐந்து மைல் சைக்கிளை மிதிக்க வேண்டும். வழி நெடுகிலும் இருபுறங்களிலும் ரப்பர் மரக் காடுகள். பால் வெட்டும் நேரத்தில்கூட எங்கேயும் கூட்டமாகத் தோட்டத்தில் ஆட் களைக் காண முடியாது. நானூறு மரங்களுக்கு மேல் ஒருவர் மட்டும் கவனித்தால் போதும் என்ற நிலை உள்ளபோது, கூட்டத்துக்கு அங்கே இடம் ஏது? ஜனசந்தடியே இல்லாமல் வெறிச் சோடிப் போய்த்தான் எப்போதும் ரப்பர்த் தோட்டம் காட்சியளிக்கும். யாராவது ஒரிருவர் அங்கே கண்களுக்குத் தென்படு வார்கள். தனிமை, தனிமை, பொல்லாத தனிமைதான் அங்கே.

அடுத்த தோட்டத்துக்குள் புகுந்து, அவனுடைய மாமன் பழனியின் குடும்பம் வழக்கமாய்ப் பால் வெட்டும் திசையில் தன் சைக்கிளைத் திருப்பினுன் பாலன். செம் மண் புழுதி படிந்த ஒற்றையடிப் பாதையில் அந்தப் பால் மரக் காட்டுக்குள் அவன் சைக் கிள் சென்றது. முதலில் அவன் கண்களில் பட்டவள் கண்ணம்மாதான். அவனுடைய தாய்மாமன் பழனியின் இரண்டாவது மகள் அவள். தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் ஆறும் வகுப்பு வரை படித்து முடித்து விட்டுப் பிறகு வெளிக் காட்டு வேலை பார்த்து வந்தாள். இப்போது பால்மரம் வெட்டும் வேலை கிடைத்திருக்கிறது போலும்! வயது பதினுறு அல்லது பதினேழு இருக்கும். வயதுக்கு மீறி வளர்ச்சி அவளுக்கு.

பாலன் அங்கு வந்துகொண் டிருப்பதை அவள் கவனிக்கவில்லை. மேலே வண்ணச் சட்டையும் இடுப்பில் கைலிபோன்ற சராங் ஆடையும் அவள் உடுத்திக்கொண் டிருந்தாள். நாட்டுப்புறத்துக் கேரளத்துப் பெண்ணை யொத்த தோற்றம். பாலன் சந்தடி செய் யாமல் தன் சைக்கிளை விட்டு இறங்கி அவள்

பால் வெட்டும் வேலையைச் சற்றே பார்த்துக் கொண்டு நின்றான்.

பட்டை உரித்தது போல் காணப்பட்ட மரப் பகுதியில், கீழ்ப்புறம் தென்பட்ட ரப்பர் மரத்துப் பட்டையின் மீது நளினமாகத் தன் கத்தியை வைத்துக் கவனமாக ஓர் இழுப்பு இழுத்தாள் கண்ணம்மா. குபீரென்று பட்டைமீது பால் பொங்கிச் சொரிந்தது. மெல்லத் திரண்டு அவள் இழுத்து விட்ட கோட்டின்மீது வழிந்தது. அடியில் பொருத்தப்பட்ட சிறிய குழாயின் வழியாக அங்கே கட்டப்பட்டிருந்த பீங்கான் கிண்ணத்தில் பாய்ந்தது.

மலர்விட்டு மலர் தாவும் வண்ணத்துப் பூச்சிபோல் அவள் அடுத்த மரத்துக்கு ஓட்டமும் நடையுமாய்த் தாவினாள்.

"கண்ணம்மா."

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தவள், கூப்பிட்டவன் பாலன் என்று தெரிந்து கொண்டவுடன் புன்முறுவல் பூத்தாள். வாய் திறந்து ஏதும் பேசவில்லை. கண்களையும் இமைக்கவில்லை.

வேலை நேரத்தில் காட்டின் தனிமையில் இப்போதுதான் அவளை அவன் முதல் முறையாகச் சந்திக்கிறான்.

"ஏதோ கேள்விப்பட்டேன்; விசாரிச்சுட்டுப் போலாம்னு. . . ."

"ஆமா, நோட்டீஸ் குடுத்திட்டாங்க" என்றாள் தழுதழுத்த குரலில். அவனையே விழித்துப் பார்த்துக்கொண் டிருந்த அவள் விழிகளில்; அறுத்துவிட்ட பால்மரத்திலிருந்து வடியும் பால் போல் கண்ணீர் வழிந்தது.

"எதுக்காகக் கலங்கிறே? நாங்கள்ளாம் இருக்கிறப்போ உங்களுக்கு என்ன வந்திடும்?" என்று ஏதோ முரட்டுத் துணிவோடு ஆறுதல் சொல்லி வைத்தான் பாலன். அந்தச் சூழ்நிலையில் யார்தான் இருந்து என்னதான் உதவி செய்ய முடியுமென்று அவனுக்கே விளங்கவில்லை.

வயது வந்த பெண்ணோடு இளைஞனாகிய தான் அங்கே நின்று அதிக நேரம் பேசுவதை அவன் விரும்பவில்லை. கங்காணியோ கிராணியோ பார்த்தால் ஏதேனும் சொல்லக் கூடும். கண்ணம்மாளைப்பற்றி அவர்கள் தவறாக நினைக்க அது இடம் கொடுப்பதாக ஆகும்.

"சரி, உன்னோட வேலையை நான் கெடுக்கலே; மாமனைப் போய்ப் பார்க்கிறேன். வேலையை முடிச்சிட்டு நீ அங்கே சாப்பிட வரும்போது பேசுவோம்."

"இதோ, பத்து மரந்தான் பாக்கி இருக்கு; நில்லுங்க; முடிச்சிட்டு வந்திடறேன்."

"யாராவது ஏதாவது நினைச்சுக்கப் போறாங்க" என்று தயக்கத்தோடு அவளைப் பார்த்தான் பாலன்.

"நீங்க ஒண்ணும் பிறத்தியார் இல்லையே?"

"இருந்தாலும். . . ."

"அவுங்கள்ளாம் வந்து நோட்டீஸைத் திருப்ப வாங்கிக்கப் போறாங்களா என்ன? தலைக்குமேலே வெள்ளம் வந்திடுச்சு. இனிமேல் யாருக்குப் பயந்து என்ன நடக்கப் போகுது?"

வயதுக்கு மீறிய உடல் வளர்ச்சிமட்டும் அல்லாமல் மன வளர்ச்சியும் அவள் பெற்றிருந்தது அவனை வியக்கச் செய்தது. பொறுப்பை உணராதவளாக இருந்திருந்தால் நோட்டீ அவளை அவ்வளவு தூரம் கலக்கியிருக்கா கண்ணம்மாள் வெகுளிப் பெண்ணல்ல.

"சரி, நான் காத்துக்கிட்டிருக்கேன். அ சரப்பட்டு மரத்தைக் காயப்படுத்திடாதே நிதானமா வெட்டு."

நிதானத்தோடுதான் கண்ணம்மா மர வெட்ட முயன்றாள். ஆனாலும் அவளா அது முடியவில்லை. ஆறுதலுக்காக அவன் சொன்ன சொல், 'நாங்கள்ளாம் இரு கிறப்போ உங்களுக்கென்ன வந்திடும்?' என்ற சொல், அவள் நெஞ்சிலே ஆழப் பதிந்தது. கற்பனைகள் திடீரென்று படரத் தொடங்கின. எதை எதையோ நினைத்துக் கொண்டு பரபரப்படைந்தாள் அவள்.

இந்தப் பரபரப்பால் அவள் தன்னையும் மீறி ஒரு மரத்தைக் காயப்படுத்திவிட்டாள். பட்டையைச் சீவவேண்டிய பகுதியில் கத்தியைத் தவறுதலாக ஆழமாய்ப் பாய்ச்சி விட்டாள். அந்தக் காயம் பட்ட பகுதியில் பால் திரண்டு நின்று அது மேடு தட்டிவிடும். கங்காணியிடம் அது அவளைக் காட்டிக் கொடுத்துவிடும். பிறகு, அதற்குத் தண்டனையாக ஒரு வாரமோ பத்து நாளோ அவளுக்கு வேலை தரமாட்டார்கள்.

'இனிமே வாங்கப் போறது ஒரு மாசத்துக் கூலி. அதிலே பத்து நாள் போனால் போகட்டுமே!' என்று தனக்குள் நினைத்துக் கொண்டாள். ஆனாலும் அவள் மனம் அமைதியுறவில்லை. மரத்துக்குப் பட்ட காயம் ஓர் அபசகுனமாகவே அவளுக்குத் தோன்றியது. 'நல்லதை நினைக்கிறப்போ பொல்லாதது நடந்திடும் போலே இருக்கே!' அவள் அந்தப் பால் மரத்தில் பட்ட காயத்தைத் தன்னுடைய நெஞ்சில் பட்ட காயமாக நினைத்துக் கொண்டாள்.

எப்படியோ பல்லைக் கடித்துக் கொண்டு மற்ற மரங்களையும் வெட்டி முடித்தாள் அவள். பிறகு தன் தலை மயிரை ஒழுங்காக ஒதுக்கிவிட்டுக் கொண்டாள். இடுப்பில் செருகியிருந்த கைக்குட்டையால் முகத்தை அழுத்தித் துடைத்துக்கொண்டாள். பாலனின் அருகில் வந்து நின்று, "வாங்க, போகலாம்" என்றாள்.

"பின்னாலே உட்காந்துக்க; சைக்கிளில் போயிடலாம்."

"ஊஹூம்; இப்போ என்ன அவசரம் வந்திருக்கு? மெதுவா நடந்தே போகலாம், வாங்க."

பால் வெட்டும் தொழிலாளருக்கு அது இடைவேளை நேரம். தன்னுடைய அம்மாவும் அப்பாவும் அருகில் உள்ள சிற்றருவிக் கரையில் தனக்காகவும் தன் அக்காள் காமாட்சிக்காகவும் காத்திருப்பார்கள் என்றாள் கண்ணம்மா. சாப்பிட்டுவிட்டுச் சற்றே இளைப்பாற நேரம் இருக்கும். பிறகு மீண்டும் பால் சேகரிக்கும் வேலைக்குத் திரும்ப வேண்டும்.

"உங்ககிட்ட ஒரு சேதி சொல்லவேண்டியிருக்கு" என்று தொடங்கினாள் கண்ணம்மா.

"சொல்லேன்!"

"அதை இப்பவே சொல்லிவிட முடியுமா?" என்று அவனை ஏறிட்டுப் பார்த்தாள். "வர்ற ஞாயித்துக்கிழமை இந்தப் பக்கம் வாங்க! மெதுவாப் பேசுவோம்."

"ஞாயித்துக்கிழமை நான் வர்ரேன். ஆனால், அதே சேதியை இப்பக்கூடச் சொல்லலாமே?"

"இந்த நோட்டீஸுன்னு ஒண்ணு வரலேன்னா, அதைப் பெரியவங்க விஷயம்னு விட்டிருப்பேன். நோட்டீஸைக் கண்ட பிறகு ராத்திரியெல்லாம் எனக்குத் தூக்கமே வரலே. என்னென்னமோ கெட்ட சொப்பனமெல்லாம் கண்டேன்."

"அநாவசியமா நீ ஏன் பயப்படறே?"

"பயப்படாம எப்படி இருக்க முடியும்?"- அவன் முகத்தை நேருக்கு நேர் பார்த்துக் கேட்டாள் கண்ணம்மா.

அவனுக்குப் பதில் சொல்லத் தெம்பில்லை. மௌனமாக இருவரும் நடந்தார்கள்.

தோட்டத்து மேட்டருவிக் கரையில் கண்ணம்மாவின் அப்பா பழனி, அம்மா தங்கம், அக்காள் காமாட்சி மூவரும் அவளுக்காகக் காத்துக்கொண் டிருந்தார்கள். அவர்களுக்கு மத்தியில் சாப்பாடு தயாராக இருந்தது.

"வாத்தியார் மாப்பிளே! வாய்யா, வீட்டிலே எல்லாரும் சுகமா?" என்று உற்சாகத்தை வரவழைத்துக்கொண்டு பாலனுக்கு வரவேற்புக் கூறினான் பழனி. அவனை அன்றைக்கு அங்கே கண்டது மற்றவர்கள் அனைவருக்குமே ஆறுதலாக இருந்தது. "உட்கார்; முதல்லே சேர்ந்து சாப்பிடுவோம்; ரொம்ப நாளாச்சு" என்றான் பழனி.

பாலனுக்குப் பழனியின் பேச்சு வெறும் வெளிப்பூச்சு என்று பட்டது. உட்கார்ந்து கொண்டே, "நோட்டீஸ் வந்திருக்காமில்ல?" என்றான் பாலன்.

இதைக் கேட்டவுடன் பழனியின் செயற்கை உற்சாகம் பஞ்சாய்ப் பறந்து விட்டது. அங்கிருந்த அனைவர் முகங்களிலும் ஈயாடவில்லை. தன் சட்டைப் பையிலிருந்து பழனி ஒரு காகிதத்தை எடுத்துப் பாலனிடம் நீட்டினான்.

படித்துப் பார்த்தான் பாலன்.

அதில் அந்தத் தோட்டத்தை விற்பனை செய்ய முடிவு செய்து விட்டதாகவும், அதில் வேலை பார்த்து வரும் எல்லாத் தொழிலாளர்களும் இன்னும் ஒரு மாதந்தான் அங்கே வேலை பார்க்கலாம் என்றும் கண்டிருந்தது. ஒரு மாதத்துக்குப் பின் அங்கே யாருக்கும் வேலை கிடையாது. தோட்டத்து லயனை அவர்கள் காலி செய்துவிட்டு வெளியேறிவிட வேண்டும். அப்படி அவர்களாகவே காலி செய்யத் தவறினால், அவர்கள் கட்டாயமாக வெளியேற்றப் படுவார்கள். போகும்போது அவர்களுக்குரிய கணக்கைத் தீர்த்துப் பாக்கியுள்ள கூலி கொடுக்கப்படும்.

பாலன் சிலையாக உட்கார்ந்துவிட்டான். மலைநாட்டுத் தோட்டங்களில் உழைத்து வரும் லட்சக்கணக்கான தொழிலாளர்களின் எதிர்காலம் எவ்வளவு பலவீனமான அடிப்படையில் சுழல்கிறது என்பது அவனுக்குப் புரிந்துவிட்டது. அவனுடைய மாமன் குடும்பம், அக்காள் குடும்பம் தவிர, மற்றுமுள்ள சுமார் இருநூறு குடும்பங்களின் கதியை எண்ணிப் பார்த்தான்.

அவனுக்குச் சாப்பாடு உள்ளே போகவில்லை. மற்றவர்களைத் திருப்திப்படுத்த வேண்டுமென்பதற்காகச் சாப்பிடுவதுபோல் பாவனை செய்தான்.

(தொடரும்)

# அறிவிப்பு

ஸ்ரீ நாராயணசாமி ஐயர் நாவல் பரிசுப் போட்டிக்கு நாவல் அனுப்பும் கடைசித் தேதியை இன்னும் கொஞ்சம் தள்ளிப் போட வேண்டும் என்று பல அன்பர்கள் எழுதிக் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆதலால் போட்டிக்கு நாவல் அனுப்ப வேண்டிய கடைசித் தேதியை மார்ச் மாதம் வரையில் நீட்டித்திருக்கிறோம். 1976 மார்ச் 31 - ஆம் தேதிக்குள் நாவல்கள் எங்களுக்கு வந்து சேர வேண்டும். போட்டி நிபந்தனைகள் பற்றிய அறிவிப்பு 47 - ஆம் பக்கத்தில் வெளியாகியிருக்கிறது.

—ஆசிரியர்

# ஆகார நியமம்

கல்வி கற்பதில் ஆதாரக் கல்வி முக்கியமான விஷயம் என்று தற்காலத்தில் அபிப்பிராயம் கொண்டிருக்கிறார்கள். இந்த ஆதாரக் கல்வியைச் சிறுவர்களுக்கு மாத்திரம் அல்லாமல் பெரியவர்கள் எல்லாருக்கும் புகட்டவேண்டியது அவசியம். அந்தக் கல்வியில் ஒரு முக்கியமான பாகம், அவரவர்களுடைய வாழ்க்கைக்கு வேண்டிய காரியங்களை எல்லாம் பிறருடைய உதவி இல்லாமல் அவரவர்களே செய்துகொள்ள வேண்டும் என்பதுதான். இதுதான் ஆதாரக் கல்வியின் முக்கியமான அம்சம்.

வாழ்க்கைக்கு முதலாக வேண்டியது அன்னம். நமக்கு வேண்டிய உணவை, நாமே தயார் செய்து கொள்ளவேண்டியது தான் ஆதாரக் கல்வியின் முக்கியமான நோக்கமாக எனக்குப் படுகிறது.

நம்முடைய சாஸ்திரத்தில் ஐம்பது வயதுக்குப் பிறகு ஒருத்தன் கல்யாணம் பண்ணிக் கொள்ளப்படாது என்று சொல்லியிருக்கிறது.

"பஞ்சாசத் வத்ஸரா தூர்த்வம்
ந குர்யாத் பாணி பீடனம்"

பாணி என்றால் கை. பீடனம் என்றால் பற்றிக்கொள்வது. ஒருவருக்கொருவர் ஆயுசு பரியந்தம் ஆதரவாக இருப்பது, துணையாக இருப்பது என்கிற சங்கல்பத்தில் இருவரும் கையைக் கோத்துக்கொள்வது பாணிக்கிரஹணம். இதுவும் ஐம்பது வயசுக்குமேல் கூடாது என்று சாஸ்திரம் விதிக்கிறது.

ஆனால் செல்வாக்கும் பணமும் உள்ளவர்களாக இருந்தால் எழுபது வயசுக்குமேலும் பாணிக்கிரஹணம் பண்ணிக்கொள்ளுகிறார்கள். ''என்ன இப்படி! இவ்வளவு வயசுக்குமேற் கல்யாணம் பண்ணிக்கொள்கிறீர்களே?'' என்று அவர்களைக் கேட்டால், ''அகத்தில் சமையல் செய்வதற்கு ஆள் இல்லையே! என்ன பண்ணுவது?'' என்கிறார்கள். சமையல் செய்வதற்கு ஆள் இல்லை என்பதற்காக இப்படி ஒரு பெண்ணின் வாழ்வையே குலைக்கிறார்கள். ஆதாரக் கல்வி பயின்று அவனவன் அவனவனுக்கு வேண்டிய அன்னத்தைச் சமையல் செய்து கொள்வதற்குத் தெரிந்துகொண்டு விட்டால் இம்மாதிரியான ஒரு பாபத்தைச் செய்யும் போது அந்தப் பதிலைச் சொல்லமுடியாது. அகத்தில் சமையல் பண்ணுவதற்கு மனுஷ்யாள் இல்லை என்று நியாயம் சொல்லி, ஐம்பது வயசுக்குமேல் கல்யாணம் பண்ணிக் கொள்கிற ஆபாசமான நிலைமை உண்டாகாது. நமக்கு வேண்டிய ஆகாரத்தை நாமே தயார் செய்துகொள்வதற்குத் தெரியாததே ஒரு பெரிய தப்பில் கொண்டு போய் விடுகிறது. ஆகவே, ஆதாரக் கல்வியின் அடிப்படை நோக்கமாக இனி நாம் நமக்குத் தேவையான ஆகாரத்தை நாமே தயார் செய்து கொள்ளப் பழகிக்கொள்ள வேண்டும்.

இன்னொரு காரணம் சொல்கிறேன்: வங்காள மாகாணத்திலும், யு. பி. மாகாணத்திலும், கீழ் பஞ்சாப், மேல் பஞ்சாப் மாகாணங்களிலும், மத்தியப் பிரதேசத்திலும், ஆந்திரம், கன்னடம் பிரியாமல் இருந்த சென்னை மாகாணத்திலும் இருந்த சம்ஸ்கிருதப் பள்ளிக்கூடங்களை மேற்பார்வை செய்ய, சம்ஸ்கிருதம் தெரிந்த ஒருவரைத் தனியாக இன்ஸ்பெக்டராக நியமித்திருந்தார்கள். போன வருஷம் வரையிலும் சென்னை ராஜ்யத்திலும் ஓர் இன்ஸ்பெக்டர் இருந்தார். இப்போது அந்தப் பதவியையே எடுத்துவிட்டார்கள் போலிருக்கிறது. முன்பு சென்னை ராஜ்யம், மலையாளம், கன்னடம், ஆந்திரம் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்திருந்த போது சம்ஸ்கிருத இன்ஸ்பெக்டர் என்று தனியாக நியமிப்பதற்கு எத்தனை சம்ஸ்கிருதப் பள்ளிக்கூடங்கள் இருந்தன என்று பார்த்தால், எனக்குத் தெரிந்து 140 பள்ளிக்கூடங்கள் தாம் இருந்தன. மலையாளத்தில் உள்ளவர்களுக்கும் சரி, இங்கே உள்ளவர்களுக்கும் சரி, மற்ற மாகாணத்தவர்களைக் காட்டிலும் சம்ஸ்கிருத அபிமானம் அதிகம். அதுமாத்திரம் அல்ல. இங்கேயுள்ள பாடசாலைகளுக்கு நிறையச் சொத்து எழுதி வைத்திருக்கிறார்கள். சமையல்காரன், மணியக்காரன் என்றெல்லாம் போட்டுச் சம்ஸ்கிருதம் சொல்லிக் கொடுக்க ஏற்பாடுகள் நிறையச் செய்திருந்தும் 140 சமஸ்கிருதப் பள்ளிக்கூடங்களுக்கு மேல் இல்லை. ஆனால் யு. பி., வங்காளம், மத்தியப் பிரதேசம் இங்கெல்லாம் போய்ப் பார்த்தால் ஆயிரம், ஆயிரத்தைந்நூறு பள்ளிக்கூடங்களுக்குமேல் இருக்கின்றன. இங்கே இருப்பது போலச் சொத்தோ, பணமோ, சமையல்காரனோ, மணியக்காரனோ ஒரு பள்ளிக்கூடத்துக்குக் கூட அங்கே கிடையாது. நான் அந்தப் பக்கம் கிராமம் கிராமமாக யாத்திரை போனபோது இதைப்பற்றி விசாரித்திருக்கிறேன். ஒவ்வொரு மாகாணத்திலும் எப்படி ஆயிரத்துக்கும் மேற்பட்ட சம்ஸ்கிருதப் பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன என்று விசாரித்த போது, ''சம்ஸ்கிருதப் பள்ளிக்கூடம் என்றால் எங்களுக்கு என்ன செலவு?'' என்று அவர்கள் கேட்டார்கள்.

[ஸ்ரீமத் காமகோடி பீடாதிபதிகளாகிய ஸ்ரீமத் ஆசாரிய சுவாமிகள்
5-12-1957 அன்று அருளியது.]

# பால்மரக் காட்டினிலே

## அகிலன்

## 3. வேரற்ற கன்றுகள்

ரப்பர் மரத் தோட்டத்தின் நிழலில், சலசலத்தோடும் மேட்டருவிக்கு அருகில், இதமான மென்காற்று வீசும் வேளையில், அமைதியும் ஆனந்தமும் நிறைந்த சூழ்நிலையில்தான் அவர்கள் சாப்பிட அமர்ந்திருந்தார்கள். ஆனால் அங்கிருந்த ஐவர் மனத்திலும் அமைதியோ ஆனந்தமோ இல்லை. பாலன் மற்றவர்களை ஏமாற்றுவதற்காக அவர்களுடைய சாப்பாட்டில் பங்கு கொண்டான். மற்றவர்களோ பாலனிடம் தங்கள் கவலையை மறைப்பதற்காகச் சாப்பாட்டு நாடகம் நடத்தினார்கள்.

இருந்தாலும் பாலனின் அத்தை தங்கத்தால் பொறுக்க முடியவில்லை. ''இனிமே நாங்க எங்கே போறது? எப்படிப் பொழைக்கிறது? ஒருத்தரா, ரெண்டு பேரா? ஏழு பேர் கஞ்சி குடிக்கணுமே?'' வாயில் சோற்றை வைத்துக்கொண்டே குமுறினாள்.

அவன் அக்கா லட்சுமியின் குடும்பம் பழனியின் வீட்டுக்கு முன்னால்தான் அதே லயனில் இருந்தது.

''லட்சுமியை நினைச்சாத்தான் இன்னம் பாவமாயிருக்கு'' என்றாள் தங்கம்.

பாலன் சைக்கிளில் ஏறி மிதித்தான். அவன் மனம் இந்தப் பிரச்னையுடன் மோதுவதற்கு ஒரு வழி தேட முயன்றது. தோட்டத் துண்டாடலால் பாதிக்கப்படும் தொழிலாளர்களைக் காப்பாற்ற அரசாங்கம் கூட்டுறவு இயக்கம் ஒன்றுக்கு ஆதரவு தரத் தொடங்கியிருந்தது. தலைவர்கள் சிலர் தோட்டத்துக்குத் தோட்டம் சென்று கூட்டுறவுச் சங்கத்தில் சேரும்படி தொழிலாளர்களைத் தூண்டிக்கொண்டிருந்தார்கள். அந்த இயக்கம் வெற்றி பெறுமானால், ஓரளவு அவர்களுடைய பாதுகாப்புக்கு வழி இருப்பதுபோல் பாலனுக்கு ஒரு நம்பிக்கை தலை நீட்டியது.

மாரியம்மன் கோவில் பக்கம் பாலன் வந்தபோது, கோவில் மண்டபத்தில் சில முதியவர்கள் கூட்டமாய்க் கூடிப் பேசிக்கொண்டிருந்ததைக் கண்டான். அவர்களில் அவனுக்குத் தெரிந்தவர் யாரும் இல்லை. அங்கிருந்து தொழிலாளர் குடியிருப்பை நோக்கித் திரும்பினான். லயனை ஒட்டினாற்போல் அதன் தொடக்கத்தில் மலையாளத்து முஸ்லிம் ஒருவனின் கடை இருந்தது. பலசரக்கு வியாபாரம் ஒரு புறமும் தேநீர் வியாபாரம் மறுபுறமும் நடக்கும் கதம்பக் கடை அது. மாடியில் குடும்பம்; கீழே கடை. தேநீர்க் கடை மேசையைச் சுற்றி உட்கார்ந்து ஏழெட்டு இளைஞர்கள் பரபரப்போடு பேசிக்கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருவனான கணேசன், பாலனைப் பார்த்துவிட்டுக் கூட்டத்தை விட்டு எழுந்து வந்தான்.

''என்ன கணேசா, வேலைக்குப் போகலையா?''

''வா, பாலா'' என்று அவனை உள்ளே அழைத்துச் சென்றபடியே, ''வேலைதான் போயிடும் போலே இருக்கே; அதனாலேதான் இன்னிக்கு வேலைக்குக் கிட்டி போட்டுட்டு,

''வேலையையும் விட்டு வீட்டையும் விட்டு, தோட்டத்தையும் விட்டு, வெளியே போகணுமாம். நோட்டீஸ் குடுத்திட்டான்!'' என்றான் பழனி.

''இன்னம் ஒரு மாசம் இருக்கில்ல? கவலைப் படாதிங்க'' என்று அவர்களைத் தேற்றிவிட்டு, தனக்குள் கவலைப்படலானான் பாலன். அந்தத் தோட்டக் காட்டுக்குள் வேலை செய்யும் அத்தனை குடும்பங்களையும் அப்போது வாட்டிக்கொண்டிருந்த கவலை அது: 'எங்கே போறது? எப்படிப் பிழைக்கிறது?'

அவர்களுக்கு மத்தியில் உட்கார்ந்து கலங்கிக்கொண்டிருக்காமல், ஏதாவது அதற்கு வழி தேட வேண்டுமெனத் தோன்றியது, பாலனுக்கு. எழுந்து வந்து தன் சைக்கிளை எடுத்துக்கொண்டான். ''சரி, நீங்க பாலெடுத்துக் குடுத்திட்டு வீட்டுக்கு வாங்க; இதைப்பத்தி நானும் விசாரிச்சுக்கிட்டு வர்ரேன். வீட்டுக்கு

இங்கே கூட்டம் போட்டிருக்கோம்'' என்ருன் கணேசன்.

பாலனுக்குத் தெரிந்த இளைஞர்கள் நாலைந்து பேர் அங்கே இருந்தார்கள். சுற்றிலும் ஒரு கண்ணோட்டம் விட்டான் பாலன். பெரும் பாலோர் தோட்டத்துத் தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் ஆறும் வகுப்புவரையில் படித்து நிறுத்திவிட்டு, தங்கள் பெற்றோரைப் போலவே தோட்ட வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள். சிலர் ஆறும் வகுப்பைக்கூட எட்டவில்லை. அந்தத் தோட்டத்து மண்ணிலேயே கருவாகி, உருவாகி, வித்தாகி, பயிராகி, இன்று சிறு செடியாய் வேரூன்றி வளரத் துடிப்பவர்கள். தோட்டமாகிய அந்த மரக் காட்டை விட்டால் வேறு வெளி உலகத் தொடர்பே சிறிதும் இல்லாதவர்கள. மேற்படிப்புக்கும் வழியில்லை; வேறு வேலைக்கும் பயிற்சியில்லை. சரியாக அவர்களுக்கு வழி காட்டுவோரும் இல்லை. ஆணிவேர் நறுக்கப்பட்ட இளங்கன்றுகளாக அவர்கள் அங்கே தத்தளித்துத் தடுமாறிக் கொண்டிருந்தார்கள்.

பாலனுக்குத் தேநீர் வரவழைத்துக் கொடுத்துவிட்டு, கணேசன் பேசினன்:

''வெள்ளைக்காரத் தோட்ட முதலாளிக்கு ஆள் தேவைப்பட்ட காலத்திலே, நம்மவங்களை நாட்டை விட்டு நாட்டுக்கு ஒப்பந்தக் கூலியாக் கொண்டாந்தான். அரை வயித்துக் கஞ்சிக்கு அல்லும் பகலுமா உழைக்கச் சொன்ருன். உறிஞ்ச வேண்டியதையெல்லாம் உறிஞ்சியாச்சு; சக்கையைத் துப்பி எறிஞ்சிட்டு, தோட்டத்தை வித்த பணத்தை மூட்டை கட்டிக்கிட்டு, அவன் கப்பலேறப் போருன்; நாம இப்ப எங்கே போறது? எப்படிப் பிழைக்கிறது?''

''இந்த நிலையிலே இனிமே நாம எப்படிப் பிழைக்கிறதுங்கறதுதான் நம்மோட ஒரே பிரச்னை'' என்ருன் பாலன்; ''இதைப் பத்தித்தான் நாம யோசனை பண்ணி ஒரு முடிவுக்கு வரணும்.''

''இனிமே நாம இந்தியாவுக்குத் திரும்பிப் போக முடியாது. பொறந்த மண்ணை நினைச்சு மண்டை வீங்கிப் போயிருந்த பழைய தலைமுறை இங்கேயே மண்டையைப் போட்டிடுச்சு. இந்த மண்ணிலே நம்ப பிறந்து வளர்ந்தாச்சு. சாதி சனம் யாரும் நமக்கு அங்கே இல்லே. இருந்தாக்கூட, அவுங்க பாடே அங்கே திண்டாட்டம்னு தெரியுது'' என்ருன் கணேசன்.

''எங்கேயோ காடுகளை வெட்டிப் புதுசாக் குடியிருப்புக்களை ஏற்படுத்துருங்களாம். குடும்பத்துக்கு இவ்வளவுன்னு நிலமும் தர்ராங்களாம்....'' என்ருன் வேருெருவன்.

''சாபா மாநிலத்திலே புதுசா ரப்பர்த் தோட்டம் போடப் போருங்களாம். காடுகளை வெட்டி அழிக்கணுமாம்; தோட்டம் போடணுமாம். அங்கேகூட வேலை கெடைக்கும்'' என்ருன் மற்ருெருவன்.

''ஆளுக்குக் கொஞ்சம் பணம் குடுத்துக் கூட்டுறவுச் சங்கத்திலே சேர்ந்தா, அரசாங்கம் வேறே கடன் குடுக்குதாம். இதே தோட்டத்தைக் கூடக் கூட்டுறவிலே நம்மாலே விலைக்கு வாங்க முடியுமாம்.'' இது ஒருவனின் யோசனை.

இப்படி ஆளுக்கொரு யோசனையாகக் கூறினர்கள் இளைஞர்கள். வாழ்க்கையே போராட்டமாகி விட்டதால், அவர்களிடையே சிந்திக்கும் திறமையும் கூடவே சிறிது சிறிதாக வள

இல்லாவிட்டால்கூட, ஓரளவு உலக அநுபவம் அவர்களிடம் இல்லாமல் இல்லை.

''எனக்கு இருக்கிற கடைசி நம்பிக்கை கூட்டுறவு முயற்சி ஒண்ணுதான்'' என்ருன் பாலன்.

''ஊர்கூடித் தேர் இழுக்க நம்மாலே ஆகுமா?''

''வேறே நல்ல வழி எனக்கு இப்போதைக்குத் தோணலே. வேலையுமில்லாம, வீடுமில்லாம, தெருவுக்குப் போயப் பிச்சை எடுக்கறதா? இல்லே, கூடி வாழ்றதா? ரெண்டிலே ஒண்ணு முடிவு பண்ணிக்க வேண்டியதுதான்.''

மலைப்பாகத் தோன்றியது இளைஞர்களுக்கு. அந்தத் தோட்டத்தில் உள்ள எல்லாத் தொழிலாளர்களும் பணம் கொடுத்துச் சங்கத்தில் சேரவேண்டும். அக்கம்பக்கத்துத் தோட்டத்தில் உள்ளவர்களும் சேரவேண்டும். பெரிய அளவில் சேர்ந்தால்தான், அரசாங்கக் கடனைப் பெற்று, முதலில் அந்த ஒரு தோட்டத்தையாவது விலைக்கு வாங்கமுடியும். இன்னும் ஒரே மாதந்தான் இடையில் இருந்தது.

''தமிழனோட சரித்திரத்திலே என்னைக்காவது அவன் ஒண்ணு சேர்ந்து உழைச்சதாக் கதை இருக்கா? பழைய காலத்திலே சோழன் பாண்டியனை அடிச்சான்; பாண்டியன் சேரனை அடிச்சான். இந்தக் காலத்திலே நமக்குள்ளே கட்சி கட்டி ஒருத்தனை ஒருத்தன் அடிச்சுக்கருனுங்க. ஒன்பது கட்சி; தொண்ணூறு சாதி'' என்ருன் கணேசன்.

பாலனுடைய மனம் இந்தப் பயங்கரமான உண்மையை நேருக்கு நேர் கேள்விப்பட்டவுடன் நாணத்தால் குன்றியது. கடல் கடந்து வந்த நாட்டில், மலாய்மக்களுக்கும் சீன மக்களுக்கும் இடையில், சிறுபான்மையினராக வாழும் நிலைக்குத் தள்ளப்பட்ட பிறகும் கூட இவர்கள் ஒற்றுமையாய் வாழ முடியாவிட்டால்..

''கூட்டுறவுன்னு, கூட்டும் வேணும்; உறவும் வேணும்; ஒன்று பட்டால் வாழலாம். இல்லேன்னு அதை நான் என் வாயாலே சொல்லமாட்டேன்.''

''இதெல்லாம் நடக்காதுங்க; விட்டுத் தள்ளுங்க!'' என்ருன் குப்புசாமி என்ற ஓர் இளைஞன். கணேசனுக்கு ஓங்கி அவன் கன்னத்தில் ஓர் அறை விடவேண்டும் போலிருந்தது. அந்தத் தோட்டத்துக் கிராணிக்கு அவன் வேண்டியவன். அவனை யாரும் அங்கே கூப்பிடவில்லை. ஒரு வேளை அவனுக அங்கே உளவு பார்க்க வந்திருக்கிருனே?

''ஏன் நடக்காது?''

''நம்மவங்க ஒண்ணு சேருவாங்களா? ஆண்டிங்க கூடி மடங் கட்டினப்பிலே தான்....''

கூட்டுறவு முறையில் தொழிலாளர்களைச் சேர்த்து ஏற்கனவே ஓரிடத்தில் தோட்டம் வாங்கியிருந்தார்கள். ஆண்டிகள் கூடி மடம் கட்டித்தான் இருந்தார்கள். ஆகவே இளைஞர்கள் பலர் கடுமையாக முயற்சி செய்து தொழிலாளர்களை ஒன்று திரட்டினல், இதே தோட்டத்தை விலைக்கு வாங்கி விடலாம் என்ற நம்பிக்கை பாலனுக்கு ஏற்பட்டது.

''முதல்லே நமக்கு இதே தோட்டத்தைக் கூட்டுறவிலே வாங்க முடியுங்கற நம்பிக்கை வேணும். இங்கே இருக்கிற நமக்குள்ளே முதல்லே இந்த நம்பிக்கை பரவணும். பிறகு பம்பரமா உழைச்சு நாம ஒவ்வொருவரும் இந்த நம்பிக்கையைப் பெரியவுங்ககிட்டே பரப்பணும்'' என்று பேசிக் கொண்டு

"எனக்குத் துளிக்கூட இதிலே நம்பிக்கை யில்லே" என்று கத்தினுன் குப்புசாமி; "இதெல்லாம் வெட்டிப் பேச்சு!"

பளீரென்று குப்புசாமியின் கன்னத்தில் ஓர் அறை விழுந்தது. அறைந்தவன் கணே சன்தான். "டேய் சாவு குருவி! அப்படீன்னு உனக்கென்னடா இங்கே வேலே? யாருடா உன்னே இங்கே கூப்பிட்டா?" என்று ஆத்தி ரத்தோடு திருப்பிக் கத்தினுன்.

முறைத்தபடி கன்னத்தைத் தடவிக் கொண்டே அங்கிருந்து எழுந்தான் குப்பன். இன்னும் சற்று அங்கே தங்கினுல், ஆளுக்கு ஆள் அவனேப் போட்டுப் புரட்டி எடுத்து விடுவார்கள் போல் தோன்றியது. கிராணி யின் ஆள் என்பதால் மற்றவர்களுக்கு அவனி டம் இதுவரை இயல்பாகவே ஒரு வகை அச்சம் இருந்தது. ஆனுல் நோட்டீஸைக் கண்ட பிறகு யாருக்கும் அவர்கள் பயந்து நடுங்கத் தயாராக இல்லே.

ஒரு வேலேத் திட்டத்தை அங்கே வகுத் துக் கொண்டார்கள் இளேஞர்கள். அந்தத் தோட்டத்தில் கூட்டுறவுக்காக யார் யார் உழைப்பது, அக்கம்பக்கத்துத் தோட்டங் களுக்கு யார் யார் செல்வது, தலேநகர் கோலா லம்பூரில் உள்ள கூட்டுறவுத் துறையினருடன் யார் தொடர்பு கொள்வது என்றெல்லாம் வேலேகளேப் பிரித்துக் கொண்டார்கள். பாலன் சொல்லியபடியே எல்லாரும் உழைப் பது என்று உறுதி எடுத்துக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டார்கள்.

பாலனுடன் கடையை விட்டு வெளியே வந்த கணேசன், "நீ இங்கே வந்தது நல்ல தாப் போச்சு. இல்லேன்னு தலேக்குத் தலே பேச்சுத்தான் மிஞ்சியிருக்கும்" என்ருன்.

"நானும் எங்க தோட்டத்திலே முயற்சி பண்றேன். இன்னேக்கு இங்கே வந்தது, நாளேக்கு அங்கே வராதுன்னு என்ன நிச்சயம்? சொல்லிப் பார்க்கிறேன். ஆனுல் நம்ம வங்களே புகுந்து நல்ல முயற்சியைக் கலேச் சிடாமல் இருக்கணும்."

அங்கிருந்து அவர்கள் கிளம்பும்போது மணி மூன்று. வேலேக்குப் போயிருந்த தொழி லாளர்கள், பால் நிறுத்துக் கொடுத்துவிட்டுத் தங்கள் வீடுகளுக்குத் திரும்பிக் கொண்டி ருந்தார்கள்.

"எங்க வீட்டிலே சாப்பிட்டுப் போகலாம் வா" என்று பாலனேக் கூப்பிட்டான் கணேசன்.

"என்னுேட அக்கா வீட்டுக்குப் போக ணும்; இன்னெரு நாள் வர்ரேன்."

அவர்கள் பிரிந்தார்கள்.

லட்சுமியின் வீட்டுக்கு அருகில் பாலன் நெருங்கியபோதே, அவனுடைய மைத்து னன் கருப்பையாவின் குரல் அங்கே உரத்துக் கேட்டது. லட்சுமியை எதற்காகவோ அவன் வாயில் வந்தபடி திட்டிக்கொண் டிருந்தான்.

"என்ன அத்தான், சௌக்கியமா?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் பாலன். அங்கே கிடந்த மரப் பெஞ்சியில் உட்கார்ந்தான்.

"வாங்க வாத்தியாரே, வாங்க!" என்று பக்கத்தில் வந்து உட்கார்ந்தபடி, "மீன் குளம்பு வைக்கச் சொன்னு, கத்திரிக்காய்க் குளம்பு வச்சிருக்கா உங்க அக்கா; இவ ... என்று சலித்துக் கொள்ளத் தொடங்கிவிட்டான் கருப்பையா.

அவர்களுக்கு மிஞ்சியிருந்தது மூன்று குழந் தைகள். பையன்கள் இருவரும் தெருவுக்கு விளேயாடப்போயிருந்தார்கள். பெண் குழந்தை தொட்டிலில் உறங்கிக்கொண் டிருந்தது. அடுப்படியில் வேலே செய்துகொண் டிருந்த லட்சுமி முகமலர்ச்சியோடு பாலனே வரவேற் ருள். வீட்டில் எல்லாரையும் விசாரித்தாள்.

கண்களில் உயிரை வைத்துக் கொண்டு எலும்புக் கூடாய் நடமாடிய லட்சுமியைக் கண்டவுடன் பாலனுக்கு என்னவோ போலிரு ந்தது. வயது அவளுக்கு இருபத்து நாலு தான். வருஷந் தவருமல் குழந்தைகள். அரை குறைப் பிரசவங்களில் போனவை போக மிஞ்சி யிருந்தவை மூன்று.

கருப்பையாவிடம் திரும்பி, "நோட்டீஸ் குடுத்தாச்சே, என்ன செய்யப் போறிங்க?" என்ருன்.

"விட்டுத் தள்ளு! மரம் வச்சவன் தண்ணி ஊத்தருன்!" அவன் வாயிலிருந்து சீனர் கடைக் கள்ளச் சாராயம் 'சம்சு'வின் நெடி குப்பென்று வீசியது.

லட்சுமி, 'கேட்டியா உங்க அத்தான் பேசு றதை' என்பதுபோல் பாலனே உற்றுப் பார்த்தாள்.

"ஏதாச்சும் செய்யணுமே! ஒரு மாசந்தானே இருக்கு?" என்ருன் பாலன்.

"என்ன செய்யச் சொல்றே?" என்று திருப்பிக் கேட்ட கருப்பையா, "எங்கேயாச் சும் போகவேண்டியதுதான்; வேலே கிடைச்சாச் செய்யணும்; இல்லேன்னு தெருவிலே பட்டினி கிடந்து சாகணும்" என்ருன்.

"குடும்பம், குழந்தை குட்டிங்க?"

"வேணும்னு இப்பவே நீ உங்க அக்காவே யும் குழந்தைங்களேயும் உன்னேட கூட்டிக் கிட்டுப் போயிடு."

இதைக் கேட்டுத் திடுக்கிட்டுப் போனுன் பாலன்.

"வருஷந் தவருமல் புள்ளே பெக்கறதுலே குறைச்சல் இல்லே. அதுகளுக்குச் சோறு போடறதுக்கு மட்டும் மாமனுர் வீடு வேணு மாம். இந்தச் சன்மத்திலே அது நடக்காது!" குறுக்கிட்டுப் பேசினுள் லட்சுமி.

கருப்பையாவின் கை லட்சுமியை அடிப் பதற்காகப் பரபரத்தது. பக்கத்திலே பாலன் இருந்ததால் அன்றைக்கு அவள் தப்பினுள். அதற்குள் தெருவுக்குப் போயிருந்த பையன் கள் இருவரும் வந்து பாலனேச் சூழ்ந்து கொண் டார்கள். அவர்களுக்காகத் தான் வாங்கி வந்திருந்த பிஸ்கோத்துகளே அவர்களிடம் நீட்டினுன் பாலன்.

"கையலம்பிவிட்டு வாங்க, சாப்பிடலாம்" என்று அழைத்தாள் லட்சுமி. பீங்கான் தட்டுகளில் சோற்றைப் பரிமாறிக் குழம்பை ஊற்றினுள். முணுமுணுத்துக் கொண்டே கருப்பையா பாலனுடன் சாப்பிட உட் கார்ந்தான். குழந்தைகளும் ஆளுக்கொரு தட்டின் முன் அமர்ந்தார்கள்.

தன் தம்பிக்கு ஏதும் தனியாகச் செய்து போட முடியவில்லேயே என்ற மனக்குறை லட்சுமிக்கு. அடிக்கடி வராதவன் வந்திருக் கிருன். ஆனுல் கருப்பையாவுக்கோ தன் வாய்க்கு ருசியாகத் தட்டில் மீனே, கருவாடோ, கறியோ இல்லேயே என்ற ஆத்திரம். மரச்

றிச் சாப்பாட்டுக்கும் அவனுக்கும் அவ்வள ாக ஒத்து வராது.

சாப்பாடு முடிந்தவுடன் பக்கத்துக் கடைக்கு வெற்றிலே பாக்கு வாங்கிவரக் கருப்பையா புறப்பட்டான். குழந்தைகளும் தெருவுக்குப் போனர்கள். அந்த வேளே பார்த்து ஒரு பத்து டாலர் நோட்டை எடுத்து, லட்சுமி மறுத்தும் கேளாமல், அவள் கையில் திணித் தான் பாலன்.



"வர்ர ஞாயித்துக் கிழமை குழந்தைங்க ளோட வீட்டுக்கு வந்து சேர். வீணுக் கவ லேப்படாதே. கூட்டுறவுச் சங்கம் ஏற்படுத்தி, இந்தத் தோட்டம் கைமாருமல் இருக்கும்படி முயற்சி பண்ணிக்கிட்டிருக்கோம்."

தொட்டிலில் கிடந்த குழந்தையைத் தூக்கி அவனிடம் நீட்டினுள் லட்சுமி. வாங்கி அதற்கு முத்தம் கொடுத்து அதன் உடல் நிலேயைக் கவனித்தான். அதுவும் அவ்வளவு ஆரோக்கிய மாக இல்லே. அந்தக் குடும்பத்தில் இரண்டு பேரும் உழைத்துச் சம்பாதித்தார்கள். செட் டும் சிக்கனமுமாய் வாழத் தெரிந்தவள்தான் லட்சுமி. அவர்கள் இதைவிட எவ்வளவோ நன்ருக வாழ்ந்திருக்க முடியும். ஆனல்?...

அந்த வேளேயில் அங்கே வெற்றிலே பாக்கு டன் திரும்பி வந்த கருப்பையாவைப் பார்த்து விட்டுத் தனக்குள் நீண்ட பெருமூச்சு விட் டான் பாலன்.

குழந்தையை லட்சுமியிடம் கொடுத்து விட்டு, "மாமா வீட்டுக்குப் போயிட்டு, அப்ப டியே கிளம்பறேன்; ஞாயித்துக் கிழமை வந்து சேருங்க" என்று சொல்லி விடை பெற்றுக் கொண்டான்.

அவனேடு தெருவுக்கு வந்து அவனேத் தொடர முயன்ருன் கருப்பையா. எதற்காக அவன் தொடர்கிருன் என்பது பாலனுக் கும் தெரியாமல் இல்லே.

"சின்னப் பயலுக்குச் சட்டைத் துணி வேணும்னு அடம் புடிக்கிருன். ஏதாச்சும் சில்லறை இருந்தாக் குடுத்துட்டுப் போயேன்" என்று தலே சொறிந்தபடி கேட்டான் கருப்பையா.

பாலனுடைய சட்டைப் பையிலிருந்து ஐந்து வெள்ளி நோட்டொன்று கை மாறியது. கருப் பையா அதை வாங்கிக் கொண்டவுடன் அங்கிருந்து நழுவி விட்டான். அந்தப் பணம் நேரே சீனர் கடைக் கள்ளச் சாராயத்துக்குத் தான் போய்ச் சேரும் என்பது பாலனுக்குத் தெரியாமல் இல்லே.

மாடாய் உழைப்பது, வேளே வேளேக்குக் கறியும் சோறுமாய் உள்ளே தள்ளுவது, கள் ளச் சாராயமும் தென்னங் கள்ளுமாய் மாறி மாறிக் குடிப்பது, இரவு வேளேகளில் குழந்தை குட்டிகளுடன் படுத்துக் கிடக்கும் லட்சுமிக் குத் தொல்லே கொடுப்பது — இந்த வேலே களின் மொத்த இயந்திரமே கருப்பையா.

லட்சுமிக்காகத் தவித்த மனத்தோடு பழனி யின் வீட்டுக்குள் நுழைந்தான் பாலன்.

## 4. கண்ணம்மாவின் கேள்வி

பழனியின் வீட்டு மேல் தாழ்வாரத்தில் பாலனின் வரவை எதிர்பார்த்து இரண்டு மர நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. ஒன்றில் பாலனை உட்காரச் சொல்லி விட்டு மற்றதில் பழனி அமர்ந்துகொண்டான். கண்ணம்மாவின் அக்கா காமாட்சி, மாடி அறைக் கதவோரம் நின்றிருந்தாள். பழனியின் மனைவி தங்கம் நாற்காலிக்குப் பக்கத்தில் தரையில் வந்து உட்கார்ந்தாள். பாலனின் விழிகள் அங்கே கண்ணம்மாவைத் தேடிப் பார்த்தன. கீழ்ப்புறமும் அவள் இல்லை என்பதை, தன்னுடைய சைக்கிளை வைக்கும்போதே அவன் கவனித்தான். மேலே அறைக்குள்ளேயும் அவள் தென்படவில்லை.

தேநீர்க் கடையில் இளைஞர்களைச் சந்தித்துப் பேசிய விவரத்தைப் பழனியிடம் கூறினன் பாலன். இளைஞர்கள் மட்டும் கூட்டுறவுக்காக உழைத்தால் போதாது என்றும், வயதில் முதிர்ந்த தொழிலாளர்களையும் அதில் ஈடுபடுத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டான்.

''இந்தத் தோட்டம் இப்போ கைவிட்டுப் போனு, நம்ப வாழ்க்கையே அத்தோட போயிடும். ஆபத்து வந்த பிறகாவது நம்மவங்களுக்கு அதிலேருந்து தப்பறதுக்கு வழி தெரியணும்'' என்ருன் பாலன்.

பழனிக்கு இந்தக் கூட்டுறவுத் திட்டத்தில் அரைகுறை நம்பிக்கைதான் ஏற்பட்டது; முழு நம்பிக்கை ஏற்படவில்லை.

''பொன் விளையற பூமியான இந்த மலை நாட்டுக்கு வந்த பிறகும் நம்மவங்க கஷ்டப் பட்ருங்கன்னு, அதுக்காக வேறே யாரையும் குத்தம் சொல்ல முடியாது'' என் ன் பழனி; ''நம்மவங்கதான் காரணம்; அடுத்தவங்களைப் பார்த்தாவது ஒத்துமையா, செட்டும் சிருமா வாழ்ந்து முன்னேறணுங்கிற ஆசை கிடையாது.''

''முடிஞ்சவரையிலே நீங்க எடுத்துச் சொல்லிப் பாருங்க.''

''நான் ஒரு விசயம் கேள்விப்பட்டேன். ஒரு வேளை கூட்டுறவிலே நம்மவங்க சேர்ந்திட்டா என்ன செய்யறதுன்னு, தோட்டத்தை வாங்கப்போற சின்ன முதலாளிங்க அதைக் கலைக்கறதுக்கும் வழி செஞ்சிருக்காங்களாம்.''

இதைக் கேட்டுத் திடுக்கிட்டான் பாலன். சற்று முன்பு தேநீர்க் கடையில் குப்புசாமி என்ற இளைஞன் குறுக்கிட்டுப் பேசியது அவன் நினைவுக்கு வந்தது. எடுத்த எடுப்பிலே முட்டுக் கட்டை போடும் திருப்பணியும் ஒரு புறம் நடக்கிறது போலும்!

''அப்படீன்னு ரொம்பவும் கடுமையா முயற்சி செய்ய வேண்டியதுதான்'' என்ருன் பாலன். எதிர்ப்பைக் கண்டு அவன் கலங்கினலும், அதற்காக அவன் பின் வாங்குவதாக இல்லை.

அப்போது கையில் ஒரு பழத் தட்டுடன் மரப் படிகளில் ஏறி மேலே வந்துகொண்டிருந்தாள் கண்ணம்மா. அதற்குள் அவள் குளித்து முழுகி உடை யாற்றிக்கொண்டிருந்தாள். மிகவும் கவனமாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள்; பெரிய செவ்வந்திப் பூவை ஒத்த மஞ்சள் நிறமலர் ஒன்று அவள் கூந்தலிலிருந்து எட்டிப் பார்த்தது.

பழத் தட்டைக் கொண்டு வந்து பாலனிடம் நீட்டினுள் கண்ணம்மா. வாழைப் பழங்கள், மங்குஸ்தான் பழங்கள், ரம்புத்தான் பழங்கள்! அவற்றை வாங்கி வருவதற்காகவே அவள் கடைக்குச் சென்றிருக்க வேண்டும் என்று பாலனுக்குத் தோன்றியது.

''ரம்புத்தான்னு உங்களுக்கு ரொம்பப் பிடிக்குமே!''

செக்கச் சிவந்த நிறத்தில் கோழிமுட்டையை ஒத்த வடிவத்தில் நீண்ட காம்புகளுடன் விளங்கிய அந்தப் பழம் பார்ப்பதற்கும் கண்ணைப் பறித்தது; சுவைப்பதற்கும் இனிமையாக இருந்தது. தோலைக் கீறி அகற்றிவிட்டு, உள்ளே பனம் நுங்கின் சுளைபோல் இருந்த பழத்தை எடுத்துச் சாப்பிட்டான். மற்றவர்களிடம் பழத்தட்டை நீட்டினன்.

சற்று நேரத்தில் கிண்ணத்தில் சூடாகக் காபி கொண்டு வந்தாள் கண்ணம்மா. அதையும் வாங்கிப் பருகினன். கைக் கடிகாரத்தைத் திருப்பிப் பார்த்து விட்டு, அங்கிருந்து புறப்படுவதற்காக எழுந்தான்.

''ஞாயித்துக் கிழமை வர்ரேன்னு சொன்னீங்களே, நினைவிருக்கா?''

அவள் அவனிடம் தனிமையில் பேசவேண்டுமென்று சொல்லியிருந்தது அவனுடைய நினைவுக்கு வந்தது. ஆனல் கூட்டுறவு முயற்சிக்காக அவன் அந்த ஞாயிற்றுக் கிழமையை எப்படியும் ஒதுக்கியாக வேண்டும். இளைஞர்களுடன் தோட்டங்களில் சுற்றித் திரிய வேண்டிய நாள் அது.

''திடீர்னு குறுக்கசே சில வேலை வந்திருக்கு.....'' என்று இழுத்துக் கொண்டே கண்ணம்மாவின் முகத்தை நோக்கினன் பாலன். அதுவரை மலர்ச்சியுற்றிருந்த அவள் முகம் நொடிப் போதில் சுருங்கியது. அதையும் பாலன் கவனிக்கத் தவறவில்லை.

''இப்போ வேணும்னு புறப்பட்டு என்னேட வீட்டுக்கு வா. நாளைக்கு ஒரு நாள் வேலைக்குப் போக வேண்டாம். நாளைக்குச் சாயங்காலம் இங்கே திரும்பி வந்திடலாம்.''

கண்ணம்மா ஒரு கணம் யோசித்தாள்.

''வீட்டுக்கு நான் வரலே. நீங்க போற வழியிலே என்னைப் பள்ளிக்கூடத்துக் கிட்டே விட்டுடுங்க. நான் என் சிநேகிதி கமலாவைப் பார்க்கிறதாச் சொல்லியிருக்கேன். அவ காத்துக்கிட்டிருப்பா'' என்ருள்.

பால் அரைக்கும் பாக்டரியில் வேலை செய்யும் தொழிலாளா சுப்பையாவின் மகள் கமலா. அவளோடு ஒன்ருகப் படித்தவள். அவளுடைய வீடு தோட்டத்தின் முகப்பில் பள்ளிக்கூடத்துக்கு அருகே இருந்தது.

''சரி, வா, போகலாம்.''

இருவரும் மரப்படிகளில் இறங்கி வீட்டின் கீழ்ப் பகுதிக்கு வந்தார்கள். சைக்கிளை எடுத்தான் பாலன். கண்ணம்மா 'காரியரில்' ஏறி உட்கார்ந்து கொண்டாள். சைக்கிளில் ஏறி வேகமாய் மிதித்தான் பாலன். லயனைத் தாண்டி ரப்பர் மரக் காட்டின் செம்மண் பாதைக்குச் சைக்கிள் வந்தவுடன், மரநிழலில், மென்காற்றில் சக்கரங்கள் மெதுவாய் உருளத் தொடங்கின.

நோட்டீஸ் தந்த வேதனைக்கிடையிலும் இது குதூகலம் நிறைந்ததோர் அநுபவமாகத் தோன்றியது பாலனுக்கு. கண்ணம்மாவின் மூச்சுக் காற்று பாலனின் முதுகில் படர்ந்து கொண்டிருந்தது. பல ஆண்டுகளுக்குப் பிறகு

இப்போதுதான் அவள் அவனேடு சைக்கிளில் வரத் துணிந்திருக்கிறுள். கண்ணம்மா பெரியவளான பிறகு அவனேடு அவள் நெருங்கிப் பழகுவதில்லை. ''சைக்கிளில் வர்ரியா?'' என்று அவனுக அவளை அழைத்தபோது கூட அவள் நாணத்தோடு மறுத்து விடுவாள்.

இன்று அவளுடைய துணிச்சலான போக்கு அவனுக்கே வியப்பளித்தது. பின்புறம் ஒயிலாக அமர்ந்து தனக்குள் ஏதோ ஒரு பாட்டை முணுமுணுத்துக்கொண்டு வந்தாள் கண்ணம்மா. அவன் அவளைப் பற்றி நினைத்தான்.

அவனுடைய முறைப் பெண் அவள். கண்ணம்மா பிறந்ததிலிருந்தே அவளைப் பாலனுக்கென்று இரு வீட்டாரும் முடிச்சுப் போட்டு விட்டார்கள். கண்ணம்மாவின் அக்காள் காமாட்சிக்கும் பாலனுடைய மூத்த அண்ணு முருகனுக்கும் இதே போல் ஒரு பேச்சு இருந்தது. ஆனல் முருகனுக்கும் பாலனுக்கும் இடையிலிருந்த முத்துவை விட்டு விட்டு, ஏன் இப்படித் தனக்கும் கண்ணம்மாவுக்கும் முறை வைத்தார்கள் என்று பாலனுக்கே தெரியவில்லை. பெரியவர்களின் பேச்சுச் சிறு குழந்தையாக இருந்தபோதே இருவரிடமும் பரவி விட்டது. அந்த எண்ணத்தின் ஆதிக்கத்திலிருந்து இருவரும் விடுபட விரும்பவும் இல்லை; அது அவர்களை விட்டு விடவும் இல்லை. வயதைப் போலவே அதுவும் வளர்ந்து வந்தது.

'பள்ளி ஆசிரியர் வேலை பார்த்துக்கொண்டே இன்னும் மேலே படிச்சு முன்னுக்கு வரனும். அண்ணன் முருகனைப் போலே நிறையச் சம்பாதிக்கனும். கண்ணம்மாவைக் கல்யாணம் செய்து கொண்டு ஏதாவது ஒரு நகரத்திலே குடும்பம் நடத்தனும். இந்தத் தோட்டக் காட்டை விட்டுத் தலை முழுக வேண்டியது தான்.' இப்படி யெல்லாம் பல முறை கனவு கண்டிருக்கிறுன் பாலன்.

கண்ணம்மாவின் எதிர்காலம் பால் மரத்தைக் கீறுவதாக இருக்கக் கூடாது. அதற்காக அவள் பிறந்தவள் அல்ல.

பின்னுலிருந்து கண்ணம்மாவின் குரல் கேட்கவே, சைக்கிளில் இருந்தபடியே அவளைத் திரும்பிப் பார்த்தான் பாலன்.

''என்னமோ சொன்னியே?''

''நான் ஒண்ணும் கமலத்தைப் பார்க்கப் போகலே. உங்களோட பேசணும்கிறதுக்காகத்தான் வந்தேன்.''

வியப்போடு அவளைப் பார்த்துச் சிரித்து விட்டுச் சைக்கிளை நிறுத்தினுன் பாலன். இருவரும் இறங்கி நடந்தார்கள். மேட்டருவிப் பக்கம் திரும்பினுர்கள்.

முற்பகல் நேரத்தில் தொழிலாளர்கள் மரம் கீறும்போதே வெறிச்சோடிக் கிடக்கும் காடு அது. இந்த மாலை வேளையில் அங்கே கண்ணுக் கெட்டிய தூரம் வரையிலும் எந்தப் பக்கத்திலும் யாருமே தென்படவில்லை. அருவிக்கு இடது புறமாக ஓர் ஒதுக்குப் புறத்தில் புதர் மண்டிக் கிடந்தது. அதைத் தாண்டி மறுபக்கத்துக்குச் சென்றுர்கள். ஆள் உயரத்துக்கு வளர்ந்திருந்த லாலான் புல் இயற்கையாகவே சுற்றி வளர்ந்து ஒரு வேலி எழுப்பியிருந்தது. இடைவெளியில் இருந்த சமவெளியில் பச்சை நிற மெத்தை பரப்பியதுபோல் சிறு புல் அடர்ந்திருந்தது.

அந்த இடத்துக்குப் போய்ப் புல் தரையில் தன் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு

உட்கார்ந்துவிட்டாள் கண்ணம்மா. அருகே ரப்பர் மரங்கள் இல்லை. எதிரில் சற்றுத் தொலைவில் சில காட்டு மரங்கள் வளர்ந்திருந்தன. பாலன் தன் சைக்கிளை அங்கே வைத்து விட்டு, புல் தரைக்குத் திரும்பி வந்தான்.

"லாலான் புல் மண்டிப் போய், சிறு வீடு மாதிரியே அமைஞ்சிருக்கே!" என்றான் பாலன்.

"இந்த இடத்தைப் பார்க்கிறப்ப எல்லாம் எனக்கு உங்களோட நினைவு வராமல் இருக்காது" என்றாள் கண்ணம்மா; "இனிமே ஒரு மாசத்துக்குத்தான் இந்த இடத்தைப் பார்க்கலாம்; அப்புறம்...அப்புறம்...."

அவளால் அதற்குமேல் பேச முடியவில்லை.

திடீரென்று கண்ணம்மா தன் தலையை முழங்கால்களைக் கட்டியிருந்த தன் கரங்களிடையே புதைத்துக் கொண்டாள். தலையைத் தூக்கவே இல்லை. அவள் கேசத்திலிருந்த அந்த ஒற்றை மலர் மட்டிலும் மெல்ல நடுங்கியது.

"கண்ணம்மா!"

இப்போது அவள் மெல்லுடல் முழுவதுமே நடுங்குவதைக் கண்ணுற்றான் பாலன்.

"என்ன கண்ணம்மா இது?"

அப்போதும் அவள் தலையைத் தூக்கவில்லை.

பாலனின் கண்கள் எதிரில் தென்பட்ட காட்டு மரம் ஒன்றில் பதிந்தன. மரத்தைச் சுற்றி வளைத்துக்கொண் டிருந்தது ஒரு பசுங் கொடி. அந்தக் கொடியின் ஒரு கிளை மரத்தின் ஒரு கிளையை நோக்கி வளைந்து தொங்கியது. கொடியால் மரத்தின் கிளையைப் பற்ற முடியவில்லை. காற்று அதை அலைக்கழித்துக் கொண்டிருந்தது.

மரத்தைச் சுற்றிப் படர்ந்து கொழுகொம்பைத் தேடிக் கொண்டு விட்ட பசுங்கொடிக்கே இந்த நடுக்க மென்றால், இன்னும் கொழுகொம்பைத் தேடிக் கொள்ளாத கண்ணம்மா நடுங்குவதில் வியப்பென்ன? திடீரென்று எங்கிருந்தோ முளைத்து விட்ட நோட்டீஸ் அவள் நம்பிக்கையின் ஆணிவேரையே அறுத்துக் கொண்டிருக்கிறதா?

சந்தனத்தின் நிறம் அவளுக்கு, பெரிய பெரிய விழிகள்; தளதள வென்ற உடற்கட்டு; அங்கமெல்லாம் பொங்கிப் பூரித்து வழிந்தோடும் புதுவனப்பு.

ஆனால் அந்த வேளையில் அவள் வேதனையால் வெந்து கருகிக்கொண் டிருந்தாள் என்பதை அவன் கண்டு கொண்டான். அவளுக்கு எப்படி ஆறுதல் சொல்வதென்றும் அவனுக்குப் புரியவில்லை.

"என்ன கண்ணம்மா இது? நான் ஒருத்தன் இல்லேன்னு நீ கலங்கறது சரிதான்."

கண்ணம்மா மெல்லத் தன் தலையை உயர்த்தித் தன் விழிகளை அவன் முகத்தில் பதித்தாள். அவள் விழிகளில் அரும்பு விட்டிருந்த நீர் மணிகள் முத்து முத்தாய்க் கன்னங்களில் வழிந்தன.

"என்மேலே கோபமா உனக்கு?"

"நீங்களும் உங்க பெரியண்ணனைப் போலே நடந்துக்க மாட்டிங்களே?"

தூக்கிவாரிப் போட்டது பாலனுக்கு அவனுடைய பெரிய அண்ணன் முருகன் எப்படி நடந்து கொண்டு விட்டான்?

"யார், முருகனையா சொல்றே?"

"ஆமா."

முருகன்தான் ஒரு வகையில் பாலனுக்கு வழி காட்டியாக இருந்தவன். சிம்னி விளக்கருகிலும் அரிக்கேன் விளக்கருகிலும் அமர்ந்து இரவெல்லாம் படிப்பான். பத்து மைல் தொலைவில் இருந்த ஆங்கிலப் பள்ளிக்குத் தினந்தோறும் பஸ்ஸில் போய் வருவான். லயனிலிருந்தும் பஸ் வரும். நெடுஞ்சாலைக்குப் போய் வருவதற்குத் தினமும் ஆறு மைல் நடக்க வேண்டும். அப்படியெல்லாம் சிரமப் பட்டுப் படித்து முன்னுக்கு வந்தவன் அவன். கோலாலம்பூரில் இப்போது அவன் ஆங்கிலப் பள்ளி ஆசிரியர். அத்துடன் ஓய்வு நேரத்தில் மேல் படிப்பும் படித்து வருகிறான். 'எப்படி யாச்சும் நம்ப படிச்சு முன்னுக்கு வந்துறணும்; நம்மளோட குடும்பத்தைக் கரை சேர்த்தறது நம்ப கையிலே தான் இருக்கு' என்று பாலனிடமே அவன் அடிக்கடி சொல்லியிருக்கிறான்.

"அவர் இப்போ என்ன செய்திட்டார்?"

"கோலாலம்பூரிலேயே ஒரு பணக்கார வீட்டுப் பெண்ணோடே பழகிக்கிட்டிருக்காராம். கல்யாணமும் நடக்கப் போகுதாம்."

இந்தச் செய்தியைப் பாலனால் நம்பவே முடியவில்லை.

"இருக்காது கண்ணம்மா. நம்ம குடும்பத்தை அவர் மறந்திடமாட்டார். அப்படியெல்லாம் ஒண்ணும் நடந்திடாது."

"எங்க தோட்டத்துப் பொண்ணு ஒருத்தி இப்போ கோலாலம்பூரிலே ஒரு வீட்டிலே வேலை செய்யறா. அந்த வீட்டுப் பொண்ணோடதான் உங்க அண்ணன் பழகறாராம். அந்தப் பொண்ணுக்கு உங்க அண்ணன் யாருங்கறது தெரியும்."

"காமாட்சிக்கு இது தெரியுமா?"

"எங்க வீட்டிலே யாருக்குமே இது தெரியாது. சொல்ல வேண்டாம்னு நானே அந்தப் பொண்ணுகிட்டச் சொல்லிட்டேன்."

காமாட்சியிடம் முருகன் அன்பு கொண்டிருந்ததும் அவளை அவன் கல்யாணம் செய்து கொள்ள விரும்பியதும் பாலனுக்கு நன்றாகத் தெரியும். காமாட்சி படிப்பில் கெட்டிக்காரியாக இல்லாவிட்டாலும், குடும்பப் பாங்கில் கைதேர்ந்தவள். நல்ல அழகி. அதே ஆண்டில் கல்யாணம் நடத்தலாம் என்று கூடப் பெரியவர்கள் பேசிக்கொண் டிருந்தார்கள்.

பாலனால் அந்தச் செய்தியை நம்பவே முடியவில்லை.

"இல்லே கண்ணம்மா; நேருக்கு நேரா இதைப் பத்தி அண்ணன் கிட்ட நான் கேக்கப் போறேன்."

அவனுடைய பதிலை அவள் செவிகள் ஏற்கும் நிலையில் இல்லை. அவளுடைய எண்ணமெல்லாம் இப்போது பாலன்மீதே நிலைகுத்தி நின்றது.

"அத்தான், நான்...நான் வந்து..... உங்களைத்தான் நம்பிக்கிட்டிருக்கேன்.....நீங்களும் என்னைக் கை விட்டுட்டீங்கன்னா.."

சரேலென்று அருகில் நகர்ந்து சென்று கண்ணம்மாவின் வாயைத் தனது வலது கரத்தால் பொத்தினான் பாலன். கண்ணம்மா தன் இரு கைகளாலும் அவன் கரத்தைப் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். அவனுடைய விரல்களில் படிந்த அவளுடைய வெதுவெதுப்பான கண்ணீர் அவனுடைய நெஞ்சையே கசக்கிப் பிழிந்தது.

தன்னுடைய கரத்தை அவளுடைய மென் பிடியில் விட்டவாறே, அவளுடைய அளவுக்கு மீறிய கலக்கத்தின் காரணத்தைப் புரிந்து

கொள்ள முயன்றான் பாலன். தன்னுடைய அண்ணன் முருகனைப் பற்றி அவள் கேள்விப் பட்ட செய்தியோடு, நோட்டீஸ் தந்த பேரதிர்ச்சியையும் அவளால் தாங்க முடியவில்லை.

''எங்களையெல்லாம் இந்தத் தோட்டத்தை விட்டுத் துரத்திட்டா, அப்புறம் நான் எப்படி உங்களைப் பார்க்கறது? எப்படி உங்களோட பேசறது?''

''அப்படியெல்லாம் நடக்காது கண்ணம்மா.''

''விவரந் தெரிஞ்ச நாளா உங்களைத் தவிர யாரையுமே நான் நினைச்சதில்லே. உங்களையே நான் கல்யாணம் பண்ணிக்கப் போறோம்னு நினைச்சு.....''

தொண்டையைக் கட்டிக் கொண்டு விட்டது அவளுக்கு. மேலே ஏதும் பேச முடியவில்லை. அவன் கரத்தை விட்டு விட்டு முகத்தை மூடிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதாள்; விம்மி விம்மி அழுதாள்.

துயரத்தின் எல்லைக்கும் அவநம்பிக்கையின் எல்லைக்கும் வந்து விட்ட அவளை எப்படித் தேற்றுவது என்று தெரியாமல் ஒரு கணம் கலங்கினான் பாலன். பிறகு மெல்ல அவள் அருகில் சென்று அவள் தலையின் மீது கரத்தை வைத்தான். அவள் முகத்தை அவள் கரங்களிலிருந்து விடுவிக்க முயன்றான். சட்டென்று கண்ணம்மா அவன் பரந்த மார்பில் தன் முகத்தைப் புதைத்துக் கொண்டாள். அவளுடைய கண்ணீரால் அவன் சட்டை நனைந்தது.

கண்ணம்மாளைத் தனிமையில் சந்தித்து, தங்கள் எதிர்காலம் பற்றிக் குதூகலமாய்ப் பேச வேண்டுமென்று பலமுறை அவன் முன்பே நினைத்திருக்கிறான். ஆனால் அவளோடு சேர்ந்து ஆனந்தக் கனவுகள் காண நினைத்தவனுக்கு, அதற்கு மாறாக இப்போது துன்ப நினைவுகளே குமுறிக் கொண்டு வந்தன. தனிமையில் சந்திக்கும் முதற் சந்திப்பே கண்ணீரின் சங்கமமாகவா அமைய வேண்டும்?

''எனக்கு நீங்க என்ன சொல்லப் போறீங்க?'' என்று கேட்டாள் கண்ணம்மா.

அவள் எதைப் பற்றிப் பேசுகிறாள் என்பதே அவனுக்குப் புரியவில்லை.

''எங்களை இவங்க இந்தத் தோட்டத்தை விட்டுப் போகச் சொல்லிட்டாங்க. நாங்க இங்கே இனிமே வேலை செய்யவும் முடியாது; குடியிருக்கவும் முடியாது. நீங்க என்ன செய்யப் போறிங்க?''

''அப்படி எதுவும் நடக்காமல் இருக்கறதுக்கு நான் முயற்சி செய்யறேன், கண்ணம்மா?''

''எங்களைத் துரத்திட்டா நீங்க என்ன செய்விங்க?''

அவளுடைய நம்பிக்கை இழந்த பேச்சில் அவளுக்கு இருந்த பிடிவாதம் பாலனையே நிலைகுலைய வைத்து விட்டது. இடையில் நின்று பயமுறுத்தியதோ ஒரே ஒரு மாதந்தான். இதற்குள் தனக்கு இரண்டு மூத்த சகோதரர்களும் அவளுக்கொரு மூத்த சகோதரியும் உள்ள போது, எப்படி அவளைக் கல்யாணம் செய்து கொள்ள முடியும்?

''சொல்லுங்க. ஏன் பேச மாட்டேங்கிறீங்க?''

''அப்படியே ஏதும் நடந்திட்டா எங்க வீட்டிலே நீங்க வந்து தங்கிக்கிங்க. கிடைக்கிறதை எல்லாரும் பகிர்ந்து சாப்பிடுவோம். எங்கேயாவது மாமனுக்கு ஒரு வேலை கிடைக்கிற வரையிலே உங்களைக் காப்பாத்த முடியாதா என்ன?''

''உங்க தோட்டத்துக்குள்ளே எங்களை விடுவாங்களா?''

இந்தக் கேள்வி கூர்மையான அம்பாக அவனுடைய நெஞ்சில் பாய்ந்தது. தோட்டத்து வாழ்க்கை எவ்வளவு பாதுகாப்பற்ற நிலையில் உள்ளது என்பது அவனுக்கே அப்போதுதான் புரிந்தது. அவள் கேட்ட கேள்வி நியாயமான கேள்விதான்; உண்மையான கேள்விதான்.

''எது எப்படி இருந்தாலும் உன்னை நான் மறந்திடமாட்டேன் கண்ணம்மா. கட்டாயம் மறக்க மாட்டேன் கண்ணம்மா.''

''என்னைக் கை விட்டிட மாட்டிங்களே!''

''விட மாட்டேன் கண்ணம்மா!'' என்று உறுதியோடு அவள் கரத்தைப் பற்றினான் பாலன். பற்றிய அந்தக் கரத்தை இழுத்துத் தன் கண்களிலும் உதட்டிலும் மாறி மாறிப் பதித்துக் கொண்டாள் கண்ணம்மாள்.

பாலனின் கண்கள் எதிர் மரத்தில் தொங்கிக் கொழுகொம்புக்காக ஊசலாடிக் கொண்டிருந்த சிறு கொடியை நோக்கின. கொடியால் இன்னும் கிளையைப் பற்றிக் கொள்ள முடியவில்லை. முன்போலவே அது நடுங்கித் துடித்துக் கொண்டுதான் இருந்தது.

கண்ணம்மாவைத் தேற்றுவதற்காக நோட்டீஸுக்கு எதிராகத் தாங்கள் எடுக்கப் போகும் நடவடிக்கைகளைப் பற்றி அவன் விரிவாகப் பேசினான். அவனிடமிருந்த எல்லையற்ற நம்பிக்கை அவளையும் சற்றே தொற்றிக் கொண்டு விட்டது போலும்! அவளும் அவனிடம் கலகலப்பாகப் பேசலானாள்.

மாலை நேரம் மயங்கி, மர நிழல்கள் நீண்டு விட்டன. எழுந்திருக்க மனம் இல்லாமல் எழுந்தான் பாலன். தன்னுடைய சைக்கிளை எடுக்கப் போனவன் ஒரு குச்சியை எடுத்து, நடுங்கிக்கொண் டிருந்த பசுங்கொடியை அருகிலிருந்த கிளையின்மேல் திருப்பி விட்டான்.

பின்னர்க் கண்ணம்மா அவன் அருகில் வரவே, இருவரும் மெல்ல அங்கிருந்து நடந்தார்கள். பாலனின் கண்கள் அந்தக் கொடியை ஒரு கணம் கண்ணோட்டம் விட்டன. கொடி இப்போது கிளையின்மேல் இல்லை. மீண்டும் கீழே நழுவி முன்போலவே துடித்துக் கொண்டிருந்தது. அதனால் ஏற்பட்ட அதிர்ச்சியை அவன் கண்ணம்மாவிடம் காட்டிக் கொள்ள விரும்பவில்லை. அவளைச் சைக்கிளில் ஏற்றிக்கொண்டு திரும்பவும் லயனுக்கு அருகில் வந்தான். இறக்கி விட்டுத் தானும் இறங்கி நின்றான்.

இருவருக்கும் பிரிந்து செல்லவே மனம் இல்லை.

''இருட்டறதுக்கு முன்னாலே வீடு போய்ச் சேருங்க.''

கண்ணம்மாவையும் பசுங்கொடியையும் மாறிமாறி நினைத்துக் கொண்டே கனத்த இதயத்தோடு சைக்கிளை மிதித்தான் பாலன்.

[தொடரும்]

# பால்மரக் காட்டினிலே

அகிலன்



## 5. அறியாமையின் வெற்றி

அடுத்த தோட்டத்தில் தான் கண்டும் கேட்டும் வந்த செய்திகளில், சொல்ல வேண்டியதை மட்டிலும் தன் குடும்பத்தாரிடம் சொல்லிவிட்டுப் படுக்கச் சென்றான் பாலன். அவனுக்குச் சிறிதுகூட உறக்கம் வரவில்லை. வீட்டிலிருந்த பெரியவர்களும் தன்னைப் போலவே கவலைப்படுவார்கள் என்று அவனுக்குத் தெரியும். 'ஒரு பிரச்னையை எதிர்பார்த்து அங்கே போனால், கண்ணம்மாவும் இன்னொரு பிரச்னையாக வளர்ந்து விட்டாளே!' என்று அவன் கலங்கினான்.

ஒருபுறம் நோட்டீஸ் கொடுக்கப்பட்ட தொழிலாளர்களது எதிர்காலத்தையும் மறுபுறம் கண்ணம்மாவின் எதிர்காலத்தையும் அவன் மாறிமாறி நினைத்துப் பார்த்தான். இரண்டுக்குமே நெருங்கிய தொடர்பிருந்தது அவனுக்கு நன்றாகப் புலப்பட்டது. இந்த நோட்டீஸ் விவகாரம் ஒன்று குறுக்கிட்டிருக்காவிட்டால், கண்ணம்மாகூடத் தன்னோடு அவள் வாழ்வைப் பிணைத்துக்கொள்வதில் இவ்வளவு அவசரப்பட்டிருக்க மாட்டாள்.

மறுநாள் முதல் பாலன் பள்ளிக்கூட நேரம் போக மற்ற வேளைகளில் தன் தோட்டத்து இளைஞர்களுடன் கூடிப் பேசினான். அடிக்கடி அவனும் அடுத்த தோட்டத்துக் கணேசனும் சந்தித்தார்கள். கூட்டுறவுச் சங்கத்தில் தொழிலாளர்களை இணைப்பதற்கான முயற்சிகள் மும்முரமாக நடந்தன. ஒரு வாரத்துக்குள் விக்டரி எஸ்டேட் தோட்டத்தில் பாலனால் சுமார் நூறு பேர்களை ஒன்று திரட்ட முடிந்தது. கணேசன் உழைத்து வந்த தோட்டம் நோட்டீஸால் பாதிக்கப்பட்ட தோட்டம் என்பதனால் அங்கே முந்நூறு பேர் சங்கத்தில் சேர முன்வந்தார்கள்.

அக்கம்பக்கத்துத் தோட்டங்களுக்கெல்லாம் இளைஞர்களோடு படை எடுத்தான் பாலன். தலைநகர் கோலாலம்பூரிலிருந்து கூட்டுறவில் ஈடுபட்டிருந்த தலைவர்களை வரவழைத்து அங்கங்கே தோட்டங்களில் கூட்டங்கள் போட்டார்கள். இரவென்றும் பகலென்றும் பாராமல் சங்கத்தை நிறுவுவதற்கான வேலைகள் மும்முரமாக நடைபெற்றுக்கொண்டிருந்தன.

எப்படியாவது தலைக்கு நூறு வெள்ளி வீதம் கொடுக்கச் சொல்லி, தொடக்கத்தில் ஆயிரம் தொழிலாளர்களைச் சங்கத்தில் சேர்த்துவிட்டால், அடுத்த தோட்டத்தைப் பறிபோகாமல் காப்பாற்றிவிடலாம் என்ற நம்பிக்கை அவர்களுக்குத் தளிர்விடத் தொடங்கியது. தேவையான பாக்கிப் பணத்தைச் சங்கத்துக்குக் கடன் கொடுக்க அரசாங்கமும் தயாராக இருந்தது.

முழு மூச்சைப் பிடித்துக்கொண்டு பாதிக் கிணறு தாண்டிவிட்டார்கள் இளைஞர்கள். கிட்டத்தட்ட அறுநூறு உறுப்பினர்களைச் சேர்த்து விட்டார்கள். முயற்சியில் வெற்றி கிட்டும்போல் தெரிந்தது. அந்தச் சமயத்தில் தான் திடீரென்று பல முனைகளிலிருந்தும் அவர்களுக்கு எதிர்ப்புகள் கிளம்பத் தொடங்கின.

தொழிலாளர்களின் ஒத்துழைப்புத் துவண்டு கொண்டு வந்தது.

''எந்தத் தோட்டத்துக்கு நோட்டீஸ் குடுத்தானோ, அந்தத் தோட்டத்திலேயே இன்னம் பாதிப் பேரு சங்கத்திலே சேரலையே, நாங்க எதுக்காகச் சேரணும்?'' என்றார்கள் சிலர்.

''பாலா, நீ ஏண்டா இந்த வம்பிலே மாட்டிக்கிறே? உங்க தோட்டத்துக்கு ஒண்ணும் நோட்டீஸ் கொடுக்கலையே?'' என்றார்கள் வேறு சிலர்.

''நீயோ பள்ளிக்கூட வாத்தியார். உன்னோட வேலை, புள்ளைங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிற வேலை. அதைவிட்டுட்டு நீ ஏன் எங்க வேலையிலே தலையிடணும்?'' என்ற கேள்வியும் எழாமல் இல்லை.

தோட்டத் தொலாளர்களான தமிழர்களில் பலவகைப் பட்டவர்களுடன் பேசவும் பழகவும் பாலனுக்கு இந்த முயற்சி ஒரு வாய்ப்பை அளித்தது. எந்த அளவுக்கு அவர்கள் வெளி உலக வாழ்க்கையிலிருந்து ஒதுங்கி, தங்களுக்கென ஓர் இருள் சூழ்ந்த உலகை உற்பத்தி செய்துகொண்டு வாழ்

## முன் கதை

**வ**யிற்றுப் பிழைப்புக்காக, ஒப்பந்தக் கூலிகளாக மலேசியாவுக்குக் கப்பல் ஏறின எத்தனையோ தமிழ்க் குடும்பங்கள். காட்டைத் திருத்தி, ரப்பர் மரங்களைப் பயிரிட்டு, பொன் விளையும் பூமியாக்கினார்கள் இவர்கள். அந்த மண்ணையே தங்கள் சொந்த மண்ணாகக் கருதி உழைத்தார்கள். தோட்டத்தை ஒட்டிய 'லயன்'களில் அவர்கள் குடியிருப்பு.

தோட்டத்துப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்த பாலனின் தமக்கைக் குடும்பம் வேலை செய்த ரப்பர்த் தோட்டத்தைத் துண்டு போட்டு விற்றுவிட்டுக் கப்பலேற எண்ணிய ஆங்கில முதலாளி, அத் தோட்டத்தில் உழைத்தவர்களுக்கெல்லாம் நோட்டீசு கொடுத்துவிட்டான். நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைத்த அவர்களுக்கு, 'அடுத்த மாதம் முதல் எப்படிப் பிழைப்பது?' என்ற திண்டாட்டம்.

தன் தமக்கையின் குடும்பமும், மாமன் குடும்பமும் இனிமேல் எப்படிப் பிழைக்கும் என்று பாலன் யோசிக்கிறான். மாமனின் மகள் கண்ணம்மா, பாலனின்மேல் உயிரையே வைத்திருக்கிறாள். ஏதாவது வகை செய்தாக வேண்டும் என்ற முனைப்பில், பாலன் பல நண்பர்களைச் சேர்த்துக்கொண்டு கூட்டுறவு முறையில் அரசாங்கத்தின் கணிசமான உதவியுடன் அந்தத் தோட்டத்தையே வாங்கிவிடுவது என்று தீர்மானிக்கிறான். பெரும்பான்மை தொழிலாளர்களையும் மிகுந்த சிரமத்துடன் ஒன்றுபடுத்தி, பணமும் வசூல் செய்கிறான். தொழிலாளர்களின் ஒற்றுமையைக் குலைக்கச் சதி நடக்கிறது....

கிறார்கள் என்பது அப்போதுதான் அவனுக்குத் தெளிவாகப் புலப்பட்டது. அடுத்த வீட்டின் கூரையில் நெருப்புப் பற்றிக்கொண்டு எரிவதைக் கண்ட பிறகும் அவர்களில் பலருக்குப் பதற்றம் ஏற்படவில்லை. அதே நெருப்புத் தங்கள் கூரைக்கும் தாவக்கூடும் என்ற விழிப்பு உணர்ச்சியே அங்கே பலரிடம் காணோம். ஏன், பற்றி எரியும் வீட்டுக்குள் இருந்தவர்களுக்கே அந்த நெருப்பை அணைக்க வேண்டுமென்ற துடிப்போ முயற்சியோ இல்லை.

இயந்திர கதியில் உழைப்பது, கிடைப்பதைச் சாப்பிடுவது, தொழுவங்கள் போன்ற இடங்களில் நெருக்கியடித்துக்கொண்டு முடங்கிக்கொள்வது, இயற்கையின் தூண்டுதலுக்கு இரையாகி வருஷந்தோறும் புதிய கூலிகளை உருவாக்குவது, பழைய சம்பிரதாயங்கள் சடங்குகளில் உளுத்துப் போனவற்றைக்கூட உதறிவிடாமல் இறுக்கமாகப் பற்றிக்கொள்வது, புதிய மாற்றங்களையும் வளர்ச்சிகளையும் கண்டு அவற்றுக்கு ஏற்பத் தங்களை உருவாக்கிக் கொள்ளாமல் சோம்பிக் கிடப்பது - இப்படிப் பட்டதோர் உலகத்தின் மத்தியில், தான் பிறந்து வளர்ந்திருப்பதைப் பற்றிய தெளிவு முதல் முறையாகப் பாலனுக்கு அப்போது ஏற்பட்டது.

ஒரு நாள் பிற்பகல் கணேசனுடன் நாலைந்து இளைஞர்கள் பாலனைத் தேடிக் கொண்டு அவன் வீட்டுக்கு வந்தார்கள். வீட்டின் கீழ்ப்பகுதியில் கிடந்த மரப் பெஞ்சுகளில் எல்லாரும் அமர்ந்தார்கள்.

கணேசனின் கண்கள் பாலனைப் பார்த்த போது கலக்கமுற்றிருந்தன.

''என்ன கணேசா? என்ன நடந்தது?''

''நம்ம கூட்டுறவு முயற்சியைத் தோற்க அடிச்சிட்டாங்க பாலா: நம்மாலே இனிமே ஒண்ணுமே செய்ய முடியாது.''

''நடந்ததைச் சொல்'' என்றான் பாலன்.

''நாம கூட்டங்கள் போட்டோம்; ஆர்ப்பாட்டங்கள் செஞ்சோம். அலைஞ்சு திரிஞ்சோம். அறுநூறு பேருக்கு மேலே பிடிச்சு அறுபதினாயிரம் வெள்ளியைச் சேர்த்திருக்கோம். ஆனால் இவ்வளவும் நடந்த பிறகு, நாம் கண்ட கனவெல்லாம் பகல் கனவாப் போயிடும்போலே இருக்கு. எங்க தோட்டத்தைத் துண்டு போட்டு விலைக்கு வாங்கப் போற குட்டி முதலாளிமார்கள் காதும் காதும் வச்சாப்பிலே நம்ம கழுத்தை அறுத்திட்டாங்க.''

''என்ன?'' பதற்றத்தோடு கேட்டான் பாலன்.

''எங்க தோட்டத்திலே வேலை செய்யிற தொழிலாளர்களையே ரகசியமா ஆள் அனுப்பிக் கலைச்சிருக்காங்க. கூட்டுறவுச் சங்கம் ஏற்படாமல் இருந்தால்தான் அவங்களாலே எங்க தோட்டத்தைத் துண்டு போட்டு வாங்க முடியும். அதுக்காகக் குப்புசாமியைக் கையாளா வச்சுக்கிட்டு, அவனைக் கீழறுப்பு வேலை செய்ய விட்டுட்டுப் பழைய நிர்வாகத்தையும் கைக்குள்ளே போட்டுக் கிட்டு வேலை செய்யறாங்க.''

''நம்மவங்க குப்புசாமி பேச்சைக் கேக்கலாமா?''

''சங்கத்திலே சேராதவங்களுக்குப் புது நிர்வாகத்திலே வேலை கொடுக்கப் போறதா ஆசை காட்டியிருக்காங்க. நாமெல்லாம் கூட்டுறவுங்கிற பேராலே பணம் வசூல் பண்ணிக் கூட்டுக் கொள்ளை அடிக்கப் போறோமாம். தோட்டத் துண்டாடல் காரங்க, நாம பணத்தைக் கையாடல் செய்யிறதாய்ப் புரளியைக் கிளப்பி விட்டிருக்காங்க. நேத்தே எங்க தோட்டத்துக்காரங்க ஐம்பது அறுபது பேர் வந்து, சங்கத்துக்குன்னு கொடுத்த பணத்தைத் திருப்பி வாங்கிட்டுப் போயிட்டாங்க.''

பாலனுக்கு என்ன செய்வதென்று புரியவில்லை. பணம், தொலைபேசி, கார், செல்வாக்கு, தொழில் அநுபவம் இவ்வளவும் உள்ள சிறு கூட்டத்தின் வலிமை வாய்ந்த குரல்வளைப் பிடியிலிருந்து தொழிலாளர்களை விடுவிப்பது என்பது மலையைப் புரட்டுவதைவிடக் கடினமான வேலையாகத் தோன்றியது. விளக்கை நம்பிச் சுழலும் விட்டில்பூச்சிக் கூட்டத்தைப் போல், தங்களுக்கு நோட்டீஸ் விடக் காரணமாக இருந்தவர்களையே அவர்கள் நம்பத் தொடங்கிவிட்டார்கள்.

''உன்னையும் என்னையும் தப்பாப் பேசறாங்க. நோட்டீஸை ஒரு சாக்காகச் சொல்லி நாம காசு சேர்த்துக்கறதுக்காக இப்படிச் செய்யறோம் என்கிறாங்க.''

வருத்தத்தோடு சிரித்துவிட்டு, ''பேசறதோடு விட்டாங்களே!'' என்றான் பாலன்; ''தென்னாப்பிரிக்காவிலே உள்ள இந்தியர்

களைக் காப்பாத்தறதுக்காக மகாத்மா காந்தி முயற்சி செய்தப்போ, அவரை ஓர் இந்தியனே கொலை செய்யத் திட்டம் போட்டான். கடைசி கடைசியா, இந்தியாவிலே கூட அவரை ஓர் இந்தியன்தான் கொலை செய்தான். பொது வேலைன்னு இறங்கிட்டா, நம்ம மனசாட்சிக்கு விரோதமில்லாமல் நடக்கணுமே தவிர, ஏச்சுக்கும் பேச்சுக்கும் பயந்தால் முடியாது.''

அந்தச் சமயம் பார்த்து அங்கே பத்துப் பன்னிரண்டு தோட்டத் தொழிலாளர்கள் பாலனைத் தேடிக்கொண்டு வந்து சேர்ந்தார்கள். வந்தவர்களில் வயது முதிர்ந்தவர்களும் நடுத்தர வயதுக்காரர்களும் கலந்திருந்தார்கள்.

''எங்களுக்கெல்லாம் சங்கத்திலே சேர்ரதுக்கு இஷ்டமில்லே. பணத்தைத் திருப்பிக் குடுத்திடுங்க'' என்று தொடங்கினர் ஒரு முதியவர்.

''ஆமா, பொண்டு புள்ளைங்க காதிலே கழுத்திலே போட்டிருந்ததை அடகு வச்சு நான் பணம் குடுத்திருக்கேன்; என் வீட்டுக்காரி சத்தம் போடறு'' என்றார் அடுத்தவர்.

''நம்ம தோட்டத்துக்கு இப்போ ஒண்ணும் வந்திடலே. இதையும் விலை பேசி நோட்டீஸ் குடுத்தாங்கன்னா, அப்போ கூட்டுறவுச் சங்கத்தை ஏற்படுத்திக்கிடுவோம். நானும் கடன் வாங்கித்தான் காசு குடுத்திருக்கேன். திருப்பித் தந்திடுங்க.''

கணேசனுடன் வந்திருந்த இளைஞர்களில் ஒருவனான வீராசாமிக்குக் கோபம் வந்துவிட்டது.

''நீங்கள்ளாம் யாரோட போதனையிலே இப்படிப் பேசுறிங்கன்னு எனக்குத் தெரியும். இதுக்குள்ளே சங்கத்துக்காக வாங்கின பணத்திலே, சங்க வேலைக்காகவே ரெண்டாயிரம் வெள்ளிக்கு மேலே செலவு செஞ்சிருக்கோம். தோட்டந் தோட்டமாக வாடகைக்குக் காடி புடிச்சுக்கிட்டுச் சுத்தியிருக்கோம். கோலாலம்பூரிலேருந்து தலைவர்களைக் கூட்டிவந்து கூட்டம் போட்டிருக்கோம். சங்க வேலையா நம்ப ஆட்களைத் தலைநகரத்துக்கு அனுப்பியிருக்கோம். இவ்வளவும் செய்தப்பறம் பணத்தைத் திருப்பிக் கேக்கிறிங்களே?'' என்றான். வீராசாமிதான் சங்க முயற்சித் திட்டத்தின் தாற்காலிகப் பொருளாளர்.

தொடங்கும்போது இளைஞர்கள் சிலர் முதலில் அவரவர் கைப்பணத்தைப் போட்டுத்தான் அதைத் தொடங்கினர்கள். பாலன் கூடத் தன் குடும்பத்தார் நால்வர் சார்பிலும் நானூறு வெள்ளி திரட்டிக் கொடுத்திருந்தான். அவ்வளவு தொகையைக் குறுகிய காலத்தில் தேடிக் கொடுப்பது என்பது அவன் சக்திக்கு மீறிய செயல்தான். என்றாலும் எப்படியோ பல்லைக் கடித்துக்கொண்டு அவன் அதைச் செய்திருந்தான். அப்படித்தான் சிரமப்பட்டு மற்றத் தொழிலாளர்களும் பணம் திரட்டியிருப்பார்கள் என்பது அவனுக்குத் தெரியாமல் இல்லை.

பாலன் குறுக்கிட்டு வீராசாமியைக் கையமர்த்தி விட்டு, வந்தவர்களைப் பார்த்துப் பேசலானான்:

''வெள்ளம் வர்ரதுக்கு முன்னாலேயே நாம அணை போட்டிருக்கணும்; அதை நாம செய்யலே. வெள்ளமோ இப்போ வந்திடுச்சு. அடுத்த தோட்டத்திலே உள்ள நூறுக்கு மேற்பட்ட குடும்பங்களை அது அடிச்சுக்கிட்டுப் போகப் போகுது. இப்பவாவது நாமெல்லாம் ஒண்ணு சேர்ந்து வெள்ளத்தைத் தடுத்து நிறுத்தலாம்னு பார்க்கிறோம். இந்த மண்ணை நம்ப சொந்த மண்ணுன்னு சொல்லிக்கிறோம்; அவ்வளவுதான். ஆனால் நமக்கு ஒரு பிடி மண்ணுகூட இதுவரையில சொந்தமில்லே; வீடு நமக்கில்லே; தோட்டம் நமக்கில்லே; பாதுகாப்பான வாழ்க்கை நமக்கில்லை. கூட்டுறவிலே தோட்டம் வாங்கிறதிலே உள்ள அர்த்தத்தை நீங்க புரிஞ்சுக்கணும். நாமெல்லாம், நம்ப குடும்பமெல்லாம், இந்த மண்ணில் ஆணிவேர் விட்டு நிலைக்கிறதுக்கு இது ஒரு வழிகாட்டும். நாம ஒவ்வொருத்தரும் எல்லாருக்காகவும், எல்லாரும் ஒவ்வொருத்தருக்காகவும் வாழவேணும் என்கிற கொள்கைதான் கூட்டுறவுக் கொள்கை. இதிலே அரசாங்கம் நமக்கு உதவி செய்ய முன்வந்திருக்கு. இதை நாம்ப நழுவவிட்டுடப் படாது; தயவுசெய்து யோசனை செய்து பாருங்க.''

பாலன் இன்னும் என்னவெல்லாமோ எடுத்துச் சொல்லி அவர்கள் மனத்தை மாற்ற முயன்றான். அவனுடைய எந்தப் பேச்சும் அவர்களிடம் எடுபடவில்லை.

கள்ளச் சாராயத்தின் ஆதிக்கத்தில் வந்திருந்த ஒருவன், ''சரிதான் வாத்தியாரே, நீ புள்ளைங்களுக்குப் பள்ளிக்கூடத்திலே பாடம் சொல்றதோடு நிறுத்திக்க; எங்களுக்கு ஒண்ணும் சொல்லவேண்டாம்'' என்றான்.

''எங்களோட பணம் எங்களுக்கு வேணும்; அதுவும் இப்பவே வேணும்.''

அங்கே வந்திருந்த கூட்டம் ஓர் உறுதியோடு வந்திருந்தது. கூட்டுறவுக்காகப் பாடுபட்டு வந்த இளைஞர்களின் நோக்கத்தையும் நாணயத்தையும் அது இப்போது சிறிதுகூட நம்புவதற்குத் தயாராக இல்லை.

அதேபோல் மேலும் சிலர் அங்கே வந்தார்கள்; இன்னும் சிலர் வந்தார்கள். பாலனின் வீட்டுக்கு முன்னால் ஒரு கூட்டமே கூடிவிட்டது. பாலனின் அப்பா வீரப்பனுக்கும் அம்மா வேலம்மாளுக்கும் தங்கள் பிள்ளை ஏதோ செய்யக்கூடாததைச் செய்துவிட்டு அப்போது குற்றவாளிக் கூண்டில் நிற்பதுபோல் தோன்றியது.

''ஊர் வம்பு நமக்கு எதுக்கப்பா?'' என்று கெஞ்சினாள் வேலம்மாள்.

''விருப்பமில்லாதவங்களைக் கட்டாயப் படுத்தறதிலே புண்ணியமில்லே'' என்றான் வீரப்பன்.

பாலன் தலையைக் குனிந்துகொண்டு சிறிது நேரம் மௌனமாக இருந்தான். தமிழ்ச் சாதியின் தலைவிதி வேறு விதமாக இருந்தால் அதை மாற்றி எழுதுவதற்குத் தங்களைப் போன்ற அப்பாவிகளால் முடியாது போலும் என்ற எண்ணம் அவனைப் பற்றி உலுக்கியது.

''கணேசா, புறப்படு!'' என்று சொல்லி விட்டு எழுந்தான் பாலன்; ''எல்லார் கிட்டயுமே பணத்தைத் திருப்பிக் கொடுத்திடலாம்.''

சைக்கிள்களில் புறப்பட்டார்கள் சிலர்; நடந்தார்கள் சிலர்; தோட்டத்து வாயில் வரை சென்று பஸ்ஸுக்குக் காத்திருந்தார்கள் சிலர்.

''தெரியாமலா சொல்லியிருக்கான், இளம் புள்ளே போட்ட வேளாண்மை வீடு வந்து

சேராதின்னு!'' என்று இடித்துச் சொன்னர் வயதில் முதியவரான ஒரு தொழிலாளி.

கணேசனின் வீட்டில்தான் பணமும் கணக்குப் புத்தகங்களும் இருந்தன. திருப்பிக் கேட்டவர்களுக்கெல்லாம் கணக்கெழுதிக் கொண்டு பணத்தைக் கொடுக்கச் சொன்னன் பாலன். பொருளாளர் வீராசாமி குறுக்கிட்டு ஒரு யோசனையை வெளியிட்டான்.

''ரெண்டாயிரத்துக்கு மேலே செலவாயிருக்கு. இதை ஒவ்வொருத்தர் கணக்கிலேயும் கழிச்சுக்கிட்டுக் கொடுத்தா, ஆன செலவை எல்லாரும் பகிர்ந்துக்கிட்டாப்பிலே இருக்கும்.''

''வேண்டாம்'' என்முன் பாலன்; ''இந்த முயற்சியிலே முன்னுக்கு நின்ற பத்துப் பதினைஞ்சு பேர் இந்த நஷ்டத்தை ஒத்துக்குவோம். நான் நாலு பேருக்கு நானூறு வெள்ளி கொடுத்திருக்கேன். அதைச் செலவு எழுதிடுங்க. இது மாதிரி உங்களிலே தாங்கக் கூடியவங்க தாங்கிக்கிங்க.''

''பாலா!'' என்று கத்தினன் கணேசன்; ''உனக்கோ, உங்க தோட்டத்துக்கோ நோட்டீஸாலே ஆபத்து வந்திடலே; நீ எதுக்காக எங்களுக்காக உன்னேட கையை அறுத்துக்கணும்?''

''உங்களுக்காக நான் நஷ்டப்படலே; இந்தத் தமிழ்ச் சாதியோட ரத்தம் என்னேட உடம்பிலேயும் ஓடுது; ஊர் உலகத்தைப் போலே இந்த நாட்டிலே அதுவும் நல்லா வாழணும்னு நான் ஆசைப்பட்டேன். அந்த ஆசைக்குக் காணிக்கையா இதை வச்சுக்குங்க. என்னேட நஷ்டம் வெறும் நானூறு வெள்ளியில்லே, கணேசா! அது ஈடுகட்ட முடியாத நஷ்டம். நோட்டீஸ் கெடு தீர்ந்தவுடனே நடுத்தெருவிலே நிற்கப் போறுங்க பார், அவங்கதான் என்னேட உண்மையான நஷ்டம்.'' பாலனின் குரல் தழுதழுத்தது.

கேட்பவர்களுக்கெல்லாம் பணத்தைத் திருப்பிக் கொடுக்கச் சொல்லிவிட்டு, அங்கே இருந்து அந்தக் காட்சியைக் காண விரும்பாதவன்போல் தன் மாமன் பழனியின் வீட்டுக்குக் கிளம்பினன் பாலன்.

## 6. வாழத் துடித்த துடிப்பு

கணேசனின் வீட்டுக்கு முன்னல் இருந்த தெருவில் சைக்கிளைத் தள்ளிக்கொண்டு பாலன்



நடந்தபோது, ''அத்தான்!'' என்று அழைத்த படியே எதிர்ப் பக்கத்து லயத்து வீட்டிலிருந்து வெளியே விரைந்து வந்தாள் கண்ணம்மா. அவளை அவன் அங்கே சிறிதும் எதிர்பார்க்க வில்லை. வியப்போடு விழித்துப் பார்த்தான்.

''நீங்க இங்கே வந்திருக்கிங்கன்னு சொன்னாங்க. வீட்டுக்கு வராமலேயே போயிட்டா என்ன செய்யறதுன்னு சுந்தரி வீட்டில் காத்துக் கிட்டிருந்தேன். இப்பல்லாம் உங்களுக்குச் சங்க வேலை ரொம்ப அதிகமாப் போச்சு. இங்கே வந்தாலும் வீட்டுக்கு வர்ரதில்லே'' பேசிக்கொண்டே கண்ணம்மா அவனோடு தன் வீட்டுக்கு நடந்தாள்.

''இனிமே சங்கத்துக்கே இங்கே வேலை இல்லை.''

கண்ணம்மாவுக்கு இருந்த உற்சாகத்தில் அவன் பேசியதைக் காதில் அவள் சரியாகப் போட்டுக்கொள்ளவில்லை. தன்னுடைய அத்தான் அந்த வட்டாரத்து இளைஞர்களிடையே ஒரு முக்கியமான மனிதனாக உயர்ந்து வருவதாக அவள் தனக்குள் நினைத்துக்கொண்டிருந்தாள். தொடங்குவதற்கு முன்னதாகவே சங்கம் கலைக்கப்பட்ட செய்தி ஒன்றும் அவளுக்குத் தெரியாது.

கண்ணம்மாவின் வீட்டில் அவள் அம்மா தங்கமும் அப்பா பழனியுமே இருந்தார்கள். எப்போதும் வீட்டில் அடைந்து கிடக்கும் அக்காள் காமாட்சிகூட எங்கோ தன் தோழியைத் தேடிக்கொண்டு போயிருந்தாள். தங்கத்துக்குக் கீழே சமையல் வேலை; பழனி விறகுக் கட்டைகளைப் பிளந்துகொண்டிருந்தான்.

மேல் வீட்டுப் பகுதிக்குப் பாலனை அழைத்துக்கொண்டு சென்றாள் கண்ணம்மா. சற்று நேரத்துக்கெல்லாம் பழனியும் தங்கமும் தங்கள் வேலைகளை விட்டுவிட்டுப் பாலனைப் பார்க்க மேலே வந்தார்கள். அவனுக்குக் காபி போடுவதற்காக அடுப்படிக்கு இறங்கி வந்தாள் கண்ணம்மா.

கூட்டுறவு முயற்சியின் தோல்விப் படலத்தைப் பற்றிப் பழனியிடம் சொல்லிவிட்டு, ''திடீர்னு நம்மவங்க இப்படி நல்ல முயற்சியிலே பின் வாங்கிடுவாங்கன்னு நான் நினைக்கவே இல்லை'' என்றான்.

''எனக்கு என்னவோ ஆரம்பத்திலேருந்தே ஒரு சந்தேகம் இருந்துச்சு'' என்றான் பழனி; ''தோட்டம் நல்லாப் பால் கொடுக்கிற தோட்டம்; குறைச்ச விலைக்கு வித்துட்டுப் போகப் போறான் வெள்ளைக்காரன்; துண்டு போட்டு வாங்கப் போற முதலாளிங்களோ அளவுக்கு மீறின சாமர்த்தியசாலிங்க. எல்லாம் அவங்க செய்திருக்கிற வேலைதான்; அவங்க கலைச்ச கலைப்புத்தான்; கமுக்கமா இருந்து திடீர்னு கவுத்துட்டாங்க.''

''தங்களோட எதிர்காலத்தைப்பத்தி நம்மவங்க நினைச்சுப் பார்க்க வேண்டாமா?''

''இந்தத் தோட்டத்தைச் சேர்ந்த முக்கியமானவங்களையெல்லாம் முதலாளிங்க முதல்லே தங்களோட கைக்குள்ளே ரகசியமாய்ப் போட்டுக்கிட்டாங்க. பணம் பாதாளம் வரையிலே பாயுமாம். அவங்ககிட்ட பணம் இருக்கு; பாஞ்சிடுச்சு. சங்கம் ஏற்படாமல் செய்திட்டா, அப்படிச் செய்யறவுங்களுக்கு இங்கேயே வேலை போட்டுத் தர்ரதாச் சொன்னாங்களாம். தங்களோட காரியம் நடந்திட்டா, தோட்டம் கைக்கு வந்திட்டா, பிறகு பல பேரோட காலை வாரிவிடப் போறாங்கன்னு எனக்கு நல்லாத் தெரியுது: ஆனால் மத்தவங்களுக்குத் தெரியணுமே?''

''ஏன் சும்மா சும்மா அதையே பேசி மனசைக் குழப்பிக்கிட்டிருக்கிங்க?'' என்று குறுக்கிட்டாள் தங்கம்மாள்; ''மாசம் பொறந்தா நாம இந்தத் தோட்டத்தைவிட்டு வெளியே போறது நிச்சயங்கிறதை நினைச்சுக்கிட்டு, அடுத்தாப்பிலே நடக்கறதைப் பாருங்க.''

''என்ன செய்யச் சொல்றே?'' என்றான் பழனி.

''நாம போய் அவங்க வீட்டிலே பேசிட்டு வந்த விஷயத்தைத் தம்பியை நேரா வச்சுக்கிட்டே சொல்லிடுங்க.''

''அண்ணன்தான் கோலாலம்பூரிலே இருந்து அப்படிக் கடுதாசி எழுதிட்டார். அவர் இப்படி நடந்துகிட்டதைத்தான் என்னாலே நம்பவே முடியலே'' என்றான் பாலன்.

பாலனின் அண்ணன் முருகனுக்கு அவன் அப்பா வீரப்பன் எழுதுவதுபோல் பாலனே எழுதியிருந்தான். வீரப்பன் சொல்லித்தான் எழுதினான். எப்படியாவது கோலாலம்பூரிலிருந்து உடனே புறப்பட்டு வரும்படியும், வந்து காமாட்சியைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு ஏற்பாடு செய்யும்படியும் குறிப்பிட்டிருந்தான். நோட்டீஸ் விவரம் பற்றியும் விரிவாக விளக்கியிருந்தான். பழனியின் குடும்பத்துக்கு உதவ வேண்டிய பொறுப்பு அவனுக்கும் உண்டு என்பதை வலியுறுத்த அவன் தவறவில்லை. கடிதம் சென்ற நான்கே நாட்களில் பதில் வந்துவிட்டது. தனக்கு வேலைகள் இருப்பதால் வர முடியாதென்றும், காமாட்சிக்கு வேறு மாப்பிள்ளை பார்க்கும் படியும் முருகன் கச்சிதமாகப் பதில் அனுப்பி விட்டான்.

''முருகன் தன்னைக் கைவிட்ட சேதி காதிலே விழுந்ததிலேருந்து காமாட்சிக்கு அழுது அழுது முகம் வீங்கிக் கிடக்கு'' என்றாள் தங்கம்; ''காமாட்சி இஷ்டப்பட்டா உன்னோட சின்ன அண்ணன் முத்துவுக்குக் கட்டிக்கலாம்னு உங்கப்பா சொல்றார். அவ வாயைத் திறந்து பதிலே பேச மாட்டேங்கறா. அவளை முத்துவுக்கும் கண்ணம்மாளை உனக்கும் கட்டி வச்சிட்டா, பிறகு எங்க பாடு எப்படி ஆனாலும் ஆயிட்டுப் போகுது. நாங்க எங்கேயாவது போய் எப்படியாவது பிழைச்சுக்கறோம்; இல்லே, ஆத்திலே குளத்திலே விழுந்து சாகிறோம்'' என்றாள் பாலனின் அத்தை.

''அப்படியெல்லாம் பேசாதிங்க அத்தை!'' என்று அவளைத் தேற்ற முயன்றான் பாலன்.

''வேறே என்ன பண்றது, சொல்லு? தெரியாத்தனமாப் பொம்பளைப் புள்ளைங்களைப் பெத்து வளர்த்தாச்சு: கூரைகூட இல்லாமல் நாங்க தெருவுக்குப் போனா வயசு வந்த இந்த ரெண்டு பொம்பளைப் புள்ளைங்களை வச்சிக்கிட்டு நான் என்ன செய்வேன்? எப்படி அவங்களைக் காப்பாத்துவேன்?''

பெற்ற மனம் பித்தாகிப் பேதலித்து அழுது புலம்பத் தொடங்கிவிட்டது. அவள் பேச்சிலிருந்து வெளிப்பட்ட பயங்கரமான உண்மைகள் பாலனைக் கதிகலங்கச் செய்தன. தொழிலாளர் குடும்பங்கள் தெருவுக்கு விரட்டப்பட்டால், அவர்களில் ஆண்கள் எங்கோ எப்படியோ அலைந்து திரியலாம்; அல்லது இடம் கண்ட இடத்தில் முடங்கிக் கொள்ளலாம். பெண்கள்? அதிலும் வயது வந்த துணையில்லாப் பெண்கள்?

நினைக்கும்போதே தலை சுற்றியது பாலனுக்கு. அதே நிலைக்குத்தான் இப்போது கண்ணம்மாவும் தள்ளப்பட்டிருக்கிறாள்!

''நீங்க ஒண்ணுக்கும் கவலைப்படாதிங்க, அத்தை. நம்மைப்போல நிலையிலே இருக்கிறவங்களுக்கெல்லாம் நாள் - ந ட் ச த் தி ர ம் - கிழமை தேவையில்லே. எப்ப வேணுமானாலும் கல்யாணத்தை வச்சுக்கலாம். ஆயிரக்கணக்காச் செலவு பண்ணி ஊர் கூட்டிக் கல்யாணம் பண்ணினாத்தான் கல்யாணமா என்ன?''

''ராஜா, என்னோட நெஞ்சிலே பால் வார்த்திட்டேடா, ராஜா!'' என்று உணர்ச்சி வயப்பட்டு, பாலனைத் தன் உளமாற வாயார வாழ்த்தினாள் தங்கம்மாள். அவனுடைய சொந்த அண்ணன் முருகன் செய்துவிட்ட நம்பிக்கை மோசத்தால் இடிந்து போயிருந்தவளுக்குப் பாலனின் சொற்கள் புத்துயிரூட்டின.

பழனிக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை. பேச்சை உறுதிப்படுத்த விரும்பியது போல், ''அப்படீன்னா ரெண்டு கல்யாணத்தையும் ஒண்ணாவே இப்ப முடிச்சிடலாம்னு சொல்றே?'' என்றான்.

''அண்ணன் முத்துவைப் பொறுத்தவரையிலே, காமாட்சியைக் கல்யாணம் செய்துக்கச் சம்மதிச்சிருக்கான். காமாட்சியோட மனசு தெரிஞ்சால் போதும். அதே நாளிலே எனக்கும் கண்ணம்மாவுக்கும் கல்யாணத்தை வச்சிடலாம். செலவில்லாமல் சிக்கனமாச் செய்திட்டால் சரிதான்.''

வெளிவராந்தாவில் மறைந்து நின்றபடி இந்தப் பேச்சைக் கேட்ட கண்ணம்மாவுக்கு இதயம் ஆனந்தப் பெருக்கால் நிரம்பி வழிந்தது. தன்னைப் பாலன் அன்போடு அணைத்தபடி ஆகாயத்தில் மேகங்களுக்கிடையே பறந்து செல்வது போன்ற பரவச உணர்வால் அவள் ஒரு கணம் திக்குமுக்காடிப் போனாள். முன் பின் அறிவிப்பின்றித் திடீரென்று தனக்கு நல்ல காலம் பிறந்துவிட்டதுபோல் தோன்றியது அவளுக்கு.

துள்ளல் நடையோடு உள்ளே சென்று காபியை அவனிடம் கொடுத்துவிட்டு, தன் பெற்றோர் அருகில் இருப்பதையும் சட்டை செய்யாமல், அவன் முகத்தையே தன் கண்களால் விழுங்கத் தொடங்கினாள்.

''உன்னைப் பெத்தவங்ககிட்டே இதைப் பத்திப் பேசியாச்சா?'' என்று கேட்டாள் கண்ணம்மாவின் தாய்.

''நீங்கதான் முன்னாலேயே பேசியிருக்கிங்க. அவங்களும் நீங்களும் வருஷக் கணக்காப் பேசின பேச்சு இது. இதைத் தள்ளிப் போட முடியாதபடி ஒரு பெரிய நெருக்கடி நமக்கு முன்னாலே முளைச்சிருக்கு. அவசரமாச் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் வந்திட்டதாலே, இனிமேல் நாம காலங் கடத்தப்படாது. வீட்டுக்குப் போனவுடனே அம்மா அப்பா ரெண்டு பேர் கிட்டேயும் பேசுறேன். நீங்களும் காமாட்சியைக் கேட்டுக்கிட்டு வாங்க.''

''காமாட்சிக்கும் இஷ்டந்தான்'' என்றாள் கண்ணம்மா; ''முருகன் மாமாவோட போக்கைப்பத்தி நான் விவரமா அவகிட்ட பேசிட்டேன்; முத்து மாமாவைக் கட்டிக்கறதுக்கு அவ ஒண்ணும் தடங்கல் சொல்லமாட்டா'' என்றாள்.

பாலன் அப்படியே தன் அக்காள் லட்சுமியை எட்டிப் பார்த்துவிட்டு, அங்கிருந்தபடியே தன் தோட்டத்துக்குப் போவதாகச் சொன்னான். பெரியவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு கண்ணம்மாவைப் பார்த்தான்.

''இருங்க, லட்சுமி அத்தாச்சி வீட்டுக்கு நானும் உங்களோடு வர்ரேன்'' என்று அவனோடு சேர்ந்து புறப்பட்டாள் கண்ணம்மா. அவளைப் பொறுத்தவரையில் அவன் பேச்சைக் கேட்ட அந்த நொடியிலிருந்தே அவள் பாலனின் மனைவியாகிவிட்டாள்.

லட்சுமியும் குழந்தைகளும் வீட்டில் இருந்தார்கள். லட்சுமியின் கணவன் கூட்டுறவுச் சங்கத்துக்கு எதிராக வேலை செய்தவர்களில் ஒருவன். சங்கத்தைக் கலைக்கும் வேலையில் தன் சொந்த மைத்துனன் பாலனுக்கு எதிராக அவன் மும்முரமாக வேலை செய்து வந்தான். மைத்துனன் அங்கே வருவது தெரிந்து அவன் முகத்தில் விழிப்பதற்கு வெட்கப்பட்டுக் கொண்டே அவன் வீட்டிலிருந்து நழுவி விட்டான்.

கருப்பையாவைப் பற்றித் தன் தங்கை லட்சுமியிடம் கேட்டான் பாலன்.

''இந்த ஒரு வாரமா அவர் சுயநினைவோட இங்கே வர்ரதே இல்லே. கையிலே காசும் தாராளமாகப் புழங்குது. 'ஏன் இப்படிப் பாலனுக்கு எதிரே வரிஞ்சு கட்டுறிங்க?'ன்னு கேட்டா, 'அப்பத்தான் இதே தோட்டத்திலே எனக்கு வேலை போட்டுத் தருவாங்க'ன்னு சொல்றார். எனக்கு என்னமோ நம்பிக்கையில்லே. குடிக்கிறதுக்குக் காசு தாராளமாக் கிடைக்கிறதுதான் மிச்சமாயிருக்கும்.''

''எப்படியோ வேலை கிடைச்சால் சரி; சில பேருக்காவது கிடைச்சால் அவங்களோட புள்ளை குட்டியாவது பாதுகாப்போடு இருக்கும்'' என்றான் பாலன்.

ஒரு புறம் கணவனுக்கும் மறுபுறம் தம்பிக்கும் இடையில் அகப்பட்டுக் கொண்டு தவித்தாள் லட்சுமி. தொடக்கத்திலேயே அவளைச் சங்கத்தில் சேரவேண்டாம் என்று பாலன் சொல்லிவிட்டான். தன்னால் அவர்கள் குடும்பத்துக்குள் ஒரு பிளவு ஏற்படுவதை அவன் விரும்பவில்லை.

லட்சுமியின் வீட்டிலிருந்து பாலனும் கண்ணம்மாவும் புறப்படும்போது நேரமாகிவிட்டது. அவனோடு தோட்டத்து முகப்பு வரையிலும் நடந்து வந்து அவனை வழி அனுப்புவதாய் அடம் பிடித்தாள் கண்ணம்மா. மாலை மயங்கி, ரப்பர் மரக்காட்டை இருள் தழுவுகிற நேரத்தில், அவர்கள் ஒன்றாகச் செம்மண் சாலையில் நடந்தார்கள். பாலன் தன் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு வந்தான். அவள் மௌனமாக அவன் அருகில் நடந்து வந்தாள்.

தோட்டத்தின் வெளியே மேட்டுக்குப் போகிற பாதையை ஒட்டினாற்போல் மாரியம்மன் கோவில் இருந்தது. தோட்டத்துக்குத் தோட்டம் அங்கே மாரியம்மன் கோவிலையோ முனியாண்டி கோவிலையோ காணலாம். கிராமத்துக் கோவில் போன்ற சின்னஞ்சிறு கோவில். கோபுரத்தின் கீழே கருவறை; எதிரே நீண்ட கூடம்; வாயில் முகப்பு. இதுதான் கோவில்.

''இன்னிக்கு உங்க வாயிலே நல்ல வார்த்தை வந்திருக்கு. போய் மாரியம்மனைக் கும்பிட்டுட்டுப் போகலாம்'' என்று அவனைக் கோவிலுக்கு அழைத்தாள் கண்ணம்மா.

சைக்கிளைப் பாதையோரம் நிறுத்தி விட்டு அவன் அவளைப் பின்பற்றினான். கோவில்

வாசல் பூட்டிக் கிடந்தாலும் கம்பிக் கதவின் வழியே உள்ளே விளக்கு வெளிச்சத்தில் அம்மனின் திரு உருவம் தெரிந்தது. இருவரும் மாரியம்மனைக் கையெடுத்துக் கும்பிட்டார்கள். நிழலுருவங்கள் போல் அங்கேயே சற்று நேரம் மௌனமாக நின்றார்கள்.

தோட்டத்துக் கல்யாணங்கள் பல வழக்கமாக அந்த மாரியம்மன் கோவிலில்தான் நடக்கும். தங்கள் கல்யாணமும் அப்படியே எவ்விதத் தடங்கலுமின்றி நடைபெற வேண்டுமென்று அம்மனை வேண்டிக் கொண்டாள் கண்ணம்மா.

கோவிலை விட்டுத் திரும்பி வந்து அவர்கள் மேலே நடந்தார்கள். தொலைவில் கேட்டருகில் நின்ற காவற்காரனைத் தவிர அங்கு யாருமே தென்படவில்லை. திரும்பிய பக்கமெல்லாம் மரங்கள்; இருளின் ஆதிக்கத்துக்கு நல்வரவு கூறிக்கொண் டிருந்தன மரங்கள்.

''அப்படின்னா, நான் போயிட்டு வாரேன்'' என்று சைக்கிளை ஒரு பக்கம் நிறுத்தியபடியே அவளை ஏறிட்டுப் பார்த்தான் பாலன்.

''இப்பவே என்னையும் உங்க வீட்டுக்குக் கூட்டிக்கிட்டுப் போயிட நீங்களா?''

பாலன் பதிலளிக்கவில்லை. மெள்ள அவள் தோளைப் பற்றி அருகில் இழுத்தான். வலது கரத்தால் அவள் முகத்தை உயர்த்தி அவள் கண்களை ஊடுருவினான். அவளுடைய மூச்சுக் காற்றின் வெப்பத்தை அவனால் நன்றாக உணர முடிந்தது.

அவன் முகம் மேலும் குனிய முயன்றது. அவள் தடுக்க விரும்பாவிட்டாலும், பெண்ணுக்கே உரிய நாணத்தால், ''நான் எங்கே போயிடப் போறேன்? கல்யாணம் ஆனபிறகு ஒரு நாள் கூட இங்கே இருப்பேன்னு நினைக்கிறீங்களா?'' என்றாள்.

சட்டென்று நிதானித்துத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான் பாலன். மிகவும் மென்மையான உணர்வுகள் கொண்டவன் அவன். கண்ணம்மா அப்படிப் பேசினாள் என்றாலும், தன்னைத் தடுக்க மாட்டாள் என்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். இருந்துங் கூட அவன் பொறுத்திருக்க முயன்றான்.

எதற்காக அவனிடம் அப்படிப் பேசினோம் என்று கலங்கினாள் கண்ணம்மா. ''என் மேலே கோபமா உங்களுக்கு?''

''கொஞ்சங்கூடக் கோபமில்லே; நீ சொல்றதும் நியாயந்தான். கழுத்திலே ஒரு கயிற்றைப் போட்டுட்டா, அப்புறம் அப்படியே உன்னை அலாக்காத் தூக்கிட்டுப் போயிடமாட்டேனா?''

''ரொம்ப நல்லவர் நீங்க; ரொம்ப ரொம்ப நல்லவர்!''

''நீ மாத்திரம் என்னவாம்?'' செல்லமாக அவள் உதட்டில் தட்டி விட்டு, அவளை விட்டுப் பிரிய மனமின்றி அவளிடம் விடை பெற்றுக் கொண்டான் பாலன்.

இருளோடு இருளாகக் கரைந்தபடி அவன் சைக்கிள் செல்லும் திசையையைப் பார்த்துக் கொண்டு நின்றாள் கண்ணம்மா. பொழுதும் நன்றாக இருட்டிவிட்டது.

(தொடரும்)

# பால்மரக் காட்டினிலே

அகிலன்



## 7. மூத்த பிள்ளை முருகன்

அடுத்த ஞாயிற்றுக்கிழமையன்று விக்டரி எஸ்டேட்டிலிருந்து சிரம்பான் நகரத்துக்கு வந்து, அங்கிருந்து கோலாலம்பூருக்குப் பஸ் ஏறினான் பாலன். கோலாலம்பூருக்குச் சென்று அவனுடைய அண்ணன் முருகனைப் பார்த்துப் பேசி, முடிந்தால் அவனை எஸ்டேட்டுக்கு அழைத்து வரவேண்டுமென்பது பாலனின் பெற்றோரது விருப்பம். வீரப்பன், வேலம்மாள் இருவருமே மூத்தபிள்ளை முருகனிடம் அதிகமான நம்பிக்கை வைத்திருந்தார்கள். மூத்தவன் இருக்கும்போது அடுத்த பிள்ளைகளுக்குக் கல்யாணம் செய்யவேண்டிய ஒரு நெருக்கடி வந்துவிட்டது. கல்யாணம் செய்வதென்றால் அதற்குக் காசு பணம் வேண்டும். எல்லா விவரங்களையும் முருகனிடம் மனம் விட்டுப் பேசத் துடித்தார்கள் அவன் அம்மாவும் அப்பாவும்.

சிரம்பானிலிருந்து கோலாலம்பூருக்குச் சென்ற பஸ்ஸில் பாலன் இருந்தான். காலை நேரத்துக் குளிர்காற்று சில்லென்று பஸ்ஸுக்குள் வீசிக்கொண்டிருந்தது. மலாய்க்காரர், சீனர், தமிழர் ஆகிய மூன்று இனத்தவரும் பஸ்ஸில் நிறைந்திருந்தனர். ஓர் ஓரத்தில் அமர்ந்திருந்த பாலன் எதிரே சாலையைப் பார்த்தான். விசாலமான நெடுஞ்சாலை. இருபுறங்களிலும் உயர்ந்தோங்கி வளர்ந்த ரப்பர் மரத் தோட்டங்கள்; இடையிடையே காட்டு மரக் கூட்டங்கள். பாலனின் நினைவு எங்கெல்லாமோ அலைந்து திரிந்தது.

ஒன்றரை நூற்றாண்டுக்கு முன்பு வரையில் பெரும்பாலும் காடுகளும் மலைகளும் மண்டிக் கிடந்த பிரதேசம் அது. கடலோரப் பகுதிகளின் சமவெளியில் உழவுத் தொழில் செய்துகொண்டும் மீன் பிடித்துக்கொண்டும் மலாய் மக்கள் கூட்டம் வாழ்ந்திருக்கிறது. வெள்ளைக்காரன் அந்த நாட்டைக் கைப்பற்றியவுடன் தனக்கு அங்கே பெரும் புதையல் காத்திருப்பதைக் கண்டுகொண்டான். தரைக்கடியிலே மண்ணில் ஈயம் இருந்தது; தரைக்கு மேலே கரும்பு விளைந்தது; தென்னை செழித்தது; ரப்பர் மரங்களும் செம்பனை மரங்களும் காடாய் மண்டின.

கரும்பிலிருந்து சர்க்கரை, தென்னையிலிருந்து கொப்பரை, கித்தா மரத்திலிருந்து ரப்பர், செம்பனை விதையிலிருந்து எண்ணெய் எடுத்துக் கோடி கோடியாகச் சம்பாதிக்க வாய்ப்பிருப்பதை அவன் கண்டுகொண்டான். ஆனால் அங்கே எலும்பு நொறுங்க உழைத்துச் சாவதற்கு மக்கள் கூட்டம் வேண்டுமே? உழவுத் தொழிலிலும் மீன் பிடிப்பதிலும் ஈடுபட்டிருந்த மலாய் மக்களை அவனால் கட்டாயப்படுத்தி வேலை வாங்க முடியவில்லை. சீனர்களோ ஈயச் சுரங்கங்களில் மட்டும் உழைக்க முன்வந்தார்கள்; ஆனால் உழைப்புக்கேற்ற ஊதியத்தையும் உரிமையையும் அவர்கள் எதிர்பார்த்தார்கள். வெள்ளைக்காரனுக்கோ எவ்வளவு குறைவாகக் கூலி கொடுக்க முடியுமோ அவ்வளவு குறைவாகக் கூலி கொடுத்து, எவ்வளவு அதிகமான வேலை வாங்க முடியுமோ அவ்வளவு அதிகமாக வேலை வாங்க வேண்டியிருந்தது. அகப்பட்டார்கள் தமிழர்கள்.

பஸ்ஸில் கோலாலம்பூரை நோக்கிப் பயணம் செய்துகொண்டிருந்த பாலனின் மனம் அந்த மண்ணில் கப்பல் கப்பலாக வந்திறங்கி, காடுகளைத் திருத்திக் கழனிகளாக்கி, சாலைகள் அமைத்து, ரெயில் பாதைகள் போட்டு, அந்த நாட்டை உருவாக்கத் தம் உதிரத்தைக் கொட்டி உழைத்த தன்னுடைய முன்னோர்களின் காலத்தை நோக்கிப் பயணம் செய்தது. ஒருபுறம் மனித விலங்குகளான தம் எஜமானர்களோடு அவர்களுக்குப் போராட்டம்; மறுபுறம் காடுகளில் பதுங்கித் திரிந்த வனவிலங்குகளோடும் பாம்புகளோடும் போராட்டம்; காலரா, அம்மை, மலேரியா போன்ற நோய் நொடிகளாலும் கடின உழைப்பாலும் பற்றாக்குறை உணவாலும் புற்றீசல்கள்போல் அங்கே செத்து மடிந்தவர்கள் எத்தனை எத்தனையோ பேர்!

'பாட்டன் முப்பாட்டன் காலத்திலேருந்து இந்த மண்ணுக்காகப் பாடுபட்டு உயிரைக் கொடுத்தவங்ககூட, இப்ப ஒரே ஒரு மாச

நோட்டீஸிலே வெளியே போகணுமாமே! எங்கே போவாங்க அவுங்க?' தன்னைத் தானே கேட்டுக்கொண்டு பெருமூச்சு விட்டான் பாலன்.

பஸ் போய்க்கொண்டிருந்த நெடுஞ்சாலையில் தலைநகரத்திலிருந்தும் தலைநகரத்தை நோக்கியும் நூற்றுக்கணக்கான புதுக் கார்கள் பறந்துகொண்டிருந்தன. ஸ்கூட்டர்களிலும் மோட்டார் சைக்கிள்களிலும் போவோர் வருவோர் கூட்டத்துக்கும் குறைவில்லை. நாட்டின் வளம் தோட்டத்துக்குள்ளிருந்தபோது தெரியவில்லையே தவிர, வெளி உலகம் வெள்ளிக்குப் பஞ்சமில்லாத உலகமாகத்தான் மினுமினுத்தது.

கோலாலம்பூர் நகரத்தின் 'பஸ் ஸ்டாண்ட்' வந்தது. பஸ்ஸிலிருந்து இறங்கித் தெருவுக்கு வந்தான் பாலன். நகரத்தின் சாலைகளில் சாரி சாரியாகக் கார்கள் இழைந்துகொண்டிருந்தன. அன்று ஞாயிற்றுக்கிழமையாக இருந்துங் கூடப் போக்குவரத்து நெரிசல் குறையவில்லை. சட்டைப் பையிலிருந்த காகிதத்தை எடுத்து அண்ணன் முருகனின் முகவரியை ஒரு முறை படித்துக் கொண்டான். ஆறு மாதங்களுக்கு முன்பு வரையில் புறநகர்ப் பகுதியில் ஒரு மலிவான அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு முருகன் வசித்து வந்தான். இப்போது முகவரி மாறியிருந்தது.

டவுன் பஸ்ஸுக்குக் காத்திருந்தால் நேரம் வீணாகும்; டாக்ஸியில் போனாலோ காசு வீணாகும்? யோசித்தான் பாலன். கூட்டுறவுச் சங்க முயற்சியில் அவன் இழந்துவிட்ட நானூறு வெள்ளி இப்படி அவனை யோசிக்க வைத்தது. கடைசியில் டாக்ஸியில் போகத் துணிந்து, ஒரு வாடகைக் காரைக் கை காட்டி நிறுத்தினான்; ஏறிக்கொண்டான். காரை ஓட்டி வந்த சீனரிடம் மலாய் மொழியில் பேசி விலாசத்தைச் சொன்னான்.

புதிதாக உருவாகி வந்த நகர்ப்புறப் பகுதி ஒன்றில், மத்தியதர மக்கள் வாழும் தெருவில் டாக்ஸி வந்து நின்றது. ஒரு வீட்டின் மாடி அறையில் குடியிருப்பதாக முருகன் குறிப்பிட்டிருந்தான். டாக்ஸியிலிருந்து இறங்கி, தயக்கத்தோடு வீட்டின் எண்ணைத் தேடலானான் பாலன். மிகுந்த சிரமம் அவனுக்கு ஏற்படவில்லை. வீட்டின் கீழ்ப்பகுதியில் விட்டிருந்த மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு எங்கேயோ முருகன் புறப்பட்டுக் கொண்டிருந்ததால், எளிதில் நேரடியாக அவனையே பாலனால் சந்திக்க முடிந்தது. ஐந்து நிமிஷம் தாமதமாக வந்திருந்தாலும் அவனைக் கண்டு பிடித்திருக்க முடியாது.

''முருகா!''

''அடடே, சொல்லாமல் கொள்ளாமல் வந்திட்டியா? வா, வா, வீட்டிலே எல்லாரும் சுகமா?'' அன்போடு வரவேற்றான் முருகன். அவன் கண்களில் உண்மையான மகிழ்ச்சி ஒளிவிட்டது.

''எங்கேயோ புறப்பட்டே போலே இருக்கே?''

''எங்கேயுமில்லே; ஓட்டலுக்குப் போய்ச் சாப்பிடலாம்னு நினைச்சேன். மெதுவாப் போகலாம், வா.''

மோட்டார் சைக்கிளை அதன் இடத்தில் வைத்துவிட்டு, பாலனை அழைத்துக்கொண்டு மாடிக்குச் சென்றான் முருகன். மாடிப்படியை ஒட்டிய வராந்தாவும் அடுத்து அறையும் இருந்தன. அறைக் கதவைத் திறந்துவிட்டு உள்ளே நுழைந்தான். மேசை, நாற்காலிகள், கண்ணாடி அலமாரி, மெத்தையுடன் கூடிய படுக்கை இவ்வளவும் அந்த அறைக்குள் காணப்பட்டன. ஒருகணம் பாலன் திணறிப் போய்விட்டான். அவன் கண்களை அவனாலேயே நம்ப முடியவில்லை. ஆறு மாதங்களுக்கு முன்பு வரையில் அவன் வசித்த இடத்துக்கும் இதற்கும் எவ்வளவு வித்தியாசம்! அந்த அறைக்குள் தென்பட்ட துணிமணிகளிலிருந்து நகரத்தின் நவநாகரிகப் பெண்மணிகள் வழக்கமாகப் பயன்படுத்தும் 'இன்டிமேட்' ஸென்டின் நறுமணம் மெல்லக் கமழ்ந்து கொண்டிருந்தது.

''திடீர்னு வந்திருக்கியே; என்ன விஷயம்?'' என்று கேட்டான் முருகன்.

''எல்லாம் உனக்குக் கடுதாசியிலே எழுதின விஷயந்தான்'' என்று தொடங்கினான் பாலன்; ''அடுத்த தோட்டத்துக்கு நோட்டீஸ் குடுத்ததாலே, குழந்தை குட்டிகள் எல்லாமாச் சேர்ந்து, ஆயிரம் பேருக்கு மேலே பாதிக்கப்பட்டிருக்காங்க. அவுங்களைக் காப்பாத்துறதுக்கு நாங்க செய்த முயற்சி தோற்றுப் போச்சு. இப்போ நம்ப சொந்த அக்கா குடும்பத்தையும் நம்ப மாமன் குடும்பத்தையுமாவது நாம காப்பாத்தணும். அக்கா குடும்பத்துக்குக்கூட அவ்வளவு கஷ்டம் ஏற்படாது போலே தெரியுது; அத்தானுக்கு அதே தோட்டத்திலே வேலை போட்டுத் தர்ரதாச் சொல்லிருக்காங்களாம். மாமா குடும்பந்தான் மற்றவங்களோட சேர்ந்து நடுத்தெருவிலே நிற்கப் போகுது.''

''அதுக்கு நாம இப்போ என்ன செய்ய முடியும்னு நீ நினைக்கிறே?'' என்று எவ்வித உணர்ச்சியுமின்றிக் கேட்டான் முருகன். அவன் குரலிலோ சொல்லிலோ பற்றுதல், பாசம், இரக்கம் ஏதும் இருப்பதாய்ப் பாலனுக்குத் தெரியவில்லை.

''நம்மையெல்லாம் மார்மேலேயும் தோள் மேலேயும் போட்டு வளர்த்தவர் மாமா. நம்மோட துணிமணிக்கு, படிப்புக்கு, ஏன் சமயங்களிலே சாப்பாட்டுக்குக்கூட, அவர் எவ்வளவோ செய்திருக்கார். நமக்கு அவர் வேறே இல்லே; நம்ம அப்பா வேறே இல்லே. வயசுக்கு வந்த பெண்கள் காமாட்சியையும் தங்கத்தையும் கூட்டிக்கிட்டு அவுங்க இப்போ எங்கே போவாங்க? எப்படிப் பிழைப்பாங்க? அந்தப் பெண்களோட மானத்தைக் காப்பாத்தற பொறுப்பாவது நமக்கு வேண்டாமா?''

''பாலா, நீ இப்படி உணர்ச்சி வசப்பட்டுப் பேசறதாலே ஒண்ணும் நடக்காது'' என்று குறுக்கிட்டான் முருகன்; ''நம்மோட சக்திக்கு மீறின காரியங்கள் இப்போ நடக்குது; இதையெல்லாம் தடுக்கறதுக்கு நம்மோட பெரிய தலைவர்கள் நடவடிக்கை எடுக்கணுமே தவிர, நீயும் நானும் நம்ப தலையைப் பாறையிலே மோதி உடைச்சுக்கப்படாது. வெள்ளத்திலே அடிச்சிட்டுப் போறவங்களைக் காப்பாத்தறேன்னு சொல்லி, நம்மையும் அந்த வெள்ளத்துக்குப் பலி கொடுத்திடப்படாது.''

பாலன் திடுக்கிட்டான். முருகன் பேசுகிற பேச்சா இது? முருகனைச் சொல்லிக் குற்றமில்லை; அவன் மாறி விட்டான். படித்து முடித்துவிட்டு, தோட்டத் தொழிலாளர்

களின் நலனுக்காகவே தன் வாழ்க்கையைச் செலவிடப் போவதாய் மார்தட்டிய பழைய முருகன் இல்லை அவன். அவனுடைய உடை, உடல், பேச்சு, செயல் ஒவ்வொன்றிலுமே இப்போது வெள்ளியின் மினுமினுப்புத் தெரிந்தது. நாகரிகத்தில் மிதக்கும் நகர வாசியாக மாறிவிட்டான் அவன்.

அவனிடம் பேசிப் பயனில்லை என்ற முடிவுக்கு வந்து மௌனம் சாதித்தான் பாலன். விக்டரி எஸ்டேட்டின் தொழுவம் போன்ற லயனில் பிறந்து, ஆயாக் கொட்டகையில் வளர்ந்து, கிடைத்ததைக் கிடைத்த வேளையில் சாப்பிட்டு, நாளைக்கு ஆறு மைல் நடந்து, இருபது மைல் பஸ்ஸில் பயணம் செய்து, தன் குடும்பத்தாரின் தியாகத்தாலும் தன் மாமா குடும்பத்தின் தியாகத்தாலும் தான் இந்த நிலைக்கு உயர்ந்திருப்பதை முருகன் அறவே மறந்து விட்டான். அந்த உண்மை பாலனின் கண் முன்னுல் பளிச்சிட்டபோது அதை அவனுல் அவ்வளவு எளிதாகச் சீரணிக்க முடியவில்லை.

''நீ நினைக்கிறதை வாய்விட்டுச் சொல்லேன்; ஏன் பேசாமல் உட்கார்ந்திருக்கே?'' என்ருன் முருகன்;

''இதோ பார் முருகா, முதல்லே இதை நீ தெரிஞ்சுக்கணும்; காமாட்சியைக் கல்யாணம் செய்துக்கச் சொல்லி உன்னைக் கட்டாயப் படுத்தறதுக்காக நான் இங்கே வரலே. நம்ப முத்தண்ணனுக்குக் காமாட்சியைக் கட்டி வைக்கிறதா முடிவு பண்ணியிருக்கோம்.''

''என்ன! என்ன! உண்மையாவா?'' இதைக் கேட்டவுடன் முருகனுக்கு ஏற்பட்ட விடுதலை உணர்ச்சியை அவனுல் மறைக்க முடியவில்லை. அருகில் வந்து தன் தம்பியின் கரத்தை இறுகப் பற்றிக்கொண்டான். ''அப்புறம்?''

''அதே தேதியிலே எனக்கும் கண்ணம்மாவுக்கும் கல்யாணம் நடக்கப் போகுது.''

இந்த இரண்டாவது செய்தி முருகனுக்கு அவ்வளவாக மகிழ்ச்சி தரவில்லை. 'நீ செய்திருக்கிற முடிவு முட்டாள்தனமான முடிவு' என்று சொல்வதுபோல் தன் தம்பியை விழித்துப் பார்த்தான் முருகன். ஆனுல் வாய்விட்டு அதை உடனடியாகச் சொல்லி விட வில்லை.

''நீ ஒருத்தன் கல்யாணம் செய்து கொள்ளாமல் இருக்கிறப்போ, உன்னுேட தம்பிகளுக்கு முன்னுலே கல்யாணம் நடக்கிறது தப்புத்தான். ஆனுல் தோட்டக் காட்டிலே வாழவேண்டிய நிலைக்கு வந்த பிறகு, அதுக்கு ஒத்துப்போருப்பிலேதான் எதையும் செய்ய வேண்டியிருக்கு. தோட்டத்துக்காரங்க சட்டப்படி, அடுத்த தோட்டத்திலேருந்து வெளியேற்றப்படுகிற குடும்பங்களை நம்மோட லயத்திலே நம்மாலே வச்சுக்க முடியாது. ஒரு நாளைக்குக்கூட மாமா குடும்பம் வந்து நம்ம குடும்பத்தோட தங்கறதுக்கு வழியில்லே. கல்யாணம்னு செய்துக்கிட்டா, அந்த ரெண்டு பெண்களையாவது நம்மோட தங்க வச்சுக்கலாம். பின்னுலே முத்துவுக்கும் எனக்கும் லயத்திலே தனியா வீடு கிடைச்சா, நாங்க தனிக் குடித்தனம் போயிடறோம்.''

''இப்பவே அந்தச் சின்ன அறைக்குள்ளே எட்டுப் பேர்'' என்ருன் முருகன்.

''வேறே என்ன செய்யறது? வேறே என்ன வழி?''

முருகன் ஒருவன்மட்டும் வாழ்ந்து வந்த அந்த நகரத்து அறையில் பாதி அளவுகூட இருக்காது, விக்டரி எஸ்டேட்டில் அவர்கள் வசித்து வந்த லயன் வீடு. அதற்குள்ளே எட்டுப் பேர் வசிக்க வேண்டும்; வசித்து வந்தார்கள். இன்னும் இரு பெண்களும் வந்துவிட்டால் - அவர்களுக்குத் தனி வீடு கொடுக்கப்படும்வரை - பத்துப் பேரும் அங்கே தான் வாழ்ந்து தீரவேண்டும்.

ஒரு கணம் நினைவை எங்கோ அலையவிட்டு விட்டு, ''என்னுேட கல்யாணத்தைப்பத்தி நீங்க கவலைப்படவேண்டாம்'' என்ருன் முருகன்.

''நீ யாரோ ஒரு பெண்ணுேட பழகுகிறதா நான் கேள்விப்பட்டேன்; அந்தப் பெண்ணை நீ இப்பவே கல்யாணம் செய்துக்கறதா இருந்தாலும் செய்துக்கலாம். இதைப்பத்தியும் நான் வீட்டிலே பேசிட்டு வந்திட்டேன்.''

இதைக் கேட்டு அதிர்ச்சியடைந்த முருகன், தான் அடைந்த அதிர்ச்சியைத் தன் தம்பியிடம் மறைக்க முயன்ருன். அதே சமயம் தன் தம்பி எதிர்பாராத வகையில் - தனக்கு முக்கியமான வகையில் - உதவி செய்திருப்பதாகவும் தோன்றியது. காமாட்சியிடமிருந்து விடுதலை வாங்கித் தந்ததும் அல்லாமல், ராதாவை மணந்துகொள்வதற்கு வழிவகையும் செய்துவிட்டு அவன் வந்திருக்கிருன். ராதாவுக்கும் தனக்கும் இடையில் இருந்த ரகசியம் இப்படி விக்டரி எஸ்டேட் வரையில் பரவியிருக்குமென்று முருகன் இது வரை நினைக்கவில்லை. அந்த விஷயம் பாலனுக்குத் தெரிந்ததும் நல்லதாய்ப் போயிற்று. தன் வழியில் தொல்லை ஏதும் குறுக்கிடாமல் அவனே பாதையைச் செப்பனிட்டுவிட்டு இங்கு வந்திருக்கிருன்.

திடீரெனத் தன் தம்பியின்மீது அன்பு பொங்கியது பாலனுக்கு. மதிப்பும் ஏற்பட்டது. வயதில் இளையவனுக இருந்தும், தோட்ட வாழ்க்கையில் உழன்றவனுக இருந்தும், தன் விஷயத்தில் இங்கிதம் தெரிந்து நடந்துகொண்டிருக்கிருன். தன்னைப் பொறுத்தவரையில் அவனுடைய வருகை வரவேற்க வேண்டிய, கொண்டாட வேண்டிய வருகைதான்.

''சரி, சரி, புறப்படு; வந்தவனைச் சாப்பிடச் சொல்லாமல் நானும் பேசிக்கிட்டிருகேன்; ஒரு நல்ல ஓட்டலுக்குப் போய்ச் சாப்பிட்டு வரலாம்.''

முகம் கைகால் கழுவிக் கொண்டு உடை மாற்றிக் கொண்டான் பாலன். உடன் இருந்து முருகன் அவனுக்குச் சோப்பு, சீப்பு, தைலம், பௌடர் எல்லாவற்றையும் தானே எடுத்துக் கொடுத்தான். முதல்தரமான ஓட்டலுக்கு அவனை அழைத்துச் சென்று விலை உயர்ந்த விருந்துடன் அவனை உபசரிக்க விரும்பினுன்.

அவர்கள் புறப்பட்டுக் கொண்டிருந்த வேளையில், கீழே வாசல்புறத்தில் ஒரு கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது. ஹார்ன் ஒலி விட்டுவிட்டு எழும்பியது. ''அட, ராதா வந்திட்டா போலேருக்கே!'' என்று சொல்லிக் கொண்டே மாடிச் சன்னலருகில் சென்று எட்டிப் பார்த்தான் முருகன். பாலனும் அவனுேடு சென்று கவனித்தான்.

கார்க் கதவைச் சாத்திவிட்டு, காரின்மீது ஒயிலாகச் சாய்ந்தவாறே மாடிச் சன்னலை

ஏறிட்டுப் பார்த்தாள் ஓரிளம் பெண். மலாய்ப் பெண்கள் உடுத்துவதுபோல் மேலே சட்டை போட்டுக்கொண் டிருந்தாள்; இடுப்பில் கைலி போன்ற ஒருவகைப் பாவாடை. காரில் வேறு யாரும் இல்லை. அவள் தான் காரை ஓட்டிக்கொண்டு வந்திருக்க வேண்டும்.

முருகனுடன் மற்றொருவனைக் கண்டுவிட்டதால் அவளுக்கு ஏற்பட்ட ஏமாற்றம் அவள் முகத்தில் உடனே தெரிந்தது. அதைப் புரிந்து கொண்டு படிகளில் இறங்கி வேகமாக அவளிடம் ஓடினான் முருகன். அவளிடம் ஏதோ பேசினான். பிறகு இருவரும் கலகலப் போடு சிரித்துக்கொண்டே மாடி அறைக்கு வந்தனர். பிறகு பாலனுக்கு அவளை அறிமுகப் படுத்தி வைத்தான். தன் தம்பியைப்பற்றிப் பெருமையாகவே அவளிடம் இரண்டு வார்த்





தைகள் பேசிவைத்தான்.

''உங்கமேலே இவருக்கு ரொம்பப் பிரியம்! என்கிட்டே கூட உங்களேப்பத்திச் சொல்லி யிருக்கார்'' என்ருள் ராதா.

''சாப்பிடறதுக்காகக் கிளம்பிக் கிட்டிருந் தோம். நல்ல வேளே, நீயும் வந்திட்டே! வா, இன்னிக்கு நம்ம ரெண்டு பேரும் சேர்ந்து

''அடுத்த விருந்தை எங்க அண்ணியே சமைச்சுப் போடும்னு நினேக்கிறேன்.''

''ரொம்பப் பொல்லாதவரா இருக்காரே, உங்க தம்பி!'' என்று சொல்லிவிட்டு, ''வாங்க, சாப்பிட்டு வந்து பேசலாம்'' என்று துள்ளல் நடையுடன் ராதா படிகளில் இறங்கினுள்.

காரில் ராதாவின் அருகில் முருகன் அமர்ந்து கொண்டான். பின் ஸீட்டில் பாலன். உற்சாகமாகக் காரை ஓட்டிக் கொண்டு சென்று, பல தெருக்களேக் கடந்து, ஒரு பிரம்மாண்டமான ஓட்டலின் முன்பு காரை நிறுத்தினுள் ராதா.

## 8. குபேரபுரியும் குசேலபுரியும்

பல மாடிக் கட்டிடங்கள் கொண்ட அந்த ஓட்டலின் உச்சியிலிருந்த மேல் பகுதிக்கு அவர்கள் 'லிப்டி'ல் சென்ருர்கள். அது சுழலும் மாடி. அதன் ஓரத்தில் அமர்ந்துகொண்டு சாப்பிட்டால், சாப்பிடும்போதே நகரம் முழுவதையும் உட்கார்ந்த இடத்திலிருந்து கொண்டு பார்த்துவிடலாம். மேலே நாட்டு மெல்லிசை அங்கே மாடியைப் போலவே

மெல்லச் சுழன்றுகொண்டிருந்தது. பல நாடுகளைச் சேர்ந்த பல இனத்து மக்களும் அங்கே குழுமியிருந்தனர். ஓர் ஒதுக்குப்புறத்திலிருந்த நாற்காலிகளைத் தேடி முருகன், ராதா, பாலன் மூவரும் அமர்ந்தார்கள்.

"இன்னிக்கு உங்க தம்பிக்கு என்னோட விருந்து; அதனாலே ஆர்டர் பண்ற வேலையை எங்கிட்டே விட்டுடுங்க" என்றாள் ராதா; "நான் சாப்பிட்டு வந்தாச்சு: இருந்தாலும் உங்க கம்பெனிக்காக ஏதாச்சும் சாப்பிடறேன்."

பாலன் அவன் ஆயுளில் அதுவரை கண்டிராத, சுவைத்திராத, உணவுப் பண்டங்கள் ஒவ்வொன்றாக மேசைக்கு வந்தன. அவற்றைச் சாப்பிடுவதற்கு உதவியாகக் கத்திகள், கரண்டிகள், குத்திகள் முதலியனவும் அங்கே தயாராக இருந்தன. பாலன் தன் அண்ணன் முருகனை இந்தச் சாப்பாட்டு விவகாரத்தில் வழி காட்டியாக வைத்துக்கொண்டு, ஒரு வழியாக அந்தப் புதுவகை உணவுப் பண்டங்களுடன் போராடலானான். வண்ண வண்ணக் கோப்பைகளில் ஏதோ பானங்களும் வந்து சேர்ந்தன.

தண்ணீரைக் குடிப்பதுபோல் நினைத்துக்கொண்டு கோப்பையைத் தன் வாயருகில் கொண்டு போனான் பாலன். அப்போதுதான் அது தண்ணீரோ கிரஷ்ஷோ அல்ல என்பதும் விஸ்கியாகவோ பிராந்தியாகவோ இருக்க வேண்டும் என்பதும் அவனுக்குப் புலப்பட்டன. மெதுவாக அதை எடுத்த இடத்திலேயே வைத்துவிட்டான்.

இதைப் பார்த்துவிட்டுச் சிரித்தாள் ராதா. "ஆரம்பத்திலேயே 'உங்க ஹெல்த்'துக்காகக் குடிச்சுட்டுத்தான் சாப்பாட்டைத் தொடங்கியிருக்கணும்; எங்கே நீங்க பின் வாங்கிடப் போறீங்களோன்னுதான் இப்படிச் செய்தேன். சாப்பாடு செரிக்க வேண்டாமா? ஒண்ணும் பண்ணாது; ஒரு 'ஸிப்' குடிச்சு வையுங்க."

"என்னை மன்னிச்சிடுங்க; பழக்கம் இல்லே" என்று தடுமாறினான் பாலன்.

முருகனுக்கும் இது சங்கடமான நிலையைத்தான் தோற்றுவித்தது. ஆனால் அவன் பாலனைக் கட்டாயப்படுத்தவில்லை.

"அப்படீன்னா பரவாயில்லே; உங்க அண்ணா அதைக் கவனிச்சுக்குவார்!" என்று சொல்லி, அந்தக் கோப்பையை எடுத்து ராதா முருகனிடம் நீட்டினாள். மௌனமாக அதையும் உறிஞ்சி உள்ளே தள்ளி வைத்தான் முருகன்.

ராட்டினம் போல் அந்த மாடி மெல்லச் சுழன்றுகொண்டே வந்தது. அங்கிருந்தபடியே கோலாலம்பூர் நகரத்தின் கோலாகலத் தோற்றத்தைக் கண்டு களித்தான் பாலன். இயற்கை அழகும் செயற்கை அழகும் கூடிக் களி நடம் புரியும் நகரம் அது. நகரத்தின் பரப்புக்குப் பஞ்சம் இல்லை. எங்கே பார்த்தாலும் மரங்கள், செடி கொடிகள்; அழகழகான சிறு வீடுகள். நகரத்தின் மையப் பகுதியில் மட்டும் மிகுதியாக மரங்களைக் காணோம். சாலைகளில் சிற்றெறும்புக் கூட்டம்போல் சாரிசாரியாகக் கார்கள் போய்க்கொண்டிருந்தன. புதியதோர் உலகத்துக்கே வந்துவிட்டது போன்ற உணர்ச்சி பாலனுக்கு ஏற்பட்டது.

சாப்பாடு முடிந்தது; பலமான விருந்துதான். பில் வந்தது. அதைக் கொடுப்பதில் சற்று நேரம் முருகனும் ராதாவும் போட்டி போட்டுக்கொண்டார்கள். வெற்றி ராதாவுக்குத்தான். அறுபது வெள்ளிக்குமேல் செலவாகியிருந்தது. நோட்டுக்களாக எழுபது வெள்ளியைத் தட்டில் வைத்துவிட்டு அங்கிருந்து எழுந்தாள் ராதா.

பாலன் அந்தத் தொகையைப் பார்த்தவுடனேயே திடுக்கிட்டான். கிட்டத்தட்ட ஒரு மாதம் உழைத்தால் அவன் அப்பாவுக்கோ அம்மாவுக்கோ கிடைக்கக்கூடிய தொகை அது. தொழிலாளர் குடும்பத்தில் பிறந்து வளர்ந்த முருகனுக்கு இந்த உண்மை தெரியாமல் இருக்க நியாயம் இல்லை.

ஓட்டலை விட்டு வெளியே வந்தவுடன், "இன்னிக்கு ஞாயித்துக்கிழமையாச்சே, எங்கேயாச்சும் போய்ப் பொழுது போக்கலாமா?" என்று முருகனிடம் கேட்டாள் ராதா.

"இன்னிக்கே நான் ஊருக்குத் திரும்பணும்; எனக்கு அங்கே வேலை இருக்கு" என்று குறுக்கிட்டுக் கூறினான் பாலன்.

"அப்படீன்னா உங்க நேரத்தை நான் எடுத்துக்கலே. உங்க அண்ணன் கிட்டப் பேச வேண்டிய விஷயம் உங்களுக்கு நிறைய இருக்கலாம். வாங்க, உங்களை உங்க ரூமிலே விட்டுட்டு நான் கிளம்பறேன்."

மீண்டும் முருகன் குடியிருந்த இடத்தை நோக்கிக் கார் திரும்பியது. அவர்களை இறக்கிவிட்டு, காரிலிருந்தபடியே ராதா இருவரிடமும் விடை பெற்றுக்கொண்டாள். "உங்க வீட்டிலே நான் எல்லாரையும் ரொம்ப விசாரிச்சேன்னு சொல்லுங்க" என்று பாலனிடம் கூறினாள். கார் அங்கிருந்து கிளம்பியது.

தன் அறைக்குப் போகும் மாடிப்படி ஏறிக்கொண்டே, "எதிர்பார்க்காத வேளையிலே அவளும் வந்து சேர்ந்திட்டா; எப்படி, ராதாவை உனக்குப் புடிச்சிருக்கா?" என்று கேட்டான் முருகன்.

"உனக்குப் புடிச்சிருந்தால் சரி; நல்ல பெண்ணாத்தான் தோணுது. ஆனா மிகவும் பெரிய இடத்துப் பெண்போலே இருக்கு."

"ஆமா, பெரிய இடத்துப் பெண்தான்" என்று சொல்லியபடியே கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்தான் முருகன். பாலன் நாற்காலியிலும் முருகன் கட்டிலிலும் அமர்ந்துகொண்டார்கள்.

"அஞ்சு மணிக்கு இங்கேருந்து பஸ் புறப்படுது; அதிலே கிளம்பினால் ராத்திரிக்குப் போய்ச் சேர்ந்திடலாம். நீ ஒரு நாளைக்கு லீவு போட்டுட்டு வந்தால் போதும். அம்மா அப்பா ரெண்டு பேருமே உன்னைப் பார்க்கணும்கிறாங்க" என்று தான் வந்ததன் காரணத்தை வலியுறுத்தினான் பாலன்.

"நான் ஊருக்குப் புறப்படறது ஒரு பக்கம் இருக்கட்டும்" என்று சொல்லித் தன் முகத்தை அழுத்தித் தேய்த்துக்கொண்டான் முருகன்; எதையோ அவன் யோசிப்பது போல் தோன்றியது; யோசித்து விட்டு, "உங்கிட்ட உன்னோட எதிர்காலத்தைப் பத்தி நான் முக்கியமாப் பேசவேண்டியிருக்கு" என்றான்.

பாலனின் கண்கள் முருகனின் கண்களைச் சந்தித்தன. குடித்திருந்ததால் விழிகளில் ஓரளவு சிவப்பேறியிருந்தாலும் அவன் நிதானத்தோடுதான் இருந்தான் என்பதைப் பாலன் புரிந்துகொண்டான்.

முருகன் பேசலானான்:

"நம்ம குடும்பத்திலே பிறந்த ஆம்பிளைப் பிள்ளைங்கள்ளே முத்துவும் நடேசனும் படிக்காமல் கெட்டுப் போயிட்டாங்க. பால்மரம் வெட்டிப் பிழைக்கிறதைத் தவிர, அவங்களுக்கு வேறே வழியில்லை. ஆனால் உன்மேலே எனக்கு நம்பிக்கை இருக்கு. என்னாலே என்னோட தம்பிகள்ளே யாருக்காவது உதவி செய்ய முடியும்னா உனக்குத்தான் செய்ய முடியும்."

'எனக்கென்ன உதவி தேவையிருக்கு?' என்று கேட்பதுபோல் தன் அண்ணனைப் பார்த்தான் பாலன்.

"உனக்கு ஏன் என்னாலே உதவ முடியும் தெரியுமா? அதுக்கு நீதான் காரணம். எனக்கு ஏன் இப்பப் பல பேர் உதவுறாங்க தெரியுமா? அதுக்கு நான்தான் காரணம்."

புரியாமல் விழித்தான் பாலன். குறுக்கிட்டு அவன் பேச விரும்பவில்லை.

"எவனெவன் தனக்குத்தானே உதவி செய்துகொள்கிறானோ அவனுக்குத்தான் கடவுளும் உதவி செய்வார்னு இங்கிலீஷ்லே ஒரு பழமொழி இருக்கு. இங்கிலீஷ்காரனோட இந்த எண்ணந்தான் அவனை இவ்வளவு கெட்டிக்காரனா இந்த உலகத்திலே உயர்த்தி இருக்கு. நான் சொல்றேன், கடவுள் மட்டுமில்லே, அடுத்தவன்கூட, யார் யார் தனக்குத்தானே உதவி செய்துக்கறானோ அவனுக்குத்தான் உதவி செய்வான். உதவி செய்ய முடியும். புரிஞ்சுதா உனக்கு?"

பாலனுக்குப் புரிவதுபோல் தோன்றியது. தன் அண்ணனிடம் அவன் கொண்டிருந்த பழைய மதிப்பு இப்போது மீண்டும் அவனிடம் தலை தூக்கியது.

"பாலா! தன்னோட எல்லாப் பிள்ளைகளையுந்தான் அப்பா படிக்க வச்சாங்க. நானும் நீயுந்தான் இப்போ படிச்சு முன்னுக்கு வந்துக்கிட்டிருக்கோம். நீயும் நானும் இப்போ படிச்சு வேலை பார்க்கிறதோட நிறுத்திக்கலே. மேல் படிப்புப் படிச்சு நீ அடுத்த பரீட்சை எழுதப் போறே. அதை எழுதித் தேறிட்டீன்னா, உனக்கு என்னாலேயே கோலாலம்பூரிலே ஒரு நல்ல வேலையா வாங்கித் தர முடியும். நான் மேலே படிக்கறதுக்கு லண்டனுக்குப் போகப் போறேன்."

"லண்டனுக்குப் போறியா?" மகிழ்ச்சியோடு கேட்டான் பாலன்.

"ஆமா, ராதாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டா, அடுத்தாப்பிலே அவங்கப்பா என்னை இங்கிலாந்துக்கு அனுப்பி வைக்கிறதாச் சொல்லியிருக்கார்."

இந்தச் செய்தியைக் கேட்டால் குடும்பத்தில் எல்லாருமே பூரிப்படைவார்கள் என்று நினைத்தான் பாலன். தோட்டத்து அதிகாரிகளான கிராணிகள், மானேஜர்கள் முதலியவர்களே தங்கள் வீட்டுப் பிள்ளைகளை மேல் படிப்புக்காக வெளிநாடுகளுக்கு அனுப்பும் நிலையில் இருந்தார்கள். மரம் வெட்டும் குடும்பத்தில் பிறந்த ஒருவன், இங்கிலாந்துக்குப் போவதென்பது எளிதில் மற்றவர்களால் நம்ப முடியாத செய்திதான்.

"இதோ பார் பாலா, நான் உனக்கு உதவி செய்யணும்னா, நீயும் உனக்கு ஓர் உதவி செய்துக்கணும். எஸ்டேட் வாழ்க்கையை அடியோட நீ வெறுக்கக் கத்துக்கணும். பிறவியிலேருந்து அது கொடுத்திருக்கிற தாழ்மை உணர்ச்சியை வேரோடு கல்லிக் குப்பைத் தொட்டியிலே எறிஞ்சிடணும்; அதோட பாசம், பந்தம், ஒட்டு, உறவு எல்லாத்தையும் கத்திரிச்சுக்கிட்டு, நீ அதிலேருந்து தப்பிச்சுக்கணும்; ஆமா, தப்பிச்சுக்கணும்."

"அண்ணா!" என்று கோபத்தோடு கத்தினான் பாலன்; "நீ ஒருத்தன் தப்பிச்சு வெளியிலே வந்தாச்சு; அப்படியே என்னையும் வந்திடச் சொல்றியா?"

ஆவேசத்தோடு நிறுத்தாமல் பேசிக்கொண்டு போனான் முருகன். தோட்ட வாழ்க்கையில் அவன் அடைந்த துன்பங்கள் அதன்மீதே தீராத வெறுப்பை அவனிடம் வளர்த்திருந்தன. பயங்கரமான கனவாக அதை நினைத்துக்கொண்டு, அதன் நினைவையே தன்னுடைய நெஞ்சிலிருந்து கல்லி எறியத் துடிப்பவன்போல் அவன் பேசினான்.

"நம்மை இந்த நிலைக்கு ஆளாக்கிவிட்டவங்களை அங்கேயே தவிக்க விட்டுட்டு, நாம மாத்திரம் தப்பிச்சுக்கறது நியாயமா?" என்று கேட்டான் பாலன்.

"உன்னோட நியாயத்தையும் தர்மத்தையும் உன்கிட்ட படிக்கிற பள்ளிக்கூடத்துப் பிள்ளைங்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க வச்சுக்க. அவுங்களை நீ ஏமாத்து; ஆனால் உன்னையே ஏமாத்திக்காதே! டார்வின் சொல்லியிருக்கான் பார், 'ஸர்வைவல் ஆஃப் தி ஃபிட்டஸ்ட்'னு, 'வலிமையானவன்தான் இந்த உலகத்திலே வாழ முடியும்'னு, அதை இந்த நூறு வருஷமாத் தோட்டத்திலே வாழற தமிழன் கத்துக்கலே. அவனுக்கு யாரும் கத்துக் கொடுக்கவும் இல்லே. அதனாலேதான், இத்தனை காலமான பிறகும் ஒரு மாச நோட்டீஸை வாங்கிட்டு, அவன் கடலிலே விழுந்து சாகிற நிலைமையிலே இருக்கான். அவனைக் காப்பாத்த நீ முயற்சி பண்ண வேண்டாம்; உன்னை நீ காப்பாத்திக்க."

"என்னை நீ என்ன செய்யச் சொல்றே?" வேதனையோடு கேட்டான் பாலன்.

"காமாட்சியை முத்து தாராளமாய்க் கட்டிக்கட்டும்; ஆனால் கண்ணம்மாவை நீ கட்டிக்கிற முட்டாள்தனத்தைச் செய்திட வேண்டாம். இன்னம் ரெண்டு மூணு வருஷம் பொறுத்துக்க. படிச்ச பொண்ணு, பணக்காரப் பொண்ணு, எத்தனையோ பேர் உனக்கு இங்கே கிடைப்பா. நல்ல எதிர்காலம் உனக்குக் காத்துக்கிட்டிருக்கறப்ப, எதுக்காக நீ அவசரப்பட்டு உன் காலுக்கே விலங்கை மாட்டிக்கணும்?"

முருகனின் பேச்சைக் கேட்கக் கேட்கப் பாலனுக்குத் தலையைச் சுற்றிக்கொண்டு வந்தது. குழப்பம் தலைதூக்கி நின்றது. 'முருகன் நல்லவனா? கெட்டவனா? நல்லவனாக இருந்தால் ஏன் தோட்டத்தில் மற்றவர்களை விட்டு விட்டு என்னை மட்டும் தப்பித்துக் கொள்ளச் சொல்கிறான்? கெட்டவனாக இருந்தால் எதற்காக அவன் என்னை எஸ்டேட் வாழ்க்கையிலிருந்து வெளியே பற்றி இழுக்க முயலவேண்டும்?'

"நான் ஒரு முடிவுக்கு வந்திட்டேன்" என்று உறுதியான குரலில் கூறினான் பாலன். "ஒரு தோட்டத்திலே இருக்கிற அத்தனை பேரையும் காப்பாத்தறதுக்கு ஆசைப்பட்டேன். அது நடக்கலே. நம் மாமா குடும்பத்தையாவது காப்பாத்தலாமான்னு அடுத்தாப்பிலே யோசனை செஞ்சோம். அதுவும் முடியாது போலேருக்கு; கடைசி கடைசியா அந்த

### முகவாய்

முகத்தின் அடிப்பகுதியை முகவாய் என்று சொல்கிறோம்; எழுத்திலும் எழுதுகிறோம். மோவாய் என்பதுதான் திருத்தமான சொல். 'பருஉ மோவாய்க் கந்தரத்தனார்' என்பது சங்ககாலத்துப் புலவர் ஒருவருக்குப் பெயர், அதில் மோவாய் என்று இருப்பதைக் காணலாம்.

---

ரெண்டே ரெண்டு பொண்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கறதுன்னு தீர்மானம் பண்ணியாச்சு. நான் கண்ணம்மாவைக் கல்யாணம் செய்துக்கப் போறது உறுதி.''

''சரி, உன் இஷ்டம்; நான் அதிலே தலையிடலே'' என்று முகத்தைச் சுளித்தபடி வெடுக்கென்று எடுத்தெறிந்து பேசினான் முருகன்; ''எத்தனை பெரிய வாய்ப்பை நீ உதறித் தள்றேன்னு இப்ப உனக்குத் தெரியாது.''

''இப்ப நீ ஊருக்கு வர்றதைப் பத்தி என்ன சொல்றே?''

''எனக்கு அங்கே வரப் பிடிக்கலே; இப்ப நான் வரப்போறதில்லே.''

''கல்யாணத்தை எவ்வளவு சிக்கனமாப் பண்ணினாலும் ரெண்டாயிரம் வெள்ளியாவது செலவாகும்னு தெரியுது. இவ்வளவுகூட வேண்டாம்னு நான் சொல்லிப் பார்த்தேன். அம்மா கேக்கலே. தெரிஞ்சவங்களைக் கூப்பிட்டு விருந்து போடணுமாம்.''

''செலவுக்குன்னே சடங்கு, சம்பிரதாயம், கல்யாணம், கருமாதி எல்லாம் வச்சிருக்காங்க நம்ப சனங்க. அதிலே மட்டும் ஒண்ணும் குறைச்சல் இல்லே.''

கல்யாணம் என்ற சொல்லோடு கருமாதி என்ற அவச் சொல்லையும் சேர்த்து அவன் அண்ணன் சொல்லியது கேட்டுத் துணுக்குற்றான் பாலன். அவனிடம் தொடர்ந்து பேசவோ பழகவோ பாலனுக்குப் பிடிக்கவில்லை. மேற்கொண்டு அவன் பேச்சைக் கேட்க விரும்பாதவன்போல், சட்டென்று நாற்காலியிலிருந்து எழுந்து, ''நேரமாகுது; நான் ஊருக்குப் போயிட்டு வாறேன்'' என்று கிளம்பினான்.

''சரி, போயிட்டு வா. இன்னம் ரெண்டு நாளிலே எங்கேயாவது கடன் வாங்கி ஐநூறு வெள்ளி அனுப்பி வைக்கிறேன், என்னாலே முடிஞ்சது அவ்வளவுதான். கல்யாணத்துக்கு வர்றதுக்கு லீவு கிடைச்சா வந்து பார்க்கிறேன். இல்லேன்னா நான் வராததைப் பெரிசுபடுத்த வேண்டாம்னு அப்பாகிட்டே சொல்.''

முருகன் பேச்சைத் தான் கேட்காததால் முருகன் கோபமடைந்திருக்கிறான் என்பது பாலனுக்குத் தெரியாமல் இல்லை. தம்பியின் மீது பற்றுதலும் பாசமும் கொண்டவன் போல் பேச்சு மழை பொழிந்தவன் திடீரென்று மாறிவிட்டான். ''சரி, உன் இஷ்டம்; நான் அதிலே தலையிடலே'' என்று பாலனின் கல்யாண யோசனையைப்பற்றி ஒப்புக்குச் சொல்லிவைத்தானே தவிர, தன் பேச்சைத் தட்டி நடப்பவனிடம் தனக்கு எப்படித் தண்டனை தரமுடியும் என்பதை முருகன்

நேரப் பயணத்தில் அவன் விரும்பினால் எஸ்டேட்டுக்கு வந்துவிட முடியும். கல்யாணத்துக்கு வருவதுகூடச் சந்தேகம் என்கிறான். இருந்து விட்டுப் போகட்டும்.

கோலாலம்பூரில் பஸ் ஏறிச் சிரம்பானுக்குத் திரும்பினான் பாலன்.

வீட்டுக்குள் அவன் நுழைந்தபோது, அங்கிருந்த யார் முகத்திலும் ஈயாடவில்லை. பாலனை உற்சாகமாக யாரும் வரவேற்கவில்லை. கீழ் வீட்டில் கூட்டம் போட்டுக்கொண்டு எல்லாரும் உட்கார்ந்திருந்தார்கள். வீரப்பன், வேலம்மாள், முத்து, செல்லம்மாள், கமலம் யாவருமே அங்கேதான் இருந்தார்கள்.

''பாவிப் பயலுக இப்படி மோசம் பண்ணிட்டானுகளே? இவுங்களுக்கெல்லாம் குடும்பம், பொண்டு, புள்ளை, அக்கா, தங்கச்சி யாரும் இருக்கமாட்டாங்களா?'' என்று வேதனைக் குரலெடுத்து முனகலானாள் வேலம்மாள்.

''என்ன நடந்திச்சு?'' என்று கேட்டான் பாலன்.

மௌனமாக முத்து ஒரு காகிதத்துண்டை எடுத்து நீட்டினான். அங்கே இருந்த அரிக்கேன் விளக்கருகில் பாலன் அதை எடுத்துச் சென்றான். தமிழில் அச்சடிக்கப்பட்ட துண்டுக் காகிதம் அது. விக்டரி எஸ்டேட் நிர்வாகம் அதை வெளியிட்டிருந்தது.

படித்தான்:

''இதனால் சகல விதமான எஸ்டேட் தொழிலாளர்களுக்கும் தெரிவிப்பது என்னவென்றால், அவர்கள் அக்கம்பக்கத்துத் தோட்டங்களில் நோட்டீஸ் கொடுக்கப்பட்ட தொழிலாளர்களையோ அவர்கள் குடும்பத்தாரையோ தங்கள் வீடுகளில் வைத்துக்கொள்ளக்கூடாது என்பதுதான். அது மட்டும் அல்ல. ஏற்கனவே உள்ள விதிகளிலிருந்து தப்புவதற்காக, நோட்டீஸ் கொடுக்கப்பட்ட தோட்டத்தில் உள்ளவர்களோடு கல்யாணச் சம்பந்தம் வைத்துக்கொள்ளவும் சிலர் முயற்சி செய்வதாய்த் தெரிகிறது. அப்படிக் கல்யாணம் செய்துகொள்பவர்கள் தங்கள் வீடுகளுக்கு அவர்களை அழைத்துக்கொள்ளக் கூடாது. மீறி நடப்பவர்கள், விளைவைத் தெரிந்தே கல்யாணம் செய்து கொண்டதாய்க் கருதப்படுவார்கள். அதன் பின்விளைவுகளுக்கு அவர்களே முழுப் பொறுப்பு ஏற்க வேண்டும். வாடகை இல்லாமல் வீடும், விலை இல்லாமல் விறகும், காசில்லாமல் தண்ணீரும் கொடுக்கும் நிர்வாகத்துடன் இந்த விஷயத்தில் ஒத்துழைக்கும்படி தொழிலாளர்கள் கோரப்படுகிறார்கள்.''

அச்சிட்ட தாளை ஒரு முறைக்கு இருமுறை கவனமாகப் படித்துப் பார்த்தான் பாலன். அவனுடைய அண்ணன், கல்யாணத்தையும் கருமாதியையும் ஒன்றாகச் சேர்த்துப் பேசிய நினைவு அப்போது அவனுக்குப் பளிச்சிட்டது. குபேரபுரியில் வாழ்ந்து பழகிவிட்டவன், குசேலபுரிவாசிகளுக்கு இட்ட சாபத்தின் விளைவா அது? இல்லை, ஒப்பந்தக் கூலிமுறையென்றால், இப்படியெல்லாம் கூடத் திடீர் திடீரென்று சட்டங்கள் போடவும் குடும்ப வாழ்வில் குறுக்கிடவும் உரிமையை அது பெற்றிருக்கிறதா?

கையில் காகிதத்தோடு அந்த விளக்கருகிலேயே இடிந்து போய் உட்கார்ந்துவிட்டான் பாலன்.

# பால்மரக் காட்டினிலே

அகிலன்

## 9. ஆசை மனக் கோட்டைகள்

லயத்து வீட்டின் கீழ்ப்பகுதியிலே கம்பியில் மாட்டப்பட்டிருந்த அரிக்கேன் விளக்குத் தொங்கிக் கொண்டிருந்தது. அச்சடித்த காகிதத் தாளைக் கையில் வைத்துக் கசக்கியபடி, மரத்தூணில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்து விட்டான் பாலன். இருந்த ஒரே ஓர் ஆசையும் - மாமன் பழனியின் பெண்களைக் கல்யாணம் செய்து கொண்டு தங்கள் குடும்பத்தில் சேர்த்துக் கொள்ளலாம் என்றிருந்த கடைசி ஆசையும் - நிராசையாகி விட்டது. நம்பிக்கை நசித்து விட்டது.

'கண்ணம்மா!' என்று தன் மனத்துக்குள் ஓலமிட்டபடி முகத்தைத் தன் கரங்களில் புதைத்துக் கொண்டான் பாலன். தான் சுக்குநூறாக வெடித்துச் சிதறிக்கொண்டிருப்பதைக் குடும்பத்தார் முன்னிலையில் அவன் காட்டிக்கொள்ள விரும்பவில்லை.

''அப்பவே சொன்னேனே, கேட்டாரா உங்கப்பா?'' என்று ஆத்திரத்தோடு பொங்கி எழுந்தாள் வேலம்மாள். ''நாடுவிட்டு நாடு, தேசம் விட்டுத் தேசம், கண்காணுச் சீமைக்கு நாம போகவேண்டாம்னு தலை தலையா அடிச்சிக்கிட்டேனே, கேட்டாரா? நம்ப நாட்டுக்குள்ளேயே எங்கேயாச்சும் வெளியூருக்குப் போய்ப் பொளைச்சுக்குவோம்னு சொன்னேனே, கேட்டாரா? அந்தக் கங்காணிப்பயல் பசப்பின பசப்பைக் கேட்டு, என்னை இழுத்துக்கிட்டு வந்தது பத்தாதுன்னு, என் தம்பியையும் கூட்டியாந்து நடுத்தெருவிலே விட்டாரே பாத்தியா?''

அவள் பிறந்த கதை, வளர்ந்த கதை, வீரப்பன் பேச்சைக் கேட்டு மயங்கிய கதை, இரு குடும்பத்தாருக்கும் தெரியாமல் கள்ளத் தாலி கட்டிக்கொண்டு கப்பலேறிய கதை, கப்பலில் ஆடுமாடுகள் போல் அடைபட்டு வந்த கதை, வீடும் மாடியுமாய் வாழலாமென்று ஆசை காட்டிய கங்காணி தங்களை மாட்டுத் தொழுவத்துக்குத் தள்ளிவிட்ட கதை, மழைத் தண்ணீரைப் பிடித்துவைத்துக் கொண்டு சமையல் செய்த கதை, அட்டைக் கடியால் அவதிப்பட்ட கதை இப்படி மூச்சுவிடாமல் கதை கதையாய்ச் சொல்லிக் கண்ணீர் வடித்தாள் வேலம்மாள்.

யாரும் அவளைத் தடுக்கவில்லை. பாலனும் பேசாதிருந்தான். சற்றே அழுது ஓய்ந்தாலாவது தாயின் துயரம் சிறிது ஓயக்கூடும்.

அவன் குடும்பம் பஞ்சத்தாலோ, பசி பட்டினியாலோ, பிழைக்க வேறு வழியில்லாததாலோ நாட்டை விட்டு ஓடி வந்த குடும்பம் அல்ல. அப்படிப்பட்ட குடும்பங்களும் அங்கு வந்து சேர்ந்தன என்றாலும், பாலனின் குடும்பம் வேறு காரணத்தால் கப்பலேறிய குடும்பம். காதலுக்கெதிரே சாதி குறுக்கிட்டதால் அங்கிருந்து ஓடி வந்த குடும்பம்.

கள்ளர் வகுப்பைச் சேர்ந்த வேலம்மாளின் மனத்தை அகமுடையார் வகுப்பைச் சேர்ந்த வீரப்பன் எப்படியோ கவர்ந்துவிட்டான். இருவர் குடும்பங்களுமே பெரும் பணக்காரக் குடும்பங்களாக இல்லாவிட்டாலும், ஓரளவு வசதியுள்ள குடும்பங்கள். உழைத்துப் பிழைப்பதற்குக் காணிகரை இருந்தன; தோப்புத் துரவு இருந்தன. மாந்தோப்பில் தொடங்கிய அவர்கள் காதலுக்கு வேலம்மாளின் தம்பி பழனியே காவல். அவர்களுக்குள் தூது சென்று வந்தவனும் பழனிதான்.

விவரம் வெளிப்பட்டவுடன் வேலம்மாளின் அப்பனால் அதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. வேலம்மாளின் கைகளையும் கால்களையும் முறித்து வீட்டுக்குள் போட்டுப் பூட்டி விடுவதாகப் பயமுறுத்தினான். தாயில்லாப் பெண் அவள். கைகால்களை முறிக்கவில்லையென்றாலும் தடிக்குச்சியால் அவள் இடுப்பை ஒடித்துவிட்டு, பிறகு இடுப்புக்கு மருந்து வைத்துக் கட்ட நாட்டு வைத்தியரைக் கூட்டி வந்தான். அதோடு அவன் நிறுத்தவில்லை. நேரே வெட்டரிவாளுடன் வீரப்பனின் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். அடுத்தாற்போல் வீரப்பன் தன் மகளோடு பேசுவதாய்ச் செய்தி காதில் விழுந்தால், அவர்கள் இருவரையுமே வெட்டி வாய்க்கால் மேட்டில் ஒன்றாய்ப் புதைக்கப் போவதாய்ச் சபதம் செய்தான்.

இந்தச் சமயத்தில்தான் சுப்பன் கங்காணியும் அந்தக் கிராமத்துக்கு வந்து தன் சொந்தக்காரர் வீட்டில் தங்கினான். காதுகளில் கடுக்கன், விரல்களில் மோதிரம், வலது கையில் தங்கச் சங்கிலி, ஜரிகைத் தலைப்பா, மேலே விலை உயர்ந்த கோட்டு முதலியவற்றுடன் ஒரு ஜமீன்தார்போல் காட்சியளித்தான் சுப்பன். அவன் பேச்சு, கிராமத்து இளைஞர்களில் பலரைக் கவர்ந்தது. காசைத் தண்ணீராய்ச் செலவழித்துத் தன்னைப் பார்க்க வந்தவர்களுக்கெல்லாம் பலகாரம் செய்து கொடுக்க வைத்தான். அதே சமயம் அந்த ஊரில் யார்

## முன் கதை

வயிற்றுப் பிழைப்புக்காக, ஒப்பந்தக் கூலிகளாக மலேசியாவுக்குக் கப்பல் ஏறின எத்தனையோ தமிழ்க் குடும்பங்கள். காட்டைத் திருத்தி, ரப்பர் மரங்களைப் பயிரிட்டு, பொன் விளையும் பூமியாக்கினார்கள் இவர்கள். தோட்டத்தை ஒட்டிய 'லயன்'களில் அவர்கள் குடியிருப்பு.

தோட்டத்துப் பள்ளியில் ஆசிரியராகப் பணிபுரிந்த பாலனின் தமக்கைக் குடும்பம் வேலை செய்த ரப்பர்த் தோட்டத்தைத் துண்டு போட்டு விற்றுவிட்டுக் கப்பலேற எண்ணிய ஆங்கில முதலாளி, அத் தோட்டத்தில் உழைத்தவர்களுக்கெல்லாம் நோட்டீஸ் கொடுத்துவிட்டான்.

தன் தமக்கையின் குடும்பமும், மாமன் குடும்பமும் இனிமேல் எப்படிப் பிழைக்கும் என்று பாலன் யோசிக்கிறான். மாமனின் மகள் கண்ணம்மா, பாலனின்மேல் உயிரையே வைத்திருக்கிறாள். ஏதாவது வகை செய்தாக வேண்டும் என்ற முனைப்பில், பாலன் பல நண்பர்களைச் சேர்த்துக்கொண்டு கூட்டுறவு முறையில் அந்தத் தோட்டத்தையே வாங்கி விடுவது என்று தீர்மானிக்கிறான். பெரும்பான்மை தொழிலாளர்களையும் மிகுந்த சிரமத்துடன் ஒன்றுபடுத்தி, பணமும் வசூல் செய்கிறான். தொழிலாளர்களின் ஒற்றுமையைக் குலைக்கச் சதி நடக்கிறது. சதியின் பலன், வாங்கிய பணத்தை எல்லாம் திருப்பிவிடுகிறான் பாலன். கோலாலம்பூரில் சொகுசாய் வாழும் அண்ணன் முருகனைப் போய்ப் பார்க்கிறான் பாலன். முருகனின் காதலி, பணக்காரியான லதாவையும் சந்திக்கிறான். தோட்ட வாழ்வை வெறுத்துச் சுயநலமாக வாழும் அண்ணனின் போக்கு பாலனுக்கு வெறுப்பைக் கொடுக்கிறது. திரும்பி வருகிறான். மண உறவைக்கூடக் கண்டிக்கும் வெள்ளை முதலாளிகளின் கடிதம் அவனைத் திடுக்கிடச் செய்கிறது...

யார் வீட்டில் புருஷனுக்கும் பெண்டாட்டிக்கும் சண்டை, எங்கெங்கே தகப்பனுக்கும் பிள்ளைக்கும் பிணக்கு, எங்கே அண்ணனுக்கும் தம்பிக்கும் விவகாரம், எந்த வீட்டு ஆணுக்கும் எந்த வீட்டுப் பெண்ணுக்கும் ரகசியத் தொடர்பு, யார் யாரெல்லாம் பிழைக்க வழியில்லாமல் சாப்பாட்டுக்குக் கஷ்டப்படுகிறார்கள் போன்ற விவரங்களையெல்லாம் வெகு கவனத்தோடு சேகரித்துக் கொண்டான். பெண்களைக் கலைப்பதற்குத் தன் சொந்தக்கார வீட்டுப் பெண்பிள்ளையை அனுப்பிவிட்டு, ஆண்களை மயக்கும் வேலையைத் தன்னுடையதாக வைத்துக்கொண்டான் சுப்பு.

கடுமையாக உழைக்கக்கூடிய கட்டிளங் காளைகளும் பெண்களுமே தேவையாக இருந்தனர் கங்காணிக்கு. கண்டவர்களையெல்லாம் திரட்டி அனுப்பிய பழைய காலம் மலையேறி விட்டது. ஆட்களுடைய வயதையும் உடற் கட்டையும் பொறுத்துக் கங்காணிக்கு அங்கே பணம் தந்தார்கள். பெண்கூலிகள் அப்போது குறைவாக இருந்ததால், ஆணையும் பெண்ணையும் குடும்பத்தோடு கூட்டி வந்தால் அதற்குத் தனிச் சலுகை கிடைத்தது.

சுப்பன் கங்காணி இருபத்தொரு வயதுக் காளையாக இருந்த வீரப்பனை வரவழைத்து அவன் காதுகளைக் கடித்தான். "உன்னோட ரகசியமெல்லாம் எனக்குத் தெரியும். எதுக்காக நீ அந்த முரட்டுப்பயல் கையாலே வெட்டுப்பட்டுச் சாகணும்? வேலம்மாளுக்கு நான் பொம்பளை ஆள்மூலமாகச் சொல்லி அனுப்புறேன். நீயும் அதுவும் சந்திச்சுப் பேச ஏற்பாடு செய்யறேன். கழுத்திலே ரகசியமா ஒரு தாலிக் கயித்தைப் போட்டுக் கப்பலுக்குக் கூட்டிக்கிட்டுவா. வேலம்மாளோட தம்பியும் வந்தா அதுக்கும் ஒரு துணையா இருக்கும். மூணே வருசம் நீங்க தோட்டத்திலே வேலை பார்த்தாப் போதும். என்னைப் போலச் சொந்த வீடு வாசல், நிலபுலத்தோட ராஜா வாட்டம் வாழலாம். நீயும் என்னைப் போலவே கங்காணி ஆயிடுவே.... செலவைப்பத்திக் கவலைப்படாதே. உன்னை நாகப்பட்டணத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போயி, பினாங்குக்குக் கப்பலேத்தி வைக்கிறது என்னோட பொறுப்பு."

தோட்டத்தில் வேலை செய்வது என்றால் வனாந்தரத்துக்குள் வேலை செய்வது என்பது அப்போது வீரப்பனுக்குத் தெரியாது. வீட்டுத் தோட்டம் போலவோ அல்லது அவர்கள் கிராமத்தை அடுத்திருந்த மாந்தோப்பு, கொய்யாத் தோப்புப்போலவோ இருக்குமென்று அவன் நம்பிக்கொண்டிருந்தான். மற்ற எல்லா ம்னிதர்களையும்போல ஊருக்குள் நாலு பேரோடு சேர்ந்து வசித்துக் கொண்டு, அன்றாடம் தோட்டத்துக்குப் போய்வர வேண்டும் போலும் என நினைத்தான். காட்டுப் பிரதேசங்களுக்குள் வாழும் மலைச்சாதி மக்களைப்போல் தங்களைக் கொண்டுபோய் வனவாசக் குடியிருப்புகளில் அடைக்கப் போகிறார்கள் என அவன் கனவுகூடக் காணவில்லை.

வேலம்மாள் தன் கழுத்தில் வீரப்பனின் 'கள்ளத் தாலி' ஏறிய நாள்முதல், அன்றுவரை நடந்த நோட்டீஸ் பயமுறுத்தல்வரை நடந்த கதையை ஒருவாறு சொல்லி முடித்தாள்.

"அன்னிக்கு ஒருத்தன் தாலியைக் கட்டிக்கிட்டுக் குடும்பத்தோட வரச்சொன்னான்னு வந்தாச்சு. இன்னிக்கு இன்னொருத்தன் 'தாலிகட்டக்கூடாது; பொம்பளையை வீட்டுக்குக் கூட்டிக்கக் கூடாது'ங்கறான். ஏன்னு கேட்டா வெளியே போகச் சொல்வான்" என்றாள் வீரம்மாள்.

"அது சரி, இந்தச் சேதி நம்ப பழனி மாமாவுக்குத் தெரியுமா?" என்று தன் தாயிடம் கேட்டான் பாலன்.

"இன்னிக்கு ஞாயத்துக்கிளமையாச்சே! பளனி, தங்கம், கண்ணம்மா மூணுபேரும் இங்கே வந்து, இதே இடத்திலே உக்காந்து பேசிக்கிட்டிருந்தப்பத்தானே, இந்தக் கடுதாசியை வீசிட்டுப் போனான்? கண்ணம்மா தானே இதை முதல்லே படிச்சவ?"

சரேலென்று அவ்விடத்தை விட்டு வேகமாய் எழுந்தான் பாலன். "அப்ப நான் போய் இப்பவே மாமனைப் பார்த்திட்டு வர்றேன். அவங்களை நீங்க இங்கேயே தங்கச் சொல்லியிருக்கலாம்."

"எவ்வளவோ சொல்லிப் பார்த்திட்டேன்; நீ திரும்பினதுக்குப் பிறகு உன்னைப் பார்த்

திட்டுப் போகலாம்னு சொன்னேன். அவுங்க கேக்கலே. கண்ணம்மாவுக்கு இந்தக் கடுதாசியைப் படிச்சவுடனே பேயறைஞ்ச மாதிரி ஆயிடுச்சு. பாவம்! விவரந் தெரிஞ்ச நாளா அது உம்மேலே உசிரையே வச்சிருக்கு...."

"அப்படீன்னு இப்பவே நான் போயிட்டு வர்ரேன்" என்று துடித்தான் பாலன்.

"நடுச்சாமத்துக்கு மேலே ஆயிடுச்சப்பா" என்றான் வீரப்பன்; "காட்டுக்குள்ளே ஏளெட்டு மைல் நீ சைக்கிள்ளே போகணும்; அப்படிப் போனாலும் உன்னே அவுங்க தோட்டத்துக் காவக்காரன் விடமாட்டான். பொளுது விடியிறவரையிலே பொறுத்துக்க. நம்ம கையிலே என்ன இருக்கு? ஒண்ணுமே யில்லே; ஒண்ணுமே யில்லே."

இருட்டுக்கும் தொலைவுக்கும் பாலன் அஞ்ச வில்லை. ஆனால் காவற்காரனைத் தாண்டி அந்த வேளையில் தோட்டத்துக்குள் போக முடியாது. நோட்டீஸ் கொடுத்த பிறகு அக்கம்பக்கத்தாரின் நடமாட்டத்துக்கு அவர்கள் எத்தனையோ கட்டுப்பாடுகளை விதித்திருந்தார்கள். பகல் பொழுதென்றால் எப்படியோ சமாளித்துக் கொள்ளலாம்.

சாப்பிடச் சொன்ன வேலம்மாளிடம் சாப்பிட்டதாகப் பொய் சொல்லிவிட்டுப் பாலன் படியேறி மேலே சென்றான். வராந்தாவின் திறந்த வெளியில் அக்கம்பக்கத்தார் படுத்துக் குறட்டை விட்டுக்கொண்டிருந் தார்கள். அவனுடைய வீடு என்று சொல்லப் படும் அறைக்குமுன் உள்ள காலியிடத்தில், தகரக் கொட்டகையின் கீழ்ப் பாயை விரித்துப் போட்டான். தலைக்கு ஒரு சிறிய தலையணை. 'பாண்டை'க் களைந்துவிட்டுக் கைலியை உடுத்துக்கொண்டு படுத்தான்.

**கோ**லாலம்பூருக்குப் போய் வந்த அலைச்சலால் அளவுக்கு மீறிய களைப்பு அவனுக்கு. அதோடு பசிக் களைப்பும் சேர்ந்து கொண்டது. என்றாலும் அவனுக்குத் தூக்கம் வர வில்லை. வராந்தாவின் மூங்கில் தட்டி வழியே வலதுபுறம் தெரிந்த வானத்தைப் பார்த்தபடி இருந்தான். மேகக்கூட்டம் மிகுதியாக இல்லை; நிலவையும் காணோம்; நட்சத்திரங்கள் மட்டிலும் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கண் சிமிட்டிக்கொண் டிருந்தன. அருகில் தென்பட்ட லயத்தைச் சுற்றிலும் ஒரே ரப்பர்மரக் கூட்டம். கறுத்த இருளின் போர்வையாக அது அங்கிருந்த மனிதக் கூட்டத்தை இறுக்கமாக மூடிக் கொண்டிருந்தது.

மரக்கூட்டத்துக்கிடையிலிருந்து காற்றின் ஓசையும் விதம் விதமான ஒலிகளும் வெளிப் பட்டன. லயத்து நாய்கள் இரண்டு எங்கிருந்தோ குலைக்கும் சத்தம் கேட்டது. பாலன் கண்ணிமைக்க மறந்தவனாய்ப் படுத்துக் கிடந்தான். அவனுடைய அடி வயிற்றை யாரோ இறுகப் பற்றிப் பிசைவது போல் வலிக்கத் தொடங்கியது.

'கண்ணம்மா, கண்ணம்மா, கண்ணம்மா!' பாலனின் கண்கள் இரண்டிலிருந்தும் நீர் வழிந்து காதுகளை நனைத்தது. தன்னைப் போலவே தன் அண்ணன் முத்துவும், கண்ணம்மாவைப் போலவே அவள் அக்கா காமாட்சியும் வேதனைபட்டுக்கொண்டிருப் பார்கள் என்ற நினைவு அவனுக்கு வந்தது. தனக்குள் பாலன் குமுறினான். 'எங்கள்ளே யாரும் செய்யாத பாவத்துக்கு நாங்க ஏன் இந்தத் தண்டனையை அநுபவிக்கணும்? கல்யாணத்துக்கு யாருமே குறுக்கே நிக்காதப்ப, பண்ணிக்கிறவங்களும் அவங்க குடும்பமும் ஒத்துப் போறப்ப, இவங்களுக்கு என்ன வந்தது? நாளைக்கு இதைப்பத்திக் கிராணி ஜோசப்புக்கிட்டே கேக்கணும்.'

கேட்டால் என்ன பதில் கிடைக்கும் என்று அவனுக்குத் தெரியாமல் இல்லை. இருந்தாலும் கேட்டுவிட வேண்டும். அவர்கள் பதில் எப்படிப்பட்டதாக இருந்தாலும், அதனால் தனக்கு வேலையே பறிபோவதாக இருந்தால் கூட, கண்ணம்மாவைக் கைவிட்டுவிடக் கூடாது.

தன் மூத்த அண்ணன் முருகனின் உதவி கிடைப்பதாக இருந்தால் இந்த வேலையை உதறிவிட்டு நகரத்திலேயே வேறு வேலை தேடிக்கொள்ளலாம். முருகன் நினைத்தால், விரும்பினால், கட்டாயம் அவனால் உதவி செய்ய முடியும். ஆனால் அவனோ கண்ணம் மாவைத் தான் கல்யாணம் செய்துகொள் வதைச் சிறிதும் விரும்பவில்லை. இதை அவனே வாய்விட்டுச் சொல்லிவிட்டான். கண்ணம்மாவைக் கல்யாணம் செய்துகொள்வ தற்காக அவனிடம் வேறு வேலை தேடிக் கொடுக்கச் சொல்வதில் பயன் இல்லை.

'முருகனை நம்பித்தானா இந்த உலகமே இருக்கு? எப்படியும் நான் அவளைக் கல்யா ணம் செய்துக்கத்தான் போறேன். வர்ரது வரட்டும். வேலையில்லாமல் திண்டாடினால் திண்டாடிட்டுப் போறேன். கோலாலம்பூருக் குப் போனால் நாலு பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கலாம். இல்லேன்னா கடை கண்ணிகளிலே ஒரு வேலை பார்க்கலாம். முயற்சி செஞ்சாக் கிடைக்காமலா போகும்?'

அந்த நாட்டில்கூட அப்போது வேலை யில்லாத் திண்டாட்டம் தலை காட்டத் தொடங்கியிருந்தது. என்றாலும் ஓரளவு படிப்பு இருந்ததால் எப்படியும் தன்னால் கண்ணம்மாவை வைத்துக் கொண்டு காலந் தள்ளிவிட முடியும் என்று நம்பினான் பாலன். வெளியூர்களில் வேலைக்கு உடனடியாக முயற்சி செய்ய வேண்டியதுதான். அவனு டைய நண்பர்கள் சிலர் ஈப்போ, சிரம்பான், மலாக்கா, பினாங்கு ஆகிய நகரங்களில் இருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் கடிதம் எழுத நினைத்தான். வேலை உடனடியாகக் கிடைக்குமானால் கண்ணம்மாவின் அக்கா காமாட்சியைக்கூடத் தங்களுடன் வைத்துக் கொள்ளலாம். காலம் வரும்போது முத்து அவளைக் கல்யாணம் செய்து கொள்ளட்டும்.

இந்த முடிவுக்கு அவன் வந்தபோது அவன் இதயத்தின் சுமை குறைந்துவிட்டது. வயிற்றைப் பிசைந்தெடுத்த வலி பஞ்சாய்ப் பறந்து விட்டது. 'குடும்பத்தோட இருந்தா அப்பா, அம்மா, தம்பி தங்கச்சிகளுக்கு ஒத்தாசையா இருக்கும். பாதுகாப்பா இருக்கும். அவங்களுக்கு ஒரு நல்ல வழி காட்ட முயற்சி செய்யலாம்....ஆனால்,

இப்ப வந்திருக்கிற ஆபத்திலேருந்து தப்புறதுக்கு இதை விட்டு வெளியேறுவதைத் தவிர வேறே வழியில்லே.'

அதன் பிறகு அயர்ந்து தூங்கினான் பாலன். நாலுமணிச் சங்கு ஊதியதோ ஐந்துமணிச் சங்கு ஊதியதோகூட அவன் உறக்கத்தைக் கலைக்கவில்லை. தங்கை செல்லம்மாள் அவனை எழுப்பிவிட்டு, ''பள்ளிக்கூடத்துக்குப் போகலையா அண்ணா?'' என்று கேட்டாள்.

வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்த பாலன் மளமளவென்று தயாரானான். பல் துலக்கி, குளித்து முழுகி, மாற்றுடை உடுத்துக் கொண்டு தேநீரைப் பருகினான். சைக்கிளின் பின்புறம் சிறிய தங்கை கமலத்தை ஏற்றிக் கொண்டான். அவரவர் வேலையை அவரவர் பார்க்கக் கிளம்பிவிட்டார்கள். மரம் வெட்டப் போகிறவர், வெளிக் காட்டு வேலைக்குச் செல்பவர், மேற்பார்வை செய்பவர்கள் முதலியோர் தம் தம் வேலைக்குக் கிளம்பினார்கள். மூத்த தங்கை செல்லம் கடைக்குட்டி ராஜாவை இடுப்பில் இடுக்கிக்கொண்டு ஆயாக்கொட்டகையை நோக்கி ஓடினாள். கிழக்கே உதிக்கும் சூரியன் மேற்கே உதித்தாலும் அன்றாட வேலை மணிக் கணக்குப்படி நடந்தாக வேண்டும். வேலை செய்தால் கூலி; வேலை செய்த அளவுக்குக் கூலி. ஆகவே எங்கே எது நடந்தாலும் வேலைக்குப் போகாமல் மட்டிலும் இருக்க முடியாது. காலை நேரத்தில் மழை பெய்தால் மட்டும் மழைத் திட்டி விடுவார்கள். மழை நின்றால் அந்தி வெட்டு வைத்துக் கொள்வார்கள். அன்றைக்கு மட்டும் பிற்பகலில் வேலைக்குப் போகவேண்டும்.

பள்ளிக்கூடத்தில் கமலத்தை விட்டுவிட்டுத் தலைமை ஆசிரியர் சண்முகத்திடம் சென்று விடுமுறைக்குச் சீட்டெழுதிக் கொடுத்தான் பாலன். சண்முகத்துக்குப் பாலனின்மீது நல்ல மதிப்பு இருந்தது. வாங்கிய சம்பளத்துக்காக மட்டும் அவன் அந்தப் பள்ளியில் உழைக்கவில்லை. எந்த அளவுக்குத் தன்னால் தன்னிடம் படிக்கும் பிள்ளைகளைக் கை தூக்கிவிட முடியுமோ அந்த அளவுக்கு அவன் தூக்கி விட்டுக்கொண்டிருந்தான். பள்ளிக்கூடத்திலேயே ஒரு சிறு நூல்நிலையம் ஏற்படுத்தி, அதைப் பள்ளி ஆசிரியர்களையும் மாணவர்களையும் பயன்படுத்திக் கொள்ளத் தூண்டினான். முன்பெல்லாம் பல நாட்கள் பள்ளியிலேயே தங்கி நூல் நிலையத்துப் புத்தகங்களை அவன் படிப்பதுண்டு.



அவனுக்குள்ள பிரச்னைபற்றிச் சண்முகத்துக்கும் தெரியுமாதலால், ''வகுப்பை நான் கவனிச்சுக்கிறேன்; நீ போயிட்டு வா'' என்றார்.

சைக்கிளில் தோட்டத்தை விட்டு வெளியே வந்தான். நெடுஞ்சாலையைக் கடந்து அடுத்த தோட்டத்துக்குள் புகுந்தான். வழக்கமாகக் கண்ணம்மா பால் வெட்டும் பகுதிக்குச் சென்று பார்த்தபோது அங்கே அவளைக் காணவில்லை. அவளுக்குப் பதிலாக வேறொரு பெண் மரம் கீறிக்கொண் டிருந்தாள்.



''ஏன், கண்ணம்மா வரலையா?''

''அவளுக்கு உடம்பு சொகம் இல்லே; திட்டி போட்டிருக்கா. அதுக்காக என்னை அனுப்பிச்சாங்க'' என்றாள்.

''உடம்பு சொகம் இல்லையா?''

''ஆமாம்.''

நேரே லயத்தை நோக்கிச் சைக்கிளை மிதித்தான் பாலன். வீட்டின் கீழ்ப்பகுதியில் யாரும் இல்லை. சைக்கிளை அங்கே வைத்து விட்டுப் படியேறினான். வீட்டுக் கதவு உட்புறம் தாழிடப்பட்டிருந்தது. தட்டினான். மெல்லக் கதவு திறந்தது. கதவைத் திறந்துவிட்ட கண்ணம்மாவும் பாலனும் ஒருவரை யொருவர் கண்ணிமைக்க மறந்து ஒரு நிமிடம் பார்த்துக் கொண்டு நின்றனர். பின்னர்க் கண்ணம்மா மீண்டும் கதவை உட்புறம் தாழிட்டாள். அருகில் நெருங்கி வந்து அவனுடைய பரந்த மார்பில் சாய்ந்து விட்டாள். மெல்ல அவளைப் பற்றிக்கொண்டு அவள் கேசத்தை வருடிவிட்டான் பாலன். அவள் தேகம் நெருப்பாய்ச் சுட்டுக்கொண் டிருந்தது.

## 10. மஞ்சளும் கயிறும்

நோய்ப் படுக்கையில் கிடக்கும் கண்ணம்மாவைக் காணப் போகிறோம் என்று நினைத்துக் கொண்டு அங்கு வந்த பாலனுக்கு, அவன் சிறிதும் எதிர்பாராத கோலத்தில் கண்ணம்மா காட்சியளித்தாள். உடம்பு நெருப்பாய்ச் சுட்டுக் கொண்டுதான் இருந்தது. ஆனால் அதை அவள் பொருட்படுத்தியதாகவே தெரியவில்லை. குளித்து முழுகி, பொட்டிட்டு, பூ வைத்து, புத்தாடையும் புதுமணமுமாய்க் குலுங்கிக்கொண் டிருந்தாள். வழக்கத்துக்கு மாறாகப் பன்னிரண்டு முழமுள்ள ரோஜா நிறச் சில்க் புடைவை அவள் உடலை அலங்கரித்துக்கொண் டிருந்தது. அதே நிறத்தில் ஜாக்கெட். மணமேடைப் பெண்ணாக மாறியிருந்தாள் அவள்.

''நீங்க இப்ப என்னைத் தேடிக்கிட்டு வருவீங்கன்னு எனக்குத் தெரியும். நீங்க வரலேன்னு நானே உங்களைப் பார்க்கறதுக்கு உங்க தோட்டத்துக்கு வந்திருப்பேன்'' என்றாள் கண்ணம்மா.

''வந்து?''

''எங்கேயாச்சும் என்னைத் தனியா அழைச்சுக்கிட்டுப் போகச் சொல்லியிருப்பேன்.''

''உடம்பெல்லாம் கொதிக்குதே உனக்கு?'' நெற்றியிலும் கன்னத்திலும் கை வைத்துப் பார்த்தான் பாலன்.

''அதெல்லாம் சரியாப் போயிடும்; இதுக்கெல்லாம் நீங்க ஒண்ணும் கவலைப்படாதீங்க'' என்று சொல்லிவிட்டு, ''நான் புடைவை கட்டிகிட்டிருக்கிறது உங்களுக்குப் புடிச்சிருக்கா? இதைப் பத்தி நீங்க ஒண்ணுமே சொல்லலியே?'' என்றாள்.

''சொல்லட்டுமா?''

''சொல்லுங்க!''

நிற்க முடியாமல் மெல்லக் கீழே தரையில் அமர்ந்தாள் கண்ணம்மா. பாலனும் உட்கார்ந்தான். சட்டென்று கண்ணம்மா அவன் மடியில் தன் தலையை வைத்துப் படுத்துக் கொண்டு விட்டாள்.

''கண்ணம்மாவைப் பார்க்கிறப்ப கல்யாணப்

திலே ஒரு தாலியைக் கட்டிடலாமான்னு தோணுது.''

கண்ணம்மாவின் விழிகளில் குபீரென்று புத்தொளி பொங்கியது. ''அத்தான், நம்ப ரெண்டு பேரு மனசும் ஒரே மனசுதான்! நான் என்ன நினைக்கிறேனே அதையே நீங்களும் நினைக்கிறீங்க. இப்ப நீங்க இங்கே வருவீங்கன்னு நெனைச்சேன்; வந்திட்டிங்க. கல்யாணம் பண்ணிக்கணும்னு நெனைச்சேன்; நீங்களும் அதையே சொல்றீங்க. மனசுப் பொருத்தம்னு சொல்றுங்களே, அது நமக்குள்ளே ரொம்ப இருக்குது, அத்தான்..''

''முக்கியமா உன்னைப் பார்த்து ஒரு விஷயத்தைச் சொல்லிட்டுப் போகலாம்னு தான் வந்தேன்: எங்க தோட்டத்து நிர்வாகம் தடுக்கிறதாலே நம்ப கல்யாணம் ஒண்ணும் நிற்கப்போறதில்லே. வேலைக்குச் சீட்டெழுதிக் கொடுத்திட்டு, உன்னைக் கல்யாணம் செய்துக்கிட்டு, வெளியூருக்குப் போய் வேறே ஒரு வேலை தேடிக்கப் போறேன்.''

இதைக் கேட்டவுடன் கண்ணம்மாவின் முகமலர்ச்சியை அவன் எதிர்பார்த்தான். ஆனால் அவளோ எவ்வித உணர்ச்சியுமின்றி அவனை வெறித்து நோக்கினாள்.

''ஏன், இந்த ஏற்பாடு உனக்குப் புடிக்கலையா?''

''நீங்க பொழைக்கிற பொழைப்பிலே நான் மண்ணைப் போடறதுக்காக உங்களைக் கல்யாணம் செய்துக்கணுமாக்கும்?''

''வெளியூர்லே எனக்கு ஏதாச்சும் வேலை கிடைக்காமலா போயிடும்?''

''அவ்வளவு லேசா வேலை கிடைச்சிடும்னு நான் நம்பலே. அப்படியே கிடைச்சால்கூட உங்க குடும்பத்திலேருந்து உங்களை நான் தனியாப் பிரிக்க மாட்டேன். உங்கண்ணன் முருகன்தான் அவர் பிறந்த குடும்பத்தை அடியோட மறந்திட்டார்னு, எனக்காக நீங்களும் இதை விட்டுட்டு வந்திட வேண்டாம். அந்தப் பாவத்தை நான் செய்யமாட்டேன்.''

கண்ணம்மா இப்போது பாலனுக்கு ஒரு புதிய பிரச்னையாகிவிட்டாள். கல்யாணத்துக்கு இவளே முட்டுக்கட்டை போடுவாள் போலிருக்கிறதே! கூட்டுக் குடும்பத்தை விட்டுத் தனியே பிரிந்து போகவேண்டும் என்று ஆசைப்படுகிற பெண்களே உலகத்தில் அதிகம். அவர்களுக்கு முற்றும் நேர் மாறாக இருக்கிறாளே!

''காமாட்சி அக்காளுக்கு ஒரு வழி செய்ய முடியாதப்ப, நான் மாத்திரம் உங்களோட சந்தோஷமாக் குடும்பம் நடத்தலாங்கிறீங்களா?''

''காமாட்சியையும் நம்மோட வச்சுக்குவோம்; ஆறுமாசம் ஒருவருஷம் ஆனப்புறம் நிலைமை மாறிடாதா? அப்போ முத்துவுக்கும் அவளுக்கும் கல்யாணம் செய்திடுவோம்.''

''வேலையில்லாமல் நம்ப ரெண்டு பேர் பட்டினி கிடந்தாப் பத்தாது, காமாட்சியும் சேர்ந்து கிடக்கட்டும்னு சொல்றிங்க!'' சிரித்தாள் கண்ணம்மா.

விவரந் தெரியாத சிறுமி என்று தான் மதிப்பீடு செய்த கண்ணம்மா இவ்வளவு ஆழமாய்ச் சிந்திக்கக் கூடியவள் என்பதே அவனுக்குப் புதிராக இருந்தது. அவளுடைய உள் மனத்தின் போராட்டம் அவனுக்குத் பமோ பாலன் அவளைக் கல்யாணம் செய்து கொள்வதால் கஷ்டப்படுவதை அவள் விரும்பவில்லை. அதோடு தன் அக்கா காமாட்சிக்கு வாழ்வு கிடைக்காத நிலையில் தான்மட்டும் வாழ்வதற்கும் அவள் தயங்கினாள்.

கண்ணம்மாவால் தோற்றுவிக்கப்பட்ட புதிய சிக்கலுக்கு என்ன வழி என்று தெரியாமல் தவித்தான் பாலன்.

''கண்ணம்மா! அப்படீன்னா உனக்கு என்னை இப்பக் கல்யாணம் செய்துக்க இஷ்டமில்லையா?''

''இப்பவே, இந்த நிமிஷத்திலேயே, நமக்குக் கல்யாணம் நடக்கணும்னு நான் ஆசைப் படறேன். நாளைக்குப் பொழுது விடிஞ்சா எங்கே என்ன நடக்குமோ தெரியாது. நீங்க சொன்னமாதிரி நான் புதுப் பொண்ணா உங்களுக்குக் கழுத்தை நீட்டக் காத்திருக்கேன். இப்பவே, இந்த இடத்திலேயே நீங்க எனக்குத் தாலி கட்டலாம்.''

திடீரென்று கண்ணம்மா முன்னுக்குப் பின் முரணாகப் பேசுவதுபோல் பாலனுக்குத் தோன்றியது. ஜுரவேகத்தில் அவள் உளறத் தொடங்கிவிட்டாளோ என்றுகூட அவன் அஞ்சினான். அறிவுள்ள பெண்போல் பேசியவள் ஏன் இப்படிக் குழம்புகிறாள்?

''இப்பவே கல்யாணமா?''

''ஆமா!''

கண்ணம்மா மெல்ல எழுந்து சென்று ஒரு மாடத்தில் வைத்திருந்த வெற்றிலை பாக்குத் தட்டை அவனருகில் எடுத்து வந்தாள். அதைக் கண்டவுடன் திடுக்கிட்டு வெலவெலத்துப்போனான் பாலன். அதில் வெற்றிலை பாக்கு, பூ, மஞ்சள் இவ்வளவும் இருந்தன, அத்துடன் ஒரு மஞ்சள் கயிறும் காணப்பட்டது. கயிற்றின் மத்தியில் ஒரு மஞ்சள் துண்டை அவள் முடிந்து வைத்திருந்தாள். அந்த மஞ்சள் துண்டுதான் தாலியா?

''இதென்ன கண்ணம்மா?''

''இதுதான் நீங்க இப்ப என் கழுத்திலே கட்டப்போற தாலி!.. உம், கட்டுங்க!''

தட்டை அவன் முன் நீட்டினாள் கண்ணம்மா.

''இப்பத்தான் உன்னோட அக்காளைப் பத்தியும் எங்க குடும்பத்தைப் பத்தியும் சொன்னியே!''

''அவங்களையும் நான் மறக்கலே; என்னையும் நான் மறக்கலே; உங்களையும் மறக்கலே.''

புரியாத புதிராகப் புது மணப்பெண் கோலத்திலிருந்து கொண்டு தனக்கு முன்னே கழுத்தை நீட்டிக்கொண்டிருக்கும் அவளுடைய பிடிவாதம் அவனைத் திணறச் செய்தது.

''கண்ணம்மா!'' நாத் தழுதழுத்தது பாலனுக்கு.

''இப்ப நீங்க எனக்குத் தாலி கட்டலேன்னா, இப்பவே நான் உங்க காலடியிலேயே விழுந்து உசிரை விட்டுடுவேன். நேத்து ராத்திரியே நான் செத்துப் போயிட்டேன்னு வச்சுக்குங்க. செத்துத் தொலைஞ்சாலும் கவலையில்லை. என் கழுத்திலே தாலியில்லேன்னா இப்பவே எனக்குப் பைத்தியம் பிடிச்சுடும் போலேருக்கு அத்தான்!''

அவளுடைய மனநிலை அளவுக்கு மீறிப் பாதிக்கப்பட்டிருப்பதைப் பாலன் [illegible]

பேசினால் அவள் புரிந்துகொள்ளும் பக்குவத்தில் அப்போது இல்லை. அவளுடைய பிடிவாதத்தில் அவள் உறுதியோடிருந்தாள். வேறு வழியில்லை பாலனுக்கு.

நடுங்கும் கரத்தில் தாலியை எடுத்தவாறே, ''கல்யாணத்துக்கப்புறம் எங்கே நாம் குடும்பம் நடத்தறது? எப்படி நடத்தறது?'' என்று கேட்டான்.

''முதல்லே நீங்க தாலியைக் கட்டுங்க சொல்றேன். இங்கேயே, இப்பவே நம்ப குடும்பம் நடத்தலாம். நோட்டீஸ் கெடு தீர இன்னம் ஒரு வாரத்துக்கு மேலே இருக்குதே! பின்னாலே பேசிக்கலாம் கட்டுங்க.''

கொந்தளிக்கும் உணர்ச்சிப் பிழம்பாகப் பற்றி எரிந்துகொண்டிருந்த கண்ணம்மாவின் மறுக்க முடியாத ஆணைக்குக் கட்டுப்படுவதைத் தவிர அந்த நேரத்தில் அவனுக்கு வேறெதுவுமே தோன்றவில்லை. எதையும் யோசித்துப் பார்க்கும் நிலையில் அவனும் இல்லை; அவன் அவளை யோசிக்க விடவும் இல்லை.

அதே தோட்டத்தின் தொலைவில் கோயிலில் குடியிருந்த மாரியம்மனை நினைத்துப் பிரார்த்தனை செய்துகொண்டு கண்ணம்மாவின் கழுத்தில் அந்த மஞ்சள் கயிற்றைக் கட்டினான் பாலன். மூன்று முடிச்சுக்கள் போட்டான். கண்ணம்மாவின் பெரிய விழிகளில் மீண்டும் புத்தொளி பொங்கியது. கயிற்றின் மத்தியில் தொங்கிய அந்த மஞ்சளை எடுத்துப் பயபக்தியோடு தன் கண்களில் ஒற்றிக்கொண்டாள். உதட்டில் பதித்துக்கொண்டாள்.

''அத்தான், என்னோட ஆசை நிறைவேறிடுச்சு அத்தான்; நிறைவேத்திட்டீங்க அத்தான்; என்னோட கடைசி ஆசையை··!''

பேச்சை முடிக்காமலே பொங்கும் அன்போடு அவன் கழுத்தைத் தன் கரங்களால் வளைத்துக்கொண்டாள் கண்ணம்மா. பெரிய தோர் மலர்மாலை அவன் கழுத்தில் வந்து விழுந்து மடியில் தவழ்வது போலிருந்தது பாலனுக்கு. இது குளிர்ச்சியான மலர்மாலையில்லை; இதில் வெப்பம் கலந்திருந்தது; அனலாய்ச் சுட்டுப் பொசுக்கியது.

முகத்தோடு முகம் வைத்தபடியே, ''இத்தனை நாளா உங்களை நினைச்சு நினைச்சு நான் பட்டிருக்கிற பாடு! கடைசி கடைசியா ஒரு அச்சுக் கடுதாசி அனுப்பி உங்களை என் கிட்டேருந்து பிரிக்கப் பாத்திட்டானுகளே, அது நடந்திச்சா? நேத்து ராத்திரி நான் கண்ணோட கண்ணு மூடியிருப்பேன்னு நினைக்கிறிங்களா?''

''எனக்கும் உன்னோட கவலையிலே பங்கு இல்லேங்கிறியா? இல்லாட்டி இப்ப ஏன் உன்னைத் தேடிக்கிட்டு இங்கே ஓடியாந்தேன்?''

''அத்தான்! எங்கே நீங்க எனக்குத் தாலி கட்டத் தயங்கப் போறிங்களோன்னு நினைச்சேன். மூணு முடிச்சைப் போட்டு உங்களுக்கே என்னைச் சொந்தமாக்கீட்டிங்க. இனி நீங்க முழுக்க முழுக்க எனக்குச் சொந்தம்; எனக்கே சொந்தம்..''

அவள் முகத்தருகே குனிந்த பாலன், ''இனிமேலும் நீ மாட்டேன்னு சொல்லமாட்டியே?'' என்று சிரித்தபடியே கேட்டான்.

''நான் மாட்டேன்னு சொன்னாத்தான் நீங்க என்னை விடப் போறீங்களா என்ன? மாட்டேன்னு சொல்றதுக்கா உங்க கையிலே தாலியைக் குடுத்து நான் கட்டிக்கிட்டேன்?''

இப்படிச் சொல்லிவிட்டு, அதிகமாய்ப் பேசி விட்டது போல் தன் கரங்களை அவன் கழுத்திலிருந்து எடுத்து, அதற்குள் நாணத்தோடு தன் முகத்தைப் புதைத்துக் கொண்டுவிட்டாள் கண்ணம்மா.

''பொல்லாதவ நீ!''

''நீங்க மட்டும் ரொம்ப நல்லவராக்கும்!'' அதன் பிறகு அவளும் 'மாட்டேன்' என்று மறுக்கவில்லை; அவனும் அவளை விடவில்லை.

ஊர் அறிய, உற்றம் சுற்றத்தாருக்குத் தெரிய அவர்கள் கல்யாணம் செய்துகொண்டிருந்தால், கல்யாணத்தை ஒட்டிய எல்லா நிகழ்ச்சிகளுமே உற்றம் சுற்றத்தார் ஏற்பாடு செய்தபடிதான் அங்கே நடந்திருக்கும். இது அவர்கள் இருவருக்கு மட்டுமே தெரிந்த இரகசியக் கல்யாணம்.

முதல் இரவின் வருகைக்காக அவர்கள் வீணே காத்திருக்கவில்லை. அந்த முதற் பகல் நேரந்தான் அவர்கள் தனிமையின்பத்தை அங்கே கண்டு களித்தது. அன்றைய முதற் பகல்தான் அவர்களுக்கு முதல் இரவு.

நெருப்பாய்க் கொளுத்தும் காய்ச்சலைச் சிறிதுகூடப் பொருட்படுத்தாமல், உணர்ச்சி நெருப்பில் அவனோடு முழுகித் திளைத்து மன நிறைவு பெற்றாள் கண்ணம்மா. பாலனுக்குத் தன் வாழ்க்கையில் என்றென்றும் மறக்க முடியாத இனிய அநுபவமாகத்தான் அது தோன்றியது.

நேரம் சென்றது.

பால் வெட்டப் போனவர்கள் திரும்பும் வேளை நெருங்கிக்கொண்டிருந்தது.

இருவரும் மீண்டும் குளித்து முழுகினார்கள். பச்சைத் தண்ணீரில் குளிக்க வேண்டாமென்று தடுத்துப் பார்த்தான்.

''நீங்க ஒண்ணும் கவலைப்படாதிங்க; என்னோட ஜுரம் எப்பவோ பறந்து போயிடுச்சு!'' என்று சிரித்துக்கொண்டே சொல்லிவிட்டு, குளிப்பதற்காகக் கீழே இறங்கிச் சென்று வந்தாள் கண்ணம்மா. கீழ் வீட்டோடு இருந்த தட்டி மறைப்புத்தான் அவர்களுடைய குளியல் அறை.

பிறகு பாலனுக்குச் சாப்பாடு பரிமாறினாள். அவன் சாப்பிட்டு முடித்த பிறகு தானும் ஏதோ பெயருக்குச் சாப்பிட்டு வைத்தாள்.

''இந்தச் சேதியை, நீ தாலி கட்டிக்கிட்ட சேதியை, இப்பவே நம்ப வீட்டிலே சொல்லிட்டா என்ன?'' என்று கேட்டான் பாலன்.

''இன்னம் ஒரு நாள் பொறுத்துக்குங்களேன்; இன்னிக்குச் சொல்ல வேண்டாம்.''

''அதுவரைக்கும் உன்னோட கழுத்தை நீ மத்தவங்ககிட்டே மறைச்சுக்கப் போறியா?''

''நான் என்னமோ செய்துக்கறேன்; நீங்க ஒண்ணும் அவசரப்படாதிங்க. இப்ப இது நம்ப ரெண்டு பேருக்குள்ளே இருக்கட்டும்.''

''நோட்டீஸ் கெடு முடிஞ்சதுக்கப்புறம் நாம என்ன செய்யறது? நீதான் என்னோட வேலையை விட்டுட்டு வெளியூர் போக வேண்டாம்னு சொல்றியே!''

''நாளைச் சமாச்சாரத்தை நாளைக்குப் பாத்துக்கறது; இன்னைக்கு ஒரு நாளைக்காவது

கவலைப்படாமல் சந்தோஷமா இருப்பமே!'' என்றாள் கண்ணம்மா.

''இனிமே என்னாலே உன்னைத் தனியா விட்டுட்டு இருக்க முடியும்னு நினைக்கிறியா?''

''அத்தான்! . .'' சட்டென்று முகம் உயர்த்தி அவன் கண்களையே ஊடுருவி அவன் இதயத்தைத் துருவிப் பார்த்தாள் கண்ணம்மா. 'என் மேலே இவ்வளவு ஆசையா நீங்க வச்சிருக்கீங்க?' என்று அவள் கண்கள் அவனைக் கேட்டன.

''சொல் கண்ணம்மா! எப்படி நம்ப குடும்பம் நடத்தப் போறோம்? நான் இந்த வேலையை விடத்தான் போறேன். இந்த விஷயத்திலே நீ சொல்றதை நான் கேக்கப் போறதில்லை.''

''இந்த பாருங்க, நீங்க எனக்கு இன்னிக்குக் குடுத்திருக்கிற சுகத்தை நினைச்சு நினைச்சு ஆனந்தப்படத்தான் நேரம் இருக்கு. நாளைக்கு நடக்கப் போறதை எங்கிட்டே பேசி என்னை அழ வச்சிடாதிங்க. ஏதாச்சும் பேசினிங்கன்னா நான் அழுதிடுவேன்.'' நாத் தழுதழுத்தது கண்ணம்மாவுக்கு.

மீண்டும் வந்து கண்ணம்மா அவன் மடியில் தலையை வைத்துத் தரையில் படுத்துக்கொண்டு விட்டாள். அவனைப் பேச விடாமல் தானே பேசினாள். ''நான் ஏழேழு ஜென்மங்களுக்குச் செய்த புண்ணியந்தான் எனக்கு இப்ப இந்த அதிர்ஷ்டத்தைக் கொடுத்திருக்கு. இன்னம் ஏழேழு ஜன்மங்களுக்கு இந்த ஒரு நாள் போதும் எனக்கு.''

கீழ் வீட்டில் சத்தம் கேட்டு, சட்டென்று அவன் மடியிலிருந்து தன் தலையை எடுத்துக் கொண்டாள் அவள். கீழே இறங்கி ஓடிவந்தாள். பால் வெட்டப் போயிருந்த கண்ணம்மாவின் குடும்பம் வேலை முடிந்து வீட்டுக்குத் திரும்பியிருந்தது.

காலையில் சமைத்து வைத்துச் சென்ற சாப்பாட்டை எடுத்துத் தன் அப்பாவுக்கும் தம்பிகளுக்கும் பாலனுக்கும் பரிமாறினாள் கண்ணம்மா. சேலைத் தலைப்பால் அவ்வப்போது அவள் தன் கழுத்தை இழுத்து மூடிக்கொண்டது பாலனுக்குச் சிரிப்பை வரவழைத்தது. எவ்வளவு நாளைக்குத்தான் இப்படி அவளால் நாடகம் போடமுடியும்?

சாப்பிட்டுக்கொண்டே பழனியிடம், ''நீங்க ஒண்ணுக்கும் கவலைப்படாதிங்க மாமா'' என்றான் பாலன். ''கண்ணம்மாவைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு நான் வெளியூரிலே வேலை தேடப் போறேன்; காமாட்சியும் கொஞ்ச நாள் எங்களோட இருக்கட்டும். பின்னாலே முத்துவுக்கும் காமாட்சிக்கும் கல்யாணத்தை முடிச்சிடலாம்.''

பழனியும் தங்கம்மாவும் நம்பிக்கையோடு பாலனின் முகத்தைப் பார்த்தார்கள்.

''உள்ள வேலையை விட்டுட்டு அத்தானும் சேர்ந்து நம்மோட தெருவுக்கு வர்ரேங்கறுா்'' என்று சொல்லி நகைத்தாள் கண்ணம்மா.

மாலைப் பொழுது வரையில் அங்கேயே தங்கி விட்டு, தன் இதயத்தைக் கண்ணம்மாவிடம் பறி கொடுத்தபடி, பிரிய மனமில்லாமல் அவளைப் பிரிந்து வந்தான் பாலன். விக்டரி எஸ்டேட்டுக்குள் அவன் நுழையும்போது நன்றாக இருட்டிவிட்டது. இரவெல்லாம் ஆனந்த மயமான நினைவுகளில் திளைக்கவனுக்கு, பின்னிரவு நேரம் மட்டிலும் பயங்கரமான கனவுகளில் கழிந்தது.

மறு நாள் காலை எட்டு மணியிருக்கும்.

அடுத்த எஸ்டேட்டிலிருந்த வாடகைக் கார் ஒன்று அவன் பள்ளிக்கூடத்துக்கு முன்பு வந்து நின்றது. பாலனின் நண்பன் கணேசனும் மற்றும் இரண்டு இளைஞர்களும் காரிலிருந்து இறங்கி வந்தார்கள். கணேசன் ஓட்டமும் நடையுமாகச் சென்று தலைமை ஆசிரியர் சண்முகத்திடம் ஏதோ ஒரு செய்தியைக் கூறினான். பிறகு பாலனிடம் வந்து, ''புறப்படு, ஓர் அவசரமான வேலை; தலைமை ஆசிரியர் கிட்டே சொல்லிட்டேன்'' என்றான்.

''என்ன, கணேசா?''

கணேசனின் முகம் பேயறைந்தமாதிரி காட்சியளித்தது. எதையோ அவன் பாலனிடம் மறைக்க முயன்றான்.

''வா, காரிலே போறப்பச் சொல்றேன்; கண்ணம்மாவுக்கு ரொம்ப . .''

''சொல்லு கணேசா!''

காருக்குள் பாலனைப் பிடித்துத் தள்ளித் தானும் அருகில் உட்கார்ந்துகொண்டான் கணேசன். உடன் வந்தவர்களைப் பார்த்து, ''பாலனோட அப்பா அம்மாகிட்டே சொல்லி அவங்களையும் கூட்டிக்கிட்டு வந்து சேருங்க'' என்றான்.

கார் அடுத்த எஸ்டேட்டை நோக்கிப் பறந்தது.

''என்ன கணேசா?'' அவன் தோளைப் பற்றி உலுக்கினான் பாலன்.

''கண்ணம்மாப் பொண்ணு கழுத்திலே சுருக்குப் போட்டுக்கிட்டுச் செத்துப் போச்சு. நாலு மணிச் சங்கு ஊதறத்துக்கு முன்னாலே தான் இது நடந்திருக்கு. தோட்டத்திலே தொங்கின அதை இப்ப வீட்டிலே கொண்டாந்து போட்டிருக்காங்க.''

''கண்ணம்மா!'' என்று வீரிட்டலறினான் பாலன்.

அவனை அடக்கிக் காருக்குள் வைத்திருப்பது கணேசனுக்குப் பெரும்பாடாய்ப் போய் விட்டது.

''இந்தா, உனக்கு அது எழுதி வச்ச கடுதாசி . .''

கசங்கிப் போன காகிதத் துண்டு ஒன்றைப் பாலனிடம் நீட்டினான் கணேசன்.

''அத்தான்! உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு எனக்கு வாழக் கொடுத்து வைக்கலே. ஆனால் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு, உங்களோட ஒரு நாளாவது மனைவியா வாழ்ந்திட்டு, எனக்குச் சாகக் கொடுத்து வச்சிருக்கு. இந்த அதிர்ஷ்டம் போதும் எனக்கு. நீங்க கட்டின தாலியை மட்டும் என் கழுத்தை விட்டு எடுக்கச் சொல்லாதீங்க.

அத்தான் . . அத்தான் . . அத்தான் . .

உங்க மனைவி,

பா. கண்ணம்மா''

(தொடரும்)




## 11. ஆணிவேரின் அடியிலே...

கண்ணம்மாவின் கடைசிக் கடிதத்தைப் படித்த பாலன் அப்படியே காரில் சாய்ந்துவிட்டான். அவனுக்குக் கண்கள் இருண்டுகொண்டு வந்தன; வாயடைத்து விட்டது; மூச்சுத் திணறியது. மயங்கி விழுந்த பாலனைக் கண்டு உடன் வந்த கணேசன் பயந்து பதறிப் போனான். சில நிமிஷங்களுக்குப் பிறகு பாலனின் விழிகள் திறந்துகொண்டபோதே கணேசனுக்கு நம்பிக்கை வந்தது.

அடுத்த எஸ்டேட்டுக்குள் கார் நுழைந்தது. அங்கே ஏதுமே நடக்காததுபோல் அவரவர் வேலையை அவரவர் பார்த்துக்கொண்டிருந்தார்கள். வேலைக்குப் புறப்படும் வேளையில் கண்ணம்மா இப்படிச் செய்துகொண்டுவிட்டதால், பலருக்குச் செய்தி பரவியிருக்காது என்று நினைத்தான் கணேசன். காலத்தையும் நேரத்தையும் கணக்கிட்டுத்தான் தனக்கு முடிவு தேடிக்கொண்டிருக்கிறாள் கண்ணம்மா. கணேசனையேகூட, அவன் மஸ்டர் களத்துக்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தபோதுதான் பழனி வந்து பார்த்துச் செய்தியைக் கூறினான்.

கண்ணம்மாவின் வீட்டுக்குமுன் கார் வந்து நின்றது. வீட்டின் கீழ்ப்பகுதியில் ஐந்தாறு ஆண்கள் மௌனமாக உட்கார்ந்திருந்தார்கள். மேலே பெண்களின் அழுகுரல் கேட்டது. கணேசன் கைத்தாங்கலாகப் பாலனைப் பிடித்துக்கொண்டே காரிலிருந்து இறங்கினான். அவனுடைய பிடியிலிருந்து உதறிக்கொண்டு வெறி பிடித்தவன்போல் மேல் தளத்துக்கு ஓடினான் பாலன். பாலனைக் கண்ட பெண்களின் அழுகுரல் குபீரென்று பொங்கி எழுந்தது.

எதிரில் கிடந்த கண்ணம்மாவைப் பார்த்துக்கொண்டு வாசற் கதவருகே சற்று நேரம் சிலையாக நின்றான்.

''பாலா, உன்னையும் என்னையும் ஏமாத்திட்டுப் போயிட்டா, பாலா!'' என்று பெற்ற வயிறு பற்றி எரியக் கதறினாள் தங்கம்மாள். ''பொண்ணும் மாப்பிள்ளையுமா உங்களை மணவறையிலே வச்சுப் பார்க்க நான் எவ்வளவு ஆசைப்பட்டேன் தெரியுமா? நேத்து ராத்திரி தான் எங்கிட்டே வந்து நடந்ததைச் சொல்லி, தான் கட்டிக்கிட்ட தாலியை எனக்குக் காட்டினா. புதுப் பொண்ணு வேசம் போட்டு உங்கிட்டே நாடகமாடிட்டு, ஒரு நாள் கூத்தோட உன்னையும் என்னையும் விட்டுப் போயிட்டா, பாலா! நான்கூட அதுக்காக அவளைத் திட்டலே, வையலே, ஒரு சொல் சொல்லலே! 'இத்தனை பேர் இருக்கிறப்ப நீ கள்ளத் தாலி கட்டிக்க வேண்டிய காலம் வந்திருச்சேன்னு' சொல்லி, ஒரு சொட்டுக் கண்ணீர் வடிச்சேன். அவ்வளவுதான். அவ எதுக்குத் தாலி கட்டிக்கிட்டான்னு இப்பத்தானே தெரியுது?''

வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு தன் பெண்ணின்மேல் விழுந்து புரண்டாள் தங்கம். பாலன் தன் வாயில் கைக்குட்டையை வைத்துக் கையால் அடைத்துக்கொண்டு, அழுகையை அடக்க முயன்றபடி, கண்ணம்மாவின் தலையருகே சென்று உட்கார்ந்தான். தலைக்குப் பின்னால் குத்துவிளக்கு ஒன்று எரிந்துகொண்டிருந்தது. அவளை மௌனமாக உற்றுப் பார்த்தான். விழிகள் மட்டிலும் மேலே செருகியிருந்தன. அவள் அவனுக்காக முதல் நாள் உடுத்துக்கொண்டிருந்த அதே உடை; அவனுக்காகச் செய்துகொண்டிருந்த அதே அலங்காரம்; அவள் கழுத்தில் அவன் கட்டிய அதே மஞ்சள் கயிறு. புதுப் பெண் கோலத்திலிருந்து அவள் இன்னும் மாறவில்லை.

'திடீர்னு இப்படி என்னை விட்டுட்டுப் போறதுக்குத்தான் நேத்து அப்படியெல்லாம் என்னை ஆட்டிப் படைச்சியா? முன்னாலேயே இதை முடிவு செஞ்சிட்டுத்தான் எங்கிட்டே நீ கழுத்தை நீட்டினியா?' பாலன் தனக்குள் கேள்விகளை எழுப்பிக்கொண்டான்.

கண்ணம்மாவின் ஆசைகளுக்கும் பொறுப்புணர்ச்சிக்கும் நடைபெற்ற போராட்டம் இப்போதுதான் அவனுடைய நெஞ்சுக்குள் மின் வெட்டியது. கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்ற ஆசையில் அவ்வளவு தீவிரமாக இருந்தவள், அதற்காகப் பாலனுடைய வேலை பறிபோவதற்குச் சிறிதும் இசையவில்லை. தனக்காகப் பாலன் அவனுடைய குடும்பத்தையும் வேலையையும் விட்டுவிட்டு வெளியேறுவதைப் பிடிவாதமாக மறுத்தாள். 'இந்தக் காலத்துப் பெண்களில் இப்படியும் ஒருத்தி இருக்க முடியுமா? எப்படியும் தான் மட்டும் வாழ்ந்தால் போதும் என்று நினைக்கிற உலகத்தில், அடுத்தவர் வாழ்வுக்காகத் தன்னையே அழித்துக்கொள்ளும் குணம் இவளுக்கு இந்த வயதில் எங்கிருந்து வந்தது?'

நேற்றுப் பேசிய அதே பேச்சைக் கண்ணம்மா மீண்டும் வாய் திறந்து பேசுவதுபோல் பால

னுக்கு ஒரு பிரமை ஏற்பட்டது. ''நீங்க பொழைக்கிற பொழப்பிலே நான் மண்ணைப் போடறதுக்காக உங்களைக் கல்யாணம் செய் துக்கணுமாக்கும்! உங்க குடும்பத்திலேருந்து உங்களை நான் தனியாகப் பிரிக்க மாட்டேன். உங்க அண்ணன் முருகன்தான் குடும்பத்தை அடியோட மறந்திட்டாரூ, எனக்காக நீங்களும் வேலையை விட்டு வந்திட வேண் டாம். அந்தப் பாவத்தை நான் செய்ய மாட்டேன்.''

பாவம் செய்து மகிழ்ச்சியோடு வாழ்வதை விடப்புண்ணியவதியாகச் சாவது மேல் என்று துணிந்துவிட்டாள் போலும்! அவனையும் மீறி அவன் விழிகளில் நீர் பொங்கி வழிந்தது. கண்ணம்மாவுக்கு அப்படி ஒன்றும் வயது அதிகமாகவில்லை; படிப்பும் அந்தத் தோட்டத் தின் தமிழ்ப் பள்ளிக்கூடப் படிப்புத்தான்; விவரமறியாச் சிறுமி என்று பாலனால் மதிக்கப் பட்ட பெண் அவள். அந்தச் சின்னஞ்சிறு பெண்ணின் மனத்துக்குள்ளே இவ்வளவு பெரிய பெரிய எண்ணங்களா? இவை எங்கி ருந்து வந்தன? எப்படி வந்தன? படித்துப் பட்டம் பெற்ற அறிவாளியான முருகன் பேசிய பேச்சுக்களுடன் கண்ணம்மாவின் பேச்சையும் செயலையும் அப்போது பாலனால் ஒப்பிட்டுப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

தமிழ் நாட்டில் பிறந்து வளராத பெண் இவள்; அந்த நாட்டின் ஆணிவேர் அறுபட்டு, கடல் கடந்த நாட்டில் பிறந்து வளர்ந்துங்கூடப் புது வேர் படராத ஒரு நிலையற்ற வாழ்வின் சொந்தக்காரி. என்றாலும் வாழையடி வாழை யாக வந்த அந்த மண்ணின் ரத்தத்துக்கே உரிய தனித்தன்மையா இது? இடத்தாலும் காலத்தாலும் சோதனைகளாலும் ஏன், காலனா லும்கூட, கரைக்க முடியாத தியாக உணர்வு என்பது இதுதானா?

பாலனைப் பொறுத்தவரையில் அந்த வேளையிலேயே அவன் இதய பீடத்தில் அவள் ஒரு தெய்வத் திருமகளாக ஏறி அமர்ந்து கொண்டுவிட்டாள். பாலனுக்கு அப்போது வெறும் உயிரற்ற ஓர் உடலின் அருகே உட்கார்ந்திருப்பதாகத் தோன்றவில்லை. தோட்டப்புறக் கோயில்களில் குடிகொண் டுள்ள மாரியம்மனின் அம்சம் அவள்; காளி தேவியின் கருணை வடிவம்; பராசக்தியின் திவலைச் சுடர்.

அவள்மீது விழுந்து கதற வேண்டுமென்று தோன்றிய வேகத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு அவள் காலடிக்கு வந்தான் பாலன். கண்ணம்மாவின் பாதங்கள் இரண்டையும் பற்றிக்கொண்டு சில விநாடிகள் கண்மூடி யிருந்தான். பிறகு அவளைக் கையெடுத்துக் கும்பிட்டுவிட்டு, அங்கிருந்து மௌனமாகக் கீழே இறங்கி வந்தான். முதல் நாள் இதே வேளையில் ஆசாபாசங்களில் உழன்று அவ னுக்கு மனைவியாக இருந்தவள், இன்று அவ்வள வையும் உதறிவிட்டு, அவனால் எட்டிப் பிடிக்க முடியாத தொலைவுக்கு எங்கோ சிறகடித்துப் பறந்துவிட்டாள்; ஆசைத் தளைகளை அறுத்துக் கொண்டு போய்விட்டாள்.

வீட்டின் கீழ்ப்பகுதிக்கு அந்தத் தோட்டத் துக் கிராணி வந்திருப்பது தெரிந்தது. கண்ணம் மாவின் தகப்பன் பழனியிடம், ''எல்லாத்தை யும் சட்டுப்புட்டுன்னு முடிச்சிடு; காய்ச்சலாக் கடந்து உயிர் போயிருச்சுன்னு சொல்லு; வெளியிலே ஒண்ணும் விசயம் தெரிய வேண் டாம். தெரிஞ்சா உனக்கும் தொல்லை; எங்க ளுக்கும் தொல்லை'' என்றான் கிராணி.

இதற்குள் பாலனின் பெற்றோரும் அங்கே வந்து சேர்ந்தார்கள். கண்ணம்மாவின் கடைசிப் பயணத்துக்கான காரியங்கள் ஒரு புறம் மளமளவென்று நடைபெற்றுக்கொண் டிருந்தன. கணேசனும் அவனுடைய நண்பர் களும் முன்னால் நின்று அந்த வேலைகளைக் கவனித்தார்கள்.

நடுப்பகல் வேளைக்கு அவளைப் பச்சை மூங்கில்களில் கிடத்தித் தூக்கிக்கொண்டு சென்றார்கள். பத்துப் பதினைந்து பேர் புடை சூழப் பயணம் புறப்பட்டாள் கண்ணம்மா. அந்தத் தோட்டத்திலே தனக்குத் திருமண ஊர்வலம் நடக்க வேண்டுமென்று ஆசைப் பட்டவள் அவள். நடக்கப்போகிறது என்று கனவு கண்டவள் அவள். அந்த ஆசைகள் அப்படியே நிறைவேறாவிட்டாலும்கூட, அவள் பாலன் கட்டிவிட்ட தாலியும் கழுத்துமாகத் தான் சென்றுகொண்டிருந்தாள். பூவும் பொட்டும் மஞ்சளும் குங்குமமும் குலையாமல் தான் ஊர்வலம் போய்க்கொண்டிருந்தாள். அவளுடைய கணவன் பாலனே அவளுக்காக நெருப்புச் சட்டியைச் சுமந்துகொண்டு முன்னால் நடந்தான்.

நேரம் சென்றது.

எல்லாக் காரியங்களும் ஒரு வழியாக முடிந்துவிட்டன. நோட்டீஸ் கொடுத்து அந்த மண்ணிலிருந்து அவளைத் துரத்த முயன்றவர் களின் தந்திரம் கண்ணம்மாவிடம் பலிக்க வில்லை; அவள் பிடி சாம்பராகி அந்த மண் ணோடு மண்ணாய் இரண்டறக் கலந்துவிட்டாள். அவளுக்கு முன்னே எத்தனை எத்தனையோ தோட்டத் தொழிலாளர்கள் அங்கே சாம்ப ராகி அந்த மண்ணுக்குச் சொந்தம் கொண் டாடியிருக்கிறார்கள் அல்லவா? அவர்கள் கூட்டத்தில் கண்ணம்மாவும் ஒன்றிக் கலந்து பூமி புத்திரியாகிவிட்டாள்.

இரண்டு நாட்களுக்கு ஏதுமே ஓடவில்லை பாலனுக்கு. பிரமை பிடித்தவனைப்போல் நடந்துகொண்டான். நேரத்தில் பெரும்பகுதி யைத் தன் மாமன் பழனியின் வீட்டிலும் கணேசன் வீட்டிலுமே கழித்தான். கண்ணம் மாவின் பிரிவைவிடப் பயங்கரமான பிரச்னை யொன்று பழனியின் குடும்பத்தை மட்டுமா நெருங்கிக்கொண் டிருந்தது? கணேசனின் குடும்பத்தையும் அவனைப் போன்ற நூற்றுக் கணக்கானவர் குடும்பங்களையும் அது அலைக் கழித்துக்கொண் டிருந்தது.

தோட்டத்தைவிட்டு வெளியேற வேண்டிய நாளைப் பலர் அங்கே தூக்குமேடைக்குச் செல்லும் கைதிகளைப் போல் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

எப்படியோ தமிழ் நாட்டுக்குப் போய்ச் சேர்ந்து, விதிவிட்ட வழியிலே காலந்தள்ள நினைத்தவர்கள் சிலர்; எதையுமே திட்ட மிடாமல் தெருவுக்குப் போய் மரத்தடிகளில் குடியிருக்க நினைத்தவர்கள் சிலர்; தொலை தூரக் காடுகளில் புதிதாக உருவாகிக்கொண் டிருந்த குடியிருப்புக்களில் தங்களுக்கு வீடும் நிலமும் கிடைக்குமா என்று தேடி அலைந்த வர்கள் சிலர்; ஸாபா மாநிலத்தின் புதிய ரப் பர்க் காடுகளுக்குப் போனால் அங்கே தங்களுக்கு

வேலை கிடைக்கும் என்று நம்பியவர்கள் சிலர். இவ்வாறாகப் பலர் அங்கே பல்வேறு திசைகளிலும் மனத்தைத் திரியவிட்டு அலைக்கழிந்து கொண்டிருந்தார்கள்.

பொழுது விடிந்து பொழுது போகுமட்டும், அதற்குப் பிறகு இரவு முழுவதும், அங்கிருந்த பெரும்பாலானவர்களை ஒருவகை நம்பிக்கை வறட்சி பிடித்து ஆட்டிக்கொண்டிருந்தது. பாதுகாப்பற்ற தன்மை பயமுறுத்திக்கொண்டிருந்தது. அந்தத் தோட்டத்தில் வாழ்ந்த மூன்றில் ஒரு பங்குத் தொழிலாளர்களைத் தவிர, மற்றவர்கள் வெளியேற்றப்படுவது உறுதி என்று சொல்லி விட்டார்கள்.

பழனியின் குடும்பத்துக்கு ஸாபா மாநிலத்துக்குப் போவதைத் தவிர, வேறு வழியிருப்பதாகத் தெரியவில்லை. பழனி, அவன் மனைவி தங்கம், மகள் காமாட்சி, மற்றும் இரு சிறு பையன்கள் ஆகிய ஐவரும் புறப்படுவதற்கு ஏற்பாடு செய்துகொண்டிருந்தார்கள்.

பாலனும் கணேசனும் ஒரு நாள் மாலை மேட்டருவிக் கரையில் உட்கார்ந்து இந்தப் பிரச்னையைப் பற்றிக் கவலையோடு பேசிக்கொண்டிருந்தார்கள். கணேசன் பல நாட்களாக இதைப் பற்றி நினைத்துக் குழப்பிக்கொண்டிருந்தான்.

''ஆமா, உனக்கும் நோட்டீஸ் குடுத்தாச்சே? நீ என்ன செய்யப்போறே?'' என்று கணேசனைக் கேட்டான் பாலன்.

''என்னோட சொந்தப் பிரச்னை ஒண்ணும் பெரிய பிரச்னையில்லே; நானும் என்னோட அம்மாவுந்தான் இருக்கோம். எப்படியாவது என் கையாலே உழைச்சு எங்கம்மாவுக்குச் சோறு போட்டுடுவேன். ஆனால் நான் நினைக்கிற பிரச்னை இதைவிடப் பெரிய பிரச்னை.''

''பெரிய பிரச்னையா?''

''நடந்ததையெல்லாம் பார்த்த பிறகு, நான் என்னோட வயிற்றைக் கழுவறதுக்கும் எங்கம்மாவுக்குச் சோறு போடறதுக்குந்தான் வாழணுமான்னு தோணுது. இந்த உடம்பையும் உசிரையும் வச்சுக்கிட்டுத் தோட்டத் தொழிலாளிகளுக்கு ஏதாச்சும் செய்ய முடியாதான்னு யோசிக்கிறேன். பத்துப் பதினைஞ்சு நாளா எனக்கு இதே யோசனைதான்.''

கணேசன் இப்படிப் பேசியபோது அவன் விழிகளில் தென்பட்ட ஒளிக்கீற்றைப் பாலன் கவனிக்கத் தவறவில்லை. மற்றவர்களுக்காக வாழ நினைக்கும் நினைப்புக்கே ஓர் அபூர்வமான காந்த சக்தி இருக்கத்தான் செய்கிறது. கணேசனின் இந்தப் பேச்சால் கவரப்பட்டு, ஆர்வத்தோடு அவன் அருகில் நெருங்கி உட்கார்ந்தான் பாலன். தொடர்ந்து பேசினான் கணேசன்.

''எனக்குப் படிப்புப் பத்தாது; வயசும் அப்படி ஒண்ணும் ஆயிடலே. ஆனாலும் எனக்கு என்னமோ இந்தத் தோட்டத்து வாழ்க்கை இயற்கையான வாழ்க்கையா, நியாயமா மனுசன் வாழவேண்டிய வாழ்க்கையாத் தோணலே. எவனோ எப்பவோ நம்மவங்களைக் கொண்டாந்து ஒரு கூண்டிலே அடைச்சுப் போட்டது போல இங்கே போட்டிருக்கான். இப்ப என்னடான்னா வேறொருத்தன் வந்து அந்தக் கூண்டு வாழ்க்கைகூட நமக்குச் சதமில்லேங்கறான்.''

''நீ படிக்காததுனாலே ஒண்ணும் நஷ்டம் இல்லே'' என்றான் பாலன்; ''படிச்சவங்க சில பேரு இதிலேருந்து தப்பிச்சிக்கப் பார்க்கிறாங்களே தவிர, அடுத்தவங்களைப் பத்திக் கவலைப்படறதில்லே.''

''சிரம்பானிலே நான் இருந்துக்கிட்டுச் சின்னதா ஒரு தொழிலோ வியாபாரமோ செய்யப் போறேன். அந்தத் தொழிலோ வியாபாரமோ தோட்டங்களோட சம்பந்தமுள்ளதா இருக்கணும். என் சாப்பாட்டுக்கு உழைச்ச நேரம் போக, நம்மைப் போலப் பத்துப் பேரோட சேர்ந்து ஏதாவது செய்ய நினைக்கிறேன். நீதான் எனக்கு இதிலே வழி காட்டணும். நீ தான் எனக்கு இதிலே வாத்தியார். நீ என்னைவிடப் படிச்சவன்; விசயம் தெரிஞ்சவன்.''

பாலனுக்கு மெய்சிலிர்த்தது. தன்மீது கணேசனுக்கு இவ்வளவு நம்பிக்கையா?

''என்னாலே என்ன செய்ய முடியும் கணேசா?'' என்று கேட்ட பாலன், ''தோட்டத் தொழிலாளர்களோட சங்கமும் ஒரு பக்கம் அதனாலே முடிஞ்சதைச் செய்துக்கிட்டு வருது; அரசியல் ரீதியாகவும் மறுபக்கம் தலைவர்கள் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வர்ராங்க; இவ்வளவையும் மீறிக் காரியங்கள் நடக்கிறப்ப நாம என்ன செய்ய முடியும்?'' என்று கேட்டான்.

''மத்தவங்க செய்யறதைச் செய்யட்டும். அது பத்தாது. ஆனால் நான் இப்போ உங்கிட்டக் கேட்கவேண்டிய கேள்வி முக்கியமான கேள்வி. சுமார் அஞ்சு லட்சம் பேரோட எதிர்காலத்தைப் பற்றிய கேள்வி.''

''என்ன அது?'' என்றான் பாலன்.

''ரப்பர்த் தோட்டத்தை விடச் செம்பனைத் தோட்டம் போட்றதாலே ரொம்ப லாபம் இருக்குதாம். அதுக்கு இவ்வளவு பேர் தொழிலாளர்களும் தேவையில்லையாம். அதனாலே இப்போ ரப்பர்த் தோட்டத்திலேயே செம்பனையையும் போட்டுக்கிட்டு வர்ராங்க. ஆட்களுக்கு வேலைப்பஞ்சம் தலைகாட்டுது. திடீர்னு ரப்பருக்கே தேவையில்லேங்கிற நிலை வருதுன்னு வச்சுக்க. அப்ப இத்தனை பேரும் என்ன செய்வாங்க?''

''அந்த நிலை இப்போதைக்கு வராதுன்னு நினைக்கிறேன்.''

''இப்போதைக்கு வரலேன்னுக்கூட, ரப்பர் மரம் வெட்றதைத் தவிர, வேறே எந்த வேலையுமே செய்யத் தெரியாத ஒரு கூட்டம் இருக்கலாமாங்கறதுதான் என் கேள்வி. வேறே எந்த வேலையும்மே பழகாமல், வேறே எந்த வேலைக்குமே லாயக்கில்லாமல் இருக்கிறதுனாலேதானே இன்னம் நாலு நாளைக்குப் பிறகு நாத்துக் கணக்கான குடும்பம் அவதிப்படப் போகுது? காலப் போக்கைத் தெரிஞ்சுக்கிட்டு அதுக்குத் தகுந்தாப்பிலே நாம்ப இங்கே வாழ வேண்டாமா?''

பிரச்னையின் ஆணி வேரையே தொட்டு விட்டான் கணேசன். மிகவும் ஆழமான கேள்விதான் அவன் கேட்ட கேள்வி. மேலெழுந்தவாரியாகப் பலர் ஏதேதோ செய்து கொண்டிருந்தார்களே தவிர, வாழ்க்கைப் போராட்டத்தை வெற்றியுடன் நடத்துவதற்கான அடிப்படை வழி இன்னும் தோட்டங்களில் வாழ்ந்த பலருக்கு அடைக்கப்பட்டே கிடந்தது.

உடனடியாகப் பாலன் பதில் ஏதும் சொல்லவில்லை. நினைத்துப் பார்த்தான். 'ஆமா, கணேசன் சொல்றதும் உண்மை தானே? பரம்பரை பரம்பரையா ஒரே தொழிலை மட்டும் செய்யத் தெரிஞ்ச மனித யந்திரமாத்தானே வெள்ளைக்காரன் எங்களை இங்கே தோட்டத்துக்குள்ளே அடைச்சு வச்சிருக்கான்? வெளி உலகத்தைப் பார்த்து நாலு பேரைப் போலே முன்னுக்கு வந்திடக்கூடாதுன்னுதானே தனியா எங்களை ஒதுக்கி வச்சிட்டான்? மலாய் மக்களோடே, சீனமக்களோடே பழகறதுக்கும் அவங்க மொழியைத் தெரிஞ்சுக்கறதுக்குங்கூடப் பலருக்கு இங்கே வழியில்லையே! பள்ளிக்கூடங்கறது ஏதோ பேருக்கு இருக்கே தவிர, மேல் படிப்புப் படிச்சு முன்னுக்கு வர்ரதுக்கு இதிலே வாய்ப்பே கிடையாதே! திடீர்னு ரப்பர்த் தொழிலிலே நஷ்டம் வந்திட்டா அவன் பாட்டுக்குக் கப்பலேறிப் போயிடுவான். லட்சக் கணக்கானவங்களுக்குப் பிழைக்க வழி? வாழ வழி?'

''உண்மைதான் கணேசா'' என்றான் பாலன்; ''வரப்போற தலைமுறைக்காவது நாம் வழிகாட்டத்தான் வேணும்'' என்றான்.

''நீ படிச்சவன்; நீ முதல்லே எனக்கு இதிலே வழிகாட்டு. நாம் ரெண்டு பேரும் நம்மாலே முடிஞ்சதைச் செய்வோம்'' என்றான் கணேசன்.

## 12 பாலனின் கண்ணீர்

கண்ணம்மாவுக்கான காரியங்கள் முடிந்த பிறகு பழனியின் குடும்பத்தாருக்கு ஆறுதல் அளிப்பதற்காகப் பாலன் அவர்களைத் தன் வீட்டுக்கு அழைத்திருந்தான். கண்ணம்மாவைப் பறி கொடுத்த துயரத்திலிருந்து மீளாத நிலையில் அந்தக் குடும்பத்துக்கு எஸ்டேட்டை விட்டு வெளியேற வேண்டிய நெருக்கடியும் வந்து விட்டது. எல்லாருமாக ஒருவேளை சேர்ந்து சாப்பிடுவதற்கும் மனம் விட்டுப் பேசுவதற்குமாக அவர்களைப் பாலன் கூப்பிட்டிருந்தான்.

மத்தியான்னச் சாப்பாடு முடிந்தவுடன் லயத்து வீட்டின் கீழ்ப் பகுதியில் அவர்கள் கூடினார்கள். பெஞ்சுகளின் மேல் ஆண்கள்; தரையில் பெண்கள்.

ஒன்றி வாழ்ந்த குடும்பங்கள் பிரியும் காலம் நெருங்கிவிட்டது; இடையில் இன்னும் இரண்டு நாட்கள்கூட இல்லை. ஸாபாவுக்குப் புறப்படுவதற்கான ஏற்பாடுகளைப் பழனி செய்து முடித்திருந்தான்.

பதினேழு பதினெட்டு வயதில் அங்கு வந்து சேர்ந்த பழனிக்கு இப்போது வயது நாற்பத்தாறு. கிராப்புத் தலையில் அங்கங்கே நரை படர்ந்திருந்தது. மேலே பனியனும் இடுப்பில் நாலுமுழத் துணியுமாக எங்கோ பார்வையைச் செலுத்தியபடி இருந்தான் பழனி.

''எங்களையெல்லாம் விட்டுப் பிரிந்துபோகிற காலம் உனக்கு வந்திடுச்சு'' என்றாள் வேலம்மாள்.

தன் அக்காளின் பேச்சைக் காதில் போட்டுக் கொள்ளாதவன்போல், ''பழைய கதையே திரும்பவும் நடக்கும்போலே தெரியுது; முப்பது வருசத்துக்கு முன்னுலே எப்படி இந்தக் காட்டுக்குள்ளே நுழைஞ்சேனே, அப்படியே இனிமேல் ஸாபாக்



காட்டுக்குள்ளேயும் நுழையப்போறேன்'' என்றான்.

இதைக் கேட்டவுடன் வீரப்பனின் கண்கள் கலக்கமுற்றன. பழனியை வற்புறுத்தி அங்கே அழைத்து வந்தவன் அவன். மைத்துனன் தன்னோடு வந்தால் தனக்கும் மனைவிக்கும் துணையாக இருப்பான் என்று அழைத்து வந்தான். அந்த நம்பிக்கை இன்றுவரை வீண் போகவில்லை. ஆனால் இப்போது பழனிக்கு யார் துணை போவது?

''இந்தக் குடும்பத்துக்காக நீ எவ்வளவோ பாடுபட்டிருக்கே. இப்ப உனக்குக் கஷ்டம் வந்த காலத்திலே எங்களாலே உதவ முடியலே. உதவி செய்யக் கடமைப்பட்ட முருகனே நம்மோட நம்பிக்கையிலே மண்ணைப் போட்டுட்டான்'' என்றான் வீரப்பன்.

''அதுக்கு நீங்க என்ன செய்ய முடியும்? நம்ம கையிலே ஒண்ணும் இல்லே..ஒண்ணுமே இல்லே....' தலையை ஆட்டினான் பழனி.

''ஸாபாவிலே நிலைமை எப்படியிருக்கோ? எப்படி நீங்க காலங்களிக்கப் போறிங்களோ? அதையெல்லாம் நினைச்சாத்தான் எனக்கு..'' தொண்டையை அடைத்துக் கொண்டது வீரப்பனுக்கு.

''இதுவரைக்கும் நீங்களும் நானும் அக்காளும் படாத கஷ்டத்தைவிடவா இனிமே நாங்க பட்டுடப் போறோம்? நாம கப்பலேறி வந்தது, கரை சேர்ந்தது, காட்டுக்குள்ளே புகுந்தது, சவுக்கடி பட்டது, கட்டிக்கத் துணியில்லாமல் சாக்கைக் கட்டிக்கிட்டு அக்கா அவதிப்பட்டது, ஜப்பான்காரன் காலத்திலே நாம பயத்துலேயும் பட்டினியிலேயும் பட்ட அவஸ்தை....இதையெல்லாம் நினைச்சுப் பாருங்க'' என்றான் பழனி.

சற்று நேரம் அங்கே மௌனம் குடிகொண்டது. வீரப்பன், வேலம்மாள், பழனி மூவருமே சுமார் முப்பதாண்டுகளுக்கு முன்னே தொடங்கி, தங்கள் வாழ்வில் நடந்த நிகழ்ச்சிகளை அவரவர் மனப்போக்குப்படி எண்ணிப் பார்க்கலானார்கள். சுப்பன் கங்காணி என்று ஒருவன் அவர்கள் கிராமத்துக்கு வந்து அவர்களை வலை வீசிப் பிடிக்காமல் இருந்திருந்தால், அவர்கள் நிலை இன்று எப்படி இருந்திருக்குமோ தெரியாது.

தோட்டங்களில் அப்போது கங்காணிகளின் ஆட்சி நடந்துகொண்டிருந்த காலம். இப்போது நிலைமை அடியோடு மாறி, கங்காணிகளின் செல்வாக்குக் கரைந்து, கிராணிகளின் செல்வாக்கு உயர்ந்துவிட்டது. அந்தக் காலத்திலோ கங்காணிகள் தாம் வெள்ளைக்காரர்களின் செல்லப் பிள்ளைகள்; அவர்கள் வைத்ததுதான் சட்டம். படிப்பும் பண்பாடுமில்லாத கங்காணிகளின் கையில் அதிகாரமாகிய சவுக்கைக் கொடுத்துக் கூலியாட்களை நொறுக்கச் சொல்லிவிட்டு, தாங்கள் மிகவும் நல்லவர்கள் போலவும் கருணை காட்டுகிறவர் போலவும் நடந்துகொண்டார்கள், வெள்ளைத் துரைமார்கள். அடிப்பதற்குக் கங்காணிகள்; அரவணைப்பு நாடகம் நடத்துவதற்குத் துரைமார்கள்.



சுப்பன் கங்காணி இவர்களைப் போலவே இன்னும் இருபது ஆட்களை நாகப்பட்டினத்துக்கு வளைத்துக் கொண்டு வந்திருந்தான். அவனைப் போல வேறு சில கங்காணிகளும் தங்கள் தங்கள் ஆட்களை அங்கே கொண்டு வந்திருந்தார்கள். வந்தவர்

களில் ஆண்களே அதிகம்; பெண்கள் கால் வாசிப் பேர்கள்கூட இல்லை. வீரம்மாளுக்கு அப்போதே நெஞ்சில் பயம் குடிகொண்டுவிட்டது. ஆனாலும துணைக்கு ஒரு பக்கம் கணவனும் மறுபக்கம் தம்பியும் இருந்ததால் அவள் கப்பலில் புறப்படுவதற்கு ஒப்புக்கொண்டாள்.

கப்பலில் ஐந்தாறு நாள் அவர்கள் பட்ட தொல்லை கடவுளுக்குத்தான் வெளிச்சம். எவ்வளவு பேர்களை ஏற்றிக்கொள்ளலாம் என்று சட்டம் இருந்ததோ அதைவிட இரண்டு மடங்குக் கூட்டம் அதில் திணிக்கப் பட்டது. கப்பல் கரையை விட்டுப் புறப்பட்ட முதல் நாளே பலருக்குத் தலைசுற்றி வாந்தி எடுக்கத் தொடங்கியது. கப்பலின் அடித்தளத்தில் அடைத்திருந்த அவர்களால் அங்குமிங்கும் நகரக்கூட முடியவில்லை. சாப்பாடு என்ற பெயரில் எதையோ பொங்கிப் போட்டார்கள். அதைக்கூடப் பலரால் தொடவும் முடியவில்லை. அங்கேயே சாப்பாடு; அங்கேயே வாந்தி; அங்கேயே படுக்கை; அங்கேயே எல்லாம்! மயங்கிய நிலையில் கிறங்கிக் கிடந்தார்கள் பலர். புறப்பட்ட மூன்றே நாட்களில் கப்பலின் கீழ்த்தளம் பெரியதோர் சாக்கடைக் குழியாக மாற்றப் பட்டு விட்டது. அதில் புழுக்களாக நெளிந்து வந்தது ஒப்பந்தக் கூலிகளின் கூட்டம். கப்பலில் அப்போது வீசிய நாற்றத்தை இப்போது நினைத்தால்கூட வேலம்மாளுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது.

பினுங்குக்கு ஒரு வழியாய் வந்து சேர்ந்தது கப்பல். அங்கே தொற்று நோய்த் தடுப்புக் கூடாரங்களில் அவர்களை ஒரு வாரம் அடைத்துப் போட்டார்கள். அப்போது ஏதேதோ அச்சிட்ட தாள்களை எடுத்துக்கொண்டு வந்து, கையெழுத்துப் போடத் தெரிந்தவர்களிடம் கையெழுத்துக்களையும், போடத் தெரியாதவர்களிடம் பெருவிரல் கைரேகைகளையும் வாங்கிக் கொண்டான் சுப்பன் கங்காணி.

''எதுக்கு இதை வாங்குறீங்க?'' என்று கேட்டான் வீரப்பன்.

''உங்களுக்கெல்லாம் நான் செலவு பண்ணி ருக்கேனுல்ல? உங்களுக்குச் சாப்பாடு போட்டது, ரெயில் செலவு, கப்பல் செலவு பண்ணினது, உங்களைக் கூட்டிக்கிட்டு வர்ரதுக்காக உங்க ஊர்க் கணக்கப்பிள்ளை, மணியம் முதல் கொண்டு பல பேருக்கு அங்கங்கே வாய்க்கரிசி போட்டது, இதுக்கெல்லாம் நான் துரைமார்களோட பணத்தைக் குடுத்திருக்கேனுல்ல? இதையெல்லாம் நீங்க தோட்டக் காரத் துரைமாருங்களுக்குத் திருப்பித் தர வேண்டாமா?''

''நாங்க திருப்பித் தரணுமா?'' என்று கலவரத்தோடு கேட்டான் பழனி.

''பணமாத் திருப்பித் தர்ரதுக்கு நீங்க எங்கே போவிங்க?'' என்றான். ஒவ்வொருவருக்கும் தலைக்கு ஐம்பது ரூபாய் செலவு செய்துவிட்டு, இருநூறு ரூபாய்க்குப் 'பிராமிசரி' நோட்டு எழுதி வாங்கினான் கங்காணி.

''வேறே நாங்க என்ன செய்யணும்?''

''ஒரு வருசத்துக்கு நம்ப தோட்டத்திலே வேலை செய்யறதா ஒப்பந்தம் செஞ்சுக் கணும். உங்க கூலியிலே ஒரு பங்கைக் [illegible] கிட்டு, வயித்தைக் கட்டி வாயைக் கட்டிப் பொழைப்பு நடத்தணும். கடன் தீர்ந்திட்டாப் பிறகு முழுச் சம்பளமும் வாங்கிக்கலாம். முன்னாலே எல்லாம் மூணு வருசத்துக்கு ஒப்பந்தம் செய்துக்குவோம். இப்போ ஒரு வருசம் போதும்னு சட்டம் வந்திருக்காம்.''

சுப்பன் கங்காணி அங்கிருந்து போனபிறகு, அந்தக் கூட்டத்திலிருந்த ஒரு பழைய தொழிலாளி வருத்தத்தோடு சிரித்துக் கொண்டே கூறினான்: ''ஒரு வருசத்திலே உங்க கடன் தீரப்போகிறதுமில்லே; நீங்க இதிலேயிருந்து இந்தச் சன்மத்திலே மீளப் போறதுமில்லே. ஆயுசுக்காலம் வரைக்கும், அதுக்கப்பறம் உங்க பரம்பரை பரம்பரைக்கும் இந்தக் கடன் தீராதபடி பார்த்துக்கு வாங்க, கங்காணிங்களும் அவுங்க துரை மாருங்களும்'' என்றான்.

பிறகு தோட்டம் என்று சொல்லப்படுகிற ஒரு காட்டுக்கு அவர்களை மோட்டாரிலும் மாட்டுவண்டியிலுமாக அழைத்துச்சென்றனர். குடியிருப்பதற்காக அவர்களுக்கு அப்போது ஒதுக்கியிருந்த லயன் வீடுகளில் இப்போதுள்ள வசதியில் கால்வாசிகூட இல்லை. செம்பனைக் கீற்று வேய்ந்த மாட்டுத் தொழுவங்களே வீடுகள் என்று சொல்லப்பட்டன. பெரிய பள்ளங்கள் வெட்டி அவற்றில் மழை நீரைத் தேக்கி வைத்திருந்தார்கள். குடிப்பதற்கு, குளிப்பதற்கு, துவைப்பதற்கு எல்லாமே அந்தத் தண்ணீர்தான்.

ஒரு நாளைக்குக் குறைந்தபட்சம் பத்து மணி நேரம் வேலை செய்ய வேண்டும். வாரத்துக்கு ஆறு நாட்கள் வேலை செய்யவேண்டும். வெளிக்காட்டு வேலைகளையும் பார்த்துக்கொண்டு மரம் வெட்டவும் அவர்கள் பழகிக் கொள்ள வேண்டும். நோய் நொடிகளைத் தீர்க்க ஒரே ஒரு வைத்தியன்தான் அங்கே அப்போது இருந்தான். கண்ணம்மாவுக்கு விடுதலை அளித்த அந்த ஒரு வைத்தியனையே பலரும் அங்கே நம்பிக்கொண்டிருந்தார்கள்.

சுப்பன் கங்காணியின் சுயரூபம் தோட்டத்துக்குள் அவர்கள் நுழைந்த பிறகேதான் வெளிப்பட்டது. ''கழுதைங்களா!'' என்று அவன் அடிக்கடி பயன்படுத்திய சொல், வெறும் வாய்ச்சொல்மட்டும் அல்ல. அவற்றின் கூட்டத்தை விரட்டுவதைப் போலவே அவன் அங்கே தன்னிடம் வேலைபார்த்து வந்த மனிதர்களையும் விரட்டி வந்தான். அவனிடம் மறுத்துப் பேச முடியாது; எதிர்த்து வாதாட முடியாது. அவன்தான் அந்தத் தனிக் காட்டின் ராஜா.

காலம் மாறியது; கங்காணியின் கொட்டம் அடங்கியது. ஆனால் ஆள் மாற்றந்தான் ஏற்பட்டதே தவிர, அதிகாரப் போக்கில் அதிகமான மாறுதல் ஏற்படவில்லை. கங்காணிகளின் அதிகாரங்களைக் கிராணிகளுக்கு மாற்றினார்கள்.

இடையில் இரண்டாவது உலகப் போர் தொடங்கியது. அதை அடுத்து ஜப்பானிய விமானங்கள் மேலே பறந்து குண்டுகள் வீசின. தொடர்ந்தாற்போல் தோளில் துப்பாக்கி மாட்டிய ஜப்பானிய ராணுவத்தார் நாலு பக்கங்களிலிருந்தும் தோட்டக் காடுகளுக்குள் புகுந்தார்கள். செய்தியைக் கேட்டவுடனேயே பல துரைமார்கள் தப்பி ஓடிவிட்டார்கள். அகப்பட்டவர்களின் பாடு [illegible]

ஜப்பானியர் ஆட்சிக் காலத்து நினைவு வந்தவுடனேயே, "ஜப்பான்காரன் காலத்திலேகூட எப்படியோ நாம உசிர் தப்பிச்சுப் பொழைச்சிட்டோம்" என்றான் பழனி. "மனசிலுலே எவ்வளவு கஷ்டத்தைத் தாங்க முடியுங்கறதைச் சோதனை செய்து பார்த்திட்டான் அவன். கண்டவங்களோட கழுத்தையெல்லாம் வெட்டி மரக் கம்பத்திலே நட்டு வச்சான். ஒரு நாளைக்குக்கூடக் கட்டிவராத அரிசியை ஒரு வாரத்து 'ரேசனு'க் குடுத்து நம்மைப் பட்டினி போட்டான். கட்டிக்கத் துணி இல்லாமல் நம்ம பொம்பளைங்க சாக்குத் துணியாலே மானத்தை மறைச்சுக்க வேண்டிய நிலை வந்திடுச்சு. தமிழ்நாட்டிலேருந்து வந்த தோட்டத் தொழிலாளிங்க லட்சம் பேருக்கு மேலே அவன் போட்ட 'சயாம் மரண ரெயில்வே'யிலே செத்துப் போயிருக்காங்க. நாமமட்டும் எப்படி இன்னம் உசிரோட இருக்கோம்? இது அதிசயந்தான். நம்ம கையிலே ஒண்ணுமே இல்லே."

ஜப்பான்காரர்களுக்கு எதிரான கொரில்லாப் படையில் சேர்ந்து சிறிது காலம் காட்டுக்குள் மறைந்திருந்தான் பழனி. இருந்துங்கூட அடிக்கடி இரகசியமாக வந்து தன் அக்காள் குடும்பத்தை அவன் பார்க்கத் தவறவில்லை. வீரப்பனோ நேதாஜியின் இந்தியத் தேசிய ராணுவத்தில் சேர்ந்து பர்மாவுக்குப் போய் வந்தான். இந்த இடைக் காலத்தில் குழந்தைகளை வைத்துக்கொண்டு வேலம்மாள் பட்ட துன்பங்கள்!

"எப்படியோ காலம் மாறிடுச்சு. நாட்டுக்குச் சுதந்தரமும் வந்தாச்சு. தொழில் சங்கமும் நமக்கு இப்போ இருக்கு" என்றான் பழனி.

"இருந்துங்கூட இப்படி வந்திடுச்சே மாமா?" என்றான் பாலன்.

"நடந்ததைப் பத்திக் கவலைப்படாதே, பாலா!" என்ற பழனி, "நான் உன்கிட்டே தான் சில சங்கதி பேசணும்னு நினைக்கிறேன்?" என்று சொல்லிப் பாலனின் முகத்தைப் பரிவோடு உற்றுப் பார்த்தான்.

"சொல்லுங்க, மாமா."

"நான் படிக்காதவன்; நீ படிச்ச புள்ளை. நான் சொல்லி உனக்கு ஒண்ணும் தெரியப் போறதில்லே. இருந்தாலும் என் மனசுலே கிடந்து அடிச்சுக்கறதை உங்கிட்டே சொல்லிடறேன்."

"படிப்பு என்ன மாமா, படிப்பு! படிக்க வேண்டியதைப் படிக்காமல் நாங்க எதை எதையோ படிச்சுக்கிட்டிருக்கோம்."

"பாலா, என்னோட அக்கா, அத்தான், அவுங்களோட மத்தக் குழந்தைங்க எல்லாரையும் நான் உன் கையிலேதான் விட்டுட்டுப் போறேன். நீயும் முருகனைப் போலே பெத்த தாய் தகப்பனை மறந்திட்டுப் பெரிய மனுசனாயிடாதே. நீ நல்லாப் படிச்சு முன்னுக்கு வா. கைநிறையச் சம்பாரிச்சுச் சந்தோசமா இரு. ஆனாலும் தோட்டக் காட்டிலே பாடுபடறவங்களுக்கு உன்னாலே எந்த வழியிலே உதவி செய்ய முடியுமோ அந்த வழியிலே உதவி

## ஓவியச் சிறப்பு

'... அரியாசனத்தில் அமர்ந்திருக்கிறான் முகலாய மன்னன் ஜஹாங்கீர். அதிகாரிகளும் பிரபுக்களும் ஒரு பக்கம் நிற்கிறார்கள். சுவையான பலகாரங்களும் வாதுமையும் மற்றொரு பக்கம் குவிந்திருக்கின்றன. ரோஜா அத்தர் தெளிக்கிறார்கள் இன்னொரு புறத்தில்; இன்னிசை மற்றொருபுறம்; குறிப்பு எடுக்கும் அதிகாரி ஒரு மூலையில்..' ஜஹாங்கீர் தர்பார் நடத்தும் தோரணை இது.

சரித்திரக் கதையின் தொடக்கம் அல்ல இது. கோவர்த்தன் என்ற ஓவியன் அந்தக் காட்சியை மிக அழகாகத் தத்ரூபமாகத் தீட்டியிருக்கிறான். அக்காரீசா, முகமது முராத், மன்சூர், அபுல்ஹசன் முதலிய பத்து ஓவிய மன்னர்களை ஆதரித்திருக்கிறான் ஜஹாங்கீர்.

இந்தியாவில் ஓவியக்கலை பிறந்து வளர்ந்து செழித்து வேரூன்றியிருப்பதை வரலாற்றுக் கண்ணோட்டத்துடன் திரு மே. சு. இராமசுவாமி என்பவர் எழுதியிருக்கிறார். இந்திய ஓவியக்கலையை பற்றிப் பல விவரங்களை இதிலிருந்து அறியலாம். 'இந்திய ஓவியம்' என்ற தலைப்புள்ள இந்த நூலை வாசகர் வட்டம், (14, தணிகாசலம் செட்டி சாலை, சென்னை-17) ஏழு ரூபாய் விலையில் வெளியிட்டிருக்கிறது. இராக தேவதைகளை வருணிக்கும் ராஜஸ்தானத்து இராகினி ஓவியங்களும், அஜந்தா, எல்லோரா, லேபாட்சி, காங்டா ஓவியங்களும் கண்ணைக் கவர்கின்றன.

---

செய். நீ செய்யக்கூடியவன்கிறதைத் தெரிஞ்சுதான் நான் இதைச் சொல்றேன்.''

''கட்டாயம் செய்யறேன், மாமா.''

''கண்ணம்மா போயிட்டதைப் பத்திக் கவலைப்படாதே. ரொம்ப ரொம்பப் புத்திசாலிப் பொண்ணு அது. நம்ம ரெண்டு பேர் குடும்பத்துக்கும் கஷ்டம் வரக்கூடாதுன்னு தான் அது இப்படிச் செய்திருக்கு. நம்ம தலைவிதி நம்ம கையிலேதான் இருக்குன்னு சில பேர் சொல்லுவாங்க. ஆனால் தோட்டத்திலே வேலை செய்யறவங்களோட தலைவிதி நமக்குக் கூலி குடுக்கிறவங்க கையிலேதான் இருக்கு. நம்ம கையிலே ஒண்ணுமே இல்லே..''

''இந்த நிலையை மாத்தணும் மாமா'' என்றான் பாலன்.

''மாத்துங்க, மாத்துங்க'' என்றான் பழனி; ''உன்னைப் போலே படிச்ச புள்ளைங்க மனசு வச்சால் எங்களுக்கு வந்திருக்கிற கஷ்டம் அடுத்த தலைமுறைக்காவது வராமல் இருக்கும்.''

நோட்டீஸ் கெடு முடிந்த மறுநாள் பழனியின் குடும்பத்தாரை வழியனுப்பி வைப்பதற்காகப் பாலனின் வீட்டார் அங்கே சென்றிருந்தார்கள். கோலாலம்பூர் வரையில் சென்று அவர்களை ரெயிலேற்றி விடுவதற்காகப் பாலன் மட்டும் பள்ளியில் இரண்டு நாட்களுக்கு விடுமுறை பெற்றிருந்தான்.

தோட்டத்தின் உள்ளே மக்கள் கூட்டம் அலைமோதிக்கொண்டிருந்தது. வெளியேற வேண்டியவர்களுக்கெல்லாம் கணக்குத் தீர்த்துப் பணம் கொடுத்து விட்டார்களாம்.

சாமான்கள் என்று சொல்லிக் கொள்ளப் பலரிடம் ஏதும் இல்லை; சட்டி பானைகள், குவளைகள், கோரைப் பாய்கள், அரிக்கேன் விளக்குகள் முதலியவையே. செட்டும் சிக்கனமுமாய் வாழ்ந்தவர்களிடம் மட்டிலும் பித்தளைப் பாத்திரங்கள் ஓரளவு சேர்ந்திருந்தன; துணி மணிகள் வைத்து எடுக்கும் 'டிரங்'குப் பெட்டிகள் காணப்பட்டன. தங்க நகைகள் கூடச் சில பெண்கள் போட்டுக்கொண்டிருந்தார்கள். கள்ளையோ, 'சம்சு' என்ற கள்ளச் சாராயத்தையோ குடித்துப் பழகியவர்கள் வீடுகளிலிருந்து வெளியில் எடுத்து வருவதற்குப் பொருள்கள் மிஞ்சியிருக்கவில்லை.

நண்பன் கணேசனிடம் சொல்லி வாடகைக் கார் ஒன்றுக்கு ஏற்பாடு செய்திருந்தான் பாலன். சாமான்களைக் காரில் ஏற்றினார் பழனி. தங்கம்மாள், காமாட்சி, காமாட்சியின் இரு தம்பிகள் ஆகியோர் காருக்கு வந்தார்கள். வழியனுப்ப வந்திருந்த பாலனின் குடும்பத்தாரால் கண்ணீரை அடக்க முடியவில்லை. அதே தோட்டத்தில் வேலை செய்த பாலனின் அக்காள் லட்சுமியும் அங்கு வந்து கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றாள். வாய்விட்டே புலம்பலானாள், பாலனின் தாய் வேலம்மாள்.

கடைசியாகப் பாலன் காரில் ஏறிக்கொண்டவுடன் கார் செம்மண் புழுதியைக் கிளறிவிட்டுக் கொண்டு அங்கிருந்து புறப்பட்டது. வெளி வாயிலைக் கடந்தவுடன் அங்கே பாலன் கண்ட காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது. காரைச் சற்றே நிறுத்தச் சொல்லி நன்றாக உற்றுப் பார்த்தான். காணச் சகிக்காத காட்சி அது.

பஸ்ஸுக்காக அங்கே ஒரு சிறு கூட்டம் மூட்டை முடிச்சுக்களோடும் குழந்தை குட்டிகளோடும் காத்துக்கொண்டு நின்றது. அதைப் பார்த்துப் பாலன் திடுக்கிடவில்லை. போவதற்கு ஏதோ ஓர் ஊரோ, உற்றார் உறவினர் வீடோ, அல்லது ஓர் உறைவிடமோ அவர்களுக்கு இருக்க வேண்டும். இல்லாவிட்டால் அவர்கள் நம்பிக்கையோடு பஸ்ஸுக்குக் காத்து நிற்க மாட்டார்கள்.

ஆனால் பாலனைத் திடுக்கிட வைத்த காட்சி அங்கங்கே மரத்தடி நிழலில் சிதறிக் கிடந்தது. பத்துப் பன்னிரண்டு குடும்பத்தார் சாலை ஓரங்களிலேயே தங்கி விட்டார்கள். கற்களை அடுக்கி அடுப்பாக்கி உலை வைத்திருந்தார்கள். மரக் கிளைகளில் தொட்டில்கள் கட்டிக் குழந்தைகளை விட்டிருந்தார்கள். அவர்களுக்கெல்லாம் மண்வெளியே மாளிகையா? வானமே கூரையா? புல்தரையே மஞ்சமா?

மழை பெய்தால், இடி இடித்தால், காற்றடித்தால் என்ன செய்வார்கள்? எங்கே போவார்கள்? கையில் உள்ள காசு தீர்ந்துவிட்டால் எப்படி அரிசி வாங்கி உலை வைப்பார்கள்? இரவு வேளையில் நடுக்காட்டில் எப்படி அவர்கள் வாழ்வார்கள்?

பாலனுக்கு அப்போதுதான் கண்ணீர் பொங்கிக் கொண்டு வந்தது. அதை அவனால் அடக்க முடியவில்லை. நிறுத்தியிருந்த கார் மீண்டும் அங்கிருந்து கிளம்பியது.

(தொடரும்)




## 13. நண்பன் அஜீஸும் அண்ணன் முருகனும்

பழனியின் குடும்பத்தாரை வழியனுப்பி வைப்பதற்காக அவர்களோடு கோலாலம்பூர் ரெயிலடிக்கு வந்த பாலன், அங்கே தன் அண்ணன் முருகனைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. ஆனால் முன்னதாகவே அவன் அங்கு வந்து காத்துக்கொண்டிருந்தான். கூட்டம் அதிகமாக இருந்துங்கூட எப்படியோ முருகன் தன் தம்பியையும் மற்றவர்களையும் கண்டுபிடித்து விட்டான்.

அன்றைக்கு ரெயிலடியில் ஏகப்பட்ட கூட்டம். பெரும்பாலும் தோட்டங்களிலிருந்து வெளியேற்றப்பட்ட தமிழ்க் குடும்பங்களே அங்கே காணப்பட்டன. ஸாபாவுக்குச் செல்பவர்கள் மட்டிலும் அல்லாமல் பினாங்கு, மலாக்கா முதலிய பல்வேறு பகுதிகளுக்குச் செல்வோரும் அங்கு நிறைந்திருந்தனர். பாலன் மௌனமாக அந்தக் காட்சியில் மனத்தைக் கரையவிட்டு நின்றான்.

பழனியின் மூத்த மகள் காமாட்சி முருகனைச் சுட்டெரித்து விடுவதுபோல் ஒருமுறை பார்த்து விட்டுச் சட்டென்று வேறுபுறம் திரும்பிக்கொண்டாள். பிறகு ரெயில் புறப்படும் வரையில் அவள் அவனைச் சட்டை செய்யவில்லை. விவரம் தெரிந்த நாளாய் முருகனைப் பற்றிக் கனவு கண்டு வந்தவள் அவள்; அவனுக்காகக் காத்திருந்தவள் அவள். சென்ற ஒரு மாதத்துக்கு முன்புவரை அவனையே நம்பிக்கொண்டிருந்தவள் அவள்.

காமாட்சியின் கோபத்தைக் கண்டுகொள்ளாதவன்போல், பழனியிடமும் தங்கம்மாளிடமும் சென்று கண்ணம்மாவின் பிரிவுக்காகத் துக்கம் விசாரித்தான் முருகன். அதோடு காமாட்சியைத் தான் கல்யாணம் செய்துகொள்ள முடியாமல் இருப்பதற்காக வருத்தமும் தெரிவித்தான்.

''இங்கே வேலை பார்க்க வந்த இடத்திலே ஒரு தொடர்பு ஏற்பட்டுப் போச்சு. அதனாலேதான்..'' என்று மென்று விழுங்கிக்கொண்டே தலையைக் குனிந்துகொண்டான் முருகன்.

பழனி அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை; தான் அவனிடம் சொல்ல நினைத்ததைச் சொல்லி வைத்தான்.

''முருகா, நீ எங்கே யிருந்தாலும் நல்லா யிருக்கணும். படிக்காத முட்டாள் சொல்றானேன்னு நீ நினைச்சாலும் நினைச்சுக்க! உங்க குடும்பத்திலே நீ தான் மூத்த புள்ளை. மூத்த புள்ளைக்குத் தன்னோட தம்பி தங்கச்சிகளைக் கவனிச்சுக்க வேண்டிய பொறுப்பு இருக்கு. எங்களை மறந்திட்டாப்பிலே அவுங்களை மறந்திடாதே. வேறே எதை நான் உனக்குச் சொல்லப் போறேன்?''

ரெயிலடியில் பாலன் யாரிடமும் எதுவும் பேசவில்லை. அவனுடைய நெஞ்சு கனத்திருந்தது. முப்பது ஆண்டுகளுக்கு முன்பு எப்படி அவன் மாமன் பழனி முன்பின் தெரியாத காட்டுக்கு வந்து சேர்ந்தானோ, அப்படியே இப்போது மற்றொரு முன்பின் தெரியாத காட்டுக்குப் புறப்பட்டுவிட்டான். முன்பாவது பழனியின் உடலில் இளமை இருந்தது; வலிமை இருந்தது; உள்ளத்தில் தெம்பு இருந்தது. இப்போதோ வயதுச் சுமை, குடும்பச் சுமை, வறுமைச் சுமை, துன்பச் சுமை.. பாலன் பெருமூச்சு விட்டான்.

பெருமூச்சு விட்டபடி ரெயிலும் நகர்ந்தது. கையை அசைத்து அவர்களுக்கு விடைகொடுத்தபடி ரெயில் சென்ற திசையைப் பார்த்துக்கொண்டு நின்றான் பாலன். அந்த இடத்தை விட்டு நகர வேண்டுமென்ற நினைவே அவனுக்கு அப்போது ஏற்படவில்லை.

அவன் தோளைப்பற்றி உலுக்கிய முருகன், ''நாம போகலாமா?'' என்றான். திரும்பித் தன் அண்ணனைப் பார்த்தான் பாலன். 'நீ என்ன சொல்கிறாய்?' என்று கேட்பதுபோல் இருந்தது அந்தப் பார்வை.

''இப்ப என்னோட வந்து தங்கியிருந்திட்டு நாளைக்கு நீ தோட்டத்துக்குப் போகலாம்'' என்று அழைத்தான் முருகன்.

உடனே திரும்பிவிட வேண்டுமென்ற எண்ணத்தோடுதான் பாலன் தலைநகரத்துக்கு வந்திருந்தான். ஆனால் தன் அண்ணனின் அழைப்பை அவனால் தட்ட முடியவில்லை; ஒப்புக்கொண்டான். இருவரும் வெளியே வந்தார்கள். முருகன் பாலனைத் தன்னுடைய மோட்டார் சைக்கிளில் ஏற்றிக்கொண்டு புறப்பட்டான்.

மாலை வேளையாதலால் ஏரிக்கரைப் பூங்காவுக்குச் செல்லவேண்டுமென்று தோன்றியது முருகனுக்கு. நகரத்தின் ஓர் ஓரத்திலிருந்த அந்தப் பெரிய பூங்காவை நோக்கிச் சென்றது மோட்டார் சைக்கிள். புல்தரையின் அருகில் மோட்டார் சைக்கிளை நிறுத்தி விட்டு

இருவரும் இறங்கி நடந்தார்கள். ஒரு பெஞ்சில் அமர்ந்தார்கள். காற்று சுகமாக வீசியது.

''மாமா குடும்பத்தை வழியனுப்பறதுக்காக நான் வரலே. உன்னைச் சந்திக்கறதுக்குத்தான் ரெயிலுக்கு வந்தேன். எல்லா விவரத்தையும் எனக்கு அப்பா எழுதியிருந்தாங்க'' என்றான் முருகன்.

பாலன் பதில் ஏதும் பேசவில்லை.

''கண்ணம்மாவோட முடிவைக் கேட்டப்ப என்னாலேயே அதைத் தாங்க முடியலே.''

பாலனுக்கு அன்று முருகனைச் சந்திக்காமலேயே இருந்திருக்கலாம் என்று தோன்றியது. கண்ணம்மாவை அடியோடு மறந்துவிட்டு வேறு பெண்ணைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி முன்பு உபதேசம் செய்த அதே அண்ணன் இன்று இப்படிப் பேசுகிறான். மறந்துவிட முயன்றுகொண்டிருந்த நினைவுகளை முருகன் பாலனிடம் கிளறிவிட்டுக் கொண்டிருந்தான். வேறு வழியின்றி முருகனின் உதட்டிலிருந்து வெளிவந்த ஆறுதல் மொழிகளுக்குச் செவிசாய்த்தான் பாலன்.

பூங்காவில் அங்கங்கே இருவர் இருவராகவும் மூவர் நால்வராகவும் மக்கள் உலவிக் கொண்டிருந்தார்கள். பூங்காவை ஒட்டிய சாலையில் கார்கள் வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தன. உலவுவதற்காக வந்தவர்களில் பெரும்பாலோர் இளம் காதலர்களாகவோ புது மணத் தம்பதியராகவோ இருக்க வேண்டும். மலாய்க்காரர், சீனர், தமிழர் ஆகிய மூன்று இனத்தவரும் அங்கே காணப்பட்டனர்.

முருகனின் பேச்சிலிருந்து தப்புவதற்காக, ''காலாறக் கொஞ்சம் நடந்து விட்டு வரலாமா?'' என்று சொல்லிப் பெஞ்சிலிருந்து எழுந்தான் பாலன். இருவரும் புல்வெளியில் மெதுவாக நடந்தார்கள்.

எதிரில் கரத்தோடு கரம் கோத்துக் கொண்டு நெருங்கி நடந்து வந்த ஓர் ஆணையும் பெண்ணையும் பாலன் சரியாகக் கவனிக்கவில்லை.

ஆனால் எதிரில் வந்த இளைஞன் பாலனைக் கவனித்து விட்டான்.

''அடே, பாலன்! இங்கேயா இருக்கிறாய்?'' என்று மலாய் மொழியில் கேட்டபடி, அந்தப் பெண்ணின் கரத்தை விட்டுவிட்டுப் பாலனின் முன்னே வந்து நின்று, அவன் தோளைப் பற்றி உலுக்கினான்.

''அஜீஸ்!'' அப்படியே அவனை அன்போடு தழுவிக்கொண்டான் பாலன். அஜூஸும் பாலனைத் தழுவிக் கொண்டான்.

சட்டென்று பின்னால் திரும்பி, தன்னோடு வந்த பெண்ணைக் காட்டி, ''இவள் என் மனைவி; கல்யாணமாகி இரண்டு மாதமாகிறது'' என்று சொல்லிவிட்டு, அவனிடம் ''பாலன் என்னோடு இங்கிலீஷ் பள்ளிக்கூடத்தில் படித்தவன். சிரம்பானில் எங்கள் வீட்டுக்கு அடிக்கடி இழுத்து வருவேன்; என் அம்மா டீ போட்டுக் கொடுத்தால் நாலு கப் உள்ளே தள்ளுவான்!'' என்று கூறிவிட்டுக் கலகலவென்று சிரித்தான்.

பாலன் தன் அண்ணன் முருகனை அவனுக்கு அறிமுகம் செய்து வைத்தான். தான் தோட்டப்பள்ளியில் ஆசிரியராக இருப்பதையும் மறுநாள் நகரத்திலிருந்து திரும்பப் போவதை

''அப்படியானால் கட்டாயம் நாளைக்குக் காலையில் நீ எங்கள் வீட்டுக்கு வரவேண்டும். இவள் கையாலேயே உனக்கு நாலு கப் டீ கிடைக்கும். உன்னோடு பேசி வெகு நாளாகிறது. சரியாக எட்டு மணிக்கு வந்துவிடு. நான் காத்துக்கொண்டிருப்பேன்.''

ஒரு 'விஸிட்டிங் கார்டை' எடுத்து நீட்டி, ''இது இவளுடைய அப்பாவின் வீடுதான்; வந்து சேர்'' என்றான். அன்போடு கரத்தைப் பிடித்துக் குலுக்கிவிட்டு விடைபெற்றுக் கொண்டான். அவன் மனைவியும் தன் பங்கிற்கு அழைப்பு விடுத்துச் சென்றாள். இருவருமே உயரமாக ஒல்லியாக ரோஜாப்பூ நிறத்தில் இருந்தனர்; சரியான ஜோடிதான்.

ஐந்து நிமிஷச் சந்திப்புத்தான் அது. என்றாலும் பாலனின் மனம் இந்தச் சந்திப்புக்குப் பிறகு பரவசமடைந்தது. உண்மையான அன்புக்கும் பாசத்துக்கும் பற்றுதலுக்கும் நட்புக்கும் ஏதோ ஓர் ஆற்றல் இருக்கத்தான் செய்கிறது. இவ்வளவு நேரம் உடன் பிறந்த தமையனோடு இருந்துங்கூடக் கிடைக்காத இன்பம் இந்தச் சிறுவேளைச் சந்திப்பால் பாலனுக்குக் கிடைக்கவே செய்தது.

இவ்வளவுக்கும் அஜீஸ் மொழியாலும் இனத்தாலும் சமயத்தாலும் வேறுபட்டவன். பள்ளியில் சில ஆண்டுகள்தான் ஒன்றிப் பழகியவன். அப்படியிருந்துங்கூட, அவனைக் கண்ட மாத்திரத்தில், அதுவரை பாலனை அழுத்திக்கொண்டிருந்த மனச்சுமையெல்லாம் எங்கோ பறந்து விட்டனவே! தன் அண்ணன் அருகில் இல்லாதிருந்தால் அப்போதைக்கு அஜீஸ் தன்னைத் தனியே விட்டிருக்கமாட்டான் என்று பாலனுக்குத் தெரியும்.

நறுமணத்தைச் சிதறிவிட்டுச் செல்லும் மல்லிகைப் பூவைப்போல் அஜீஸ் அவன் மனைவியோடு புறப்பட்டு விட்டான். ஆனாலும் அவன் விட்டுச் சென்ற மணம் பாலனின் இதயத்துக்குள் சுழன்றது.

மூன்று இனத்தவரும் சேர்ந்து பயிலும் பள்ளிகளில்கூடப் பெரும்பாலும் மாணவர்கள் தம்தம் இனத்தவரோடுதான் நெருங்கிப் பழகுவது வழக்கம். அதிலும் பாலன் அப்போது தோட்டக் காட்டிலிருந்து 'ரிமூவ்' வகுப்பில் படிக்க வந்த பிள்ளை. கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டதுபோல் இருந்தது பாலனுக்கு. ஒதுங்கியே வாழ்ந்து பழக்கப்பட்டதாலும் தாழ்மை உணர்ச்சி ஊட்டப்பட்டவர்களுக்கிடையே பிறந்து வளர்ந்ததாலும் பாலன் பள்ளியில் சேர்ந்தபோது மிகவும் கலக்க முற்றிருந்தான். அப்போது அவனை வற்புறுத்தித் தங்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொண்டவன் இந்த உங்கு அஜீஸ் தான். மலாய்க்கார இளைஞனை அவனுக்குத் தமிழர்கள் என்றோ சீனர்கள் என்றோ பிரித்து நோக்கத் தெரியவில்லை. எப்படியோ அவனுக்குப் பாலனிடம் பரிவு ஏற்பட்டு விட்டது. நாளடைவில் பாலன் அவனுடைய மிக நெருங்கிய நண்பனானான். அவர்களுக்கிடையிலிருந்த பொருளாதார வேறுபாடோ இன வேறுபாடோ அவர்கள் நட்புக்குக் குறுக்கே நிற்கவில்லை. சிரம்பானில் அஜீஸின் வீட்டில் பல முறை சாப்பிட்டிருக்கிறான் பாலன். பள்ளி வாழ்க்கை முடிந்த பிறகு அவர்களுக்கு அவ்

வில்லை. அஜீஸ் கோலாலம்பூருக்கு வந்து விட்டான்போலும்.

அஜீஸ் கொடுத்துச் சென்ற முகவரிச் சீட்டை வாங்கிப் பார்த்த முருகன், வியப் போடு, "இவன் புளியங்கொம்பைத்தான் புடிச்சிருக்கான்; இவனோட மாமனார் இந்த ஊரிலே ரொம்பப் பெரிய புள்ளி" என்றான்.

அஜீஸின் மாமனார் பெரிய புள்ளியா சிறிய புள்ளியா என்ற கவலை பாலனுக்கு இல்லை. அன்றைக்கு இருந்த மனோநிலையில் அஜீஸைச் சந்திக்க முடிந்ததே பெரிய அதிர்ஷ்டம் என்று அவன் நம்பினான். மனத்தைப்பற்றி உலுக்கிக் கொண்டிருந்த கவலைகள் அவனைக் கண்ட மாத்திரத்தில் எங்கோ பறந்து விட்டன.

பூங்காவிலிருந்து திரும்பிய முருகனும் பாலனும் ஒரு சாப்பாட்டுக் கடைக்குச் சென்று இரவு உணவை முடித்துக் கொண்டார்கள். பிறகு பாலனைத் தன்னுடைய அறைக்கு அழைத்துச் சென்றான் முருகன். பாலனுக்கு அஜீஸ் நண்பன் என்று தெரிந்த பிறகு, பாலனிடம் முருகனுக்குப் புதிய மதிப்பு ஏற் படத் தொடங்கியது. அஜீஸின் மாமனார் பெரிய கப்பல் வியாபாரி; அரசியலிலும் அரசாங்கத்திலும் செல்வாக்கு மிக்கவர். அப்படிப் பட்டவரின் மருமகனுக்கு நண்பனல் லவா பாலன்?

அறைக்குச் சென்ற பிறகு சகோதரர்கள் இருவரும் பொதுவான விஷயங்களைப் பற்றிச் சிறிது நேரம் பேசிக்கொண் டிருந்தார்கள். பேச்சு முருகனின் காதல், கல்யாணம், மேல் படிப்பு, லண்டன் பயணம் முதலியவை பற்றித் திரும்பியது.

"ராதா அண்ணியை எப்ப நீ கல்யாணம் பண்ணிக்கப் போறே? எப்ப நீ லண்டனுக்குப் போகணும்?" என்று கேட்டான் பாலன்.

உடனே பதில் அளிக்காமல் தன் முகத்தைக் கையால் அழுத்தித் தேய்த்துக் கொண்டான் முருகன். சற்று நேரம் யோசனை செய்து விட்டு, "சீக்கிரம் பண்ணிக்கச் சொல்லி அவங்க வற்புறுத்திக் கிட்டுத்தான் இருக் காங்க; ஆனாலும் அதிலே ஒரு சின்னச் சிக்கல் இருக்கு" என்றான்.

"என்ன சிக்கல் அது?"

"கூடப் பிறந்தவன்கறதினாலே உன்கிட்ட மாத்திரம் இதைச் சொல்லிவைக்கிறேன். வெளியிலே இப்போதைக்குத் தெரியப் படாது."

மென்று விழுங்கிக் கொண்டு மேலும் கீழும் பார்த்துக் கொண்டு எப்படியோ சுற்றி வளைத்தபடி அதைச் சொல்லலானான் பாலன். "ஆரம்பத்திலே ராதாவோடப் பழகுகிற காலத்திலே, அவ நம்மோட குடும்பத்தைப் பற்றிக் கேட்டா. எனக்கு உண்மையைச் சொல்றதுக்கு வெக்கமா இருந்திச்சு. தோட் டத்திலே நம்ப அப்பா கிராணியா வேலை பார்க்கிறார்னு சொல்லி வச்சேன். மரம் வெட்டுற கூலியோட பிள்ளைன்னு தெரிஞ்சால் அவளோட பிரியத்தைச் சம்பாதிக்க முடியா தோங்கிற கவலை. அன்னைக்கு நீ வந்தப்பவே இதை உங்கிட்ட சொல்லப் பார்த்தேன். அவ கூட இருக்கிறப்ப நீ எதையாவது உளறி வச்சிடப்படாதில்ல?"

"நீ இவ்வளவு படிச்சும், இவ்வளவு கெட்டிக்காரனா இருந்தும், உன்கிட்டே போயிடலே" என்றான் பாலன்; "கூலி வேலை செய்யறதிலே என்ன அவமானம்?"

"மத்தவங்க இன்னம் அதை மதிக்கலையே? ஒரு வேளை ராதாவுக்கு அது தெரிஞ்சிருந்தால், அவ திடீர்னு என்னோட பழகிறதையே நிறுத் தினாலும் நிறுத்தியிருப்பா."

"நாமே நம்மோட தொழிலை மதிக்க லேன்னா மத்தவங்க எப்படி மதிப்பாங்க? பால்மரப் பட்டையைச் சீவிப் பால் சேகரிச்சுப் பணம் தேடி வாழ்க்கையை நடத்தறதிலே என்ன கௌரவக் குறைச்சல்? திருடினோமா? ஏமாத்துறோமா? வஞ்சனை செய்யறோமா? சுரண்டறோமா? ஒருத்தன் இவ்வளவு அக்கிர மத்தையும் செய்து, ஆயிரம் ஆயிரமா வெள்ளி சேர்த்தால் அது உயர்ந்த தொழில்! நாணய மாப் பாடுபட்டு உழைச்சு அம்பதும் நூறும் வாங்கினால் அது கேவலமான தொழில்! இது தானே உன்னோட் கணக்கு?"

"நீ பேசுறது வறட்டு லட்சியம்; வாழ்க் கைக்கு இது ஒத்து வராது" என்றான் முருகன்.

"எனக்குப் பால்மரம் வெட்டவும் தெரியும்; பாடம் சொல்லிக் கொடுக்கவும் தெரியும். இதிலே எந்தத் தொழிலையும் பெரிசாகவோ சிறிசாகவோ நான் நினைக்கலே. 'வக்கீல் தொழிலையோ வாத்தியார் தொழிலையோ மோசமாச் செய்யறவரை விட, முடி வெட்டும் தொழிலையோ செருப்புத் தைக்கிற தொழி லையோ நல்லாச் செய்கிறவர் உயர்ந்த மனிதர்'னு காந்தி சொல்லியிருக்காராம், உனக்குத் தெரியுமா?"

தம்பியிடம் உபதேசம் கேட்டுக் கொள்வதற் காக முருகன் இந்த இரகசியத்தை அவனிடம் வெளியிடவில்லை. அவன் ராதாவிடமும் அவள் வீட்டாரிடமும் சொல்லி வைத்திருக்கும் பொய் வெளிப்பட்டு விடாமல் இருக்க அவ னுக்குப் பாலனின் ஆலோசனையும் உதவியும் தேவைப்பட்டன. அவ்வளவுதான்.

"இதோ பார், பாலா!" என்று அதட்டி விட்டு, "என்னோட திட்டம் இதுதான்; நீயும், அப்பா அம்மாவும் எப்படி நடந்து கொள் வீங்களோ தெரியாது" என்றான் முருகன். "நம்மோட குடும்பத்தாரை இவங்க சந்திக்கா மல் இருக்கறதுக்காக, 'எங்கள் வீட்டில் இந்தக் கல்யாணத்துக்குச் சம்மதிக்கமாட் டேன்னுட்டாங்க'ன்னு ராதா வீட்டிலே சொல்லப்போறேன். இங்கேயே கல்யாணம் நடக்கும். கல்யாணத்துக்குத் தோட்டத் திலேருந்து யாரையும் நான் கூப்பிடப் போற தில்லே. நீ மாத்திரம் கல்யாணத்துக்கு வந்தால் போதும்."

"கல்யாணத்துக்குப் பிறகு இந்த உண்மை தெரியாமலா போயிடும்?"

"கழுத்திலே தாலி ஏறினதுக்கப்பறம் தெரிஞ்சா எனக்குக் கவலையில்லே."

"இப்பவேகூட அவங்களுக்கு உன்னைப் பத்தி எல்லா விவரமும் தெரிஞ்சிருந்தால், அதிலே ஆச்சரியப்படறதுக்கு ஒண்ணுமில்லே" என்றான் பாலன்; "அவங்க வீட்டிலே வேலை செய்யற பொண்ணு நம்ப லட்சுமியோட தோட்டத்துப் பொண்ணு; அதுவுமில்லாமல் பொண்ணைக் குடுக்கிறவங்களும் தீர விசாரிக்கா மல் எதையும் செய்ய மாட்டாங்க."

திடுக்கிட்டான் முருகன். "அப்படின்னா நீ

''ஒரு தோட்டக் கூலியோட பையன் படிச்சு முன்னுக்கு வர்ரதுதான் பெருமையே தவிர, கிராணியோட பிள்ளையோ மானேஜ ரோட பிள்ளையோ முன்னுக்கு வர்ரதிலே என்ன அதிசயம்? இப்பவாவது நீ உண்மை யைச் சொல்றதுதான் நல்லது. மறைக்க முடியாததை நீ ஏன் மறைக்கப் பார்க்கிறே?''

முருகன் பதில் ஏதும் பேசாமல் மௌனம் சாதித்தான். உண்மையைத் தெரிந்து கொண்டே தெரியாதவர்கள்போல் ராதாவும் அவள் வீட்டாரும் நடிக்கிறார்களோ என்றுகூட முருகனுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. இதில் ஏமாறுகிறவர் யார், ஏமாற்றப்படுகிறவர் யார் என்பதே முருகனுக்குப் புரியவில்லை. ஒரே குழப்பமாக இருந்தது. 'சொல்லிவிட லாமா? கூடாதா? சொல்லிவிட்டால் கல்யாணம் நின்றுபோனால் என்ன செய்வது? சொல்லாமல் போனால் கல்யாணத்துக்குப் பிறகு இதையே ராதாவோ அவள் வீட்டாரோ ஒரு பிரச்னையாக்கி விட்டால் என்ன செய்வது?..'

தலை சுற்றியது முருகனுக்கு. அலமாரியி லிருந்து ஒரு பிராந்தி பாட்டிலை எடுத்துக் கோப்பையில் ஊற்றினான். தன் தம்பியிடம் பெயருக்கு அதை நீட்டி, ''நீயும் கொஞ்சம் குடித்துப் பாரேன்'' என்றான். பாலன் இசையவில்லை. மளமளவென்று தான் மட்டி லும் உறிஞ்சிக் குடித்தான் முருகன்.

## 14. உடன்பிறவாச் சகோதரன்

மறுநாள் காலையில் சரியாக எட்டு மணிக் குப் பாலனை உங்கு அஜீஸின் மாமனார் வீட் டுக்கு முன்னால் மோட்டார் சைக்கிளில் கொண்டு வந்துவிட்டான் முருகன். ''அஜீ ஸைப் பார்த்திட்டு நான் இப்படியே ஊருக் குப் போயிட்டு வாரேன்'' என்று தன் அண்ண னிடம் அப்போதே விடைபெற்றுக் கொண்



டான் பாலன். ''கல்யாணத் தேதி நிச்சய மாயிட்டா நான் உன்னோட பள்ளிக்கூடத் துக்குக் கடுதாசி எழுதறேன். வீட்டிலே யாருக்கும் தெரியவேண்டாம். முடிஞ்சால் நீ மட்டும் வந்து சேர்'' என்று சொல்லிவிட்டுப் பாலனின் பதிலுக்குக் காத்திராமல் அங்கிருந்து கிளம்பினான் முருகன்.

உங்கு அஜீஸின் மாமனார் வீடு பாலன் எதிர்பார்த்ததைவிடப் பெரிதாக இருந்தது. வெளியே இரும்பு கேட்; வாசலில் காவற் காரன்; உள்ளே விசாலமான தோட்டம்; தோட்டத்துக்கு மத்தியில் வீடு.

உள்ளே அனுமதிப்பார்களோ மாட்டார் களோ என்ற தயக்கத்துடன் காவற்காரனை அணுகினான் பாலன்.

''பாலன்தானே நீங்கள்?'' என்ற கேள்வி காவற்காரனிடமிருந்து மலாய் மொழியில் வந்தது. அன்போடும் மரியாதையுடனும் பாலனை அழைத்துக்கொண்டு அவன் உள்ளே போனான். அதற்குள் வீட்டின் உள்முகப்பி லிருந்த அஜீஸ் பாலனைப் பார்த்துவிட்ட



தால், ஓட்டமும் நடையுமாக வந்து அவனைப் பற்றி இழுத்துக்கொண்டு உள்ளே போனான்.

கூடத்தை ஒட்டி இருபுறங்களிலும் வர வேற்பு அறைகள் இருந்தன. ஒரு பக்கத்து அறையில் அஜீஸின் மாமனாரும் அவரைக் காண வந்தவர்களும் ஏதோ பேசிக்கொண் டிருந்தார்கள். மறுபுறத்து அறைக்குப் பால னுடன் சென்றான் அஜீஸ். அங்கே அஜீஸின் மனைவி அவனை முகமலர்ச்சியோடு வந்து வரவேற்றுவிட்டுச் சென்றாள். பெண்கள் தங்கள் உடலையும் முகத்தையும் திரையிட்டு மறைத்துக் கொள்ளும் 'பர்தா' முறை அங்கு இல்லை. மலாய்ப் பெண்களும் அங்கு வாழும் மற்ற இனத்துப் பெண்கள் போலவே சுதந் தரத்தோடும் கலகலப்போடும் பழகினார்கள். நன்றாகப் படித்தார்கள்; ஆண்களோடு பெண் களும் சரிசமமாக அலுவலகங்களிலும் பிற நிறுவனங்களிலும் வேலை பார்த்தார்கள்.

''பழைய சிநேகத்தை நீ மறந்திடாமல் இருக்கிறது என்னோட அதிர்ஷ்டந்தான்'' என்றான் பாலன்; ''எங்கள் பக்கத்திலே ஒரு கதை சொல்வார்கள்: எல்லாச் செல்வங்களும் உள்ள கண்ணபரமாத்மா ஒன்றுமே இல்லாத பரம ஏழையான குசேலனுக்கு நண்பனாக இருந்தானாம்!''

இதைக் கேட்டுக் கலகலவென்று சிரித்தான் அஜீஸ். ''அப்படியிருந்துங்கூட என்னிடமிருந்து படிக்கிற காலத்திலேயே எந்த உதவியும் நீ பெற்றுக்கொண்டதில்லையே? என் அம்மா வைத் திருப்திப்படுத்தறதுக்காகக் 'கப் கப்பா' டீயை மட்டும் உள்ளே தள்ளுவே!''

''அம்மா நல்லாயிருக்காங்களா? அவுங்களை ஒரு முறை நான் சந்திக்கணும்'' என்றான் பாலன்.

''சிரம்பானிலேதான் இருக்காங்க. நீ எப்ப வேணுமானாலும் போகலாம்.''

''சாப்பிடலாமா?'' என்று குரல் கொடுத் தாள் அஜீஸின் மனைவி லியாக்கத் உன்னிஸா.

அடுத்தாற்போலிருந்த சாப்பாட்டறை மேசையில் எல்லாம் தயாராக இருந்தன. கண்ணாடிக் கிண்ணங்களில் பலவகைப் பல காரங்கள், பழங்கள், ரொட்டித் துண்டுகள், வெண்ணெய், 'ஜாம்' முதலியன இருந்தன. பரிமாறும் வேலையில் ஈடுபட்டாள் லியாக்கத்.

''தோசை தயாரா?'' என்று சமையலறைப் பக்கம் திரும்பிக் குரல் கொடுத்தான் அஜீஸ்.

''இதோ!'' என்று சுடச்சுட இரண்டு தோசைகளை எடுத்துக்கொண்டு வெளிப் பட்டான் சமையற்காரன்.

''நீங்கள் தோசை சாப்பிடுவதுண்டா?''

''மத்தியானச் சாப்பாட்டுக்கு நீ எப்போ தாவது தோசை கொண்டு வருவாயே, நினை விருக்கிறதா? உனக்காக ஸ்பெஷலாய்ப் போடச் சொன்னேன்.''

பாலன் சட்டென்று திரும்பி அஜீஸின் சிவந்த முகத்தையும் குறும்புத்தனம் நிறைந்த விழிகளையும் உற்றுப் பார்த்தான். ''நான் மிகப் பெரிய அதிர்ஷ்டசாலி என்று இப் போதுதான் தெரிகிறது; எப்போதோ நீ என்னை மறந்திருப்பாய் என்று நினைத்தேன்.''

''சரி, சாப்பிடு.''

மேலைநாட்டுப் பாணியிலேயே அங்கே காலைச் சிற்றுண்டி நடந்தது. கத்தி, கரண்டி, குத்தி முதலியவற்றின் உதவியோடு பாலன் பலகாரங் களை உள்ளே தள்ளி வைத்தான். இரண்டு கிண்ணம் தேநீரைக் குடித்தான்; ஆளுக்கொரு

ஆப்பிளை எடுத்துக் கடித்துக்கொண்டே இருவரும் வரவேற்பறைக்கு வந்து அமர்ந்தனர்.

''நான் இங்கே ஒரு பாங்கில் வேலை செய்து வந்தேன். கல்யாணத்துக்குப் பிறகு வேலையை விட்டுவிட்டேன். மாமனாரோடு தொழிலுக்குத் துணையாக இருக்க வேண்டியிருக்கிறது. கல்யாணம் முடிந்தவுடன் ஒரு மாதம் நானும் லியாக்கத்துமாக ஊர் சுற்றினோம். தேநிலவுப் பயணம் முடிந்து ஒரு வாரந்தான் ஆகிறது' என்று தன்னைப்பற்றிச் சொல்லிவிட்டு, ''நீ இப்போது என்ன செய்கிறாய்?'' என்று கேட்டான் அஜீஸ்.

தமிழ்ப் பள்ளிக்கூடத்தில் ஆசிரியராக வேலை பார்த்துக் கொண்டே ஓய்வு நேரத்தில் மேல் படிப்புப் படித்து வருவதாகச் சொன்னான் பாலன்.

''ஏன், நீ இப்போது படித்திருக்கும் படிப்புக்கே வேறு வேலை கிடைக்குமே உனக்கு?''

''கிடைக்குந்தான்; என் அண்ணன் முருகன்கூடத் தோட்டத்தை விட்டு வந்து இங்கேதான் வேலை பார்க்கிறான். எனக்கென்னமோ இன்னும் கொஞ்ச காலமாவது அங்கேயே இருந்தால் தேவலாம் என்று தோன்றுகிறது.''

மலாய் மொழி, தமிழ், ஆங்கிலம் மூன்றிலும் நன்றாகப் பேசத் தெரிந்தவன் பாலன். ஓரளவு எழுதவும் பழகிக் கொண்டவன். கடுமையாக உழைத்துப் பழகியவன். இப்போதுகூட அஜீஸிடம் அவன் மலாய் மொழியில்தான் பேசிக் கொண்டிருந்தான்.

''உன் திறமையை நீ தோட்டத்திலிருந்து கொண்டு வீணாக்குவது எனக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை'' என்றான் அஜீஸ்.

''ஒரு வழியில் பார்த்தால் நீ சொல்வது உண்மைதான். நான்கூட என் அண்ணனைப் பின்பற்றிச் சொந்த வாழ்க்கையில் முன்னேற வேண்டுமென்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் இப்படி வழி காட்டக் கூடியவர்கள் எல்லாருமே தப்பித்துக் கொண்டு வெளியேறி விட்டால், எங்கள் சமுதாயத்தில் பாதிப் பேருக்குமேல் கடைசி வரையில் வாழத் தெரியாமலே இருந்து விடுவார்களோ என்ற பயம் எனக்கு வந்திருக்கிறது. தோட்டத் துண்டாடல் காரணமாக நாட்டில் ஆயிரக் கணக்கான தொழிலாளர் குடும்பங்கள் இப்போது அவதிப்படுவதுபற்றி நீ கேள்விப் பட்டிருப்பாய். நான்கூட என் சொந்த மாமாவின் குடும்பத்தை ஸாபாவுக்கு அனுப்பி வைக்கத்தான் இங்கு வந்தேன். முடியுமானால் முடிந்தவரை தோட்டத்திலேயே தங்கி ஏதாவது செய்யப் பார்க்கிறேன்.''

ஆர்வத்தோடும் பெருமையோடும் பாலனின் முகத்தைப் பார்த்தவாறே அவன் பேசுவதைக் கேட்டுக்கொண் டிருந்தான் அஜீஸ். பள்ளியின் நூல்நிலயத்திலிருந்து ஆப்ரகாம் லிங்கன், மகாத்மா காந்தி, கமல் பாட்சா முதலியவர்களின் நூல்களை எடுத்து அப்போதே பாலன் படித்து வந்தது அவனுடைய நினைவுக்கு வந்தது. தமிழ்ப் பிள்ளைகளில் பலர் செய்யாத காரியம் இது. இதைப் போன்ற செயல்களால்தானோ என்னவோ அஜீஸ் அவனிடம் கவரப்பட்டிருந்தான்.

''கல்லும் முள்ளும் நிறைந்த பாதையில் நடக்கத் துணிந்திருக்கிறாய்'' என்ற அஜீஸ், ''தமிழர்களைப் போலவே கம்பங்களில் வாழும் [illegible]

பிரச்னையும் எங்களுக்கு இருக்கிறது. காலப் போக்கைத் தெரிந்துகொண்டு சீனர்கள் குடும்பம் குடும்பமாகச் சுயமுயற்சி செய்து உழைக்கிறார்கள். எல்லா மக்களும் உழைத்து முன்னேறினால்தான் நாடு இன்னும் முன்னேறும்; எல்லாரும் வளமாகவும் வாழ முடியும்'' என்றான்.

''நான் புறப்படட்டுமா? உன்னுடைய நேரத்தை அதிகமாக எடுத்துக் கொள்ள விரும்பவில்லை.''

''நான் உன்னை இங்கே வரவழைத்ததன் நோக்கமே உன்னை என் மாமனாருக்கு அறிமுகம் செய்துவைக்க வேண்டுமென்பதற்குத்தான். உன்னைப் போல் கஷ்டப்பட்டு உழைப்பவர்கள் அவருக்குத் தேவை. நான் சொன்னால் உடனடியாக உனக்கு ஒரு வேலை போட்டுக் கொடுத்து விடுவார். உனக்கும் நல்ல சம்பளம் கிடைக்கும்.''

நன்றி உணர்ச்சியால் உள்ளம் பொங்கிப் பூரித்தது பாலனுக்கு. ''இப்படி நீ நினைத்ததே எனக்கு எவ்வளவோ கொடுத்ததற்குச் சமம். நீதான் உண்மையிலேயே எனக்கு மூத்த சகோதரன். உன் அன்பை நான் மறக்கவே மாட்டேன்!'' நாத் தழுதழுத்தது பாலனுக்கு.

இருவரும் ஒருவர் கரத்தை ஒருவர் இறுகப் பற்றிக்கொண்டு ஒரு கணம் மெய்ம்மறந்து நின்றார்கள்.

''நீ இப்போது எங்கே போகவேண்டும்?''

''பஸ் ஸ்டாண்டுக்குப் போய்ப் பஸ் பிடித்துச் சிரம்பானுக்குப் போகவேண்டும். சிரம்பானில் என்னுடைய நண்பன் கணேசன் என்னைச் சந்திப்பதாய்ச் சொல்லியிருக்கிறான்.''

''இரு, பஸ் ஸ்டாண்டில் உன்னைக் கொண்டு போய்விடுகிறேன்.''

அஜீஸின் மனைவி லியாகத்துக்குக் கைகூப்பி அவளிடம் விடைபெற்றுக்கொண்டான் பாலன். இருவரும் வெளியே வந்து காரில் அமர்ந்தார்கள். அஜீஸே காரை ஓட்டிக்கொண்டு பஸ் ஸ்டாண்டுக்கு வந்தான். சிரம்பானுக்குப் புறப்படும் பஸ்ஸும் தயாராக நின்றது.

''நீ எப்போது நினைத்தாலும் என்னைத் தேடிவரலாம். எனக்குக் கடிதம் எழுதலாம். போன் செய்யலாம்'' என்றான் அஜீஸ்.

''அதுதான் சொன்னேனே? நீதான் என்னுடைய உண்மையான மூத்த சகோதரன் என்று. இதை நான் உதட்டளவில் சொல்லவில்லை'' என்றான் பாலன்.

அஜீஸ் அங்கிருந்து கிளம்பிய பிறகும் அவனுடைய நினைவு பாலனின் நெஞ்சை விட்டு அகலவில்லை. பள்ளிப் பருவத்து நட்புக்கள் பல ரெயில் வண்டி நட்புக்களைப் போல் உடனுக்குடன் மறக்கப்படுவது உண்டு. பாலன் அஜீஸை மறக்காவிட்டாலுங்கூட, பொருளாதாரத்தில் அவர்களுக்கிடையே இருந்த வேறுபாடு பாலனைச் சற்றுத் தயங்க வைத்தது. சிரம்பானில் அவர்கள் வீட்டு வழியே பாலன் பலமுறை சென்றபோதும்கூட, உள்ளே எட்டிப் பார்த்து அஜீஸைப் பற்றி விசாரிக்கும் துணிவு அவனுக்கு ஏற்பட்டதில்லை. அப்படி இருந்தது தவறு என்பதை அவன் இப்போது உணர்ந்துகொண்டான்.

பஸ் சிரம்பானுக்குப் புறப்பட்டது. சிரம்பானில் ஒரு நண்பனின் கடையில் தன்னைச் சந்திக்கும்படி சொல்லியிருந்தான் கணேசன். அன்றைக்கு மாலை அங்கே ஒரு இலக்கியச்

விருந்து வந்த ஒருவர் பேசுவதாக இருந்தது. முடிந்தால் அந்தக் கூட்டத்துக்கும் போய்ச் சொற்பொழிவைக் கேட்க வேண்டுமென்று பாலனும் கணேசனும் திட்டமிட்டிருந்தார்கள்.

குறிப்பிட்ட நண்பரின் மளிகைக் கடையில் கணேசனைச் சந்தித்தான் பாலன். அங்கெல்லாம் பெரும்பாலும் கடையும் வீடும் நன்ருகவே இருக்கும். கடையின் பின்புறத்திலோ அல்லது மாடியிலோ கடைக்காரரின் வீடு இருப்பது வழக்கம்.

மாலை ஐந்து மணிக்கெல்லாம் நகரத்திலிருந்த ஒரு பெரிய மண்டபத்தில் கூட்டம் தொடங்கியது. சிரம்பான் நகரத்திலிருந்த தமிழ்ப் பிரமுகர்கள் பலரும் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். அவர்களைத் தவிர, சுற்றுப்புறத் தோட்டங்களில் உழைத்து வந்த இளைஞர் கூட்டமும் அங்கே கூடியிருந்தது. சைக்கிள்களிலும், பஸ்ஸிலும், நடையிலுமாக அவர்கள் அங்கே வந்து காத்திருந்தார்கள்.

உள்ளூர்ப் பெரியவர்கள் பேச்சாளரை அறிமுகம் செய்து வைத்தபின்பு, பேச்சாளர் சோமநாதன் கடல்மடை திறந்ததுபோல் தமிழ் மழை பொழியலானுர். சுமார் ஒரு மணி நேரம் அந்த மண்டபம் தமிழ் முழக்கத்தால் அதிர்ந்தது. சங்க இலக்கியத்திலிருந்தும் திருக்குறளிலிருந்தும் சிலப்பதிகாரத்திலிருந்தும் மேற்கோள்களை அள்ளி அள்ளி வீசலானுர்.

'கல்தோன்றி மண் தோன்ருக் காலத்துக்கு முன்பே இந்த உலகத்தில் முன் தோன்றிய மூத்த குடி தமிழ்க்குடி' என்ருர். முடிசூடி நாடாண்ட மூவேந்தர்களான சேரசோழ பாண்டியர்கள் கங்கையும் கடாரமும் இமயமும் கொண்டவர்கள் என்று மார் தட்டினுர். 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்பது தான் தமிழர்களின் பரந்த கொள்கை என்று சாதித்தார். சங்க இலக்கியத்தில் சில காதல் காட்சிகளைச் சுட்டிக் காட்டிவிட்டு, கண்ணகியின் கற்புச் சிறந்ததா மாதவியின் கற்புச் சிறந்ததா என்று வாதாடிவிட்டு, உற்சாகமாய்ப் பேச்சைக் கேட்ட கடல் கடந்த தமிழர்களுக்கு நன்றி சொல்லிவிட்டுத் தம் பேச்சை முடித்தார்.

கூட்டம் கலைந்தது.

பாலனும் கணேசனும் தமிழர் நடத்தி வந்த ஒரு 'ரெஸ்டாரண்டு'க்குச் சென்று பலகாரத்துக்கு ஆர்டர் கொடுத்துவிட்டுக் காத்திருந்தனர். கூட்டத்தில் பேச்சுக் கேட்டுவிட்டு அவர்களைப் போலவே அங்கு வந்த வேறு சிலரும் சிற்றுண்டிக்காகக் குழுமியிருந்தனர்.

பேச்சாளரின் திறமையைக் கண்டு கணேசன் வாயடைத்துப் போனுன். அடுக்கடுக்காகச் சொல்மாரி பொழிந்தாராம். ஒரே பிரமிப்பு அவனுக்கு.

''அவரோட பேச்சிலே இவ்வளவு சொல் அலங்காரம் இருந்திச்சே, அவர் என்ன பேசினுர், அதனுலே உனக்கோ, எனக்கோ, அதைக் கேட்டவங்களுக்கோ என்ன நன்மைன்னு யோசனை செய்தியா?''

யோசனை செய்து பார்த்தான் கணேசன். ''ஆமா.. மயக்கருப்பிலே பேசினுர்; பொழுது போனதே தெரியலே.''

''கற்காலத்து வாழ்க்கையைப் போலவே இன்னும் சில பேர் இங்கே வாழ்ருங்களே. நாம இங்கே காடாண்டுக்கிட்டு இருக்கோமே, 'யாதும் ஊரே யாவரும் கேளிர்'னு பேசிக்கிட்டே இங்கே ஒன்பது கட்சி, தொண்ணூறு சாதீன்னு நமக்குள்ளே அடிச்சுக்கறமே, பத்தடிக்குப் பத்தடி உள்ள லயன் வீட்டிலே ஆணும் பெண்ணுமாப் பத்து பேர் வாழ்ந்த நிலையிலே கண்ணகியோட கற்பைப் பேசறதாலே என்ன லாபம்? இதையெல்லாம் இவர் கொஞ்சமாவது தெரிஞ்சுக்க வேண்டாமா? கடல் கடந்து பிழைக்க வந்தவங்க, இந்த இருபதாவது நூற்ருண்டிலே, இந்தச் சூழ்நிலையிலே எப்படி வாழ்றது? இலக்கியத்திலே சம்பந்தப்படுத்தி இதைப்பத்தியெல்லாம் அவர் பேசியிருந்தால் நமக்குப் பிரயோசனமா இருந்திருக்கும். இதை விட்டுட்டுப் புளிச்சுப் போன பழம் பெருமையைப் பேசிப் போதையூட்டினு அதனுலே பலன் என்ன? கள்ளுத் தண்ணியைப் போலே இதுவும் ஒரு போதை! அவ்வளவுதான்!''

''தோட்டத்திலே வாழ்ற தமிழனைப் பத்தியோ ரெயில்வேயிலேயோ, நெடுஞ்சாலையிலேயோ கூலி வேலை செய்யற தமிழனைப் பத்தியோ இவங்களுக்கு என்ன தெரியும்?'' என்று கேட்டான் அடுத்த நாற்காலியில் உட்கார்ந்திருந்த ஒருவன்; ''யாராவது பணக்காரர் வீட்டிலேயோ, இல்லே, பெரிய ஓட்டல்லேயோ வந்து தங்கருங்க. நாலு நகரங்களைச் சுத்திப் பார்த்து, கூட்டங்கள்ளே பேசிக் கைதட்டு வாங்கிட்டுத் திரும்பருங்க. அவுங்க ஏத்திவிட்டுப் போன 'சம்சு' போதையிலே நாம இங்கே சேர - சோழ - பாண்டியனு நெனச்சுக்கிட்டு அவஸ்தைப்பட வேண்டியது தான்!''

''நமக்கு உண்மையாகவே வழி காட்டக்கூடிய பெரியவங்களை நாம் வற்புறுத்திக் கூப்பிடத்தான் வேணும்'' என்ருன் பாலன்; ''இலக்கியத் தொடர்பும் கலாசாரத் தொடர்பும் நம்மோட வாழ்க்கையை உயர்த்தக்கூடிய தொடர்பா இருக்கணும. இன்னிக்கு நாம கேட்டது வெறும் கதாகாலட்சேபம்.''

சிற்றுண்டி முடிந்தது. பாலனும் கணேசனும் ரெஸ்டாரண்டிலிருந்து வெளியே வந்தார்கள். பாலன் தோட்டத்துக்குப் புறப்படுவதாகவும் கணேசன் அங்கேயே தங்குவதாகவும் ஏற்பாடு.

கணேசன் திடீரென்று பாலனை வழியில் நிறுத்தி அவன் சற்றும் எதிர்பாராத ஒரு கேள்வியைக் கேட்டான்.

''உனக்குச் சின்னச்சாமியின் தங்கச்சி செல்லத்தைத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''செல்லமா?''

'ஆமா, உன் வகுப்பிலேகூட முந்தி படிச்சிருக்கு; உன்னை நல்லாத் தெரியும் அதுக்கு.''

''தெரியும்'' என்ருன் பாலன்.

''அதை நீ பார்த்தீன்னு கவலைப்படாமல் இருக்கச் சொல். எப்படியும் சிரம்பானிலே காலை ஊணிக்கிட்டு, அடுத்தாப்பிலே கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொல். நீ அதோட பேசுறது அவுங்க வீட்டிலே யாருக்கும் தெரியவேண்டாம். அவுங்கண்ணன் தான் உயர்ந்த சாதீங்கருன்; பரிசப் பணம்கிருன்; என்னென்னவோ சொல்லி எங்க கல்யாணத்தைத் தடுக்கப் பார்க்கிருன்.''

''நீ கவலைப்படாதே கணேசா!'' என்ருன் பாலன்.

(தொடரும்)




## 15. இளம் பயிருக்கு எதிர்காலம்?

தன் சிறிய தங்கை கமலத்தைச் சைக்கிளின் பின்புறம் ஏற்றிக்கொண்டு அதிகாலையிலேயே பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டான், பாலன். பள்ளியைத் தொடங்குவதற்கு இன்னும் நேரம் இருந்ததால் யாரும் அங்கே வரவில்லை. ஐந்தாம் வகுப்பைக் கவனிக்க வேண்டிய பொறுப்பு அவனுக்கு. கமலம் மூன்றும் வகுப்புக்குப் போய்த் தன் இடத்தில் உட்கார்ந்து கொண்டாள்.

தோட்டத்தில் தான் தொடங்க வேண்டிய முதல் வேலைக்குத் தான் பணியாற்றும் தமிழ்ப் பள்ளிக்கூடத்தையே சோதனைக்களமாக மாற்ற வேண்டும் என்ற எண்ணம் அவனுக்குப் பல நாட்களாக உண்டு. எவ்வளவுதான் ஆர்வத்தோடு அவன் தன்னிடம் பயிலும் பிள்ளைகளுக்குப் பாடம் கற்பிக்க முயன்றாலும் அவனுக்கு அதனால் மன நிறைவு ஏற்படவில்லை. தன்னையும் தான் பணியாற்றும் இடத்தையும் முதலில் அவன் சீர்திருத்திக்கொள்ள விரும்பினான்.

'தலைமை ஆசிரியர் சண்முகத்திடமும் மற்ற ஆசிரியர்களிடமும் கூடிப் பேசவேண்டும். அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற முயல வேண்டும். பிறகு பிள்ளைகளின் பெற்றோரை அணுக வேண்டும். கல்வி என்பது பெயரளவுக்கு என்று இல்லாமல், உண்மையிலேயே பிள்ளைகளின் எதிர்கால வாழ்வுக்கும் வளர்ச்சிக்கும் வழிகாட்டக்கூடியதாக இருக்க வேண்டும்' என்றெல்லாம் நினைத்துக் கொண்டே தன் வகுப்பறைக்குள் சற்று நேரம் உலவினான் பாலன்.

நேரம் நெருங்கிவிட்டதால் கூச்சலும் கும்மாளமுமாகக் குழந்தைகள் பள்ளியை நோக்கிக் கூட்டம் கூட்டமாய் வரத் தொடங்கினார்கள். சன்னலருகே நின்றபடி அவர்களைக் கூர்ந்து கவனித்தான் பாலன். ஆண்களும் பெண்களுமாக அங்கே வந்துகொண்டிருந்த குழந்தைகளில் சில, தங்கள் தலையை ஒழுங்காக வாரிவிட்டுக் கொள்ளவில்லை. ஒழுங்காகவும் சுத்தமாகவும் உடை உடுத்தி வரவில்லை. இதற்கெல்லாம் காரணம் வறுமையென்று சொல்ல முடியாது. வறுமையிலும் செம்மையாக வாழலாம். செம்மையாக வாழும் வழியைப் பெற்றோரே தெரிந்துகொள்ளாத போது, குழந்தைகளை எப்படிக் குறை கூறுவது?

தலைமை ஆசிரியர் சண்முகத்தின் வீடு அருகில்தான் இருந்தது. அவரும் வந்துவிட்டார். அவரை வணங்கி விட்டு, "உங்களுக்கு நேரம் இருக்கிறப்போ ஆசிரியர் கூட்டம் நடத்தி, நம்மோட பள்ளியின் வளர்ச்சியைப் பத்திப் பேசலாம்னு எனக்குத் தோணுது; உங்க வசதிப்படி அதை வச்சுக்கலாம்" என்றான் பாலன்.

புன்முறுவலோடு பாலனின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார் சண்முகம். ஏதோ ஓர் உறுதியுடன் பாலன் தம்மிடம் பேசுவதை அவர் புரிந்து கொள்ளாமல் இல்லை. அந்தப் பள்ளிக்கு ஒரு பெரும் செல்வமாக அவனை நம்பியிருந்தவர் சண்முகம்.

"அதுக்கென்ன? பள்ளிக்கூடம் விட்டவுடனே எல்லாரும் உட்கார்ந்திடலாம். நான் சொன்னேன்னு நீங்களே மத்தவங்ககிட்டச் சொல்லிடுங்க."

பன்னிரண்டு ஆசிரியர்கள் வேலை பார்த்த அந்தத் தமிழ்ப் பள்ளியில் சுமார் அறுநூறு குழந்தைகளுக்குமேல் சேர்ந்திருந்தார்கள். குழந்தைகளில் கால்வாசிப் பேருக்குமேல் முறையாகப் பள்ளிக்கு வருவதில்லை. சிலர் பாதியிலேயே நின்று விடுவார்கள். பெற்றோருக்குத் துணையாகப் பால் கிண்ணம் துடைப்பது, மரப் பட்டையில் உலர்ந்திருக்கும் ரப்பர்த் துணுக்கைச் சேகரிப்பது, வீட்டில் குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது முதலிய வேலைகளைச் செய்வதற்காகப் பெற்றோர் சிலர் தாங்களாகவே குழந்தைகளை நிறுத்திக்கொள்வதுண்டு. வேறு சில வயது வந்த பிள்ளைகளோ பள்ளிக்குச் செல்வதாகப் போக்குக் காட்டி விட்டு வேறு எங்காவது சுற்றித் திரிவார்கள். இப்படிப்பட்ட சூழலில்தான் பாலனைப் போன்றவர்கள் அங்கே படிப்பைச் சொல்லித் தர வேண்டிய நிலை இருந்தது. ஆசிரியர்களில் சிலரும் இதனால் மனம் நொந்து பெயரளவுக்குத் தங்கள் கடமையைச் செய்வதோடு முடித்துக்கொள்வார்கள்.

கூட்டத்தைப்பற்றி மற்ற ஆசிரியர்களிடம் சொல்லிவிட்டுத் தன் வகுப்பறைக்கு வந்து பாடம் நடத்தத் தொடங்கினான் பாலன். வகுப்பறையில் கந்தப்பன் என்ற சிறுவனைக் கண்டவுடன் திடீரென்று கந்தப்பனின் தகப்பன் சின்னச்சாமியின் நினைவு வந்தது பாலனுக்கு. சின்னச்சாமியைப்பற்றியும் அவன் தங்கை செல்லம்மாவைப் பற்றியுந்தான் முதல் நாள் கணேசன் அவனிடம் சொல்லியிருந்

தான். 'செல்லம்மாவைப் பார்த்தினு கவலைப்படாமல் இருக்கச் சொல்' என்று தன்னிடம் கணேசன் சொல்லி அனுப்பியது அவனுக்கு நினைவில் வந்தது.

சின்னச்சாமியின் மகன் தன் வகுப்பில் படித்ததும் நல்லதுதான. படிப்பில் கந்தப்பன் கெட்டிக்காரப் பிள்ளை அல்ல. வாரத்தில் இரண்டு நாட்களாவது வகுப்புக்கு மட்டம் போட்டுவிடுவான். அவனைப் பற்றியும் சின்னச்சாமியிடம் நேரில் பேசிக் கவனிக்கச் சொல்லலாம். அதோடு முடிந்தால் செல்லம் மாளையும் சந்தித்து வரலாம்.

''உன்னுடை அப்பாவை நான் பார்க்கணும்; ஒரு நாளைக்கு வீட்டுக்கு வர்ரேன்னு சொல்லு'' என்றான் பாலன்.

பயந்துவிட்டான் பையன்.

''நான் பள்ளிக்கூடத்துக்கு வரணும்னுதான் சார் சொல்றேன்; எங்கப்பாதான் சார் என்னை மங்கு துடைக்கக் கூட்டிக்கிட்டுப் போகுது'' என்றான் சிறுவன்.

''அப்படியா? நான் வந்து சொல்றேன்; உன்னை ஒழுங்கா வகுப்புக்கு அனுப்பச் சொல் றேன்.''

''சொல்லுங்க சார்.''

இடைவேளைச் சாப்பாட்டுக்குப் பள்ளி கலைந்தபோது, ஆசிரியர்கள் கூட்டத்தில் விவாதிக்கப்பட வேண்டிய குறிப்புகளை ஒரு தாளில் குறித்துக் கொண்டான் பாலன். தலைமை ஆசிரியரிடமும் பேசி அவரையே கூட்டத்தைத் தொடங்கி வைக்கும்படி கூறினான். சண்முகம் தலைமை ஆசிரியர் மட்டும் அல்ல; வயதிலும் மூத்தவர். செயல் செய்வதற்குரிய துடிப்பும் இளமையும் அவரிடம் இல்லையே தவிர, தோட்ட வாழ்க்கையின் பிரச்னைகள் பலவற்றைப் பற்றி ஆழ்ந்து சிந்தித்தவர்.

மாலை வேளையில் பள்ளி கலைந்தவுடன் தலைமை ஆசிரியர் அறையிலேயே ஆசிரியர்கள் கூடினார்கள். சண்முகம் கூட்டத்தின் நோக்கத்தைப்பற்றிச் சொல்லிவிட்டு, ''பாலனுக்கும் எனக்கும் ரொம்ப நாளா இந்தக் கவலை இருக்கு. கவலைப்படறதை விட்டுட்டு, ஏதோ நம்மாலே முடிஞ்சதை நாம செய்ய முயற்சி செய்யலாம்னு தோணுது'' என்றார்.

''படிக்கக்கூடிய வயசுப் பிள்ளைகளிலே முக்கால்வாசிப் பேர்கூட இன்னும் நம்ப பள்ளியிலே சேர்க்கப்படலே. சேர்க்கப்பட்ட பிள்ளைகளையும் பாதியிலே நிறுத்திடறாங்க. வீட்டிலே படிக்கிறதும் ரொம்பக் குறைவாக இருக்கு. பள்ளிக்கூடத்துக்கு வர்ரது ஏதோ ஒரு சடங்கு போலே இருக்கே தவிர, பிள்ளைகளோட எதிர்காலமே இதிலேதான் இருக்குன்னு யாருக்கும் புரியலே'' என்றான் பாலன்.

''நூறு பேர் படிச்சால் அதிலே அஞ்சு பேர் உயர்நிலைக் கல்வியை எட்டிப் பார்த்தால் அதிகம். நூத்துக்கு ஒரு பிள்ளை நம்மைப் போலத் தமிழ்ப் பள்ளிக்கூடத்துக்கு ஆசிரியர் வேலைக்கு வரக்கூடும். தோட்டத் தொழிலாளியோட பிள்ளை தோட்டத் தொழிலாளியாகத் தான் வாழணும்கிற அவல நிலை இன்னும் மாறலே.''

''நம்மைப் போலவே நம்ம பிள்ளைகளும் பால்மரம் வெட்டிப் பிழைச்சுக்குனும் ரொம்பப் பேர் நினைக்கிறாங்க; அதுக்குமேலே அவங்களுக்கு நெனைச்சுப் பார்க்கக்கூடத் தெரியலே.''

''ஒவ்வொரு குடும்பத்திலும் ஆறேழு குழந்தைகள் இருக்கிறப்ப, எப்படி எல்லாருக்கும் மரம் வெட்ற வேலை கிடைக்கும்? இதுகூடத் தெரிய வேண்டாமா? தோட்டத் துண்டாடலும் வேலையில்லாத் திண்டாட்டமும் வந்த பிறகாவது, இவங்களுக்கு விழிப்பு ஏற்பட வேண்டாமா?'' என்றான் பாலன். ''ஒண்ணு, நம்ப குழந்தைகள் நல்லாப் படிச்சு ஏதாச்சும் வேலைக்குப் போகணும்; இல்லே, படிப்போடே ஒரு தொழிலையாவது வியாபாரத்தையாவது செய்யக் கத்துக்கணும். எல்லாத்துக்கும் அடிப்படை படிப்புத்தானே?''

''பெத்தவங்களுக்கே இது தெரியாதப்ப, மத்தவங்க இதிலே என்ன செய்ய முடியும்? நாமுந்தான் கரடியாக் கத்தறோம்; பலன் இல்லையே?'' என்றார் ஓர் ஆசிரியர்.

''பெத்தவங்களை எப்படியாவது கூட்டிவச்சு அவுங்களுக்கு நாம எடுத்துச் சொல்லியாகணும்'' என்றான் பாலன். ''பெற்றோர் சங்கம் ஏற்படுத்துவோம். அவுங்களை அடிக்கடி இங்கே கூப்பிடுவோம்.''

''நடக்காத காரியம். யாருமே நம்மோட ஒத்துழைக்க மாட்டாங்க'' என்றார் விரக்தி அடைந்த ஒருவர்.

''முயற்சி செய்து பார்ப்போமே!'' என்றான் பாலன்; ''ஒரு சமுதாயத்தோட தலை எழுத்தை நல்ல எழுத்தா மாத்தி அமைக்க நாம பாடுபடுவோம். பலனைப் பத்தி உடனடியாக் கவலைப்பட வேண்டாம்.''

''சரி, பெற்றோர் சங்கம் அமைத்துப் பாக்கலாம். இது ஒரு நல்ல யோசனை.—அடுத்தது?'' என்றார் தலைமை ஆசிரியர் சண்முகம்.

''தமிழ்ப் பள்ளிக்கூடத்திலே ஆறும் வகுப்புப் படிச்சிட்டுப் பிறகு ஆங்கிலப் பள்ளிக்குப் போகிற குழந்தைகளுக்கு, அங்கு ஒண்ணுமே புரியறதில்லை. 'ரிமூவ்' வகுப்புக்குப் போனா அங்கே அவங்களுக்குக் கண்ணைக் கட்டிக் காட்டிலே விட்டாப்பிலே இருக்கு. இங்கே நல்லாப் படிச்ச குழந்தைங்ககூட, அங்கே கஷ்டப்படறாங்க. மேல்படிப்பை விட்டே 'ரிமூவ்' செய்கிற வகுப்பாத்தான் அது இப்போ இருக்கு. அதனாலே, நாமே ஐந்தாம், ஆறும் வகுப்புப் பிள்ளைகளுக்கு இங்கே நல்ல முறையிலே ஆங்கிலப் பாடம் சொல்லித் தரணும்; ஒரு நாளைக்கு ஒரு மணி நேரம் இதுக்காக நான் ஒதுக்கத் தயாராக இருக்கிறேன்'' என்றான் பாலன்.

''எனக்கு வீடு பக்கத்திலேதான் இருக்கு. என்னாலே தாராளமா ஒரு மணி நேரம் அதிகமாத் தங்கிப் பாடஞ் சொல்லித் தர முடியும்'' என்றார் தலைமை ஆசிரியர் சண்முகம்.

இன்னும் ஓரிரண்டு ஆசிரியர்கள் இந்தத் திட்டத்தில் பங்குகொள்ளத் தாங்களும் ஆர்வத்தோடு முன்வந்தார்கள். ஒரு சிலர் பெற்றோர் சங்க வேலைகளைக் கவனிப்பதாய் வாக்களித்தார்கள்.

'''ரிமூவ்' வகுப்பிலே படிக்க இந்தத் தமிழ்ப் பள்ளிக்கூடத்து அடிப்படை பத்தாதுங்கறதை நான் ஒத்துக்கறேன். அந்த அடிப்படையை ஏற்படுத்திக் கொடுக்க நாம

முயற்சி செய்வோம்; ஆனல் இது மாத்திரம் போதாது'' என்ருர் தலைமை ஆசிரியர்.

''ஏன்?''

''ஆங்கிலப் பள்ளியிலே படிக்கணும்னு, சிரம்பானுக்குப் போகணும். பஸ்ஸிலே போகப் பணம் வேணும். பஸ்ஸுக்குக் காத்துக்கிட்டிருக்கணும். தோட்டத்துப் பிள்ளைகள் படிப்பைக் கண்டு பயப்படறதுக்கு நியாயமான இடைஞ்சல்கள் எத்தனையோ இருக்கு. ஒதுக்கப்பட்டுக் காட்டுக்குள்ளே வாழ்கிற குழந்தைகளை நாம நாட்டுக்கு அனுப்பிப் படிக்க வைக்க வேண்டிய வேலை இருக்கு.''

''தகப்பன் கூலி, பிள்ளை கூலி, பேரன் கூலி, கொள்ளுப் பேரன் கூலி—இப்படியேதான் போகணுமா?'' என்ருர் ஒருவர்.

''பெற்ருேர் சங்கத்தை நம்மாலே நல்லதொரு இயக்கமாக மாத்த முடிஞ்சால் இந்தப் பிரச்னையெல்லாம்கூட நாம் சமாளித்திடலாம்'' என்ருன் நம்பிக்கையோடு பாலன். ''ஆயிரக்கணக்கான பேர் மாசா மாசம் கூலி வாங்கறுங்க. ஆளுக்குப் பத்து வெள்ளி வசூல் பண்ணி, மேலே எப்படியாவது கடன் பட்டு, ஒரு 'ஸ்கூல் பஸ்'கூட நம்மாலே வாங்கிட முடியும். நமக்குள்ளே ஒத்துமை வந்திட்டால் எதுவுமே சிரமமில்லே.''

''பாலனோட கனவு பெரிய கனவுதான்'' என்று நகைத்தார் ஒருவர்; ''தோட்டத்துப் பிள்ளைகள் 'ஸ்கூல் பஸ்'ஸிலே போய்ப் படிக்கிற காலம் வரும்கிருர்!''

''கூட்டுறவுச் சங்கத்திலே ஏற்பட்ட அநுபவத்துக்கு அப்புறம்கூட, பாலனுடைய மனசு கலையக் காணும்!'' என்று பரிகசித்தார் வேருெருவர்.

''முயற்சி செய்வோம்; வேலையைத் தொடங்குவோம். எனக்கென்னவோ நாம நாலு பேரு முதல்லே கடுமையா உழைச்சால், பிறகு எல்லாம் தன்னுலே நடக்கும்னு தோணுது'' என்ருன் பாலன்.

அன்றைக்குக் கூட்டத்தில் உடனடியாகப் பெற்ருேர் சங்கம் அமைக்க ஏற்பாடுகள் செய்வதென்றும், அடுத்த வாரத்திலிருந்து ஐந்தாவது ஆருவது வகுப்பு மாணவ மாணவியர்க்கு ஒரு மணி நேரம் அதிகமாகப் பாடம் சொல்லிக் கொடுப்பதென்றும் தீர்மானம் ஆயிற்று.

எல்லாம் முடிவாகிய பின்பு ஒரு முக்கியமான சட்டப் பிரச்னையை அவர்களுக்கு நினைவூட்டினுர் தலைமை ஆசிரியர்.

''இதெல்லாம் தோட்டப் பள்ளி நிர்வாகத் தலைவருடைய கவனத்துக்கு முதலிலே நாம கொண்டு போகணும். அவர் தடை சொல்றதுக்கு இதிலே ஒண்ணும் இல்லே. நிர்வாகக் குழுவிலே நானும் ஓர் உறுப்பினன்தான். பெரிய கிராணிதான் இதுக்கெல்லாம் தலைவர். அவர் கிட்டே ஒரு வார்த்தை சொல்லிட்டுப் பிறகு நாம வேலையைத் தொடங்கலாம்'' என்ருர் சண்முகம்.

நிர்வாகத்திடமிருந்து மேற்கொண்டு பொருளோ உதவியோ அவர்கள் எதிர்பார்க்கவில்லை. கொடுக்கப் பெற்ற ஊதியத்துக்கு அதிகமான நேரம் அவர்களாகவே உழைக்க முன் வந்திருக்கிருர்கள். பிள்ளைகளின் கல்வித் தரம் உயரப் பெற்ருேரின் ஒத்துழைப்பை நாடுகிருர்கள்; அவ்வளவுதான்; ஆகவே இதற்கு ஏதும் தடை இருக்குமென்று யாருமே நினைக்கவில்லை.

''கேட்டுச் செய்ய வேண்டியது முறைதான்; கேட்டுவிடுங்கள்'' என்ருன் பாலன்.

ஆசிரியர்கள் கூட்டம் முடிந்தது. தங்கை கமலம் பள்ளிக்கூடம் விட்டவுடனேயே மற்றக் குழந்தைகளோடு சேர்ந்து லயத்துக்குப் புறப்பட்டுவிட்டாள். மாலை நேரமாதலால் காலாற நடந்து செல்லவேண்டுமென்று தோன்றியது பாலனுக்கு. சைக்கிளைத் தள்ளிக்கொண்டே நடந்தான்.

வலதுபுறம் மேட்டில் ஒரு சின்னஞ்சிறிய அரண்மனைபோல் கம்பீரமாகக் காட்சி அளித்தது மானேஜர் துரையின் பங்களா. தோட்டமாகிய அந்தச் சாம்ராஜ்யத்துக்கு அவர்தாம் சக்கரவர்த்தி. ஐம்பது வயதுக்கும் மேலான அந்த மனிதர் ஒதுங்கியும் உயர்ந்தும் வாழ்ந்தவர். தமக்கு அடுத்த பதவியிலிருந்த ஒரு சிலரைத் தவிர, வேறு யாருடனும் அவர் நெருங்கிப் பழகுவதில்லை. அவரையொத்த தோட்டத் துரைமார்களுக்கென்று தனியே சிரம்பானில் ஒரு பொழுதுபோக்குச் சங்கம் இருந்தது. அடிக்கடி அங்கே சென்றுவிடுவார். எப்போதாவது தோட்டத்தைச் சுற்றிப் பார்க்க அவர் வருவதுண்டு. தமக்குத் தெரிந்த அரைகுறைத் தமிழில் மரம் வெட்டுவோரிடம் இரண்டு வார்த்தை பேசுவார்.

அவர் எவ்வளவு சம்பளம் வாங்குகிருர் என்பது இன்னும் பாலனுக்குத் தெரியாது; பல ஆயிரம் வெள்ளிகள் இருக்கவேண்டும்; கார் டிரைவர், தோட்டக்காரன், சமையற்காரன், வீட்டு வேலையாள் இப்படிப் பல பேர் அவரிடம் வேலை பார்த்தார்கள். அவருடைய பிள்ளைகள் இங்கிலாந்தில் வாழ்கிருர்களாம்; மனைவியும் அடிக்கடி அங்கே சென்றுவிடுவாள்; அவரைப்பற்றி அந்தத் தோட்டம் முழுவதும் அறிந்த இரகசியம் ஒன்று உண்டு. தம்முடைய சமையற்காரனின் மகளை அவர் தமக்கு வைப்பாட்டியாக வைத்திருந்தாராம். இது அங்குள்ள எல்லாருக்குமே தெரிந்த செய்தியாக இருந்தாலும் யாரும் இதைப்பற்றிப் பகிரங்கமாக வெளியில் பேசமாட்டார்கள். பெரிய துரைபற்றி யாரும் மூச்சுப் பேச்சு வைத்துக் கொள்ள முடியாது.

அடுத்துச் சற்றுத் தொலைவில் இருந்த கிராணிகளின் வீடுகளைப் பார்த்தான் பாலன். கிராணிகளில் பல வகையினர் உண்டு. தலைமைக் கிராணி, பெரிய கிராணி, சிறிய கிராணி, பால் நிறுக்கும் கிராணி, 'மஸ்டர்' கிராணி என்றெல்லாம் சொல்லுவார்கள்.

இவர்களில் இலங்கைத் தமிழர்கள், கேரளத்திலிருந்து வந்தவர்கள், தமிழ் நாட்டிலிருந்து வந்தவர்கள் ஆகியோர் கலந்திருந்தார்கள்; ஓரளவு கல்வி அறிவு படைத்தவர்கள் இவர்கள்; பால்மரக் காட்டில் நடைபெறும் பல்வேறு வேலைகளையும் மேற்பார்வை செய்வார்கள். மரத்திலிருந்து வடியும் பால் ரப்பர்த் தக்குகளாக வெளியேறும்வரை களத்து வேலைகள் இவர்கள் கண்காணிப்பில் நடைபெறும்.

மத்தியதர-நடுத்தர வர்க்கத்தார் வாழ்வது போன்ற வசதிகள் உள்ள வீடுகள் அவர்களுடைய வீடுகள். கார்கள் வைத்துக்கொள்வோரும் உண்டு; மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர் முதலிய வாகனங்கள் வைத்துக் கொள்வோரும் உண்டு. இவர்களுடைய உல

மும் அந்தத் தோட்டத்துக்குள்ளே ஒரு தனி உலகமாகத்தான் இருந்தது. மேலே உள்ள வெள்ளைத் துரையோடு இவர்களால் ஒட்ட முடிவதில்லை; கீழே உள்ள தொழிலாளர் களோடு இவர்கள் ஒட்ட் விரும்புவதில்லை.

எதிரே வரிசை வரிசையாக லயத்து வீடுகள் தென்பட்டன, கண்காணிகள், மரம் வெட்டு வோர், வெளிக் காட்டு வேலை செய்வோர், லாரி டிரைவர்கள் போன்ற பல்வகையான உடல் உழைப்பாளர்கள் வாழும் பகுதிகள் அவை: வீடுகள் எனச் சொல்வதைவிடச் சின்னஞ்சிறு கூண்டுகள் என்றே கூறவேண்டும்.

அன்றைக்கு மாலை தமிழ்த் திரைப்படம் ஒன்று காட்டப்படுவதாக இருந்ததால், முன்ன தாகவே தோட்டத்துப் பொட்டலை நோக்கி மக்கள் கூட்டம் வந்து இடம் பிடித்தவண்ணம் இருந்தது. மாதம் இரண்டு முறை அங்கே திரைப்படங்களை வரவழைத்துப் போட்டுக் காட்டுவார்கள். அது தவிர, எப்போதாவது அக்கம்பக்கத்து நகரங்களில் தமிழ்ப் படங்கள் ஞாயிற்றுக்கிழமையில் காலைக் காட்சிகளாக ஓடுவதுண்டு. பெரும்பாலான தோட்டத் தொழிலாளர்களுக்குத் தமிழ்த் திரைப்படம் ஒரு முக்கியமான பொழுதுபோக்கு.



பாலனுக்குப் பிடித்தமாக அது இருந்துங் கூட அவன் அன்றைக்குப் படம் பார்ப்ப தாக இல்லை. வழியில் அவனுடைய நண்பர்கள் பார்த்தால் வற்புறுத்துவார்கள் என்பதற் காகச் சைக்கிளில் ஏறிக்கொண்டு நேரே லயத் துக்கு விரைந்தான். அவனுடைய வீட்டில் அவன் தாயாரையும் தகப்பனுரையும் தவிர மற்றவர்கள் படத்துக்குக் கிளம்பிக் கொண் டிருந்தார்கள்.

மேல் தளத்துக்குப் போய் அறைக்குள் நுழைந்தான் பாலன். மாமன் பழனியிட மிருந்து அவன் வாங்கி மாட்டியிருந்த



கண்ணம்மாவின் புகைப்படம் மரச் சுவரில் தொங்கியது. அதை எடுத்துக்கொண்டு வெளியே வந்து நாற்காலியில் சாய்ந்தான். படத்தையே நெடுநேரம் உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

''உனக்கு நேர்ந்த கதி, உன் தாய் தகப்ப ஞருக்கு நேர்ந்த கதி, வெளியிலே தெரு வோரத்திலே குடும்பம் நடத்துறுங்களே அவங்களுக்கு நேர்ந்த கதி, இனி யாருக்குமே இங்கே நேரக்கூடாது கண்ணம்மா. உன் மேலே நான் வச்சிருக்கிற அன்பு உண்மையா இருந் தால், நீ தான் என்னேட இந்தப் போராட் டத்துக்குத் துணை செய்யணும். செய்வியா?''

படத்தில் இருந்த கண்ணம்மா பதில் அளிக் காமல் புன்னகை பூத்தாள். பாலனின் விழி களைக் கண்ணீர் திரையிட்டு மறைத்தது.

## 16. செல்வத்தின் மனச்சுமை

சின்னச்சாமி காண்டா வாளிகளைத் தூக்கிச் சைக்கிளில் முன்னும்பின்னும் மாட்டிக் கொண்டு மஸ்டர் களத்துக்குப் புறப்படத் தயாராளுன். அவன் மனைவி முனியம்மா கையில் ஒரு குழந்தையை இடுக்கிக்கொண்டு முன்பே கிளம்பிவிட்டாள். ஆயாக் கொட்ட கையில் குழந்தையை விட்டுவிட்டு, பெயர் கொடுத்தபின் அவள் வேலைக்குப் போக வேண்டும். தங்கை செல்லந்தான் மற்ருெரு குழந்தையோடு அங்கிருந்து முதலில் சிட்டாய்ப் பறந்தவள்.

அரைக்கால் சட்டையும் கிழிந்த அழுக்குப் பனியனும் பறட்டைத் தலையுமாய்க் காட்சி யளித்தான் சின்னச்சாமி. வயது நாற்பதுக்குள் தான் இருக்கும்; ஆனுலும் தோற்றத்தில் முதுமை தென்பட்டது. குழந்தைகள் கந்தப்ப னும் ராஜாத்தியும் பள்ளிக்கூடப் பைகளில் தங்கள் புத்தகங்களைத் திணித்துக்கொண் டிருந்தார்கள்.

''ஏண்டா, கூட வந்து கொஞ்சம் ஒத்தாசை பண்ணக்கூடாது?'' என்று கேட்டு மகன் கந்தப்பனைத் திரும்பிப் பார்த்தான், சின்னச் சாமி. தோட்டத்துக்கு உடன் வந்து மங்கு துடைப்பதற்காக அவன் பிள்ளைக்கு விட்ட அழைப்பு இது.

''நேத்தே வாத்தியாரு கோவிச்சுக்கிட்டா ருப்பா. உங்கிட்டே என்னைப்பத்திப் பேச ணும்னு சொன்ஞரு.''

''போ, போ! நீ போய்ப் படிச்சுக் கிளிச்சுத் தான் நாளைக்கே இந்தத் தோட்டத்துக்குக் கிராணியா வந்திடப் போறே!''

பையைத் தூக்கித் தோளில் மாட்டிக் கொண்டு, தன் தங்கையைக்கூட அழைத்துக் கொள்ளாமல், தப்பினுல் போதுமென்று அங்கிருந்து ஓட்டம் பிடித்தான் கந்தப்பன். ''டே, கந்தா! கந்தா! நில்லுடா!'' என்று அலறிக்கொண்டே அவனைப் பின்பற்றினுள் ராஜாத்தி.

நேரமாகிவிட்டதால் வாசலில் வந்து நின்ற கங்காணி, சின்னச்சாமியைப் பார்த்து வசை மாரி பொழியலானுன். நாள்தோறும் அவ னுக்கு நடக்கும் வழக்கமான அர்ச்சனை இது. தாமதமாய் எதையும் செய்வதென்பது அவ னுடைய ரத்தத்தில் ஊறிய ஒன்று. கடைசியில் ஒரு வழியாய்ச் சின்னச்சாமி சைக்கிளில்

எதிரில் அவனைத் தேடி வந்துகொண்டிருந்த மளிகைக் கடை இஸ்மாயில், ''என்ன இன்னம் சீட்டுப் பணம் வரலே?'' என்று கத்தினுன்.

''சாயங்காலம் கடைக்கு வர்ரேன்'' என்று பதிலுக்குக் கத்தியபடியே சைக்கிளை மிதித்தான் சின்னச்சாமி.

''என் கடைக்கு வர்ரேன்னு சொல்லிட்டு, கள்ளுக்கடைக்குப் போயிடப் போறே!''

சின்னச்சாமி அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை.

சின்னச்சாமி, அவன் மனைவி, அவன் தங்கை ஆகிய மூன்று பேர் உழைத்துச் சம்பாதிக்கும் குடும்பம் அது. நாலே குழந்தைகள் அவனுக்கு. ஆனுல் அவர்கள் குடும்பத்து வருமானத்தில் பாதி அளவு வருமானமே வந்த ஒரு சில குடும்பங்கள் அதே லயனில் சீரும் செட்டுமாய் வாழ்ந்தன. தோட்டத்தில் பலர் சின்னச்சாமியைப் போல் நிரந்தரக் கடனாளிகளாக உழன்ருலும் சிலர் மட்டும் பணத்தை எதற்கு, எவ்வளவு, எப்போது செலவு செய்வது என்ற வித்தையைக் கற்று வைத்திருந்தார்கள்.

மளிகைக் கடை இஸ்மாயில்தான் சின்னச்சாமிக்கு முதலாளி, பாங்கர், கடன் கொடுத்துக் காப்பாற்றும் வள்ளல் எல்லாம்! ஐந்நூறு வெள்ளிக்கு இஸ்மாயிலிடம் ஏலச்சீட்டுப் போடுவான் சின்னச்சாமி. போட்ட இரண்டாவது மாதமே மற்றவர்களோடு போட்டி போட்டுக்கொண்டு ஏலம் கேட்டு, இருநூற்றைம்பது வெள்ளிக்கு ஏலம் எடுப்பான். இஸ்மாயில் கடையில் மளிகைச் சாமான் வாங்கிய கடன் எப்போதுமே ஒரு பெருந்தொகை பாக்கி இருக்கும். அதற்கென்று நூற்றைம்பதோ நூருே வரவு வைத்துக்கொண்டு மீதத்தைச் சின்னச்சாமியிடம் கொடுப்பான் இஸ்மாயில். அந்தத் தொகையும் பத்திரமாக வீட்டுக்கு வந்து சேராது. கள்ளுத் தண்ணி, சம்சுத் தண்ணி, சிரம்பானில் உள்ள சினிமாக் கொட்டகை, ரெஸ்டாரண்டு முதலியவற்றுக்கெல்லாம் பணம் தண்ணீர்போலப் பாயும். பணம் எல்லாம் கரைந்தவுடன் அவன் மீண்டும் பழைய சின்னச்சாமியாகிவிடுவான். கிழிந்த ட்ரௌஸர், அழுக்குப் படிந்த பனியன், பறட்டைத் தலை, கள் நாறும் வாய்...

இஸ்மாயிலுக்கு எங்கோ கேரளத்துக்குப் பக்கத்தில் ஒரு கிராமமாம். சிங்கப்பூரிலும் அவனுக்குக் கூட்டாளிகள் உண்டு. தோட்டத்தில் அவன் மற்றவர்களைப் போலவே எளிமையாக வாழ்ந்தாலும், கேரளாவில் அவன் பங்களாவும் நிலபுலங்களுமாகச் சேர்த்திருப்பதாய்ப் பேசிக்கொண்டார்கள். ஏலச்சீட்டில் இஸ்மாயிலுக்குப் போட்டியாளர்கள் அங்கு இல்லாமல் இல்லை. கங்காணிகள் சிலரும் கிராணிகளின் உதவி பெற்ற சில தொழிலாளர்களும்கூட அங்கு ஏலச் சீட்டுப் பிடித்து வந்தார்கள். பணத்தை வைத்துக்கொண்டு பணம் பண்ணத் தெரிந்தவர்களுக்கும், பணத் தேவை இல்லாமல் கடைசியில் ஏலம் எடுப்பவர்களுக்கும் அது மிகவும் லாபமுள்ள ஏற்பாடு. சின்னச்சாமி போன்றவர்களுக்கோ அது தப்பித்துக்கொள்ள முடியாத இரும்பு வலை.

வேலை முடிந்து பால் நிறுத்துக் கொடுத்துவிட்டு வீட்டுக்குத் திரும்பியது சின்னச்சாமியின் குடும்பம். வந்ததும் வராததுமாய் ஒரு வாளித் தண்ணீரை எடுத்துத் தலையில் கொட்டிக்கொண்டு குழந்தைகளோடு ஒன்ருய்ச் சாப்பிட உட்கார்ந்தான் சின்னச்சாமி. சாப்பிட்டு முடிந்தவுடன் அவன் மனைவியின் கண்களில் படாமல் மெள்ள வெளியே நழுவப் பார்த்தான். முனியம்மா அவனை விடவில்லை.

வழிமறித்துக்கொண்டு, பணத்தை எடுத்துக் கீழே வைத்துவிட்டுப் பிறகு வெளியே போகச் சொன்ஞள். செல்லத்துக்கு இந்தச் சமயத்தில் அங்கே நிற்கப் பிடிக்கவில்லை. கைக்குழந்தையைத் தூக்கிக்கொண்டு மேலே புறப்பட்டு விட்டாள்.

''மூணு பேரு சம்பளத்தையும் நீயே நீட்டி வாங்கிக்கிறே! பாதிப் பணங்கூட வீட்டுக்கு வந்து சேரலேன்னு, ஏளு பேரும் எப்படிச் சாப்பிடறதாம்? ஒரு நல்ல துணிமணி கிடையாது! பிள்ளைங்களுக்கு வாய்க்கு ருசியா எதுவும் வாங்கிக் குடுக்க முடியலே! எப்பப் பார்த்தாலும் பஞ்சப் பாட்டுப் பாடுறே. எடு, பணத்தை!''

''சீட்டுக்குப் பணம் கட்டணும்; கடைச் சாமானுக்குப் பாக்கி தரணும்; கோவிந்தன் கிட்ட கடன் வாங்கியிருக்கேன்..'' அடுக்கினுன் சின்னச்சாமி.

''நீ யாரு கிட்டத்தான் கடன் வாங்கலே? ஏன் அப்படிக் கடன் வாங்கணும்னு கேக்கிறேன்? கடன் வாங்கி எங்களுக்கு ஏதும் செலவு செஞ்சியா? ராத்திரியும் பகலுமாத் தண்ணியிலே மிதந்தாக் கடன் வராம என்ன செய்யுமாம்?''

''நாக்கை அடக்கிப் பேசு! இல்லே..''

''இல்லே, நீ என்ன செஞ்சிடுவேன்னு கேக்கிறேன்? தோட்டத்துக்குள்ளே நீயும் உன்னுடை நியாயத்தை நாலு பேருகிட்டே சொல்லிப் பாரு. நானும் சொல்றேன்.''

முனியம்மாளை அடிப்பதற்காகக் கையை ஓங்கியவன் பிறகு தன்னைத் தானே ஓரளவு அடக்கிக்கொண்டான். அழுது ஊரையே கூட்டிவிடுவாள் அவள்.

''நீ மாத்திரம் இப்போ ஒழுங்காப் பணத்தை எண்ணி வைக்காமல் இருந்தே, பஞ்சாயத்திலே சொல்லி, அடுத்த மாசத்திலேருந்து எங்க சம்பளத்தை எங்ககிட்டயே கொடுத்திரச் சொல்லப் போறேன்.''

சின்னச்சாமிக்கு வேறு வழியில்லை. வலது புறத்து ட்ரௌஸர் பைக்குள் கையை விட்டுப் பணத்தை எடுத்து அவள் முன்னே வீசினுன். அவள் ஒருத்தியின் சம்பளம் மட்டும் அதில் முழுமையாக இருந்தது. மற்றதை அடுத்த பைக்குள் அவன் வைத்திருந்தான். அதிலும் அவள் எங்கே பங்கு கேட்கப் போகிருளோ என்ற பயம் அவனுக்கு வந்துவிட்டது. வேகமாக அங்கிருந்து கிளம்பினுன். நேரே இஸ்மாயிலின் கடைக்கு அவன் போகவில்லை. அங்கே போனுல் காகிதத்தில் எதையாவது கணக்கை எழுதிக் காட்டி, உள்ள பணம் முழுவதையும் அவன் பிடுங்கிக்கொண்டாலும் பிடுங்கிக் கொள்வான். ஆகவே கள்ளுக்கடையை நோக்கி அவன் கால்கள் விரைந்தன.

முனியம்மா பணத்தை எண்ணிப் பார்த்து மேலே எடுத்துக்கொண்டு போனுள். தகரப் பெட்டியில் வைத்துப் பூட்டினுள். தாலிச் சரட்டில் சாவியை மீண்டும் முடிந்துகொண்டாள். கீழே வந்து சாப்பிட்டுவிட்டு, கைக்குழந்தையை மட்டும் தூக்கிக்கொண்டு வெளியே கிளம்பினுள்.

லயத்திலே நாலு வீடு தள்ளி ஒரு வீட்டில் பெண்கள் பிற்பகலில் வழக்கமாய்க் கூடுவதுண்டு. தாயக்கட்டமோ பல்லாங்குழியோ

விளையாடுவார்கள்; அல்லது ஊர் வம்பு பேசு வார்கள். 'இந்தப் பெண்ணையும் அந்த ஆணை யும்' இணைத்துக் கதை கட்டுவார்கள். அந்தக் கதைகளில் உண்மை இருந்தாலும் இருக்கும்; அல்லது அவற்றில் சில முற்றும் கற்பனையாக வும் இருக்கக்கூடும். அதேபோல் கதைகள் அதே இடத்தில் தங்களைப் பற்றியே தங்கள் முதுகுக்குப் பின் பேசப்படுவதையும் அவர்கள் அறியாமல் இல்லை.

செல்லமும் முனியம்மாவின் மூன்றாவது குழந்தையுமே இப்போது வீட்டில் இருந்தார் கள். பள்ளிப் பிள்ளைகள் இரண்டும் தெருவுக்கு விளையாடச் சென்றுவிட்டன; மூன்றாவது குழந்தை மூன்று வயதுப் பெண் குழந்தை. மேலே அதை உறங்க வைத்துவிட்டுக் கீழ்ப் பகுதிக்கு வந்தாள் செல்லம். சாப்பிட்ட தட்டுக்கள் அப்படி அப்படியே கிடந்தன; துணிமணிகள் மூலையில் வீசி எறியப்பட்டிருந் தன. வீடு அலங்கோலமாகக் காட்சி அளித்தது. இது இந்த நேரத்தில் செல்லம் காணும் வழக்க மான காட்சிதான்.

ஒவ்வொன்றையும் ஒழுங்காக அலம்பியோ, அடுக்கியோ, மடித்தோ வைத்துவிட்டு, வாளி யில் தண்ணீரை எடுத்துக்கொண்டு, மாற்றுத் துணிகளோடு மறைப்புக்குச் சென்றாள் செல் லம். தலையில் தண்ணீர் விட்டுக்கொண்டு குளித்தாள். துவட்டிக்கொண்டு மாற்றுடைக் கோலத்தில் வெளியே வந்தாள்.

அவள் சாப்பாடு அந்த வீட்டில் கடைசிச் சாப்பாடு. சில நாட்களில் தொட்டுக்கொள்வ தற்குக் காய்கறிகள் கிண்ணத்தில் மிஞ்சியிருக் கும்; சில நாட்களில் ஒன்றும் இருக்காது. எதற்கும் அவள் முகம் சுளிப்பதில்லை. சாப் பிட்டுவிட்டுச் சிறிது நேரம் ஒய்வெடுத்துக் கொள்வாள். பிறகு சமையல் வேலையைக் தொடங்கினால் இரவு படுக்கப் போகும்வரை அங்கே இடுப்பொடிய வேலை இருக்கும்.

தனியே உட்கார்ந்து தன் சாப்பாட்டை முடித்துவிட்டுச் சாப்பாட்டுத் தட்டை அலம்பிக்கொண்டிருந்தாள் செல்லம்.

''சின்னச்சாமி வீட்டிலே இருக்காரா?''

தலையைத் தூக்கிப் பார்த்தாள் செல்லம்; அவளுடைய முகம் மலர்ந்தது. வாசலில் பாலன் நின்று கொண்டிருந்தான்.

''வாங்க சார், வாங்க!'' அருகில் கிடந்த பெஞ்சை ஒரு பக்கமாக இழுத்துப் போட் டாள்.

உள்ளே போய்ப் பெஞ்சில் உட்கார்ந்த பாலன், ''கந்தனை ஒழுங்காய்ப் பள்ளிக்கூடத் துக்கு அனுப்பச் சொல்லிச் சின்னச்சாமிகிட்டச் சொல்லிட்டுப் போகலாம்னு வந்தேன்'' என்றான்.

''அண்ணனும் அண்ணியும் வீட்டிலே இல்லே; இப்பத்தான் வெளியிலே போனாங்க. அண்ணன் வந்தா நீங்க வந்திட்டுப் போன தைச் சொல்றேன். உங்களையே வந்து பார்க்கச் சொல்றேன்.''

''யாரும் வீட்டிலே இல்லேங்கறதினாலே, கணேசன் எங்கிட்டச் சொன்ன சமா சாரத்தை நான் உன்னிடம் தாராளமாச் சொல்லலாம்: சிரம்பானிலே அவனுக்குத் தெரிஞ்சவங்க பல பேர் இருக்காங்க. எப்படி யாவது ஒரு வேலையைப் பார்த்துக்கிட்டு, அடுத்தாப்பிலே உன்னைச் சீக்கிரமாக் கல்யா ணம் செய்துக்கறதாகச் சொன்னான். கவலைப்பட வேண்டாம்னு கேட்டுக்கிட்டான்.''

செல்லத்தின் விழிகளிலும் முகத்திலும் ஒளி பொங்கியது; ஆர்வத்தோடு பாலனின் முகத்தைப் பார்த்துக்கொண்டு நின்று விட் டாள். அடுத்தாற்போல் அவன் கணேச

னைப்பற்றி ஏதேனும் சொல்லமாட்டாளா என்று ஏங்குவது தெரிந்தது.

''கணேசன் எனக்கு ரொம்பவும் வேண்டிய வன். அவன் நல்லபடியா வாழணும்கிறதிலே எனக்கும் அக்கறை இருக்கு. அவன் இங்கே அடிக்கடி வரமுடியலேங்கறதுக்காக நீ வருத்தப் படவேண்டாம். சின்னச்சாமியைப் போலே இன்னொரு அண்ணன் உனக்கு இங்கே இருக் கான்னு நினைச்சுக்கோ.''

''சின்னச்சாமியைப் போலே எனக்கொரு அண்ணன் இருக்கவே வேண்டாம்; அவரை உடன் பிறப்பிலேயே சேர்க்காதிங்க!'' என்று வெடுக்கெனப் பதில் அளித்தாள் செல்லம்.

பாலன் திடுக்கிட்டான். முன்பின் தெரி யாதவனிடமா செல்லம் இப்படிப் பேசுகிறாள்? இல்லை. அவனிடம் படித்தவள் அவள். மேலும், இப்போது அவன் அவள் காதலனின் நண்பன் என்ற முறையில் அங்கு வந்திருக்கிறான்.

''என்ன, செல்லம்?''

தான் அளவுக்கு மீறிப் பேசிவிட்டதுபோல் தன் பற்களை அவள் கடித்துக்கொண்டாள். குபீரென விழிகளில் நீர் பாய்ந்தது. தன் தலையைக் குனிந்தபடி சேலைத் தலைப்பால் கண்களைத் துடைத்துவிட்டுக் கொண்டாள்.

''இருங்க சார், காபி போட்டுக் குடுக் கிறேன்; குடிச்சிட்டுப் போகலாம்'' என்றாள் செல்லம்.

''இப்ப எனக்குக் காபி அவசரமில்லே; அதை மெதுவாக் குடிச்சுக்கறேன்'' என்ற பாலன், ''உன்னோட அண்ணன் இந்தக் கல்யாணத்துக்குத் தடை சொல்றாராமே, ஏன்?'' என்று கேட்டான்.

''என்னோட தொல்லை என்னோட இருக் கட்டும், சார்.''

''தெரிஞ்சால் என்னாலே ஏதாச்சும் உதவி செய்ய முடியுமான்னு பார்க்கலாம்.''

''யார் சொன்னாலும் அவர் கேக்கமாட்டார், கணேசுக்கு என்னைக் குடுக்கமாட்டேன்னு சொல்றது ஒரு சாக்கு. அவ்வளவுதான். நான் கல்யாணம் செய்துக்கறதே அவருக்குப் பிடிக்காது.''

மௌனமாக அவள் முகத்தை உற்றுப் பார்த்தான் பாலன். தாங்கமுடியாத வேதனை அதில் பிரதிபலித்தது. ஒல்லியாக உயரமாக இருந்தாள் அவள். வறுமை காரணமாகப் போதிய ஊட்டச் சத்தின்றி உடல்நலிவுற்றி ருப்பதுபோல் தோன்றியது. ஆனாலும் நல்ல அழகி அவள்.

''அவருக்குக் குடிப்பழக்கம் உண்டுன்னு எனக்குத் தெரியும்....'' என்றான் பாலன்.

''அவர் குடிக்கறதுக்கு அவர் சம்பாதிக் கிறது மாத்திரம் பத்தாது. அண்ணியும் நானும் வேறே அவருக்குச் சம்பாரிச்சுக் குடுக்கணும். அத்தோட குழந்தை குட்டி களைப் பார்த்துக்கறதுக்கும் வீட்டு வேலைகளைச் செய்யறதுக்கும் ஓர் ஆள் வேணும்.''

''என்ன?'' அதிர்ச்சியடைந்தான் பாலன்.

''தங்கச்சியைக் கல்யாணம் பண்ணிக் குடுத் திட்டா, ஓர் ஆள் கூலி குறைஞ்சு போகும். வீட்டிலே அடிமை வேலை செய்யறதுக்கும் ஆள் கிடைக்காது.''

''உன் அண்ணி?''

''நான் வீட்டிலே இருக்கிறதாலே அவங் களுக்கும் வசதிதான். ஒரு துரும்பை எடுத்து அந்தப் பக்கம் இந்தப் பக்கம் போடமாட் டாங்க. தோட்டக் காட்டை விட்டா அவங் களுக்குத் தாயக்கட்டம் இருக்கவே இருக்கு.''

நீண்ட பெருமூச்சு விட்டான் பாலன். சில ஆண்டுகளுக்கு முன்புவரையில் சிற்றாடை கட்டிக்கொண்ட சிறுமியாக இருந்தவள் செல்லம். இந்தச் சில ஆண்டுகளுக்குள் இவ்வளவு மனச்சுமையா இவளுக்கு?

''பெத்த தாய் உயிரோட இல்லேன்னா, ஒரு பெண் அப்புறம் வாழவே கூடாது சார்! அதுவும் இந்தமாதிரி ஒரு தோட்டக் காட் டிலே, இப்படி ஒரு துப்புக் கெட்ட அண்ணன் வீட்டிலே நான் இருக்கவே கூடாது, சார்! சரியான ஆம்பிளை ஒருத்தர் வீட்டிலே இல்லேன்னா, அந்த வீட்டுப் பொம்பளைங்களை மத்தவங்க எவ்வளவு கிள்ளுக்கீரையா நினைக் கிறாங்க தெரியுமா? வர்ரவன் போறவ னெல்லாம் முறைச்சுப் பார்க்கறது, பல்லை இளிக்கறது, கேலி பேசறது....''

தான் அதிகமாய்ப் பேசிவிட்டதுபோல் சட் டென்று பேச்சைப் பாதியில் நிறுத்திக் கொண்டு, ''இருங்க சார், காபி போட்டுக் கொண்டாரேன்'' என்று சொல்லிவிட்டு அடுப்படிக்குச் சென்றாள் செல்லம்.

உண்மையான அன்பை வாழ்வில் பெற்றி ராத அவள் உள்ளக் கதவுகள், அன்பின் தூதுவனான தன்னைக் கண்டவுடன் இயல் பாகவே திறந்துகொண்டு விட்டன என்பது பாலனுக்குப் புரியாமல் இல்லை. தோட்டத் திலே ஆண் துணையில்லாமல் வாழும் பெண்கள் அவ்வளவு பாதுகாப்போடு வாழ்வதாய்ச் சொல்ல முடியாது. சின்னச்சாமியின் துணை என்பது பேரளவுக்குத்தான் துணை போலும்! அவன் மனைவியும் அவனுடைய பலவீனத்தை ஈடு செய்யும் அளவுக்குக் குடும்பப் பொறுப்பை உணர்ந்தவளாகத் தெரியவில்லை.

செல்லம் காபி கொண்டுவந்து கொடுத் தாள். வாங்கிக் குடித்துவிட்டு, ''இவ்வளவும் கணேசனுக்குத் தெரியுமா?'' என்று கேட்டான்.

''நல்லாத் தெரியும். அவரை.... அவரை நம்பிக்கிட்டுத்தான்....நான் இன்னம் இந்த உசிரை வச்சுக்கிட்டிருக்கிறேன்....இங்கே எனக்கு ஒரு நாள் போறது ஒரு யுகம் போறாப்பிலே இருக்குன்னு மட்டும் அவர் கிட்டச் சொல்லுங்க.''

''நான் அவன் கிட்டக் கட்டாயம் சொல் றேன். உன் கிட்டேயும் நான் ஒண்ணு சொல்ல வேண்டியிருக்கு.''

''சொல்லுங்க.''

''எனக்கும் செல்லம்கிற பேரிலே ஒரு தங்கச்சி இருக்குன்னு உனக்குத் தெரியும். என்னோட சொந்தத் தங்கச்சி எப்படியோ அப்படியே நீயும் எனக்கொரு தங்கச்சிதான். உனக்கு என்ன சிரமம் இருந்தாலும் என்னோட தங்கச்சிகிட்டே சொல்லி அனுப்பு; இல்லே, வகுப்புக்குக் கந்தப்பன்கிட்டச் சொல்லி அனுப்பு. என்னோட வீட்டுக்கு வந்தும் நீ என்னைப் பார்க்கலாம். உன்னோட கவலை என் கவலைன்னு நினைச்சு, அதை என் பொறுப்பிலே விட்டுடு.''

''உங்களை இன்னிக்குப் பார்த்ததிலே எனக்கு மனசு எவ்வளவோ தைரியமா இருக்கு, சார். ஏதாச்சும் சேதி இருந்தா உங்க தங்கச்சி கிட்டே நான் சொல்லி அனுப்புறேன், சார்.''

செல்லத்தின் மனச் சுமைகளைத் தன் மனத் திலே தாங்கிக் கொண்டு அங்கிருந்து புறப் பட்டான் பாலன்.

(தொடரும்)

# பால்மரக் காட்டினிலே

அகிலன்

## 17. தயக்கமே பழக்கமென்றால்?

ஞாயிற்றுக்கிழமையாதலால் அன்றைக்குத் தோட்டவேலையும் கிடையாது; பள்ளிக்கூடமும் கிடையாது. என்றாலும் பாலன் மட்டிலும் அதிகாலையில் எழுந்து விட்டான். முதல் வேலையாக அவனுடைய தலைமை ஆசிரியர் சண்முகத்தைச் சந்தித்து, அவரைப் பெரிய கிராணியின் வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போகவேண்டும். அடுத்தாற்போல் சிரம்பானிலிருந்து அங்கு வருவதாகச் சொல்லியனுப்பியிருந்த கணேசனுடன் பேசவேண்டும்.

ஆசிரியர்கள் கூட்டத்தில் முன்பு உற்சாகத்தோடு கலந்துகொண்ட தலைமை ஆசிரியர், அவர் வாக்களித்தபடி இன்னும் பெரிய கிராணியைச் சந்தித்து அனுமதி பெறவில்லை. பாலன் அவருக்கு நினைவூட்டியபோதெல்லாம், 'இன்றைக்கு, நாளைக்கு' என்று தட்டிக் கழித்துக்கொண்டே வந்தார். பிறகுதான் அவருடைய தயக்கத்துக்கான காரணத்தை அவனால் ஊகித்துணர முடிந்தது. நல்லதைச் செய்ய வேண்டுமென்ற நினைப்புக்கோ பேச்சுக்கோ அவரிடம் எப்போதும் பஞ்சம் இல்லை. செயலில் கூடத் தாமே பிறருக்குச் செய்யக்கூடிய உதவி என்றால் அதைத் தயங்காமல் செய்துவிடுவார். ஆனால் பெரிய கிராணியைப் போய் அவர் வீட்டில் சந்தித்துப் பேசுவது என்பது அவ்வளவு எளிய காரியமாக அவருக்குத் தோன்றவில்லை. 'அவர் பெரிய பதவியிலே இருக்கிறவர்; போனா என்ன நினைச்சுக்குவாரோ? என்ன சொல்லுவாரோ?' என்ற எண்ணங்கள் அவரைக் குழப்பத் தொடங்கிவிட்டன. சமூக அந்தஸ்தில் அவர்களுக்கிடையே இருந்த ஏற்றத்தாழ்வு அவரை அப்படிப் பின்வாங்கச் செய்தது. இப்போதைக்கு அவர் லயத்து வீட்டில் வாழாவிட்டாலுங்கூட, முன்பு அங்கே பிறந்து வளர்ந்தவர். அந்தப் பழங்காலத்து எண்ணங்களின் பிடியிலிருந்து அவரால் எளிதில் விடுபட முடியவில்லை.

இதைப் புரிந்து கொண்டுவிட்ட பாலன், ''நாளைக்குக் காலையிலே நானும் வர்றேன்; நம்ப ரெண்டு பேருமே போய்ப் பேசலாம்'' என்று சண்முகத்திடம் சொல்லியிருந்தான்.

ஞாயிற்றுக்கிழமை என்பதால் வீட்டில் காலைப் பலகாரமாகத் தோசை வார்த்திருந்தார்கள். சாப்பிட்டுவிட்டுக் காபி குடித்தான். ''சிரம்பானிலேருந்து கணேசன் வருவான்; வந்தாக் காத்துக் கிட்டிருக்கச் சொல்லுங்க; தலைமை ஆசிரியரோட போய் நான் பெரிய கிராணியைப் பார்த்திட்டு வந்திடறேன்'' என்று சொல்லிவிட்டுக் கிளம்பினான்.

செம்மண் பாதையில் சைக்கிளில் போகும்போதே அவனுடைய மனம் தலைமை ஆசிரியரைப் பற்றி எண்ணிப் பார்த்தது. அவரைக் குறை சொல்லிப் பயன் இல்லை. மூத்த தலைமுறையைச் சேர்ந்தவர் அவர். தோட்டத் தொழிலாளர்களில்கூட வயது முதிர்ந்தவர்கள் பலர் அவரைப் போலவே இருந்தார்கள். ஒருவகை அச்சமும் தாழ்மை உணர்ச்சியும் தன்னம்பிக்கையின்மையும் அவர்களிடம் குடிகொண்டிருந்தன. அவற்றிலிருந்து அவர்கள் மீளத் துணியவில்லை.

பாலனைக் கண்டவுடன் சண்முகம் வேறு வழியின்றி அவனோடு கிராணியின் பங்களாவுக்குப் புறப்பட்டார். பெரிய கிராணி துரைசிங்கத்திடம் பாலனுக்கு எப்போதுமே மதிப்பு உண்டு. தொழிலாளர்களிடம் இரக்கமுள்ளவர் அவர். இலங்கைத் தமிழரான அவர் நடை உடை பாவனைகளில் முற்றும் ஆங்கிலேயராக மாறிப் போயிருந்தாலும், தம் வீட்டிலிருந்துகூடத் தமிழையும் தமிழ்க் கலாசாரத்தையும் முற்றும் விரட்டியடித்திருந்தாலும், தமிழ்த் தோட்டத் தொழிலாளர்களிடம் அவருக்குத் தனியான பரிவு உண்டு.

துரைசிங்கத்தின் பங்களா வாயிலை நெருங்கியவுடன் தலைமை ஆசிரியர் சண்முகத்துக்கு வேர்த்துக் கொட்டியது. மேல் துண்டால் முகத்தை அழுத்தித் துடைத்துக் கொண்டார். வாசலில் நின்ற வேலையாளிடம் தாங்கள் வந்திருக்கும் செய்தியைச் சொல்லி அனுப்பினான் பாலன். உள்ளே வரச் சொல்லி அனுமதி கிடைத்தது. இருவரும் நுழைந்தார்கள்.

விசாலமான வரவேற்பறையில் இரண்டு சோபாக்களும் நாலைந்து நாற்காலிகளும் கிடந்தன. பீரோக்களில் ஆங்கிலப் புத்தகங்கள். மேசைமேல் ஆங்கிலப் பத்திரிகைகள்.

''வாங்க வாத்தியார் சார், என்ன சமாசாரம்?'' என்று கேட்டுக்கொண்டே அறையிலிருந்து வெளியில் வந்தார் துரைசிங்கம். தயக்கத்தோடு நின்றுகொண்டிருந்தவர்களை நாற்காலிகளில் உட்காரச் சொன்னார். தாமும் உட்கார்ந்துகொண்டார். நரையோடிய கிராப்புத் தலை; அரைக்கைச் சட்டை; இடுப்பில் ஒரு கைலி; ஆள் வாட்டசாட்டமாக இருந்தார்.

சண்முகத்தால் அவரிடம் தாங்கள் வந்த நோக்கத்தைத் தெளிவாக எடுத்துக் கூற முடியவில்லை. ஏதோ சில வார்த்தைகள் தொடர்பில்லாமல் பேசி வைத்தார். கடைசியில் பாலனே அவருக்குக் கை கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

''நாங்களும் எங்களாலே முடிஞ்சவரையிலே பிள்ளைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துப் பார்க்கிறோம். ஆனால் இது மட்டும் போதாது. வீட்டிலேயும் அவுங்க படிக்கறதுக்கான சூழ்நிலை ஏற்படணும். அதுக்காகப் பெற்றோர் சங்கம் ஏற்படுத்தி ஏதாவது செய்யலாமான்னு பார்க்கிறோம். அத்தோட 'ரிமூவ்' வகுப்புக்குப் போகிற பிள்ளைகளுக்குப் பள்ளிக்கூடத்திலேயே தனியா ஆங்கிலப் பாடம் சொல்லித் தரலாம்னு ஒரு யோசனை....''

துரைசிங்கம் மௌனமாகப் பாலனின் முகத்தை உற்றுப் பார்த்தார். தோட்டத் தொழிலாளர்களிடம் கூட்டுறவுச் சங்கம் ஏற்படுத்த அவன் முயன்றபோதே அவனைப் பற்றிய செய்திகள் அவருக்கு ஓரளவு கிடைத்திருந்தன. அதை அப்படியொன்றும் தவறான முயற்சி என்று அவர் எடுத்துக்கொள்ளவில்லை. 'துடிப்புள்ள பிள்ளைதான்' என்று முடிவு செய்து கொண்டார்.

''நீ சொல்றதும் முக்கியமான பிரச்னைதான்'' என்றார், துரைசிங்கம்; ''தோட்டத்திலே பிறக்கிற எல்லாக் குழந்தைகளுக்குமே இங்கே வேலை கொடுத்திட முடியாது. எதிர்காலத்திலே இங்கே பிழைக்கணும்னா தமிழ் மட்டும் படிச்சால் பத்தாதுதான்.''

''தமிழே படிக்காமலும் இருக்கக்கூடாதுங்களே! நம்மோட மொழி, கலாசாரம், சமய உணர்வு இவ்வளவும் இப்போ தோட்டப் புறங்களில்தான் அதிகமாக் காப்பாத்தப்படுதுன்னு நான் நினைக்கிறேன்'' என்றான் பாலன்.

சண்முகத்துக்குத் தூக்கிவாரிப் போட்டது. தமிழை அறவே புறக்கணித்துவிட்டு முற்றும் ஆங்கில மோகத்தில் மூழ்கியிருப்பவர் முன்னிலையிலா ஒருவன் இப்படி இங்கிதம் இல்லாமல் பேசுவது? துரைசிங்கம் என்ன சொல்லப் போகிறாரோ என்று அஞ்சினார் தலைமை ஆசிரியர்.

துரைசிங்கம் சிரித்தார். ''பாலா, நீ சொல்றது நூத்துக்கு நூறு உண்மைதான். பிழைப்பைப் பார்த்தால் தமிழைப் பார்க்க முடியலே; தமிழைப் பார்த்தால் பிழைப்பைப் பார்க்க முடியலே. நாங்கள்ளாம் இங்கே ரெண்டுங்கெட்டான் வாழ்க்கை வாழ்ந்துகிட்டிருக்கோம். யாரையாவது நல்ல வாத்தியாரை வச்சுக் குழந்தை குட்டிகளுக்காவது இனிமேல் தமிழ் கத்துக் கொடுக்கணும்னு

''நீங்க எப்பச் சொன்னாலும் நானே வந்து சொல்லிக் கொடுக்கிறேன்'' என்றார் சண்முகம்.

துரைசிங்கம் தம்முடைய பதவி அந்தஸ்து முதலியவற்றை மறந்துவிட்டு இந்த அளவுக்கு மனந் திறந்து பேசியதால், தாங்கள் வந்த காரியத்தில் வெற்றி கிட்டும் என்ற எண்ணம் அப்போதே இருவருக்கும் ஏற்பட்டது.

அந்தச் சமயத்தில்தான் தோட்டத் தொழிலாளர்களால் 'டாக்டர்' என்று அழைக்கப்படும் 'டிரெஸ்ஸர்' மாதவன் அங்கு வந்து சேர்ந்தார். தோட்டத்து மருத்துவ மனையின் தலைவர் அவர். 'கம்பவுண்டர்' பயிற்சியைப் போன்ற ஒரு வகைப் பயிற்சி பெற்றவர். சாதாரண நோய்களுக்கு மருந்து கொடுப்பது, நோய்வாய்ப்பட்ட தொழிலாளர்களுக்கு விடுமுறை கிடைக்கச் சான்றிதழ் அளிப்பது போன்ற வேலைகள் அவருடையவை.

''ஹலோ சார்! ஏதாச்சும் முக்கியமான பேச்சுக்கிடையிலே நான் குறுக்கிட்டேனா?'' என்று கேட்டுக்கொண்டே வந்து துரைசிங்கத்தின் அருகில் உட்கார்ந்தார் மாதவன். மாநிறம்; ஒல்லியான உருவம்; நடுத்தர உயரம்; வயது நாற்பது இருக்கும் மாதவனுக்கு.

அவரை அங்கே கண்டவுடனேயே பாலனின் மனம் துணுக்குற்றது. வந்தவரும் சும்மா இருக்கவில்லை. அவர்கள் அங்கே வந்த காரணத்தைப்பற்றித் தாமாகவே துரைசிங்கத்திடம் தூண்டித் துருவிக் கேள்விகள் போடலானார். துரைசிங்கத்திடம் அவருக்கு இருந்த நெருக்கம் தோட்டத்தில் எல்லோருக்கும் தெரியும்.



செய்தியைத் துரைசிங்கத்திடம் கேட்டு விட்டு, ''பாலனைப்பத்தி உங்களுக்குத் தெரியுமா? அசகாயசூரன்! பார்த்தால் சின்னப் பிள்ளைன்னு நினைச்சிடப் போறீங்க! பக்கத்துத் தோட்டத்தையே விலைக்கு வாங்கிடணும்னு திட்டம் போட்டவன்!'' என்றார். பிறகு பாலனிடம் திரும்பி, ''என்ன பாலா, ஒரு வாரத்திலே சங்கத்துக்காக நீ எத்தனையோ ஆயிரம் வெள்ளி சேர்த்திட்டேன்னு சொன்னாங்களே? நம்ம ஆளுங்கிட்டே உனக்கு நல்ல செல்வாக்குத்தான்!'' என்று அவனைப் பாராட்டுவதுபோல் பாராட்டி, அவனைப்பற்றி மறைமுகமாகத் துரைசிங்கத்துக்கு எச்சரிக்கை செய்து வைத்தார் மாதவன்.

துரைசிங்கம் ஏதுமே பேசாமல் சிறிது நேரம் யோசனை செய்தார்.

''ஏற்கனவே இங்கே ஒரு தொழிலாளி சங்கம் இருக்கு. நீ பாட்டுக்குப் பெற்றோர் சங்கம்கிற ஒரு போட்டிச் சங்கம் ஏற்படுத்தினா என்ன செய்யறது?'' என்று கேட்டார் மாதவன்.

''பள்ளிக்கூட ஆசிரியர்கள் என்ற முறையிலே பிள்ளைகளோட எதிர்காலத்துக்குத்தான் நாங்க கவலைப்படறோம்'' என்று கூறினான் பாலன்.

''பெத்தவங்களுக்கே இல்லாத கவலை மத்தவங்களுக்கு எதுக்கு? படிக்கிறவன் படிக்கிறான்; மங்கு துடைக்கிறவன் மங்கு துடைக்கிறான், விட்டுத்தள்ளுங்க!'' என்றார் மாதவன்.

அவருடைய குறுக்கீடு பெரிய கிராணியின் மனத்தை மாற்றியிருக்கவேண்டும்.



துரைசிங்கம் நாற்காலியிலிருந்து எழுந்த படியே, "சரி, நீங்க சொன்ன விஷயத்தைப் பத்தி நான் பெரியதுரை கிட்டே பேசுறேன்; அவர் என்ன சொல்றாரோ அப்படியே செய்திடலாம்" என்று சொல்லி, இருவருக்கும் விடை கொடுத்தனுப்பினார்.

நேரடியாக மறுப்பைத் தெரிவிக்க மனம் இல்லாமல்தான் துரைசிங்கம் இப்படி நாகரிகமாகப் பதில் அளிக்கிறார் என்பதைப் பாலன் புரிந்துகொண்டு விட்டான். வழக்கமாக நிதானம் தவறிப் பேசாத தலைமை ஆசிரியர் சண்முகத்துக்குக்கூட அப்போது கோபம் வந்துவிட்டது. வெளியே வந்த பிறகு, "வெண்ணெய் திரண்டு வர்ற நேரம் பார்த்து, இந்தச் சகுனிப் பயல் மாதவன் குறுக்கே புகுந்திட்டான்; தாழியை உடைச்சுட்டான்" என்று தமக்குள் முணுமுணுத்துக் கொண்டு வந்தார்.

பெரிய கிராணியின் பங்களாவிலிருந்து சாலைக்கு வந்தவுடன் தலைமை ஆசிரியர் தம் வீட்டுக்குப் புறப்பட்டார். பாலன் சைக்கிளில் ஏறிக்கொண்டு லயத்தை நோக்கி மிதித்தான். வழியில் ஒரு மரத்தடியில் அவனுக்காகக் கணேசன் காத்துக்கொண்டிருப்பது தெரிந்தது. சைக்கிளை விட்டுக் கீழே இறங்கி நடந்தான்.

"வீட்டுக்குப் போய்த் தேடிட்டு வர்றியா?"

"ஆமா" என்ற கணேசன், "பெரிய கிராணி கிட்ட என்ன வேலை? இந்தத் தோட்டத்து 'மன்மதன்' கூட அங்கே வந்துக்கிட்டிருந்தானே?" என்று கேட்டான்.

மாதவனுக்கு அந்தத் தோட்டத்து இளைஞர்கள் சிலர் சூட்டிய பெயர் அது. அங்கே வேலை செய்யும் அழகான பெண்களிடம் மாதவனுக்கு உள்ள சபலம் எப்படியோ வெளியில் தெரியத் தொடங்கிவிட்டது. பகிரங்கமாக யாரும் அவரைப் பகைத்துக் கொள்ள முடியாது. தங்களுக்குள் இரகசியமாகப் பேசிக் கொள்ளும்போது இந்தப் பெயரில்தான் அவரைக் குறிப்பிடுவார்கள்.

பெரிய கிராணியின் வீட்டில் நடந்த செய்திகளைக் கூறினான் பாலன். பேசிக்கொண்டே இருவரும் நடந்து சென்றார்கள்.

எதிரில் நாலைந்து பேர் உரத்த குரலில் பேசிக்கொண்டு வருவது தெரிந்தது. வந்தவர்களில் இரண்டு மூன்று பேர் வயதில் முதியவர்களான கங்காணிகள், இரண்டு மூன்று பேர் மரம் வெட்டும் தொழிலாளர்களான இளைஞர்கள். தோட்டத் தொழிலாளர் சங்கத்தைப் பற்றி அவர்கள் தங்களுக்குள் வாதாடிக் கொண்டு வந்தார்கள்.

"இதோ, பாலன் வந்துக்கிட்டிருக்கார்; அவரையே கேட்போம்" என்றான் ஓர் இளைஞன்.

"ஆமா, கணேசும் வந்திருக்கு; சங்கத்திலே பொறுப்பான ஆளா இருந்தவர் கணேசு" என்றான் அடுத்தவன்.

அடிக்கடி அங்கே மூத்த தலைமுறைக்கும் இளம் தலைமுறைக்கும் சிறு சிறு சச்சரவுகள் ஏற்படுவது உண்டு. அப்போதெல்லாம் தங்களுக்குத் துணையாக அந்தத் தோட்டத்து இளைஞர்கள் பாலனை அழைத்துக்கொள்வார்கள்.

"மாரியம்மன் கோயில்லே உட்கார்ந்து பேசலாமே!" என்று அவர்களை அழைத்தான் பாலன்.

கோவில் மண்டபத்துக்குப் போய் எல்லாரும் உட்கார்ந்தார்கள். அவர்களுக்குள்ளே எழுந்த போராட்டத்துக்கான காரணம் தெரிந்தது. நாடு முழுவதும் பரவியிருந்த பெரிய தோட்டத் தொழிலாளர் சங்கம் ஒன்றைச் சேர்ந்தவர்கள் அவர்கள். அந்தத் தோட்டத்துக்கான கிளைச் சங்கத்தின் பொறுப்பில் இருந்தவர்கள்.

இன்னும் இரண்டு நாட்களில் நிர்வாகத்தில் உள்ளவர்களை அவர்கள் சந்தித்துப் பேசுவதாக இருந்தது; அதற்கான கோரிக்கைகள் தயாரிப்பதில் அவர்களுக்குள் ஏற்பட்ட பூசல் இது.

"நாங்க வந்து ரெண்டு முக்கியமான கோரிக்கையை இந்தக் கூட்டத்திலே வைக்கணும்னு சொல்றோம். இவங்க இதையெல்லாம் வாய்விட்டுக் கேக்கறத்துக்கே நடுங்கறாங்க" என்றான் இளைஞர்களில் ஒருவன்.

"என்ன கோரிக்கை?"

"இந்தத் தோட்டத்திலே பல இடங்களுக்கு மின்சாரம் வந்திருக்கு. 'லயத்து வீடுகளுக்கும் வெளிச்சம் போடுங்க; அதுக்கான கட்டணத்தை மாசம் மாசம் கழிச்சுக்குங்க'ன்னு சொல்றோம். இது ஒண்ணாவது கோரிக்கை. இன்னொண்ணு, பொதுவா எல்லாரும் சாயங்காலம் வந்து படிக்கிறாப்பிலே ஒரு நூல் நிலையம் கட்டித் தாங்கன்னு கேக்கிறோம். இது ரெண்டாவது கோரிக்கை. இவ்வளவுதான் சங்கதி. கேக்க வேண்டியதைக் கேட்டால்தானே கிடைக்கும்? கேக்கறத்துக்கே இப்படிப் பயந்து சாகலாமா?"

"கூலி வேலை செய்யறவங்க 'எலக்டிரிக்' வெளக்குக் கேட்டா, துரைமாருங்க என்ன நினைச்சுக்குவாங்க? இளங்கன்று பயமறியாதுன்னு சொல்றாப்பிலே, இந்தப் பிள்ளைங்க தான் கேக்கறாங்கன்னா, நாங்களும் இதுக்கு உடந்தையாக இருக்கலாமா?" — இது கங்காணிக் கிழவரின் கேள்வி. அவர்தாம் அந்தத் தோட்டத்துச் சங்கத்துக்கு அங்குள்ளவர்களால் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்!

கணேசனுக்கு இதைப் பார்த்து அழுவதா சிரிப்பதா என்று தெரியவில்லை. தோட்டத் தொழிலாளர்களின் மத்திய சங்கம் வலிமையான சங்கந்தான். அதன் உதவியால் பல நன்மைகள் காலப் போக்கில் தொழிலாளர்களுக்குக் கிடைத்திருக்கின்றன. ஆனாலும் அங்கங்கே தோட்டப் புறங்களில் இருந்த அதன் கிளைகளில் அதன் முழுமையான செல்வாக்குப் படியாதபடி பார்த்துக் கொண்டது, தோட்டத்தின் நிர்வாகம். சங்கத் தேர்தல் என்று வரும்போது எப்படியோ நிர்வாகத்தின் ஆட்களான பழைய தலைமுறையைச் சேர்ந்தவர்கள் சிலர் அதில் வெற்றி பெற்றுவிடுவார்கள்.

"ஐயா பெரியவரே, நான் சொல்றதைக் கொஞ்சம் தயவு செஞ்சு கேளுங்க" என்றான் கணேசன்; "உங்க காலமெல்லாந்தான் காட்டுக்குள்ளே இருட்டிலே பாம்பு, பல்லி, பூரானோடே போராடியாச்சு; உங்க புள்ளை குட்டிகளாச்சும் பத்திரமா இருக்கக்கூடாதா? விளக்கடியிலே உக்காந்து நாலெழுத்துப் படிச்சு அவுங்க முன்னுக்கு வரக்கூடாதா?"

"எப்படி இதைப் போய்ப் பெரியவங்க கிட்டே நாம கேக்கிறது? கேட்டாத் தப்பா நினைச்சுக்கமாட்டாங்களா? இல்லே, கேட்டவுடனேதான் குடுத்திரப் போறாங்களா?" என்றார் கங்காணிகளில் ஒருவர்.

"நீங்க கேக்க வேண்டாம்; எங்களைப்போல உள்ள பிள்ளைங்க கேக்கட்டும்" என்றான்

பாலன்; "கொடுக்கிறுங்களோ இல்லையோ, கேக்கறத்துக்குக்கூட நாம பயப்படக்கூடாது."

"அவுங்க கேட்டாலும் எங்கமேலேதான் பழியைப் போடுவாங்க. நாங்க சொல்லிக் குடுத்ததா நினைச்சுக்குவாங்க."

"இதிலே அவங்களுக்குச் செலவு ஒண்ணும் ஆகாது. தோட்டதுக்கு வந்திருக்கிற மின் சாரத்தை லயத்துக்கும் சேர்த்து நாம் போடச் சொல்றோம். ஆகிற செலவை நாமே மாசமாசம் கட்டப் போறோம். சாதாரண மாக நடக்கக்கூடிய காரியம் இது."

அந்தக் கங்காணிகளால் இதையெல்லாம் புரிந்து கொள்ளவே முடியவில்லை. இந்தக் காலத்து இளம் பிள்ளைகளின் போக்கே அவர் களுக்கு அபாயகரமாகத் தோன்றியது. 'எலக் டிரிக் விளக்காம், நூல் நிலையமாம், பத்திரிகை படிக்கிறார்களாம்.... எல்லாம் காலத்தின் கோளாறு.'

கடைசியாக எப்படியோ அவர்களை இளைஞர் களின் கோரிக்கைகளுக்கு இணங்கச் செய்து விட்டு அங்கிருந்து புறப்பட்டார்கள், பாலனும் கணேசனும். முணுமுணுத்துக் கொண்டே அவர்களும் ஒரு வழியாக ஒப்புக் கொண் டார்கள்.

"நல்ல காரியத்தைச் செய்யக்கூடத் தயங்க றது, பயப்படறது. இதுவே ஒரு வழக்கமாகப் போச்சு" என்று சலித்துக் கொண்டான் கணேசன்.

"அடிப்படைக் காரணம் அறியாமைதான். இந்த அறியாமைக் கெதிரான போராட் டத்தை நமக்குள்ளே நாம் எல்லா முனைகளிலே இருந்தும் நடத்தணும். லயத்துக்கு விளக்கு வந்திட்டாப் படிக்கிற பிள்ளைகளுக்குக்கூட வசதியா இருக்கும். அதைக் கேட்டு வாங்கற துக்குக்கூட இப்படிப் பயப்படறாங்க, தயங்க றாங்க. கடமையைச் செய்யத் தெரியலே; உரிமையைப் பெத்து வாழத் தெரியலே" என்று கூறிப் பெருமூச்சு விட்டான் பாலன்.

மரத்தடி நிழல் படர்ந்த சாலையில் அவர்கள் பேசிக்கொண்டே நிதானமாக நடந்தார்கள். குழந்தைகளின் படிப்பைப் பற்றிய தன் னுடைய முயற்சி அப்போதைக்குத் தோல்வி அடைந்ததால், ஒருபுறம் அந்தக் கவலை பாலனை அரித்துக் கொண்டுதான் இருந்தது. எனினும் கணேசனின் வரவால் ஓரளவு ஆறுதல் அவனுக்குக் கிடைக்காமல் இல்லை.

தோட்டத்தின் சூழ்நிலை என்றும்போல் இயற்கை அழகைப் பொழிந்துகொண் டிருந் தது. திரும்பிய பக்கமெல்லாம் பசுமை உமி ழும் ரப்பர் மரங்கள். அவற்றினூடே அங்கங்கே கதிரொளி பாய்ந்த வண்ணம் இருந்தது. காற்றும் இதமான காற்று.

"நீ வரப்போற சேதியைச் செல்லத்துக்குச் சொல்லியனுப்பியிருக்கேன். எங்க வீட்டுக்கே அது வந்திடும்" என்றான் பாலன்.

கணேசனின் விழிகளில் மகிழ்ச்சி பொங் கியது. நன்றியோடு தன் நண்பனைப் பார்த் தான்.

## 18. பெண்மை பெற்ற தண்டனை

பாலனும் கணேசனும் நன்றாகச் சாப்பிட்டு விட்டு மேலே அறைக்குப் போனார்கள். பாயை விரித்துப் போட்டு மரச் சுவரில் சாய்ந்து கொண்டு உட்கார்ந்தார்கள். "சிரம்பானிலே நீ என்ன செய்துக்கிட்டிருக்கே? ஏதாச்சும் வேலை கிடைச்சதா?" என்று கேட்டான் பாலன்.

"ஒரு பெட்ரோல் பங்கிலே சீக்கிரமா வேலை கிடைச்சிடும். என்னோட சிநேகிதருக் குத் தெரிஞ்ச ஒருத்தர் அதை நடத்தறார்; அதோட, கார்களைப் பழுது பார்க்கிற ஒரு சின்ன 'ஒர்க்ஷாப்'பும் அவருக்கு இருக்குது; அந்த வேலையைக் கத்துக்கறதுக்கும் முடி யும்னு நினைக்கிறேன்."

"ஏதாவது ஒரு தொழிலைக் கத்துக்கற துக்கு வாய்ப்புக் கிடைச்சா அதை விட்டு டாதே. உனக்குத்தான் கார்கூட ஓட்டத் தெரியுமே!"

"தோட்டத்தோட சம்பந்தம் இல்லாத தொழிலா இருக்கேன்னுதான் எனக்குக் கவலை" என்றான் கணேசன்.

"அந்தக் கவலை உனக்கு வேண்டாம்; அதை என்னிடம் விட்டுடு. எப்படியாவது சிரமப்பட் டுக் காரைப் பழுது பார்க்கிற தொழிலை நீ கத்துக்க. கையிலே தொழில் இருக்கிறதாலே தான் சீனர்கள் கஷ்டப்பட்டு உழைச்சு முன் னுக்கு வர்றாங்க. நம்ம காலாலே நாம நிக்கற துக்குக் கத்துக்கணும்."

இந்தச் சமயத்தில் அங்கே பாலனின் தங்கை யும் செல்லமும் வந்து சேர்ந்தார்கள். சிறிது நேரம் அங்கே தங்கி விட்டுப் பாலனின் தங்கை கீழ் வீட்டுக்கு இறங்கிச் சென்றாள்.

கணேசனைக் கண்ட செல்லத்தின் விழிகளில் மகிழ்ச்சியும் துயரமும் ஒன்று கலந்திருந்தன. ஒரு விநாடி அவனைப் பார்த்துவிட்டுத் தன் தலையைக் குனிந்து கொண்டாள். எதுவுமே அவள் பேசவில்லை.

"சரி. நீங்க தனியாப் பேசிக்கிட்டிருங்க. நான் வர்றேன்" என்று எழுந்திருக்கப் போனான் பாலன்.

"வேண்டாம் சார்; உட்காருங்க" என் றாள் செல்லம். அப்போது அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தது.

கணேசனும் பாலனின் கரத்தைப் பற்றி இழுத்து அவனைத் தன் அருகில் இருத்திக் கொண்டான். செல்லம் மௌனமாகவே சிறிது நேரம் தன் முழங்காலில் தலையைச் சாய்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவளுக்குள் பொங்கிய உணர்ச்சிக் குமுறல்கள் அவளைப் பேசவிடவில்லை.

"எனக்கு இன்னம் ஒரு வாரத்திலே வேலை கிடைச்சிடும். அதுக்கப்பறம் ஒரு ரெண்டு மூணு மாசம் நீ பொறுத்துக்கிட்டாப்போதும். உன்னோட அண்ணன் என்ன சொன்னாலும் நாம் கவலைப்பட வேண்டாம். எப்படியாவது நான் உன்னைக் கல்யாணம் செய்துக்கறேன்" என்றான் கணேசன்.

அவன் பேசுவதை அவள் உற்றுக் கேட் டாளே தவிர, அதன் பிறகும் அவள் வாய் திறக்கவில்லை.

"என்ன செல்லம், நீ இப்ப எப்படி இருக்கே?" என்று கேட்டான் கணேசன். செல்லம் பதில் சொல்லும் நிலையில் இல்லை. உள்ளுக்குள் ஏதோ ஒரு போராட்டம் அவ ளுக்கு.

அவளுடைய தயக்கத்தைப் புரிந்துகொண்ட பாலன், "நீங்க கொஞ்ச நேரம் பேசிக்கிட் டிருங்க; இதோ நான் சீக்கிரம் வந்திடு றேன்" என்று சொல்லிவிட்டு அங்கிருந்து கிளம்பினான்.

சிறிது நேரம் சென்றது.

கணேசன் மெல்லச் செல்லத்தின் அருகில் நகர்ந்து சென்று அவள் கரத்தைப் பற்றினான். பற்றிய கரத்தைச் செல்லம் விடவில்லை. மௌனமாக விம்மி விம்மி அழுதாள். அப்படியும் அவளுடைய துயரம் தீர்ந்த பாடில்லை.

"செல்லம் என்ன இது?"

"இப்ப எனக்குத் தண்டனை கிடைச்சிருக்கு."

"தண்டனையா?"

"ஆமா. வடக்குமேட்டிலே மரம் வெட்டச் சொல்லி என்னோட வேலையை இப்ப மாத்தியிருக்காங்க. மேட்டிலே ஏறி ஏறி இறங்கறதுக்குள்ளே என்னோட காலெல்லாம் வீங்கிப் போயிடுது. வைத்தியம் செஞ்சுக்கறதுக்கு ஆஸ்பத்திரிக்குப் போறதுக்கும் பயமாயிருக்கு. இஸ்மாயில் கடையிலே தைலத்தை வாங்கித் தேச்சுக்கிட்டு வேலைக்குப் போயிட்டு வந்துக்கிட்டிருக்கேன்."

அந்தத் தோட்டத்தின் வடக்குமேடு என்ற பகுதி தொலைதூரத்தில் இருக்கிறது. குத்துச் சரிவாக உயர்ந்திருக்கும் அந்த மேட்டில் ஏறியும் இறங்கியும் பால்மரம் வெட்ட வேண்டும். சமதரையில் நானூறு மரங்களுக்குப் பட்டை சீவும் அதே நேரத்தில் மேட்டுக் காட்டில் முந்நூறு மரங்களைக்கூடக் கவனிக்க முடியாது. ஒவ்வொரு நாளும் அதிகமான நேரம் வேலை செய்யாவிட்டால் அந்த வேலையைச் செய்து முடிக்க முடியாது. மரங்களும் முற்றிப் போன மரங்கள்! பால் கொடுக்காத மரங்கள். பால் நிறையும் அவ்வளவாகத் தேறுது. நிறைக்குத் தகுந்தபடி கூலியைக் கணக்கிடுவதால் கூலியும் குறைவாகத்தான் கிடைக்கும். வேலையோ கடினமான வேலை! கூலியோ குறைந்த கூலி.

வழக்கமாகப் பெண்களை அந்தப் பகுதிக்கு அனுப்ப மாட்டார்கள். கிராணிகளை எதிர்த்துப் பேசுகிற ஆண் தொழிலாளர்களுக்கோ, பணிவில்லாமல் நடந்து கொள்வதாகக் கருதப்படுகிற இளைஞர்களுக்கோ வடக்குமேட்டுப் பணி கிடைக்கும்.

ஒரு காலத்தில் வெள்ளைக்கார ஆட்சி பயங்கரமான குற்றவாளிகள் என்ற பட்டம் சூட்டி எப்படிச் சில இந்தியர்களை அந்தமான் தீவுக்கு அனுப்பியதோ அதே போல் விக்டரி எஸ்டேட் இப்போது தனக்குப் பிடிக்காதவர்களை வடக்கு மேட்டுக்கு அனுப்பிக் கொண்டிருந்தது.

வடக்கு மேட்டைப்பற்றிக் கணேசனுக்கும் நன்றாகத் தெரியுமாதலால், செல்லம் சொன்ன சேதியைக் கேட்டு அவன் நிலைகுலைந்து போனான். தோட்டத்தின் எல்லையில் இருந்த அந்தப் பகுதியை அடுத்துப் பயங்கரமான காடு ஒன்று மண்டிக் கிடந்தது. பட்டப் பகலிலேயே இருள் மண்டிக் கிடக்கும் பிரதேசம். யார் யாரை என்ன செய்தாலும் ஒருவரும் ஒன்றும் தெரிந்துகொள்ள முடியாது.

"என்ன நடந்திச்சு? எதுக்காக இப்படிச் செய்தாங்க?"

"உங்ககிட்ட எப்படிச் சொல்றதுன்னு எனக்குத் தெரியலே."

"சொல், செல்லம்!"

"அதை நினைக்கிறதுக்கே எனக்கு அருவருப்பா இருக்கு."

கணேசன் அவளிடம் மன்றாடிக் கேட்டான். நடப்பைத் தெரிந்து கொண்டால் தன்னால் முடிந்ததைச் செய்வதாகச் சொன்னான். அவன் நெடுநேரம் கெஞ்சிக் கேட்ட பிறகு அவள் தன் வாயைத் திறந்தாள்.

"முந்தியே நான் உங்க கிட்ட அந்த மாதவனைப் பத்திச் சொல்லியிருக்கேன்; உடம்பு சொகமில்லேன்னு அவன்கிட்ட மருந்து கேக்கப்போனா, அவன் நடந்துக்கறது சரியில்லேன்னு, சொல்லியிருக்கேன். எல்லாம் அவனாலே வந்த வினைதான்."

கணேசனின் முகம் சிவந்தது. பயங்கரமாக உருட்டி விழித்தபடி, "உங்கிட்டேயே அவன் தன்னோட கைவரிசையைக் காட்ட வந்திட்டானா? இருக்கட்டும், அவனோட எலும்பை நான் முறிக்கலே, என்பேரு கணேசனில்லே!" என்று குமுறினான்.

"அவனோட எலும்பை முறிச்சிட்டு நீங்க ஜெயிலுக்குப் போயிடுவீங்க. கண்ணம்மா மாதிரி நான் தூக்குப் போட்டுக்கிட்டுச் சாகணும். சரியாப் போயிடுமா? இதுக்குத் தானே உங்ககிட்டச் சொல்றதுக்கே நான் நடுங்கறேன்?"

"சரி, நடந்ததை மறைக்காமல் சொல்."

"உடம்புக்கு மருந்தும், லீவுச் சூருவும் கேக்கறதுக்காக ஒருநாள் ஆஸ்பத்திரிக்குப் போனேன். எல்லாரையும் அனுப்பிட்டு என்னை ரொம்ப அக்கறையாக் கவனிக்கிறாப்பிலே கவனிக்க வந்தான். நெஞ்சிலே அவன் கையை வச்சு அழுத்த வந்தப்ப நான் அதைத் தட்டிவிட்டு, வெளியே ஓடிவரப் பாத்தேன். 'மருந்தும் வேண்டாம், சூருவும் வேண்டாம்' என்று சொன்னேன். அவன் என்னை வழி மறிச்சு, 'வைத்தியம் பண்றதைத் தப்பா நினைச்சுக்கப் படாது'ன்னான். அப்பறம்.... அப்பறம்.."

"என்ன நடந்திச்சு?"

"அவனோட வீட்டு அம்மா ஊருக்குப் போயிருந்தாளாம். வீட்டைப் பெருக்கிச் சுத்தப்படுத்தணுமாம். அன்னைக்கி விளக்கு வச்சப்பறம் அவன் வீட்டுப் பக்கம் என்னைத் தனியா வரச் சொன்னான். எதுக்கு வரச் சொன்னான்கிறதை நான் புரிஞ்சுக்கிட்டேன்."

"நீ என்ன சொன்னே?"

"இந்தச் சென்மத்திலே நீங்க நினைக்கிறது எங்கிட்டே நடக்காதுன்னேன். வரமாட்டேன், முடியாதுன்னேன். லீவுச் சூரு வேண்டாம்னேன். அப்ப அவன் என்னை ஒண்ணும் செய்யலே. மருந்தையும் சூருவையும் கையிலே குடுத்து அனுப்பிட்டான். பின்னாலே அவன் யார்கிட்ட என்ன சொன்னானோ தெரியாது. அடுத்த வாரத்திலேருந்து என்னை வடக்கு மேட்டுக்கு மாத்திட்டாங்க. ஒவ்வொரு நாளும் உசிரு போய் உசிரு வந்துக்கிட்டிருக்கு."

"வேலை செய்யற இடத்திலே உனக்கு ஏதாச்சும் தொல்லை இருக்கா?"

"உடம்புத் தொல்லையைத் தவிர இப்போ வேறே ஒண்ணும் தொல்லை இல்லே. பாலன் சாரோட அண்ணன் முத்துவையும் அங்கே தான் போட்டிருக்காங்க. யாரையோ அது எதிர்த்துப் பேசிருச்சாம். அதனாலே எனக்கு முந்தியே அதை அங்கே அனுப்பிச்சிட்டாங்க. தன்னோட வேலையை முடிச்சிட்டு, அது எனக்கும் உதவி செய்ய வருது. அது அவுங்களுக்குத் தெரிஞ்சா என்ன செய்வாங்களோ தெரியாது."

"இப்பவே நான் போய் அந்த மன்மதன் கிட்டே எச்சரிக்கை செய்யலாம்னு பாக்க றேன்; அவனோட லீலையை நிறுத்திக் காட்டி..." பற்களைக் கடித்தான் கணேசன்.

"நீங்க போனீங்கன்னு, இப்பவே என்னையும் தோட்டத்தை விட்டு வெளியே அனுப்பிச்சிரு வாங்க. என்னையும் கூட்டிக்கிட்டு நீங்க வெளியே போறதுன்னு இதைச் செய்யுங்க. நாளையிலேருந்து உங்களை இந்தத் தோட்டத் துக்குள்ளேயே விடமாட்டாங்க. பின்னாலே நடக்கப் போறதையும் கொஞ்சம் யோசனை செஞ்சு பார்த்துக்குங்க."

கணேசனுக்கு அந்த நிலையில் உடனடியாக என்ன செய்வதென்று புரியவில்லை. உள்ளங் கால் முதல் உச்சித் தலைவரை அவனுக்குப் பற்றி எரிந்தது. சிரம்பானில் அவனுடைய தாயாரை அவன் தன்னுடைய நண்பனின் வீட்டில் விட்டிருந்தான். முதலில் வேலை கிடைக்க வேண்டும்; அடுத்து வீடு கிடைக்க வேண்டும். அது வரையில் செல்லத்தை அவ னோடு அழைத்துக்கொள்வது என்பது முடியாத காரியம். அவளை இங்கு விட்டு வைப்பது என்பதோ அதைவிட ஆபத்தானது. மன்மதன் இதோடு செல்லத்தை விட்டுவிட மாட்டான். இந்த விஷயத்தில் அவளுடைய அண்ணனோ அண்ணியோ அவளைச் சிறிதும் காப்பாற்ற முன்வரமாட்டார்கள். அவர்களால் அது முடியவும் முடியாது. அவளுடைய குடும்பச் சூழ்நிலையை நன்றாகத் தெரிந்து கொண்டுதான் அவன் செல்லத்திடம் வாலாட்டியிருக்கிறான். இருதலைக்கொள்ளி எறும்புபோல் சிறிது நேரம் துடித்துவிட்டுச் செல்லத்துக்கு ஆறுதல் அளிக்க முயன்றான் கணேசன்.

"இந்தச் சமயத்திலே முத்து அங்கே வேலைக்கு வர்ரது உனக்கு ஒரு பாதுகாப் புன்னு வச்சிக்க. நான் இதைப் பத்திப் பாலன் கிட்டேயும் முத்துகிட்டேயும் பேசுறேன். இங்கேருந்து அங்கே படிக்கறதுக்கு வயத்திலே ருந்து துரைன்னு ஒரு பிள்ளை தினசரி வந்துக் கிட்டிருக்கான். பள்ளிக்கூடத்துக்குப் போற வழியிலேதான் என் சிநேகிதரோட கடையும் இருக்கு; பெட்ரோல் பங்கும் இருக்கு. அவசரமான சங்கதின்னு கடுதாசி கொடுத் தனுப்பு, நானும் அனுப்பறேன்."

"எப்படியாச்சும் என் பல்லைக் கடிச்சுக் கிட்டு, என்னோட மானத்தையும் உசிரையும் காப்பாத்திக்கறதுக்கு நான் முயற்சி பண்றேன். ஆனால் ரொம்ப நாளைக்கு என்னாலே இந்த இம்சையைத் தாங்க முடியாது. நான் உசிரை விட்டாலும் விடுவேனே தவிர, மானத்தை விட்டுறமாட்டேன். பால்மரம் சீவுற கத்தி என்னோட கையிலே இருக்கிறவரைக்கும் என்னை அவன் ஒண்ணும் செஞ்சிட முடியாது. நீங்க ஒண்ணுக்கும் கவலைப்படாதிங்க."

செல்லத்துக்கு அவள் வீட்டிலிருந்து கால் வயிற்றுக்குக்கூடச் சரியான சோறு கிடைப்ப தில்லை என்பது அவளுடைய மெலிந்த தோற்றத்திலிருந்து தெரிந்தது. அண்ணன் குடிகாரன்; அண்ணி ஊதாரி; வேலையோ அவள் உடல் நிலையால் ஈடு கொடுக்க முடியாத கடுமையான வேலை. காட்டு வேலைக்கு மட்டும் அல்ல; வீட்டு வேலைக்குமே அவள் ஈடு கொடுக்க வேண்டும். அங்கும் அவள் ஓர் அடிமை; இங்கும் அடிமை. இப்படியெல்லாம் இருந்துங்கூட அந்த அநாதைப் பெண்ணிடம் தென்பட்ட ஒரு வைரம் பாய்ந்த நெஞ்சு, அவளிடம் கணேசன் வைத்திருந்த மதிப்பை நூறு மடங்காக உயர்த்தியது.

"செல்லம், நான் மிகவும் புண்ணியம் செஞ்சவன்; இல்லேன்னு நீ எனக்குக் கிடைச் சிருக்க மாட்டே. உன்னிடம் இப்படி ஒரு நெஞ்சுறுதி இருக்கிறவரைக்கும் உனக்கு யாரும் கெடுதல் செய்திட முடியாது. மனசு தான் ரொம்பச் சக்தி உள்ளதுன்னு சொல் வாங்க; அந்தச் சக்தி உங்கிட்ட இருக்கு. எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரம் உன்னை நான் அழைச்சுக்கிட்டுப் போறேன்."

அவன் கரங்கள் இரண்டையும் பற்றித் தன் கண்களில் பதித்துக்கொண்டு, "சீக்கிரமா எனக்கு இந்த நரகத்திலேருந்து விடுதலை தேடித் தந்திடுங்க. என்னாலே தாங்க முடியலே; தாங்கவே முடியலே!" என்று விம்மினாள் செல்லம்.

(தொடரும்)

---

## இருவரும் ஒருவரல்ல!

சென்ற இதழ்க் கலைமகளில் வெளிவந்துள்ள 'ஆனை பூசித்த தலம்' என்ற கட்டுரையில், திருவானைக் காவல் தர்மகர்த்தாவாக இருந்த சதாசிவ தீட்சிதரும், கரூர் பக்கத்தி லுள்ள நெரூரில் சித்தி அடைந்த சதாசிவப் பிரமேந்திரரும் ஒருவரே என்று எழுதியிருக் கிறது. அது சரி அல்ல.

சதாசிவ தீட்சிதர் கன்னடக்காரர்; மைசூர் சமஸ்தானக் கவிஞர், வேத விற்பன்னர், மந்திர சாஸ்திர நிபுணர். ஒருசமயம் மைசூர் அரசர், திருவானைக் காவல் அகிலாண் டேசுவரியைத் தரிசிக்க வந்தபோது, இவரும் வந்திருந்தார். மைசூர் அரசரை வரவேற்க, மதுரை நாயக்கர் வந்திருந்தார். அவருக்குப் புத்திரப் பேறு இல்லை. மைசூர் அரசரின் உத்தரவுப்படி, இந்தச் சதாசிவ தீட்சிதரே மதுரை நாயக்க அரசருக்குப் பஞ்சதசாக்ஷரி உபதேசம் செய்தார். அதனால் அவருக்குப் புத்திரப் பேறும் உண்டாயிற்று.

மகிழ்ச்சியடைந்த மதுரை நாயக்க அரசர், சதாசிவ தீட்சதரையும் அவர் வம்சத்தின ரையும் பாரம்பரியமாகத் திருவானைக்காவல், மதுரை, ராமேசுவரம் கோயில்களின் தர்ம கர்த்தாவாக நியமித்தார். தீட்சிதருக்கு 360 செய் நிலமும் மான்யமாக அளித்தார். அவர் களுக்குப் பல்லக்கு, யானை, குதிரை முதலிய பல விருதுகளும் இருந்தன. திருவானைக் காவல் அர்ச்சகர்களுக்கு ஆசாரிய அபிஷேகத் தீட்சை செய்யும் உரிமையும், அம்மனுக்கும் சுவாமிக்கும் அர்ச்சனை செய்யும் பாத்தியதை யும் தீட்சிதர்களுக்கு இருந்தன. இவைபற்றிய கல்வெட்டும் கோயிலில் இருக்கிறதாம்.

கால மாறுபாட்டாலும் ஸ்ரீகண்ட தீட்சிதர் காலத்தில் ஏற்பட்ட விவகாரங்களினாலும், சொத்து, பதவி, அந்தஸ்து எல்லாம் போய் விட்டன.

தீட்சிதர் வம்சத்தில் இப்போது சுப்பிரமணிய தீட்சிதர் என்று ஒருவர் திருச்சி மலைக் கோட்டையில் இருக்கிறார்.

—வி. வேங்கடராமன், திருவானைக்கோவில்




## 19. முருகனின் தேனிலவு

கோலாலம்பூரிலிருந்து அதிகாலை வேளையில் புறப்பட்டு மலேசியாவின் மேற்குக் கடற்கரையை ஒட்டிய உள்நாட்டுப் பகுதியில் வடக்கு நோக்கி ஒரு கார் விரைந்துகொண்டிருந்தது. கார் புத்தம் புதிய கார்; அப்போதுதான் அமெரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட கார். செம்பொன் நிறத்தில் வர்ணம் பூசப்பட்ட அதன்மேல் காலை இளம் சூரியனின் ஒளி பட்டுக் கண்ணைப் பறித்துக்கொண்டிருந்தது.

சாலையோ அகன்று பரந்த நெடுஞ்சாலை. கார்கள் போவதற்கு ஒருபுறமும் வருவதற்கு ஒருபுறமும் ஒதுக்கப் பெற்றிருந்ததால், விபத்தைப் பற்றிச் சிறிதும் கவலைப்படாத வேகம், அந்தச் சாலையில் ஓடிய கார்களிடம் தென்பட்டது. சாரிசாரியாகத் தலைநகரத்திலிருந்தும் தலைநகரத்தை நோக்கியும் கார்கள் பறந்தவண்ணம் இருந்தன.

வடக்கு நோக்கிச் சென்றுகொண்டிருந்த கார் 'ஏர் கண்டிஷன்' செய்யப்பெற்ற கார். அதற்குள்ளே பொருத்தியிருந்த 'ரெகார்டரி'லிருந்து தமிழ்ச் சினிமா இசை காருக்குள் பொங்கி வழிந்தது. இடது கரத்தில் 'ஸ்டியரிங்கை'ப் பற்றியபடியே காரை ஒட்டிக்கொண்டு வந்தான், பாலனின் அண்ணன் முருகன். காரின்முள் அறுபது மைலுக்கும் எழுபது மைலுக்கும் இடையில் நர்த்தனமாடிக் கொண்டிருந்தது. அவன் அருகில் 'சீட்'டில் சாய்ந்தபடி வந்துகொண்டிருந்தாள் அவனுடைய இளம் மனைவி ராதா. அவளிடமிருந்து கமழ்ந்து வந்த 'இன்டிமேட்' சென்டின் நறுமணம் முருகனை என்னவோ செய்துகொண்டிருந்தது.

காருக்குள் பின் இருக்கையில் இரண்டே இரண்டு பெட்டிகள் மட்டும் கிடந்தன; அவற்றில் அவர்களுக்கான மாற்றுடைகள், வாசனைத் திரவியங்கள், கைச் செலவுக்கு இரண்டாயிரம் டாலர்கள் எல்லாம் இருந்தன.

முருகன் - ராதா தம்பதியரின் தேனிலவுப் பயணம் இது.

மலேசியத் தீபகற்பத்துக்கே உரிய இயற்கையின் பேரழகு அந்த வழியெங்கும் இருமருங்கிலும் கொள்ளை கொள்ளையாய்க் கொட்டிக் கிடந்தது. இயற்கை எழிலை ரசித்துப் பழகியவர்களுக்கென்றால் இரண்டு கண்கள் போதவே போதா. வழி நெடுகிலும் அங்கங்கே நெடிதுயர்ந்த காட்டு மரங்கள், ரப்பர் மரங்கள், தென்னைகள், வாழைகள், லாலான் புதர்கள், எல்லாம் காட்சியளித்தன.

திரும்பிய பக்கமெல்லாம் குன்றுகள், மலைகள், சிற்றாறுகள், பேராறுகள்; பசுமை, பசுமை! 'மாதம் மூன்று மழையுள்ள நாடு' என்று அதைச் சொன்னால் போதாது. ஆண்டுக்கு மூன்று மாதமே அங்கு மழை குறைவாகப் பெய்யுமாம். மற்ற மாதங்களில் நினைத்த போதெல்லாம் மழை. ஆனால் அடை மழை இல்லை. உடனுக்குடனே வெயில்; ஆனால் சுட்டெரிக்கும் வெயில் இல்லை. எப்போதும் இதமான காற்று; ஆனால் பேய்க் காற்றில்லை. இயற்கைத் தேவனும் தேவியும் தங்களது ஆனந்த மனோலயத்தின் உச்சக் கட்டத்தில் இருந்த வேளையில் படைக்கப்பட்ட பிரதேசம் போலும் எழிலார்ந்த அந்த மலேசியப் பிரதேசம்!

அத்தகையதோர் ஆனந்த மனோலயந்தன்னில் இருக்க வேண்டியவர்கள்தாம் முருகனும் ராதாவும். முருகன்கூட அப்படித்தான் இருந்தான். அவனுடைய அன்றைய எல்லை வட கோடிக் கடற்கரையை ஒட்டியிருந்த பாங்கோர் என்ற தீவு. சுற்றிலும் கடலால் சூழப்பட்ட பசுங்குன்றுகள் நிறைந்த அந்தச் சிறு தீவின் நவீன வசதிகள் நிறைந்த ஓர் ஓட்டலில், முன்பே அவன் தங்களுக்கென்று ஓர் அறையை ஒதுக்க ஏற்பாடு செய்திருந்தான். நடுப்பகல் உணவை ஈப்போ நகரத்தில் முடித்துக்கொண்டு, அங்கு ஓர் ஓட்டலில் தங்கிச் சிறிது ஓய்வெடுத்துக்கொண்டு, மாலைப் பொழுதுக்குள் பாங்கோர்த் தீவை அடைந்துவிட வேண்டும்.

ஆனால் ராதாவின் முகபாவத்திலிருந்தோ, காரில் அவள் சாய்ந்துகொண்டு வந்த விதத்திலிருந்தோ, அவளுடைய விழிகளிலிருந்தோ அவளுடைய மன நிலையை முருகனால் சரியாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. ஒன்று மட்டும் அவனால் ஊகிக்க முடிந்தது. புதுமணப் பெண் ஒருத்தி தேனிலவுப் பயணத்தின்போது எவ்வளவு உற்சாகத்துடன் இருப்பாளோ அப்படி அவள் இருக்கவில்லை. நகரத்தைத் தாண்டியவுடன், தன் வலக் கரத்தால் 'ஸ்டியரிங்கை'ப் பற்றியபடியே இடக் கரத்தால் அவள் கழுத்தை வளைத்துத் தன் அருகே அவளை இழுக்க முயன்றான் முருகன்.

சட்டென்று அவன் கையை உதறிவிட்டு, "ரோட்டைப் பார்த்துக் கவனமாகக் காரை ஓட்டுங்க; நடுத்தெருவிலே நம்ப ரெண்டு பேரும் செத்துக் கெடந்தா அது ரொம்ப அவமானமாப் போகும்" என்று சுருக்கென்று தைக்கும்படி கூறினாள் ராதா. தேனிலவுப் பயணத்தின்போது தன் கணவனிடம் அவள் பேசிய முதல் பேச்சு இது.

பிறகு காரின் சன்னலோரத்துக்கு விலகி வந்து தன் பார்வையை வெளியே அலைய விட்டு வந்தாள் ராதா. இயற்கை அழகில் நெஞ்சைப் பறி கொடுத்துப் பரவசம் அடையும் இயல்பு அவளிடம் இருந்துங்கூட, அப்போதைக்கு ஏனோ அவளால் அப்படி இருக்க முடியவில்லை. முருகனும் அவளிடமிருந்து சவுக்கடிபட்டது போன்ற உணர்ச்சியுடன், 'கல்யாணமானதிலிருந்தே என்னமோ இவளுக்கு 'மூட்' சரியில்லே; பாங்கோர்த் தீவிலே போய்த்தான் இவளைச் சரிப்படுத்தணும்' என்று நினைத்துக்கொண்டான்.

சிரம்பான் நகரத்துக் காபிக் கடை ஒன்றின் முன்னால் காரை நிறுத்திவிட்டு, இருவரும் கடைக்குள் நுழைந்து, காலைச் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு திரும்பினார்கள். கார் மீண்டும் புறப்பட்டது.

"அடுத்தாப்பிலே வர்ர எஸ்டேட்டிலே தானே உங்கப்பா கிராணியா இருக்கார்? உங்கப்பா அம்மா எல்லாரையும் எனக்குப் பார்க்கணும்போலே இருக்கு. எஸ்டேட்டுக்குள்ளே காரை விடுங்க. எட்டிப் பார்த்திட்டுக் கால்மணி நேரத்திலே திரும்பிடலாம்."

தூக்கி வாரிப் போட்டது முருகனுக்கு. பதற்றத்தோடு அவளை முறைத்துப் பார்த்தான்.

"முதல்லே காரோட வேகத்தைக் கொஞ்சம் குறைங்க. உங்களோட விக்டரி எஸ்டேட்டுக்குப் போயிட்டுத்தான் நாம இன்னிக்கி மேலே போகப் போறோம்."

"அங்கே போனா எங்கப்பாவோ அம்மாவோ நம்மோட முகம் கொடுத்துப் பேசமாட்டாங்க. அப்பறம் நம்ம பயணத்தோட நோக்கமே கெட்டுப் போகும். நமக்கு வரவேற்பு இருக்காதுங்கறது மட்டுமில்லே; நம்மோட சந்தோஷத்தையே அவுங்க நிச்சயம் குலைச்சிடுவாங்க."

"என்னைப்பத்தி நீங்க கவலைப்பட வேண்டாம். அவங்களாலே அவமானம் ஏற்பட்டா அதை நான் தாங்கிக்குவேன்" என்று 'அவங்களாலே' என்ற சொல்லுக்கு அழுத்தம் கொடுத்துப் பேசினாள் ராதா.

முருகன் காரின் வேகத்தைக் குறைக்க விரும்பவில்லை. வழியில் விக்டரி எஸ்டேட் நெருங்கிக்கொண்டிருந்ததே காரணம்.

"மெதுவாப் போங்கோ! எஸ்டேட் வந்தவுடனே காரை நிறுத்துங்க. இல்லேன்னா நான் கதவைத் திறந்துக்கிட்டுக் கீழே குதிச்சிடுவேன்."

காரின் வேகம் குறைந்தது. ராதா கவனமாக எஸ்டேட் வாயில் முகப்பை உற்றுப் பார்த்துக்கொண்டு வந்தாள். முருகனுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. முகத்தை அடிக்கடி அழுத்தித் தேய்த்துக் கொண்டான். வேறு வழியாகப் பாங்கோர்த் தீவுக்குப் போகவும் முடியாது.

எஸ்டேட்டுக்குள் போய் அவன் பெற்றோரைச் சந்திப்பது என்பது அவனைப் பொறுத்த மட்டில் தற்கொலை செய்துகொள்வதற்குச் சமமானது. போகாவிட்டாலோ அவள் தற்கொலை செய்துகொள்வதாகப் பயமுறுத்துகிறாள். இதற்கு என்ன செய்வது? எஸ்டேட் வாயில் நெருங்கியவுடன், சற்றுத் தொலைவிலேயே அவளுக்குக் காரில் இருந்தபடி சுட்டிக் காட்டினான்.

வாயில் முகப்பு வழியே நடுத்தர வயதைத் தாண்டிய நாலைந்து தொழிலாளர்கள் வெளியில் வந்துகொண்டிருந்தார்கள். பரட்டைத் தலைகள்; அழுக்குப் படிந்த பனியன்கள்; கந்தலான அரைக்கால் சட்டைகள். சிலருக்குக் கால்களில் செருப்பு இல்லை.

வந்தவர்களில் ஒருவன் எதிர்ச்சாரியில் நின்ற புதுக் காரை வெறித்துப் பார்த்துவிட்டு, அதன் அருகே விரைந்து வரத் தலைப்பட்டான். முருகனால் அதற்கு மேலும் அங்கே தங்க முடியவில்லை. ஏதோ நடுக்காட்டில் மத யானையைக் கண்டுவிட்டவன்போல், கைகால்கள் உதறலெடுக்கக் காரை மிக வேகமாக விரட்டினான். எண்பது மைல் வேகத்தில் பறந்தான். தோட்டக் காட்டிலிருந்து வந்தவன் காருக்குள் முருகனைப் பார்த்துவிட்டு, "ஏண்டாப்பா, நம்ப வீரப்பன் மகன் முருகன்தானே நீ? உங்கப்பன்கூட இப்ப மரம் வெட்டிக்கிட்டுத்தான் இருக்கும்; நீ பார்க்கலியா?" என்று கேட்டுவிட்டால் என்ன செய்வது? தான் ஒரு கிராணியின் மகன் என்றல்லவோ அவன் ராதாவிடம் சொல்லி வைத்திருக்கிறான்?

"ஏன், இப்படி ஒரு கூலியைக் கண்டு நீங்க பயப்படறீங்க?" என்று கேட்டாள் ராதா. அதற்கு மேலும் அவள் தன் பிடிவாதத்தில் ஆர்வம் காட்டவில்லை.

"அவன் வந்து எங்கப்பாகிட்ட.... எங்கப்பாகிட்ட..." என்று தடுமாறினான் முருகன். மிகப் பெரிய கண்டத்திலிருந்து அப்போதைக்குத் தப்பிவிட்ட உணர்ச்சி அவனுக்கு.

ராதா தன் ஓரக்கண்களால் அவனைக் கவனித்துக்கொண்டு வந்தாள். வேர்த்து வேர்த்துக் கொட்டியது அவனுக்கு. வழுவழுப்பான மிருதுவான இருக்கையில் அமர்ந்தபடி அவன் கார் ஓட்டுவதாகத் தெரியவில்லை. முள் விரிப்பின்மேல் உட்கார்ந்திருப்பவன் போல் காணப்பட்டான். அவனிடம் ஓரளவு இரக்கம்கூட ஏற்பட்டது ராதாவுக்கு. இனியும் அவனிடம் ஏதும் முரட்டுத்தனமாகப் பேசினால், அவனால் கார் விபத்து ஏற்பட்டாலும் ஏற்பட்டு விடும். ஆகவே அவள் அமைதியாக வருபவள் போல் நடித்துக்கொண்டு வந்தாள்.

குளுமையான காற்றை அள்ளி வீசும் 'ஏர் கண்டிஷன்' சாதனம்; அவர்கள் வழக்கமாக விரும்பிக் கேட்கும் இன்னிசை; வெளியில் திரும்பிய திசைகளிலெல்லாம் கொள்ளை அழகு; வேகமோ மணிக்கு அறுபது மைலுக்கும் மேல். அவர்களுக்கும் கல்யாணமாகி இன்னும் ஒரு வாரங்கூட ஆகவில்லை. இருந்தும கூட ஏனோ இருவரும் இரு வேறு போராட்டங்களில் அப்போது உழன்றுகொண் டிருந்தார்கள்.

ஒரு வழியாக ஈப்போ நகரம் வந்தது. மேலை நாட்டுப் பாணியில் அமைந்திருந்த பெரியதோர் ஓட்டலை நாடி அவர்கள் சென்றார்கள். முன்னதாகவே தொலை பேசியில் முருகன் சொல்லியிருந்ததால் அவர்களுக்கு அங்கே அறை தயாராக இருந்தது. எல்லா வசதிகளும் நிறைந்த முதல்தரமான அறை. இரண்டு பெரிய பெரிய கட்டில்கள், மெத்தைகள். அறைக்குள் நுழைந்தவுடன் முதல் வேலையாக அங்கிருந்த குளிர் சாதனப் பெட்டியைத் திறந்து பார்த்தான் முருகன். பலவகையான மேல்நாட்டு மதுவகைப் புட்டிகள் அதற்குள் தயாராக அடுக்கப்பட்டிருந்தன. பிராந்தி, விஸ்கி, ஜின், ஒயின், பீர் - இன்னும் எத்தனையோ வகைகள்.

ராதா குளியல் அறைக்குள் புகுந்து இளஞ் சூட்டில் வெந்நீர் வரும்படி குழாயைத் திருகி விட்டுக்கொண்டு குளிக்கலானாள். குளித்து முடித்துவிட்டு அவள் வெளியில் வருவதற்குள் பிராந்திப் புட்டியில் கால்பகுதியைத் தீர்த்துவிட்டான் முருகன்.

"நீயும் வர்ரியா?" என்று அவளையும் அழைத்தான்.

"எனக்கு இப்போ ஒண்ணும் வேண்டாம். சாப்பிட்டுக் கொஞ்சம் படுத்துத் தூங்கணும் போலே இருக்கு."

"தூங்கணுமா?" வியப்போடும் வெறியோடும் ராதாவைப் பார்த்தான் முருகன்.

"ஆமா, உடம்பு ஒரே அசதியாக இருக்கு. கொஞ்ச நேரம் தூங்கிட்டு, உடனே கிளம்ப வேண்டியதுதான்" என்றாள் ராதா.

சாப்பாட்டு ஹாலுக்குப் போய் இருவரும் சாப்பிட்டு விட்டுத் திரும்பினார்கள். ராதா வந்து படுக்கையில் விழுந்தாள். கூடவே வந்து அவள் கட்டிலின் விளிம்பில் உட்கார்ந்தான், முருகன். மெல்ல அவளுடைய கரத்தைப் பற்றுவதற்கு முயற்சி செய்தான். தேளால் கொட்டப்பட்டதுபோல் வெடுக்கென்று தன் கரத்தை உதறிக்கொண்டாள் ராதா. முன்பின் தெரியாத அந்நியனைப் பார்ப்பதுபோல் அவனை வெறித்துப் பார்த்தாள்.

"ராதா!"

"பேசாமல் உங்களோட கட்டில்லே போய்ப் படுத்துத் தூங்குங்க."

உரிமையுடன் அவள் அருகே மேலும் நெருங்கினான் முருகன்.

"நான் சொன்னது புரியுதா உங்களுக்கு? எழுந்திரிங்க! இப்போ எனக்கு உடம்பும் சரியில்லே, மனசும் சரியில்லே."

"நான் சொல்றதைக் கேள், ராதா!"

"போங்க. மரியாதையாச் சொன்னா, சொன்னதைக் கேட்டுக்குங்க"

இதற்குமேல் அவளருகில் நெருங்கவோ அவளைத் தீண்டவோ முருகனுக்குத் தெம்பு இல்லை. அளவுக்கு மீறிய முரட்டுச் சுபாவமுள்ளவள் அவள். அவளுடைய அப்பாவின் செல்லப் பெண். 'மரியாதை' என்ற ஒரு சொல்லை அவள் பயன்படுத்திய பிறகும் அவளிடம் உரிமை கொண்டாடினால், அந்த மரியாதை கெட்டுவிடும் என்பது அவனுக்குத் தெரியாததல்ல.

இருந்தாலும் அவனால் இந்த அவமானத்தைத் தாங்கிக்கொள்வது சிரமமாக இருந்தது. "கல்யாணத்துக்கப்புறம் தேனிலவுக்குன்னு வந்திட்டு ஒருத்தி இப்படியா நடந்துக்குவா!"

வசதிகள் நிறைந்த அந்த அறையின் தனிமை, அங்கே விரிக்கப் பெற்றிருந்த படுக்கைகள், அறையில் மாட்டப் பெற்றிருந்த படங்கள், சற்று முன்பு அவனுக்குள்ளே சென்று அவனுடைய நாடி நரம்புகளில் சூடேற்றிய மதுயாவும் சேர்ந்து அவனைச் கிறங்க வைத்தன. ஆனாலும் அவன் அவளிடம் பயந்தான். தேனிலவு பாலைவனச் சூரியனாக மாறிப் போய்த் தன்னைச் சுட்டுப் பொசுக்கிவிடுமோ என்ற கிலி அவனை ஆட்டிப் படைத்தது.

"தயவுசெய்து நான் சொல்றதைக் கொஞ்சம் கேள், ராதா!"

"என்னத்தை இனிமே புதுசாக் கேக்கிறது? கல்யாணத்துக்கு முந்தியே நீங்க சொன்னதையெல்லாம் நம்பித்தான் நான் சீரழிஞ்சு போயிட்டேனே!—இப்ப, நான் சொல்றதை நீங்க கேளுங்க: என்னைத் தொடாதிங்க!" பெண் புலியாய்ச் சீறினாள் ராதா.

குளிர்சாதனப் பெட்டிக்குள் வரிசை வரிசையாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பாட்டில்கள் அவனைத் தங்களிடம் அழைத்தன. அப்போதைக்கு அவற்றிடம் தஞ்சம் புகுவதைத் தவிர அவனுக்கு வேறு வழி புலப்படவில்லை. கண்ணாடிக் குப்பியில் ஊற்றி ஊற்றி உறிஞ்சலானான். முகம் வேர்த்தது. கண்கள் சிவந்தன. எழுந்து வந்தான். நடை தள்ளாடியது. அப்படியே வந்து அங்கே கிடந்த தனிப் படுக்கையில் குப்புறச் சாய்ந்தான்.

## 20. பாங்கோர்த் தீவில்..

ஈப்போ ஓட்டலில் இரண்டு மணி நேரம் கூடச் சரியாக அவர்கள் தங்கவில்லை. அவர்கள் புறப்பட்டபோது ஓட்டலின் பணியாள் வந்து, மதுப்புட்டிகளில் குறைந்திருந்த பானங்களின் அளவைக் கணக்கெடுத்துக் கொண்டான். தங்கியது, சாப்பிட்டது, குடித்தது எல்லாவற்றுக்குமாகச் சேர்த்து எழுபது வெள்ளிக்குமேல் பில் வந்தது. கொடுத்து விட்டு ராதாவுடன் காருக்கு வந்தான் முருகன்.

எதையோ நினைத்துக் கொண்டு இந்த ஓட்டலுக்கு ஏற்பாடு செய்திருந்தான் அவன். இதற்குப் பதிலாக ஈப்போவில் எங்காவது ஒரு சாப்

பாட்டுக் கடையில் சாப்பிட்டிருக்கலாம். மரத் தடியில் காரை நிறுத்திக் காரில் இருந்தபடியே சற்று ஒய்வெடுத்துக் கொண்டிருக்கலாம். ஐந்து வெள்ளிகூடச் செலவாகியிருக்காது.

தேனிலவுக்காக ராதாவின் அப்பா அவனுக்கு ஆயிரம் வெள்ளி கொடுத்திருந்தார். தானும் வசதியுள்ளவன் என்று காட்டிக் கொள்வதற் காக ஓரிடத்தில் ஆயிரம் வெள்ளி கடன் வாங்கி யிருந்தான் முருகன். கார் மட்டும் ராதாவின் அப்பாவால் அவர்களுக்கு வாங்கிக் கொடுக்கப் பட்டது.

வழியில் சாலையோரங்களில் மலாய் மக்கள் வாழும் கிராமங்களான கம்பங்கள் சில குறுக் கிட்டன. தங்கள் கிராமங்களில் விளைந்த பழங் களைத் தெருவோரத்துக் கடைகளில் கொண்டு வந்து வைத்து அவர்கள் விற்பனை செய்தார்கள். கூரை வேய்ந்த பெட்டிக் கடைகளில் ரம்புத் தான், மங்குஸ்தான், டொரியான் முதலிய பழங்கள் ஏராளமாய்க் காணப்பட்டன.

ரம்புத்தான் பழம் என்றால் ராதாவுக்கு உயிர். பசுமையும் ரத்தச் சிவப்பும் கலந்த வெல்வெட் போன்ற தோலால் மூடப்பட்ட பழம் அது. கோழி முட்டையின் வடிவத்தில் ஒரு கொத்தில் பத்துப் பதினைந்து பழங்கள் இலைகளினூடே காணப்படும். கடைகளில் அவற்றைக் கொத்துக் கொத்தாகத் தொங்க விட்டிருந்த காட்சி கண்கவரும் காட்சியாக இருந்தது.

ஒரு கடையினருகில் காரை நிறுத்தி ஐந் தாறு கொத்துக்களை வாங்கி ராதாவிடம் கொடுத்தான் முருகன். ராதாவும் மறுக்காமல் அவற்றை வாங்கிக் கொண்டாள். கார் தொடர்ந்து புறப்பட்டது. மேலே உள்ள வெல்வெட் போன்ற சதைப் பகுதியை நகத்தால் கீறி, எளிதில் உள்ளே நுங்கு போல் காட்சியளிக்கும் சுளையை எடுத்து விடலாம். வாயில் போட்டால் தன்னால் கரைந்துவிடும். ஒரு வகையான நறுமணமும் இனிய சுவையும் கொண்ட பழம் அது. ராதா இயந்திர கதியில் பழங்களைக் கீறிச் சாப்பிட் டுக் கொண்டே வந்தாள். தனக்கும் அவள் கீறிக் கொடுக்க வேண்டுமென அவன் எதிர் பார்த்தான். அவன் காரோட்டிக் கொண்டு வந்ததால், பழத்தின் சுளையை எடுத்து அவனு டைய வாயில்தான் அவள் போடவேண்டும்.

"எனக்கும் கொஞ்சம் ரம்புத்தான் தர்ரியா?" என்று கேட்டான் முருகன்.

எப்படி அதைக் கொடுக்கவேண்டுமென்று அவன் எதிர்பார்க்கிறான் என்பது ராதா வுக்குத் தெரியாமல் இல்லை. அதைப் புரிந்து கொள்ளாதவள்போல் ஒரு கொத்துப் பழத்தை எடுத்து முகத்துக்கு எதிரே நீட்டினாள்.



''பழத்தைச் சாப்பிட்டுவிட்டு அப்புறம் கார் ஓட்டுங்களேன்! இல்லே, நான் கொஞ்ச நேரம் கார் ஒட்டட்டுமா?''

அவள் கொடுத்ததை இடது கரத்தால் வாங்கி ஒரு பக்கமாக வைத்து விட்டு முன் போலவே அவன் காரை ஓட்டி வந்தான். அவளிடம் அதற்குமேல் எதுவுமே அவன் பேச வில்லே. இப்படி 'இவ திடீர்னு மாறிப் போன துக்கு என்ன காரணம்? என்னோட பிறப்பு வளர்ப்பைப்பத்தி யாரும் இவகிட்ட சொல்லி யிருப்பாங்களா? அதனுலேதான் எஸ்டேட்டுக் குப் போகணும்னு வீம்பு பண்ணினுளோ?' முருகன் தனக்குள் இப்படி எதை எதையோ எண்ணிக் குழம்பலானுன். கல்யாணத்துக்கு முன்பு வரையிலும் அவனுடைய பார்வையில், பேச்சில், பழக்கத்தில், ஸ்பரிசத்தில் மெழுகாய் உருகிப் போய்க்கொண் டிருந்த பெண் அவள். இப்போது திடீரென்று அவளுக்கு என்ன வந்து விட்டது?

பாங்கோர்த் தீவுக்கு எதிரில் இருந்த கடற் கரைச் சிறு நகரத்துக்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். படகுத் துறையை ஒட்டி



யிருந்த விடுதியில் சொல்லிக் காரரை ஒப்படைத் தார்கள். படகுத் துறைக்கு வந்து அங்கிருந்த விசைப்படகில் ஏறிக்கொண்டார்கள். இருபத் தைந்து முப்பது பேர் ஏறக்கூடிய அந்தப் படகில் பத்துப் பதினைந்து பேர்களே காணப் பட்டனர். அவர்களில் உல்லாசப் பயணிகள் சிலர், தீவைச் சேர்ந்த கிராமவாசிகள் சிலர்.

மாலைநேரத்து மஞ்சள் வெயில் கடலெங்கும் பொன்னை உருக்கி வழிந்தோட விட்டிருந்தது. தொலைவில் பெரியதொரு பூங்காவைப் போல் காட்சியளித்தது தீவு. மின்விசைப் படகும் கரையை விட்டுப் புறப்பட்டது. அவர்களோடு பயணம் செய்தவர்களில் அவர்களைப்போலவே இளம் சீனத் தம்பதியர் இருவர் இருந் தார்கள். ஒருவேளை அவர்களும் தங்கள் தேனிலவைக் கொண்டாடவே அந்தத் தீவுக்குப் புறப்பட்டிருக்கலாம். சீன இளைஞன் அந்தப் பெண்ணின் கழுத்தில் கையைப் போட்டு வளைத்துக் கொண்டு தன் காதலிக்கு அந்தத் தீவைச் சுட்டிக் காட்டி மகிழ்ந்தான்.

விசைப்படகு விநோதமான ஒலி எழுப்பிக் கொண்டே கடலைக் கிழித்தபடி மேலே பாய்ந்து கொண் டிருந்தது. குன்றுகள் சூழ்ந்த அந்தத் தீவு கணத்துக்குக் கணம் அவர்களை நோக்கி நெருங்கி வருவதுபோல் தோன்றியது. முதலில் பசுமை குலுங்கும் குன்றுகள் மட்டி லும் தென்பட்டன. அடுத்து அங்கங்கே உள்ள வீடுகளின் கூரைகள் தோன்றின. அதை அடுத்து அந்தத் தீவின் கடற்கரையை ஒட்டியிருந்த சின்னஞ்சிறு மர வீடுகள் காட்சி யளித்தன.

கரையை ஒட்டிய கடலுக்குள்ளே மரங்களை நட்டு, அவற்றுக்குமேல் பலகையடித்துப் பரண் வீடுகள் கட்டியிருந்தார்கள். கூரை வேயப் பெற்ற சின்னஞ்சிறு வீடுகள்; அழகழ கான வீடுகள். கடல் அலைகள் மீது அந்த வீடுகள் வரிசை வரிசையாக மிதப்பது போல் தோன்றியது.

முருகன் ராதாவைக் கட்டாயப் படுத்திப் பேச்சுக்கு இழுத்தான். அளவு கடந்த உற்சாகத் தோடு பேசிக்கொண்டே வந்தான். படகின் விளிம்பில் உட்கார்ந்துகொண் டிருந்த ராதா வின் கேசமும் மேலாடையும் கடற்காற்றில் பறந்த காட்சி அவனுக்கு அற்புதமாக இருந்தது. ஆனாலும் அவள் உயிரற்ற கற்சிலைபோல் எவ்வித உணர்ச்சிப் பிரதிப் பலிப்பும் காட்டாமல் வந்ததைக் கண்டபோது, அவளை அப்படியே பிடித்துக் கடலுக்குள் தள்ளிவிடலாமா என்றுகூட அவனுக்குத் தோன்றியது.

தீவு நெருங்கிக்கொண் டிருந்தது. உல்லாசப் பயணிகள் சிலர் அங்கே அடிக்கடி வந்துபோய்க் கொண்டிருந்தாலும் அந்தத் தீவு இன்னும் தன்னுடைய கன்னித்தன்மை கெடாமல்தான் இருந்தது. மலாய் மக்களான மீனவர்கள் வசிக்கும் கிராமம் அது. பயணிகள் தங்குவ தற்காக ஒரு பெரிய ஓட்டலை மட்டும் அங்கே கட்டியிருந்தார்கள். பயணிகளின் வசதி களுக்காகச் சில கடைகள் அங்கே திறக்கப்பட் டிருந்தன. மற்றப்படி இதர நகரங்களின் செயற்கை நாகரிகம் அதன் அழகைப் பாழ் படுத்தவில்லை.

அங்கே வரவேண்டுமென்று ஆசைப்பட்ட வள் முதலில் ராதாதான். முன்பு ஒருமுறை

விருந்து அதன் நினைவு அவளை விட்டு அகலவே இல்லை. முருகனோடு அங்கு வந்து எப்படி எப்படியெல்லாமோ பொழுதைக் கழிக்க வேண்டுமென்று அவள் ஆசைப்பட்டிருக்கிறாள். ஆனால், ஏனோ அந்த ஆசை கைகூடிய சமயத் தில் அவளுக்கு இந்த உலகத்தின்மீதே வெறுப்பு ஏற்பட்டுவிட்டது.

அவளுடைய மனத்தின் ஒரு மூலையில், 'அந்தப் பயணத்தை வீணாக்கி விடக்கூடாது' என்ற எண்ணம் இல்லாமல் இல்லை. ஆனால் அந்த எண்ணம் ஒரு மூலையில் மட்டுந்தான் இருந்ததே தவிர, முன்போல அது அவள் இதயம் முழுவதும் நிரம்பி வழியவில்லை.

அந்தத் தீவையே வெறித்துப் பார்த்துக் கொண்டு வந்தவளின் கண்கள் கலங்கிப் போயிருந்தன. 'இங்கே வராமலேகூட இருந் திருக்கலாம்' என்று நினைக்கலானாள்.

படகுத் துறை வந்தது. மற்றவர்களோடு சேர்ந்து அவர்களும் கரைக்கு வந்தார்கள். ஓட்டலின் பெயரைச் சொல்லி வழி கேட்டுக் கொண்டு நடந்தான் முருகன். ராதா அவனை மௌனமாகப் பின்பற்றினாள். ஓட்டல் மட்டிலும் எல்லா வசதிகளும் நிறைந்த ஓட்டலாக இருந்தது. தங்களுக்கென்று முன்னதாகவே ஒதுக்கியிருந்த அறைக்கு அவர்கள் சென்றார்கள். கைகால் முகம் கழுவிக்கொண்டு காபி வரவழைத்துக் குடித் தார்கள். ஓட்டலுக்குப் பின்புறத்திலேயே கடற்கரை பரந்து விரிந்து கிடந்தது. கடற் கரையை ஒட்டினாற்போல் மரங்களும், புதர் களும் குன்றுகளும் மாலை ஒளியில் மயங்கிக் கொண் டிருந்தன.

''காலாறக் கொஞ்சம் வெளியிலே போய் நடந்திட்டு வரலாமா?'' என்று ராதாவிடம் கேட்டான் முருகன். பதில் அளிக்காமல் அவள் புறப்பட்டாள்.

வாதுமை மரக்கூட்டம் அடர்ந்த கடற் கரையில் சிறிது தூரம் அவர்கள் நடந்தார்கள். கடற்ரை மணலெங்கும் வாதுமைக் கொட் டைகள் விழுந்து கிடந்தன. யாரும் அவற்றை அங்கே தேடுவார் இல்லை.

''நாம பாதம் அல்வா சாப்பிடறமில்ல, அதுதான் இது!'' என்று ஒரு கொட்டையை உடைத்து அதற்குள் இருந்த பருப்பை எடுத்து அவளிடம் நீட்டினான். சாப்பிட்டுப் பார்த் தாள்; பாதாம் பருப்புத்தான் அது. அந்தத் தீவில் வசித்த மக்களுக்கு இன்னும் அதன் பயனே தெரியாதுபோலும்!

அங்கங்கே உட்புறத்தில் மீனவர்களின் பரண் வீடுகள் தெரிந்தன; தரையில் வீடுகள் கட்டினால் மழை நீராலோ அல்லது காட்டு மிருகங்களாலோ தங்களுக்குத் தொல்லை வரக்கூடும் என்று நினைத்து அவர்கள் பலகை யால் பரண் அமைத்து வீடுகள் கட்டிக்கொண் டிருந்தார்கள். ஏணிப் படிகள் வழியாகத் தான் அவர்களுடைய வீடுகளுக்குள் போக முடியும்.

இன்னும் சற்றே தாண்டி நடந்தபோது, அவர்கள் கண்ணெதிரே ஒரு காதற்காட்சி நடைபெற்றுக்கொண் டிருந்தது. புதர்களும் செடி கொடிகளும் மண்டிக் கிடந்த மனித சஞ்சாரம் இல்லாத ஒரு பகுதியில் அவர்களோடு பயணம் செய்த சீனத் தம்பதியர் ஓடிப் பிடித்துப் பாய்ச்சல் காட்டிக்கொண் டிருந்

ருவதை அவர்கள் கவனிக்கவில்லை. பிறகு ட்டென்று இருவரும் ஒரு புதருக்குள் றைந்து விட்டார்கள். காட்டுப் பறவை ளைப் போலவோ, வன விலங்குகளைப் போலவோ, ஆதி மனிதர்களான ஆதாம் வாள் போலவோ அவர்கள் தங்கள் தனிமை ின்பத்துக்கு அந்த இடத்தை ஏற்றதாக ினைத்திருக்கலாம்.

முருகன் சுற்று முற்றும் பார்த்தான். ஆள் அரவமே இல்லாத இடம் அது. ஆளுயரத் துக்கு மேல் மண்டிக் கிடந்த புதர் ஒன்றின் இடைவெளியில், இயற்கை அழகியதோர் பசும்புல் மெத்தையை அமைத்திருந்தது.

''அவங்களைப் பார்க்கிறப்ப ஆதாமும் ஏவாளும் இப்படித்தான் இருந்திருப்பாங்கன்னு நினைக்கத் தோணுது. நாமும் ஏன் இப்படி?.. நீ என்ன சொல்றே ராதா?'' கொஞ்சுவது போல் கேட்டான் முருகன்.

ராதாவுக்குள்ளேயும் அந்தச் சூழ்நிலை ஆசை அலைகளைப் பொங்கி வீசத்தான் செய்தது. அவளால் மறக்கவும் முடியாத மறுக்கவும் முடியாத - வாழ்க்கையில் எப்போதோ நேரக் கூடிய - கட்டந்தான் அது. ஆனால் அவள் சட்டென்று எதையோ நினைத்துக்கொண்டு அவனை வெறித்துப் பார்த்தாள்.

''என்ன ராதா?''

''தோட்டக் காட்டிலே இப்படித்தான் கூலிங்க புரளுவாங்கன்னு நான் கேள்விப் பட்டிருக்கேன்.''

ஆயிரம் சவுக்குகள் கொண்டு அவள் அவனை அடித்தால் அவனுக்கு எப்படியிருக்குமோ அப்படியிருந்தது முருகனுக்கு. வெலவெலத் துப் போனான் அவன். விரைவிலேயே அவர்கள் இருவரும் ஒருவரோடொருவர் பேசிக்கொள் ளாமல் ஓட்டலுக்குத் திரும்பினார்கள். அவ ளுக்குச் சாப்பிடப் பிடிக்கவில்லை. அவன் மட்டும் சாப்பிட்டு முடித்தான்.

நாற்காலியில் சாய்ந்தபடி மேற்கூரையைப் பார்த்துக்கொண் டிருந்தாள் ராதா. பார்வை மேற்கூரையிலும் பதியவில்லை. எங்கோ சூனி யத்தைத் துளைக்க முயன்றுகொண் டிருந்தது.

''ராதா, நான் கேக்கறேன், நீ உண்மை யைச் சொல்லமுடியுமா? உனக்குத் திடீர்னு இப்ப என்ன வந்திடுச்சு? ஏன் இப்படி மாறிப் போயிட்டே?''

மேலிருந்த விழிகளைத் தாழ்த்தி அவன் கண் களைச் சந்தித்தாள் ராதா! அந்தப் பார்வையை அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

''என்ன ராதா, இது?''

''நீங்க எனக்கு உண்மையைச் சொல்ல முடியுமா? நான் கேட்கிற கேள்விக்கு நீங்க நேரடியான பதிலைச் சொல்றிங்களா? நீங்க யாரோட பிள்ளை? உங்க அப்பாவுக்கு, அம் மாவுக்கு, தம்பிக்கு, தங்கச்சிக்கு, எஸ்டேட் டிலே என்ன வேலை?''

நிலைகுலைந்து போய்த் தலையைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டான் முருகன். பதில் பேச அவனால் முடியவில்லை.

''சொல்லுங்க!'' என்று கத்தினாள் ராதா.

''என் தம்பி பாலனைத் தவிர, மத்த எல் லாரும் கூலி வேலை தான் செய்யறாங்க.''

''ஏன் இதை எங்கிட்ட நீங்க முன்னாடியே சொல்லலே? எதுக்காக எங்கிட்டே உண் மையை மறைச்சுப் பொய் பேசினீங்க?''

''. . . . .''

''சொன்னா நீ எங்கே என்னோட பழகறதை நிறுத்திடுவியோன்னு..''

''நான் உண்மையைச் சொல்லட்டுமா? நீங்க என்னோட அழகுக்காகவோ, குணத்துக் காகவோ, வயசுக்காகவோ என்னைக் கல் யாணம் செய்துக்கலே. எங்கப்பாவோட பணந்தான் உங்க கண்ணை உறுத்தியிருக்கு. எங்கிட்டே பொய் பேசி என்னை ஏமாத்திட் டீங்க; என்னைக் கெடுத்துக் குட்டிச் சுவராக்கிட் டீங்க! என்னோட வாழ்க்கையையே பாழடிச் சிட்டீங்க.''

''உண்மையிலேயே நான் உன்னை..''

''உண்மைங்கிற வார்த்தையை இனிமே நீங்க உங்க வாயாலே பேச வேண்டாம். பொய், பொய், பொய்! அத்தனையும் பொய்! உங்களோட உள்ளங்காலிலிருந்து உச்சந்தலை வரையிலே பொய், ஒரு பொய்யை மறைக்க இதுவரையிலே எங்கிட்ட ஆயிரம் பொய் சொல்லியிருப்பீங்க. கல்யாணத்துக்கு முதல் நாள்தான் எனக்கு உங்க ரகசியமெல்லாம் தெரிஞ்சுது. தெரிஞ்சு என்ன செய்ய? அதுக்கு முன்னாலேதான் நம்ப ரகசியம் ஊரறிஞ்ச ரகசியமாப் போயிடுச்சே? நாமதான் எத் தனையோ தேனிலவைக் கொண்டாடிட்டமே?''

''நடந்ததுக்காக என்னை மன்னிச்சுக்க ராதா!''

''எங்கிட்ட இனிமேலும் நாடகம் நடிக்கா தீங்க; உண்மை அப்பவே தெரிஞ்சிருந்தால் ஒருவேளை உங்களை நான் கல்யாணம் செய்துக் கச் சம்மதிச்சாலும் சம்மதிச்சிருப்பேன். உங் களை ஓர் ஆண்பிள்ளைன்னு மதிச்சிருப்பேன். இப்ப நீங்க ஒரு ஏமாத்துக்காரர்; வஞ்சகர்; சூழ்ச்சிக்காரர்!''

''ராதா!''

''கழுத்திலே தாலி விழுந்தப்பறம் தெரிஞ் சால் தெரிஞ்சிட்டுப் போகுதுங்கற துணிச்சல் தானே உங்களுக்கு? உங்களாலேதான் என்னை ஏமாத்த முடியும்னு பார்த்திங்களா?''

ராதாவின் காலடியில் உட்கார்ந்து அவள் பாதங்களைப் பற்றப் போனான் முருகன். சட் டென்று அவள் அங்கிருந்து விலகிக் கொண் டாள்.

''தயவு செய்து என்னை நீங்க தொடவேண் டாம். அதையும் மீறி நீங்க என்னைத் தொட் டீங்க, அப்பறம் நான் எப்படி நடந்துக்கு வேன்னு சொல்ல முடியாது.''

''அப்படீன்னா, நாம எதுக்காக இங்கே வந் தோம்?''

''இப்பவே 'போட்' இருந்தால் நாம திரும் பிப் போயிடலாம்; புறப்படுங்க.''

''இப்போ இருட்டிப் போச்சு ராதா! இனி மேல் காலையிலேதான் படகு விடுவாங்க.''

''சரி, காலையிலேதான் திரும்பலாம்; ஊருக் குப் போனபிறகுதான் நாம என்ன செய்யற துங்கிறதை முடிவு செய்யணும். அதுவரை யிலே எங்கிட்ட நெருப்போட பழகறுப்பிலே நீங்க பழகக் கத்துக்குங்க. கிட்ட நெருங்கிடா தீங்க.''

முருகன் பதில் ஏதும் பேசவில்லை. ராதா எழுந்து போய்க் குளிர் பதனப் பெட்டியை வேகமாய்த் திறந்தாள். பிராந்திப் புட்டி ஒன்றை எடுத்து மேசைமீது வைத்துக் கொண்டு, அதைக் கண்ணாடிக் கிண்ணத்தில் ஊற்றிக் குடிக்கத் தொடங்கிவிட்டாள்.

(தொடரும்)

# மறைந்த மணிகள்



இல்லறஞானி ராமசந்திரா: இலங்கையில் இராமசந்திராவை அறியாதவர் இல்லை. சமயங் கடந்த மோன ஞான நெறியைக் கடைப்பிடித்து வாழ்ந்தவர் அவர். சாந்தமான வாழ்க்கை, சாந்தமான பேச்சு, சாந்தமான தோற்றம், புன்முறுவல் - இவை சேர்ந்த வடிவம் இராமசந்திரா. உலக முழுவதும் சுற்றிச் சமய தத்துவங்களை எடுத்துக் காட்டினார். தமிழிலும் ஆங்கிலத்திலும் நன்றாக எழுதவும் பேசவும் வல்லவர். சாதி, சமய வேறுபாடு இல்லாமல் எல்லாரும் அவரிடம் அன்பு வைத்துப் பழகினார்கள். ஆங்கிலத்திலும் தமிழிலும் நூல்கள் எழுதியிருக்கிறார். அவருடைய 'சமரச ஞானக் கோவை' என்ற நூல் அவருடைய உள்ளத்தைக் கண்ணாடிபோல் காட்டும். 'ஆத்ம ஜோதி' என்ற சமரச சமயப் பத்திரிகைக்குக் கௌரவ ஆசிரியராகவும், ரிலிஜஸ் டைஜெஸ்ட் என்ற ஆங்கிலப் பத்திரிகைக்கு ஆசிரியராகவும் இருந்தார். ரமணபகவானிடம் ஈடுபட்டவர். தம் இல்லத்துக்கு 'ரமணமந்திரம்' என்று பெயர் வைத்தார். அந்த இல்லறத் துறவி 26-4-76 அன்று இறைவனோடு ஒன்றிவிட்டார். அவருடைய உறவினருக்கும் நண்பருக்கும் நம் அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

வைணவநூலை எளிதாக்கிய புருஷோத்தம நாயுடு: ஆழ்வார்களுடைய ஸ்ரீ சூக்திகளுக்குப் பலர் வியாக்கியானம் எழுதியிருக்கிறார்கள். திருவாய்மொழிக்கு மிக விரிவாக ஈடு என்ற பேருரை இருக்கிறது. ஆனால் வடமொழி கலந்த மணிப்பிரவாள நடை. அதை எளிதில் படித்து அறிய முடியாது. அந்த உரையைத் தமிழ்ப்படுத்தித் தமிழுலகம் படித்துப் பயன்பெறச் செய்தவர் சென்னைப் பல்கலைக் கழகத்துத் தமிழாராய்ச்சித் துறையில் பணி செய்த பி. ஆர். புருஷோத்தம நாயுடு அவர்கள். அழுத்தமான தமிழ்ப் புலமையும் வடமொழி அறிவும், வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஈடுபாடும் உடைய அவர் சில மாதங்களுக்குமுன் புகழுடம்பு பெற்றார். அவருடைய குடும்பத்தினருக்கு நம் அநுதாபங்கள்.



ஆராய்ச்சியாளர் ஏ. வி. சுப்பிரமணிய ஐயர்: சில ஆண்டுகளுக்கு முன் ஹிந்துப் பத்திரிகையில் வாரந்தோறும் தமிழ்ப் புலவர்களைப் பற்றிய கட்டுரைகள் தொடர்ந்து வந்துகொண்டிருந்தன. அவை சிறந்த ஆராய்ச்சியின் விளைவாக நேர்மையும் திட்பமும் உடையனவாக இருந்தன. அவற்றை எழுதியவர் ஏ. வி. சுப்பிரமணிய ஐயரவர்கள்; 'ஹிந்து'ப் பத்திரிகையின் நிருபராகப் பல ஆண்டுகள் இருந்தவர். பாரதியாரோடும் வேறு பல பெரியவர்களோடும் பழகியவர். ஆராய்ச்சி செய்வதில் வல்லவர். 'தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி' என்ற நூல் அவருடைய திறமைக்குச் சான்று பகரும். சித்தர்களைப்பற்றி ஆராய்ந்து நூலெழுதியுள்ளார். ஆறு சமயங்களைப் பற்றிய நூல் ஒன்றை எழுதியிருக்கிறார். ஆங்கிலம், தமிழ் இரண்டு மொழிகளிலும் நூல்களை இயற்றித் தந்தவர் அவர். அவர் மறைவினால் சிறந்த ஆராய்ச்சி வித்தகர் ஒருவரைத் தமிழுலகம் இழந்துவிட்டது. 16-8-1976 அன்று அமரரான அவரை இழந்து வாடும் அனைவருக்கும் நம் அநுதாபங்கள்.



அருளரசி ஹா. கி. வாலம்: 'பெண்மணியா பேசுகிறார்? பெண் சிங்கம் அல்லவா முழங்குகிறது?' என்று அவையினர் கேட்டு வியக்கும் வண்ணம் பேசும் ஆற்றல் பெற்ற ஒரு குரல் அடங்கிவிட்டது. தமிழ், வடமொழி, இந்தி, ஆங்கிலம் என்னும் நான்கு மொழியிலும் முழங்கிய நா ஓய்ந்துவிட்டது. அந்த மொழிகளில் புங்கானுபுங்கமாக எழுதிய கை அக்கினி பகவானுக்கு உணவாகிவிட்டது. அருளரசி ஹா. கி. வாலம் அவர்கள் தம்முடைய அருமைக் கணவர் திரு கிருஷ்ணசாமி அவர்களைத் துயரத்தில் ஆழ்த்திவிட்டு 12-8-1976-இல் மறைந்துவிட்டார். இரண்டு லட்சம் வரிகளுக்குமேல் கவிதை எழுதியவர் அவர். சிறந்த தேசபக்தராகத் திருச்சியில் விளங்கிய அமரர் ஹாலாஸ்யத்தின் புதல்வியார் அவர். 'மோகனா' என்ற பத்திரிகையை நடத்தி வந்தார். அவர் மறைவினால் வருந்துவோர் பலர். அவர்களுக்கு நம் துயரத்தைத் தெரிவித்துக்கொள்கிறோம்.




## 21. தம்பி முத்துவும் பாலனும்

"ஏம்பா முத்து, வடக்கு மேட்டுலே வேலைக்கு அனுப்பி உன் கையைக் காலை ஒடிக்கிறாங்களே, கிராணியைப் பார்த்து நீ ஒரு பேச்சு சொல்லப்படாது? இல்லே உங்கப்பாரும் நானும் பார்த்துப் பேசட்டுமா?" என்று தன் மகனை உற்றுப் பார்த்தவாறே கேட்டாள் வேலம்மா.

அதிகாலைப் போதில் அவரவர் வேலைக்கு அவரவர் பரபரப்போடு புறப்பட்டுக் கொண்டிருந்த வேளை அது. வாட்ட சாட்டமாக வளர்ந்திருந்த முத்துவின் தோற்றத்தில் இப்போது ஒரு வாரமாய்த் தளர்ச்சியைக் கண்டு தாயுள்ளம் மறுகியது. பாலனுக்கு அவன் தம்பியாக இருந்தாலும் விவரம் தெரியாதவர்கள் முத்துவை அண்ணனென்றும் பாலனைத் தம்பியென்றுமே நினைத்தார்கள். வாய் திறந்து யாரோடும் கலகலப்பாகப் பேசமாட்டான். மாடுபோல் உழைப்பான். அடுத்தவர்களுக்கு ஏதாவது உதவி தேவையென்றால், அவர்கள் கேட்காமலே தான் அதை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வான். யாருக்காவது துன்பம் வந்தால் அதைத் தன் துன்பமாகச் சுமக்க முயல்வான்.

முன்பு அவன் காமாட்சியைக் கல்யாணம் செய்து கொள்ள இசைந்ததுகூட இப்படித்தான். அண்ணன் முருகனை நம்பிக் காமாட்சியும் ஏமாந்தாள்; அவள் பெற்றோரும் ஏமாந்தார்கள். அவர்கள் எல்லாருக்கும் ஆறுதலாக இருக்கும் என்று நம்பியே அவன் தன் மாமனின் மூத்த மகள் காமாட்சியை மணந்து கொள்ள முன் வந்தான். தோட்டத்து நிர்வாகத்தின் குறுக்கீட்டால் அந்தக் கல்யாணமும் தடைப்பட்டு விட்டது. 'சாபாவிலே இப்போ மாமா குடும்பம் எப்படி இருக்குதோ? காமாட்சி என்ன செய்றாளோ?' என்று எப்போதாவது நினைத்துக் கொள்வான் முத்து.

தாயாரின் கேள்விகளுக்குப் பின்னே இருந்த கவலை முத்துவுக்குத் தெரியாமல் இல்லை. அதைத் தெரிந்து கொள்ளாதவன்போல், "யாரும் யாரையும் போய்ப் பார்க்க வேண்டாம்! நானும் பார்க்கப் போறதில்லே; வடக்கு மேட்டு வேலை எனக்கு ஒண்ணும் கஷ்டமாயில்லே" என்றான்.

"உடம்பு இதுக்குள்ளே துரும்பாய்ப் போச்சே முத்து? எப்படி இருந்த புள்ளே எப்படி இளைச்சுப் போயிட்டே? பெத்த வயிறு என்ன பாடுபடுதுன்னு உனக்குத் தெரியுமா?"

"வயித்துப் பொழைப்புக்குன்னு உழைக்கப் போனா இதுக்கெல்லாம் கவலைப்படக்கூடாது; இந்த வேலையிலே கொஞ்ச நாள் பழகிப் போனா எல்லாம் சரியாப் போகும்."

"காலமெல்லாம் வடக்கு மேட்டே கதின்னு இருக்கப் போறியா?"

"இருந்தா என்ன கெட்டுப் போச்சு? பொம்பிளைப் புள்ளைங்களையே அங்கே அனுப்ப ஆரம்பிச்சிட்டாங்க. என்னாலே தானா முடியாது?" என்று கேட்டுவிட்டு "சரி, சரி, பாத்திரத்திலே கொஞ்சம் நிறையச் சோத்தைப் போட்டுவை. அந்தச் சின்னச்சாமியோட தங்கச்சி செல்லத்தை அவங்க அண்ணி பட்டினி போட்டே கொன்னுடுவா போலே இருக்கு" என்றான் முத்து.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டே தேநீர் பருகிக்கொண் டிருந்த பாலனுக்குத் தன் தம்பியைப் பற்றிய நினைவு பெருமையையும் மகிழ்ச்சியையும் அளித்தது. முத்துவுக்குப் படிப்பு ஏறவில்லை யென்றாலும் அவன்தான் அந்த வீட்டில் கடுமையாக உழைப்பவன். ஓய்வு நேரத்தில் வீட்டுக்குத் தேவையான விறகைச் சேகரித்துக் கட்டைகளைப் பிளந்து போடுவான். தாயாருக்கும் தங்கைக்கும் உதவியாகத் தண்ணீர் எடுத்துக் கொண்டு வருவான். அவனுக்குச் சமையல் கூடச் செய்யத் தெரியும். காசையும் நேரத்தையும் உடம்பையும் கெடுத்துக் கொள்ளும் எந்தக் கெட்ட பழக்கமும் அவனிடம் கிடையாது. அவனுடைய உடற்கட்டில் நினைவிழந்து அவனிடம் ஏமாந்த தோட்டத்துப் பெண்கள் சிலர் அவனுக்கு வைத்த பெயர் 'சாமியார்!' இதுவும் பாலனின் காதுகளில் விழாமல் இல்லை.

சாப்பாட்டுப் பாத்திரம், பால் சேகரிக்கும் வாளி, உலர்ந்த பாலை உரித்துப் போட்டுக் கொள்ளும் குடுவை, மரம் வெட்டும் வளைந்த கத்தி முதலியவற்றோடு பெயர் கொடுக்கும் மஸ்டர் களத்தை நோக்கிப் புறப்பட்டான் முத்து. வெண்கலச் சிலைபோல் முன்பு காணப்பட்ட அவன் உடற்கட்டு இப்போது தளர்ந்திருந்ததைக் கண்டு பாலனும் தனக்குள் சிறிது கலக்கமடைந்தான். வெளிப்புறத் தோற்றத்தில் அந்த வெண்கலச் சிலையின் கட்டுத் தளர்ந்திருந்தாலும் அதற்குள்ளே கட்டுக் குலையாத ஓர் உரம் படைத்த நெஞ்சு துடிப்பதைப் பாலனால் காண முடிந்தது. தங்கள் குடும்பத்துக்கு அவனே தலையான சொத்து என்ற நினைவால் ஒரு கணம் பூரித்துப் போனான் பாலன்.

வடக்கு மேட்டுக்குப் பால்மரம் வெட்டப் போகும் தண்டனையை முத்து பெற்றதற்குக் கூட அவனுடைய சொந்த விஷயம் ஒன்றும் காரணம் அல்ல. பால் வெட்டி முடிந்தவுடன் நிறுத்துப் பார்த்துக் கணக்கெடுக்கும் கூடாரத்தில் ஒரு சிறிய நிகழ்ச்சி நடந்தது. பால் கிராணி பக்கிரிசாமி நிறுவைக் கணக்கை நோட்டில் எழுதிக்கொண் டிருந்தான். கங்காணி கோவிந்தன் பாலை நிறுத்துக் கணக்கைச் சொல்லிவிட்டு அதைப் பெரிய வாளியில் கொட்டியபடி இருந்தான். முத்துவுக்கு முன்னால் நின்ற மாரியப்பனின் முறை வந்தபோது, மாரியப்பன் சேகரித்த பாலின் அளவுக்கும் கங்காணி பால்கிராணியிடம் சொன்ன அளவுக்கும் வித்தியாசம் இருந்தது. குறைத்துச் சொன்ன கங்காணி அவசரம் அவசரமாக அந்தப் பாலைப் பெரிய வாளியில் கொட்டியும் விட்டான். இதைப் பால் சேகரித்த மாரியப்பன் கவனிக்க வில்லையென்றாலும் முத்து கவனித்து விட்டான்.

''ஏன்யா, கணக்கைக் குறைச்சுச் சொல்றே? நிறை குறைஞ்சா மாரியப்பனோட கூலி குறையாது? நிதானமாப் பார்த்துக் கணக்குச் சொல்லப்படாது? ஒண்ணுக்கு முக்காலாச் சொல்றது என்ன நியாயம்னு கேக்கறேன்?''

கங்காணி கோவிந்தனும் பால்கிராணி பக்கிரிசாமியும் ஒருவரை ஒருவர் அர்த்தத்தோடு பார்த்துக்கொண்டார்கள். கங்காணி தெரியாமல் செய்துவிட்ட பிழையல்ல இது. பால்கிராணிக்கும் மாரியப்பனுக்கும் ஏதோ மனத்தாங்கல் இருந்ததால், கிராணியின் பேச்சைக் கேட்டுத்தான் கோவிந்தன் இப்படிச் செய்திருக்கிறான் என்பது முத்துவுக்கு விளங்கிவிட்டது.

''சரியா அளந்துதான் நான் கணக்கு குடுத்தேன். நீபாட்டுக்கு உன் வாயை மூடிக்கிட்டுப் போ! உனக்கும் இதுக்கும் சம்பந்தமில்லே!'' என்றான் கங்காணி.

பால்கிராணி பக்கிரிசாமி குறுக்கிட்டு ''மாரியப்பனுக்கு உடுக்கடிக்காமலே, சாம்பிராணி போடாமலே, சாமி வரும். நீ வேறே உடுக்கடிச்சு, சாம்பிராணி போட்டு, தூபம் காட்டி விட்டியா?'' என்று முத்துவைப் பார்த்து முறைத்தான்.

முத்துவுக்கும் பால்கிராணிக்கும் பேச்சு முற்றியது. மாரியப்பனும் முத்துவும் ஒரு கட்சி, கங்காணியும் கிராணியும் மற்றொரு கட்சி என்ற நிலைக்கு வளர்ந்தது. சொற்களில் சூடு பறந்தது. 'சாது மிரண்டால் காடு கொள்ளாது' என்று சொல்வார்களே, அது போல் 'சாமியார்' முத்து, 'முரடன்' முத்து வாகிவிட்டான். மறுநாளே அவனுக்குக் கைமேல் பலனும் கிடைத்துவிட்டது. விக்டரி எஸ்டேட்டின் அந்தமானாகிய வடக்கு மேட்டுக்கு மாற்றல் உத்தரவு வந்து சேர்ந்தது.

முத்துவைப் பற்றிய நினைவுகளை அசை போட்டுக்கொண்டே தன் பள்ளிக்கூடத்தை நோக்கிச் சைக்கிளை மிதித்தான் பாலன். சைக்கிளின் பின்புறம் கமலம் இருந்தாள். பள்ளிக்கூடம் நெருங்கிக்கொண் டிருந்தது. பாலனின் மனம் முத்துவை மறந்து விட்டுப் பள்ளிக்கூடத்துக்குத் தாவியது. அங்கேயும் சில நாட்களாக அவனுக்குப் பிரச்னைகள் முளைவிடத் தொடங்கியிருந்தன. அவனுடைய தலைமை ஆசிரியர் சண்முகம் முன்போல் அவனிடம் சுமுகமாக நடந்து கொள்வதில்லை. வேண்டாத விவகாரங்களை அவன் இழுத்துப் போட்டுக்கொள்வதாக அவனிடம் நேரடியாகவே அவர் குறைப்பட்டுக் கொண்டார். பாலனால் தமக்கோ தம் வேலைக்கோ தொல்லை வந்துவிடக்கூடாதே என்ற அச்சம் அவர் பேச்சில் தலை நீட்டுவதைப் பாலன் கண்டு கொண்டான். அதே சமயம் பாலனின் போக்கை அவரால் உறுதியோடு தடுத்து நிறுத்தவும் முடியவில்லை.

பாலன் செய்தது இவ்வளவுதான்!

மாலை நேரத்தில் பள்ளிக்கூடம் விட்டவுடன் தன் தங்கை கமலத்தை மற்றப் பிள்ளைகளோடு வீட்டுக்கு அனுப்பிவிட்டு, அவன் மட்டும் அங்கே தங்கினான். ஆறும் வகுப்பைத் தோட்டப் பள்ளியில் படித்து முடித்துவிட்டு, அடுத்த ஆண்டு சிரம்பானுக்குப் போய் ஆங்கிலப் பள்ளியில் மேல் வகுப்பைத் தொடர விரும்பிய மாணவர்களை மட்டும் தன்னோடு நிறுத்திக் கொண்டான். தோட்டப் பள்ளிப் படிப்பை முடித்துவிட்டு, மேல் வகுப்பான 'ரிமோவ்' வகுப்பில் சேர்ந்த பிள்ளைகளில் பலருக்கு அந்த 'ரிமோவ்' வகுப்பே ஒரு கண்டமாக இருந்தது. பத்துப் பேர் அங்கே போனால் அதில் ஒன்பது பேர் படித்துத் தேற முடியவில்லை. முற்றும் தமிழில் படித்த பிள்ளைகளுக்கு எல்லாமே அங்கு ஆங்கில மயமாகவோ மலாய் மொழி மயமாகவோ இருந்தது. கண்களைக் கட்டிக் காட்டில் விடப்பட்ட நிலைதான். பாதியில் படிப்பை விட்டவர் சிலர்; மோதிப் பார்த்துத் தோல்வி கண்டவர் இன்னும் சிலர்.

ஊர்விட்டு ஊர் போய்ப் படிக்க வேண்டும்; அவர்கள் சக்திக்குமேல் பணம் செலவழிக்க வேண்டும்; பெரும் பகுதி நேரத்தைப் பஸ்ஸுக்குக் காத்திருப்பதிலும் பஸ் பயணத்திலும் விரயம் செய்யவேண்டும். இவ்வளவு தடைகளையும் கடந்து சென்ற பிறகும்கூட அந்த 'ரிமோவ்' வகுப்பு, சிறிதுகூட ஈவு இரக்கமின்றிப் பல தோட்டத்துப் பிள்ளைகளை மேற்படிப்பிலிருந்தே 'ரிமூவ்' செய்து விடுகிறது! 'தோட்டப் பிள்ளைகளின் உயர்ந்த பட்சத் தலையெழுத்துத் தோட்டத்துப் பள்ளியின் ஆறும் வகுப்புத்தானா? அதற்குமேல் அவர்கள் தலையெடுக்கவே கூடாதா? முடியாதா?' பாலனின் ஏக்கம் இது.

பாலனிடம் பாடம் சொல்லிக்கொள்ளப் பதினைந்து பிள்ளைகள் முன்வந்தார்கள். அவர்களுக்கு அவன் ஆங்கிலம் கற்றுத் தந்ததோடு, ஓரளவு 'ரிமோவ்' வகுப்புப் பாடங்களையும் அறிமுகம் செய்து வைத்தான். மாலைப் பள்ளி விட்டபிறகு, ஒரு மணி நேரமோ இரண்டு மணி நேரமோ மேலும் அவர்களை அங்கே தங்கச் செய்து பாடம் நடத்துவான். வீட்டுப் பாடங்களும் கொடுப்பான். அவர்கள் எழுதும் விடைத் தாள்களைத் தன் வீட்டுக்கு எடுத்து வந்து அங்கே திருத்துவான். ஞாயிற்றுக் கிழமைகளில் அந்தப் பிள்ளைகளின் பெற்றோரைச் சந்தித்துப் பேசி வருவதுண்டு.

வழக்கம்போல் அன்றைக்கும் பள்ளிக்கூடம் கலைந்தது. பதினைந்து பிள்ளைகள் மட்டிலும் அங்கே பாலனை எதிர்பார்த்து ஆறும் வகுப்பறையில் காத்திருந்தார்கள். அவர்களை நாடி வந்துகொண்டிருந்த பாலனைத் தலைமை ஆசிரியர் சண்முகம் தம்மிடம் அழைத்தார். அவர் மேசைக்கெதிரில் கிடந்த நாற்காலியில் போய் உட்கார்ந்தான் பாலன்.

"நீங்க சொல்றதோட பின் விளைவு என்ன ஆகும்கிறதை நீங்க யோசனை செய்தீங்களா?" என்று கேட்டார் சண்முகம்.

"இந்தப் பதினைஞ்சு பிள்ளைகளிலே, குறைஞ்சது பத்துப் பிள்ளைகள் 'ரிமோவ்' வகுப்பைத் தாண்டி மேலே போனாலும், அவங்களாலே எதிர்காலத்திலே பத்துக் குடும்பங்களாவது நல்லாயிருக்கும். மனிதனை உருவாக்குகிற தொழில் நம்மோட ஆசிரியத் தொழில். என்னைக் கேட்டால், இந்தத் தோட்டத் தொழிலாளர்களோட எதிர்காலமே ஒரு வகையிலே நம்மைப் போலத் தோட்டத் தமிழ்ப் பள்ளி ஆசிரியர்கள் கையிலேதான் இருக்குன்னு சொல்வேன். தோட்டப் பள்ளிங்கிற இந்த நாற்றங்கால்களிலே, நாம அவங்களை நல்ல பயிரா வளர்த்திட்டா, அவங்க தங்களோட எதிர்காலத்தை நல்லாக் கவனிச்சுக்குவாங்க. இதுதான் நான் எதிர்பாக்கிற பின் விளைவு" என்றான் பாலன்.

"நான் சொல்லற பின் விளைவு இது இல்லே!" என்றார் சண்முகம். "நாம ரெண்டுபேரும் போய்ப் பெரிய கிராணிகிட்டே ரெண்டு விஷயத்துக்கு அநுமதி கேட்டோம். மாலை நேர வகுப்பு இங்கே நடத்தவும் பெற்றோர் சங்கம் கூட்டவும் அநுமதி கேட்டோம். நமக்கு இன்னம் அநுமதி கிடைக்கலே. அதுக்குள்ளே நீங்களே இங்கே வகுப்பைத் தொடங்கிட்டீங்க. என்னைக் கேட்டுத்தான் தொடங்கினீங்க; என்னாலே உங்களுக்கு அநுமதி மறுக்க முடியலே. நீங்க ஆனால், இப்ப என் தலைக்கும் சேர்த்துக் கல் வந்து விழும்போலே தோணுது."

"நான் இப்ப என்ன செய்யணும்னு சொல்றிங்க?"

"ஒண்ணு, இனிமே நீங்க மாலை வகுப்பை நடத்தக்கூடாது. இல்லே, ஏதாச்சும் மேலே இருந்து கேள்வி வந்தா, என்னோட அநுமதியில்லாமல் நீங்க நடத்தறதா ஒத்துக்கணும். நியாயத்தைச் செய்யறதுக்குக்கூட உரிமையில்லாத நிலையிலே நாம் வாழ்கிறோங்கிறதை நீங்க நினைச்சுப் பார்க்கணும்."

நினைத்துப் பார்த்தான் பாலன். தலைமை ஆசிரியரின் தர்மசங்கடமான நிலை அவனுக்குப் புரிந்தது. அதற்காகத் தன்னால் தொடங்கப் பட்ட பணியைக் கைவிடவும் அவனுக்கு விருப்பமில்லை. சின்னஞ்சிறு கொட்டில் போன்ற அவனுடைய லயன் வீட்டில் வகுப்பை நடத்த முடியாது. ஏற்கனவே அதில் எட்டுப் பேர்கள். மரத்தடிகளில் வைத்துக்கொண்டாலும் இதே அநுமதிப் பிரச்னை வராமல் இருக்காது. எல்லாவற்றையும் யோசித்துப் பார்த்துவிட்டு, "உங்க அநுமதியில்லாமல் நான் இங்கே வகுப்பு நடத்தறதாகவே நீங்க சொல்லி விடலாம்" என்றான் பாலன்.

"வீணா நீங்க உங்களைப் பலி கொடுக்கத் துணிஞ்சிட்டீங்க" என்றார் சண்முகம்.

"அப்படி ஒண்ணும் வரும்னு நான் நினைக்கலே. அப்படியே வந்திட்டால்கூட, சில நல்ல காரியத்துக்காகச் சில பேராவது தங்களைப் பலி கொடுத்துக்கிறது தப்பில்லேன்னு எனக்குத் தோணுது."

"நான் சொல்ல வேண்டியதைச் சொல்லிட்டேன். இந்தப் பள்ளிக்கூடத்திலேருந்து ஒரு நல்ல ஆசிரியரை இழக்க நான் விரும்பலே. பிறகு உங்க இஷ்டம்."

சண்முகம் பள்ளியை விட்டுப் புறப்பட்டு விட்டார். பாலன் தன் வகுப்புக்கு வந்து பாடத்தை உற்சாகத்தோடு நடத்த முயன்றான். அவனால் அது முடியவில்லை. தலைமையாசிரியர் கடைசியாக விடுத்த எச்சரிக்கை அவனைக் குழப்பத் தொடங்கியது. 'என்னையே இதுக்காகப் பள்ளிக்கூடத்திலேருந்து விலக்கிட்டாங்கன்னா, பிறகு எப்படி என்னாலே இந்தப் பிள்ளைகளைக் கவனிக்கமுடியும்? என்ன வேலை செய்து நான் வாழ்க்கையை அடுத்தாப்பிலே நடத்தறது?'

சிறிது நேரம் தடுமாறினான் பாலன். பிள்ளைகளிடம்கூட, 'இனிமே உங்களுக்கு இந்த மாலை வகுப்பு வேண்டாம்; வீட்டிலேயே கவனமாகப் படிச்சுக்குங்க' என்று சொல்லி விடலாமா எனத் தோன்றியது. ஆனால், தொடங்குவதற்கு முன்பே இப்படியெல்லாம் நடக்கக்கூடுமென்று அவன் எதிர்பார்க்காமல் இல்லை. வருவது வரட்டும் என்றுதான் தொடங்கினான். எதிர்பார்த்ததுதான் வந்திருக்கிறது. 'வருவது வரட்டும்; முன் வைத்த காலைப் பின்வைக்க வேண்டாம்.'

ஒரு மணி நேரத்துக்குள் வகுப்பை அன்று நடத்தி முடித்துவிட்டு, நாற்காலியில் தனியே சாய்ந்திருந்தான் பாலன். பின் விளைவுகள் பற்றிச் சற்று ஆழமாகவே அவன் சிந்திக்க வேண்டியிருந்தது. மூன்றும் பேருக்குத் தெரியாமல் தான் தூக்கி எறியப்படுவதை அவன் விரும்பவில்லை. அவனுடைய போராட்டத்தின்



நோக்கம் மற்றவர்களுக்குப் புரிந்தாக வேண்டும்.

இந்தச் சமயத்தில் அவனை வீட்டில் தேடி விட்டு அவனுடைய நண்பர்கள் சிலர் பள்ளிக் கூடத்துக்கு வந்தார்கள். தோட்டத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த அவனுடைய இளம் நண்பர்கள் அவர்கள். லயன் வீடுகளுக்கு மின்வசதி, சுகாதார வசதி, நூலகம் போன்ற கோரிக்கைகளை அவர்கள் தோட்ட நிர்வாகிகளின் முன்வைத்தார்களாம். நேரடியாக 'முடியாது' என்று சொல்லாமல், வழக்கம் போல் அந்தக் கோரிக்கைகளைப் பெரிய துரையின்முன் வைப்பதாகச் சொன்னார்களாம்.

''அப்புறம் நம்ப கோரிக்கைகளைப் பெரிய துரையோட குப்பைக் கூடையிலேதான் தேடிப் பார்க்கணும்!'' என்றான் ஒருவன்.

பாலன் தன்னுடைய கல்வித் துறைப் போராட்டம் பற்றியும் அவர்கள் காதில் போட்டு வைத்தான். ஒருவேளை தான் வேலையிலிருந்தே விலக்கப்படக்கூடும் என்பதையும் தெரிவித்தான். வந்தவர்கள் அனைவருமே இதைக் கேட்டுப் பேரதிர்ச்சி அடைந்தனர்.

''உனக்கு எந்தக் கெடுதலும் வராமல் பார்த்துக்கொள்ளவேண்டியது எங்களோட கடமை. ஏன்னா, நீ காசு பணத்துக்காக இங்கே 'பிரைவேட்' சொல்லித் தரலே. நம்ப புள்ளைங்க கடைத்தேறணும்னு நீ பாடுபடறே. இந்தக் கவலையை நீ எங்கிட்டே விட்டுடு!'' என்றான் ஒருவன். மற்றவர்களும் அவனைப் பின்பற்றியே தங்கள் உணர்ச்சிகளைக் கொட்டினர்.

அப்போது அங்கே மோட்டார் சைக்கிள் சத்தம் நெருங்கிக்கொண் டிருந்தது. வாசலில் வந்து வண்டியை நிறுத்தினர். 'டிரஸ்ஸர்' மாதவன். ''மன்மதக் குஞ்சு வந்திருக்கு'' என்று கேலியான குரலில் கிசுகிசுத்தான் ஓர் இளைஞன்.

''என்ன இது, பள்ளிக்கூடத்திலே தொழில் சங்கக் கூட்டம் நடக்கிறாப்பிலே இருக்கே?'' என்று ஏதும் தெரியாதவர்போல் கேட்டுக் கொண்டு வந்தவர், எதேச்சையாகப் பாலனைப் பார்ப்பவர்போல் பார்த்துவிட்டு, ''ஓ! உங்களோட சங்கத்தை நடத்தற உண்மையான தலைவரைத் தேடிக்கிட்டு இங்கே வந்திருக்கீங்களா?'' என்று அடுத்த கேள்வியையும் தொடுத்தார்.

இளைஞர்கள் அனைவருக்கும் கோபம் உள்ளுக்குள் குமுறிக்கொண்டு வந்தாலும், அவர்களில் யாருக்கும் அதை வெளிப்படையாகக் காட்டிக்-

கொள்ளும் துணிவில்லை. "உண்மையாவே நீங்கதான் இப்பப் பெரியதுரை!' என்று மனத்துக்குள் குமுறினான் ஒருவன். ஆனால் எல்லாருமே அவருக்கு மரியாதையைத் தெரிவிக்கும் முறையில் மௌனமாக எழுந்து நின்றனர். அவரை எதிர்த்துக்கொண்டு அங்கே யாரும் பிழைத்துவிட முடியாது.

''சர், நான் வர்ரேன்!'' என்றவர், ''பாலா, பள்ளிக்கூடத்தைப் போய் இப்படித் தொழிற்சங்கமா நீ மாத்தலாமா?'' என்று கேட்டுக்கொண்டே வெளியேறினார். அவருடைய மோட்டார்



சைக்கிளின் உறுமல் அங்கிருந்த அனைவர் உள்ளத்திலுமே அச்சத்தைப் பரப்பியது.

## 22. வடக்குமேட்டில் நடந்தது

வடக்கு மேட்டின் செங்குத்தான மண் குன்றின் மேல் நடப்பட்டிருந்தன, வரிசை வரிசையாக ரப்பர் மரங்கள். குன்றின் மறு பக்கத்துச் சரிவில் ஓர் அடர்ந்த காடு. அந்தச் சூழ்நிலையில் நாள்தோறும் செல்லம் நானூறு மரங்களில் பாலெடுத்தாக வேண்டும். சம வெளித் தோட்டமாக இருந்தால் கால் வலி எடுக்காது. குன்றில் ஒவ்வொரு வரிசைக்கும் அவள் ஏறி-இறங்கிப் பால் மரப் பட்டையைக் கீறி விடவேண்டும்; பிறகு பால் சேகரிக்க வேண்டும். வடக்கு மேடு வட்டமான வடிவில் அமைந்திருந்ததால், அக்கம்பக்கத்தில் பால் எடுப்பவர்களும் கண்களில் படமாட்டார்கள். இருள் நிறைந்த நடுக்காட்டின் பயங்கரத் தனிமையில் விடப்பட்டவள் போல் உணர்ந்தாள் செல்லம்.

ஒவ்வொரு நாள் பொழுதுபோவதும் ஒரு யுகமாகத் தோன்றியது. கைகளிலும் கால்களிலும் கணுவுக்குக் கணு வலி எடுத்தது செல்லத்துக்கு. ஒரு நாள் திடீரென்று அங்கேயே எழுந்து நடக்க முடியாதபடி விழுந்தாலும் விழுந்து விடுவோமோ என்று கூட நினைத்தாள் அவள். உடம்பிலே துளிக்கூட வலுவில்லாத நிலையில் உள்ளத்தின் உறுதியால்தான் அவள் நடமாடி வந்தாள். அந்த உறுதியாக அவளுக்குள் விளங்கியவன் கணேசன். சிரம்பானில் அவனுக்குப் பெட்ரோல் பங்கில் வேலை கிடைத்து விட்ட செய்தி இரண்டு நாட்களுக்கு முன்பு அவளுக்குக் கிடைத்தது. எப்படியாவது இன்னும் கொஞ்சநாள் பல்லைக் கடித்துக் கொண்டு நடமாடினால் போதும். அவளுக்கு இந்தத் தோட்டத்திலிருந்தே விடுதலை கிடைத்துவிடும். 'ஆனா அது வரையிலே இந்த உடம்பும் உசிரும் தாங்கணுமே!' என்று அவள் கவலைப்பட்டாள்.

தன்னுடைய அண்ணி முனியம்மா தனக்குச் செய்த போதனையை நினைத்தபோது செல்லம் மாவுக்குக் குமட்டிக் கொண்டு வந்தது. காறித் துப்பி விட்டு அடுத்த மரத்தை நோக்கி நடந்தாள். மரப்பட்டையில் கத்தியை வைத்துக் கிறி விட்டாள். அவள் நெஞ்சிலிருந்து உதிரம் பீரிட்டுக் கொட்டுவது போல் மரத்திலிருந்து பால் பீரிட்டுப் பாய்ந்தது. யந்திர கதியில் அவள் கால்கள் தள்ளாடித் தடுமாறி அடுத்த மரத்தை நாடி நடந்தன.

''நீ எதுக்காக வடக்கு மேட்டுக்குப் போய் உசிரை விடணும்? 'டிரஸ்ஸரை'யா சொன்னதைக் கேட்டாத்தான் என்ன கெட்டுப்போச்சு? அவர் தயவுக்காக எத்தனையோ பேர் காத்துக் கிடக்கிறப்ப, நீ இப்படி அவரை அவமதிச்சிட்டேன்னு, நாம எப்படி இங்கே பொளைக்கிறது? வாயிலே வயித்திலே எதுவும் வந்திட்டாலும் அவர் அதைக் கலைச்சிடுவார்..''

''அண்ணி!'' என்று வெறி பிடித்தவள் போல் கத்தினாள் செல்லம். டிரஸ்ஸர் மாதவனைப் பற்றி அதுவரையில் அவள் தன் அண்ணியிடம் ஒரு வார்த்தைக் கூடப் பேசவில்லை. பிறகு எப்படி முனியம்மாளுக்கு இந்த விஷயம் தெரிந்தது? மாதவனைத் தவிர வேறு யாருமே அவளிடம் இதைச் சொல்லியிருக்க முடியாது.

''இப்படி நீ வடக்கு மேட்டிலே போய்ச் சாகிறதைப் பார்த்தா எனக்கே பாவமாயிருக்கு. ஒரே ஒரு வேளை நீ அவர் சொல்றபடி நடந்துக்கிட்டாப் போதும். இந்தத் தோட்டத்துக் கிராணிங்ககிட்ட, ஏன் துரைகிட்டகூட, எவ்வளவு செல்வாக்கு இருக்குன்னு உனக்குத் தெரியுமா?''

''இந்தப் பிறவியிலே அது நடக்காது.''

''இதோ பார், நான் சொல்றதைக் கேக்கலேன்னா, அதனாலே உனக்கு மாத்திரமில்லே, எனக்கும் உங்க அண்ணனுக்குமே தொல்லை வரும். நம்ப மூணு பேரு பொளைப்பும் கெட்டுப் போகும்..எப்பாவது உன்னைத் தனியாப் பார்க்க வந்தார்னா அவர்கிட்ட கொஞ்சம் சிரிச்சுப் பேசு.''

ஒரு பெண் மற்றொரு பெண்ணிடம் பேசக் கூடிய பேச்சாக அது செல்லத்துக்குத் தோன்றவில்லை. தன்னுடைய அண்ணி முனியம்மா அப்படி ஒன்றும் யோக்கியமானவள் அல்ல என்பது செல்லத்துக்குத் தெரியும். குடிகாரனுக்கு வாழ்க்கைப் பட்டது அவளுடைய ஊதாரித்தனத்துக்கு ஒரு சாக்காகப் போய் விட்டது.

இடைவேளைக்குச் சற்று முன்னால், தன் வேலையை முடித்துவிட்டு முத்து அங்கே வந்தான். எழுபது எண்பது மரங்கள் செல்லத்துக்குப் பாக்கியிருந்தன. மளமளவென்று வேலையில் இறங்கினான் முத்து. செல்லமும் அவனைக் கண்ட உற்சாகத்தில் தன் மன வேதனையையும் உடல் வலியையும் மறந்தாள். இருவரும் சேர்ந்து மரம் வெட்டி முடித்து விட்டுச் சாப்பிட உட்கார்ந்தார்கள். தான் கொண்டு வந்திருந்த பாத்திரத்திலிருந்து கொஞ்சம் சோற்றையும் கறியையும் எடுத்து அவள் பாத்திரத்தில் வைத்தான். மேலும் வைக்கப் போனவனிடம், ''போதும் அண்ணா!'' என்று அவள் தடுத்து நிறுத்த வேண்டியிருந்தது.

சாப்பிட்டுக் கொண்டே செல்லம் சொன்னாள்: ''அடுத்த சன்மம்னு ஒண்ணு இருந்திச்சின்னா அப்ப நான் வந்து உங்களுக்கும் பாலுசாருக்கும் தங்கச்சியாகப் பொறக்கணும். அதுதான் என்னோட ஆசை.''

''இந்தச் சன்மத்திலியே நீ எங்களோட தங்கச்சி தான். எங்க வீட்டுச் செல்லத்தைப் போலே நீயும் ஒரு செல்லம். நீ எதுக்கும் கொஞ்சங்கூடக் கவலைப்படாதே. நாங்க இருக்கிற வரைக்கும் உனக்கு ஒரு கஷ்டமும் வராது.''

நன்றிப் பெருக்கால் செல்லத்தின் உள்ளம் அப்போது பொங்கி வழிந்தது. அவள் கண்களில் முத்துவின் பேச்சு ஆனந்தக் கண்ணீர் தளிர்விடச் செய்தது. அவள் வாழ்க்கையில் அப்படிப்பட்ட சகோதர பாசத்தின் வெளியீட்டை அவள் ஒரு முறை கூட உணர்ந்ததில்லை.

நேரமாகியது. ஓட்டமும் நடையுமாகத் தன் வேலைக்கு முத்து கிளம்பிவிட்டான்.

உண்ட களைப்புத் தீர்ந்தவுடன் செல்லமும் மேட்டின் அடிப்பாகத்தில் தொடங்கி, பால் சேகரித்துக் கொண்டே மேலே வந்து கொண்டிருந்தாள். சுற்றிலும் ஆட்சி செய்து கொண்டிருந்த தனிமையின் பயங்கரத்தை அவள் அப்போது உணரவில்லை. வானத்தில் மேக மூட்டம் இருந்ததால் தோட்டம் வழக்கத்தை

விட இருண்டு கிடந்தது; எங்குமே ஆள் அரவம் இல்லை. திரும்பிய பக்கமெல்லாம் வரிசை வரிசையாக மரங்கள்; காற்றின் சலசலப்புக் கூட இல்லை.

திடீரென்று காட்டுப் பக்கத்திலிருந்து ஒரு குரல் கேட்டது:

''செல்லம்!''

தூக்கிவாரிப் போட்டது செல்லத்துக்கு. அது நிச்சயமாக முத்துவின் குரல் அல்ல. வேறு யாரும் மேற்பார்வை செய்ய வருவதாக இருந்தால் கீழ்ப்பக்கத்திலிருந்து தான் அவர்கள் வருவார்கள்.

மிரண்டு போய்க் காட்டின் பக்கம் குரல் வந்த திசையில் திரும்பிப் பார்த்தாள் செல்லம். அங்கே டிரஸ்ஸர் மாதவன் நிதானமாக அடிமேல் அடிவைத்து நடந்து வந்து கொண்டிருந்தார். தோட்டத்தைச் சுற்றிக் கொண்டு வந்து மறுபக்கத்தில் மோட்டார் சைக்கிளை நிறுத்தி விட்டு வருகிறாரா? மோட்டார் சைக்கிளின் சத்தமே கேட்கவில்லையே!

வேர்த்துக் கொட்டியது செல்லம்மாவுக்கு. கையிலிருந்த பால் கிண்ணம் தரையில் விழுந்தது. நிலைகுத்திய பார்வையுடன் வெலவெலத்துப் போனாள்.

''பயப்படாதே செல்லம், நான் என்ன கரடியா? புலியா? உன்னோட அண்ணி, முனியம்மா உங்கிட்ட சொல்லியிருக்குமே! நாளையிலேருந்தே நீ இந்த வடக்கு மேட்டிலே வேலை செய்ய வேண்டாம்.'' பேசிக்கொண்டே செல்லத்திடம் நெருங்கி வந்தார் மாதவன்.

அவர் பேச்சு எதுவுமே செல்லத்தின் காதுகளில் விழவில்லை. கண்களை இருட்டிக்கொண்டு வந்தது அவளுக்கு. அதற்குள் அவளுக்கு மிகவும் அருகில் மாதவன் வந்துவிட்டார். எட்டி அவளுடைய வலது கரத்தை மெல்லப் பற்றினார்.

அவ்வளவுதான்.

தன்னுடைய பலம் எல்லாம் சேர்த்து, ''ஐயோ, அண்ணா! அண்ணா!'' என்று அந்த வடக்கு மேடே எதிரொலிக்கும்படி குரல் கொடுத்தாள் செல்லம். நாலைந்து முறை உயிரைப் பிடித்துக்கொண்டு கத்திவிட்டாள்.

தன்னுடைய ஸ்பரிசத்தில் எல்லாப் பெண்களுமே துவண்டு விழவேண்டுமென்று எதிர் பார்ப்பார் மாதவன். இது அவருக்கு வழக்கத்துக்கு மாறான அநுபவமாய்த் தோன்றியது. அவள் குரலைக் கேட்டு எந்த அண்ணன் அங்கே வரப்போகிறான்? யாரும் அங்கே வரக்கூடும் என்று அவர் நினைக்கவில்லை. எதற்கும் பாதுகாப்பாக அவள் வாயைச் சட்டென்று பொத்தினார். அவள் திமிறிக்கொண்டு காட்டுப் பக்கம் ஓட முயன்றாள். பயப்பிராந்தியில் அவளால் எதையும் நினைத்துப் பார்த்துச் செய்ய முடியவில்லை. ஓடுவதற்கு அவள் கால்களில் தெம்பும் இல்லை. மூர்க்கத்தனமாக ஓடிப் போய் அவளைப் பற்றி இழுத்து, அவள் முகத்தைத் தன் மார்பில் அழுத்திக்கொண்டார் மாதவன். பிறகு அவளைக் கீழே தள்ளினார். அவள் மேலே விழுந்து அவளைப் பற்றிக் கொண்டார்.

செல்லம்மாவுக்கு வெறி பிடித்து விட்டது. அவர் நெஞ்சைக் கடித்தாள்; கையைக் கடித்தாள்; திமிறினாள்; புரண்டாள்; தப்பித்துக் கொள்ள முயன்றாள்.

மாதவனுடைய வெறிக்கு அவ்வளவு எளிதாக அங்கே வெற்றி கிடைக்காதுபோல்

தோன்றியது. புலியின் பிடியில் அகப்பட்ட மானின் நிலையில் இருந்தாலும், புலியின் வாய்க்குள் தன் கொம்பை விட்டுத் தப்ப முயலும் கலைமானாக அவள் மாறியிருந்தாள். தன் உயிர் போனாலும் போகட்டும் என்ற பிடிவாதமே அவளிடம் தலை தூக்கியிருந்தது. உயிரே போனாலும் மானம் போய்விடக்கூடாது.

இந்தப் போராட்டத்தில் அங்கே கேட்ட காலடி ஓசையை அவர்கள் இருவருமே கவனிக்கவில்லை.

வேர்க்க விறுவிறுக்க அங்கு அவள் குரல் கேட்டு ஓடி வந்த முத்து, நொடிப்போதில் நடப்பைப் புரிந்து கொண்டான். அதன் பிறகு அவன் 'சாது'வான முத்துவாகவோ 'சாமியார்' முத்துவாகவோ இருக்கவில்லை; முரடன் முத்துவாக மாறிப் போனான். விசுவரூப மெடுத்து ராவணனின் தலைநகரை அழிக்க முற்பட்ட ஆஞ்சநேயராகி விட்டான். மாதவனின் தலைமயிரைப் பற்றி இழுத்து, அவர் பிடியிலிருந்து செல்லத்தை விடுவித்து, முதுகுப் புறம் தரையில் படும்படி அவரைத் தள்ளி விட்டு, அவர் நெஞ்சின்மேல் ஏறி அமர்ந்து கொண்டான். இரண்டு கைகளும் ஓயும் வரையில் அவர் முகத்தில் மாறி மாறி அறைந்தான். மாதவனின் மூக்கு வழியே ரத்தம் கொட்டத் தொடங்கியது. வாய் கிழிந்தது.

''இதே இடத்திலே உன்னைக் கொலை செஞ்சு போட்டிடுவேன். உன்னோட பொண்டாட்டிக் காகவும் உன்னோட பிள்ளைங்களுக்காகவும் உனக்கு உயிர்ப்பிச்சை கொடுக்கிறேன்னு வச்சுக்க. தோட்டத்திலே இருக்கிறவன் தங்கச்சியெல்லாம், பொண்டாட்டியெல்லாம், உன்னோட பொண்டாட்டிங்கற திமிரா உனக்கு?''

மாதவனின் மார்பை விட்டு நிதானமாக எழுந்தான் முத்து. கைகளில் பட்டிருந்த ரத்தக் கறையைப் பக்கத்திலிருந்த மரத்தில் துடைத்துக்கொண்டான். கண்களில் அனல் கக்க மாதவனை உற்றுப் பார்த்தான். மாதவனின் நிலை அப்போது பார்ப்பதற்கு மிகவும் பரிதாபமாக இருந்தது. அவரால் எழுந்திருக்கக்கூட முடியவில்லை. அவர் கையைப் பற்றி இழுத்துத் தூக்கிவிட்டான்.

''போ! சீக்கிரம் போய், எதையாச்சும் பொய் சொல்லி என்னைப்பத்திப் போலீசுக்குப் புகார் கொடு. நான் எதுக்கும் தயாராத்தான் இருக்கேன், போ!''

அதற்குள் அங்கே சிறு கூட்டம் கூடிவிட்டது. வடக்கு மேட்டில் வேலை பார்த்த தொழிலாளர்களில் பத்துப் பதினைந்து பேர் அங்கே குழுமிவிட்டனர். நடந்ததைப் புரிந்து கொள்ள அவர்களுக்கு அதிக நேரம் ஆகவில்லை. அவர்கள் எல்லாருக்குமே உள்ளுக்குள் ஓர் ஆனந்தம். பலருடைய வாழ்க்கையைப் பாழாக்கிய ஒருவனுக்கு இன்று தண்டனை கிடைத்து விட்டதல்லவா?

''உங்க வேலையை முடிச்சுட்டு, யாராச்சும் ரெண்டு பேர் எங்க மரத்துப் பாலையும் எடுத்து நிறைக்கு அனுப்புங்க. நான் கொண்டு போய்த் தங்கச்சியை வீட்டிலே விட்டுவிட்டு வர்றேன்.''

''நாங்க கவனிச்சுக்கறோம், நீ போ'' என்றார்கள் ஒருமித்த குரலில்.

செல்லம் அவமானத்தால் கூனிக் குறுகிய படி முத்துவின் பின்னால் நடந்தாள். முத்து, ''கவலைப்படாதேம்மா, கவலைப்படாதே'' என்று அவளைத் தேற்றிக்கொண்டு வந்தான்.

''அண்ணா, என்னாலே உங்களுக்கு எவ்வளவு கஷ்டம் அண்ணா!'' செல்லத்தின் குரல் தழுதழுத்தது.

''நான் ஏதாச்சும் என் மனசுக்குப் புடிச்ச ஒரு நல்ல காரியம் செஞ்சிருக்கேன்னா, இன்னிக்கு அந்த மன்மதப் பயலை வாட்டி எடுத்ததுதான்!''

''அவன் உங்களை என்ன செய்வானோன்னு எனக்குப் பயமா இருக்கண்ணா!''

''போலீஸ்லே சொல்லுவான். போலீஸ் கிட்டே எனக்குக் கொஞ்சம் உதை கிடைக்கும். வாங்கிக்க வேண்டியதுதான். பிறகு ஜெயிலுக்குள்ளே தள்ளுவாங்க; போயிட்டு வந்தாப் போச்சு.''

எதைப் பற்றியும் கவலைப்படாதவன்போல் முத்து உற்சாகத்தோடு பேசிக்கொண்டே வந்தான். அவனே வாய்விட்டுச் சொன்னபடி, தான் ஒரு நல்ல காரியம் செய்துவிட்ட பெருமிதத்தில் அவன் மனம் பூரிப்படைந்திருந்தது. அந்த நேரத்தில் தான் அங்கே வர முடியாமல் இருந்திருந்தால் என்ன நடந்திருக்குமோ?

செல்லத்தின் வீட்டில் அவளைக் கொண்டு போய் விட்டுவிட்டு, அக்கம்பக்கத்தில் இருந்தவர்களிடம் நடந்ததைச் சொல்லி, அவளைக் கவனித்துக் கொள்ளும்படி கேட்டுக் கொண்டான். ஒரு பையனைச் சிரம்பானுக்கு அனுப்பிக் கணேசனுக்குத் தகவல் கொடுக்கச் சொன்னான். தன் அண்ணன் பாலனுக்கும் செய்தி அனுப்பி விட்டு வீட்டுக்குத் திரும்பினான்.

சமவெளியில் வேலை பார்த்துக்கொண்டிருந்தவர்கள் வீட்டுக்குத் திரும்பும் நேரம் அது. செய்தி காட்டுத் தீ போல் பரவியது. மாதவன் நிர்வாகத்தில் சொல்லி, தொலைபேசியின் மூலமே போலீஸுக்குப் புகார் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தாராம். அவர் கொடுத்திருந்த புகாரோ விசித்திரமான புகார்: தோட்டத்தில் வேலை செய்ய வேண்டிய நேரத்தில் வேலையை மறந்துவிட்டு முத்துவும் செல்லம்மாளும் தோட்டக் காட்டில் கட்டிப் புரண்டார்களாம். அதை மாதவன் தடுக்கப் போனபோது, முத்து அவரைக் கொலை செய்யத் துணிந்து விட்டானாம்!

பாலன், மாதவன் கட்டிவிட்ட கதையையும் கேட்டுக்கொண்டு, முதலில் செல்லத்தைப் பார்ப்பதற்காக அவள் வீட்டுக்குச் சென்றான். அதற்குள் அங்கே பெண்கள் கூட்டம் கூடியிருந்தது. அவளைச் சந்தித்து, ''இங்கே உங்க அண்ணியோ அண்ணனோ ஏதாச்சும் பேசினா நீ நேரே புறப்பட்டு எங்க வீட்டுக்கு வந்திடு; நான் போய் என்னோட தங்கச்சியை இங்கே அனுப்பி வைக்கிறேன்'' என்று ஆறுதல் கூறினான். அதற்குள் அவனையும் தோட்டத்து இளைஞர்கள் கூட்டம் சூழ்ந்துகொண்டது. எல்லாருமாகப் பாலனின் வீட்டுக்குப் போனார்கள். அங்கேயும் ஒரு கூட்டம் இருந்தது. மாதவனைச் சிகிச்சைக்காகச் சிரம்பான் மருத்துவமனைக்கு அனுப்பியிருந்தார்கள்.

போலீஸ் லாரி ஒன்று தோட்டத்துக்குள் புகுந்தது. பிறகு ஒரு கிராணியை அதில் ஏற்றிக்கொண்டு நேரே முத்துவின் வீட்டுக்கு முன்னால் வந்து நின்றது. வாயிலும் வயிற்றிலும் அடித்துக் கொண்டு வேலம்மாள் தன் மகன் முத்துவைப் பற்றிக்கொண்டு கதறினாள்.

(தொடரும்)




## 23 விடியும் வேளையின் தொடக்கம்

பாலனின் வீட்டுக்கு முன் நின்ற போலீஸ் லாரியைச் சுற்றிலும் தோட்டத் தொழிலாளர்களின் கூட்டம் சூழத் தொடங்கியது. உணர்ச்சி வசப்பட்டிருந்த இளம் தொழிலாளர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. ஒவ்வொருவரும் வெளிப்படையாகவே 'டிரஸ்ஸர்' மாதவனை விமர்சனம் செய்யத் தொடங்கிவிட்டார்கள். எது நடந்தாலும் அச்சத்தோடு அக்கம்பக்கம் பார்த்துக் கொண்டு வெளியில் தெரியாதபடி பேசிப் பழக்கப்பட்டவர்கள், அன்று வெளிப்படையாகவே தங்கள் குரலை எழுப்ப முற்பட்டிருந்தார்கள். எத்தனையோ ஆண்டுகளாக அங்கே நடைபெற்று வந்த தீமைகளுக்குக் குனிந்து கொடுத்துப் பழகியவர்கள், அன்று முதல் முறையாகச் சற்றே தலை நிமிர்ந்து ஆத்திரம் பொங்கும் விழிகளால் தங்களுக்கு முன் நிற்கும் பிரச்னையின் சின்னத்தைப் பார்ப்பது போல் போலீஸ் லாரியைப் பார்த்தார்கள்.

பாலன் அவர்களிடம் அமைதியாக இருக்கும்படி முறையிட்டுவிட்டு, தன் வீட்டிலிருந்து முத்துவை லாரிக்கு அழைத்து வந்தான். தாயார் வேலம்மாளின் பிடியிலிருந்து முத்துவைப் பிரித்து வெளியில் அழைத்து வருவது தான் அவனுக்குப் பெரும்பாடாக இருந்தது. தன் சகோதரனிடம் பாலன், ''உண்மையா எது நடந்திச்சோ, அதைப் போலீஸ் ஸ்டேஷனிலே சொல்லு; உயிரே போனாலும் போகட்டும்; மாத்திச் சொல்லிடாதே!''

களில் குபீரென்று கண்ணீர் பொங்கியது. ''நீ கவலைப்படாதே பாலா; தூக்குமேடைக்கு அனுப்பினாலும் நான் என்னைக் காப்பாத்திக்கறதுக்காகப் பொய் சொல்லமாட்டேன்'' என்று தழுதழுத்த குரலில் விடையளித்தான் முத்து.

போலீஸ் லாரியில் வந்த கிராணி, ''அந்தக் குட்டி செல்லம் எங்கே இருக்கா? அவளையும் கூட்டியாங்க! விசாரிச்சிட்டு அனுப்புவாங்க!'' என்றான்.

அதுவரையில் பொறுமையாக இருந்த பாலன், ''செல்லத்தை எதுக்கு அனுப்பணும்? முடியாது!'' என்று கத்தினான்.

''நாங்க அனுப்பமாட்டோம்!'' என்று பல குரல்கள் கூட்டத்துக்கிடையே இருந்து குமுறின.

''முடியாது! செல்லத்தை நாங்க ஸ்டேஷனுக்கு அனுப்ப முடியாது!'' என்று லாரியில் வந்திருந்த போலீஸ்காரர்களிடம் மலாய் மொழியில் கூறினான் பாலன்.

''நாங்க விசாரணை செய்திட்டு அனுப்பிடறோம்'' என்று கூறினார் ஒரு போலீஸ்காரர்.

''இங்கேயே நீங்க விசாரணையை வச்சிடுங்க'' என்றான் பாலன்; ''ஏற்கனவே அந்தப் பெண் நொந்துபோயிருக்கு. ஸ்டேஷனுக்கு அனுப்பிச்சா அது தற்கொலை செய்துக்கிட்டுச் செத்துப் போயிடும்; வயசுப் பெண்ணை எங்களாலே ஸ்டேஷனுக்கு அனுப்ப முடியாது. நீங்க எங்களை என்ன செய்தாலும் செய்துக்குங்க!''

''நீங்க நியாயம் செய்யறதா இருந்தா, அந்த மாதவனைத்தான் ஜெயில்லே அடைக்கணும். அவனைத்தான் சுட்டுக் கொல்லணும். அவன் பொய்க் கேசு குடுத்திட்டா, அதுக்காக முத்துவையும் செல்லத்தையுமா ஜெயில்லே அடைக்கப் போறீங்க?''

அந்த இளைஞன் எந்த உணர்ச்சியில் இருந்தானோ அந்த உணர்ச்சியில்தான் கூட்டமும் இருந்தது. கூட்டத்தின் மனப் போக்கை உணர்ந்துகொண்ட ஒரு வயதான போலீஸ்காரர் லாரிக்குள்ளிருந்து வெளியில் வந்தார். அவர் தலைமைக் காவலராகவோ அல்லது சப் இன்ஸ்பெக்டராகவோ இருக்க வேண்டும். மலாய்க்காரர். மலாய் மொழியில் பேசினார்.

''நான் ஒரு குடும்பத்துக்குத் தலைவன். எனக்கும் வயசுக்கு வந்த பொண் இருக்கு. என்னோட சொந்தப் பொண்ணைக் கவனிச்சுக் கருப்பலே நான் இதைக் கவனிச்சுக்கறேன். நான் என்னோட மேல் அதிகாரி சொன்னபடி நடக்கணும். என்னோட கடமையைச் செய்யணும். அதுக்கு நீங்கள்ளாம் தயவு செய்து உதவி பண்ணுங்க. வேணும்னு அந்தப் பொண்ணுக்குத் துணையா யாரையாவது அதோட அனுப்பிவையுங்க.''

மலாய்ப் போலீஸ்காரர்கள் மரியாதையுடனும் கண்ணியத்துடனும் பழகும் இயல்புடையவர்கள். அதே சமயம் கடமையில் மிகவும் கண்டிப்பானவர்கள். பாலனுக்கு அந்தப் போலீஸ்காரர் பேசியதில் இருந்த நியாயம் புரிந்தது.

''அப்படீன்னு செல்லத்தோட என் அம்மாவும் போயிட்டு வரட்டும். செல்லத்தைப் போய்க் கூட்டிக்கிட்டு வாங்க!''

கூட்டத்தில் இருந்தவர்களுக்குப் பாலனின் இந்தப் பேச்சு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. வயசு வந்த பெண்ணை, அதிலும் ஒரு கயவனால் அவமானப்படுத்தப்பட்ட பெண்ணை, அவன் கொடுத்த பொய்ப் புகாரின்பேரில் எப்படிக் காவல் நிலையத்துக்கு அனுப்புவது? இது என்ன நியாயம்?

பாலன் அவர்களிடம் நிலைமையை எடுத்துச் சொல்லி, ஓர் இளைஞனையும் தன் தங்கையையும் செல்லத்தின் வீட்டுக்கு அனுப்பி வைத்தான். அதற்குள் தாயார் வேலம்மாளைச் செல்லத்துடன் புறப்படுவதற்குத் தயாராக இருக்கும்படி கூறினான்.

லாரியில் வந்த கிராணி, அது வரையில் எதையோ பாலனிடம் சொல்ல மறந்திருந்தவன்போல், ''ஆமா பாலா, இதை உங்கிட்டே குடுக்கச் சொல்லி ஆபீசிலே குடுத்தனுப்பிச்சாங்க; இப்பத்தான் நினைவுக்கு வந்திச்சு'' என்று ஒரு கடிதத்தை எடுத்து நீட்டி, அதைப் பெற்றுக் கொண்டதற்காக ஒரு தாளில் கையெழுத்து வாங்கிக்கொண்டான்.

கடிதத்தைப் பிரித்துப் படித்தான் பாலன். அவன் முகத்தில் ஈயாடவில்லை. ஒரு கணம் சுரீர் என்று நெஞ்சுக்குள் ஏதோ ஊசி பாய்ந்ததுபோல் வலி எடுத்தது. அந்தக் கடிதத்துக்குள் இருந்த செய்தி அங்கிருந்த மற்ற இளைஞர்களுக்கும் தெரிய வேண்டிய செய்திதான். ஆனால் அதை அவன் அப்போது போலீஸ் லாரி அங்கிருந்து கிளம்பிய பிறகு மற்றவர்களிடம் சொல்ல நினைத்தான்.

செல்லம்மாள் வந்து சேர்ந்தாள். அவள் முகத்திலிருந்த பயம் இன்னும் மாறவில்லை. பரிதாபமாகப் பாலனைப் பார்த்தாள். கண்கள் குளங்களாக மாறியிருந்தன.

''செல்லம், நீ ஒண்ணுக்கும் கவலைப்பட வேண்டாம். நடந்த எல்லா விஷயத்தையும் போலீசிலே சொல்லிடு. மாதவன் முன்னுலேயே உங்கிட்ட எப்படியெல்லாம் நடந்துக்கிட்டான்கிறதையும் சொல்லு. அம்மா உனக்குத் துணையாத்தான் வருது. நாங்க அத்தனை பேரும் உனக்குப் பின்னாலே இருக்கோம். நாளைக்கே நீ இங்கே திரும்பிடலாம். கணேசன் இப்போ வந்திடுவான். காலையிலே அவனை ஸ்டேஷனுக்கு அனுப்பி வைக்கிறேன். எதுக்கும் நீ கவலைப்படாதே!'' என்று ஆறுதல் கூறிச் செல்லத்தை வேலம்மாளோடு அனுப்பிவைத்தான் பாலன்.

போலீஸ் லாரி அங்கிருந்து நகர்ந்தது. பிறகு வேகமாகச் செம்மண் புழுதியை வாரி இறைத்துக்கொண்டு விரைந்தது. கிராணியை அலுவலக வாசலில் இறக்கி விட்டபின், தோட்டத்தை விட்டே வெளியேறி நெடுஞ்சாலையில் திரும்பி மறைந்தது.

லயத்தில் கூடியிருந்த கூட்டம் கலையத் தொடங்கியது. இருபது முப்பது இளைஞர்கள் மட்டிலும் பாலனைச் சூழ்ந்துகொண்டு நின்றார்கள். பாலன் மெதுவாக அவர்களிடம் தனக்கு வந்த கடிதத்தின் செய்தியைக் கூறினான்.

''இப்பத்தான் எனக்கு ஒரு சேதி கிடைச்சுது. என்னை வேலையை விட்டு நீக்கிவிட்டாங்க'' என்று அமைதியோடு தகவலை வெளியிட்டான் பாலன்.

''என்ன?''

கடிதத்தை எடுத்து அங்கிருந்த இளைஞர்களில் ஒருவனிடம் நீட்டினான். கடிதம் அப்படியே பல கைகளுக்கு மாறியது. அதில் பாலன் தொழிற்சங்க நடவடிக்கைகளுக்குப் பள்ளிக்கூடத்தை அனுமதியின்றிப் பயன்படுத்தியதாகவும் கட்டுப்பாட்டை மீறி விரும்பத்தகாத செயல்களில் ஈடுபட்டதாகவும் அதனால் வேலையிலிருந்து அவனை நீக்கியிருப்பதாகவும் எழுதியிருந்தார்கள்.

''பாலா, இதை நாங்க இப்படியே விடப் போறதில்லை; இது உன்னோட பிரச்னையில்லே. இதை நீ எங்க கிட்டே விட்டுடு'' என்று குமுறினான் ஒருவன்.

பாலன் தன் கவலைக்கிடையே மெல்லச் சிரிக்க முயன்றான். அவர்களால் தனக்காக ஏதும் செய்ய முடியுமென்று பாலனுக்குத் தோன்றவில்லை. ஆனாலும் அந்த அளவுக்காவது தீமைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கும் துணிவு அவர்களுக்குள் வளர்ந்திருப்பதை அவன் தனக்குள் வரவேற்றான்.

''நீங்க எனக்காக எதுவுமே செய்ய வேண்டாம். ஆனால் இதை என்னோட சொந்த விஷயமா நினைக்காததுனாலேதான் நான் உங்களுக்கு இதைச் சொன்னேன். நீங்க இப்ப எனக்காகக் கோபப்பட்டீங்களே, உங்களோட இந்தக் கோபம் இப்போதைக்கு எனக்குப் போதும். வீணா எனக்காக மலையோட போய்

என்னோட கூடப் பிறந்த முத்து ஒருத்தன் இப்ப ஜெயிலுக்குப் போறது போதும்.''

அப்போது அங்கே ஒரு வாடகைக் கார் வந்து நின்றது. அதற்குள்ளிருந்து பரபரப்போடு குதித்தான் கணேசன். தோட்டத்துக்குள் நுழைந்தவுடன் அதன் முகப்பிலேயே அவன் எல்லாச் செய்திகளையும் கேட்டுத் தெரிந்துகொண்டு வந்திருந்தான். சிரம்பானிலிருந்து அவன் எஸ்டேட்டை நோக்கி விரைந்தபோது, அவனுக்கு எதிரில் வந்த போலீஸ் லாரிக்குள்தான் அவனுடைய செல்லமும் பாலனின் தாயாரும் இருந்திருக்கிறார்கள்.

கணேசன் இங்கு வந்தவுடன் அவனுக்கு மற்றோர் அதிர்ச்சி தரும் செய்தி காத்திருந்தது. பாலனின் தோட்டப்பள்ளி ஆசிரியர் வேலைக்குச் சீட்டுக் கிழிக்கப்பட்ட செய்தி அது. பாலன் தன்னுடைய நிலையைப் பொருட்படுத்தாமல் நண்பனுக்கு ஆலோசனை கூறினான்.

''கணேசா, நீ சிரம்பானுக்குத் திரும்பிப் போ! உடனே நீ செல்லத்தைப் பார்க்கணும்னு அனுமதி கிடைக்காது. நாளைக்குக் காலையிலே நீ பார்க்கலாம். செல்லத்தைப் பத்தி நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். எங்கம்மாவும் துணைக்குப் போயிருக்கு.''

கணேசன் ஒரு நிமிடம் மரம்போல் வாய் பேசாமல் மௌனமாக நின்று விட்டு, ''இப்போ எனக்கு இங்கேதான் வேலை இருக்கு; காலையிலே போய்ச் செல்லத்தைப் பார்த்துக்கிறேன்'' என்றான்.

''பொழுது இருட்டிப் போச்சு. நான் எங்கப்பாவுக்கும் தம்பி தங்கச்சிகளுக்கும் ஆறுதல் சொல்லணும். முத்துவும் போயிட்டான். என்னோட வேலையையும் பறிச்சிட்டாங்க. இப்ப, கொஞ்சநேரம் நான் குடும்பத்தோட இருக்கேன்; காலையிலே நாம சந்திக்கலாம்'' என்றான் பாலன்.

''சரி! பாலா, நீ போ!'' என்று பாலனை அனுப்பி விட்டு, ''வாங்க, நாமெல்லாம் கொஞ்சம் மாரியம்மன் கோயில் பக்கம் போவோம். அங்கே உட்கார்ந்து பேசுவோம்'' என்றான் கணேசன். தங்களுக்கு மத்தியில் கணேசனைக் கண்டவுடன் இளைஞர்களுக்கு ஒரு புதிய தெம்பு பிறந்தது. பாலனுக்கிருந்த மன நிலையில் அவர்கள் அப்போது அவனுக்குச் சிரமம் கொடுக்க விரும்பவில்லை. கூட்டம் மாரியம்மன் கோயிலை நோக்கி நகர்ந்தது.

தனியே விடப்பட்ட பாலன் தன் வீட்டுக்குள் நுழைந்தான். அங்கே அவன் தங்கைகள் செல்லமும் கமலமும் தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தார்கள். அவர்கள் அண்ணன் முத்துவைப் போலீஸ்காரர்கள் அழைத்துக் கொண்டு போய்விட்டார்கள். மற்றோர் அண்ணன் பாலனுக்கு வேலை போய்விட்டது. சின்னத் தம்பியை அழைத்துக்கொண்டு தாயாரும் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போயிருக்கிறாள். தகப்பனார் வீரப்பன் முழங்கால்களில் கைகளைக் கட்டியபடி துயரமே உருவாய்த் தரையில் குந்தியிருந்தான். அவனுடைய பார்வை எங்கோ சூனியத்தை வெறித்து நோக்கியபடி இருந்தது. 'இனி இந்தக் குடும்பம் என்னத்துக்கு ஆகும்? மூத்த பிள்ளை முருகன் குடும்பத்தையே கை கழுவிட்டான். முத்துவும் முரட்டுத்தனமாக் காரியத்தைச் செய்திட்டு உள்ளே போயிட்டான். இனிமே அவன் திரும்பி வந்தால்தான் [illegible] சயம். பாலனோட பொழைப்பிலேயும் மண் விழுந்திடுச்சு. இனி இந்தக் குடும்பம் [illegible]னத்துக்கு ஆகும்?' வீரப்பனின் நெஞ்சுக்கு[illegible] அலை அலையாக நினைவுகள் தலைதூக்கி மோ[illegible] கொண்டிருந்தன.

தன் தகப்பனுருக்கு அருகில் உட்கார்ந்து வீரப்பனைப் பார்த்து, ''அப்பா!'' என[illegible] குரல் கொடுத்தான் பாலன். வீரப்[illegible] மௌனமாகத் தன் மகனைத் திரும்பிப் பா[illegible]தான்.

''நீங்க கொஞ்சங்கூடக் கவலைப்படாதி[illegible] அப்பா; முத்துவுக்குத் தண்டனை கிடைச்[illegible]லும் அது அதிகமான தண்டனையா இருக்கா[illegible] நல்ல வக்கீல் வச்சு வாதாடுவோம். எப்[illegible]யும் அவனைச் சீக்கிரமா வெளியே கொ[illegible]டாறது என்னோட பொறுப்பு'' என்[illegible] பாலன்.

'''கேசு'க்குப் போறதுன்னு பண[illegible] வேணுமே பாலா? உனக்கும் வேலை போ[illegible]டுச்சு. நாங்க சம்பாரிக்கிறது வீட்டுச் செ[illegible]வுக்கே பத்தாது. வம்பு, வளக்கு, வ[illegible]லுன்னு நம்பளாலே தாங்கக்கூடிய சங்கதி[illegible] அது?''

வீரப்பனின் கூற்றிலிருந்த அப்பட்டமா[illegible] உண்மைகள் பாலனின் இதயத்தைப் ப[illegible] ஓர் உலுக்கு உலுக்கின. 'ஆமா, வயிற்[illegible] சோத்துக்கே வழியில்லாதப்ப, வழக்குக்[illegible] செலவு செய்யப் பணத்துக்கு எங்கே போறது[illegible]

''இந்த வேலையிலே நான் கடைசி வரையி[illegible] இருக்கணும்னுதான் ஆசைப்பட்டேன்; [illegible] முடியாமல் போயிடுச்சு'' என்று சொல்[illegible] நீண்ட பெருமூச்சு விட்டான் பால[illegible] ''இதிலே இருந்தால் தோட்டத்துப் பிள்ளை[illegible]ளுக்கு ஏதாச்சும் செய்ய முடியும், குடும்ப[illegible]துக்கும் உதவியா யிருக்கும்னு நினைச்சேன்[illegible] ஆனா?..''

''உனக்கு எதுக்கப்பா இந்த ஊர் வம்[illegible] கடைசியிலே நீதானே சிரமப்பட்டறே? நம்[illegible] குடும்பந்தானே திண்டாடப் போகுது?''

''எங்கேயாவது போய் நான் ஒரு வே[illegible] தேடிக்கிட்டு நம்ப வீட்டுக்கு மாச மாச[illegible] பணம் அனுப்பறேன்பா.''

''உங்கண்ணன் முருகனும் இப்படித்தா[illegible] சொன்னான்.''

''அப்பா!'' என்று பதறினான் பால[illegible] ''சத்தியமாச் சொல்றேன்பா; நான் எங்[illegible] இருந்தாலும் நம்ப வீட்டையும் மறந்திடமா[illegible]டேன்; தோட்டத்திலே வாழறவங்களையு[illegible] மறந்திடமாட்டேன். முந்தியே நான் ஒ[illegible] முடிவுக்கு வந்திட்டேன். இனிமே இந்தச் ச[illegible]மத்திலே நான் இன்னொரு கல்யாணம் செ[illegible]துக்கப் போறதில்லே.''

''பாலா!'' என்று அதட்டினான், அவ[illegible] பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்ட வீரப்பன்.

''இந்த முடிவை நான் இப்பத் திடீர்[illegible] செய்திடலே. கண்ணம்மாவைக் கல்யாண[illegible] செய்துக்கிட்டு ஒரு நாள் வாழ்க்கையை நா[illegible] அதோட வாழ்ந்தாச்சு. அந்த நின[illegible] ஒண்ணே போதும். தனியாப் பொண்டாட்[illegible] பிள்ளை, குடும்பம்னு எனக்கு ஆயிட்ட[illegible]

பிறகு என்னாலே மத்தவங்களுக்காக உழைக்க முடியாதுன்னுதான் கண்ணம்மா அப்படித் தற்கொலை செய்துக்கிட்டிருக்கு அப்பா! நான் உங்களையும் மறந்திடமாட்டேன்: தோட்டக் காட்டிலே வாழ்றவங்களையும் மறந்திடமாட் டேன்: கவலைப்படாதிங்கப்பா..''

தன்னுடைய மகன் பாலனைப் புரிந்துகொள் வது வீரப்பனுக்கு மிகவும் கஷ்டமாக இருந் தது. பாலன் வேறு வேலை தேட வேண்டு மென்றால், குடும்பத்தை விட்டுப் பிரிந்து அவன் வெளியூர் செல்ல வேண்டும். முத்துவும் வீட்டில் இல்லாத நிலையில் பாலனும் வீட்டை



விட்டுப் போவது வீரப்பனுக்குப் பெரும் கலக்கத்தைக் கொடுத்தது.

''பள்ளிக்கூட நேரத்துக்கப்பாலே நீ பாடம் நடத்தாமல் இருந்திருக்கணும். மத்தவங்களுக் காக உழைச்சதுக்கு என்ன பலன் கிடைச்சது, பார்த்தியா?''

''அப்பா, நூறு வருஷமாக் குனிஞ்சு கொடுத்து, குனிஞ்சு கொடுத்துக்கிட்டுப் பட்டாச்சு. கொத்தடிமைக் கூலியா வாழ்க் கையை நடத்தியாச்சு. நம்ப சமுதாயத்தோட தன்னம்பிக்கையே இதனாலே பறி போயிடுச்சு: அடுத்த தலைமுறையாவது அடிமையா வாழக் கூடாதுன்னு நான் ஆசைப்படறேன்: எல்லா ரையும்போல நாமும் சுதந்தரமாக் கை வீசி நடக்கக் கத்துக்கணும். அதுக்காக என்னைப் போலே பத்துப் பேர் துணிய வேண்டிய காலம் வந்திருச்சு. இதிலே என் போராட்டம் தனிப் போராட்டமா இருந்தாலும் நான் கவலைப் படப்போறதில்லே.''

தனக்குப் புரியாத மொழியில் தன் மகன் பேசுவதுபோல் உணர்ந்தான் வீரப்பன். ஆனாலும் தன்னுடைய மகனின் பேச்சில் ஒரு வகைச் சத்திய வைராக்கியம் ஒலிப்பதுபோல் வீரப்பனுக்குத் தோன்றியது.

இந்தச் சமயத்தில் லயத்தை ஒட்டிய தெரு வில் கூட்டங்கூட்டமாகச் சிலர் பேசிக்கொண்டு வருவது கேட்டது. எழுந்து வெளியில் சென்று எட்டிப் பார்த்தான் பாலன். அங்கே சிறு கூட்டமாக நாற்பது ஐம்பது தொழிலாளர்கள் வந்துகொண்டிருந்தார்கள். ஒவ்வொரு வீட்டின் முன்பும் நின்று ஏதோ சொல்லிக் கொண்டு வந்தார்கள்.

## 24. சத்திய சோதனை

கருக்கிருட்டைக் கிழித்துக்கொண்டு விக்டரி எஸ்டேட்டின் நாலு மணிச் சங்கின் ஒலி எழும்பியது. [illegible]

மாயிரம் ரப்பர் மரங்களும் தங்களை மூடிக் கொண்டிருந்த இருட் போர்வையை மெல்ல மெல்லக் களைந்தெறிய விரும்பியவைபோல் காலைக்காற்றின் சலசலப்புக்கு ஏற்றவாறு அசைந்தாடிக்கொண் டிருந்தன. வெளித் தோற்றத்துக்கு அங்கு ஏதுமே நடக்காதது போல்தான் அந்தத் தோட்டம் வழக்கமான காட்சியை வழங்க முற்பட்டது. ஆனால் வழக்கத்துக்கு மாருக அங்கே நூற்றுக்கணக்கான இளைஞர்கள் உறங்கவில்லை. பல பிரிவுகளாக அவர்கள் பிரிந்து சென்று லயத்தின் ஒவ்வொரு வீட்டில் இருந்தவர்களையும் நேரில் சந்தித்து விட்டார்கள். வழக்கத்துக்கு மாருன ஒரு செயலைச் செய்யுமாறு அங்கு வேலை செய்து வந்த எல்லாத் தொழிலாளர்களிடமும் வேண்டிக்கொண்டார்கள்.

எடுத்து அதை வெளியே தூக்கி எறிந்தால் எப்படியிருக்கும்? அப்படிப்பட்டதோர் உணர்ச்சியில்தான் அவன் அப்போது இருந்தான்.

கணேசனும் தோட்டத்துத் தொழிலாளர் சங்கத்தைச் சேர்ந்த இளைஞர்கள் சிலரும் பாலனுடன் இருந்தார்கள். பொழுது விடிந்தால் வழக்கம்போல் வேலைக்குப் போகாமல் அவர்கள் ஒன்றுகூடி நேரே பெரிய கிராணியின் வீட்டுக்கோ பெரிய துரையின் வீட்டுக்கோ புறப்படுவதாக ஏற்பாடு.

அவர்களுடைய கோரிக்கைகள்:—

1. உடனடியாகச் செல்லத்தைப் போலீஸ் ஸ்டேஷனிலிருந்து தோட்டத்துக்கு அழைத்து வரவேண்டும்.



நிர்வாகத்தினருக்கும் இரவோடு இரவாகச் செய்தி எட்டாமல் இல்லை. தொழிலாளர்களுக்கு மத்தியிலேயே ஒரு சிலரைத் தேர்ந்தெடுத்துத் தங்களுடைய கண்களாகவும் காதுகளாகவும் பயன்படுத்துவது அவர்களின் நெடு நாளையப் பழக்கம். ஆகவே நிர்வாகம் தன்னைச் சாமதான பேததண்டப் பிரதிபலிப்புகளுக்குத் தயார் செய்துகொண்டுதான் இருந்தது. தங்களுடைய கையாட்களை விட்டே இரவோடு இரவாகத் தொழிலாளர்களைத் தோட்டத்துக் கிராணிகள் பயமுறுத்தித்தான் வைத்திருந்தார்கள்.

வீட்டின் மேல் வராந்தாவில் நின்றபடி தோட்டத்து இருளை ஆழமாக ஊடுருவிக் கொண்டிருந்தான் பாலன். பிறந்து வளர்ந்தது முதல் இருபது ஆண்டுகளுக்குமேல் அவனுக்குப் புகலிடம் அளித்து அவனை ஆளாக்கி விட்ட மண் அந்தத் தோட்டத்து மண். இளம் ரப்பர் மரம் ஒன்றை ஆணிவேருடன் கல்லி

2. டிரஸ்ஸர் மாதவன் வேலை நீக்கம் செய்யப்பட வேண்டும்.

3. பதிவு செய்யப்பட்ட பொய் வழக்கிற்குப் பதிலாக உண்மை வழக்குப் பதிவு செய்யப்பட வேண்டும்.

4. பாலனை வேலைக்கு எடுத்துக்கொண்டு, குழந்தைகளுக்கு ஒய்வு நேரத்தில் பாடம் கற்பிக்க அவன் அனுமதிக்கப்படவேண்டும்.

5. சங்கத்தின் பழைய கோரிக்கையான லயத்துக்கு மின்சார, சுகாதார வசதிகள் அளிக்கப்பட வேண்டும்.

பாலன் கூறினன்:

''உங்களோட கூட்டம் அமைதியா, ஒழுங்கா, கட்டுப்பாட்டோட நடக்கணும். யாரும் உணர்ச்சி வசப்பட்டுடப்படாது. அடிதடி, சண்டை, கைகலப்பிலே ஈடுபட்டுடப் படாது. முன்னலே மகாத்மா காந்தி நமக்கு

வழிகாட்டியிருக்கார். அந்த முறையைக் கையாண்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே அவர் வெளியேத்தியிருக்கார். நாமோ சில அடிப்படைக் கோரிக்கைகளை ஒரு வெள்ளைக் காரருக்கு முன்னுலே வைக்கப் போருேம்.''

''வேலை நிறுத்தத்திலே ஈடுபடறவங்களை வேலையை விட்டே நீக்கிடப் போறதா அவங்க ஆளுங்க ராத்திரியோட ராத்திரியாப் பய முறுத்தியிருக்காங்க. இருந்தாலும் நூத்துக்குத் தொண்ணூறு பேருக்குமேலே நம்மோட சேர்ந்திடுவாங்க'' என்ருன், சங்கத்தின் செய லாளஞன இளைஞன்.

''நீங்க செய்யப் போறது வேலை நிறுத்த மில்லே. இதை முதல்லே தெரிஞ்சுக்குங்க!'' என்ருன் பாலன். ''பால்மரந்தான் நமக்குச் சோறு போடுது; அவங்களுக்கும் சுகந்தருது. நமக்கு இப்போ அதுதான் கண்கண்ட தெய் வம். அதை நாம மறக்கப் போறதில்லே. நம்மோட ஒத்துமையை அவங்க தெரிஞ்சுக் க வும்கறதுக்காக, நாம கூட்டமாக் கூடிப் போய் நம்மோட கோரிக்கைகளை அவங்க முன்னுலே வைக்கப் போருேம். நியாயத்தை எடுத்துச் சொல்லி, அதையெல்லாம் நிறை வேத்தணும்னு கேக்கப்போருேம். சொன்ன பிறகு தோட்டத்துக்குள்ளே போய் அவங்க அவங்க வேலையைப் பார்க்கப் போருேம். இன்னிக்கு வேலையைத் தொடங்கறதுக்குக் கொஞ்சம் தாமதமாகும். அவ்வளவுதான்.''

''நம்ம கோரிக்கையை அவங்க கேட்க லேன்னு?''

''கேட்காமல் இருக்கமாட்டாங்க. கேட்க லேன்னு நாம அவங்களோட ஒத்துழைக்கப் போறதில்லே. அமைதியா, கட்டுப்பாடா இங்கே ஒத்துழையாமையை இயக்கமாவே தொடங்கிட வேண்டியதுதான்.''

அங்கு வந்திருந்தவர்கள் எல்லாருமே பால னைத் தலைமை தாங்கி நடத்தும்படி வற்புறுத்து வதற்காக வந்திருந்தார்கள். கணேசன் வெளியி லிருந்து வந்தவன்; அந்தத் தோட்டத்தோடு தொடர்பில்லாதவன். பாலன் ஒரு தோட்டத் தொழிலாளியாகவோ தொழிலாளர் சங்கத் தைச் சேராதவஞகவோ இருந்தாலுங்கூட, அந்தத் தொழிலாளர் வாழ்வில் இரண்டறக் கலந்தவன். பெரும்பாலான தொழிலாளர் களிடம் ஓரளவு அவனுக்குச் செல்வாக்கு உண்டு.

''நீ இருந்து நடத்திஞத்தான் இது கட்டுப் பாட்டோட நடக்கும். இல்லேன்ஞ ஆத்திரத் தைக் கிளறிவிடுவாங்க. அடிதடிக்குத் தூண்டு வாங்க. போலீஸை விட்டுச் சுடச் சொன்ஞ லும் சொல்வாங்க'' என்ருன் கணேசன்.

''சட்டப்படி பார்த்தா நான் இதிலே தலை யிடப்படாது.''

''சட்டப்படி பார்த்தா நீ சொல்றது சரி தான். நியாயப்படி பார்த்தா? தர்மப்படி பார்த்தா? அடிக்கடி நீ எங்ககிட்டே காந்தி யைப் பத்திப் பேசுறியே, உன்னுேட காந்தி வெள்ளைக்காரனுேட சட்டத்தை மதிச்சாரா? இல்லே, நியாயத்தை மதிச்சாரா?''

காந்தி பெயரைக் கணேசன் உச்சரித்த வுடன் பாலனுக்குப் புல்லரித்தது. இப்படிப் பட்டதோர் சூழ்நிலையில் அவர் என்ன செய் திருப்பார் என்று ஒரு நிமிடம் தனக்குள் யோசனை செய்து பார்த்தான். இளைஞர்கள் அனைவரும் இராவெல்லாம் பம்பரம்போல் சுழன்று மனித சக்தியை ஒன்று திரட்ட அரும் பாடுபட்டிருக்கிருர்கள். அந்தக் கூட்டம் கட்டுப்பாடும் ஒழுங்கும் அற்ற கூட்டமாக மாறி விடக் கூடாது. வன்முறையில் இறங்கிவிடும் கூட்டமாகவோ, வன்முறையைக் கண்டு அஞ்சிச் சிதறிவிடும் கூட்டமாகவோ மாறி விடக்கூடாது. நெருக்கடி மிகுந்த ஒரு கட்டத் திலே தியாகத்துக்குத் துணிந்த ஒரு தலைமை தேவைதான். இனி பின் வாங்குவதில் பயன் இல்லை. துணிந்து குதித்துவிடத்தான் வேண்டும்.

''சரி, நீங்க நடக்கிறதைக் கவனிங்க; இன்னம் ஒரு மணி நேரந்தான் இருக்கு; எல்லாரையும் வந்து வரிசையா நிக்கச் சொல் லுங்க. நாலு பேரா, இல்லேன்ஞ அஞ்சு பேரா நிறுத்துங்க. நானே தலைமை தாங்கி நடத் திட்டுப் போறேன்!''

ஆனந்தமேலீட்டால் அந்த இளைஞர்கள் அப்படியே பாலனைக் கட்டித் தழுவிக்கொண் டார்கள். அவர்களுடைய விழிகளில் கண்ணீர் மணிகள் தளிர்விட்டன. திடீரென்று புதிய தெம்பும் ஊக்கமும் உற்சாகமும் பிறந்து விட்டன அவர்களுக்கு.

''ஆஞ, ஒண்ணு!'' என்று கண்டிப்பான குரலில் தொடங்கிஞன் பாலன்; ''கூட்டம் இருக்கே, அது ராணுவக் கூட்டம்போலே கட்டுப்பாட்டோட நடந்துக்கணும். ஆஞல் ராணுவத்துக்கு எதிர்த்து அடிக்கறதுக்கோ வன்முறையிலே இறங்கறதுக்கோ உரிமை யிருக்கு. நம்மை அவங்க அடிச்சாலும், உதைச் சாலும், ஏன், துப்பாக்கியிலே சுட்டாலும் நாம உறுதியா நிக்கணும். அவங்களை எதிர்த்து அடிதடியிலே இறங்கிடப்படாது; அதே சமயம் பயந்துக்கிட்டுப் பின்வாங்கி ஓடி வரவும் கூடாது. இந்த விஷயத்தைக் கண்டிப்பா நீங்க எடுத்துச் சொல்லிடுங்க! நானும் வந்து சொல் லிடறேன்.''

இளைஞர்கள் அங்கிருந்து சிட்டாய்ப் பறந் தார்கள். பாலனுக்கு அதற்குமேல் யோசிப்ப தற்கு நேரம் இல்லை. அறைக்குள் சென்று ஒரு கணம் கண்ணம்மாவின் படத்துக்கு முன்பு கண்களை மூடிக்கொண்டு நின்ருன். அவளுடைய தற்கொலையின் நினைவு வந்து ஒரு கணம் அவனை ஆட்டிப் படைத்தது. கொத்தடிமை முறைக் குக் களப்பலி கொடுக்கப்பட்ட பெண் தெய்வ மாகக் கண்ணம்மா அவனுடைய நெஞ்சுக்குள் புகுந்தாள். சாபா மாநிலத்துக்குக் குடி பெயர்ந்த அவள் குடும்பமும் அதைப் போல் பல இடங்களுக்குச் சிதறி ஓடிய ஆயிரக்கணக்கான குடும்பங்களும் அவன் மனக்கண்முன் வந்தன; தெருவோரத்தில் மரத்தடிகளில் வாழ்ந்த குடும்பங்களையும் அவன் மறக்கவில்லை.

அவன் வீட்டில் இருந்த எல்லாரும் முன்பே புறப்பட்டுவிட்டார்கள். தலையில் முண்டாசும், ஒரு கையில் அரிக்கேன் விளக்கும், மறு கையில் தடியுமாக வந்து காவற்காரன் வழக்கம்போல் தொழிலாளர்களைத் துயில் எழுப்பும் வேலையில் ஈடுபட்டான். ஆஞல் அன்றைக்கு அவனுக்கு அதிகமாக வேலை இருக்கவில்லை. பலர் சங் கொலி கேட்டவுடனேயே எழுந்துவிட்டார் கள். கங்காணிகளின் வழக்கமான கூப்பாடும்

நடக்கத்தான் செய்தது. சில கங்காணிகள் தங்கள் ஆட்களை மஸ்டர் களத்துக்கு அழைத்தார்கள்; வேறு பல கங்காணிகள் தங்கள் ஆட்களை ஊர்வலத்துக்கு அழைத்துச் சென்ருர்கள்.

கூட்டத்தைச் சுற்றிப் பார்த்தான் பாலன். இளைஞர், முதியவர், கைக்குழந்தைகளோடு தாய்மார்கள், கங்காணிகள், மரம் வெட்டுவோர், வெளிக்காட்டு வேலை செய்வோர் இப்படிப் பல தரப்பட்டவர்களும் அதில் இருந்தார்கள். பாலனைக் கண்டுவிட்டு அவர்கள் மகிழ்ச்சியோடு ஆரவாரம் செய்தார்கள்.

பாலன் சற்று நேரம் அவர்களுக்கிடையே கூட்டத்தின் நோக்கத்தைப் பற்றிப் பேசிவிட்டு, ''ஆத்திரமூட்டக்கூடிய காரியம் எது நடந்தாலும் நாம் ஆத்திரப்படக்கூடாது; அதுபோல், என்ன நடந்தாலும் நாம் பயந்து போய்ப் பின்வாங்கக்கூடாது'' என்று தன் பேச்சை முடித்தான்.

கோரிக்கைகளைச் சொல்லி முழக்கமிட்டுக்கொண்டே கூட்டம் பெரிய துரையின் பங்களாவை நோக்கி முன்னேறியது. பங்களா ஒரு மேட்டின்மேல் இருந்ததால், பங்களாவுக்குள் இருந்தபடியே சன்னல் வழியாகக் கூட்டத்தைப் பார்த்துக்கொண்டு நின்ருர் துரை. அருகில் பெரிய கிராணி துரைசிங்கம் முதல் பல்வேறு கிராணிகளும் பெரிய துரையைச் சூழ்ந்தாற்போல் நின்றுகொண் டிருந்தார்கள்.

பெரிய துரை அந்தத் தோட்டத்தின் நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டதிலிருந்து இப்படியொரு நிகழ்ச்சி அந்தத் தோட்டத்தில் நடந்ததில்லை. வெள்ளைக்காரர்களுக்கே உரிய கண்டிப்பும் மிடுக்கும் தாம் ஆளப்பிறந்தவர்கள் என்ற செருக்கும் அவரிடம் உண்டு. நியாயத்துக்குக் கட்டுப்படக் கூடியவர் என்ருலும் முன்கோபக்காரர்; பிடிவாதமுள்ளவர்.

பெரிய கிராணி துரைசிங்கத்தைப் பிடித்து வறுத்து எடுக்கலானர் துரை. டிரஸ்ஸர் மாதவனைப்பற்றி அவரிடம் ஏற்கனவே பல புகார்கள் வந்திருந்தன. அப்படிப்பட்டவருக்கு ஏன் பெரிய கிராணி தனிச் சலுகை தரவேண்டும்?

''மாதவனுக்குத் தோட்டத்துக்குள்ளே என்ன வேலை? எதுக்கு அவன் வடக்கு மேட்டுக்குப் போனன்? அவன்தான் அப்படி ஒரு பொய் சொன்ன, அதைக் கேட்டு நீ ஏன் அவன் சொன்னபடி போலீஸுக்குப் புகார் கொடுத்தே?'' என்று முழங்கிவிட்டு, ''உங்க எல்லாரையுமே சுட்டுக் கொல்லணும்!'' என்று கர்ஜித்தார் துரை. பிறகு தொலைபேசியைச் சுழற்றித் தாமே போலீஸ் ஸ்டேஷனுக்குப் பேசினர். ''அந்தப் பயல் மாதவன் கொடுத்த கேஸ் பொய்க் கேஸ்; அந்தப் பொண்ணை உடனே இங்கே திருப்பி அனுப்புங்க; நான இருந்தா அந்த மாதவனை அங்கேயே கொலை செய்திருப்பேன்! உடனே அந்தப் பொண்ணை இங்கே அனுப்பி வையுங்க'' என்ருர்.

பிறகு துரைசிங்கத்திடம் திரும்பி, ''டிஸ்மிஸ் மாதவன்!'' என்று கத்தினர்.

அவர் கோபம் அத்தோடு நிற்கவில்லை. ''இதுக்காக இப்படியா கூட்டம் சேர்த்துக்கிட்டு வந்து என்னைப் பயமுறுத்தறது? இன்னிக்கு நான் ரெண்டிலே ஒண்ணு பார்க்கப் போறேன். நாலு பயல்களையாவது சுட்டுத் தள்ளப்போறேன். தனியா வந்து என்கிட்டச் சொல்லப்படாது? இவங்களுக்கு இன்னிக்கு ஒரு பாடம் கத்துக் கொடுக்கப்போறேன். நாலு கொலையாவது இங்கே விழப்போகுது!''

ரிவால்வரை எடுத்து 'டிரௌஸர்' பைக்குள் திணித்துக் கொண்டார் பெரியதுரை. உலகத்துக்கே ஒழுங்கையும் கட்டுப்பாட்டையும் கற்றுக்கொடுக்கும் பொறுப்புத் தங்களுடையதுதான் என்று இறுமாந்திருந்த பரம்பரையில் வந்தவர் அவர். அவருக்கு இன்றைக்கு ஒரு 'கூலிச் சிறுவன்' அறைகூவல் விட்டிருக்கிருன்!

கோஷம் நெருங்கிக்கொண் டிருந்தது. பல நூறு குரல்கள் ஒன்ருக ஒலித்தன:

''செல்லத்தை விடுதலை செய்!''

''மாதவனை விரட்டு!''

''பொய் வழக்குப் போடாதே!''

''பாலனை வேலைக்கு எடுத்துக்கொள்!''

''சங்கக் கோரிக்கைகளை நிறைவேற்று!''

பெரிய துரைக்குப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருந்தது. 'கூட்டம் நன்ருக நெருங்கி வரட்டும். துப்பாக்கிக் குண்டுகள் பாயும் தூரத்தில் வரட்டும்; இன்னும் நெருங்கி வரட்டும்; அவர் கண்கள் கூட்டத்துக்கு முன்ஞல் அமைதியே உருவாக நடந்துவந்துகொண்டிருந்த பாலனை ஊடுருவின. வயது இருபதுக்குமேல் இரண்டோ மூன்ருே அதிகமாக இருக்கலாம். அவன் எவ்வித உணர்ச்சியையும் வெளியிடவில்லை. நிதானமாக நடந்து வந்து கொண் டிருந்தான். அவன் முகத்தில் அளவுக்கதிகமான வேதனைமட்டுமே திரண்டிருந்தது.

துரைசிங்கத்தை அருகில் அழைத்து, ''இவன்தான் பாலன?'' என்று கேட்டார் பெரிய துரை. ஆம் என்று தலையசைத்தார் கிராணி.

கூட்டம் காம்பவுண்டுக்குள் புகுந்துவிட்டது. சரேலென்று கூண்டுக்குள்ளிருந்து தாவும் புலி போல் பாலனை நோக்கிப் பாய்ந்தார் துரை. ''நிறுத்துங்க!'' என்று கத்தினர். கூட்டத்தின் கோஷம் நின்றது.

பாலன் முன்னே வந்து கோரிக்கைகள் அடங்கிய காகிதத்தை அவரிடம் பணிவோடு நீட்டினன். அவர் அதை வாங்கிக்கொள்ளவில்லை.

''நீ யார் இதைக் கொடுக்கிறதுக்கு? உனக்கும் இவங்களுக்கும் என்ன சம்பந்தம்? நீ வேலை நீக்கம் செய்யப்பட்ட ஆசிரியன்!'' என்று கர்ஜித்தார் துரை.

பாலன் அதை அருகில் இருந்த தொழிற்சங்கச் செயலாளரான இளைஞனிடம் கொடுத்துக் கொடுக்கச் சொன்னன். அந்த இளைஞன் அதை வாங்கிக்கொள்ளவில்லை.

''பாலன்தான் கொடுப்பார்! அவர்தான் எங்கள் தலைவர்! வாழ்க, பாலன்!'' என்று உரக்கக் கத்தினன் இளைஞன்.

''வாழ்க, பாலன்!'' என்று ஓராயிரம் குரல்கள் ஒன்ருக முழக்கமிட்டன. அந்தக் காட்டுமரங்களும் கூட்டத்தோடு ஒன்ருகச் சேர்ந்துகொண்டு எதிரொலி செய்கின்றனவா?

''என்னை இப்படிப் பயமுறுத்தலாம், பணிய வைக்கலாம்னு பார்த்துக்கிட்டிங்களா? இதுக்கு முதல் பலி உங்க பாலன்! பின்னாலே, துப்பாக்கியிலே குண்டு இருக்கிறவரையிலே உங்களைச் சுட்டுத் தள்ளுவேன்!'' சரேலென்று தம் டிராயர் பைக்குள்ளிருந்து ரிவால்வாரை உருவினார் துரை. பிறகு சட்டென்று அதைப் பாலனின் நெஞ்சுக்குக் குறிவைத்தார்.

கூட்டம் திகிலடைந்தது. உடன் இருந்த இளைஞர்கள் பதறினார்கள். பாலன் மட்டும் தன் உறுதியை அணுவளவும் சிதறவிடவில்லை. நேரே துப்பாக்கிக்கு எதிரில் நெஞ்சைக் காட்டியபடியே அமைதியாக நடந்துவந்தான். ''துரை! சுடுங்கள்! தாராளமாகச் சுடுங்கள்! என் ஒருத்தனைச் சுட்ட பிறகாவது இவங்களை வாழவிடுங்க!....I say shoot! I am ready to die!'' என்று தமிழிலும் ஆங்கிலத்திலும் கத்திக்கொண்டே, அவருடைய ரிவால்வாரிடம் தன் மார்பைக் காட்டியபடி மிகவும் நெருங்கி விட்டான்.

''பாலா! பாலா! ஐயோ, பாலா!'' - பல நூறு குரல்கள் புலம்பின.

சட்டென்று திரும்பினான் பாலன். கூட்டத்தைப் பார்த்து, ''அப்பவே சொன்னேனே, அதை நினைவு வச்சுக்குங்க. ஆத்திரப்படாதீங்க! பயப்படாதீங்க! நாம சாகத் துணியலேன்னா இனி இங்கே வாழ முடியாது!'' என்று சொல்லிவிட்டு, ''துரை! தயவுசெய்து என்னை நீங்க சுடுங்க! ''Please shoot; please shoot; I am ready!'' என்று கதறினான். அவனுடைய விழிகளிலிருந்து கண்ணீர் மணிகள் வெடித்துச் சிதறின.

பெரிய துரை சிலையாகி விட்டார். பாலன் எதைப் பேசினாலும் அதை உண்மையாகவே உணர்ந்து பேசுகிறான் என்பதை நொடிப்பொழுதில் கண்டு கொண்டார் துரை. அவனுக்குப் பின்னால் கடல்போல் திரண்டிருந்த கூட்டம் கரைக்கு அடங்கிய கடலாக இருந்தது. அவர் நம்பிக்கொண்டிருந்தபடி அது வெறும் புழுக்களின் கூட்டம் அல்ல. முதுகெலும்பைப் பறிகொடுத்து வாழும் கொத்தடிமைகளின் மந்தை அல்ல. அச்சமும் பேடிமையும் அடிமைச் சிறுமதியும் கொண்ட பிராணிகளை அவர் அங்கே காணவில்லை. அவர்கள் மனிதர்கள், மனிதர்கள், மனிதர்கள்!

அவர்களை அப்படிச் சில மணி நேரங்களுக்கேனும் மாற்றிவிட்ட அந்த இளைஞனைக் கூர்ந்து கவனித்தார் துரை. ஒரு பெரிய ராணுவத் தலைவனுக்குள்ளே இருக்க வேண்டிய நெஞ்சுரம் அவனுக்குள்ளே இருந்திருக்க வேண்டும். அப்படி அவனிடம் அந்த உரம் இல்லாதிருந்தால், அந்தக் கூட்டத்திடம் அவனுடைய உணர்ச்சி பரவியிருக்க நியாயம் இல்லை.

துப்பாக்கியைத் திரும்பவும் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டார். அவனிடம் இருந்த காகிதத்தை வாங்கி நிதானமாய்ப் படித்தார். படித்துவிட்டுப் பாலனைப் பார்த்து முதல் முறையாகப் புன்னகை செய்தார்.

''ஒரே ஒரு கோரிக்கையைத் தவிர, மற்ற எல்லாக் கோரிக்கைகளும் நிறைவேற்றப் படும்!''

''எதைத் தவிர!'' என்று கேட்டான் பாலன்.

''உன்னை இங்கே வேலைக்கு வைத்துக் கொள்ள முடியாது. நீ ஒரு பயங்கரமான பிள்ளை. இந்தியாவில் இருந்த எங்கள் ஆட்சியையே அந்தக் காந்திக் கிழவர் வெளியேற்றினார். உன்னை இங்கே அனுமதித்தால், நீ எங்களையே இங்கிருந்து வெளியேற்றி விடுவாய்! அவர் அந்த நாட்டில் கையாண்ட அதே ஆயுதத்தை நீ இங்கே கையாளக் கற்றுக் கொண்டு வருகிறாய். மிகமிகப் பொல்லாத பிள்ளை நீ!''

பாலனின் தோளின் மீது கையைப் போட்டு அவனை அணைத்துக்கொண்டு, ''இந்த கோரிக்கையை மட்டும் நீ வற்புறுத்தாதே!'' என்றார் பெரிய துரை.

''என்னை வேலைக்கு வைத்துக்கொள்ளணும் என்கிறது முக்கியமில்லே. இங்குள்ள ஆசிரியர்களுக்கு நீங்கள் ஓய்வு நேரத்தில் பாடம் நடத்த அனுமதி கொடுத்தால் போதும். பிள்ளைகள் படித்து முன்னுக்கு வரணும்கிறது தான் நோக்கம்.''

''கட்டாயம் அதைச் செய்வோம்.''

''நன்றி!'' என்று சொல்லி, அவரைக் கையெடுத்துக் கும்பிட்டான் பாலன். துரை அவனுடைய கரத்தை அன்போடு பற்றிக் குலுக்கி விடை கொடுத்தார்.

அப்போதே அங்கே போலீஸ் லாரியும் வந்து சேர்ந்தது. அதற்குள்ளிருந்து செல்லம்மாவும் பாலனின் தாயாரும் இறங்கினார்கள். கூட்டத்தோடு கூட்டமாய்ச் சேர்ந்திருந்த கணேசன் கூட்டத்தை விட்டு ஆவலோடு லாரிக்கு அருகில் வந்து நின்றான். அவன்மீது பதிந்த விழிகளைத் திருப்பிக் கொள்வதற்குச் செல்லம்மாளுக்கு வெகுநேரம் சென்றது. ''இன்னிக்கே நீ என்னோட சிரம்பானுக்கு வந்திடலாம்'' என்று அவள் காதுகளில் மட்டும் கேட்கும்படியாகக் கூறினான் கணேசன்.

''சரி, நீங்க இனிமேல் கலைஞ்சு போய்த் தோட்ட வேலையைக் கவனிக்கலாம்'' என்று கூட்டத்திடம் கூறினான் கணேசன். வான் பிளக்க வாழ்த்தொலிகளை எழுப்பிவிட்டுக் கூட்டம் உற்சாகத்துடன் கலைந்தது.

இரண்டு நாட்கள் சென்றன.

தோட்டத்துக்கு வெளியே பஸ் நிற்கும் இடத்தில் கையில் ஒரு பெட்டியோடு பஸ்ஸுக்காகக் காத்திருந்தான் பாலன். அவனுடைய குடும்பத்தாரும் நண்பர்களும் அவனை வழியனுப்புவதற்காக வந்து காத்திருந்தார்கள். கோலாலம்பூருக்குப் போய்த் தோட்டத் தொழிலாளர்களுடைய மத்திய சங்கத்தில் ஒரு வேலை தேடிக்கொள்ள வேண்டுமென்பது அவனுடைய ஆவல்.

''ஒவ்வொரு தோட்டத்திலே உள்ள இளைச் சங்கத்தையும் பலப்படுத்தினால்தான் நம் மோட சந்ததிகளாவது இங்கே நல்லா வாழ முடியும்'' என்று தன் நண்பர்களிடம் கூறினான் பாலன்.

பஸ் வந்தது. தகப்பன் வீரப்பனும் தாய் வேலம்மாளும் தங்கைகள் செல்லமும் கமலமும் அவனுக்குக் கண்கலங்க விடைகொடுத்தார்கள். நண்பர்கள் கூட்டமும் உணர்ச்சி வயப்பட்டு நின்றது. பாலன் பஸ்ஸில் ஏறிக் கொண்டான். கோலாலம்பூரை நோக்கி அது வேகமாய் விரைந்தது.

[முற்றும்]

# சேதுவில் ஒலிக்கும்! காசியில் கேட்கும்!

பரம் பொருளையும் தானாகவே பாவித்துத் திருப்பள்ளி எழுச்சி பாடிப் பகவானின் நினைவைப் போற்ற மனிதன் கண்ட வழியே 'சுப்ர பாதம்'.

ஸ்ரீ காஞ்சி காமாட்சி அன்னைக்குச் சுப்ர பாதம் பாட வேண்டும் என்று திருவுளம் கொண்ட ஸ்ரீ காஞ்சி முனிவர் இசைச் செல்வம் மிகுந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லக்ஷ்மிக்கு அருளாசி வழங்கி அப்பணியை ஒப்படைத்தார்.

ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் பாடிப் பரவிய ஸ்ரீமதி எம். எஸ்., காஞ்சிமுனிவரின் திருவுளக் கருத்தை ஏற்று நிறைவேற்றி வைத்தார்.

பாரதம் முழுவதும் மக்கள் கேட்டுப் பக்தி பரவசத்தில் ஆழ்ந்து போகக் காரணமான ஸ்ரீ காஞ்சி காமாட்சி சுப்ரபாதம், காசி காமகோடீசுவரர் ஆலயத்திலும் ஒலித்தது.

ஸ்ரீ ராஜ்கிஷோர் குப்த என்ற இளைஞர் இதனைக் கேட்டார். தென்னாட்டுக்கு அவர் வந்திருந்தபோது முக்கிய ஆலயங்களில் சுப்ர பாதம் பாடப்படுவதைச் செவிமடுத்துப் புளகித்தார். அவரையும் மீறி ஓர் ஆசை எழுந்தது. ஸ்ரீ காசி விசுவநாத சுப்ரபாதத்தை ஸ்ரீமதி எம். எஸ். மூலமாகப் பாடச் செய்து, அதை ஸ்ரீ விசுவநாதர் ஆலயத்தில் ஒலி பரப்ப வேண்டும் என்று முடிவு செய்தார்.

ஸ்ரீ காசி மன்னரைப் போஷகராகக் கொண்டும் காசிவாழ் புலவர்களை உறுப்பினராகக் கொண்டும் சுப்ரபாதம் சமிதி ஒன்று அமைத்தார். ஸ்ரீ சதாசிவம் தம்பதியின் ஒப்புதல் கிடைத்ததும் சுப்ரபாதம் ஒன்று உருவாக்கவும் செய்தார்கள்.

இதற்குச் சில ஆண்டுகள் முன்பாகவே டாக்டர் வே. ராகவன் ராமேசுவரம் சென்றிருந்த போது அந்த ஆலயத்தில் ஒலிக்க ஒரு சுப்ரபாதம் தயாரிக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உதித்து சுலோகங்கள் யாத்திருந்தார். இந்த விவரம் தெரிய வந்தவுடன் இசைத் தட்டின் ஒரு புறம் காசி சுப்ர பாதமும் மறுபுறம் ராமேசுவர சுப்ரபாதமும் பதிவு செய்வதென தீர்மானமாயிற்று.

இப்படி எல்லாமே சொல்லி வைத்தாற் போல் இறையருளால் நற்பொருத்தத்துடன் அமைந்து வருவது கண்டு பரமானந்தம் அடைந்தார் ஸ்ரீ ராஜகிஷோர் குப்த.

பத்ம பூஷண் டாகுர் ஜயதேவ் சிங் போன்ற முதியவர்களை உடன் அழைத்துக் கொண்டும், ஸ்ரீ காசி விசுவநாதர் விசாலாட்சி அன்னபூர்ணியின் அருட் பிரசாதங்களோடும், புலவர்களின் வாழ்த்துரைகளுடனும் 15–11–76 அன்று சென்னை வந்தவர், முதற் காரியமாக ஸ்ரீ காஞ்சி முனிவரை சிவாஸ்தானம் சென்று தரிசித்து அவர் தம் அருளாசியைப் பெற்றார்.

அன்று மாலை 'கல்கி' கட்டடத்தில் பொறுக்கி எடுத்த அறிஞர்கள் – பிரமுகர்கள் கூடியிருக்க, 'கங்கா பூஜை' செய்து ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ். ஆகியவர்களுக்கு நன்றி கூறிப் பிரசாதங்கள் வழங்கிக் கௌரவித்து வாழ்த்தினார்.

இவ்விழாவுக்கு வருகை தந்து சிறப்பித்த தமிழக ஆளுநர் ஸ்ரீ மோகன்லால் சுகாடியா, காசிப் புலவர்கள் தகுந்த பாத்திரமான ஸ்ரீமதி எம்.எஸ்.ஸிடம் இப்பணியை ஒப்படைத்திருப்பதைப் பாராட்டினார். ஏற்கனவே, ஆன்மீக ரீதியில் பலப்பட்டிருக்கும் தேசிய ஒருமைப்பாட்டினை மேலும் வளர்க்கும் விதமாக இந்த இசைத் தட்டு பல நூற்றாண்டுகளுக்கு ஒலிக்கும் என்றார்.

ஸ்ரீ சதாசிவம், சுப்ரபாதம் பாடும் பணியை ஸ்ரீமதி எம். எஸ். தமது பாக்கியமாகக் கருதுவதாக உணர்ச்சி பூர்வமாகக் கூறி மகிழ்ந்தார்.

பக்தி உணர்வைப் பெருக்கும் விதமாக வருகிற சிவராத்திரிக்குள் ஸ்ரீ காசி ராமேசுவர சுப்ரபாதங்கள் பாரதம் எங்கும் ஒலிக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

செவிக்கினிய செய்தி அல்லவா?





ஸ்ரீகாசி ராமேசுவரம் சுப்ரபாதம் தொடக்கவிழாவில் ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம்.எஸ். ஸுடன் ஸ்ரீராஜ கிஷோர் குப்த. ✖ ஸ்ரீ ராமேசுவரம் சுப்ரபாதம் பற்றி டாக்டர் வே. ராகவன் கூறுகிறார். அமர்ந்திருப்பவர்கள்: பத்மபூஷண் டாகுர் ஜயதேவ் சிங், தமிழக ஆளுநர் ஸ்ரீ மோகன்லால் சுகாடியா, ஸ்ரீ டி. எம். பி. மகாதேவன்.

போட்டிக் கதை. 13

# வேள்வித் தீ

பிரதிபா ராஜகோபாலன்



இன்டர்காமில் அவன் வந்திருப்பதைச் சொன்னுர்கள். பதினேரு மணிக்கு எம். டி. யைப் பார்க்கலாமாம்.

அதுவரை என்ன செய்யலாம் என்று யோசித்தான். இன்னும் நாற்பது நிமிடங்கள் இருக்கின்றன. வெளியே போய், மறுபடியும் திரும்புவது சாத்தியமாகத் தோன்றவில்லை. உள்ளே எல்லோருக்கும் தான் அன்னியமாகப் படுவதை, உள்ளே நுழைகையிலேயே உணர்ந் திருந்தான்.

அறை விசாலமாக இருந்தது. தரையில் மெத்தென்ற விரிப்பை விரித்திருந்தார்கள். சுவர்கள் மொஸைய்க் போல் வழவழத்திருந் தன. சுவர் ஓரங்களில் உயரமான குஷன் வைத்த சோபாக்கள். நடுவில் டைனிங் டேபிள்போல் நீண்ட டேபிள். அதன் லாமி னேட் நல்ல டிசைனில் அழகாயும் இருந்தது. அதன்மேல் நிறைய பத்திரிகைகள் இருந்தன.

இந்த நிறுவனத்தைப் பற்றி அவனுக்குத் தெரியும்.

டெக்ஸ்டைல் மெஷின்களுக்கு ஒரு ஸேல்ஸ் ஏஜண்டாக இருக்கிருர்கள். இந்தியா முழு தும் அதன் கிளைகள் இருக்கின்றன. வெளி நாடுகளுக்கு ஏற்றுமதியும் இதன் மூலம் நடக்கிறது. இதன் மானேஜிங் டைரக்ட ரைப் பார்த்து ஒரு வேலை கேட்க வேண்டும். அவரால் முடியும் என்பது அவனுக்குத் தெரி யும். அதனுலேயே இன்று வந்திருக்கிருன். போன வாரம் வந்தபோது, 'நேரமில்லை' என்றும், ஒரு தேதி, நேரம் குறிப்பிட்டு அன் றைக்கு வரச் சொன்னதாக அவர் பி. ஏ. சொன்னுள்.

''நீங்கள் மிஸ்டர் சத்தியமூர்த்திதானே?''

''ஆமாம்.''

''உள்ளே அக்கவுண்ட்ஸில் கூப்பிடு கிருர்கள்.''

''வருகிறேன்'' என்று எழுந்து கொண் டான். ஸ்பானை எடுத்த இடத்தில் வைத் தான். தன் ஷர்ட்டை ஒரு முறை பார்த்துக் கொண்டு கதவைத் திறந்து வெளியே வந் தான்.

''சார், அக்கவுண்ட்ஸ் செக்ஷன் எது?'' என்று அவரைக் கேட்டான். அவன் வெறும் அட்டண்டர் என்று அவன் மார்பில் இருந்த பிளாஸ்டிக் பெயர் அட்டை சொல்லியது. இருந் தும், அவனை 'சார்' என்று அழைக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் அவன் இருந் தான்.

''மேல் மாடியில், வலது பக்கம்.''

அவன் அந்தப் பெரிய ஹாலில் நுழைந்து இரு பக்கமும் வரும் பார்வை அலைகளைத் தயங்கிப் பிளந்து கொண்டு, மாடியின் படிகளில் ஏறினுன்.

படிகள்கூட விரிப்பால் மூடப்பட்டிருந்தன. மாடிப் படிகளை யொட்டி மேலே சுவரில் முக்கிய தேசியத் தலைவர்களின் படங்கள் மாட் டப்பட்டிருந்தன. மாடிக்கு வந்ததும் வலது பக்கம் பார்த்தான். கண்ணுடிக் கதவுகளுக் குள் நிறையப் பேர் தெரிந்தனர். யார் வரச் சொன்னுர்கள் என்பதைக் கேட்காமல் வந் தது பிசகு என்பதை உணர்ந்தான்.

தன்னை வரச் சொன்னது யார் என்று யாரைக் கேட்பது? அந்தக் கேள்வியினுல் தயக்கம் கொள்ள நேர்கையில், எதிர்ப்புறம் இருந்த கண்ணுடிக் கதவு வழியாக ஒருவர் சைகை செய்து உள்ளே வரச் சொன்னுர்.

இவராகத்தான் இருக்கும் என்று யூகித்துக் கொண்டு கதவைத் திறந்து உள்ளே போனுன். அந்தப் பகுதி ஏர்கண்டிஷன் செய்திருந்தது. காற்றினூடே மெல்லிய லாவண்டர் மணம் கலந்திருப்பதை இரண்டொரு விநுடிகளில் உணர்ந்தான்.

சைகை செய்தவர் அவனைப் பார்த்துப் புன்னகை செய்து கொண்டிருந்தார். சிவப்பாய் அகலமான நெற்றியில் நாமம் இட்டுக் கொண்டு, கிராப்பை ஒட்ட வெட்டிக் கொண்டு தளதளவென்று இருந்தார்.

அவரின் அகலமான டேபிளின் கண்ணுடிப் பரப்பின் மேல் இருந்த பிளாஸ்டிக் பலகை 'டிப்டி ஃபினுன்ஷியல் கண்ட்ரோலர்' என்று காட்டியது.

அவன் மரியாதையுடன் 'குட் மார்னிங்' சொன்னுன். அந்த மரியாதையை ஏற்றுக் கொண்டே 'உட்கார்' என்ருர். அந்த 'உட் கார்' என்ற ஒற்றை வார்த்தையில் கலந்



# குளிர் காய்வதற்கு அல்ல!

திருந்த பரிச்சயம், இணக்கம் அவனுள் ஒரு விழிப்பைத் தந்தது.

''உட்கார் முதலில்.''

அவன் உட்கார்ந்து கொண்டான்.

''எம். டி. அறைக்குப் போயிருந்தேன். நீ எழுதிக் கொடுத்திருந்த அட்ரஸ் பேப்பர் உள்ளே இருந்தது. எனக்குச் சில்லுன்னு ஆயிடுத்து. அதனுல்தான் மேலே வந்ததும் வரச் சொன்னேன்'' என்ருர் உற்சாகத்துடன்.

''என்னே உனக்குத் தெரியலேன்னு நெனேக்கிறேன்?''

''ஆமாம் சார்'' என்ருன் தன் இயலாமை தொனிக்க.

''நெனச்சேன். மணியக்காரர் வைத்தியநாதனேத் தெரியுமில்லேயா? அவரோட தம்பி ராமநாதன்...''

புரிந்து கொண்டான். அவனுடைய கிராமத்தின் மணியக்காரர் தம்பி இங்கே இருக்கிருர் என்று அவனுக்குத் தெரியாது. அவர் சின்ன வயசிலேயே டவுனில் படித்து வேலே பார்த்துக் கொண்டவர் என்பது மட்டும் தெரிந்திருந்தது. எப்பவோ, சின்ன வயசில் பார்த்தது. அப்பொழுதெல்லாம் அடிக்கடி வந்து கொண்டிருந்தார். அப்போதைக்கு இருந்த தோற்றத்தில் இப்போது பெரிதும் மாறுபட்டிருந்தார்.

அது சரி, தன்னேப் பற்றி ஞாபகம் வைத்திருப்பதற்குக் காரணம்?

அவன் அப்பாதான். அவர் போன மாதம் தான் காலமானுர்.

வயது அறுபத்தைந்து இருக்கும். தம் வாழ்வின் ஆரம்பத்திலிருந்து தேச நலனில் ஈடுபட்டிருந்தவர். நாட்டுக்குச் சுதந்திரம் கிடைத்த பின்தான் திருமணம் செய்து கொள்வது என்ற உறுதியில் இருந்தவர். விடுதலே வேள்வியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். தனக்கு வந்த பரம்பரைச்

## தடை!

பி. ஜி. வோட் ஹவுஸ் எழுதிய நூல்களுக்கு பிரிட்டிஷ் நூலகங்களில் சில காலம் தடை இருந்தது! ஏன் தெரியுமா?

இரண்டாம் உலக யுத்தத்தின்போது இவர் ஜெர்மானியரிடம் பிடிபட்டுச் சிறையிலிருந்தார். கோயபெல்ஸ் இவரை ஜெர்மன் ரேடியோ மூலம் பிரிட்டிஷ் மக்களிடம் பேசுமாறு கேட்டுக் கொண்டார். வோட் ஹவுஸ் இதற்குச் சம்மதித்தார். அவர் ஜெர்மனிக்கு ஆதரவாக ஒரு வார்த்தை கூடப் பேசிவிடவில்லை. தமது வழக்கமான நகைச்சுவை பாணியில் சில பேசினார் அவ்வளவே. ஆயினும் கோயபல்ஸ் சொற்படி கேட்டு இவர் நடப்பதா என்ற அளவிலேயே பிரிட்டிஷ் மக்களுக்கு அவர்மீது வெறுப்பு ஏற்பட்டு விட்டது.

விளைவு பிரிட்டிஷ் நூல்களிலிருந்து பி. ஜி. வோட் ஹவுஸின் நூல்கள் நீக்கப்பட்டன!

---

சொத்துக்களைத் துறந்தவர். மகாத்மா காந்தி என்ற அந்த தேவ புருஷனின் கால்படு தூசியாகத் தன்னை மாற்றிக் கொண்டு, அவர் நடத்திய மகத்தான போராட்டங்களுக்காகப் பல சிறைச்சாலைகளை அலங்கரித்தவர். பொன்மேடு என்ற அவர்கள் கிராமத்தின் பெயரையே மாற்றி அவன் அப்பாவின் பெயரையே வைத்த நிலையை அவன் புரிந்து கொண்டு, தன் அப்பாவையும் தன் அளவில் ஒரு தேவ புருஷனாக அவன் ஏற்றி வைத்திருக்கிறான்.

''சின்ன வயசில் உங்களைப் பார்த்திருக்கிறேன். பத்துப் பதினைந்து வருஷங்களாக நீங்க கிராமத்துக்கு வருவதில்லை. அதனால் தான் உங்கள் முகம் சட்டென்று ஞாபகத்துக்கு வரவில்லை.''

''ஆமாமா...எம்.டி. மேஜையில் இருந்த உன் அட்ரஸைப் பார்த்ததும் உன்னைப் பார்க்கணும்னு தோணித்து. கண்ணாடிக்கு அந்தப் பக்கம் நின்னு ஒரு செகண்ட் தயங்கிப் பார்த்தியே, அப்ப எனக்கே ஆச்சரியமாப் போயிடுத்து. உன் வயசிலே, உன் அப்பா இதே அச்சாத்தான் இருந்தார். இதே பார்வை, மென்மையான சுபாவம், யாரோடும் அதிர்ந்து பேசாத குணம். என்னைவிடப் பத்து வயது மூத்தவர். நம்ம கிராமத்திலே மட்டுமில்லே. ஜில்லாவிலேயே அவரோட இருபதாம் வயசுலேயே நல்ல பேரு. மன்னன், எப்படித்தான் ஜனங்களை வசியம் பண்ணி வைச்சிருந்தாரோ. மனுஷனுக்குக் கோபம் வந்துட்டாப் போதும். அக்னியேதான். ஒருதரம் நம்ம கிராமத்திலே மூலைத் தோட்டத்துக்காரர்னு சொல்றோமே, அவர் அப்பாவோட சேர்ந்துட்டு சத்தியாக்கிரகத்துக்குப் போயிருந்தார். அதை விசாரிக்கப் போலீஸ் தோட்டத்துக்குப் போயிருக்கு. அவர் சம்சாரம் சின்ன வயசு. கல்யாணமாகி மூணு மாசமாகியிருந்தது. அது, போலீஸைக் கண்டு மெரண்டு ஒண்ணுமே பதில் சொல்லாம இருந்திருக்கு. என்ன நான் கேட்கிறது, நீ பேசாம இருக்கிறதுன்னு, கூட வந்த சர்க்கிள் இன்ஸ்பெக்டர் பட்னு அறைஞ்சிட்டு, அவ தாலியை எட்டிப் புடிச்சு இழுத்திருக்கான். ஆனா தங்கக் கொடியானதாலே வரல்லே. சத்தம் கேட்டுப் பக்கத்துக் குடிசைலே இருந்த பண்ணையாளுங்க வந்துட்டாங்க. ரகளை வரும்னு போலீஸ் போயிடுத்து. ஒரு மாசத்திலே, உங்கப்பாவும், தோட்டக்காரரும் விடுதலையாகி வந்தவுடனே இதைச் சொல்லியிருக்கா'' என்று சொல்லி அவனைப் பார்த்தார்.

''என்ன செஞ்சார் தெரியுமா? அந்த சர்க்கிள் யார்னு விசாரிச்சு, அவன் வீட்டிலே தான் இருக்கான்னு தெரிஞ்சு, நாலஞ்சு பேரோட போய் அவனைக் கேட்டார், 'இதென்ன நியாயம்னு?' அவன் 'அப்படித்தான், சரிதான் போடா'ன்னு சொல்லி விட்டான். அப்பறந்தான் அப்பாவுக்குத் தாள முடியல்லே. வாசல் பக்கம் இருந்த ஒலக்கையைத் தூக்கி இன்ன இடத்திலே அடிக்கிறதுன்னு இல்லாம அடிச்சு நொறுக்கிட்டார். யாரும் இதை எதிர்பார்க்கலே. கூட வந்த ஆளுங்க சர்க்கிளைத் தூக்கிட்டு வந்து, அந்தப் பொண்ணு கால்லே விழுக வச்சு மன்னிப்புக் கேட்க வைச்சுட்டாங்க. இது பெரிய இடத்து வரைக்கும் போய், அப்பா மேலே எந்த ஆக்ஷனும் வேண்டியதில்லேன்னு ஆச்சு. அப்பா கூட பின்னாலே ரொம்ப வருத்தப்பட்டு, அந்தச் சர்க்கிள்கிட்டே மன்னிப்புக் கேட்டாரு... அவர் நெனச்சிருந்தா மந்திரி ஆகியிருக்கலாம். சுதந்திரம் வாங்கித் தந்திட்டுத்தான் கல்யாணம் பண்ணிக்கிடறதுன்னு இருந்தார். அப்படிச் செய்தும் காட்டினார்...''

''உனக்கு வயசு என்னாச்சு?''

''இருபத்தைஞ்சு சார்.''

''எம். காம் படிச்சுட்டு மூணு வருஷமா என்ன செஞ்சே?''

ஒரு பிரபலமான ஆடிட்டரின் பெயரைச் சொல்லி, அவரிடம் உதவியாளனாக இருந்ததைச் சொன்னான்.

''காலேஜிலே லெக்சரராப் போறதுக்கு 'ட்ரை' பண்ணினயா?''

''கிடைக்கல்லே சார்.''

''அந்த ஆடிட்டர் நைஜீரியா போய்ட்டார்னு கேள்விப்பட்டேனே?''

''ஆமாம் சார். அதனாலேதான் நான் வேலை தேட வேண்டிய நிலைமை.''

''புரியறது. இங்கே வரணும்னு எப்படித் தோணித்து?''

''அந்த ஆடிட்டர்தான் இங்கே வரச் சொன்னார்.''

''நம்ம எம். டி. உங்க அப்பாவோட நெருங்கிய சிநேகிதர், தெரியுமா?''

''தெரியும் சார். ஆடிட்டர் சொன்னார்..''

''அப்படியா? அம்மா சௌக்கியமா?''

'' சௌக்கியம்னு பூரண சௌக்யம்னு சொல்ல முடியாது.''

''என்ன ட்ரபிள்?''

''ஹார்ட் வீக்னஸ். வைத்தியமே வேண்டாம்னு பிடிவாதமா இருக்காங்க.''

''உங்க அப்பா போனதும் இன்னும் அதிகமாய் ஆகியிருக்கும்...''

''ஆமாம் சார்.''

''ம்... ஒண்ணு பண்ணு. எம். டி.கிட்டச் சொல்லி இருக்கேன். நீ போய் விஸிட்டர்ஸ் ஹால்லே இரு. உள்ளே அவர் கிட்ட டி.எம்.ஏ. மெம்பர்ஸ் ஒரு குரூப்பா வந்திருக்கா. அதனாலேதான் உன்னை உள்ளே கூப்பிடறதுக்குத் தாமதம் ஆயிண்டிருக்கு. அவர்கள் வெளியே போனதும் நீ உள்ளே போ. எல்லாம் சொல்லிடறேன். என்ன?''

''சரி சார். உங்களை நான் இங்கே எதிர் பார்க்கலே. இருந்தும் நீங்க பண்ற உதவிக்கு என்ன சொல்றதுன்னே புரியலே...''

''என்ன நீ, புரியலே கிரியல்லேன்னு... என்னோட கடமை. போ. பின்னாலே நான் வர்றேன்.''

''சரி வர்றேன் சார்.''

மறுபடியும் அந்தஹாலில் திரும்பநுழைந்து விஸிட்டர்ஸ் ஹாலுக்கு வந்தான். திரும்பு கையில் அவனையும் அறியாமல் ஒரு பெரு மிதம் இழைந்திருந்தது.

''ஸார்!'' என்று பக்கத்தில் அழைத்தது போலிருந்தது. திரும்பினான். ஒரு பணியாள், டிரேயில் ரோஸ் மில்க் நிறைந்த கண்ணாடி டம்ளர்.

''எடுத்துக்குங்க சார்.''

அவனுக்குத் திகைப்பா யிருந்தது. அவன் யர்ரென்று — அதுவும் ரோஸ் மில்க் வாங்கித் தருமளவுக்கு இங்கே யாருக்குத் தெரியும்? ஆள் மாற்றித் தருகிறார்களா? ஒருவேளை டி. எஃப். சி. அனுப்பி வைத்தாரா?

''யார் அனுப்பினார்கள்?'' என்றான்.

''எம். டி. சார். மானேஜிங் டைரக்டர்.''

அவன் உண்மையிலேயே தன்னுள் வியந்து கொண்டான்.

அவன் வாங்கிக் கொண்டான். அந்தப் பணியாள் போய் விட்டான். பாதி குடித்துக் கொண்டிருக்கையிலேயே அதே பணியாள் மீண்டும் வந்து, ''எம். டி. கூப்பிடறாங்க'' என்றான்.

வேகமாக உறிஞ்சிக் குடித்து விட்டு அவனைப் பின்தொடர்ந்தான்.

எம். டி.யின் அறை. அந்த ஹாலில் இறுதியில், சற்று மறைந்திருப்பது போன்ற அமைப்பில் இருந்தது பெரிய அறை.

அவன் அந்த மேஜையை நெருங்குகையில் அவர் எதையோ மும்முரமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். அதன் தீவிரத்தைக் கலைக்கலாமா வேண்டாமா என்று ஒரு வினாடி தயங்கி நிற்கையில் அவரே, அந்தப் பேப்பர் களிலிருந்து மீண்டு தலை நிமிர்ந்தார்.

''குட் மார்னிங் சார்.''

''எஸ். ப்ளீஸ் டி ஸீட்டட்.''

அவன் உட்கார்ந்து கொண்டு, மேஜை மேல் இருந்த சில காகிதங்களைப் பார்த்தான். ஓர் இயந்திரத்தின் படத்துக்குக் கீழ் ஹை ஸ்பீட் ட்ராயிங் ஃப்ரேம் என்று போட்டிருந் தது. அதன் கீழே மெயின் டாட்டா, ஸ்பீட், டெலிவரி, ட்ராஃப்டிங் என்றெல்லாம் படிக்க முடிந்தது.

''மிஸ்டர் சத்தியமூர்த்தி! உங்களைப் பார்க் கறப்போ, உங்கப்பாவையே பார்க்கிறாப்லே இருக்கு. உண்மையைச் சொன்னா, உங்கப்பா முன்னாலே நான் உட்கார்ந்திருக்கனோங்கிறபிர மையிலேதான் உட்கார்ந்திருக்கேன். அவர் முன்னாலே கூட அதிகமாப் பேசற வழக்கம் எனக்கில்லே. அவர்கிட்ட ரொம்ப மரியாதை. அதனாலேதான் இப்பக்கூட அந்த நினைவிலே தான் மௌனமா இருந்திட்டேன்... என்னை உங்களுக்குத் தெரிஞ்சிருக்காது. இந்தப் பதவி, இதோட வசதி யெல்லாம் அவர் போட்ட பிச்சை. அவர் ரெகமண்டேஷனிலே தான் இந்த ஆபீஸுக்கு வந்து சேர்ந்தேன். இன்னைக்கு எம். டி.....'' அவர் சற்றுக் கண்

## திருநின்றவூரில் புதிய கோயில்



சென்னையை அடுத்த திருநின்றவூர் லட்சுமி புரத்தில் ஸ்ரீ பால விநாயகர், ஸ்ரீ பால முருகன், ஸ்ரீ பால சாஸ்தா (ஐயப்பன்), ஸ்ரீபாலாம்பிகை ஆகியவர்களுக்கு ஆலயம் கட்டி அதில் விக்கிர கங்களைப் பிரதிஷ்டை செய்ய ஏற்பாடு நடந்து வருகிறது.

இப்பணியில் பங்குகொள்ள விரும்பும் அன் பர்கள் அணுகவேண்டிய முகவரி: எச். மாணிக்க லால் ஜைன், எம். டி. எச். ரோடு, திரு நின்றவூர்.

களை மூடிக்கொண்டு ஏதோ பிரமையில் ஆழ்ந்தவர்போல் சில விநாடிகள் இருந்து விட்டு மறுபடியும் சொன்னார் :

''போன தரம் வந்திருந்தப்போ அப்பா பேரைச் சொல்லியிருந்தீங்கன்னா, அன்னிக்கே மாட்டர் முடிஞ்சிருக்கும். இப்பக்கூட டி. எஃப். சி. சொல்லலைன்னா, உங்களைப் பார்த் திருக்க மாட்டேன். சரி, இப்பவும் ஒண்ணும் தப்பாகலே... எல்லாம் நல்லதுக்குத்தான். என்னோட வாழ்வையே உயர்த்தின என் நண் பரோட மகனுக்கு உதவறதுலே எனக்குப் பரம திருப்தி. என் ஜென்மமே சாபல்யம் அடைஞ்ச மாதிரி இருக்கு. இப்ப வேகன் ஸின்னு ஒண்ணும் இல்லே. இருந்தும், உனக்காக ஒரு வேலை உண்டாக்க இயலும்! 'அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் கிரேடு'ன்னு ஒண்ணு தர்றேன். டி. எஃப். சி.க்கு உதவியா இருங்க. சிறிது காலத்தில் நீங்க கணக்கு அதிகாரி யாக உயர்ந்து விடலாம்! இதை நான் செய்தே தீரணும். என்னோட கடமை இது. உங்களுக்காக இல்லா விட்டாலும் உங்க அப்பாவுக்காக, அவர் செய்த தியாகத்துக் காக. சுதந்திரம் வாங்கறதுக்கு அவர் பட்ட கஷ்டத்துக்காக; என்னைப்போல எத்தனையோ பேர் வாழ்க்கையிலே விளக்கேத்தி வச்ச துக்காக. அவர் நெனச்சிருந்தார்னா, ஒரு கவர்னராகவோ, காபினெட் மந்திரியாகவோ இருந்திருக்கலாம். 'ஆனா அதுக்காக நான் சுதந்திரம் வாங்கப் போராடலே'ம்பார். ஆகவே மிஸ்டர் சத்தியமூர்த்தி இன்னையிலே ருந்து நீங்க என்னோட ஸ்டாஃப்...ஓகே?''

''சார், மன்னித்துக் கொள்ளுங்கள். இந்த வேலையை நான் ஏற்றுக் கொள்ள மாட் டேன். என் படிப்பைச் சொல்லி வேலை கேட் கத்தான் இங்கே வந்தேன். என் அப்பாவின் தியாகத்தைச் சொல்லி அல்ல. தன் மகன் எதிர்காலத்துக்காக அவர் இந்த நாட்டுக்கு உழைக்கவில்லை. அவர் வளர்த்த வேள்வித் தீயில் நான் குளிர் காய விரும்பவில்லை. அவ ருக்கு இதைப் போல எண்ணங்கள் இருந்த தில்லை. இருந்திருந்தால் அவர் வாழ்நாளி லேயே இதைவிட ஒரு நல்ல பதவியில் என்னை அமர்த்தி யிருக்க முடியும். என் திறமையில் தான் நான் பிழைக்க வேண்டும் என்பது அவருடைய கட்டளை. ஆகவே...''

''புரிகிறது, மிஸ்டர் சத்தியமூர்த்தி.''

''என் அப்பாவிடம் நீங்கள் வைத்திருக்கும் மரியாதைக்கு நன்றி சார். நான் வருகிறேன்.''

அவன் எழுந்து, நிதானமாக நடந்து கத வைத் திறந்து வெளியே வந்தான்.

சற்று முன் குடித்த ரோஸ் மில்க் இப் பொழுது கசப்பாகத் தோன்றியது.





## சௌந்தர்ய லஹரீ

சகல ஜீவராசிகளுக்கும் தாயான அன்னை பராசக்தியை வழிபட்டு உய்ய முடியும் என்பதை ஆதி சங்கரர் தமது ஸௌந்தர்ய லஹரி மூலம் உலகுக்கு எடுத்துக் காட்டுகிறார். இந்த நூலின் நூறு சுலோகங்களையும் பாராயணம் செய்தால் பெறற்கரிய பேறுகளைப் பெறலாம். அப்படி முடியாதவர்களுக்கு அவரே வழி பாட்டை எவ்வளவு சுளுவாக்கிக் காட்டுகிறார், பாருங்கள்!

'தாயே, நான் பேசுவதெல்லாம் ஜபமாயும், கைகால் அசைவுகள் முத்திரைகளாகவும், நடப்பதெல்லாம் பிரதட்சிணமாயும், சாப்பிடுவது ஹோமமாயும், படுத்துக்கொள்வது நமஸ்காரமாகவும், என்னுடைய எல்லா சுகங்களும் உனக்கு உபசாரமாகவும் விளங்கட்டும். ஆத்மார்ப்பணமாய்ச் செய்யப்பட்ட, இவையெல்லாம் உனக்குப் பூஜையாகட்டும்.'

மானஸ பூஜையாலேயே அன்னை பராசக்தியை மகிழ்விக்கலாம்.

ஞானபாஸ்கர ஸ்ரீ பி. என். நாராயண சாஸ்திரிகள் ரத்தினச் சுருக்கமாக எல்லோருக்கும் புரியும் வண்ணம் நூறு சுலோகங்களுக்கும் தமிழில் உரையெழுதி யிருப்பதோடு ஒவ்வொரு சுலோகத்தையும் பாராயணம் செய்யும் முறையையும் அதனால் ஏற்படும் பயனையும் குறிப்பாகக் கொடுத்துள்ளார். தேவி உபாசகராக விளங்கும் அவரது உரையை அழகாக வெளியிட்டிருக்கிறது ரா. ஸ்ரீ. ஸ்ரீ. பதிப்பகம்.

கிடைக்குமிடம்: சி. 552, அசோக்நகர், சென்னை-83. விலை ரூ. 3.00.

## ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள்

மந்திராலயம் என்ற சொல்லுக்கே ஒரு மந்திர சக்தி உண்டு என்று கூறுமளவுக்கு மாபெரும் மஹனீயராக வாழ்ந்தவர் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள். துவைத, அத்வைதத்துக்கு அப்பாற்பட்டவராக, 'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறு ஒன்று அறியேன் பராபரமே' என்று வாழ்ந்த அவர், திருஞானசம்பந்தரைப் போல எத்தனையோ அற்புதங்களை நடத்தியவர். சாதி — மத பாகுபாடின்றி மக்கட் சேவைக்கே தம்மை அர்ப்பணித்து வந்த மகான். உலகத்தின் நலனுக்காக அற்புதங்கள் செய்து பணியாற்றிய அவர், தம் சொந்த வாழ்க்கையை எப்படி நடத்தினார் என்பதை அறியும் போது கண்கள் நீர்த்திரையிடுகின்றன. மனிதன் தெய்வமாகத் திகழ முடியும் என்பதை அவர் வரலாற்றின் மூலம் அறியும் பொழுது இன்றும் அவர் சாகாவரம் பெற்றவராக, மக்களுக்கு 'மூவா மருந்து' அருளுகிறார் என்பதையும் காண்கிறோம். வழக்கறிஞர் ஸ்ரீ சி. ஆர். ரவி அவர்கள் பக்தி உணர்வோடு

# படித்தோம் சொல்கிறோம்

சரளமான தமிழ் நடையில் அப்பெரியவரின் வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகிறார். — ரா.வீ.

பிரசுரம்: காமாக்ஷிராம் பப்ளிகேஷன், 103—ஏ/2, சாலை ரோடு, உறையூர், திருச்சிராப்பள்ளி-3. விலை ரூ. 3-00.

## சிந்தனைகள்

ஆளும் காங்கிரஸின் முக்கிய தலைவர்களில் ஒருவராகிய திரு எம். பக்தவத்சலம் அவர்கள் 21, ஜூலை 75 லிருந்து 22 செப்டம்பர் 76க்கு இடைப்பட்ட நாட்களில் தமிழ் நாட்டிலும் இந்தியத் துணைக் கண்டத்திலும் நடைபெற்ற நிகழ்ச்சிகளைப் பற்றி அவ்வப்போது எழுதிவந்த கருத்துக்களின் தொகுப்பே இந்த நூல். பொதுவாக மத்திய அரசு எடுத்த நடவடிக்கைகளை ஆதரித்தும், தி. மு. க. அரசினையும், அதன் செயல்களையும் கண்டித்தும் அவர் வெளியிட்ட கருத்துக்கள் இன்றைய ஆளும் காங்கிரஸ் கட்சியினருக்கு நல்ல பிரசார நூலாகப் பயன்படலாம்.

''வியாழனன்று நான் காரைக்குடியிலிருந்தபோது தி. மு. க. அரசின் மற்றொரு முறைகேட்டினைப் பற்றிக் கேள்விப்பட்டேன். தமிழ்நாட்டில் உள்ள அறுநூறு கோவில்களிலிருந்து ஆலயம் ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய் வீதம் ஆறு லட்சம் ரூபாய் ''முரசொலி''க்கு அளிக்கப்பட்டதாம். இதற்குக் கலைஞர் என்ன சமாதானம் கூற முடியும்?'' என்று 27 மார்ச் 76ல் கேட்டிருக்கிறார்.

' ''குழலோசை'' என்ற பத்திரிகை ஒரு மலர் போடுவதாகச் சொல்லி ஒன்றரை லட்ச ரூபாய்க்கு மேல் கோவில் பணம் பெறப்பட்டிருக்கிறது., ஆனால் அந்த மலர் வெளிவரவேயில்லை. கட்சிக்கு வேண்டிய அந்தப் பத்திரிகைக்காரர், வாங்கிய பணத்தை ஜீரணித்துவிட்டதாகவும் கூறப்படுகிறது.''

இப்படி தி. மு. க. ஆட்சியின் பலப் பல ஊழல்களை திரு பக்தவத்சலம் எடுத்துக் கூறும்போது மத்திய அரசு

எடுத்த நடவடிக்கை மிகச் சரியான நடவடிக்கை என்ற எண்ணம் உண்டாகிறது. அது மட்டுமல்ல! ஏன் இவ்வளவு காலந்தாழ்ந்து நடவடிக்கை எடுத்தது என்றுகூடக் கேட்கத் தோன்றும்.

இணைந்த காங்கிரஸைப் பற்றி, ''உடலிலுள்ள ஓர் எலும்பு முறிந்து பின்னுல் இணைக்கப்பட்டால் அந்த எலும்புக்கு முன்னிருந்த பலத்தை விட அதிக பலம் ஏற்படுகிறதென்று மருத்துவர்களே கூறுவார்கள். அவ்வாறே இன்று இணைகின்ற தமிழ் நாடு காங்கிரஸ் பலம் பொருந்திய ஸ்தாபனமாக விளங்கும் என்பதில் ஐயமில்லை'' என்று 15, பிப்ரவரி 76ல் ஜோசியம் கூறினர். இன்னும் இது பகற்கனவாகவே இருந்து வருகிறது.

மொத்தத்தில் பெரியவர் திரு பக்தவத்சலம் அவர்களின் எண்பதாவது பிறந்த தின விழாவினை யொட்டி வெளியிடப்பட்டுள்ள இப்புத்தகம் அரசியல் — நிர்வாகம் ஆகிய துறைகளில் ஈடுபாடு உடையவர்களுக்கு ஒரு நல்ல ''கைடு'' போன்றதாகும்.

—எஸ்.வி.எஸ்.

கிடைக்குமிடம்: 10, கந்தப்ப ஆசாரி தெரு, சென்னை-7. விலை ரூ. 3-00.

## விண்வெளி அற்புதங்கள்

'விஞ்ஞானக் கருத்துக்களைத் தமிழில் தரமுடியுமா?' என்ற ஐயப்பாட்டை நீக்கித் 'தமிழால் தரமுடியும்' என்று நிரூபிப்பதே போல் சமீப காலத்தில் பல விஞ்ஞான நூல்கள் தமிழில் வெளிவந்துள்ளன. விண்வெளிப் பயணத்தின் சரிதத்தை விளக்கமாக, விறுவிறுப்பான தமிழில் மோகன் சுந்தர ராஜன் தருகிறார்.

விண்வெளிச் சாதனைகளால் மனித குலத்துக்கு என்ன பயன்? நாட்டுக்குள்ளும் இதர நாடுகளுடனும் விரைவான, தெளிவான தகவல் தொடர்பு கொள்ள, புயலை முன்கூட்டி அறிய, வானிலையை ஆராய, பயிர் வளம், நிலவளம், நீர்வளம் பற்றி உணர, நாட்டின் பாதுகாப்புக்கும், கப்பல், விமானப் போக்குவரத்துக்கும் உதவ — இவற்றுக்கெல்லாம் 'விண்வெளிப் பயண ஆராய்ச்சிகள் பயனு கின்றன. வருங்காலத்தில் பல புதிய பொருள்கள் 'விண்வெளியில் தயாரானவை!' என்று அறிமுகமாகலாம்.

இப்படி விண்வெளி ஆராய்ச்சி சரிதத்தையும், அற்புதங்களையும், சாதனைகளையும் பயன்களையும் சுவைபட, ஒரு நல்ல நவீனத்தைப் படிப்பது போன்று சொல்லிக் கொண்டு போகிறார் ஆசிரியர்.

—கௌசிகன்

ஆசிரியர்: மோகன் சுந்தரராஜன். வெளியிட்டோர்: நேஷனல் புக் டிரஸ்ட், புது தில்லி. விநியோகிப்போர்: பாரிநிலயம், 1/59, பிராட்வே, சென்னை-1. விலை ரூ. 9-00.

## சுந்தரகாண்டச் சுருக்கம்

சுந்தர காண்டம் பாராயணம் செய்வது மிகவும் நல்லது, க்ஷேமத்தைக் கொடுக்கும் என்பது பலருக்கும் தெரிந்ததுதான். முழுக்கப் பாராயணம் செய்ய அவகாசம் இல்லாதவர்களுக்குச் சுருக்கம் ஒன்றைத் தயாரித்திருக்கிறார் கிடாம்பி ராகவாச்சாரி. சாரமான 108 சுலோகங்களைத் தொகுத்துத் தந்திருக்கிறார். சில சுலோகங்களுக்குக் கருத்தும் விசேஷ அர்த்தங்களும் தரப்பட்டுள்ளன. இத்துடன் அனுமத் அஷ்டோத்ர சத நாம ஸ்தோத்திரம் இணைந்துள்ளது.

விலை 75 காசு. தபால் மூலம் பெற ரூ. 1. விலாசம்: திரு ராகவாச்சாரி, 27, சுந்தர மூர்த்தி விநாயகர் கோயில் தெரு, சென்னை 600 005.

---

படங்கள் :

- ஸ்ரீ ராஜ்ராஜேசுவரி.
- திரு பக்தவத்சலம்.
- ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள்.
- நிலாத் தரையில் இறங்கிய அமெரிக்க விண்கலமும் முதல் மனிதனும். பின்னணியில் பூமி.











விஜயா பாலகிருஷ்ணன்

எத்தனையோ கல்லூரிகளில் 'வார்ட'னாகப் பணியாற்றும் வாய்ப்பும் எனக்குக் கிடைத்தது. இதற்கு ஒரு காரணம் நீண்ட காலம் நான் பிரம்மசாரியாகக் கழித்தது. இன்னொரு காரணம் என்னுடைய ஜீரண சக்தி. எந்த விதமான உணவையும் என்னால் ஜீரணிக்க முடியும்!

ஆந்திராக் கல்லூரி ஒன்றில் வேலை பார்க்கையில்தான் அஞ்சி ரெட்டியை எனக்குப் பழக்கம் ஏற்பட்டது. ஆஜானுபாகுவான தோற்றம் படைத்தவன். வயது என்னைக் காட்டிலும் கூடுதலாகவே இருந்திருக்கும். அந்தக் கல்லூரியில் படித்து வந்த மாண வர்கள் எல்லோருமே வயதில் கொஞ்சம் பெரியவர்கள்தாம். அநேகம் பேர்களுக்குக் கல்யாணமாகி யிருந்தது. ஓரிருவர் அரசியல் வாதிகள். சில மாதங்கள் கல்லூரியில் படிப் பார்கள். பிறகு ஏதாவது இயக்கத்தில் சேர்ந்து ஜெயிலுக்குப் போவார்கள். விடு தலையானவுடன் மீண்டும் வகுப்புக்கு வரு வார்கள். இதேபோல் சினிமா நடிகர் ஒரு வரும் படித்து வந்தார். 'ஷூட்டிங்' இல்லாத போதெல்லாம் கல்லூரியில் தலை காட்டுவார். தொடர்ந்து படிக்காததினால் பல மாணவர் களின் வயது இருபத்தைந்தைக்கூடக் கடந் திருந்தது.

'ஷூட்டிங்'குக்குப் போவதாக இருந்தா லும், ஜெயிலுக்குப் போவதாக இருந்தாலும் 'வார்டன்'ன என்னிடம் விடைபெற்றுக் கொண்டுதான் போவார்கள் மாணவ மணி கள். ஏன், சினிமாவுக்குப் போவதாக இருந்தால்கூடச் சொல்லி விட்டுத்தான் போவார்கள். வெள்ளிக்கிழமை தோறும் என் கதவருகில் வந்து நிற்பான் அஞ்சி ரெட்டி. அவனுக்கு ஊருக்குப் போக வேண் டும். ''என்ன,' எண்ணெய்க் குளியா? போ, போ...'' என்று விடை தருவேன். அஞ்சி ரெட்டிக்கு ஊருக்குப் போய்த் தைல ஸ்நானம் செய்தால்தான் தலை குளிருமாம். இத்தனைக் கும் அவன் ஊருக்குப் பக்கத்தில் எந்தக் நற்றுலமும் இல்லை என்று அவனே குறிப் பிட்டிருந்தான். தீர்க்கமான எண்ணெய்க் குளிக்கு முன் உள்ளூர் நாவிதன் அப்பள நர சய்யா, உடம்பில் தைலத்தைத் தேய்த்து அடி அடி என்று அடிப்பானும். அதை அஞ்சி ரெட்டி வர்ணிக்கையில் நமக்கே அந்தத் தலை அலங்கார நிபுணரிடம்' அடிவாங்கிக் கொள்ள வேண்டும்போல் தோன்றும்.

கடைசியில் அஞ்சி ரெட்டி ஹாஸ்டலை விட்டுப் போகும் நாள் வந்தது. மாணவர் பிரிவுபசாரக் கூட்டத்துக்கு என்னையும் அழைத்திருந்தார்கள். நான் பேசுகையில் அஞ்சி ரெட்டியின் எண்ணெய் ஸ்நானத்தைப் பற்றிக் குறிப்பிட்டேன். ''சனிக்கிழமை யன்று சூரியன் உதிக்காமல்கூட இருக்கலாம். ஆனால் அஞ்சி ரெட்டி எண்ணெய்க்குளி குளிக் காமல் இருக்க மாட்டார்'' என்று குறிப்பிட் டேன். மாணவர்கள் விழுந்து விழுந்து சிரித் தார்கள். ஏனென்று தெரியாமல் விழித்தேன். விசாரித்ததில் விஷயம் விளங்கியது. எண் ணெய் ஸ்நானமும் இல்லை, மண்ணுங்கட்டியு மில்லை! அஞ்சி ரெட்டி தன் புது மனைவியைத் திருட்டுத்தனமாகச் சந்திப்பதற்காகத்தான் வாரம் தவறாமல் கிராமத்துக்குப் போய்க் கொண்டிருந்தான். படிப்பு முடியும் வரையில் மனைவியைச் சந்திக்கக் கூடாது என்று கற்பனை யற்ற பெற்றோர்கள் தடையுத்தரவு போட் டால் திருட்டுத்தனமாக எண்ணெய் குளி குளிக்கத் தானே வேண்டும்? ஆனால் அதற்காக அஞ்சி ரெட்டி அப்பள நரசய்யா என்ற நாவி தனை உருவாக்கியிருக்க வேண்டாம்!... அதற் குப் பின் அந்தக் கல்லூரி அகராதியில் எண் ணெய்க் குளி என்ற வார்த்தைக்கு ஒரு புது அர்த்தம் தரப்பட்டது என்று குறிப்பிடவா வேண்டும்?

மற்றொரு கல்லூரியில் நான் 'வார்டன்' கப் பணியாற்றுகையில் மாணவர்கள் 'ஸ்டி ரைக்' செய்தார்கள். ஹாஸ்டல் சாப்பாட்டின் அளவும் தரமும் மோசமாகிக் கொண்டு வந் தது தான் காரணம். என்னிடம் தனிப்பட்ட

முறையில் மாணவர்களுக்குக் கோபம் ஏதுமில்லை. ஆனால் கல்லூரி நிர்வாகத்திடம் நான் ஆணித்தரமான முறையில் மாணவர்களின் சாப்பாட்டுக் குறையை எடுத்துச் சொல்லவில்லை என்று அவர்கள் எண்ணினார்கள். வழக்கம்போல் ஹாஸ்டல் சாப்பாட்டைப் பழித்து எங்கு பார்த்தாலும் 'போஸ்டர்'கள் ஒட்டினார்கள். 'அம்மா பசிக்குதே...' என்ற சினிமாப் பாட்டிலிருந்து வங்காளப் பஞ்சத்தின் பட்டினியில் அடிபட்ட துர்ப்பாக்கியசாலிகளின் புகைப் படங்கள் வரையில் எத்தனையோ விஷயங்களைப் பிரசாரத்துக்காகப் பயன்படுத்தினர். கல்லூரி நோட்டீஸ் போர்டில் பின்வரும் தோரணையில் ஒரு 'போஸ்டர்' ஒட்டியிருந்தார்கள்: இட்டிலி இளைத்துக் கொண்டே வருகிறது. ஹாஸ்டல் வார்டன் பருத்துக் கொண்டே போகிறார்! இதன் மர்மம் என்ன ?

இரவோடு இரவாக மாணவர்களுக்குத் தெரியாமல் என்னுடைய புகைப்படமொன்றைப் போஸ்டருக்குக் கீழே ஒட்டி வைத்தேன். 'பருத்துக் கொண்டு வரும் வார்டன் இவர்தான்!' என்ற குறிப்பும் பக்கத்தில் இருந்தது. மறுநாள் இதைப் பார்த்த மாணவர்கள் ஸ்டிரைக்கின் தீவிரத்தை மறந்து விழுந்து விழுந்து சிரித்தார்கள். காற்றடித்தால் பறந்து போகக் கூடிய என் பூஞ்சை உடம்பைப் பார்த்தால் யாருக்குத்தான் சிரிப்பு வராது? ஆனால் கதை அத்துடன் முடிந்து விடவில்லை. எமகாதகர்களான மாணவர்கள் என்படத்தையே தங்கள் பிரசாரத்துக்குச் சாதகமாகப் பயன்படுத்தினார்கள் ! 'பாவம், வார்டன்! அவரும் எங்களுடன் பட்டினி கிடக்கிறார்! படத்தைப் பார்த்தாலேயே தெரியவில்லையா?' என்ற தோரணையில் புதுப் போஸ்டர் போட்டு விட்டார்கள்!

மாணவிகளுக்குப் 'பாதுகாப்பாளனா'கப் பணியாற்றும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது. பிரம்மசாரியாக இருந்தும் கல்லூரி நிர்வாகத்தினர் என் தலையில் இந்தப் பொறுப்பைச் சுமத்தினது ஆசிரியர்கள் வட்டாரத்தில் பெரிய பரபரப்பை ஏற்படுத்தியது. 'குட் பாய்' (*Good boy*) 'பிரைஸ் பாய்' (*Prize boy*) என்றெல்லாம் என்னைக் கேலி செய்தார்கள். ரிஷ்யசிருங்கர் என்ற பட்டப் பெயரும் கிடைத்தது.

மாணவிகளை ஏதாவது சாக்குச் சொல்லிப் பார்க்க வருவார்கள் மாணவர்கள். நாடகத்துக்கு டிக்கெட் விற்பதிலிருந்து 'நோட்ஸ்' இரவல் வாங்கிப் போவது வரையில் எத்தனையோ தந்திரங்கள். சுஜாதா என்ற பெண்மிக அழகாக இருப்பாள். அந்தக் காலத்துப் பிரபல சினிமா ஸ்டார் ஒருத்தியின் பெயரைச் சொல்லித்தான் மாணவர்கள் அவளைஅழைப்பார்கள். மலையாளத்தைச் சேர்ந்தவள். படிப்பிலும் கெட்டிக்காரி. திடீரென்று அவளுக்குக் 'கஸின்'கள் (*Cousins*) முளைக்கத் தொடங்கினார்கள்! பொழுது விடிந்தால் பொழுது அஸ்தமிக்கும் வரையில் யாராவது ஒரு மாணவன் அவளது 'கஸின்' என்று உறவு கொண்டாடிக் கொண்டு பேட்டி காண





**வெள்ளிப் பிசாசு!**

'அவ'ளுக்கு 55 வயதாகிறது. லண்டனிலிருந்து டில்லி வந்தாள் சாலை மார்க்கமாக. 7200 மைல் ஓடி வந்தாள்! இடையில் கொஞ்சமாவது சிரமப்பட்டாளா? இடையவே கிடையாது!

'அவள்' என்றது 1921ம் மாடல் ரோல்ஸ் ராய்ஸ் கார். பெயர் வெள்ளிப் பிசாசு! சொந்தக்காரர் அட்ரியன் லிட்டெல் ஒரு விவசாயி. பழைய கார்களைச் சேகரிப்பவர். இவரிடம் 12 கார்களும், 28 மோட்டார் சைக்கிள்களும் உள்ளன!

- ஹிந்துஸ்தான் டைம்ஸ்

---

வரத் தொடங்கினான். நான் பொறுமை இழந்து ஒருநாள் அவளிடம் பின்வரும் தோரணையில் கூறினேன்: 'அப்பப்பா! உனக்கு எத்தனை 'கஸின்'கள்! தேச ஒருமைப்பாட்டுக்கு உன் குடும்பம் ஓர் இலக்கணம் போலும். கேரளத்திலிருந்து மட்டுமா 'கஸின்'கள் படை யெடுக்கிறார்கள்? சுந்தரத் தெலுங்கு பேசும் விஜயவாடாவிலிருந்து, மகாராஷ்டிராவிலிருந்து... ஏன், காஷ்மீரிலிருந்துகூடவல்லவா 'கஸின்'கள் வருகின்றனர்!' மாணவர்களுக்கு நான் சொன்னது தெரிந்ததோ இல்லையோ, சுஜாதாவின் அறையை முற்றுகையிடும் வழக்கத்தை விட்டு விட்டார்கள்.

ஹாஸ்டலில் புலி வேட்டை ஆடும் பாக்கியமும் எனக்குக் கிடைத்தது. எல்லாம் கனடாவில் தற்போது வேலை பார்க்கும் குட்டிக் கிருஷ்ண மாராரால் வந்த வினை!

மாராரின் அம்மா அயர்லாந்து தேசத்தைச் சேர்ந்தவள். அப்பா பச்சை மலையாளி. வீட்டில் பேசும் பாஷை ஆங்கிலம்.

மாணவர் மாரார் ஆங்கிலத்தைச் சரளமாகப் பேசி வந்ததால் கல்லூரிப் பதவிகளுக்கெல்லாம் அவனைத்தான் தேர்ந்தெடுப்பார்கள். ஹாஸ்டல் சங்கத்துக்கும் இவன்தான் தலைவன். எல்லோருக்கும் அவனைக் கண்டால் அச்சம். கல்லூரி முதல்வர் உட்பட!

மாராரிடம் புலிக்குட்டி இருந்தது. தவிர, அரை டஜன் பாம்புகள். இந்தச் செல்லங்களைத் தழுவிக்கொண்டுதான் அவன் தூங்குவான். ஹாஸ்டலுக்குள் இவற்றைக் கொண்டு வரக் கூடாது என்று ஓரிரு முறை கண்டித்துப் பார்த்தோம். கேட்டால்தானே? அவனைத் தண்டித்துக் கல்லூரியை விட்டு வெளியேற்றக் கல்லூரி முதல்வருக்குத் தைரியம் கிடையாது. அவன் முரடன் என்பது ஒரு புறமிருக்க, கல்லூரி 'செக்ரடரி'யின் பிள்ளைக்கு அவன் நெருங்கிய 'தோஸ்து'. பொதுவாகத் தனியார் நடத்தும் கல்லூரிகளில் 'செக்ரடரி'யைப்பழித்துவிட்டுப் பிரின்ஸிபால் உத்தியோகம் பார்க்க முடியுமா என்ன? எனவே மாராரின் புலிக்குட்டியையோ, பாம்பையோ ஹாஸ்டலை விட்டு அப்புறப் படுத்த அவர் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை.

புலியையும் பாம்பையும் காட்டி அப்பாவிப் பிள்ளைகளை அழ வைப்பதுதான் மாராரின் பொழுதுபோக்கு. ஆசிரியர்களையும் பயமுறுத்தி மார்க் போடச் சொன்னதாகக் கிசுகிசு வட்டாரத்தில் பேசிக் கொள்வார்கள். தோத்தாத்திரி என்ற மாணவனுக்கு மாராரைக் கண்டால் சிம்ம சொப்பனம். கட்டுக் குடுமி, நெற்றித் திருமண் முதலிய அலங்காரங்களுடன் விளங்கின தோத்தாத்திரியிடம் 'புலி வருகிறது! புலி வருகிறது!' என்று பயம் காட்டியே சிகரெட்டுக்குப் பணம் பிடுங்குவான் மாரார். ஓரோரு சமயம் பாம்பைத் தோத்தாத்திரியின் கழுத்தைச் சுற்றிப் போடுவான். அப்பொழுது தோத்தாத்திரி எழுப்பும் அபயக் குரல் நாலு ஊர்களுக்குக் கேட்கும்!

ஒரு நாள் நள்ளிரவில் ஹாஸ்டல் அல்லோல கல்லோலப்பட்டது. தன் அறையில் குறட்டை விட்டுக் கொண்டிருந்த தோத்தாத்திரியின் மீது ஜன்னல் வழியாகத் திடீர்ப் பாய்ச்சல் பாய்ந்தது மாராரின் புலிக்குட்டி. 'குய்யோ முறையோ' என்று குடுமி அவிழ்ந்து விடக் கத்தின தோத்தாத்திரி விளக்கைப் போட முயன்றான். ஆனால் அது எரிய மறுத்தது. மின்சாரக் கோளாறு, இல்லை, மெயின் ஸ்விட்சை மாரார் திரிசமன் செய்திருந்தானா? இங்குமங்கும் இன்னது செய்வது என்று தெரியாமல் அறைக்குள்ளேயே ஓடின தோத்தாத்ரி புலியை மிதித்து விட்டான். அது அவனைக் கன்னா பின்னாவென்று பிறாண்டி விட்டது!

தோத்தாத்திரி போட்ட கூக்குரலில் ஹாஸ்டலே விழித்துக் கொண்டு விட்டது. 'மாரார் மாரார், உன் புலியைப் பிடி' என்று யாரோ கத்தினார்கள். கம்பும் கழியுமாக ஓடி வந்தார்கள் ஹாஸ்டல் வேலையாட்கள். கட்டப் பாறையுடன் வந்தான் தோட்டக்கார பீம் சிங். இதற்குள் சில மாணவர்கள் யானைக் கும் படைக்கு 'போன்' செய்துவிட்டார்கள். அவர்கள் துப்பாக்கி, புலிக்கூண்டு முதலிய பொருள்களுடன் விழுந்தடித்துக் கொண்டு வந்தார்கள். அவர்களுடன் காமிரா சகிதம் வந்தார் ஒரு தமிழ் மாலை தினசரியின் நிபுணர்.

மின்சார விளக்குகள் திடீரென்று எரிந்தன! அறையில் நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்த மாரார் லுங்கியும் பனியனுமாக அங்கு வந்து சேர்ந்து 'என்ன ரகளை?' என்று வினவினான். வழக்கம்போல் புலிக் குட்டி அவன் கையில் தவழ்ந்து கொண்டிருந்தது.

தோத்தாத்திரியின் அறையிலிருந்து இருந் திருந்தாற்போல் 'மி...யா...வ்' என்ற இனிய குரல் கேட்கவும் அனைவரும் சிரித்தே விட்டோம்!

# திசுக்களின் எதிர்ப்பு; தேகத்தின் தவிப்பு!

லட்சுமி அம்மாள் — 55 வயது — கைகளைச் சொறிந்தவண்ணம் உள்ளே வந்தார். ''சருமத்தில் ஓயாமல் நமைச்சல் ஏற்படுகிறது. சொறிந்து கொண்டால் சிவப்பாக மாறிவிடுகிறது. உடல் முழுவதும் திட்டுத் திட்டாகத் தடித்து விடுகிறது. கீழ் உதட்டில் நமைச்சல் அதிகமாக இருக்கிறது. ஆறு மாதங்களாக என்ன என்னவோ சிகிச்சைகள் செய்து கொண்டேன். பலன் இல்லை'' என்ருர்.

மலப் பரிசோதனை செய்ததில் அமீபா, குடல் புழு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. வீட்டைப் பெருக்கிச் சுத்தம் செய்யும்போதும் படுக்கையை உதறிப் போடும் போதும் தும்மல் வருவதாகத் தெரிவித்தார் லட்சுமி அம்மாள்.

முன் கையில் ஊசி மூலம் உடல் உவந்து ஏற்காத பொருட்களை உட்செலுத்தி (Prick Test, Intradermal Test) பரிசோதனை செய்ததில் அப்பெண்மணிக்கு 'அலர்ஜிக் அட்ரிகேரியா' (Allergic Utricaria) இருப்பது தெளிவாகியது. ஊசி குத்திய இடத்தில் சுமார் பதினைந்து நிமிடங்களுள் சிறு கொப்புளம் மாதிரி வட்டமாகச் சருமத்தில் தடித்திருந்தது. அந்த இடத்தில் சருமம் நல்ல சிவப்பாகவும் மாறியிருந்தது. உடல் ஏற்றுக் கொள்ளாத பொருளையே ஊசி மூலம் சிறு அளவில் பன்முறை உட்செலுத்திய பிறகு (Hyposensitation) அப்பெண்மணி சில வாரங்களில் நன்கு குணம் அடைந்தார்.

**''அலர்ஜி என்ருல் என்ன, டாக்டர்? அது ஏற்படக் காரணம் என்ன?''**

''திசுவில் ஏற்படும் ஒருவித இயக்கம் (Tissue Altered Reactivity) அலர்ஜி எனப்படும். சற்று விளக்கமாகக் கூறுகிறேன். உடலின் வளர்ச்சிக்குப் புரதம் இன்றியமையாதது. நம் உடலின் எல்லா உறுப்புக்களிலும் புரதம் உளது. ஒரே மனிதரின் வெவ்வேறு உறுப்புக்களிலுள்ள புரதம் மாறுபட்டது. நுரையீரலில் உள்ள புரதம் அதே நபரின் கையிலோ காலிலோ உள்ள திசுவின் புரதத்தினின்றும் மாறுபட்டது. ஒன்று மற்றொன்றை ஏற்றுக் கொள்ளாமல் புறக்கணித்துவிடும். (Specificay of Cell Protein) இப்படித் திசு புரதத்தின் தனிப்பட்ட தன்மைகள் காரணமாய்ப் பெரும்பாலானவர்களைக் குறிப்பிட்ட அளவில் சற்றும் பாதிக்காத சில பொருள்கள் வேறு சிலருக்குப் பெரும் தொந்தரவாக முடிகின்றன. உதாரணமாகச் சிறிதளவு தூசி பறந்தால் பெரும்பாலோரால் தாங்கிக்கொள்ள முடியும். ஆனல் தூசிக்கு 'அலர்ஜி' உள்ளவர்களால் சற்றும் பொறுத்துக்கொள்ள முடியாது. திசுக்களில் எதிர் இயக்கம் உண்டாகிறது.''

**''அலர்ஜியின் விளைவாக உடலில் ஏற்படக் கூடிய பாதிப்புகள் என்ன?''**

''தலைவலி, தும்மல், மூக்கிலிருந்து நீர் வடிதல், தொண்டையில் கரகரப்பு இருமல், மூச்சு இரைப்பு, ஆஸ்துமா, சரும உபாதைகள் (எக்ஸிமா உட்பட), நீர்த்த வயிற்றுப் போக்கு (வலியுடன்) — இப்படிப் பல தொந்தரவுகள் தோன்றக்கூடும். அலர்ஜி ஏற்படுவதற்குத் தேனீ, கொசு, மூட்டைப் பூச்சிக் கடி வீட்டுப் புழுதி, தெருப் புழுதி போன்ற எத்தனையோ பல காரணங்கள் உள்ளன.''

**''மனத்தின் பாதிப்புக்கூட அலர்ஜிக்கு வழி வகுக்கக் கூடுமா?''**

''ஏன்? சரும உபாதைகள் சில மந்திரங்களால் நீங்குவதுண்டு அல்லவா? மந்திரங்களின் உச்சரிப்பைக் கேட்டு மனம் அமைதியடைந்து அதன் பயனாக உடலும் குணம் பெறுவதுண்டு. அதே போல், மனத்தின் பாதிப்பால் உடலில் 'அலர்ஜி' ஏற்படுவதும் சாத்தியமே.''

**''இதனை எவ்விதம் குணப்படுத்துவது?''**

'1. எந்த 'அலெர்ஜென்' காரணமாக நோயாளி பாதிக்கப்படுகிருர் என்பதைக் கண்டறிந்து உரிய சிகிச்சை அளிக்கலாம். சருமத்தில் ஊசி மூலம் அலர்ஜி ஏற்படுத்தக் கூடிய பொருட்களைச் செலுத்திச் சருமத்தில் அதன் பாதிப்பைப் பரிசோதனை செய்ய வேண்டும். 2. சில மருந்துகளின் (Sympatho Memetic Drugs) மூலமும் உதவலாம். Anti Histamin Steroids தாற்காலிகக் குணம் அளிக்கும். 3. பெப்டோன் இஞ்செக்ஷன். 4. பால். 5. நோயாளியின் இரத்தத்தையே எடுத்து அதனையே உடலுக்குள் செலுத்துவது. 6. கர்ப்பிணிகளின் உடைந்த பனிக்குடம் (Placenta) த்தின் சாரம் (Extract). இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சீனுவில் இச்சிகிச்சை கையாளப்பட்டு வந்திருக்கிறது. இப்போது இது ஊசி மருந்தாக எளிதில் கிடைக்கிறது.''

**''அலர்ஜி ஏற்படாமல் தடுக்க என்ன வழி?''**

''எந்தப் பொருளால் (Allergen) அலர்ஜி ஏற்படுகிறதோ அதனை உபயோகிப்பதைத் தவிர்க்க வேண்டும்.''

**டாக்டர் என். கிருஷ்ணசுவாமி கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.**



ஒரு வார லீவுக்குப் பிறகு அன்றுதான் கங்கா அலுவலகத்துக்கு வந்தாள்.

முதல் தேதியன்று லீவில் இருந்ததால் சம்பளத்தை வாங்கிப் பையில் வைத்துக் கொண்டாள்.

மூன்று மணிக்கு டெலிபோனில் அவளை யாரோ கூப்பிட்டார்கள். ''அவர்தான் போலிருக்கிறது. ஐந்தாறு மணி நேரப் பிரிவைக்கூடத் தாங்க முடியாதா அவரால்?'' என்று சொல்லிப் போனை அவள் கையில் கொடுத்தார் மானேஜர்.

கங்காவுக்குக் கூச்சமாக இருந்தது. காலையில்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். ''மத்தியானம் போன் பண்ணட்டுமா?'' என்று அவர் கேட்டபோது 'வேண்டாம்' என்றுதான் சொல்லியிருந்தாள். இப்போது எதற்காகக் கூப்பிடுகிறார்?

போனை வாங்கிக் கொண்டு ''ஹலோ'' என்று சொன்னவுடன் எதிர்ப் பக்கத்திலிருந்து ''அக்கா, நான்தான் சேகர் பேசுகிறேன்'' என்று பதில் வந்ததும் அவளுக்குத் தலையிலிருந்து கால்வரையில் திடீரென்று என்னவோ செய்தது.

''சேகரா...? எங்கிருந்தடா கண்ணு பேசறே?'' என்று பரபரப்புடன் கேட்டாள்.

''மளிகைக் கடையிலிருந்து பேசறேன் அக்கா. எப்படிக்கா இருக்கே? சௌக்கியமாக இருக்கியா? எங்களை யெல்லாம் மறக்கல்லியே?''

பன்னிரண்டு வயசான ஒரே தம்பி அவன். கல்யாணம் ஆன இந்த ஒரு வாரத்தில் அவர்கள் வீட்டில் நல்லபடியாக நடந்து கொள்ள வேண்டுமே என்ற கவலையிலும் மற்ற வேலைகளிலும் ஈடுபட்டிருந்தபோது தம்பியை அதிகமாக நினைக்க முடியவில்லை தான். அதைத் தெரிந்து கொண்டு அவன் எப்படிக் கேட்கிறான்!

அது அலுவலகம் என்பதும் மறந்து அவள் கண்களிலிருந்து கரகரவென்று கண்ணீர் சுரந்தது. ''அங்கே எல்லோரும் சௌக்கியம் தானே? அம்மா என்ன பண்ணறா? இன்னைக்கு என்ன டிபன்?'' என்று விசாரித்தாள்.

''நாளைக்கு வீட்டுக்கு வரியாக்கா? உன்னைப் பார்க்க வேண்டும் போலிருக்கு...''

''வரேண்டா... வரேண்டா கண்ணு. அம்மா அப்பாவிடம் சொல்லு. நாளைக்கு வரேன். என்ன? வைச்சுடட்டுமா?...''

பிற்பகல் மூன்றரை மணிக்கு மானேஜர் கூப்பிட்டார். ''புது வீட்டிலே சமையல் வேலை யெல்லாம் இருக்கும். இங்கே உன் வேலை முடிந்து விட்டதில்லையா? வீட்டுக்குக் கிளம்புகிறதாக இருந்தால் கிளம்பு'' என்று சொல்லி அனுப்பினார்.

வெளியே வந்தாள். போனில் பேசும் போது மறுநாள் வருவதாகத்தான் சொல்லியிருந்தாள். படி இறங்கிப் பஸ் ஸ்டாண்டை நோக்கிப் போனபோது இதோ இப்போதே போய் அம்மாவையும் தம்பியையும் பார்த்து விட்டு வந்தால் என்ன என்று தோன்றியது.




ஆனால் இரண்டு நாட்களுக்கு முன் தலை பின்னி விட்டுக் கொண்டிருந்தபோது மாமியார் சொன்னது நினைவுக்கு வந்தது. ''எதுவும் அளவோடு இருந்தால்தான் நன்றாக இருக்கும். அப்பாவின் வீடு உள்ளூர்தானே என்று நினைத்தபோதெல்லாம் போய்க் கொண்டிருக்கக் கூடாது. போகவே கூடாது என்று ஒன்றும் நான் வழிமறிக்க மாட்டேன். எதுவும் ஓர் அளவோடு இருக்கணும்...''

என்றாலும் மனம் அலைபாயவே, திருவல்லிக்கேணி பஸ்ஸில் ஏறி விட்டாள். நிறுத்தத்தில் இறங்கித் தெரு முனை திரும்பி நடந்தபோது அவளுக்குக் கால்கள் பரபரத்தன.

சத்தம் எழுப்பாமல் செருப்பைத் திண்ணையருகிலேயே விட்டுவிட்டு ரேழியில் காலடி எடுத்து வைத்தபோது உள்ளே பேச்சுக் குரல் கேட்டுத் தயங்கினாள். அப்பாதான் என்னவோ பேசிக் கொண்டிருந்தது கேட்டது.

''கல்யாணம் ஆகி ஒரு வாரம் முழுசாக ஆகவில்லே. சாமான்கள் மொத்தம் எவ்வளவு ஆச்சு என்று இன்னும் கூட்டிப் போட்டுப் பார்க்கக்கூட இல்லே. அதற்குள்ளே மீதிப் பணம் வேணுமாமா? முழுப் பணமும் கொடுத்து வாங்குவதா யிருந்தால் மொத்த விலேயில் கொத்தவால் சாவடியிலேயே வாங்கியிருப்போம். இரண்டு மூன்று மாசத்தில் பெற்றுக் கொள்வதாகச் சொன்னதால் தான் விலேயைப் பற்றிக்கூடக் கவலேப்படாமல் இவன் கடையில் வாங்கினேம்.''

கங்காவின் கால்கள் பின்னடைந்தன.

அதற்குள் அம்மா பூக்காரியின் குரல் கேட்டுப் பூ வாங்கத் திண்ணைக்கு வரவே, ''அம்மா...!'' என்று ஓடிப் போய்க் கட்டிக் கொண்டாள் கங்கா. தெரிந்த வாடிக்கைப் பூக்காரி கங்காவைப் பார்த்து, ''சௌக்கியமா இருக்கியா அம்மா?'' என்று கேட்டுக் கொண்டு ஒரு முழம் பூவைத் தனியாக எடுத்து அவளிடம் கொடுத்தாள்.

''உள்ளே வா...'' என்று பரபரப்புடன் அம்மா உள்ளே நகர்ந்தாள். ''இங்கே யார் வந்திருக்கிறது என்று பாருங்கோ...''

கூடத்து மேஜையில் அப்பா அமர்ந்து கணக்குகளைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவற்றை டிராயரில் தள்ளிவிட்டு ''கங்காவா வா...வா...''

''ஆபீஸிலிருந்து நேரே வரியா? இந்த மாதிரி இங்கே போயிட்டு வரப்போகிறேன்னு மாமியாரிடம் சொல்லிக் கொண்டு வந்தாயோ?'' என்று கேட்டார்.

''இல்லேப்பா... உங்களேயெல்லாம் பார்க்கணும் போலிருந்தது வந்தேன். இதோ புறப்படப் போகிறேன். ஆமாம், சேகர் எங்கே?'' என்று கேட்டாள் கங்கா.

''இன்னும் அவன் பள்ளிக் கூடத்திலிருந்து வரவில்லே.''

''வரல்லியா...? பெரிய மனுஷன் மாதிரி மூணு மணிக்கு எனக்கு போன் பண்ணினுனே! எங்கேயிருந்துடா பண்ணறே என்று கேட்ட போது மளிகைக் கடையிலேருந்துன்னு பொய் சொன்னுனே!...''

''சேகர் போன் பண்ணினுனு? தேவலேயே!''

கங்கா பையிலிருந்து சம்பளக் கவரை எடுத்து அப்பாவிடம் கொடுத்தாள்.

''இதை ஏம்மா என்கிட்டே கொடுக்கிறே? இதெல்லாம் இனிமே அவர்களுக்குச் சேர வேண்டியது'' என்றார் அப்பா.

''போன மாசம் முப்பது நாள் இந்த வீட்டிலேதானே சாப்பிட்டிருக்கிறேன். இந்த மாதம் பிறந்ததிலிருந்துதானே அங்கே சாப்பாடு?'' என்று சொல்லிச் சிரித்தாள் அவள்.

''வேண்டாம்மா... எடுத்துக் கொண்டு போய் மாமியாரிடம் கொடு. கல்யாணம் ஆன முதல் மாதச் சம்பளத்தை இங்கே கொடுத்துட்டேன்னு ஏதாவது பேச்சு வரும். கடைசிவரையிலே இதையே சொல்லிக் கொண்டிருப்பார்கள்...''

''ஒன்றும் சொல்ல மாட்டார்கள். மாமியார் இன்று காலேயிலே கேட்டார். 'இன்னிக்குச் சம்பளமாடீ'ன்னு. 'இல்லே, கல்யாணத்துக்கு லீவு போட்டதனுலே முன்னுடியே வாங்கிட்டேன்' என்று சொல்லி விட்டேன்.''

பொய் சொல்லிவிட்டேன் என்று ஒரு பொய் எப்படிச் சட்டென்று வந்தது!

''சொல்லிட்டியா? அப்படி என்றால் சரி'' என்று அப்பா கவரை வாங்கி மேஜையின் மேல் வைத்தார்.

**ம**யிலாப்பூர் வீட்டை அடைந்து உள்ளே படி ஏறியபோது ஐந்தரை மணி அடித்தது. மாமியார் ''வா'' என்றாள். ''எப்படி இருந்தது இன்னிக்கு வேலே எல்லாம்?'' என்று விசாரித்தாள். பதில் சொல்லிவிட்டு அவள்



உள்ளே போய்ப் புடவை மாற்றிக்கொண்டு கை கால் கழுவிக் கொண்டு வந்தாள்.

''உள்ளே அலமாரியிலே பால் வைத்திருக்கிறேன். காப்பி கலந்து எடுத்துக்கொள். தோசை வார்க்கப் போறேன். எடுத்துக் கொண்டவுடனே இரண்டு பேரும் கோயிலுக்குப் போயிட்டு வரலாம்? அவன் ஆறு, ஆறரை மணிக்கு மேலேதான் வருவான்.''

கோயிலுக்குப் போகும் வழியில் ஒரு பாங்க் அலுவலகம் இருந்தது. அது மாலை நாலு மணியிலிருந்து ஏழு மணி வரை திறந்திருக்கும் கிளை. ''இது ரொம்ப சௌகரியம். ராஜாகூடச் சம்பளம் வந்தவுடன் என்னிடம் கொடுத்து விடுவான். நான்தான் சாயங்காலமே கோயிலுக்கு வந்துவிட்டுப் பணத்தைக் கட்டிவிடுவேன். மாசம் ஆக, ஆக அப்பப்போ எடுத்துக் கொள்வோம்.''

எதற்காக இப்போது அதைக் குறிப்பிட்டுச் சொல்கிறார்? ஒருவேளை 'முதல் தேதிக்குப் பிறகு இன்றுதானே அலுவலகத்துக்குப் போனே? உன் சம்பளம் எங்கே?' என்று நேராகக் கேட்க வேண்டாம் என்று இப்படி மறைமுகமாகக் கேட்கிறாரோ?

கங்காவுக்குப் பயமாக இருந்தது. அப்பா அம்மாவின் முன்னிலையில் பொய் சொல்வது சுலபமாக இருந்தது. இப்போது இவர் நேராக உன் சம்பளம் எங்கே என்று கேட்டால் எப்படி அதைச் சொல்வது?

''என் இந்த மாதச் சம்பளத்தைக் கல்யாணத்துக்காக லீவில் போவதற்கு முன்னாலேயே கொடுத்து விட்டார்கள். முதலில் பதினைந்து நாள் லீவு சாங்ஷன் ஆகியிருந்ததால்...'' என்று மென்று விழுங்கினாள்.

அதைக் கேட்டதும் மாமியாரின் முகம் திடீரென்று மாறியது. ''அப்படியா...?'' என்று ஒரு மாதிரியாகப் பார்த்தார். அதற்குப் பிறகு வீடு வந்து சேரும்வரையில் அவர் மேலே பேசவில்லை.

அன்று இரவில் ராஜாவும் அதைப் பற்றிச் சாதாரணமாகக் கேட்பது போலக் கேட்டான். ''உங்கள் ஆபீஸில் அடுத்த மாதச் சம்பளத்தை முதல் மாதம் பத்தாம் தேதியே வாங்கிக் கொண்டு விடலாமா, என்ன?''

''பத்தாம் தேதிக்கெல்லாம் வாங்கிக் கொள்ள முடியாது. கல்யாணம், மாதிரி முக்கிய காரியத்துக்கு என்று இருபது தேதிக்குப் பிறகு லீவிலே போனால் மாத்திரம் வாங்கிக் கொள்ளலாம். இன்று என் சம்பளத்தைக் கொண்டு வந்து கொடுக்கவில்லை என்று அம்மா உங்களிடம் கோபமாகச் சொன்னாரா?''

''கோபம் என்று இல்லை. இருந்தாலும் ரூபாய் வரும் என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்துவிட்டு இல்லை என்று தெரிந்ததும் வருத்தமாக இருந்திருக்கும். நாட்டுப்பெண்ணுக்கு அறுநூறு ரூபாய் சம்பளம் என்று நாலு பேரிடம் சொல்லி அதை அப்படியே பாங்கில் கட்ட சலான் முதற்கொண்டு எழுதி வைத்துக்கொண்டிருந்தாள்...'' என்றான் அவன்.

பத்துப் பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு நாள். விடுமுறை தினம். மாமனார் கூடத்தில் ஈஸிச்சேரில் அரைத் தூக்கத்தில் இருந்தார். மாமியார் தாழ்வாரத்தில் உட்கார்ந்து கங்காவுக்குப் பின்னிக் கொண்டிருந்தார். ராஜாவும் பேசினால் காது கேட்கும் தூரத்தில்தான் இருந்தான்.

இருந்தாற்போலிருந்து மாமியார் கேட்டாள்: ''போன மாசம் சம்பளம் எப்போது வாங்கினேன் என்று சொன்னே...?''

கங்காவுக்குத் திடீரென்று எல்லோர் முன்னிலையிலும் தாக்குதல் போல் அந்தக் கேள்வியைக் கேட்டதும் பொட்டில் அறைந்தது போல் இருந்தது. முதலில் பேச்சே வரவில்லை.

''உன்னைத்தான் கங்கா... இருபத்தைந்தாம் தேதியே வாங்கி அப்பா கிட்டே கொடுத்துட்டே இல்லே...? இந்த மாசமும் அப்படி இருபத்தைந்தாம் தேதியே வந்து விடுமா?''

''போன மாசம் கல்யாணம்கிறதினாலேயும் லீவிலே போகிறேன் என்கிறதனாலேயும்...''

''ஓஹோ...ஒருத்தரும் உன்னைப் போனிலே நீ ஆபீசுக்குப் போன அன்னிக்குக் கூப்பிட்டு இன்றைக்குச் சம்பளம் வந்திருக்குமே, நேரே இங்கே வந்துட்டுப் போன்னு சொல்லல்லே?''

தனக்குப் போன் வந்ததும் அப்பாவின் வீட்டுக்குப் போனதும் இங்கே எப்படித் தெரிந்தது? அதைப் பற்றி நான் சொல்லவே இல்லையே...

''வீட்டுக்கு வரும்படி யாரும் கூப்பிடல்லே. தம்பி சேகர்தான் போன் பண்ணினான்.

## சரித்திர 'சிப்ஸ்!'

○ சோமனாதபுரத்தைக் கொள்ளையடித்த கஜினி முகமது, தான் கொள்ளையடித்துச் சென்ற பொன்னையும், பொருளையும், தன் தலைநகரான கஜினியை அழகுபடுத்தவும், விரிவுபடுத்தவுமே செலவு செய்தான். அங்கு கட்டப்பட்ட ஒரு மசூதியின் வேலைப்பாடமைந்த வாசற்படிக்கு, சோமனாதபுரத்திலிருந்து எடுத்துவரப்பட்ட தங்க விக்ரகத்தை உருக்கி உபயோகப்படுத்தினான். ஆனால் துர் அதிர்ஷ்டவசமாக, இவ்வளவு அழகுபடுத்திய கஜனி நகர் தீப்பற்றி எரிந்துவிட்டது!

○ நாலந்தா பல்கலைக் கழகத்தில் பயிற்சி பெற்றுக் கல்வி கற்ற 10,000 க்கும் அதிகமான மாணவர்களுக்கு உணவு, உறைவிடம் யாவும் இலவசமாக அளிக்கப்பட்டன.

சுமார் 200 கிராமங்களின் வருவாயை, ஹர்ஷர் அந்தப் பல்கலைக் கழகத்திற்கு மான்யமாக அளித்திருந்தார்.

சம்ஸ்கிருத மொழி, பல்கலைக் கழகத்தின் பயிற்சி மொழியாக இருந்தது. காஞ்சிபுரத்தைச் சேர்ந்த தர்மபாலர் என்பவர் அந்தச் சிறப்பு மிகுந்த பல்கலைக் கழகததின் முதல் துணைவேந்தராக நியமிக்கப்பட்டார்,

- லலிதா நாராயணன்





## பொல்லாத்தனம்!

நடிகை: நாற்பது வயதை நினைத்தாலே பயமாயிருக்கிறது!
மற்றொரு நடிகை: ஏன்? நாற்பதாவது வயதில் என்ன நடந்தது அப்படி?

உமன்ஸ் —இரா - சம்பத் குமாரி

---

ஏழெட்டு நாட்களாகப் பார்க்காததனாலே என்னைப் பார்க்கணும்போலிருக்கு என்றான்.'' அவளுக்குக் கண்கள் குளமாயின.

''அதனாலே அன்றைக்கு அங்கே போயிட்டு வந்தே...?''

''ஆமாம்...''

''போயிட்டு வந்தேன்னு என்கிட்டே ஏன் சொல்லல்லே? நான் உன்னை அப்படி எல்லாம் போகக் கூடாது என்று சொல்கிறவளா?''

''இல்லே...''

''பின்னே போயிட்டு வந்தேன்னு ஏன் சொல்லல்லே?''

''உங்களிடம் சொல்லாமல் போனது தப்புன்னு பயமாக இருந்தது. அதனாலே சொல்லல்லே...ஐந்து நிமிஷம் இருந்துவிட்டு ஓடிவந்துட்டேன்.''

''சரி... சரி... இந்த மாதமும் தம்பியை விட்டுப் போன் பண்ணச் சொல்வார்களோ? மளிகைக் கடை பாக்கி மாதிரி ஜவுளிக் கடை பாக்கி, நகைக் கடை பாக்கி எல்லாவற்றையும் அடைக்க வேண்டாமா?''

மாமனாருக்கே பொறுக்க வில்லை போலிருந்தது. 'தினப்' பத்திரிகையைத் தள்ளிவிட்டு நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டு ''பாவம், அவளை ஏன் இப்படி மிரட்டறே? என்னவோ, முதல் மாசம் தெரியாமல் பண்ணிவிட்டாள். அதோடு விட்டுடு. இனிமேல் மாசா மாசம் அவள் சம்பளத்தை உன்னிடம்தானே கொடுக்கப் போகிறாள்...?''

பொங்கி வரும் கண்ணீரைக் கங்கா கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டிருந்தாள்.

''ஆமாம், நீங்க என்ன ரொம்பப் பெரிய மனசுக்காரர் மாதிரிக் காட்டிக் கொள்கிறேளாக்கும்?'' என்று அவர் மீது பாய்ந்தார் மாமியார்.

**அ**டுத்த மாதம் முதல் தேதி.

மாமனார் அலுவலகத்துக்குக் கிளம்பிக் கொண்டிருந்தபோது ''நீங்க சாயங்காலம் ஆபீசிலிருந்து வரும்போது மலையாளத் தைலம் வாங்கிக்கொண்டு வாங்கோ. இரண்டு மூணு நாட்களாகக் கால் எல்லாம் குடையறது'' என்றார் மாமியார்.

''இன்னிக்கு ஆபிசிலே ஒருவர் ரிடையர் ஆகிறார். பார்ட்டி இருக்கு. அப்புறம் இரண்டு மூணு பேர் பேசுவார்கள். முடிந்து வர நாழியாகுமே. நாளைக்கு வாங்கிக் கொண்டு வரேனே'' என்றார் மாமனார்.

''எது சொன்னாலும் அதற்குத் தடங்கல்தான்! மூணு நாட்களாகக் கஷ்டப்படறேனே, அது தெரியவில்லையே... ஆபீசிலேதான் டிபன் காப்பி எல்லாம் கிடைத்து விடுகிறதே, அப்புறம் அவசரம் என்ன? நிதானமாகப் போய் வாங்கிக் கொண்டு வரலாம். மருந்து இன்றைக்கு வந்தால்தான் எனக்குத் தூக்கம் வரும்.''

''சரி...'' என்று அவர் கிளம்பினார். கங்காவும் பின்னாலேயே கிளம்பினாள்.

**மா**லை நாலு மணிக்கே கங்கா வீட்டுக்கு வந்து விட்டாள். காப்பி, டிபன் ஆனவுடன் மாமியாருடன் கோயிலுக்குக் கிளம்பினாள். கையில் பாங்க் சலான், ரூபாயுடன்.

வீட்டுக்குத் திரும்பியபோது மாமனார் வந்திருந்தார். ஈஸிச் சேரில் சாய்ந்திருந்தவரிடம் போன மாமியார், ''ஏன் என்னமோபோல் இருக்கிறீர்கள்? உடம்பு ஏதாவது சரியில்லையா?'' என்று விசாரித்தார்.

''உடம்புக்கெல்லாம் ஒன்றுமில்லை'' என்று திரும்பிக் கொண்டார் அவர்.

''ஏன், என்ன? முகம் ஒரு மாதிரியாக இருக்கே...?''

''ஒன்றுமில்லை, போ...''

''மருந்து வாங்கிக்கொண்டு வரவில்லை. அதுதானே? எனக்குத் தெரியுமே... சரி சரி. நாளைக்கு வாங்கிக்கலாம். போய்க் கை கால் கழுவிக்கொண்டு வாருங்கோ.''

''மருந்து வாங்கிக் கொண்டு வந்துவிட்டேன்'' என்று சொல்லிக் கீழே இருந்த பையிலிருந்து பாட்டிலை எடுத்துக் கொடுத்தார் அவர்.

''ஏன் குரலே என்னமோ மாதிரி இருக்கு? சொல்லுங்கோ.''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே...''

அவர் எழுந்து போய் ஸ்டாண்டிலிருந்து பாண்டை எடுத்துப் பிரித்துக் காண்பித்தார். அதன் பை உள்ள இடம் பிளேடினால் வெட்டப்பட்டிருப்பது தெரிந்தது.

''என்ன...? என்ன ஆச்சு...? பர்ஸ்... போயிடுத்தா...?

''என்ன அக்கிரமம்! எனக்கு அப்போதே தெரியும். எதிர் வீட்டுக் கொள்ளிக் கண் கோமதி பத்துத் தடவை கேட்டுவிட்டாள். உனக்கு என்ன, நாட்டுப் பெண் வேறே சம்பளம் வாங்குகிறாள் என்று. சொல்லிச் சொல்லி வயிற்றெரிச்சல் பட்டாள். எனக்கு அப்பவே தோணித்து, இப்படி ஏதாவது நடக்கும்னு...''

''கோமதியின் கொள்ளிக் கண் இல்லை. நான் சொல்றேன். போன மாசம் நம் நாட்டுப் பெண் சம்பளத்தை அவள் அப்பாவிடம் கொடுத்துவிட்டு வந்ததற்கு அவளை என்ன பாடு படுத்தினே? அவள் என்றைக்குச் சம்பளம் வாங்கினாள், எப்படிக் கொண்டு போய்க் கொடுத்தாள், யார் போன் பண்ணினது என்று மூன்றும் மனிதர்களை விட்டு வெட்கமில்லாமல் துப்பறிஞ்சு குழந்தையின் மனசைப் பதறடிச்சே... அந்தப் பாவம் தான்....''

---

ஒரு ஹிப்பியின் பிரார்த்தனை: ''ஆண்டவனே! நான் நினைக்கிற காரியம் மட்டும் கைகூடினால் சலூனுக்குப் போய்க் கிராப் செய்துக் கறேன்''

- முத்து



# ஊருக்கு உழைப்பவன்



கடமைக்கும் குடும்பப் பாசத்துக்கும் இடையே சிக்கித் தவிக்கும் கதாநாயகனை வைத்துக் கொண்டு எத்தனையோ தமிழ்ப் படங்கள் வெளிவந்துவிட்டன — அதுவும் எம். ஜி. ஆரையே கதாநாயகனாக வைத்து! நல்லோரைக் காப்பாற்றுவது, தீயவர்களை உதைத்து ஒடுக்குவது - இதுவும் அவரது பழைய உத்திதான். எம். ஜி. ஆர். சினிமாத் துறையில் அடைந்து வரும் வெற்றியின் ரகசியமே அதுதானே! அதிலும், இரு வேடம் ஏற்று நடிப்பது அவருக்குக் கைவந்த கலை; இப்படத்திலும் அந்த நீண்ட நெடு நாள் சம்பிரதாயம் கடைப்பிடிக்கப்பட்டிருக்கிறது!

வாணிஸ்ரீ, 'வெண்ணிற ஆடை' நிர்மலா இருவரும் இரு எம். ஜி. ஆர்.களுக்கும் கதாநாயகிகள். வாணிஸ்ரீ உருக்கமாகவும், கதாநாயகனுடன் நெருக்கமாகவும் நடித்து ரசிகர்களுக்கு 'கிளுகிளுப்'பூட்டுகிறார்; கண் கலங்கவும் வைக்கிறார். வெ. ஆ. நிர்மலா நளினமாக வந்து, நயமாகப் பேசி, நாசூக்காக நடித்து நல்ல பெயரைத் தட்டிக் கொள்ளுகிறார். வாணிஸ்ரீயுடன் நெருக்கமாக நடித்த எம். ஜி. ஆர். நிர்மலாவை மட்டும் விட்டு வைக்கவில்லை. மாற்றான் மனைவியாக வரும் அவருடன் எப்படி நெருங்கி நடிக்க முடியும் என்றுதானே கேட்கிறீர்கள்? அதற்குத்தான் கனவுக் காட்சி என்று ஒன்று இருக்கிறதே! அப்படிக் கூட எந்தப் பெண்ணாவது ஏமாந்து போவாளா, துளிக்கூடச் சந்தேகம் ஏற்படாதா, ஒரே மாதிரி அச்சாக உருவ ஒற்றுமை ஏற்பட முடியுமா என்று கேட்பதில் பலனில்லை...மூச்!





எம். ஜி. ஆர். தமக்கே உரிய லாகவத்துடன் சண்டைக் காட்சிகளில் பரபரப்பும், சுறுசுறுப்பும் காட்டிப் படத்துக்கு விறுவிறுப்பூட்டியிருக்கிறார்; வழக்கத்துக்கு மாறாக இப்படத்தில் கண் கலங்கியும் இருக்கிறார்! குமாரி பத்மினி புடவையை வரிந்து கட்டிக் கொண்டு சண்டைக் காட்சிகளில்... ஆண்பிள்ளை கெட்டான் போங்கள்! செக்ஸியாக நடிக்க வழியில்லையே என்பதற்காக இந்த அசிங்கம் பிடித்த 'ஸ்டண்ட்' வேலைகளா?

வாணி ஜெயராம், ஜேசுதாஸ் இருவரின் இனிமையான பாடல்களும் மன நிறைவைத் தருகின்றன. என். பாலகிருஷ்ணனின் ஒளிப்பதிவு கண்ணையும், கருத்தையும் கவர்கிறது. 'ஈஸ்ட்மென் கலர்' படத்துக்கு மெருகு சேர்த்திருக்கிறது.

வீனஸ் பிக்சர்ஸாரின் 'ஊருக்கு உழைப்பவன்' மாதிரி எல்லாச் சௌகரியங்களும் கிடைத்தால் எல்லாரும் ஊருக்கு உழைக்கத் தயார்! சரிதானே! — காந்தன்

"தாரகைகளைக் கோத்தாற் போன்ற முத்து வடமும், மணங் கமழும் சந்தனக் குழம்பும் சீர்மையும் இளமையும் பொருந்திய அழகிய முலைகளிலே கண்ணகிக்குச் சேராது ஒழிந்தன. தாது பொருந்திய செங்கழு நீரின் குளிர்ந்த மாலையானது முல்லை மலருடன் சேர்ந்து அவளது கூந்தலிலே பொருந்தாது ஒழிந்தது. சந்தனத் துளிர்கள் அவளுடைய செந்தளிர் வண்ண மேனியிலே சேராது ஒழிந்தது. அணிகலன்களும் ஒப்பனைகளுமின்றிப் புகாரில் கோவலனைப் பிரிந்திருந்த நாட்களிலே எந்தக் கோலத்தில் இருந்தாளோ அதே அவலத்தில்தான் அவனைக் கைப் பிடித்து வழி நடக்கும் நேரத்திலும் கண்ணகி இருந்தாள் என்கிறார் இளங்கோ. ஆம்; வறுமையின் வடிவமாகக் காட்சி அளித்தாள்.

பன்மீன் தானையோடு பாற்கதிர் பரப்பி
தென்னவன் குல முதல் செல்வன் தோன்றி,
புலவர் நாவிற் பொருந்திய தென்றலொடு
பால் நிலா வெண்கதிர் பாவை
மேற் சொரிய,
வேனில் திங்களும் வேண்டுதி என்றே
பார் மகள் அயா உயிர்த்து,
அடங்கிய பின்னர்.

"பல விண்மீன்களாகிய தன் படையோடு பால் போன்ற கதிர்களைப் பரப்பியவனாகத் தென்னவர்குல முதல்வனை சந்திரன் வானிலே தோன்றினான். அவனுடைய நிலவுக் கதிர்கள் கண்ணகியின் திருமேனியில் படிவது கண்டு, 'இவ்வேனிற் காலத்துத் திங்கள் ஒளியினை நீயும் வேண்டுகின்றாயோ?' என்று நிலமகள் அவளைப் பார்த்துப் பெருமூச்சு எறிந்து அடங்கினாள்.

இந்த வரிகளுக்கு உரை எழுதிய அடியார்க்கு நல்லார், "மாதவியோடு புலந்து போதலானும், மதுரைக்குச் சேறற்கு ஒருப்பட்ட நெஞ்சினனாதலானும், மேற்கவுந்தியடிகளுடன் வழிச் சேரலானும் யாண்டும் மெய்யுறன் மாத்திர மல்லது புணர்ச்சி இல்லென உணர்க " என்று கூறுகிறார்.

இரவில் காட்டு வழியே நடப்பது கண்ணகிக்கு அச்சத்தைத் தருவதாக இருந்தது. அந்த அச்சத்தைப் போக்க விரும்பிய கோவலன் அவளிடம் பின்வருமாறு சொல்லுகின்றான் :

கொடு வரி மறுகும்; குடிஞை கூப்பிடும்;
இடிதரும் ஒளியமும்; இணையாது ஏகு!

" கொடிய புலிகள் உறுமும் ; கோட்டான்கள் அலறும்; கரடிகள் முழங்கும். இருந்தாலும், இது செங்கோல் தென்னவர் காக்கும் நாடு ஆதலால், நீ நடுங்காமல் செல்வாயாக"

கண்ணகியினுடைய வளையணிந்த கையைத் தன் தோளின் மீது சாத்திக் கொண்டு நடந்தான். மறவுரைகளை நீக்கிய மாசற்ற கேள்விகளைக் கவுந்தியடிகள் வழி நெடுகச் சொல்லிக் கொண்டே சென்றார். அவ்வுரைகளைக் கேட்டுக் கொண்டே கடத்தற்கரிய காட்டுப் பிரதேசத்தைக் கண்ணகியும் கோவலனும் கடந்தனர்.

மாதவியாள், கண்ணகியைக் கைப் பிடித்துக் கோவலன் புகார் நகரிலிருந்து புறப்பட்டு மதுரை நோக்கிச் சென்றது கேட்டு, மன அதிர்ச்சி அடைந்தாள். அதனால், தனது ஆற்றாமையைத் தெரிவிக்கும் கடிதத்தை எழுதி, அதனை அறிவு நிறைந்த அந்தணனான கோசிகமாணி என்பானிடம் தந்து, எப்படியேனும் கோவலனைக் கண்டு பிடித்து, அவனிடம் கடிதத்தைக் கொடுக்குமாறு கூறி அனுப்பி வைத்தாள்.

கோசிகன் பல நாட்கள் நடந்து, வழி நெடுகக் கோவலனைத் தேடியலைந்து, இறுதியில் கண்டு பிடித்துவிட்டான். ஆனால், அவன் தான் கோவலன் என்று உறுதி செய்ய அவனால் முடியவில்லை. அதனால், ஒரு சூழ்ச்சி செய்தான். பசிய இலைகளை உடைய குருக்கத்தி படர்ந்த பந்தலின் பக்கமாக நின்று கொண்டு கீழ்வருமாறு கூறினான் :

"கோவலன் பிரியக் கொடுந் துயர் எய்திய
மாமலர் நெடுங்கண் மாதவி போன்றுஇவ்
அருந்திறல் வேனிற்கு அலர்களைந்து உடனே,
வருந்தினை போலும் நீ, மாதவி!"

" கோவலனுடைய பிரிவு காரணமாகக் கொடுந் துயரம் எய்திய கரிய மலர் போன்ற நெடுங் கண்களை உடைய மாதவியைப் போன்று வேனில் கொடுமைக்கு ஆற்றாது நீயும் வருந்திப் பொலிவிழந்தாய் போலும் மாதவி?" என்றான் கோசிகன் மாதவிக்கொடியைப் பார்த்து. (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து.)




Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras 600 031.
Managing Editor: T. Sadasivam. Associate Editor: K. Rajendran.

ஒரு கடமையாக எண்ணி ஒரு மாபெரும் பொறுப்பை ஸ்ரீ சதாசிவம் மேற்கொண்டு நிறைவேற்றி வருகிறார்.

கணவர் எடுத்த காரியம் யாவினுக்கும் கைகொடுக்கும் ஸ்ரீமதி எம். எஸ்., அன்று நிகழ்த்திய உதவிக் கச்சேரிக்குத் தமிழக ஆளுநர் திரு சுகாதியா தலைமை வகித்துக் கௌரவித்தார். தாம் இளம் வயதில் காந்திஜியின் தலைமையால் ஈர்க்கப்பட்டுச் சுதந்திரப் போராட்டத்தில் குதித்த நாட்களிலேயே ராஜாஜியின் அறிவுக் கூர்மையையும் வாதத் திறமையையும் கண்டு வியந்ததை எடுத்துச் சொன்னார் ஆளுநர்.

புத்தியால் பிரச்னைகளை அணுகக் கற்றுக் கொடுத்தபோதே பக்தியால் ஆண்டவனை அணுகவும் கற்றுத் தந்தவர் ராஜாஜி. அதற்கு ஏற்பவே ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் தமது ஒவ்வொரு கச்சேரியையும் பக்தி ரசம் ததும்ப அமைத்து வருகிறார். சுதந்திர தினக் கச்சேரியின்போதும் அவ்வாறே தாமும் பரவசமாகிச் சபையோரையும் பரவசத்தில் ஆழ்த்தினார். அதோடு ராஜாஜிக்கு அஞ்சலி செலுத்தும் விதமாகச் சில விசேஷ அம்சங்களும் கச்சேரியில் இடம் பெற்றிருந்தன.

ராஜாஜி குறித்து திரு ரா. கணபதி இயற்றிய ஒரு சுலோகத்துடன் கச்சேரி ஆரம்பமாயிற்று. ''சத்திய தர்ம தியாக சாரம்'' என்று தொடங்கும் அந்த சுலோகத்தில் ராஜாஜியுடைய வாழ்க்கையின் சாரத்தையே வடித்துத் தந்திருக்கிறார் திரு கணபதி. கருத்துச் செறிவும் கவிதை நயமும் மிக்க இந்த சம்ஸ்கிருத சுலோகம் ஸ்ரீமதி எம். எஸ்ஸின் குரலினிமையுடன் குழைந்து வந்து சபையோரை எடுத்த எடுப்பிலேயே மெய் சிலிர்க்கச் செய்து விட்டது.

டைகர் வரதாச்சாரியாரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாடிக் கொண்டிருக்கிறோம் இந்த வருஷம். கவர்னர் ஜெனரல் ராஜாஜி கலாக்ஷேத்திரத்துக்கு விஜயம் செய்தபோது அவரை வரவேற்க டைகர்

பொருத்தமான விதத்தில் தர்பார் ராகத்தில் ஒரு கீர்த்தனை இயற்றினார். அதனை ஸ்ரீமதி எம். எஸ். அன்று பாடியது அவ்விரு பெருமகனார்களுக்குமே அஞ்சலியாக அமைந்தது.

ஐ. நா. சபையில் ஸ்ரீமதி எம். எஸ். பாடுவதற்கென்றே ராஜாஜி இயற்றிய ஆங்கிலப் பாடல் திரு ஹாண்டல் மான்யுவெலின் ஆர்கன் இசையுடன் இணைந்து கணீரென்று ஒலித்து மியூஸிக் அகாடெமி அரங்கை ஒரு தேவாலயமாகவே சில நிமிஷங்களுக்கு ஆக்கிவிட்டது.

கச்சேரியின் இறுதிக் கட்டத்தில் திரு மீ.ப. சோமு உருவாக்கிய விருத்தம் இடம் பெற்றது. எளிய சொற்களில் ராஜாஜியின் மறைவு நமக்கு எப்பேர்ப்பட்ட பேரிழப்பு என்பதை எடுத்துக் கூறியது அச்செய்யுள்.

ராஜாஜி மறைந்தாரே யொழிய அவரது அறிவுரைகள் உலகை விட்டுப் போய்விடவில்லை. நம்முடனேயே நம் நலனை நாடி நின்று நிலைத்துள்ளன என்று உணர்த்தவே போல் விருத்தத்தைத் தொடர்ந்து ராஜாஜியின் குரல் அவையில் ஒலித்தது. 'பக்தி கலவாத வெறும் ஞானத்தால் பயனில்லை' என்பதைக் கூறும் ராஜாஜியின் சுருக்கமான ஆங்கில அறிவுரையை அடுத்து ஆதிசங்கரரின் பஜகோவிந்தம் பாடல்களை ஸ்ரீமதி எம். எஸ். பாடினார்.

ராஜாஜி எந்த லோக க்ஷேமத்துக்காக எழுதினாரோ, பேசினாரோ, பாடுபட்டாரோ அதே லோக க்ஷேமத்துக்காக சதா தவமிருந்து வரும் காஞ்சி முனிவர் லோக க்ஷேமத்தை முன்னிட்டே எழுதிய ''மைத்ரீம் பஜத'' பாடல் இந்தக் கச்சேரியில் ஒலித்தபோது அதில் ஒரு விசேஷப் பொருத்தம் இருப்பதை உணர முடிந்தது.

புது தில்லியில் ராஜாஜி சிலை அமைவது இருக்கட்டும்; அன்று ஸ்ரீமதி எம். எஸ். கச்சேரி கேட்ட அனைவரது உள்ளங்களிலும் பூஜைக்குரிய புனிதரின் விக்கிரகத்தை இசையால் வடித்துத் தந்துவிட்டார்.

**-குட்டி கிருஷ்ணன்**

படங்கள்: ஆளுனர் பேசுகிறார். இடமிருந்து வலமாக திரு சித்ரா எஸ். நாராயணசுவாமி, திரு சி. வி. நரசிம்மன், ஆளுநர் திரு சுகாதியா, ராஜாஜி சிலை வடிக்கும் திரு கலாசாகரம் ராஜகோபால், சிலை அமைப்புக்குழுத் தலைவர் திரு பி. கே. தேவ்.

ராஜாஜியின் ஆங்கிலப் பாடலைப் பாடுகிறார் ஸ்ரீமதி எம். எஸ். ஸ்ரீமதி ராதா விசுவநாதனுடன். ஹாண்டல் மான்யுவெல் ஆர்கன் வாசிக்கிறார். கச்சேரிக்கு இதர பக்க வாத்தியம் வாசித்துச் சிறப்பித்தவர்கள்: அழகர்சாமி (வயலின்) காரைக்குடி மணி (மிருதங்கம்) நாகராஜன் (கஞ்சிரா) விநாயக்ராம் (கடம்).



வேலிக்குள் பதினைந்து மாடிக் கட்டிடங்கள் நான்கு பதிந்து நின்றுகொண் டிருந்தன. அவைகளின் ஒவ்வொரு ஜன்னலுக்கும் ஒரு குடும்பம் என்று கணக்குப் போட்டால் தலைசுற்றும். கட்டிடங்கள் ஏதோ ஒரு பிரமை போல, பொய் போல, அப்போதுதான் தோன்றியது போல நின்றன. கட்டிடங்களின் இடைவெளியில் சதுரப் புல்வெளிகளில் நிறையக் குழந்தைகள் உற்சாகமாக விளையாடிக் கொண்டிருந்தன. இளம் பெண்கள் பந்து விளையாட்டுக்களில் குதித்துக் கொண்டிருந்தார்கள். வெயிலில் நின்று கொண்டிருந்தார்கள். பூப்பறித்துக் கொண்டிருந்தார்கள். நிறையப் பெண்கள், நிறையக் குழந்தைகள். ஆண்கள் அலுவலகத்துக்குச் சென்றிருந்த காலை பத்தரை மணி போலும்.

கட்டிடங்களைச் சுற்றி அமைத்திருந்த வேலி மிகவும் சிரத்தையுடன் இழுத்து விண் என்றுகட்டப்பட்டுச் சராசரிமனிதன் எவனும் கடக்க முடியாத உயரம் வரை எந்த இடத்திலும் இடைவெளியோ வெட்டோ இல்லாமல் நல்ல கற்புடன் ஆக்ரோஷமாக இருந்தது.




போதாக் குறைக்கு அங்கங்கே சிவப்பு அறிவிப்புகள் மண்டை ஓட்டுடன் warning high voltage என்று அறிவித்தன. யாருக்கும் அந்த வேலியைத் தொட விருப்பம் இருந்ததாகத் தெரியவில்லை. ஆனால் வேலியிலிருந்து சற்று ஆரோக்கியமான தூரத்தில் பல இளைஞர்கள் நின்றுகொண்டு வேலிக்கு உள்ளே வெயிலில் விளையாடிக் கொண்டிருந்த அந்தப் பெண்களை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்களில் சிலர்... வேண்டாம்.

வாசுதேவன் கையில் குழந்தையுடன் கட்டிடங்களின் பிரதான கேட்டை விட்டு வெளியில் வருவதை அந்த இளைஞர்களில் ஒருவன் பார்த்து விட்டான். அவனுடன் மற்றச் சிலர் சேர்ந்து கொண்டு வாசுதேவனை அணுகினார்கள். வாசுதேவன் தன் குழந்தையுடன் சிரித்துப் பேசிக் கொண்டே நடந்தான். குழந்தை மிக புஷ்டியாக இருந்தது. அதன் கன்னங்களில் புது ரத்தம் சிவந்திருந்தது. அதன் முகத்தில் கவர்ன்மெண்ட் காஸ் மெட்டிக் தொழிற்சாலையின் முகப் பவுடர் நிறைய அப்பப்பட்டு அதன் அகில இந்திய வாசனை வாசுதேவனிடத்திலும் பரவி யிருந்தது. வாசுதேவனின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியாத வயதுக் குழந்தை. எட்டு மாதம்.

வாசுதேவனை அந்த இளைஞர்கள் கூட்டமாக அணுகினார்கள்.

''ஹலோ'' என்றான் ஒரு சின்னப் பையன்.

''ஹலோ'' என்றார் வாசுதேவன்.

''பையனா பெண்ணா? பாப்பா அழகாக இருக்கிறது.''

''பையன்! மாமாவுக்கு டாட்டா சொல்லு.'' குழந்தை கையாட்டியது.

''ஐயா! உங்களிடம் கெஸ்ட் பாஸ் இருக்குமா?'' என்றான் இளைஞர்களில் ஒருத்தன்.

''ஏன்?''

''இருக்குமா? எங்களுக்கு ஒரு பாஸ் வேண்டும்.''



''எவ்வளவு தருவீர்கள்?''

''முந்நூறு மானெக்ஷா.''

''அடேயப்பா உங்களுக்கு அவர்கள் கண்ணில் காசையே காட்ட மாட்டார்களே, எப்படி இவ்வளவு பணம் கிடைத்தது?''

''உங்களைப் போன்ற நபும்சகர்களிடம் அடித்துப் பிடுங்கியது.''

''டேய் சும்மா இருடா.''

வாசுதேவன் கோபத்துடன் ''பாஸ் கிடை யாது'' என்முன்.

''இல்லையா?''

''இருக்கிறது. தர மாட்டேன். நீங்கள் உள்ளே வந்து ரகளை பண்ணுவீர்கள். பெண் களை....''

''கொடுக்கா விட்டால் அடித்துப் பிடுங்கு வோம்.''

''முடியாது.''

''அழுக்குத் தலையா கொடு.'' அவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

''முடியாது.''

பிரசுரிக்க முடியாத வார்த்தைகளை உப யோகித்தார்கள். ''மரியாதையுடன் கொடுக் கப் போகிறுயா இல்லையா?'' அவர்கள் அவன் சட்டையைப் பிடித்தார்கள்.

வாசுதேவன் உடனே தன் சட்டைப் பையி லிருந்த ஊதலை எடுத்து ''ஊதட்டுமா ரையட் விஸில்!'' என்முன்.

அதைப் பார்த்த கணமே அவர்கள் வாசு தேவனை விட்டு விட்டார்கள். ஒதுங்கிக் கொண்டார்கள். அவர்கள் கண்களில் பீதி தெரிந்தது. ''ஐயா, ஐயா! ஊதாதே. ப்ளீஸ்! ப்ளீஸ்! வேண்டாம்.''

வாசுதேவன் அவர்களைப் பெருமிதத்துடன் பார்த்தான். தன் வாயருகே அந்த ஊதலைக் கொண்டு சென்முன். ''என்ன ஆகும் தெரி யுமா? பாய்ந்து வந்து உங்களை அழைத்துச் செல்லச் சொல்லட்டுமா?''

''வேண்டாம் வேண்டாம். ஊதாதே! ஊதாதே!''

''ஒழிந்து போ.''

அவர்கள் அவனைச் சேவித்துவிட்டு நாடக பாணியில் அவனுக்கு உடல் வளைந்து வழிவிட வாசுதேவன் புன்னகையுடன் குழந்தையுடன் மெயின் ரோட்டுக்கு வந்தான்.

ஏராளமான ஜனங்கள் சாலையின் இருமருங் கிலும் நடந்து கொண்டிருந்தார்கள். நடப்ப தற்கே போதிய இடமில்லாமல் ஒருவர்மேல் ஒருவர் அடிக்கடி முட்டி மோதிக் கொண்டு



போனுர்கள். ஏராளமான சைக்கிள்களும் போராடின. அகலமான சாலே. இரண்டாகப் பிரிக்கப்பட்டு நடுவே ஒதுக்கப்பட்ட பகுதியில் பாட்டரி சக்தியில் ராட்சச பஸ்கள் ஜனங்கள் நிரம்பி வழிய விரைந்து கொண்டிருந்தன. ஒலிபெருக்கி சொல்வது எவருக்கும் புரியாத குழப்பம். சுவரொட்டிகளில் அந்த ராணுவ உடை ஆசாமி ஒரே மாதிரி சிரித்துக் கொண்டிருந்தார். அடுத்த வாரத்திலிருந்து அதிக அளவு சோயா பீனஸ் என்று சந்தோஷமாக அறிவித்தது சுவர்ச் செய்தித் தாள்.

சாலேயின் மறுபுறத்துக்கு வந்த வாசுதேவன் சற்றுத் தூரம் நடந்து அரசாங்கத்தின் ஒன்பதாம் நம்பர் கட்டிடத்தை அடைந்தான். கீழே ஹாலில் ஜனங்கள் இலக்கற்ற திக்குகளில் சென்று கொண்டிருந்தார்கள். ரயில்வே ஸ்டேஷன் போல் இருந்தது. ஹாலின் நடுவே கெட்டியான கண்ணுடிப் பெட்டிக்குள் பைபிள் திறந்து வைத்திருந்தது. திறந்திருந்த குளியலறையிலிருந்து தீவிர அம்மோனியா வாசனே வந்தது. வாசுதேவன் 'தகவல்' பகுதிக்குச் சென்று தன்னிடமிருந்த கடிதத்தைக் காட்டினன். அந்த சிப்பந்தி குழந்தையைப் பார்த்ததுமே, ''நான்காவது மாடி இருபத்தி எட்டாம் எண் அறை. லிஃப்ட் உபயோகிக்காதீர்கள். படி வழியாகச் செல்லுங்கள்'' என்ருன். லிஃப்ட்டுக்காகக் காத்திருந்த ஜன வரிசை கட்டிடத்துக்கு வெளிவரையில் சென்றது.

வாசுதேவன் நான்கு மாடிகளேயும் சந்தோஷத்துடனேயே ஏறினன். தன் குழந்தையிடம், ''கொஞ்சம் கூட வலிக்காது. எறும்பு கடிக்கிருற்போல 'சுருக்'; அவ்வளவுதான்!'' என்று பேசினன். குழந்தை சிரித்தது. மூன்ருவது மாடியில் மிக அதிகக் கூட்டம் இருந்தது. திருமண பர்மிட் என்கிற வாசலில் ரகளே நடந்து கொண்டிருந்தது. ஹெல்மட் அணிந்த போலீஸ் ஓர் ஆசாமியைத் தரதர வென்று இழுத்துச் செல்ல அவன் வாயில் ரத்தம் தெரிந்தது.

வாசுதேவன் செல்ல வேண்டிய இருபத்தி எட்டாம் நம்பர் அறையின் முகப்பில் 'இம்யூனேஸேஷன்' என்று எழுதியிருந்தது. உள்ளே இருபது இருபத்தி ஐந்து பேர்கள் பெஞ்சுகளில் உட்கார்ந்திருந்தார்கள். ஒவ்வொருவரிடமும் ஒரு குழந்தை இருந்தது. அவர்கள் எல்லோரிடமும் ஒரு மஞ்சள் கார்டு இருப்பதைக் கவனித்த வாசுதேவன் அருகில் சென்று 'இந்தக் கார்டு எங்கே கொடுக்கிருர்கள்?' என்று கேட்டான். ஓரத்தில் உட்கார்ந்திருந்த கிளார்க்கைக் காட்டினுர்கள்.

அந்தப் பெண் ஒரு 'காமிக்' வாசித்துக் கொண்டிருந்தாள். அவள் முன் ஒரு 'டெலிடைப்' இருந்தது. அவளிடமிருந்து அரசாங்க காஸ்மெடிக் தொழிற்சாலேயின் பவுடர் மணம் வீசியது.

வாசுதேவன் தன் கடிதத்தை நீட்ட அவள் காமிக்கிலிருந்து கண் எடுத்தாள். வாசுதேவனேப் பார்த்தாள். பார்வையில் வெறுப்பு இருந்தது. வாசுதேவன் சிரித்தான். பதில் சிரிப்பைத் தேடினன்.

''பெயர்?''

''வாசுதேவன்.''

அவள் டெலிடைப் அடித்தாள்.

''ஸிடிஸன் கார்டு எண்?''

''வி667684321578.''

''திருமண பர்மிட் எண்?''

''விஎன் 768—1834111665.''

அவள் விரல்கள் டெலிடைப்பில் விளேயாடின.

''இருங்கள்'' என்ருள். காமிக்கை எடுத்துக் கொண்டாள்.

சற்றுநேரத்தில் டெலிடைப் உயிர்பெற்றுத் தானுக அடிக்க ஆரம்பித்தது. அதை வாசுதேவன் தலேயைத் திருப்பிப் படிக்க முயற்சித்தான்.

ASK CITIZEN TO REPORT TO Q DEPT WITH CHILD.

அவள் நிமிர்ந்து வாசுதேவனேப் பார்த்தாள்.

''என்ன?'' என்ருன் வாசுதேவன்.

''உங்கள் திருமண பர்மிட்டைக் காண்பியுங்கள்.''

வாசுதேவன் அந்தச் சிவப்பு கார்டைத் தன் டையிலிருந்து தேடி எடுத்துக் காட்ட அதை மௌனமாகப் பார்த்து விட்டுத் திருப்பிக் கொடுத்தாள். ''உங்களே க்யூ டிபார்ட்மெண்டில் கூப்பிடுகிருர்கள்.''

''எதற்கு?''

''அங்கே போனுல் தெரியும். நேராக இந்த வரிசையில் கடைசியில் இருக்கிறது. உடன் ஓர் ஆள் வருவான். அவனுடன் செல்லுங்கள்...''

செக்யூரிடி ஆசாமி ஒருவன் கூட வர வாசுதேவன் அந்தக்கடைசி அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டான். அறைக் கதவு திறந்த உடனேயே, ''மிஸ்டர்வாசுதேவன்'' என்ருன் கண்ணுடி அணிந்த ஆசாமி. அவன் மேஜை சுத்தமாக இருந்தது. ''உட்காருங்கள்'' என்ருன். இண்டர்காமைத் தட்டிவிட்டு ''நீலா, கொஞ்சம் வருகிருயா?'' என்ருன். மற்றொரு கதவு திறந்து சுமார் நாற்பது வயதுப் பெண் வந்தாள். ''குழந்தையைப் பார்த்துக்கொள்'' என்ருன்.

அவள் ''வாடா கண்ணே'' என்று வாசுதேவனிடமிருந்த குழந்தையைக் கூப்பிடக் குழந்தை சந்தோஷத்துடன் அவள் மார்பில் பாய்ந்தது. அவள் அதை அணேத்துக் கொண்டு அதற்கு விளேயாட்டுக் காட்டிக் கொண்டு உள்ளே சென்ருள்.

''எல்லோரிடமும் போவான். வேற்று முகம் கிடையாது'' என்ருன் வாசுதேவன்.

''உட்காருங்கள்.''

''குழந்தைக்கு இம்யூனேஸேஷனுக்கு வந்தேன். என்னே மட்டும் இங்கே அனுப்பினுர்கள்.''

''உங்கள் திருமண பர்மிட் எங்கே?''

வாசுதேவன் காட்டினுன். கண்ணுடி ஆசாமி மேஜை விளக்கைத் தட்டி அதன் வெளிச்சத்தில் அதை ஆராய்ந்தான்.

''இது எப்படிக் கிடைத்தது உங்களுக்கு?''

''இந்தக் கட்டிடத்தில்தான் வாங்கினேன். ஏன்?''

''பணம் கட்டினீர்களா?''

''ஆம்.''

''எவ்வளவு?''

''ஐந்நூறு மானெக்ஷா.''

அவன் சிரித்தான்.

# பிறந்த 3ம் மாதம் தொடங்கும் முதல் திட உணவு குழந்தையின் வருங்கால வாழ்வையே தீர்மானிக்கத் தக்கது.

## பால் மட்டும் கொடுத்தால் போதாது என்கிறார்கள் டாக்டர்கள்



**டாக்டர்கள் சிபாரிசு செய்வது**

# ஃபாரெக்ஸ்®

**விரைவான முழு வளர்ச்சிக்கான சரிவிகிதச் சத்து நிரவிய திட உணவு**



பச்சிளம் தேகமும் மூளையும் வேகமாக வளரத் துடிப்பவை. அதற்கு ஈடுகொடுக்கப் பால் மட்டும் போதுமானதாகாது. தாய்ப்பாலிலிருந்து கெட்டி உணவுக்கு மாறவேண்டும்—மூன்றும் மாதமே; மென்றுதின்னப் பழக்குங்கள்... மேன்மையான வளர்ச்சிக்குத் திறவுகோலாக உதவும் திட உணவு ஃபாரெக்ஸ் ஒன்றுதான்—பச்சிளம் ஜீரண உறுப்புகளுக்கு உகந்தது.

**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்; காரணம்,**
தாய்ப் பால் விடுக்கும் தலையாய மாதங்களில் பாப்பாவின் பத்துவித வளர்ச்சிகளுக்கும் நிறைவுதரும் **ஒப்பற்ற சரிவிகிதச் சத்துணவு இதுவே.**
இரத்தச் செழிப்புக்கும் தென்புக்கும் நல்லுசிதமான அளவுக்கு (இதுபோன்ற வேறெந்தத் திட உணவிலும் அமையாத அளவுக்கு) இரும்புச் சத்து; எலும்புக்கு உறுதியும், பல்லுக்குப் பலமும் தரும் கால்ஷியம், வைட்டமின் D2; மூளையும் உடலும் விரைந்து வளர உகந்த புரத சத்துக்கள்; வளரும் உடம்புக்குத் தேவையான சக்தி—இவ்வளவும் அடங்கியது ஃபாரெக்ஸ்; எனவே... பாலூட்டும் பழக்கத்தை மாற்றுவதற்கான வேறு எந்த திட உணவையும் விட அதிகமாக அதிகத் தாய்மார்கள் ஆதரிப்பது ஃபாரெக்ஸ். பழங்கள், காய்கறிகள், பருப்பு, இறைச்சி, முட்டை போன்ற எந்த முக்கிய உணவுடனும் கலந்து கொடுக்க இனிமையானது ஃபாரெக்ஸ். மென்றுதின்னப் பழக்க...கூடிய விரைவிலே குடும்ப உணவுகளிடம் குழந்தையை இனிதே வரவேற்க...
**அதி உன்னதமான முதல் திட உணவு ஃபாரெக்ஸ்.**

**இலவசமான எமது ஃபாரெக்ஸ் கைப் புத்தகம், 2-ரூபா தள்ளுபடித் திட்டம்—இரண்டையும் பற்றி அறிய, எழுதுங்கள்.**
(புத்தகம் எந்த மொழியில் எனக்கு குறிப்பிட்டு) உங்கள் பெயர், விலாசத்தை எழுதி, 25 பைசா தபால் வில்லையோடு அனுப்புக இம் முகவரிக்கு: தபால் பை நம்பர் 19119, பம்பாய் 400 025.




க்ளாக்ஸோ

LIL.GF. 53-140 TM

''ஏன்?''

''நீங்கள் எல்லாம் படித்தவர்கள். பொறுப்புள்ளவர்கள். உங்களுக்காக அரசாங்கம் எவ்வளவு செலவழிக்கிறது தெரியுமா? சில சாதாரண விதிகளைப் பற்றிக்கூட நீங்கள் தெரிந்து வைத்துக் கொள்ளவில்லை. திருமண பர்மிட்டுக்குப் பணம் கட்ட வேண்டியதில்லை. தெரியுமா உங்களுக்கு?''

''இல்லை. இங்குதான் ஓர் ஆசாமி வந்து பணம் கட்டாமல் கிடைப்பதற்கு வருஷக் கணக்கில் ஆகும். ஐந்நூறு கொடுத்தால் ஒரு மாதத்தில் கிடைத்து விடும் என்று சொல்லி....''

''ஐந்நூறு கொடுத்தீர்கள்...''

''இல்லை. கொடுப்பதாக ஒப்புக் கொண்டேன். பர்மிட் வந்த பிறகுதான் கொடுத்தேன்.''

''நன்றாக ஏமாந்திருக்கிறீர்கள். பர்மிட் போலி. இதே நம்பரில் நாலு பர்மிட்டுகள் இதுவரை கண்டுபிடித்திருக்கிறோம். இது ஒரு ஃபோர்ஜரி. க்யூ டிபார்ட்மெண்டின் முத்திரை இல்லை.''

''அப்படியானால்...''

''பர்மிட் இல்லாமல் கல்யாணம் செய்து கொண்டிருக்கிறீர்கள். குழந்தை வேறு பெற்றுக் கொண்டு விட்டீர்கள். அரசாங்கத்துக்கு எதிராகக் குற்றம்.''

''இல்லையே, அனுமதிக்கப்பட்ட காலத்துக்குப் பின்தான் குழந்தை பெற்றுக் கொண்டோம்.''

''முதலில் கல்யாணமே அனுமதிக்கப்படவில்லையே! அரசாங்க ரிக்கார்ட்படி வாசுதேவன் கல்யாணமாகாதவர்! பர்மிட் வாங்குவதற்கு முன் எங்களில் யாரையாவது கேட்டிருக்கக் கூடாது? பப்ளிக் ரிலேஷன் என்று கொட்டை எழுத்தில் போர்டு வாசலில் தொங்குகிறதே, அங்கு கேட்டிருக்கக் கூடாதா? 'இம்மாதிரி ஓர் ஆள் ஐந்நூறு மானெக்ஷா கொடுத்தால் பர்மிட் சீக்கிரம் கிடைக்கும் என்கிறானே நிஜமா?' என்று கேட்டிருக்கக் கூடாதா? சேச்சே! என்ன வேலை செய்கிறீர்கள்?''

''இன்ஜினீயர்.''

''உங்கள் மனைவி?''

''வீட்டில் இருக்கிறாள். உள்ளே டீச்சர் அவள்... இப்போது என்ன ஆகும்?''

''இந்தப் பர்மிட் உங்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்படும். உங்கள் திருமண உரிமைகள் யாவையும் இழந்து விடுகிறீர்கள்.''

''மறுபடியும் 'எம்' ப்ளாக்குக்குப் போக முடியாதா?''

''முடியாது. உங்கள் ஊதல் எங்கே?''

''அய்யா, நான் தவறுதலாக அறியாமல் இதில் சிக்கிக் கொண்டு விட்டேன். எனக்கு ஒரு தாற்காலிக பர்மிட் கொடுத்துவிடுங்கள், நான் வீட்டுக்குப் போக வேண்டும். என் மனைவி காத்திருப்பாள்.''

''மனைவி? பர்மிட் இல்லாததால் அவள் உங்கள் மனைவி இல்லை. மிஸ்டர் வாசுதேவன், உங்களால் சர்க்காருக்குத் தலைவலிதான் அதிகம். ஆனால் நீங்கள் ஓர் இன்ஜினீயர். உங்கள் 'மனைவி' டீச்சர். எனவே உங்களுக்குக் கொஞ்சம் வாய்ப்பு இருக்கிறது. நான் புதிய பெர்மிட்டுக்கு ஒரு மனு தருகிறேன். அதை நிரப்பி என்னிடம் கொடுங்கள். எங்கள் டிபார்ட்மெண்டிலிருந்துசிபார்சாகிப்போனால் மூன்று மாதத்தில் பர்மிட் கிடைத்துவிடும். இன்று என்ன தேதி? 18–6–'94. சரி செப்டம்பர் பதினெட்டாம் தேதி வந்து என்னைப் பாருங்கள்!''

''அதுவரை?''

''அதுவரை நீங்கள் வெளியேதான் இருக்க வேண்டும்.''

''என் மனைவியைப் பார்க்க முடியாதா?''

''முடியாது. உங்களால் சர்க்காருக்குச் சங்கடம் எவ்வளவு பாருங்கள். தப்பான, அனுமதிக்காத கல்யாணம் பண்ணிக் கொண்டு வேண்டாத பிரஜை ஒன்றைப் பெற்றுக் கொண்டு விட்டீர்கள். அதுவும் சர்க்கார் ஒவ்வொரு புதுப் பிறப்பையும் இவ்வளவு தூரம் கண்காணித்துக் கட்டுப்படுத்தும் போது... இனிமேலாவது ஜாக்கிரதையாக இருங்கள்.''

''குழந்தை?''

அவன் நாற்காலியில் சாய்ந்து கொண்டு வாசுதேவனை நிதானமாகப் பார்த்தான். ''மிஸ்டர் வாசுதேவன்! நம் சர்க்காரின் ரூல் நம்பர் பதினேழு தெரியாதா உங்களுக்கு... குழந்தை...''

''வேண்டாம்! அதைச் சொல்லாதீர்கள்!'' என்று அலறினான் வாசுதேவன்.

**-கணையாழி ஆகஸ்டு '74.**

# ஜான்ஸன்ஸ் வழங்குகிறார்கள்
# பல-பயனுள்ள cotton bud



## இதோ அதன் உபயோகங்கள்



மேக்-அப்பை சீராக்குகிறது அல்லது கலைக்க உதவுகிறது.



நுட்பமான ஹை-ஃபை சாதனங்களை சுத்தம் செய்கிறது.



குழந்தையின் மூக்கை சுத்தம் செய்கிறது—நன்றாக, மென்மையாக.



சிறிய காயங்களின் மீது மருந்தை ஒற்றி எடுக்க உதவுகிறது.



காதுகளை பத்திரமாக சுத்தம் செய்கிறது—குழந்தையின் காதுகளையும் உங்கள் காதுகளையும்.

ஜான்ஸன்ஸ் Cotton Bud-ஐ இன்னும் எத்தனையோ வழிகளில் நாள்தோறும் உபயோகிக்கலாம். உங்கள் வீட்டில் எப்பொழுதும் ஜான்ஸன்ஸ் Cotton Bud இருக்கட்டும்.

**அது சுத்தமானது • பத்திரமானது.**
**சுகாதாரமானது • சௌகரியமானது.**




புதிது !
வளையக்கூடிய
பிளாஸ்டிக் தண்டு

**பத்திரமாக சுத்தம் செய்வீர்- ஜான்ஸன்ஸ் Cotton Bud—ஆல் சுத்தம் செய்வீர்**

*Trademark © J&J 75

OBM 4617 TM

"டாம் ஆசுசு வேகமா குடும்மா!"

"சீக்கிரம் வாங்குங்க சார்!"

ஜாக்பாட் பந்தயம் ஆரம்பிக்க இன்னும் சில நிமிடங்களே இருந்தன. போன ஞாயிற்றுக் கிழமை ஜாக்பாட் தொகை 'காரீட் ஓவர்' ஆகிவிட்டது. அதனால்தான் இந்தச் சனிக்கிழமை இவ்வளவு கூட்டம்.

'தி ஸ்டார்ட்டர்ஸ் ஆர்டர்ஸ்...அண்ட் தே ஆர் ஆஃப்'—நேர்முக வர்ணனையாளரின் குரல் சரளமாக ஒலித்தது. குதிரைகளின் ஓட்டம் மிக அழகாக ஆங்கிலத்தில் விவரிக்கப்பட்டது.

சாம்பசிவம் தேர்ந்தெடுத்திருந்த இரண்டாம் எண் குதிரை மிகச் சுலபமாக வெற்றி



# சுமை இறங்கியது!

சாம்பசிவம் முகத்திலும் கழுத்திலும் வழிந்த வியர்வையைத் துண்டினால் துடைத்துக் கொண்டார். அவருக்கு முன்னால் ஐந்தாறு பேர் இருந்தார்கள். நம்பர்கள் எழுதப்பட்ட துண்டுக் காகிதத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டார். எதற்கும் 'க்யூ'வில் நிற்க விரும்பாதவர் சாம்பசிவம். 'எவன் வெய்யிலில் க்யூவில் நிற்பான்?' என்று ரேஷன் சர்க்கரையை விட்டு விட்டு ஏகப்பட்ட விலை கொடுத்து வெளியில் வாங்குவார். ஆனால் இப்பொழுது பக்கத்து 'க்யூ'வில் நின்றிருந்த பரட்டைத் தலை விட்ட பீடிப் புகை நாற்றத்தைச் சகித்துக் கொண்டு, முன்னால் நின்றிருந்த கிழவரின் அழுக்குச் சட்டை மேலே உரசும் அருவருப்பைச் சகித்துக் கொண்டு கொளுத்தும் வெய்யிலில் நீண்ட க்யூவில் நிற்கிறார்.

ஆசை.

சூரியன் முதுகுப் பக்கம் தாக்கிப் பொசுக்கிக் கொண்டிருந்தான். ஆனால் அந்த சூரியனால்கூட அவர்களுடைய ஆசையைப் பொசுக்க முடியவில்லை.

இரண்டு டிக்கெட்டுக்களை வாங்கிக் கொண்டு நகர்ந்தார் சாம்பசிவம். கையிலிருந்த சீட்டுடன் ஒப்பிட்டுப் பார்த்தார். சரியாக இருந்தது. 2-2-4-3-8, 2-2-6-3-8. டிக்கெட்டுக்களைப் பத்திரமாக மேல் பாக்கெட்டில் போட்டுக் கொண்டு நகர்வதற்கும் ஒலிபெருக்கியில் 'பஸ்ஸர்' ஒலி கேட்பதற்கும் சரியாக இருந்தது. பந்தயம் ஆரம்பிப்பதற்காகக் குதிரைகள் வரிசையாக நிறுத்தப்படுகின்றன என்று பொருள். ஜாக்பாட் ஜன்னல்கள் 'டப். டப்' என்று மூடப்பட்டன. டிக்கெட் வாங்க முடியாதவர்கள் ஏமாற்றத்துடன் திரும்பினார்கள். அவசரம் அவசரமாக மைதானத்தின் பக்கம் போன சாம்பசிவம் ஒரு பெஞ்சில் ஏறி நின்று கொண்டார்.




பெற்றுவிட்டது. அவருடைய இரண்டு டிக்கெட்களிலும் ஒரு 'லெக்' பாஸ் ஆகிவிட்டது. மனத்தில் ஒரு சந்தோஷம் ஏற்பட்டது.

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி




கீழே இறங்கித் தண்ணீர் குடிக்கக் குழாய்ப் பக்கம் போனார்.

அடுத்த பந்தயம் ஆரம்பிக்க இன்னும் அரை மணி நேரம் இருக்கிறது.

**சா**ம்பசிவம் பரம்பரைச் சூதாடி அல்ல. அவருடைய நாற்பத்தைந்து வயதில், கிண்டிக்கு வருவது இது நாலாவது தடவை.

போன மாதம் ஒரு நாள் மாலையில் ரங்கநாதன் தெருவில் கறிகாய் வாங்கிக் கொண்டிருந்தபோது யாரோ முதுகில் தட்டினார்கள். நிமிர்ந்து பார்த்தபோது வெங்கடேசன் நின்றிருந்தார். சாம்பசிவத்தின் பால்ய நண்பர். இருவரும் காப்பி குடித்தார்கள். பேச்சுவாக்கில், '' இந்த வாரம் 'ட்ரெபிள்'ல் ஒரு 'லெக்' மிஸ் ஆகிவிட்டது. இல்லாவிட்டால் இரண்டாயிரம் ரூபாய் கிடைத்திருக்கும்'' என்றார்.

''அதென்னது 'ட்ரெபிள்' ?'' என்று புரியாமல் கேட்டார் சாம்பசிவம்.

'' இதுகூடத் தெரியாமல் இருக்கிறீரே !'' அந்தக் கணத்திலேயே அசுவ சாஸ்திர அட்சராப்பியாசம் ஆரம்பமாகி விட்டது. ''மூன்று பந்தயங்களில் முதலாவதாக வரும் குதிரைகளைச் சரியாகக் குறிப்பிடுவது ட்ரெபிள். அதே போல் ஐந்து பந்தயங்களில் குறிப்பிடுவது ஜாக்பாட்... நாளைக்கு என்னுடன் கிண்டிக்கு வாரும். எல்லாம் புரியும்.''

'' ரேஸுக்கா ? சே, சே !'' சாம்பசிவம் முகத்தைச் சுளித்தார்.

''களவும் கற்று மறக்க வேண்டும், ஓய். இதொன்றும் பெரிய பாவமில்லை. நான் பத்து வருஷங்களாகக் கிண்டிக்குப் போகிறேன். என் குடும்பமென்ன தெருவிலா நிற்கிறது?.... நாளைக்கு நானே உம் வீட்டுக்கு வந்து அழைச்சுண்டு போறேன். ...''

சாம்பசிவம் மறுத்தும் கேளாமல் வற்புறுத்தி மறு நாள் தம்மோடு அழைத்துக் கொண்டு போனார் வெங்கடேசன். தட்டிக் கேட்க யாரும் இல்லாவிட்டாலும் ஒரு தார்மிக பயம் இருந்தது சாம்பசிவத்துக்கு. மனத்தில் ஓர் உறுத்தல் இருந்தது. அவர் வளர்த்து ஆளாக்கப்பட்ட சூழ்நிலை அப்படி. அவருடைய அப்பா பரமேசுவர அய்யர் விளையாட்டுக்காகக் கூடத் திண்ணையில் சீட்டுக் கச்சேரியில் கலந்து கொள்ளமாட்டார்.

அன்று கடைசிப் பந்தயத்தில் ஐந்து ரூபாயைச் சாம்பசிவத்தின் கையில் திணித்தார் வெங்கடேசன். ''உம்முடைய கைராசி எப்படியிருக்கிறது, பார்க்கலாம். ஒரு 'போர் காஸ்ட்' டிக்கெட் வாங்கி வாரும், 5—7 என்று.''

அந்தப் பந்தயத்தில் 5-ம், 7ம் முதலாவது இரண்டாவதாக வந்தன. 'போர்காஸ்ட்' பாஸ். வெங்கடேசனுக்குப் பிடிபடாத மகிழ்ச்சி. '' நீர் ரொம்ப அதிர்ஷ்டக்காரர் ஓய். முதல் டிக்கெட்டே பழுத்துவிட்டதே. ஜாக்பாட்கூட அடித்துவிடுவீர் போலிருக்கிறதே !'' என்று புகழ்ந்து தள்ளினார். சாம்பசிவத்துக்கு ஒருவித சந்தோஷம் ஏற்பட்டது.

அடுத்த வாரம் வெங்கடேசன் வற்புறுத்தாமலே கிளம்பினார் சாம்பசிவம். அன்று

**ஜெனமேஜெயன்**

## அடுத்த இதழில்

போட்டிக் கதை:
**நியதி**
எஸ். லட்சுமிசுப்பிரமணியம்

நகர்வலம்:
**ஹௌரா**
ரா. விழிநாதன்

**ஹைற (ரே)ஜாக்கிங்! "தராஜா"**

---

'டபுள்' பந்தயத்தில் இருநூறு ரூபாய் கிடைத்தது. அதற்கு அடுத்த வாரம் வெங்கடேசன் வருவதற்கு முன்னரே புறப்பட்டுத் தயாராக நின்ருர் சாம்பசிவம்.

இப்பொழுது அவருக்கு ரேஸில் ஒரு பிடிப்பு ஏற்பட்டிருந்தது. ஜாக்கி, எடை, டிரெய்னர் என்று சில விஷயங்களைத் தெரிந்து கொண்டிருந்தார்.

இந்த வாரம் வெங்கடேசனல் வர முடியவில்லை. மைத்துனர் பெண்ணுக்குக் கல்யாணம் என்று திருச்சிக்குப் போய்விட்டார். ஆனல் அதற்காகச் சாம்பசிவம் தயங்கவில்லை. ஒரு ரூபாய் கொடுத்து ரேஸ் புத்தகம் ஒன்று வாங்கிக் கொண்டு கிண்டிக்கு வந்துவிட்டார். ஏதோ தெரிந்த அளவு கணக்குப் போட்டு இரண்டு ஜாக்பாட் டிக்கெட்டுகள் வாங்கி விட்டார். ஒரு 'லெக்' பாஸும் ஆகிவிட்டது.

**அ**ன்றைய ஜாக்பாட் தொகை ரூபாய் மூன்று லட்சத்து இருபதாயிரத்து அறுநூற்று நாற்பது என்று போர்டு அறிவித்தது. முதல் 'லெக்'கில் பாஸான டிக்கெட்டுகளின் எண்ணிக்கை ஆருயிரத்து நூற்றிருபது என்றும் அறிவிக்கப்பட்டது.

அடுத்த பந்தயம் ஆரம்பமாயிற்று. சாம்பசிவத்தின் துடிப்பும் அதிகமாயிற்று. அவர் கட்டியிருந்த பஞ்சவர்ணம் முதலில் நாலாவது இடத்தில்தான் இருந்தது. ஆனல் கடைசி வளைவைத் தாண்டியதும் வேகமாகப் பாய்ந்து சுலபமாக ஜெயித்துவிட்டது. சாம்பசிவம் நிம்மதிப் பெருமூச்சுவிட்டார். இரண்டு டிக்கெட்களிலும் அவருக்கு இரண்டு 'லெக்' பாஸ்.

டெலிவிஷன் பக்கம் வந்தார். கூட்டமாக இருந்தது. எட்டணு கொடுத்து — வெளியே நாலணு பெருத — ஓர் ஆரஞ்சுப் பழத்தை வாங்கி உரித்தார். இன்னும் மூன்று 'லெக்' பாஸ் ஆக வேண்டும். ஆகிவிட்டால்.... ஆகுமா ?

சிறிது நேரத்தில் ஜாக்பாட் இரண்டு பந்தயங்களிலும் வெற்றி பெற்ற டிக்கெட்டுக்களின் எண்ணிக்கையை மைக்கில் அறிவித்தார்கள்: 1576. அவற்றில் தம்முடையவை இரண்டு டிக்கெட் என்று நினைக்கச் சாம்பசிவத்துக்குப் பெருமையாக இருந்தது.

'அடுத்த பந்தயம் தலைா பந்தயம். உங்கள் டிக்கெட்டுக்களைச் சீக்கிரமாகப் பெற்றுக் கொள்ளுங்கள்' என்று இனிமையான மென்குரல் ஒலிபெருக்கியில் தவழ்ந்து வந்தது. சாம்பசிவம் ஒரு தலைா டிக்கெட் வாங்கிக் கொண்டு முதலில் நின்றிருந்த அதே இடத்துக்கு வந்தார். அங்கு நின்ற போதுதானே அவர் கட்டிய குதிரை ஜெயித்தது ?

''எடை பத்து கிலோ குறைஞ்சிருக்கு. ஜாக்கி சுரன்சிங் ஓட்டறுன். ட்ரா நம்பர் ஒண்ணு.... அதனல் எட்டுதான் துண்டா ஜெயிக்கும்.'' பக்கத்தில் நின்றிருந்த நீல ஸ்லாக் வாலிபன் தன் சகாக்களிடம் எட்டாம் நம்பர் நீலவேணி இன்னின்ன காரணங்களால் ஜெயிக்கும் என்று விளக்கிக் கொண்டிருந்தான். அவன் சொன்ன காரணங்கள் மிகப் பொருத்தமானவையாகப் பட்டன சாம்பசிவத்துக்கு. தெரியாத்தனமாக 8—ஐ விட்டு விட்டு 4—யும் 6—யும் வைத்துவிட்டோமே ஜாக்பாட் டிக்கெட்டில் என்று சஞ்சலப்பட ஆரம்பித்தார். அதற்குள் ரேஸ் ஆரம்பமாகி விட்டது.

நீலச் சட்டைக்காரன் உரத்த குரலில் கத்தினன். அவன் சொன்ன நீலவேணிதான் முன்னல் வந்து கொண்டிருந்தது. ஆனல் 'நேர்ப் பாதை'க்கு வந்தபோது நீலவேணியின் பாய்ச்சல் குறைந்துவிட்டது. ஆரும் நம்பர் 'மூன் ஹேவன்' வெளிப் பக்கமாகப் பாய்ந்து வந்தது. கடைசி நூறு மீட்டர் தூரத்தில் நீலவேணி தொங்கிப் போய்விட்டது. 'மூன் ஹேவன்' ஒரு 'லெந்த்' வித்தியாசத்தில் வெற்றி பெற்றுவிட்டது.

''ஆறு..'' என்று தம்மையும் அறியாமல் மகிழ்ச்சியில் கூவிவிட்டார் சாம்பசிவம். ஒரு டிக்கெட்டில் அவருக்கு மூன்று 'லெக்' பாஸ் ஆகிவிட்டது.

நீலச் சட்டைக்காரனைத் திரும்பப் பார்த்தார். இப்பொழுது அவன் அதே உரத்த குரலில் நீலவேணி ஏன் ஜெயிக்கவில்லை என்பதற்கான காரணங்களைக் கூறிக் கொண்டிருந்தான்.

சாம்பசிவத்துக்கு இருப்புக் கொள்ளவில்லை. இன்னும் இரண்டே பந்தயங்கள். அவற்றிலும் தாம் குறிப்பிட்ட குதிரைகள் வெற்றி பெற்று விட்டால்... நிச்சயமாக ஒரு முப்பதாயிரமாவது கிடைக்கும். ஜானகியின் கல்யாணத்தை ஜாம் ஜாமென்று நடத்தி விடலாம். ஜானகி அவருடைய மூத்த பெண். பி. ஏ. முடித்துவிட்டு வீட்டில் இருக்கிருள்.

அந்த சி. ஏ. பையனுக்கே முடித்துவிடலாம். யாருக்குத் தெரியும் தமக்குக் குதிரையின் கால்களில்தான் அதிர்ஷ்டம் இருக்கிறதோ, என்னவோ!

மாடிக்குச் சென்று சாம்பசிவம் காப்பி குடித்துவிட்டு வந்தபோது ஜாக்பாட் மூன்று பந்தயங்களிலும் வெற்றி பெற்ற டிக்கட்டு களின் எண்ணிக்கையை அறிவித்தார்கள்.. 103.

''ஜாக்பாட்டில் 3.... ஜாக்பாட்டில் 3...'' என்று ஓரிருவர் கத்திக் கொண்டிருந்தார்கள். அதன் பொருளை வெங்கடேசன் சொல்லிக் கொடுத்திருந்தார். அவர்களுடைய ஜாக் பாட் டிக்கட்டில் மூன்று லெக் பாஸ் ஆகி விட்டது. நாலாவது 'லெக்'கில் ஏதாவது நம்பர் வைத்திருப்பார்கள். இப்பொழுது மூன்று வந்துவிடுமோ என்ற பயம். அதனுல் மூன்றும் நம்பர் வைத்துள்ளவர்களைப் பங்கு அழைக்கிருர்கள்.

'அதெல்லாம் வேண்டாம்' என்று தீர் மானித்துக் கொண்டார் சாம்பசிவம். அதில் சில சமயங்களில் பெரிய தவறுகள் கூட வருமாம்.

நாலாவது பந்தயம் ஆயிரத்து இருநூறு மீட்டர் தூரம். அதிகப் பரபரப்பு ஏற்படுத் தாமல் சாம்பசிவம் வைத்திருந்த சூர்யா வெற்றிபெற்று விட்டது.

ஜாக்பாட் நாலு பந்தயங்களில் வெற்றி பெற்ற டிக்கட்டுகள் பதினுறு. அதில் சாம்ப சிவத்தின் டிக்கட் ஒன்று.

சாம்பசிவத்துக்கு இருப்புக்கொள்ளவில்லை. அங்கும் இங்கும் நடந்தார். வேர்க்கடலை வாங்கிக் கொரித்தார். டிக்கட் பத்திரமாக இருக்கிறதா என்று தொட்டுப் பார்த்துக் கொண்டார். 'ராஜத்துக்கு அவள் ஆசைப் பட்ட வைரக் கம்மல் வாங்கிக் கொடுத்துவிட வேண்டும். ராமபத்ரன் வாங்கியிருக்கும் 'ப்ளாட்' பக்கத்தில் ஓர் இரண்டு கிரவுண்ட் வாங்கிப் போட வேண்டும்....

குதிரைகள் மைதானத்துக்கு வந்தன. எட் டாம் நம்பர் 'சார்மிங்' கறுப்பாக அழகாக இருந்தது. அதன் ஜாக்கி ஸ்மித் பச்சை உடையும், வெள்ளைத் தொப்பியும் அணிந் திருந்தார். அயர்லாந்தின் சிறந்த ஜாக்கி என்று 'மெயிலி'ல் வர்ணித்திருந்தார்கள்.

'ஸ்மித், எப்படியாவது வின் அடித்து விடப்பா' என்று மானசீகமாக வேண்டிக் கொண்டார் சாம்பசிவம்.

அது இரண்டாயிரம் மீட்டர் தூரப் பந் தயம். பதினேரு குதிரைகள் போட்டி யிடுகின்றன.

பந்தயம் ஆரம்பமாயிற்று. முதலில் 'சார் மிங்' நாலாவது, ஐந்தாவது இடத்திலிருந் தது. ஆயிரத்து அறுநூறு மீட்டரைத் தாண் டும்பொழுது சார்மிங் எட்டாவது இடத்தி லிருந்தது. சாம்பசிவம் கைகளைப் பிசைந்து கொண்டார். ஆயிரம் மீட்டரை அடைந்த போது 'ஸ்டெல்லா'வும், 'கிரீன் ஸ்கிரீனு'ம் தான் முதலில் வந்து கொண்டிருந்தன. சார் மிங் கடைசி 'பஞ்ச்'சில் இருந்தது. சாம்ப சிவம் நம்பிக்கை இழந்து விட்டார்.

கடைசி வளைவைத் தாண்டும்பொழுது 'சார்மிங் இஸ் கம்மிங் அப்' என்று காமென் டேட்டரின் குரல் ஒலித்தது. ஒரு நம்பிக்கைக் கதிர். நேர்ப் பாதையில் நானூறு மீட்ட ரைத் தாண்டும்பொழுது ஸ்டெல்லா தளர்ந்து விட்டது. சார்மிங் பாய்ந்து முன்னேறிற்று. கடைசி நூறு மீட்டரில் 'சார்மிங்கு'க்கும் 'கிரீன் ஸ்கிரீ'னுக்கும் கடும் போட்டி. ஒன்றை யொன்று வெல்ல முயன்றன. அதற் குள் வின்னிங் போஸ்ட் வந்து விட்டது. எது ஜயித்தது? சரியாகத் தெரியவில்லை.



பூனைக்குச் சிறகு முளைத்தால் உலகில் ஒரு குருவிக் கூட்டைக்கூட மீதி வைக்காது. அற்பனுக்குப் பதவியும் அதிகாரமும் கிடைத்தால் இறுமாப்புள்ளவ ருக எளியோரைத் துன்புறுத்துவான்.

ஸா அதி: நன்றி: குமரிமலர்

'ஃபோட்டோ ஃபினிஷ்' என்று அறிவிக்கும் சிவப்புப் போர்டு மாட்டப்பட்டது.

சாம்பசிவத்தின் இதயம் படுவேகமாக அடித்துக் கொள்வதை அவரால் உணர முடிந்தது. உடம்பே சூடேறி விட்டது. பி. ஏ. பரீட்சை முடிவுக்காகப் பேப்பரைப் பிரித்துப் பார்க்கும்போது ஏற்படாத ஒரு பரபரப்பு. முதல் பிரசவத்தின்போது அறைக்கு வெளியே நின்று கொண்டிருந்தபோது ஏற்படாத ஒரு தவிப்பு. படபடப்பு. அப்பொழுதுகூட வேண்டாத தெய்வங்களை இப்பொழுது வேண்டிக் கொண்டார். வேர்வை ஆருகப் பெருகி வழிந்தது.

சிவப்பு போர்டு கழற்றப்பட்டது. நம்பர் மாட்டப்பட்டது. எட்டு.

தம் வயதை மறந்து கையை உயர்த்தித் துள்ளிக் குதித்தார் சாம்பசிவம். பிறகு அவருக்கே கொஞ்சம் வெட்கமாகப் போய் விட்டது. ஓர் ஒதுக்குப்புறமாக நடந்து போய் நின்ருர். டிக்கட்டை எடுத்து ஒரு முறை நம்பர்களைச் சரிபார்த்துக்கொண்டார்.

'ஜாக்பாட் தொகை ரூபாய் அறுபத்து நாலாயிரத்து நூற்றி இருபத்தி எட்டு. வெற்றி பெற்ற டிக்கட்டுகள் ஐந்து' — ஒலி பெருக்கி அறிவித்தது.

சாம்பசிவத்தின் மனத்தில் மகிழ்ச்சி கொப்பளித்தது. அறுபத்தையாயிரம்.... பஞ்சம் தீர்ந்தது. ரமேஷை டாக்டராக்கி விட லாம். அடையாற்றில் வீடு கட்டிவிடலாம்.

டிக்கட்டைக் கொடுத்து 'செக்' வாங்கிப் பத்திரமாகப் பையில் வைத்துக் கொண்டு வெளியே வந்தார் சாம்பசிவம். கற்பனையில் ஆழ்ந்தவாறு ரயில்வே ஸ்டேஷனை அடைந்த போதுதான் டாக்ஸியில் போயிருக்கலாமே என்று தோன்றிற்று. ஏகப்பட்ட கூட்டம். 'இரண்டு வண்டிகள் போகட்டும். கூட்டம் குறைந்துவிடும்' என்று எண்ணி ஓர் ஓரமாக நின்ருர்.

''இந்தப் புத்தி ரேஸுக்கு வரதுக்கு முன் னலே இருந்திருக்க வேண்டும். இப்ப அழுது என்ன பிரயோசனம்?''



# உங்கள் குழந்தையை அழவிடுவீர்களா?



அவன் எப்போதும் காரணத்தோடு தான் அழுகிறான். அவனுடைய அணையாடை நனைந்திருக்கலாம் அல்லது ஏதாவது குண்டூசி அவனைக் குத்தியிருக்கலாம். ஒரு வேளை தாங்கமுடியாத உஷ்ணத்தினாலோ, பசியினாலோ அல்லது வரட்சியினாலோ அவன் அழலாம். அப்படியாயின் அவனுக்கு க்ளாக்ஸோ ஸன்ஷைன் அல்லது ஆஸ்டர்மில்க் அல்லது க்ளாக்ஸோஸ்-டியைச் சிறிது தண்ணீருடன் சேர்த்துக்கொடுங்கள்.

அல்லது தோளில் போட்டு அவனைத் தட்டிக் கொடுக்க வேண்டுமா? ஒரு வேளை பல விருந்தினர்களைப் பார்த்து அவனுக்கு எரிச்சல் உண்டாகிறதா? அவனைத் தாலாட்டி உறங்க வைப்பதே, இப்போது அவனுக்குத் தேவை. ஜலதோஷமோ அல்லது வயிற்றுக்கோளாறோ உங்கள் குழந்தையின் புன்சிரிப்பைப் பாழாக்கி விடலாம். அவனுக்கு ஒரு கரண்டி க்ரைப் மிக்சரைக் கொடுங்கள், அத்துடன் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.



நீங்கள் உங்கள் கண்மணியைக் கொஞ்சி அன்புடன் முத்தமிட வேண்டும். உங்கள் குழந்தை அழுதால் அதைப் பூற்றிக் கவலைப் படாதீர்கள், அதே நேரத்தில் பாராமுகமாகவும் இருக்காதீர்கள். குழந்தை அழுவதன் காரணங்களைத் தாய்மார்கள் விரைவில் கண்டு பிடித்துவிடுவார்கள்!





டாக்டரின் அறிவுரை :

## அணையாடையால் உண்டாகும் சொறிவகை

குழந்தையின் ஈரமுள்ள அணையாடையினாலும் படுக்கையினாலும் அவனுக்குச் சொறிவகைகள் ஏற்படலாம். அதை நீக்க நீங்கள் செய்ய வேண்டியது இதுவே: கூடியமட்டும் பாதிக்கப்பட்ட இடங்களைச் சுத்தமாக உலர வைப்பதுடன் அவற்றின் மீது போரேடெட் டால்க் பவுடரைத் தூவுங்கள். இதனால் குழந்தையை அடிப்பாகத்தில் துணியில்லாமல், வெதுவெதுப்பான அறையில், பலமணிநேரங்கள் வெதுவெதுப்பாக வைத்திருக்க முடிகிறது. முன்னெச்சரிக்கையாக, உங்கள் டாக்டர் சிபாரிசு செய்தபடி, அணையாடையையும் துணிகளையும் கிருமிநாசினி மருந்துடன் நீரில் கொதிக்கவைப்பதுடன் அவற்றை வெய்யிலில் காயவையுங்கள். பின்னும் சொறிகள் குணமடையாவிட்டால் டாக்டரிடம் ஆலோசனை கேட்கவும்.







புத்தகங்களைத் தவிர இலவச அன்பளிப்புகளை, அன்பளிப்பு சீட்டுகளில் குறித்துள்ள கேந்திரங்களில் நீங்களாகவே சேகரித்துக்கொள்ளவேண்டும். புத்தகங்கள் உங்களுக்குத் தபால் மூலம் அனுப்பப்படும்.

உங்களை உறுப்பினராகத் தேர்ந்தெடுத்த பிறகு, இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும் இலவச புத்தகங்கள் (பேபி கேர், பேபி டயரி மற்றும் பேபி நேம்ஸ்) அனுப்பப்படும்.

விண்ணப்பங்கள் 1976 அக்டோபர் 31ந்தேதி வரை ஏற்கப்படும்.

தர்மாத்மா வீட்டில் திருடன்

தர்மாத்மாவின் வீட்டில் திருடன் நுழைந்து வெகுநேரம் தேடிப் பார்த்தும் ஒரு பொருளும் கிடைக்கவில்லே. இதைப் பார்த்துக் கொண்டிருந்த அவர் திருடன் ஏமாற்றம் அடையாதிருக்க வேண்டித் தாம் போர்த்திக் கொண்டிருந்த கம்பளத்தைக் கழற்றி அவன் தப்பிப் போகும் வழியில் எறிந்தார்.

உண்மையான தர்ம புருஷர்கள் சத்துரு மனத்தைக்கூட நோகச் செய்யமாட்டார்கள்.

ஸா அதி - குமரிமலர்



குரல் வந்த திசையில் பார்த்தார் சாம்பசிவம். முழங்காலேக் கட்டிக் கொண்டு தலே யில் முண்டாசு அணிந்த ஒரு கிழவர் சுவரோரமாக அமர்ந்திருந்தார். வாடிய முகம். அழாத குறை. பக்கத்தில் நின்றிருந்த நடுத்தர வயதுக்காரர் திட்டிக் கொண்டிருந்தார்.

''பையன் பரீட்சைக்குக் கட்டற பணத்தை எடுத்துக்கிட்டு ரேஸுக்கு வரலாமா சார்? நீங்களே சொல்லுங்க. நாளேக்குத்தான் கடைசித் தேதியாம் பணம் கட்ட...''

சாம்பசிவத்தின் மனத்தில் ஏதோ நெருடிற்று. தாம் ஜெயித்த இந்தப் பணத்தில் இதோ இந்தக் கிழவஞரின் பங்கும் இருக்கிறது. ஒரு பையனேப் பரீட்சை எழுத முடியாமல் செய்யும் பணம் தம் பாக்கெட்டில் இருக்கிறது...

ஒரு வண்டி வரவே அவர்கள் ஓடிச் சென்று ஏறிக் கொண்டார்கள்.

அடுத்த வண்டியில் சாம்பசிவம் ஏறினர். கூட்டம் கொஞ்சம் குறைந்திருந்தது. அவர் மனத்தில் கிழவஞரின் முகம் அசையாமல் நின்றது.

கோடம்பாக்கத்தில் இறங்கி நடந்தார் சாம்பசிவம். பாலத்துப் பக்கம் வந்தபோது ஒரு பெண்ணின் அழுகையும் கூக்குரலும் கேட்டன.

''பொண்ணு கல்யாணத்துக்குன்னு நாயா கஷ்டப்பட்டுக் குருவி சேர்க்கிறுப்பலே சேர்த்து வைச்சேன். எல்லாத்தையும் எடுத்திட்டுப் போய் ரேசிலே உட்டுட்டு வந்துட்டான் பாவி. இந்த அநியாயம் உண்டான்னு கேட்டா குடிச்சுட்டு வந்து அடிக்கிறுன்...'' தலேவிரி கோலமாக ஒரு பெண் உரக்கப் புலம்பினுள்.

சாம்பசிவத்தின் மனத்தில் ஏதோ உறுத்த ஆரம்பித்தது. இதயத்தில் யாரோ பிராண்டுகிறுர்களா? திடீரென்று எப்படி ஒரு சுமை ஏறிற்று மனத்தில்? ஒரு பெண்ணின் கல்யாணம் நின்று போனதற்குக் காரணமான பணம் தம் பாக்கெட்டில் இருக்கிறது.

அதற்குள் வேருெரு பெண் அங்கே வந்தாள்: ''அதையேன் கேக்கறே பொன்னம்மா. எங்க ஊட்டுக்காரன் அரிசி வாங்க வைச்சிருந்த பணத்தை எடுத்திட்டுப் போய் ரேசாடிட்டு வந்துட்டான்... பசங்க இன்னிக்குக் கொலேப் பட்டினிதான்...'' அவள் கண்களில் தாரை தாரையாக நீர் வழிந்தது.

'ஒரு குடும்பம் பட்டினியாகக் கிடக்கக் காரணமான பணத்தையா நான் ஜெயித்தேன்?'

சாம்பசிவத்தின் மனம் ஒரு போர்க்களமாயிற்று.

'ஓர் ஏழை மாணவனேப் பரீட்சை எழுத விடாமல் தடுத்த பணத்தைக் கொண்டு என் மகன் படித்து முன்னுக்கு வரவா?'

'ஓர் ஏழைப் பெண்ணின் கல்யாணம் நிற்பதற்குக் காரணமாக இருந்த பணத்தைக் கொண்டு என் மகள் திருமணத்தை நடத்துவதா? அவள் வாழ்வு விளங்குமா?'

'ஓர் ஏழைக் குடும்பம் பட்டினியாகக் கிடக்கக் காரணமான பணத்தால் நான் வீடு கட்டி வாழ்வதா?'

'இதுபோல் இன்னும் எத்தனே ஏழைகளின் அவலத்துக்குக் காரணமாக இருக்குமோ இந்தப் பணம்?'

அவருக்குத் தம்முடைய அப்பா பரமேசுவர அய்யரின் முகம் மனக் கண் முன் தோன்றிற்று. பள்ளி ஆசிரியராக இருந்து அவர் ரிடையரானபோது எந்த விதச் சேமிப்புமில்லே அவரிடம். வறுமைதான் எஞ்சி நின்றது. அவரிடம் நல்ல நிலேயிலிருந்த பாலகிருஷ்ணன் ஒரு பெரும் தொகையை அன்பளிப்பாகத் தர முன்வந்தபோது அவர் கூறிய சொற்கள் இன்னும் நினேவிருக்கின்றன சாம்பசிவத்துக்கு: 'நான் உழைச்சுச் சம்பாதிச்சுச் சாப்பிடத்தாம்பா விரும்பறேன். சும்மா யார் கொடுத்தாலும் அதைத் தொட மாட்டேன்.'

'அப்படிப்பட்டவருடைய மகனை நானு இன்று இப்படி நடந்து கொண்டேன்?' சாம்பசிவத்தின் உடலும் உள்ளமும் கூசின.

அந்த ஏழைகளின் கண்ணீரும், நெஞ்சக் குமுறலும் துயரமும் ஒன்றுசேர்ந்து 'செக்'காக உருமாறித் தம் பாக்கெட்டில் கிடப்பது போல் ஒரு பிரமை ஏற்பட்டது சாம்பசிவத்துக்கு. 'அது செக் அல்ல; பாவமூட்டை!'

அவரால் நடக்கக்கூட முடியவில்லே. கால்கள் பின்னின. நடை தள்ளாடிற்று.

எதிரே 'மொபைல் போஸ்டாபீஸ் வேன்' வந்து நிற்பது தெரிந்தது. சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தார் சாம்பசிவம்.

'செக்'கின் பின்புறம் கையெழுத்திட்டார். 'அஸ்ஸாமில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட மக்களுடைய நலனுக்கு' என்று குறிப்பிட்டுப் பிரதம மந்திரியின் நிவாரண நிதிக்கு ரிஜிஸ்தர் தபாலில் அனுப்பி வைத்தார். அவருடைய மனத்தில் ஒரு நிறைவான அமைதி நிறைந்திருந்தது.

சட்டைப் பையைத் தொட்டுப் பார்த்தார். பதினேந்து பைசாதான் இருந்தது. பஸ்ஸில் போக முடியாது. சாம்பசிவம் கவலேப்படவில்லே. நடக்க ஆரம்பித்தார். இப்பொழுது அவரால் வேகமாகவும் உற்சாகமாகவும் நடக்க முடிந்தது.

மனச் சுமை இறங்கி விட்டதுதான் காரணமோ?



டெலிவிஷனுடன் கூடிய ரயில் பெட்டி.



# கௌசிகன்

பாரதத்தில் ஓடும் ரயில் வண்டிகளிலேயே இந்தப் புதிய தமிழ் நாடு எக்ஸ்பிரஸ்தான் மிக வேகமாகச் செல்லக்கூடிய ரயில் வண்டி.

ஆசார உபசாரம் அபாரம். காலையில் இரண்டு கப்புகள் பிடிக்கும் விசேஷ பிளாஸ்க்கில் சுடச் சுடக் காப்பியோடு தொடங்கும் சம்பந்தி உபசாரம் இரவு படுக்கும் வரை விதம் விதமான உணவு வகைகளுடன் (சைவம், அசைவம் இரு சாராருக்கும்) முடிவடைகிறது. தென்னிந்திய உணவு வகைகள் முக்கிய இடம் பெறுகின்றன. பிரயாணிகளின் இருக்கைக்கே வந்து தேவைகளைக் கேட்டுக் கொண்டுவந்து கொடுக்கிறார்கள். சாப்பாடு, சிற்றுண்டி வேளை தவிர இடையிடையே கொறிக்கவும் குடிக்கவும் புகைக்கவும் தேவையானது கிடைக்கிறது. எல்லாக் கோச்சுகளிலுமே பிரயாணிகளுக்குக் குடிக்க ஐஸ் வாட்டர் கிடைக்க, வாட்டர் கூலர்களை வைத்திருக்கிறார்கள். உட்கார்ந்தபடியே பிரயாணம் செய்பவர்களுக்கு (ஏ. ஸி. சேர் கார்) பொழுது இனிமையாகக் கழிய டெலிவிஷனும் இணைத்திருக்கிறார்கள். கதைப் படங்கள் கச்சேரிகள், டாக்குமெண்டரிகள் எல்லாம் இதில் திரையிட்டு மகிழ்விக்கிறார்கள்.

இதற்கு மேலும் ஒரு வசதி. ஒரு புத்தகசாலையும் இந்த வண்டியில் இருக்கிறது. பத்திரிகைகள், புத்தகங்கள் விற்பனைக்கும், அவற்றின் விலையில் பத்து சதவிகிதக் கட்டணத்தைச் செலுத்தி இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் படித்துவிட்டுத் திரும்பத் தரும்படியாகவும் கிடைக்கின்றன.

படுக்கை விரிப்பு, போர்வை, நுரை ரப்பர்த் தலையணை இவ்வளவும் தருகிறார்கள். ஒரு இரவுக்கு ரூ. 1-50 கொடுத்தால் போதும். படுக்கையைச் சுமந்து கொண்டு போக வேண்டிய தொல்லையிலிருந்து பயணிகளுக்கு விடுதலை. தமிழ் நாடு எக்ஸ்பிரஸ் வண்டிக்கு விசேஷ மின் வசதி அளிப்பதற்காகவே இரு முனைகளிலும் 'பவர் கார்'களை இணைத்திருக்கிறார்கள். இவை ஒவ்வொன்றிலும் இரு டீஸல் ஜெனரேட்டர்கள் இருக்கின்றன. இதனால் தடங்கல் இல்லாத சிறப்பான மின் சக்தி நல்ல முறையில் கிடைக்கிறது. விளக்கு, விசிறி ஆகியவை ஒளி, வேகம் குன்றாமல் செயல்படுகின்றன.

இவ்வளவு வசதிகளைச் செய்தும் கட்டணத்தை உயர்த்தவில்லை. வழக்கமான கட்டணத்திலேயே தமிழ் நாடு எக்ஸ்பிரஸில் பிரயாணத்தின் அலுப்புத் தோன்றாமல் — முதல் நாள் காலையில் ரயிலேறி மறு நாள் நண்பகலில் டில்லியையோ சென்னையையோ அடைந்துவிடலாம். முப்பது மணி நேரப் பிரயாணத்திலும் மூன்று மணி நேரம் குறைத்து 27 மணி நேரமாக்கப் போகிறார்களாம்.

முன்னேற்றப் பாதையில் நாடு அதிவேகமாகச் சென்று கொண்டிருக்கிறது என்பதற்கு வேகம் மிகுந்த தமிழ் நாடு எக்ஸ்பிரஸ் ஓர் உதாரணமாகத் திகழ்கிறது. □

ஐஸ் வாட்டர் வசதி உண்டு.



அது வெளிநாட்டிலிருந்து வரும் 'கால்', அவர் ஒரு வாரமாக எதிர்பார்த்துக்கொண்டிருந்த செய்தி. டெலிபோன் இணைப்பை அவசரமாய் ஒரு கருவியில் கோத்துக் கையில் எடுத்துக் கொண்டார். மங்கிய ஒலி அந்த வழியில் பெருகிப் பக்கத்தில் பேசுவதுபோல் கேட்டது.

''உங்கள் தந்தையின் உடலைக் கண்டுபிடித்துவிட்டோம். நீங்கள் சொல்லியுள்ளபடி அதைப் பக்குவமாக விமான மூலம் அனுப்பி வைக்கிறோம். இன்னும் மூன்று மணி நேரத்தில் அது பம்பாய்க்கு வந்து சேரும்.. நீங்கள் பெற்றுக் கொள்ளத் தயாராகலாம்.''

அவருடைய தந்தை டாக்டர் சந்திர சேகரின் உடல் கண்டுபிடிக்கப்பட்டு வந்து சேருகிறது. ஆறு மாதங்களாகவே அதற்காகத் தேடி அலைந்து கொண்டிருக்கிறார்கள். அப்படிக் கண்டுபிடித்து எடுத்ததே ஒரு சாதனைதான். ஏனென்றால் அது விமான விபத்தில் சிதறி, பனித் துகளில் சிக்கிப் புதையுண்டு போன ஓர் உடல். இன்று நேற்று நடந்த விபத்து அல்ல. நாற்பது ஆண்டுகளுக்கு முன் நேர்ந்துவிட்ட ஒரு நிகழ்ச்சி.

உலக விஞ்ஞான மகாநாடு ஒன்றுக்காக இந்தியாவின் சார்பாக அனுப்பப்பட்ட இளம் டாக்டர் அவர். தொழிலில் பெரிய சாதனை ஒன்றையும் ஏற்படுத்திவிட இன்னும் அவகாசம் கிடைக்காத பருவம். படிப்பில் அவருடைய அபாரத் திறமை சம்பாதித்துக் கொடுத்த மதிப்புத்தான். அப்போது அவருக்கு வயது இருபத்தாறுதான் இருக்கலாம்.

ஆல்ப்ஸ் மலையின் மீது பறந்து சென்றபோது விமானம் பனி மூட்டத்தில் திசை தப்பி மலைச் சரிவு ஒன்றன்மீது மோதி உடைந்து விட்டது. உயிர் தப்பியவர்கள் வெகுசிலர்தான். அதில் டாக்டர் சந்திரசேகர் ஒருவரில்லை.

எவ்வளவோ தேடியும் உடல் கிடைக்கவில்லை. அவர் விட்டுப் போன உடைகள், புத்தகங்கள், சாமான்கள் எல்லாவற்றையும் அம்மா அப்புறம் வெகு நாட்களுக்குப் பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டிருந்தாள்.



எஸ். லட்சுமி சுப்பிரமணியம்

அவர் சிறு குழந்தையாக இருந்தபோது அப்பாவைப் பற்றிக் கேள்வி கேட்டால், ஒவ்வொன்றையும் அடையாளம் காட்டி, ஒவ்வொன்றுக்கும் ஒரு கதை சொல்லுவாள்.

எல்லாமே ஞாபக நிழல்கள்தாம். அப்பாவின் புகைப்படத்தைப் பார்த்து, பிறகு அந்த நிகழ்ச்சிகளைக் கேட்டதிலிருந்து அவர் தொகுத்து அமைத்துக் கொண்ட சித்திரம் தான். அவர் மறைந்துபோனபோது ரவிக்கு ஒருவயது. கௌரிக்கும் சந்திரசேகருக்கும்மண யாகி ஆண்டுகள் மூன்றுகூட முடியவில்லை.

அப்பாவைப் போல் அவரும் டாக்டராகவேண்டும் என்று அம்மாவுக்கு ஆசை. இந்தியாவில் படித்து அமெரிக்காவில் மேல் படிப்புப் படித்து, நோபல் பரிசு பெற்ற ஜெர்மானிய மருத்துவ நிபுணர் ஒருவரிடம் ஆராய்ச்சி மாணவனாக இருந்து இந்தியாவுக்கு அறிவும் அனுபவமும் மிகுந்த டாக்டராகத் திரும்பியிருந்தான் ரவி. பம்பாயில் பெரிய மருத்துவ ஆராய்ச்சி நிலையம் ஒன்றின் தலைமை டாக்டர்களில் ஒருவனாக இருந்தான்.

தாய்நாடு திரும்பிய பின்னும் அவனுடைய ஆராய்ச்சி தொடர்ந்து கொண்டிருந்தது. உயிர் — பிறப்பு — இறப்பு இவற்றின் இடையே உள்சரடாக ஓடிக் கொண்டிருந்த ஒரு மூல சக்தியைப் பற்றிய ஆராய்ச்சி. பிரிந்த உயிரை மீட்க முடியுமானால்? உடலில் உறைந்து போன உணர்ச்சிகளைத் திரும்பக் கொண்டுவர முடியுமானால்?...

உயிரின் தோற்றத்தின் இரகசியம்—அன்றிலிருந்து அந்தச் சோதனையைப் படிப்படியாக, கரப்பு, பல்லி, தவளை என்று ஒவ்வொன்றிலும் செய்யத் தொடங்கி — எலி, முயல், குரங்கு என்று ஒப்பிடக் கூடிய பிராணி இனங்களை அச் சோதனையில் ஈடுபடுத்திச் சில வெற்றிகளும் பல தோல்விகளுமாகக் கிடைத்தன. இன்னும் திட்ட வட்டமாகப் பிடிபடவில்லை. வழிமுறைகள் இருட்டுக்குள் நடப்பது போல் அனுமானமாகத்தான் இருந்தன.

அடுத்த சோதனை மனித உடலின் மீது என்று இருக்கும்போது —

அப்போதுதான் ரவிக்கு அந்தத் தகவல் கிடைத்தது. ஆல்ப்ஸ் மலையில் சிகரம் ஒன்றை எட்டிப் பிடிக்க முயன்ற குழுவினர்களில் ஒன்று பனிப் பாறையின் அடியிலிருந்து

அந்த உடலேக் கண்டுபிடித்து எடுத்தது. நாற்பது ஆண்டுகளுக்கு முன் விபத்தில் நொறுங்கிப்போன விமானத்தின் 'பைலட்' டின் உடல் அது. புகைப்படத்துடன் விவ ரங்கள் வெளியாயின.

'டைம்' பத்திரிகையில் ஒரு கட்டுரை. 'ரீடர்ஸ் டைஜஸ்ட்'டில் ஓர் உண்மைக் கதை. 'இல்லஸ்டிரேடட் வீக்லி'யின் விஞ்ஞானிகள் இதழில் ஒரு சுருக்கம். எல்லாவற்றையுமே தேடிப் பிடித்துப் படித்தார், டாக்டர் ரவி. அதன் பின் ஸ்விட்ஜர்லாந்துக்கே ஒரு முறை போய்விட்டும் வந்தார். அந்தப் 'பைலட்' டின் உடல் கிடைத்ததைத் தொடர்ந்து விரி வாக அங்கே பிற அடையாளங்களுக்காகத் தேடிக் கொண்டிருந்தார்கள். அவருடைய தந்தையின் உடல் கிடைக்குமாளுல்?

இப்போது ஒன்று கைகூடி விட்டது. அடுத் தது? ஓர் எதிர்பார்ப்பு மனத்தை அழுத்த, பெருமூச்சு விட்டபடி எழுந்து நின்ருர். காரில் ஏறி விமான நிலேயத்துக்குக் கிளம்பிளுர்.

மூன்று நாட்கள் தொடர்ந்தாற்போல் உழைப்புத்தான். உணவுக்காகக்கூட ஓய்வு இல்லே. உறக்கத்தில் கண் மூடவும் இல்லே. ஒவ்வொரு பகுதியிலும் தசைகளிலும் நரம்புகளிலும் மீண்டும் இளக்கத்தையும் வடிவத்தையும் கொண்டு வந்து உயிர்த் துடிப்பின் ஒவ்வொரு மூல அம்சத்தையும் திரும்பக் கொணர்ந்து சுவாசப் பையில் பிராண வாயுவும், இருதயத்தில் 'வால்வு' களின் இயக்கமும் திரும்ப வரச் செய்து, மணி நேரம் சேர்ந்தாற்போலச் செயற்கை முறையில் இரத்தம் சுத்தியாகவும், உடலில் ஓடவும் செய்து உயிர்ப்பின் அடையாளங் களுக்கு வழிதேடி விட்டார்.

வீட்டில் அவருடைய மனேவி ரமாவுக்கு மட்டும்தான் தெரியும். அவள்தாம் அவருக் குத் துணேயாக இருந்த நர்ஸ். சக டாக்டர்க ளுக்குக்கூட, அந்த முயற்சியைப் பற்றியோ, அதன் வெற்றியைப் பற்றியோ தெரியாது.

ஒரு மாதம் ஆகிவிட்டது. மெதுவாக இயங்கும் சக்திகள் ஒவ்வொன்ருகத் திரும்பிக் கொண்டிருந்தன. கால் விரல்கள் அசைந்தன. கைவிரல்கள் துழாவின. உடல் இலேசாக இளகிப் புரண்டது. மெதுவாய்க் கண்கள் திறந்தன. விழிகள் அந்தப் பிறப்பின் வியப்பின் புதுவிழிப்பில் சுற்றிலும் நோக்கின.

மெல்ல எழுந்து நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். மனமும் உடலும் மறுபடியும் திடம்கொண்டன. கலேந்து குலேந்த உணர்வும் நினேவும் மீண்டும் ஒருமித்தன. ரவியை நோக்கிப் புன்னகை புரிந்தார். அவருடைய பார்வையில் நன்றி பொங்கிற்று.

''நீ யார்?''

அந்த முதல் கேள்வியுடன் நினேவின் மடை திறந்தது. சிந்தனேயில் கடிகார முள் துடிப் புடன் நகரத் தொடங்கிற்று.

''நான்தான் உங்கள் மகன் ரவி. நீங்கள் என் தந்தை.'' அந்தப் பேச்சை ஜீரணித்துக் கொள்வது சிரமமாக இருந்தது.

சக்கர நாற்காலியில் அமர்த்தி அறைக்கு வெளியே வீட்டினுள் அழைத்துக் கொண்டு வந்தார் ரவி. பெரிய நிலேக்கண்ணுடியின் முன் வந்து வண்டி நின்றதும் எதிரே நறுக்கி ளுற்போல் தெரிந்த பிம்பத்தைப் பார்த்தார். அவர் கண்கள் திகிலில் சுழன்றன.

''நாளு உன் அப்பா என்று சொல்லு கிருய்? இருக்கவே முடியாது. என் தோற் றத்தைப் பார்த்து வயது இருபத்துஏழு என்றுதான் மதிக்கலாம். உன் நெற்றியில் சுருக்கம் விழுந்தாயிற்று. பொட்டில் நரை மயிர் தெரிகிறது. என்னேவிட உனக்குப் பதி னேந்து வயதாவது அதிகமாக இருக்கும். அப்பாவை விட வயதான மகன் — என்ன அபத்தம்?''





## மாங்கொட்டை பக்கோடா!

காய்கறி, பழங்களில் உள்ள வீணாகும் பகுதிகளை உபயோகப்படுத்துதல் பற்றிக் கோவை வேளாண்மைப் பல்கலைக் கழகத்தில் நடந்த ஆராய்ச்சியில், மாங்கொட்டையிலுள்ள பருப்பிலிருந்து, சுவை மிக்க ''பக்கோடா'' தயாரிக்கலாம் என்று அறியப்பட்டது. மாங் கொட்டையிலுள்ள பருப்பில் இருந்து மாவு தயாரிக்கப்பட்டது. இது துவர்ப்புத் தன்மை உள்ளது. மாங்கொட்டை மாவை மூன்று மணி நேரம் சுடுநீரில் ஊற வைத்து, பின்னர் இரு முறை சுடுநீரில் கழுவி எடுப்பதன் மூலம் இந்தத் துவர்ப்புத்தன்மையை நீக்கி விடலாம். இம் மாவிலிருந்து பக்கோடா போன்ற தின்பண்டங் களைத் தயாரிக்கலாம்.

அவர் தலைமயிரைக் கோதி விட்டுக் கொண்டார். நம்ப முடியாத அந்த நிலையைப் புரிந்து கொள்ள முடியாமல் தலையை அசைத் துக்கொண்டு பெருமூச்சு விட்டார்.

''எனக்குப் புரிகிறது. ஆனால் என்ன செய்ய? உங்கள் உடல் வளர்ச்சி இருபத்தி ஏழு வயதுடன் நின்று விட்டது. உறை பனிக் குக் கீழே அப்படியே உறைந்து விட்டது. அந்த வளர்ச்சியும் தொடரவில்லை; வளர்ந்த தும் அழியவில்லை. உங்களைவிட எனக்குப் பதி னைந்து வயது அதிகம் என்பது உண்மைதான். உங்களுக்கு வயதின் ஓட்டம் நாற்பது ஆண்டு களுக்கு முன்பே நின்று விட்டது. நான் உங் களை முந்திக் கொண்டு விட்டேன்.''

அப்போது நடந்த விபத்தை மீண்டும் வருணித்தார் டாக்டர் ரவி. நூலகத்தி லிருந்து கொண்டு வந்திருந்த அந்த நாளையப் பத்திரிகையின் மைக்ரோ பிலிமைப் படம் போட்டுக் காட்டினார். விபத்தின் செய்தி, வருணனை, புகைப் படங்கள்....

நெற்றிப் பொட்டைத் தேய்த்து விட்டுக் கொண்டார் சந்திரசேகர். ''ஆமாம். எனக்கு நினைவு வருகிறது. அப்போது குரூட் ஷுட்டர் ஆஸ்பத்திரியில் முதன் முதலாகக் கிறிஸ்டன் பெர்னார்ட் இதயத்தை மாற்றிப் பொருத்தி ஒரு சிகிச்சை செய்தார். அதைப் பற்றி அந்த மகாநாட்டில் பேசுவதாக இருந் தது. நான்தான் போய்ச் சேர முடியவில்லை'' என்று சொன்னார்.

அந்தப் பேச்சின் தெளிவும், சரியான பழைய ஞாபகம் படமெடுத்தாற் போல் பொருந்திய விதமும், ரவிக்குத் திருப்தியாக இருந்தன.

''அம்மா எங்கே ரவி?''

''இருக்கிறாள். 'கிராமத்துக்குப் போய் விட்டு வருகிறேன்' என்று போயிருக்கிறாள். விமானத்தில் போக விருப்பமில்லை அவளுக்கு. மணிக்கு முந்நூறு மைல் போகும் ஸூப்பர் ரயிலில்தான் போயிருக்கிறாள். இந்த வாரம் திரும்பி விடுவாள்.''

''அறுபது நிறைந்த கிழவி... அவள் என்னை ஏற்றுக் கொள்வாளா? அவளுடைய இளைய மகனைப் போல இருக்கிறேன் நான். என்னைக் கணவன் என்று எப்படிச் சொல்லிக் கொள்வாள்?''

''பார்க்கலாம்'' என்றார் ரவி.

திரும்பி வந்து பார்த்த கௌரி, தன் பார்வையையே நம்ப முடியாமல் நின்றாள். கொஞ்ச நேரம் சிந்திக்கக் கூடத் தோன்ற வில்லை. காரில் வரும்போதுதான் ரவி விஷ யத்தைச் சொன்னார். இதைக் கடிதத்தில் எழுதக்கூட இல்லை. திடீரென்று நேர்ந்த சந்திப்பின் அதிர்ச்சி.

சந்திரசேகர் அருகில் வந்து நின்று, ''கௌரி!''. என்று கூப்பிட்டதும் அவ ருடைய முழங்கால்களைக் கட்டிக் கொண்டு 'ஹோ' வென்று அலறி விட்டாள். அவ ருக்கே சகிக்காமல் அவளை இழுத்து மார்பின் மேல் சாய்த்துக் கொண்டார். அவள் கண் ணீரைத் துடைக்க முயன்றார். அவளே அப் போது ஒரு பெரிய குழந்தையாகத்தான் இருந்தாள்.

ரமாவுக்கு எதையும் வெளியில் சொல்லிக் கொள்ள முடியவில்லை. தன்னைவிடச் சிறிய வராகத் தோன்றியவரை 'மாமா' என்று அழைக்கவும், பழகவும் தயக்கமாக இருந்தது. அவரையும், மாமியாரையும் ஒருங்கே வைத் துப் பார்க்கவும், பேசவும் என்னவோபோல் இருந்தது.

அவரால் வீட்டில் இருக்க முடிய வில்லை. உலகத்தை வெளியே வந்து பார்க்க வும், வாழ்ந்து அனுபவிக்கவும் தோன்றிய உள்ளக் கிளர்ச்சி அசாத்தியமாக இருந்தது.

அன்று ரவி அவரை ஓர் இளைஞர் பொழுது போக்கு மன்றத்துக்கு அழைத்துக்கொண்டு போயிருந்தார். விதம் விதமான விளக் கொளியும், கண்ணுக்குத் தெரியாமல் தரை கீழிருந்து புறப்படும் இசை ஒலியும், கால்கள் பூமியில் பதியாமலே ஆடும் நடன மும் அவருக்குப் பிரமிப்பாக இருந்தன.

சுவரில் இடம் விடாமல் பதிந்த கண் ணாடிகள், அவற்றில் பாதம் பதிந்து ஒட்டிக் கொள்ள வழுக்கி, ஓடி ஆடிய விநோதமான சறுக்கு நடனம், நீர் போல் ஓடிய விளக்குச் சாறு. இஷ்டம் போல் மாறிய அவரவர் களுக்குப் பிடித்தமான இசை.

ஒரு பெண் அவருடைய இடையில் கையை வைத்துக் கொண்டு அழைத்தாள். ''இந்தக் கூட்டத்தில் நீங்கள் பொருந்தாமல் இருக் கிறீர்கள். 'மூட்' சரியாக இல்லையா? உங் களுடன் நான் நடனம் ஆடட்டுமா?''

கண்ணாடி போன்ற உடை. உடல் அமைப் பும் அழகும் தெரியக் கூச்சமென்பதே தெரி யாமல் பழகும் சுபாவம். அவர் உணருமுன் அவர் மேல் பாம்பு சுருட்டிக் கொள்வது போல் ஒட்டிக் கொண்ட வாகவம். கூசிக் குறுகிய அவர் முகத்தின் மேல் முகம் அழுந்திற்று.

அவர் திணறினார். அவருள் திரண்ட ஒரு வேகம் பூதமாய் வளர்ந்து, அவளை ஒரு விசிறி விசிறிற்று. தள்ளாடிய வேகத்தில்

கால் தடுக்கிப் பின்னுக்குப் போய்க் கீழே விழுந்தாள்.

''யூ ப்ரூட்'' கீழே விழுந்தவள், புழுவைப் போல் நெளிந்தாள். அவளுடைய அருவருப்பான பார்வையும், சீற்றமும் அவரை நடுங்க வைத்தன. ரவிக்கு அந்தக் குழப்பம் பெருகிக் கலவரம் நேருவதற்கு முன், அவரை வெளியே அழைத்துக் கொண்டு வருவதற்குள் போதும் போதுமென்றாகிவிட்டது.

வீட்டில்தான் என்ன புதுமையான வசதிகள்!

டெலிபோனில் பேசினால் முகமும் கூடவே தெரிந்தது. உடைகளைத் தோய்ப்பதோ மடிப்பதோ இல்லை. தினமும் ஒரு முறை வந்து சேரும் காகித உடைகள். மறுநாள் தூங்கி எழுந்ததும் கசக்கி எறிந்துவிட வேண்டியதுதான்.

படுக்கையில் படுத்ததும் விருப்பமான அளவுக்குச் சூடும் குளிர்ச்சியும் தரும் கட்டில். வேண்டிய அசைவுக்கு அதன் தாலாட்டுதல். அவருடைய காதுக்கு மட்டும் தலைமாட்டில் கேட்கும் இசை.

காலால் அமுக்கினால் தேவைப்படி குளிர்ச்சியாகவும் சூடாகவும் நீரைப் பொழியும் குளியலறை. சோப்பும் நுரையும் கூடப் பொழிவுதான். கையால் தேய்த்துக் குளிக்கும் அவசியம் கூட இல்லை.

கௌரி கூட இந்தச் சௌகரியங்களை இயல்பாக ஏற்றுக் கொண்டு விட்டாள். அவரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. தொடர்ந்து பழகி வந்ததால் அவளுக்கு இது இயற்கையாக இருந்திருக்கலாம். அவருக்குச் சட்டென்று ஒரு கால இடைவெளியை எதிர்பாராமல் கடந்து விட்ட உணர்ச்சியை இலேசாக ஏற்கத்தான் முடியவில்லை.

நாற்பது ஆண்டுகளில் எப்படிப்பட்ட மாறுதல்கள்? முன்னேற்றங்கள்? அவரால் நம்பத்தான் முடியவில்லை. அவருடைய மனத்துக்கு அந்த மாறுதல் தந்த அதிர்ச்சியை ஜீரணித்துக்கொள்ள இயலவில்லை. அவருடைய வாழ்க்கை நாற்பது ஆண்டுகளுக்கு முன்பே தொடர்ந்திருக்க வேண்டும். அந்தக் கால தாமதம் தந்த இடைவெளியை மனத்தளவில் அவரால் கடக்க முடியவில்லை. ஒவ்வோர் அடியெடுத்து வைக்கும்போதும் மனம் கூசுவது புரிகிறது.

அன்று ரவி 'டிக்டா போனில்' கடிதங்களைச் சொல்லிக் கொண்டிருந்தார். அவர் சொல்லிவிட்டுப் போனால் மாலையில் வரும் போது அது தயாராய் எல்லாவற்றையும் டைப் செய்து வைத்துவிடும். அப்படி அதற்கு ஓர் எலெக்ட்ரானிக் டைப்ரைட்டர் இணைப்பும் இருந்தது.

''தினமும் எத்தனையோ கடிதங்கள் எழுதுகிறாய். உன் பெண் சித்ராவுக்கு ஒரு கடிதம் எழுதுவதாகத் தெரியவில்லையே?'' என்று கேட்டார் சந்திரசேகர்.

''அவசியமானதை அம்மாவிடம் 'நெடுந்தூர டெலிபோன் கால்' போட்டுப் பேசிவிடுகிறாள். நிமிஷத்துக்குப் பத்து ரூபாய். சுலபமான வேலை. யார் அப்பா எழுதிக் கொண்டிருப்பது?'' என்று கேட்டார் ரவி.



**சாதனையில் ஒரு ஹைஜம்ப்!**

கிழக்கு ஜெர்மனி 1956 ஒலிம்பிக்கில் முதல் தடவையாகக் கலந்து கொண்டு 6 மெடல்களைப் பெற்றது. அது 1960 ரோம் ஒலிம்பிக்கில் 15 மெடல்களையும், மெக்ஸிகோ 1968 பந்தயங்களில் 25 மெடல்களையும், சென்ற தடவை மியூனிக் ஒலிம்பிக்கில் 66 பதக்கங்களையும் பெற்று இப்போது மாண்ட்ரீயல் ஒலிம்பிக்கில் 90 மெடல்களை (40 தங்கப்பதக்கம்) பெற்று அமெரிக்காவை மிஞ்சி இரண்டாவது இடத்துக்குப் போய்விட்டது. இருபது ஆண்டுகளில் இந்தச் சாதனை மகத்தானது. ஸ்போர்ட்ஸ் வீக் -கே. ஆர்.

''அதற்குச் சொல்லவில்லை. வயது வந்த பெண் அவள். எங்கேயோ ஆயிரம் மைல்கள் தூரத்தில் இருந்து கொண்டு படிக்கிறாள். அவளைக் கவனித்துக் கொள்ள வேண்டாமா? நாளைக்கு நாம் நல்ல இடமாகப் பார்த்துக் கல்யாணம் செய்து கொடுக்க வேண்டாமா?''

''என்னது? கல்யாணம் செய்து கொடுப்பதா? என்ன சொல்கிறீர்கள்?''

''சித்ராவுக்கு நாம் மணம் செய்துவைக்க வேண்டாமா?''

'ஹோ'வென்று வாய் விட்டுச் சிரித்தார் ரவி. கூட இருந்த ரமாவும் வாய் விட்டுச் சிரித்தாள்.

''ஏன் சிரிக்கிறீர்கள்?''

''அப்பா. அவளுக்கு வாலிபர்களுடன் பழகுவதற்குக் கிளப் இருக்கிறது. அவளுடைய சுபாவம், பழக்க வழக்கங்கள், 'ஹாபி' இவைகளுடன் சரியாக ஜோடி சேரக்கூடிய வாலிபர்கள் இருப்பார்கள். அவர்களில் அவளுக்குப் பிடித்தவனை அவளே தேர்ந்து கொள்ளலாம். ஆறு மாதங்கள் ஒன்றாகப்பழகுவார்கள். அவர்களால் மணம் செய்து கொண்டு தாம்பத்தியமாக இருக்க முடியும் என்று தோன்றினால், அப்புறம் கல்யாணத்தை நிச்சயம் செய்து கொள்வார்கள். அப்போதுதான் சித்ரா எங்களைக் கூப்பிடுவாள். அதுவரை எங்களுக்கெல்லாம் வேலை இல்லை.''

''பெற்றோருக்குத் தெரியாமல் பெண் இப்படிப் பழகுவதா ? இதில் அபாயம் இல்லையா? நீ இப்படி நிம்மதியாக இருக்கிறாயே ?'' என்று பதறினார் சந்திரசேகர்.

''அப்பா! நீங்கள் இரண்டு தலைமுறை பின்னால் இருக்கிறீர்கள். நமக்கு இடையில் இருக்கும் 'ஜெனரேஷன் — கேப்' -அசாத்தியமாக இருக்கிறது. மனோதத்துவ அடிப்படையில் உங்களுக்குச் சிகிச்சை செய்யவேண்டி இருக்கும் என்று தோன்றுகிறது'' என்றார் ரவி.

அழுந்தும் உணர்ச்சிகளின் புதுமையினு லும் வருத்தத்தினுலும் அவர் குழம்பி நின் ருர். அவரைத் தாக்கும் புதுமைக்குள்ளேயே, உணர்ச்சிகளின் பழைமை புகுந்து கொண்டு அவரைக் கேலி செய்தன.

ஏதோ ஓர் ஏக்கம் அவரை வாட்டத் தொடங்கிற்று. புதிதாக ஓர் இடத்துக்கு வந்துவிட்ட குழந்தையைப் போல் ஒரு தவிப்பு ஒவ்வொரு நிலையிலும் தளர் காட்டிற்று. அவ ருடைய துடிப்பும், கலகலப்பும், வெளி நட மாட்டமும் கொஞ்சம் கொஞ்சமாக அடங்கிப் போயின. அன்றையச் சூழ்நிலைக்குப் பொருத்தமில்லாத ஒரு மனப்பான்மை அவ ரிடம் நீடித்து அவரை அலைக்கத் தொடங் கிற்று.

'' அப்பா !'' என்று கூப்பிட்டார்.

அவர் திரும்பிப் பார்க்கவில்லை. கண்ணில் நிறைந்த நீர் கன்னங்களில் வழிந்து ஓடிற்று. அவர் துடைக்கக்கூட முயலவில்லை. அவ ருக்கு உள்ளே ஏதோ தகர்ந்து விட்டது.

'' எனக்குப் புதுமை வேண்டாம் ரவி. பழைமையே போதும். டானிக் தேவைப் படுவது என் உடலுக்கு அல்ல. மனத்துக்குத் தான். என்னைத் தனியாக விட்டுவிடு '' என்று மெதுவாக மென்று விழுங்கிப் பதில் சொன்னுர்.

''ஏன் அப்பா? என்ன சொல்லுகிறீர்கள்?''

'' நீ கால கடிகாரத்தை நாற்பது ஆண்டுகள் பின்னுல் வைத்துவிட்டாய். என் மனம் அந்த நிலையில்தான் இருக்கிறது. உடம்பு மட்டும்தான் இன்றைய நிலையில் இருக்கிறது. ஒன்ருய் இருந்து கொண்டு, மனமும் உடலும் இரு வேறு நிலைகளில் என்னை இப்படி இழுக் கும் அவஸ்தை தாங்கக் கூடியதாக இல்லை. இதைவிடப் பழைமையான மனப்பான்மைக்கு ஏற்றபடி உடலிலும் முதுமை வந்துவிடுவதே பொருத்தம் என்று நினைக்கிறேன். என் னுடைய மனத்தின் ஏக்கம் என் உடம்பில் பிரதிபலிக்கிறது. அதனுல்தான் இந்த ஒரு வருஷத்திலேயே அதற்குப் பத்து வயது அதிக மாகக் கூடிவிட்டது. இது அவசர ஒட்டமாக இருக்கலாம். ஆனுல் இதுதான் இயற்கை. என் உடம்பு மனத்துடன் ஜோடி சேரப் பார்க்கிறது. அதைப் பிரிக்காதே. இன்னும் நாலைந்து ஆண்டுகளில் நான் எழுபது வயதுக் கிழவன் ஆகிவிடுவேன். அப்போது எல்லாம் சரியாக இருக்கும். கௌரியும்கூடத் தன் முதுமையைக் குனிந்து பார்த்து ஏங்க வேண்டியதில்லை.''

''அப்பா ! நீங்கள் சொல்வது — இப்படியே விட்டுவிட்டால் சீக்கிரத்தில் உங்கள் வாழ்க்கை முடிந்து விடும் !''

''தெரியும். அதில் என்ன தப்பு? நாற்பது ஆண்டுகளுக்குமுன் நேர்ந்தது போல, அது அகால மரணம் இல்லையே ? என்னைக் கடைசி யாகப் பார்ப்பவர்கள் ''வாழ்க்கையை முழுவ தும் அனுபவித்துக் கனிந்து உதிர்ந்த பழம் இது !'' என்றுதானே சொல்வார்கள் ? அதில் இயற்கை இல்லாத தன்மை ஏது ? இப்போது தெரியும் அசம்பாவிதம் அந்த முடிவில் இருக்காதே ?''

'' அப்பா ! உங்களுக்கு இளமையைத் தர ஆசைப்பட்டேன். மீண்டும் ஒரு தடவை முழு வாழ்க்கையை நீங்கள் வாழ்ந்து அனுபவிக்க, ஒரு வாய்ப்புத் தர வேண்டும் என்று ஆசைப் பட்டேன். நீங்கள் என்னை ஏமாற்று கிறீர்கள். என்னுல் இதைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை !''

''இல்லை, ரவி ! இதுவே எனக்கு முழுத் திருப்தி. என் மனம் நன்றியால் நிறைந்து ததும்புகிறது. வயதான தந்தையின் ஆசை என்ன? தன் மகன் வளர்ந்து நல்ல நிலையில் இருப்பதைப் பார்ப்பதுதானே ? அது ஈடேறி விட்டது. இன்னும் என்ன பாக்கி ? உன் னிடம் நான் இனிமேல் கேட்டுக் கொள்ள விரும்புவதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். நீ அதை நிறைவேற்றுவாயா ?''

'' என்னப்பா ? கேளுங்கள். உங்களுக் காக நான் எதையும் செய்வேன்.''

'' நீ அதைச் செய்ய வேண்டும். நான் இறந்து போனல் மறுபடியும் என்னை உயிர்ப் பித்துவிடாதே. என் உடலை அப்படியே [illegible] விட்டுவிட்டு அதற்கு உயிர் கொடுத்துவிடாதே. தாய் மண்ணில் அது மறைந்து போகட்டும். அதற்கு வழியே இல் லாமல் செய்ய வேண்டும் என்று ஆசைப் படாதே. என் வேண்டுகோளைப் பூர்த்தி செய்வாயா ரவி ?''

'' ஆகட்டும், அப்பா !''

முதல் மாடியில் விரவி இருந்தது அந்த இயந்திரம். இயந்திரம் என்றால் ஏதோ பல சக்கரங்களும் அவ்வப்போது பிசிர் பிசிராகச் சத்தமும், தடார் என்ற ஓசையும் பச்சை சிவப்பு விளக்குகளும்... அப்படி இல்லை. முன் பக்கமும் பின் பக்கமும் ஒரே மாதிரி அமைந்த கார் ஒன்றை யோசித்துப் பாருங்கள். அந்தக் காருக்கு ஒரே ஒரு கதவுதான் இருக்கிறது. மற்றவை எல்லாம் மூடி யிருக்கிறது. அந்தக் கதவிலும் கண்ணாடிப் பாகம் ஓர் அடி சதுரம்தான் என்று எண்ணிப் பாருங்கள். ஏறக்குறைய அதுதான் செல்வாவின் கால யந்திரம்.

''ஓடுமா?'' என்று கேட்டேன்.

''ஆம்'' என்றார் டாக்டர் செல்வா.

''சக்கரங்கள் இல்லையே?''

''அந்த மெஷின் நான்காவது பரிமாணத்தில் ஓடும். காலப் பரிமாணத்தில் ஓடும். சக்கரங்கள் தேவையில்லை.''

டாக்டர் செல்வாவைப் பார்த்தால் பொய் சொல்லக் கூடியவராகத் தெரிய வில்லை. அவர் நாசியில் கம்பீரமும் அலமாரி முழுதும் நிரம்பி வழிந்த புத்தகங்களும்.... அந்த ஆராய்ச்சி சாலையில் இருந்த வித விதமான சாதனங்களும்... அவர் ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளிவந்த மிக முக்கியமான விஞ்ஞானப் பத்திரிகைகளும்... அவர் சொல்வதை நம்பத் தூண்டினாலும் என் கண்களில் அவநம்பிக்கை இன்னும் பாக்கி இருந்திருக்க வேண்டும்.

''நீங்கள் நம்பவில்லை என நினைக்கிறேன்.''

''சார்லஸ் டன்னின் 'எக்ஸ்பெரிமெண்ட்ஸ் வித் டைம்' படித்திருக்கிறீர்களா? சென்ற நூற்றாண்டுப் புத்தகம்.''

''இல்லை டாக்டர், விஞ்ஞான விஷயத்தில் நான் ஒரு பாமரன்.... அந்தக் கரும்பலகையில் பூச்சி பூச்சியாக எழுதியிருக்கும் கணக்குகள் எல்லாம் எனக்கு வெட்ட வெளி.''

''சுலபமாகச் சொல்லிப் பார்க்கிறேன். இந்தக் காகிதத்தை உங்களால் பார்க்க முடிகிறதா?''

''முடிகிறது.''

''இதற்கு எத்தனை பரிமாணம்?''

''இரண்டு. நீளம், அகலம்!''

''இந்தப் பெட்டியையும் உங்களால் பார்க்க முடிகிறது.... இல்லையா...? இதன் பரிமாணங்கள் எத்தனை?''

''மூன்று. நீளம், அகலம், உயரம்.''

''நல்லது. அதோ தூரத்தில் அந்த வீடு தெரிகிறதா?''

''தெரிகிறது.''

''பின்னால் பாருங்கள். அந்த டவர் தெரிகிறதா?''

''தெரிகிறது.''

''இடது வலது, மேலே கீழே, முன்னே




''இல்லை டாக்டர். நம்பச் சிரமமாக இருக்கிறது...''

''பரிசோதித்துப் பார்த்து விடுங்களேன்'' என்றார் புன்னகையுடன்.

''நிஜமாகவே எதிர் காலத்துக்கும் கடந்த காலத்துக்கும் இதில் பிரயாணம் செய்ய முடியுமா?''

''ஆம்!''

''அது எப்படிச் சாத்தியம்?''

பின்னே எல்லாத் திசைகளிலும் மூன்று பரிமாணங்களையும் உங்களால் உணர முடிகிறது. எப்படி?''

''எப்படி?''

''நீங்கள் ஒரு நான்கு பரிமாண ஆசாமி அதனால்தான்....''

''நான்கா?''

''ஆம். உங்களுக்கு நான்கு பரிமாணங்கள் உள்ளன. நான்காவது காலம். உங்கள்

வாழ்நாள்... ஆத்மாவை நான்கு பரிமாணங்களில் குறிப்பிட வேண்டும் என்றால், உயரம் ஆறு அடி. சராசரி நீளம் ஒன்றரை அடி; சராசரி அகலம் அரை அடி. இவை மூன்று பரிமாணங்கள். நீங்கள் பிறந்த தினம் எது?''

''3—5—1988.''

''எனவே உங்கள் தற்போதைய காலப் பிரமாண அளவு 3—5—1988 லிருந்து இன்று வரை.... எனவே நீங்கள் ஒரு நான்கு பரிமாணப் பிரஜை... புரிகிறதா?''

''இலேசாக.''

''ஒரு நான்கு பரிமாண மனிதனால் மூன்று பரிமாணங்களில் முன்னும் பின்னும் மேலும் கீழும் இடமும் வலமும் சுலபமாக நோக்க முடிகிறது.... உன்னிப்பாகக் கவனியுங்கள்... ஒரு ஐந்து பரிமாணப் பிரஜையினால் என்ன செய்ய முடியும் என்று யோசித்துப் பாருங்கள்!''

டாக்டர் என் பதிலுக்குக் காத்திருக்க நான் நெற்றியைச் சுருக்கி யோசித்தேன். திடீர் என்று பல்ப் எரிந்தது.

''ஆம் டாக்டர்... ஓர் ஐந்து பரிமாண ஆசாமியால் நான்காவது பரிமாணத்தில் முன்னும் பின்னும் செல்ல முடியும். அதாவது...''

''அதாவது காலத்தில் முன்னும் பின்னும் நடக்க முடியும். இந்த யந்திரம் அதைத்தான் செய்கிறது. உங்களை ஐந்து பரிமாண உலகத்தில் நுழைத்து விடுகிறது. எனவே உங்களால் எதிர்காலத்திலும் இறந்த காலத்திலும் செல்ல முடியும்... இப்பொழுது சொல்லுங்கள். எங்கே செல்ல விரும்புகிறீர்கள். எதிர் காலமா இறந்த காலமா?''

எனக்கு உவகை பொங்கியது. சற்றுப் பயமாகக்கூட இருந்தது. அது சாத்தியமென்றால் நான் என் ஆராய்ச்சி காலத்துக்கே சென்று விடலாமே? மண்டையை உடைத்துக் கொண்டு சாசனங்களையும் கல்வெட்டுக்களையும் அகழ்வுகளையும் ஆராய்கிறேனே! அந்தக் காலத்தைக் கண்டு பிடிக்கத்தானே?..

''டாக்டர், நான் இறந்த காலத்துக்குச் செல்ல விரும்புகிறேன்.''

''சரி. எந்த நூற்றாண்டு?''

''அதை நான் பிறகு தீர்மானிக்கலாமா?''

''முடியும். உங்கள் உத்தேசம் புரிகிறது.... விசாரித்து விசாரித்து உங்களுக்குத் தேவையான நூற்றாண்டை அடையலாம்...'' டாக்டர் கதவைத் திறந்தார். ''இதோ பாருங்கள். இந்த ஸீட்டில் உட்கார்ந்து கொள்ளுங்கள். இதோ இருக்கிறதே, இந்தக் கண்ட்ரோலில் எண்களை உங்கள் இஷ்டத்துக்கு அமைத்துக் கொண்டு அந்தப் பட்டனைத் தட்டினால்





அயர்லாந்து டப்ளின் நகர மிருகக் காட்சி சாலையில் மனிதக் குரங்குகள் இருக்கும் கூண்டில் டெலிவிஷன் வைத்திருக்கிறார்கள். அமெரிக்காவிலும் மிருகக் காட்சிச் சாலைகள் பலவற்றில் டி. வி. உண்டு. இதனால் மிருகங்கள் மகிழ்ச்சியாக உள்ளனவாம்! — ஜே. எஸ். - பாபு

போதும். உங்களுக்கு ஆயிரம் வருஷங்கள்பின் னேக்கிச் செல்ல வேண்டுமா? ஆயிரத்தைத் தேர்ந்தெடுத்து விட்டுக் கழித்தல் குறியைத் தொடுங்கள் போதும். முன்னேக்கிச் செல்ல வேண்டும் என்றால் கூட்டல் குறியைத் தொட வேண்டும்.''

''டாக்டர், என் நரம்புகள் பரபரத்துத் துள்ளுகின்றன.''

''சில எச்சரிக்கைகள்.''

''என்ன?''

''ஒன்று, நீங்கள் செல்லும் ஆண்டு எதுவாக இருந்தாலும் அந்த மனிதர்களிடம் எவ்விதமான சிக்கலும் ஏற்படாதபடி இருங்கள்... எவருடனும் சண்டை பிடிக்காதீர்கள்... எவரையும் கொன்றுவிடாதீர்கள்.''

''சேச்சே! கொல்வதாவது.''

''அப்படி ஏதாவது அசம்பாவிதம் ஏற்பட்டு விட்டால் காலக் கணக்கே தவறாகி விடும். இருபத்து ஓராம் நூற்றாண்டு மனிதர் நீங்கள். மற்றொரு நூற்றாண்டில் வாழ்பவர்களின் கால ஓட்டத்தில் குறுக்கிடக் கூடாது. விபரீதம் நிகழ்ந்து விடும். மேலும் பெண்களிடம் ஜாக்கிரதையாக இருங்கள். பார்க்க அழகாக இருக்கிறீர்கள். சபலமே வேண்டாம்... கல்யாணம் கில்யாணம் என்று ஏதாவது செய்து கொண்டு விடாதீர்கள். காரியம் கெட்டு விடும்.''

''சேச்சே! அதெல்லாம் நடக்காது. உத்தரவாதம்.''

''மற்றொரு முக்கியமான எச்சரிக்கை... இந்தக் கண்ட்ரோல் பெட்டியைத் தவற விட்டு விடாதீர்கள். சிறிய பெட்டி. உங்கள் பைக்குள் அடங்கும். எப்பொழுதும் உடன் வைத்திருங்கள். திரும்ப வருவதற்கு இதன் ரிடர்ன் என்ற பட்டனை மறக்காமல் அழுத்த வேண்டும்... சுலபம்.''

நான் அந்தச் சிறிய கூண்டுக்குள் உட்கார்ந்து கொண்டேன். டாக்டர் அதன் கதவை மூடினார். ஜன்னல் வழியாக அவர் புன்னகை தெரிந்தது. கட்டை விரலை உயர்த்திக் காட்டினார். ஜன்னல் திரையிட்டு மூடிக் கொண்டது.

உள்ளே சுகமாக இருந்தது. கண்ட்ரோல் பெட்டியை எடுத்தேன். யோசித்தேன். மெலிதான 'ம்ம்ம்' ஒலி கேட்டுக் கொண்டிருந்தது. எங்கே போகலாம்? இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி என் ஆராய்ச்சிக்குச் சாதகமான விஷயங்களைச் சேகரிக்க வேண்டும். முதலில் இந்த யந்திரம் வேலை செய்கிறதா என்று பார்க்கலாம். ஏதாவது ஒரு வருஷத்தைப் பார்க்கலாம். எந்த நூற்றாண்டு?

பலப் பல வருஷங்கள் பின்னேக்கிச் செல்ல எண்களை அமைத்தேன்.

**வா**சலில் கோலம் போலப் போட்டுக் கொண்டிருந்த அந்தப் பெண் நிமிர்ந்தாள்.

நான் அவளைப் பார்த்துச் சிரித்தேன். திடுக்கிட்டு ஓடினாள். அவள் கச்சு அணிந்திருந்தாள். ஓடுகையில் நகைகள் ஆரவாரித்தன.

தெருவில் வீடுகள் தாழ்ந்து இருந்தன. அந்தப் பெண் உள்ளே ஓடிய வீட்டிலிருந்து ஒரு வயதானவர் வெளிப்பட்டார். கையில் ஈட்டி வைத்துக் கொண்டு முறைப்பாக வந்தவர் என்னைக் கண்டதும் அங்கேயே நின்றுவிட்டார். ''ஹலோ'' என்றேன். ''எனக்குத் தமிழ் தெரியும்'' என்றேன்.

திருதிரு என்று விழித்தார். அவர் மார்பில் முரட்டுத் துணி அணிந்திருந்தார். ஆபரணங்கள் அணிந்திருந்தார். செருப்பு, கட்டையால் செய்ததாக இருக்க வேண்டும். சாளரத்தின் வழியாக அந்தப் பெண்ணின் முகம் தெரிந்தது.... பயம்! பயம்!

''தமிழ்... தமிழ்... பேசுவேன், மொழிவேன், பகர்வேன்!'' என்றேன்.

''யார் நீ?''

''நண்பன், சிநேகிதன், நல்லவன், துன்பம் செய்யாதவன், அமைதி நாடுபவன்...'' என்றேன்.

இப்போது என்னைச் சுற்றி ஓர் ஈட்டிக்காரர்களின் கூட்டமே சேர்ந்து விட்டது. பத்தடி தூரத்தில் நின்றார்கள்.

''உன் பெயர் சொல்.''

''ஆத்மா.''

''ஒற்றன்!'' ஒருவன் முணு முணுத்தான்.

''கொல்!'' என்றான் ஒருவன். ஈட்டியைக் குறிபார்த்தான்.

''இல்லை! இல்லை''

''இரு! அடேய், நீ யார்? உன் அரசன் யார்?'' என்றார் அந்த வயதானவர்.

''என் அரசன்... என் அரசன்... மாண்பு மிக்க மாட்சிமை தங்கிய உங்கள் மன்னர்தாம் என் அரசன்!''

அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள். ஈட்டிகள் தயங்கின.

''உன் உடைகள் ஏன் இப்படி இருக்கின்றன?''

''நான் நெடுந்தூரம் பிரயாணம் செய்தவன். நெடு நாட்கள் பிரயாணம் செய்தவன். பல தேசங்கள் பார்த்தவன்...''

''மன்னரை நோக்கி யிருக்கிறாயா?''

''நோக்கி யிருக்கிறேன். தீர நோக்கி யிருக்கிறேன். போர் நிகழப் போகிறது... வெல்லப் போகிறார்...''

''இவன் பேசுவது சரியாக இல்லை.''

''களைத்திருக்கிறேன். அழகாகக் குடுமி வைத்திருக்கிறாய். நண்பனே!''

ஜன்னலுக்கு உள்ளிருந்து சிரிப்பொலி கேட்டது.

''அது என்ன?'' என்று என் பையைக் காட்டி ஒரு பையன் கேட்டான்.

''அது பௌண்டன் பேனா. எழுதுவதற்கு உரிய சாதனம். காகிதம் இருக்கிறதா?''

''காகிதம்?''

''இங்கே வா பாப்பா!'' என்று அந்தச் சிறுமியின் நெற்றியில் அழகாகப் பொட்டிட்டேன். எல்லோரும் அதை வியந்து பார்த்தார்கள். ஓர் இளம் பெண் தன் சாளரத்தை மறந்து வெளி வந்தாள்.

''முடிநாகா, இவர் நம் மன்னரைச் சேர்ந்தவர். அழைத்துச் செல். விருந்திடலாம்...''

அந்தப் பெண்ணிடம் என் சிகரெட் லைட்டரைத் தட்டிக் காட்டினேன். ஓடிப்போய் மூன்று நான்கு பெண்களை அழைத்து வந்தாள்.

''உன் பேர் என்ன?''

தலையை ஆட்டினாள். கன்னத்தில் சிவப்புத் தெரிந்தது. ''உன் கையைக் காட்டு பார்க்கலாம்.''

அவள் கை சிவந்திருந்தது. வருகிறபோது கொஞ்சம் பிளாஸ்டிக் வளையல்களை வாங்கிக் கொண்டு வந்திருக்கலாம் என்று தோன்றியது.

''வெட்கப்படாதே. எனக்கு என்ன வயது தெரியுமா?''

ம்ஹூம். பதில் இல்லை.

''உன் வயது என்ன?''

''பிங்கள ஆண்டு பிறந்தேன்'' என்றாள். பிங்கள! (அது என்ன?)

கட்டை விரலை வெட்டுவது போல் காட்டும் ஒரு வித்தை தெரியும் எனக்கு. அதைக் காட்டினேன். பயந்து ஒருத்தியை ஒருத்தி கட்டிக் கொண்டார்கள்.

''இங்கே வா. அதை எப்படிச் செய்வது என்று காட்டுகிறேன். தயங்கி வந்தாள். இந்தக் கையை எடுத்துக் கொள். இப்படி வைத்துக் கொள். இந்த விரலை மடக்கு... வலிக்காது. கவலைப்படாதே. மடக்கி இங்கே வைத்து... இது என்ன பாசி மணியா?''

வெளியே குதிரைக் குளம்படி ஒலி கேட்டது. ''எங்கே அவன்?'' என்று முறைப்பாக அதட்டல் கேட்டது.

''உள்ளே.''

''கூப்பிடு.''

உள்ளே வந்த அந்தப் பெரியவர், ''நண்பரே, உம்மை மன்னர் அழைக்கிறார்'' என்றார்.

வெளியே ஒரு சிப்பாய் காத்திருந்தான். அவன் வாள் மின்னியது. பக்கத்தில் ஒரு காலிக் குதிரை காத்திருந்தது. நல்ல உயரமாக இருந்தது. என்னைப் பார்த்ததும் மூன்று தடவை பிஹி பிஹி பிஹி என்றது.

''ம் ஏறு'' என்றான்.

எனக்குக் குதிரை ஏறிப் பழக்கமில்லை. சின்ன வயசில் பார்க்கில் ஒரு மட்டக் குதிரை மேல் ஏற்றி உட்கார வைக்கப்பட்டு ஓர் ஆள் கூடவே ஓடிவர, திகிலாய்ப் பிரயாணம் செய்ததோடு சரி. அப்புறம் ஸ்கூட்டர் பாட்டரி கார் இப்படித்தான்.

''நடந்தே வருகிறேன்.''

''முடியாது. அதிக தூரம். ஏறு.''

முடிநாகன் என்னை ஏற்றி விட்டான். சாளரத்தில் அந்தப் பெண் என்னைப் பார்த்துக் கட்டை விரல் வித்தை செய்து காட்டினாள். எனக்கு ஆத்திரமாக வந்தது.

குதிரை அரேபியக் குதிரை போலும். சற்றுச் சங்கடமாக இருந்தது. உதறு உதறு என்று உதறியது. டெலிவிஷனில் குதிரைப் பந்தயம் பார்த்திருக்கிறேனே! எப்படி அவர்கள் வேகமாகச் சவாரி செய்கிறார்கள்... பாய்ச்சலுக்கு ஏற்ப ஆடிப் பார்க்கலாமா?... முயன்றேன்.

ஏறக்குறையச் சரிந்து விட்டேன். சமாளித்து எங்கேயோ பிடித்துக்கொண்டு லாட்டரிக் குலுக்கல்போல உடம்பின் எலும்புகள் குலுங்க... தடக்..தடக்...தடக்.... தடக்....

உடம்பெல்லாம் புழுதியாக அந்தமாளிகை வாசலில் இறங்கிப் பிரம்மாண்டமான மரக் கதவின் திட்டிக் கதவினூடே நுழைந்து பல ஈட்டிக்காரர்களைக் கடந்து ஒரு கால் நொண்டியடித்தபடி மன்னரின் அரண்மனைக்குள் அழைத்துச் செல்லப்பட்டேன்.

கட்டிடக் கலை என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. கம்பத்துக்குக் கம்பம் தீப் பந்தங்கள் எரிந்தன. பகல் வெளிச்சம் உள்ளே கம்மியாக இருந்தது. குதிரை லாயத்தில் வெளிவந்தோம். நிறையக் கறுப்புக் குதிரைகள் இருந்தன. தாண்டியதும் ஒரு சதுரம். அதன் நான்கு பக்கங்களிலும் தாழ்வான மண்டபங்கள். சதுரம் ஒரு கால்பந்து மைதான அளவுக்குப் பெரிதாக இருந்தது. அதன் மத்தியில் ஒரு மேடை தெரிந்தது.

''அது என்ன மேடை?'' என்று கேட்டேன்

''துரோகிகளைப் பலியிடுவதற்கு'' என்றான் உடன் வந்தவன்.

சதுரத்தின் குறுக்கே நடந்து அதன் மேற்குப் பகுதியில் இருந்த வாயிற் புறத்தை அணுகி உடற்பயிற்சி செய்து கொண்டிருந்த ஒரு நூறு இளைஞர்களைக் கடந்ததும், (எல்லோரும் ஒரு கணம் நிறுத்திவிட்டார்கள்) 'இங்கே காத்திருங்கள்' என்று ஒரு கல் மேடையில் உட்கார வைத்துவிட்டு உள்ளே சென்று விட்டார்கள். அரை மணி நேரம் காத்திருக்க வேண்டி இருந்தது.

''மன்னர் உங்களை அழைக்கிறார்.''

மன்னர், என் உயரம்தான் இருந்தார். அவர் அமர்ந்திருந்த விதம் விநோதமாக இருந்தது. ஏறக்குறையச் சப்பளம் கட்டிக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பக்கத்தில் சற்றுத் தாழ்வாக இருவர் அமர்ந்திருக்கத் தட்டு ஒன்றில் உணவு வைத்திருந்தது. சில பழங்கள் பரிச்சயமாக இருந்தன. தூரத்தில் ஒரு பெண் வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தாள். அவளை ஒரு விரல் சொடுக்கில் யாரோ ஒரு மந்திரி நிறுத்தினான்.

மன்னர் நெற்றி அகலமாக இருந்தது. நாசியின் தீர்க்கம் டாக்டர் செல்வாவை ஞாபகப்படுத்தியது. கைகளிலும் புஜங்களிலும் சில அணிகலன்களும் அணிந்திருந்தார். அவர் வயசுக்குச் சற்றுப் பாரியான உடம்பும் கொஞ்சம் இளம் தொந்தியும் தெரிந்தது.

''உம் பெயர்?''

''ஆத்மா, மகா மன்னரே!''

''தமிழ் புதிதாகக்கற்றிருக்கிறீர் ஒற்றரே!''

''ஒற்றனா? நான் ஒற்றனல்ல. யாத்ரிகன்''

''நீர் யாரைச் சேர்ந்தவர் சொல்லிவிடும். விரோதி நாட்டான் அனுப்பி வைத்தவனா?'' என்று அருகே இருந்தவரைப் பார்த்துக் கொண்டே என்னைக் கேட்டார்.

''அவர்களை எனக்குத் தெரியாது!''

''பொய்! இன்று காலை நமது தலைநகருக்கு அருகே ஒரு கிராமத்தில் நீர் என்ன பேசினீர் ஞாபகம் இருக்கிறதா?'' என்று கோபத்துடன் கேட்டார் மன்னர்.

(அடுத்த இதழில் முடியும்)

---

யானையும் எறும்பும் பாலத்தில் சேர்ந்து நடந்து கடந்துவிட்ட பிறகு எறும்பு : ''என்ன! நாம் சேர்ந்து நடந்த போது பாலம் எப்படி அதிர்ந்து விட்டது பார்த்தீர்களா ?''



# சிலப்பதிகாரம் ஒரு பெரிய கடல்!



வட்டமேஜை

'அவர்கள் காத்திருக்கிறார்கள்' கதையைப் படித்தேன்.

சின்னச் சின்னக் கிராமங்களிலிருந்து பெரிய நகரங்கள் வரையில் அப்படிக் காத்திருக்கும் எவ்வளவோ ஜெயாக்களுக்கு வாழ்வுகொடுக்க எத்தனை அமெரிக்க மாப்பிள்ளைகளின் தம்பிகள் முன்வரப் போகிறார்கள்? காத்திருப்பவர்களின் நல்வாழ்வுப் பிரச்னை என்றுமே ஒரு பெரிய கேள்விக் குறிதான்.

குடந்தை
19–8–76 சுவாமிநாதன்

எந்த ஒரு முன்னேற்றமும் நம் நாட்டின் பாரம்பரியமும் பண்பாடும் ஓங்கும் வகையில் அமைய வேண்டும். பிற நாட்டினரை அப்படியே காப்பியடித்து நம் பண்பாட்டை அழித்துக் கொள்ளல் ஆகாது. அண்மையில் ''இந்தியன் ஏர்லைன்ஸ்'' நிறுவனம் வெளிநாட்டுப் பயணிகளைக் கவரும் பொருட்டு விளம்பர அட்டை ஒன்று வெளியிட்டுள்ளது. அதன் முன் பக்கத்தில் **India: She is all yours for $200** என்று அச்சிடப்பட்டு அதனடியில் பாரதக் குடும்பப் பெண்மணி ஒருவரின் படம் போடப்பட்டுள்ளது. அது வெளியிடப்பட்டுள்ள முறை இந்தியரின் பண்பாட்டுக்கு ஏற்புடையதாயில்லை. இது போன்ற இரு பொருள் தரும் வகையில் அமைந்துள்ள விளம்பரத்தை அரசு நிறுவனம் ஒன்று வெளியிட்டுள்ளது என்பது அருவருக்கத்தக்கது. அதனைத் திரும்பப் பெற்றுக் கொண்டு இனி இதுபோல் வெளியிடாமல் இருக்க வேண்டும் என்று ''இந்தியன் ஏர்லைன்ஸை''க் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை–42
21–8–76 கே. வி. ராஜன்

சரியான ஆளைப் பிடித்து விஞ்ஞானக் கதை எழுதச் சொன்னீர்கள். பாராட்டும் வாழ்த்தும். சிரிப்பு இருக்கிறது; ஆழ்ந்த ஞானம் இருக்கிறது; ரியலிஸம் இருக்கிறது. விஞ்ஞானம் எங்கே கொண்டு போய் விடும் என்ற அறிவுரை இருக்கிறது. அசட்டுத்தனத்துக்கு ஆளாகிவிட்டால் இந்தத் தலைமுறையினருக்கு 'சென்றதினி மீளாது' என்ற எச்சரிக்கையும் இருக்கிறது.

விட்டலபுரம்
22–8–76 வேங்கடாச்சாரி

''அதிர்ஷ்டம் அழைக்கிறது'' திரைப்படத்தின் விமரிசனம் கண்டேன். நியாயமற்றதாகத் தோன்றியது.

''குதிரைப் பந்தயம்'' என்ற கொடிய தொற்றுநோய் எப்படிப்பட்டது, எப்படிப் பரவுகிறது, யார், யார் எந்தச் சூழ்நிலையில் அதற்குப் பலியாகிறார்கள் என்பதை விளக்க இதைவிட ஒரு தரமான படம் வந்ததில்லை.

திருச்சி-20
26–8–76 ஏ. அசோக் ஸ்ரீனிவாசன்

கடந்த சில வாரங்களாகக் கல்கியின் கடைசிப் பக்கத்தில், ம. பொ. சி.யின் 'சிலம்புச் செல்வம்' கண்டு மகிழ்கிறேன். அதைப் படிக்கும்போது, மீசையை அசைத்துக் கொண்டு, கண்களைக் குறும்புத்தனமாகச் சிமிட்டிக்கொண்டு ஆசிரியரே நேரில் பேசுவது போல் பிரமை தட்டுகிறது. கம்ப ராமாயணத்தைப் போலவே சிலப்பதிகாரமும் ஒரு பெரிய கடல். அதன் நயங்கள் இன்னும் பொதுமக்களிடம் பரவலாகப் போய்ச் சேராதது பெருங் குறை. அக்குறையைத் தாங்கள் வெளியிடும் ம. பொ. சி.யின் கட்டுரைகள் ஓரளவு போக்கும்.

திருப்பூர்
25–8–76 சு. கிருஷ்ணன்

29–8–76 தேதிய கல்கி சிரிப்புத் துணுக்கில் தன்னுடைய கார்டை ஆயிரமாவது தடவையாகப் புதுப்பிக்க வேலை தேடித் தரும் அலுவலகத்துக்கு வருகிறார் தாத்தா.

அரசு விதிமுறைப்படி முன்பு மூன்று மாதங்களுக்கு ஒரு முறை பதிவுக் கார்டைப் புதுப்பித்துக்கொள்ள வேண்டும். இது பின்னர் ஆறு மாதங்களுக்கொரு முறை என்றும், பிறகு ஆண்டுக்கு ஒரு முறை என்றும் மாற்றப்பட்டுள்ளது.

மூன்று மாதத்துக்கொரு முறை என்றால் கூட ஆயிரமாவது தடவை புதுப்பிக்கும் போது தாத்தாவின் வயது 250க்கு மேல் இருக்க வேண்டும்.

திருவண்ணாமலை
26–8–76 லலிதா செல்லப்பா

தாங்கள் சென்ற வாரம் காய் கனி விநாயகர் பற்றிப் பிரசுரித்துள்ளதைப் பார்த்துவிட்டுத் திருவல்லிக்கேணி சென்றபோது அங்கு இந்த வருடம் அந்த அலங்காரம் செய்யவில்லை எனக் கூறினார்கள். பெருந்த ஏமாற்றம்.

சென்னை-23
29–8–76 ஆர். கணபதி

இதுபோன்று வேறு சிலரும் ஏமாற்றம் அடைந்ததாக அறிந்து வருந்துகிறோம். — ஆசிரியர்

வார்த்தைகளால் விவரிக்க இயலாத அளவு என் மனத்தில் எண்ணங்களை எழுப்பி, கண்ணீர்க் கடலில் யாவரையும் ஆழ்த்திய அழகாபுரி அழகப்பன் அவர்களுக்கு என்ன சொல்வது என்று எங்களுக்குப் புரியவில்லை. எழுத்துப் பணியில் சிறந்து விளங்க, இறைவன் அருள் புரிவாராக!

கும்பகோணம் ஜே. பண்டரிநாதன்
10–8–76 மற்றும் குடும்பத்தினர்

(சென்ற இதழ் தொடர்ச்சி)

"மகா மன்னரே! நான் இன்று காலை பேசியதற்குக் காரணம் சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்'' என்றேன்.

''சொல்லுங்கள். நம்ப முயற்சி செய்கிறேன்'' என்றார் பல்லவர்.

''நான் உங்கள் நூற்றாண்டைச் சேர்ந்தவன் இல்லை. நான் இருபத்தியோராம் நூற்றாண்டு மனிதன். என் உடைகள் வினோதமாக இருப்பதற்கு அதுதான் காரணம். நான் வைத்திருக்கும் இந்தப் பேனா இந்தச் சிகரெட் லைட்டர் இதெல்லாம் அந்த நூற்றாண்டின் சாதனங்கள்...'' என்றேன்.

மன்னர் பக்கத்தில் இருப்பவரைப் பார்த்துச் சிரித்தார். அவர்கள் எல்லோரும் ஸ்விட்ச் போட்டாற்போல் ஒரே சமயத்தில் சிரித்தார்கள்.

''உண்மை!'' என்றேன்.

''உங்களுக்கு வேறு உண்மை அகப்படவில்லையா?''

''மன்னரே! இவனை என்னிடம் அனுப்பி வைக்க வேண்டுகிறேன். நான்கு கசையடிகளில் உண்மை வெளிவந்து விடும்'' என்றார் சற்றுத் திடகாத்திரராக ஒதுங்கியிருந்த ஒரு முண்டாசு ஆசாமி.

''தீவளர்க்கும் ஆயுதம் வைத்திருக்கிறான்'' என்று எனக்குப் பின்னாலிருந்து ஒரு குரல் கேட்டது.

''இரு'' என்று சைகை காட்டி மன்னர் தம் அருகில் இருந்த ஒரு பெரியவரைக் கூப்பிட்டு அவருடன் சற்றுத்தாழ்வாகப் பேசினார். நான் கூர்ந்து கவனித்தேன். பேசிய மொழி தமிழில்லை. பிராகிருதம் போலவும் சம்ஸ்கிருதம் போலவும் இருந்தது... அந்தப் பெரியவர் தலையாட்டினார். 'தட் தட்' என்று கைதட்டினார். மன்னர் என்னை அப்புறம் கவனிக்கவில்லை. இரண்டு வலுவுள்ள புஜங்கள் என்னைப் பற்றி முனிசிபாலிடி நாயை இழுத்துச் செல்வது போல் இழுத்துச் சென்றன. 'அய்யய்யோ, ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று செய்துவிடப் போகிறார்களே' என்று திருப்பி உரத்த குரலில்....

''மன்னரே! என்னை நம்புங்கள். நான் எதிர்காலத்து ஆசாமி... எனக்கு உங்கள் சரித்திரம் முழுவதும் தெரியும். நீங்கள் இது வரை செய்தவை, இனி செய்ய இருப்பவை எல்லாம் சொல்வேன்'' என்றேன்.

என் வாயைப் பொத்தி, ''நடடா கூத்தனே'' என்று சொல்லிச் செவிட்டில் அறைந்தான் ஒருவன்.

படி இறங்கி இருட்டான ஓர் இடத்துக்கு இழுத்துச் செல்லப்பட்டேன். அங்கே என் மார்புச் சட்டையைக் கழற்றச் சொன்னார்கள். உள்ளே பனியனையும் கழற்றச்சொன்னார்கள். சம்ஸ்கிருதத்தில் மன்னருடன் பேசியவர் தட்டில் பழங்களை நறுக்கிக்கொண்டு வந்து என் முன் வைத்து' அவைகளைச் சாப்பிடத் தொடங்கினார்...

சுவரோரத்தில் தீப்பந்தத்தின் வெளிச்சத்தில் முடிச்சு முடிச்சாக நான்கு சடைகளுடன் அந்தச் சாட்டை தொங்கியது.

என்ன முட்டாள் நான்! டாக்டர் செல்வாவின் கண்ட்ரோல் பெட்டி! ஆம்! அதை இந்த நிகழ்ச்சிகளில் முற்றிலும் மறந்து விட்டேன். இதோ என் பாண்ட் பைக்குள்ளேயே இருக்கிறது என் விடுதலைக்கு மார்க்கம். பையிலிருந்து பெட்டியை எடுத்தேன்.

''பிடுங்கு அதை! ஏதோ ஆயுதம்!'' என்று இரைந்தார் பெரியவர்.

அந்தக் காவலாளி என்னை நெருங்கி ஓடி வர அவசரம் அவசரமாக எண்களை அமைத்து மறுபடியும் கழித்தல் குறியை அமைத்து அதன் டிராவல் பட்டனைத் தட்டினேன்.

ஒரு சிறிய ஆற்றின் கரையில் நின்றேன். ஆற்றில் மணல் பாதியும் ஆழமில்லாத ஜலம் பாதியுமாக இருந்தது. அப்பாடா, கசையடியிலிருந்து தப்பித்தோம்! இது எந்த இடம், எந்த நூற்றாண்டு! பேசாமல் ரிடர்ன் பட்டனை அமுக்கி யிருக்கலாம். அந்த அவசரத்தில் ஏதோ தாறுமாறாக எண்களை அழுத்தி மறுபடியும் காலத்தில் பின்னோக்கிச் சென்று வேறு எங்கோ வந்துவிட்டேன்! இப்போது 'ரிட்டர்ன்' பட்டனை அழுத்தினால் என்ன ஆகும்? திரும்ப என் நூற்றாண்டுக்குச் சென்றுவிட முடியும்! அப்படித்தான் நினைத்து ரிடர்ன் பட்டனை அழுத்தினேன்.

''போச்சுடா!'' அந்தக் கசையடி அறைக்குள் கொண்டு சேர்த்து விட்டது.

''இதோ இருக்கிறான்! மாய வித்தை செய்கிறான்... பிடி!'' என்று அந்த வீரர்கள் கத்திக் கொண்டு என்னை அணுக நான் வெலவெலத்துப் போய் மறுபடியும் 'ரிடர்ன்' பட்டனை அழுத்த... மீண்டும் அந்த ஆற்றங் கரைக்கே வந்து நின்றேன்!

# காலயந்திரம்

இப்போது என்ன செய்வது? திரும்ப எப்படி என் நூற்றுண்டுக்குச் செல்வது? இது எந்தக் காலம் என்று விசாரித்துக் கூட்டல் குறியின் மூலம் தான் திரும்ப நான் என் நூற்றுண்டுக்குச் செல்ல முடியும்! சரியான வெட்டி வம்பில் மாட்டிக் கொண்டு விட்டேன்....

ஆற்றில் சலசலப்புக் கேட்டது. ஒரு பெண் நீர் மொண்டு கொண்டிருந்தாள். நான் அருகே சென்றேன். கலைந்த தலையைக் கோதி விட்டுக் கொண்டேன். ''க்கும்! பெண்ணே, எனக்கு உதவி செய்வாயா?'' என்றேன்.

# விஞ்ஞானக் கதை

## சுஜாதா




திரும்பிப் பார்த்தவள், அப்படியே குடத்தைக் கீழே போட்டு விட்டாள். குடம் குப்புறக் கவிழ்ந்து கொண்டு ஆற்றோடு போயிற்று. அதைப் பொருட்படுத்தாமல் விட்டு விட்டு ஒரே ஓட்டமாக ஓடிச் சோலைக்குள் மறைந்து சோலைக் குள் புகுந்தாள்.

நான் என்னைப் பார்த்துக் கொண்டேன். சட்டை, பனியன் இல்லாமல் வெறும் பாண்ட் போட்டுக் கொண்டு திருதண்டி சந்நியாசி மாதிரி.... நிச்சயம் பயந்திருப்பாள்.

அவள் துணி துவைக்க வந்திருக்கிருள் போலும். கீழே சால்வை போலிருந்த ஒரு துணியை மட்டும் எடுத்து என் உடலை மூடிக் கொண்டேன்.

மெதுவாக ஆற்றுடன் நடந்தேன். ஆற்றைப் பார்த்து எந்தக்



தாத்தா: சற்று முன் உன்னைத் தேடி உன் பாய் பிரெண்ட்ஸ் வந்திருந்தார்கள்.

பாட்டி: எனக்கா ? பாய் பிரெண்ட்ஸா ?

தாத்தா: கமலாபாய், விமலாபாய், ரத்னு பாய், ராதாபாய், லீலாபாய் எல்லோரும் வந்தார்கள். -ரமாராம்

---

காலத்தையும் நிர்ணயிக்க முடியாது. தாமிர பரணியைப் போல் கொஞ்சம் கொஞ்சம் தோன்றியது. நீர் தெளிவாக இருந்தது. மெதுவாகச் சிரித்துக் கொண்டே ஓடியது ஆறு.

நதியோரமாக ஒரு பர்லாங் நடந்ததும் சில சிறுவர்கள் குதித்துத் துள்ளி விளையாடிக் கொண்டிருந்த துறை தெரிந்தது.

கைதட்டினேன். திரும்பிப் பார்த்தார்கள்; அதிர்ச்சியடையவில்லை.

''இந்த ஆற்றின் பெயர் என்ன?'' என்றேன். அவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துச் சிரித்தார்கள். உயரம் அதிகமான ஒருவன் ''பஃறுளியாறு'' என்றான்.

எனக்கு வியப்பாக இருந்தது.

''பஃறுளியாறு?...கடல் கொண்டுவிடவில்லையா இன்னும்?'' என்றேன்.

''ஐ! யாரிவன்!'' என்றான் ஒருவன்.

''இந்த ஊரின் பெயர் என்ன?''

''மருங்குபுரம்'' என்றான், வாயைக் கொப்பளித்துத் துப்பிவிட்டு.

''என்னை உங்களுடன் அழைத்துச் செல்கிறீர்களா?'' என்று அதிக அபிநயத்துடன் கேட்டேன்.

அவர்கள் மாட்டேன் என்று தலை அசைத்தார்கள்.

என் பாண்ட் பையிலிருந்த லைட்டரை எடுத்து ''இதோ பார், ஒரு வித்தை காட்டுகிறேன்'' என்றேன்.

லைட்டரின் மூலம் அந்தச் சிறுவர்கள் எல்லோரும் சிநேகமாகி விட்டார்கள். அவர்கள் தமிழுக்கும் என் தமிழுக்கும் அதிக வித்தியாசம் இருந்தது.

'இம்பர்', 'ஐ', 'யாண்', 'பழிச்சு', 'படர்' என்றெல்லாம் வார்த்தைகள் உபயோகப்படுத்தினார்கள். சில தெரிந்த வார்த்தைகளும் தென்பட்டன. விளையாட்டு, ஆறு, நன்றி, தனிமை, பழுது, தீர்த்தல்.... பொதுவாக அவர்கள் பேசுவது புரிந்தது. அவர்கள் நால் வரும் ஒரு பெரியவரிடத்தில் தமிழ் பயில்கிறார்கள் என்றும் ஓலையில் ஏதோ எழுதுகிறார்கள் என்றும் தெரிந்தது. அந்த இடம் பாண்டிய நாடு என்று தெரிந்தது. தலைநகரத்தின் பெயர் கபாடபுரம் என்பதும் தெரிந்தது. அரசனின் பெயர் திருவிற் பாண்டியன் என்று சொன்னார்கள். துணியை உலர்த்திக் கொண்டே நடந்து சென்றார்கள். இந்த விஷயங்களை அறிந்து கொள்ள ஒரு நூறு முறையாவது லைட்டரை அவர்களுக்குப் பற்றவைத்துக் காட்டியிருப்பேன்.

திருவிற்பாண்டியன் என்றதும் என் உள் ஏதோ ஒரு மணி அடித்தது.

'நிலந்தரு திருவிற்பாண்டியன்!'

பனம் பாரனார் தொல்காப்பியத்துக்குஇயற்றிய பாயிரத்தில் வரும் பெயர்! தொல்காப்பியனார் காலம்.

''அம்பி, இங்கே வா! தொல்காப்பியனார் பற்றி ஏதாவது உனக்குத் தெரியுமா?''

ஒரு குட்டிப் பையன் ஸ்பஷ்டமாக,

'' எழுத்தெனப் படுப
அகர முதல் னகர இறுவாய்
முப்ப ஃதென்ப
சார்ந்து வரல் மரபின்
மூன்றலங்கடையே!''

என்றான் இனிய குரலில். ''அவர் இயற்றும் நூலைத்தானே நாங்கள் நாளும் ஓலையில் எழுதுகிறோம்.''

நான் அதிர்ந்து போய் ''எங்கே உங்கள் ஆசிரியர்! அழைத்துச் செல் என்னை உடனே அங்கே!'' என்றேன்.

''எனக்கு அஃது வேண்டும்'' என்றான் லைட்டரைக் காட்டி.

''உனக்கு மட்டும் என்ன, அவன், இவன் உவன் ஆளுக்கு ஒன்று தருகிறேன் இஃது. அழைத்துச் செல் சிறுவா!'' என்றேன்.

அந்த வீட்டில் நுழைந்ததும் கோஷ்டியாகச் சிறு பிள்ளைகளின் குரல் கேட்டது. நிரம்பவும் குனிந்து உள் நுழைய வேண்டியிருந்தது. பிள்ளைகள் எல்லோரும் தரையில் உட்கார்ந்திருக்க அடர்த்தியான தாடியும் வெண்மையான உடையும் தரித்துத் தீர்க்கமான கண்களுடைய அந்தப் பெரியவர் நடுநாயகமாக உட்கார்ந்திருந்தார். பிள்ளைகள் எல்லோரும் எழுத்தாணிகளால் ஓலைகளில் எழுதிக் கொண்டிருந்தார்கள்...

நான் அறை வாசலில் தயங்கினேன். தொல்காப்பியனாரைச் சந்திக்கப் போகிறேன்! எப்படிப்பட்ட பாக்கியம் எனக்கு! என்ன ஒரு நல்லூழ்!

''குற்றியலிகரத்திற்கு இடனும் பற்றுக் கோடும் எவை'' என்றார்.

''குற்றியலிகரம் நிற்றல் வேண்டும்
யாவென் சினைமிசை உரையசைக் கிளவிக்கு
ஆவயின் வரூஉம் மகரம் ஊர்ந்தே''

என்றான் ஒரு மாணவன்.

''நன்று'' என்றார்.

''குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள் மழலைச் சொற் கேளாதவர்'' என்றேன்.

நிமிர்ந்தார். என்னைப் பார்த்தார்.

''யாரது, மறுபடியும் சொல்லும்'' என்றார்.

''குழலினிது யாழினிது என்பர் தம்மக்கள் மழலைச் சொற் கேளாதவர்.

''குழலினிது யாழினிது என்கிற இடத்தில் குற்றியலிகரம் பயிலுகிறது...''

''இனிய பாடல். நீர் இயற்றியதோ?'' என்றார்.

''இல்லை. திருவள்ளுவர். இனிமேல்தான் இயற்றப் போகிறார்.''

''யார் நீவிர்?''

நான் அவரை விழுந்து சேவித்தேன். ''உங்களைச் சந்தித்ததில் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி தெரியுமா? உங்கள் இலக்கண நூல் இன்னும் பல்லாயிரம் ஆண்டுகளுக்குப் பின்னும் நிலைத்த புகழுடன் இருக்கப் போகிறது...''

அவர் புரியாமல் விழித்தார்.

''பெரியவரே! மாட்சிமைக்கு உரியவரே! நான் யார் என்று விளக்கினால் நீர் என்னைப்

பைத்தியம் என்று சொல்லி நம்ப மாட்டீர். உங்களிடம் சற்று நேரம் உட்கார்ந்து நீங்கள் வடிக்கும் இந்த அபார நூலை நீங்கள் எழுதும் பொழுதே பாடம்கேட்ட மகத்தான பெருமை எனக்குச் சேர நீங்கள் அருள வேண்டும்!''

என் பேச்சின் பொதுவான அர்த்தத்தைப் புரிந்து கொண்டு அவர் என்னை உட்காரச் சொன்னார். தம் மாணவர்களிடம் தொடரச் சொன்னார்.

அவர்கள் எழுதியிருந்த சூத்திரங்களை வாசித்துக் கொண்டே செல்ல ஆசிரியர் அனுபவித்துத் தலையாட்டினார்.

''ஈ, தா, கொடு வெனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய''

என்று படித்ததும் என்னைப் பார்த்து,

''உம் கிளவியில் ஈ, தா, கொடு போன்ற வழக்குகள் உண்டா?'' என்றார்.

''ஈ இல்லை; அழிந்து விட்டது. தா, கொடு இரண்டும் இருக்கின்றன'' என்றேன்.

''தா என்பது யார் கூற்று? கொடு என்பது யார் கூற்று?'' என்றார்.

''சாதாரணமாக எங்கள் வழக்கில் இரண்டுக்கும் அதிக வித்தியாசம் பார்ப்பதில்லை. தா என்பது சமமானவர்கள் உபயோகிப்பது என்று சொல்லலாம். கொடு என்பது சற்று உயர்ந்தவர்கள் தாழ்ந்தவர்களிடம் கேட்பது என்று சொல்லலாம்.''

தொல்காப்பியனார் ''நன்று... நன்று... புலவரே! நீர் சொன்னது அழகானதே! எழுதுங்கள்...'' என்றார்.

''தா என் கிளவி ஒப்போன் கூற்றே
கொடு என் கிளவி உயர்ந்தோர் கூற்றே''

எனக்குப் பெருமை தாங்கவில்லை. தொல்காப்பியரின் அமர நூலில் என் கைங்கரியமும் கொஞ்சம் ஏற்பட்டு விட்டதே!..

என் அருகில் இருந்த பையன் 'இது எது' என்றான். திடுக்கிட்டேன். என் கையிலிருந்த கண்ட்ரோல் பெட்டியை அருகில் வைத்திருந்தேன். அதை எடுத்து அந்தப் பையன் விஷமம் செய்து கொண்டிருந்தான். விரல்களால் பல எண்களை அழுத்திக் கொண்டிருந்தான்.

''பழி! ஏய் ஏய், அதைத் தொடாதே, தொடாதே!'' என்று அவனிடமிருந்து பறித்த போது என் விரல் கூட்டல் குறி பட்டனை அழுத்தியிருக்க வேண்டும்.... டு லேட்!

''டிக்கெட் டிக்கெட் டிக்கிட்ஸ்!'' என்னைச் சுற்றிலும் ஜனங்கள். கம்பியைப் பிடித்துத் தொங்கிக் கொண்டு... எத்தனை கைகள்! பெண்கள், ஆண்கள், கூடைக்காரர்கள்...

பஸ் விரைந்து கொண்டிருந்தது.

''என்ன ஸார், போத்திருக்கீங்க குளுருதா?'' அருகில் இருப்பவர்கள் என்னைப் பார்க்க, நான் அசட்டுச் சிரிப்புச் சிரித்தேன்.

''சில்லறை எடுங்க. எங்கே போறீங்க?''

''சில்லறையா?'' என்றேன்.

''அமா, ஏன் ரூபா நோட்டா இருக்கா?''

''இது எந்த ஊர்?''

இப்போது பலர் என்னைக் கவனித்தார்கள்.

''என்னய்யா, தண்ணி கேஸா? சில்லறையை எடு!''

''அய்யா, என்னிடம் சில்லறை ஏதும் இல்லை. இந்த ஊர்க் காசு என்னிடம் இல்லை.''

''பின்னே ஏன் பஸ்ஸிலே ஏறினே? யோவ் பெரியசாமி, ஹோல்டான் அப்பா! மாமனார் வீட்டு பஸ்ஸிலே ஏறியிருக்காரு. சில்லறை இல்லையாம்.... சரியான கிராக்கி வந்தது பாரு...''

பஸ் நின்றது.

''இறங்கய்யா! உங்களையெல்லாம் மிசாலே புடிச்சு உள்ளே தள்ளணும்... இறங்கய்யான்னா!''

சந்தடி நிறைந்த இடத்தில் உதறப்பட்டு இறங்கினேன். ஹோட்டல் கேரளா என்கிற பெரிய கட்டிடம் எதிரே தெரிந்தது. குட்டி குட்டியாகக் கார்கள் நின்று கொண்டிருந்தன.

ஒரு சிறிய கடை அருகில் இளைஞர்கள் புகை பிடித்துக் கொண்டிருந்தார்கள். கடை வாயிலில் ஒருவர் மாலைப் பத்திரிகை வாங்கிக் கொண்டிருந்தார். அவரிடம் சென்று ''ஒரு நிமிஷம். அந்தப் பத்திரிகையைத் தருகிறீர்களா? ஒரே ஒரு செய்தி பார்க்க வேண்டும்'' என்றேன்.

அவர் வெறுப்புடன் என்னிடம் தந்தார்.

பத்திரிகையின் தலைப்பின் அருகில் தேதியைப் பார்த்தேன். ஞாயிறு, ஆகஸ்ட் 21, 1976!

அப்பாடா! 1976. நான் கிளம்பியது 2024 இன்னும் 48 வருடங்கள் முன் சென்றால் போதும்! தப்பித்தேன் நல்ல வேளை!

உடனே... கண்ட்ரோல் பெட்டியை.... சுருக்கென்றது. அய்யோ!

கண்ட்ரோல் பெட்டி எங்கே? கையில் தானே வைத்திருந்தேன். பஸ்ஸில் போகும் போது பாண்ட் பைக்குள் போட்டுக் கொண்டேனே! பைக்குள் உணர்ந்தேனே...

பஸ்ஸிலிருந்து இறங்கும்போது யாரோ பிக்பாக்கெட் அடித்திருக்கிறார்கள். நான் என்ன செய்வேன்... எப்படித் திரும்பிச் செல்வேன்?

* * *

இதுவரை பொறுமையாக என் கதையைப் படித்துக் கொண்டு வந்ததற்கு நன்றி! இந்தப் பத்திரிகையின் அலுவலகத்துக்கு நடந்து சென்று ஆசிரியரிடம் என் கதையைச் சொல்லி அவர் என் நிலைக்காக இரங்கி என் கதையைப் பிரசுரித்திருக்கிறார். அதற்காக வந்தனம். கதையைப் படித்த என் வாசக நண்பர்களே! உங்களுக்கு ஒரு வேண்டுகோள்... என் கண்ட்ரோல் பெட்டியை எங்காவது பார்த்தீர்களா? அது ஒரு சிகரெட் பெட்டியின் அளவுக்கு இருக்கும்... 0, 1, 2, 3, 4, 5, 6, 7, 8, 9 என்கிற எண்களுக்குப் பட்டன்கள் இருக்கும் ஒரு கூட்டல்குறி, ஒரு கழித்தல் குறி, ரிடர்ன், ட்ராவல் என்கிற பட்டன்களும் இருக்கும். இந்தச் சாதனத்தை நீங்கள் எங்காவது கண்டீர்களானால் அதை உடனே ஆத்மா, மேல் பார்வை இந்தப் பத்திரிகையின் விலாசத்துக்கு அனுப்புமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறேன். பெட்டி உங்கள் யாருக்கும் உதவாது. எனக்கு மட்டும்தான் உதவும். நான் இந்த நூற்றாண்டு ஆசாமி இல்லை; அடுத்த நூற்றாண்டு ஆசாமி. தயவு செய்து அனுப்பிவிடுங்கள்....!

---

''என்னய்யா இரண்டு மாதம் முன்பு வாசக்டமி ஆபரேஷன் என்று லீவு கேட்டாய். இப்போது மறுபடியும் அதே காரணத்துக்கு லீவு கேட்கிறாயே?''
''ஹி....ஹி...! எனக்கு இரண்டு பெஞ்சாதிங்க...'' -நாநா





போட்டிக் கதை : 2

# தப்புக் கூலி

மாட்டுத் தொழுவில் உள்ள முற்றத்தில் மடக்குக் கட்டிலைத் தூக்சிப் போட்டுக் கிழக்கு முகமாய்த் திரும்பி உட்கார்ந்திருந்தார் ரண வீரசாமி.

எப்போதும் அவர் கையோடு கையாக இணைந்தே இருக்கும் தடிக் கம்பு மேலச் சுவரில் சாத்தப்பட்டிருந்தது.

[illegible]க்குத்தான் பௌர்ணமி போலும். பால் நிலவு பட்டப் பகல் போல் அடித்துக் கொண்டிருந்தது. தற்செயலாக மேலே அண்ணாந்து பார்த்தார். இரவு நேரத்தில் இவ்வுலகை இறைவன் பார்ப்பதற்காக அடிக்கப்படும் 'பாட்டரி லைட்'டுப் போல் அவரது கற்பனையில் பட்டது அந்நிலவு.

தொழுவத் தாழ்வாரத்தில், கடந்த வாரம் சாவணியிலிருந்து வாங்கி வந்திருந்த இரண்டு மயிலைக் காளைகள் அழகாகக் கூளங் கடித்துக் கொண்டிருந்தன. வேல்க் கத்தி போன்ற கூர்மையான கொம்புகள். பருத்த திமிழ். செழித்த பிட்டாணி. பார்க்கப் பார்க்கக் கையெடுத்துக் கும்பிட வேண்டும் போல் தோன்றியது அவருக்கு. ராமர், லட்சுமணர் மாதிரி நல்ல ஜோடிப் பொருத்தம்.

தொழுவத்தின் தெற்கோரத்தில் கொஞ்ச நாட்களாகக் கைதியாக்கப்பட்டுக் கிடக்கும் வெள்ளாட்டங்கிடாய், ''மே...'' என்று தொண்டை நெரிந்தாற்போலக் கத்தியது. அந்தப் பக்கம் கவனத்தைத் திருப்பினார் அவர். அந்தக் கிடாயும், அதன் கோரமான குரலும், அவர் இதயத்தைக் கிளறி, மறைந்து கிடந்த ஒரு சம்பவச் சரக்கை வெளிக் கொணர்ந்து காட்டியது.

மூன்று மாதங்களுக்கு முன்பு —

அன்று, தும்பை மலர் போன்ற வேட்டி உடுத்தி, அந்தப் பச்சை நிறத் துண்டையும் தலையிலே பாதர் வெள்ளை மாதிரி வரிந்து கட்டி, இடுப்பிலே சூரிக் கத்தியையும் செருகி, நெற்றி நிறையத் திருநீறு அணிந்து, கனத்த செருப்பையும் காலிலே மாட்டி, தம் நெற்றிக்குச் சரியான அந்தக் கறுப்பு நிறத் தடியையும்

கையிலே பிடித்துப் போர்க் கோலம் பூண்ட ஒரு மன்னன் போல், ராத்திரி நேரம் கிடை காவலுக்காக ஆட்டுக்கிடையில் நின்றுகொண்டிருந்தார் ரணவீரசாமி.




# அ. முத்தானந்தம்

நேரம் நடுச் சாமம் இருக்கும். களவுக்குத் துணைவனுன நல்ல இருட்டு. அந்த இருளைத் துணையாகக் கொண்டு, இரண்டு பேர்கள் கிடைக்குள்ளே நுழைந்து விட்டார்கள். ஆடுகள் கலைந்தன. ஆடுகளோடு ஆடுகளாகப் பதுங்கிக் கொண்ட அவர்கள் குறித்த ஆடுகளாகப் பார்த்துச் சங்கை ஒதுக்கிக் கிடைக்கு வெளியே பத்தினுர்கள். அந்நேரம் பார்த்து நாய் குரைத்தது. உஷாராகிக் கொண்ட ரணவீரசாமி, கையிலுள்ள, 'பாட்டரி லேட்'டை அடித்துப் பார்த்து, ''யாரடா, அங்கே?'' என்று கர்ஜித்தார். அவ்வளவுதான், உயிரைக் கையில் ஏந்திக் கொண்டு ஓட்டம் பிடித்தார்கள் வந்தவர்கள். இருந்தாலும் ரணவீரசாமியின் வீரம் அவர்களைச் சும்மா விடவில்லை. துரத்திப் பிடித்து, அடித்து நொறுக்கி, ''நானும் கம்பு பிடித்து இவ்வளவு காலம் ஆகுது... என் காவலுக்குள்ளே ஓர் ஈ, எறும்புகூட நுழைஞ்சது கிடையாது... உங்களுக்கு ஈரலிலே பித்தா ?... எலும்பிலே பித்தா ?'' என்று கேட்டுக் கொண்டே புறங் கையைச் சேர்த்து இருவரையும், பிணைத்துக் கட்டி ஊரை நோக்கி இழுத்துக் கொண்டு வந்தார்.

'நாலு பேருக்கு முன்னுல் போய் நின்ருல் என்னென்ன வெகுமதிகள் கிடைக்குமோ?' என்று அவர்களுக்குப் பயம். எனவே, அவர்கள் ரணவீரசாமியின் காலிலே விழுந்து, ''ஐயா, எங்களை இத்துடன் விட்டுடுங்க.... மன்னிச்சுடுங்க. நாங்க பிறந்தான் பிறப்புக்கு இந்தப் பக்கம் தலை வைச்சுக்கூடப் படுக்க மாட்டோம்ய்யா....'' என்று மன்ருடிக் கேட்டார்கள்.

கோபத்தின் மறு நுனிதானே குணம்? அவர்களுக்கு அந்த இடத்திலேயே விடுதலையும் கிடைத்தது.

அவர்கள் கடத்திச் செல்லவிருந்த ஆடுகளில் ஒன்றுதான் அந்தக் கிடாய். வருகிற ஆவணி மாதம் 'அம்மன் கொடைக்'காக வீட்டிலே கட்டிப் போட்டுச் செல்லப் பிள்ளையாக வளர்க்கிருர்கள் அதை.

ரணவீரசாமி மாதத்தில் ஓரிரு நாட்கள் மட்டுமே இரவில் வீட்டில் தங்குவார். மற்ற நாட்களிலெல்லாம் அவர் ராஜாங்கம் நடப்பது கிடையிலேதான்.

ரணவீரசாமியின் தொழுவவேலை, விவசாய வேலைகள் அனைத்தையும் இழுத்துப் போட்டு ஒரு சேரப் பார்ப்பது அவர் மைத்துனர்—மஞ்சையா.

மஞ்சையா, நல்ல நாடக ரசிகர். அன்றைக்குத் தேதிக்குப் பக்கத்து ஊரில் நடக்கும் 'அரிச்சந்திர மயான காண்டம்' நாடகம் பார்க்க அவர் போக வேண்டியிருந்ததாலேயே ரணவீரசாமி மாட்டுத் தொழுவத்திலே படுக்க வேண்டியதாயிற்று.

தொழுவத்துக்குள் வந்து ஞாபகமாக உள்ளே கூடித் தாழ்ப்பாள் போட்டுவிட்டு, இரண்டு தளுக்குக் கூளம் அள்ளி மாட்டுக் காடியில் போட்டார்.

கட்டிலில் வந்து சாயும்போது வெளியே நாய் ஒன்று குரைக்கும் சத்தம் கேட்டது. ஆனல் அதை அவர் லட்சியம் செய்யவில்லை.

தொழுவ வேலை பார்ப்பதற்காக நாடகத்தின் கடைசிப் பகுதியைச்சரியாகக்கூடப் பார்க்காமல், வந்துவிட்டார் மஞ்சையா. தலைக் கோழி கூவிச் சிறிது நேரம் இருக்கும் அப்போது. தொழுவக் கதவு இலேசாகத் திறந்திருந்தது. உள்ளே போனுர். முதற் பார்வையே கட்டுத் துறையில்தான் விழுந்தது. மாடுகளை அங்கு காணவில்லை. இதயத்தில் வந்து இரும்பு கொண்டு மோதியது போல் மனம் பகீரென்றது.

ரணவீரசாமி குறட்டை போட்டுத் தூங்கிக் கொண்டிருந்தார்.

'ஒரு வேளை மாடுகளை வெளியே கொண்டு கட்டிவிட்டு வந்து படுத்திருப்பாரோ....?' என்று எண்ணிய மஞ்சையா, வழக்கமாகக் கட்டும் இடங்களிலெல்லாம் போய்ப் பார்த்தார். மாட்டுத் தடமே அங்கு இல்லை.

இன்னும் ரணவீரசாமி நித்திராதேவியின் அரவணைப்பினின்றும் விடுபடவில்லை.

நிலைகொள்ள முடியாமல் தவித்த மஞ்சையா, ரணவீரசாமியின் தலைமாட்டில் நின்று, ''மச்சாவி...! மச்சாவி...!'' என்று உரக்கக் கூவி எழுப்பி, விசயத்தைச் சொல்லிக் கேட்டார்.

அவருக்கும் அது ஆச்சரியமாக இருக்க, ''நான் கதவை நல்லாப் பூட்டிவிட்டுத்தானே வந்து படுத்தேன்...? என் தலைமாட்டுலே கட்டிக் கிடந்த மாடுகளைக் களவாடிட்டுப் போகிறதுக்கு எவனுக்கு வயசு காணும் ?...!' ஆத்திரத்தோடு கொக்களித்தார் ரணவீர சாமி.

நேரம் நன்ருக விடியவில்லை. இயக்கிவிட்ட யந்திரம் போல் கிராமம் இயங்கிக் கொண் டிருந்தது. — சாணி, சகதிகளை அள்ளிச் குப்பைக் குழியிலே கொண்டு போடுபவர்கள்; ஆடு, மாடுகளுக்குத் தண்ணீர் எடுப்பவர்கள், படப்புக்குச் சென்று கூளம் முறித்து வருப வர்கள்; ஊர்ப் பொது ஆட்டுரலில் வரிசை யாக நின்று பருத்தி விதை ஆட்டுபவர்கள்— என்று இப்படி.

எனவே ராத்திரி நடந்த சங்கதி, தலை கீழாகப் பிடித்த மெல்லிய காகிதத்தின் அடிப் பகுதியில் பற்றிக் கொண்ட தீப்போல் வெகு சீக்கிரத்தில் ஊரெங்கும் பரவியது.

தொழுவத்துக்கு முன்னல் பெரிய கூட்டம். பலரும் பலவிதமாக அது பற்றிப் பிரஸ்தாபித் தார்கள்.

''உள்ளே பூட்டிக் கிடந்த கதவைத் திறந்து மாடுகளை எப்படியய்யா கொண்டு போக முடியும்? திருடிக்கிட்டுப் போனவங்க பெரிய எம்டங்கதான் !'' — ''என்னய்யா, ரணவீர சாமி வீட்டுலே மாடுக களவு போகுதுன்னு... எங்க மாடுகளெல்லாம் எம்மாத்திரம் ? ராத்திரிப் பகலா படப்புலேதான் கெடக்குது. எங்க சின்னையா வீட்டு மாடுக, ஆடையும் கோடையும் பிள்ளையார் கோயிலுக்கு முன் னுலேதான் கெடக்குது.''

''அட; நீங்க ஒண்ணு. இது வேணும்ன்னு செய்த வேலைய்யா !''

'' சரி, எப்படியும் இருந்துட்டுப் போகுது. இது ரணவீரசாமிக்கு மட்டும் அல்ல, — ஊருக்கே ஏற்பட்ட அவமானமாகத்தான் கருதணும். என்ன பாடு பட்டாச்சும் மாட் டைக் கொண்டுகிட்டு வந்திடணும்; இல் லாட்டா பெரிய மானக் கேடு.'' —

ஒவ்வொருவருடைய சொற்களும் வெவ் வேறு ஆயுதங்களாக நின்று, ரணவீரசாமியின் மனத்தைக் குத்திக் கிழித்துக் குதறின.

சூரியனின் கோபம் கொஞ்சம் கொஞ்ச மாக முறுக்கேறிக் கொண்டு வர, நேரம் இளமதியானது. ஊர்க் கூட்டத்தின் முடிவுப் படி, ரணவீரசாமி, மஞ்சையா, தடம் பார்க் கும் தலையாரி இவர்களோடு வீட்டுக்கொருவ ராக ஊரோடு கம்பு, தடிகளுடன் தடம் பார்த்துச் சென்ருர்கள். நர வேட்டைக்குப் போகிறவர்கள் போல் இருந்தது, அவர்களின் போக்கு.

முதலில் ராமேசுவரம் இருக்கும் திசையை நோக்கி, அந்த ராமநாதனை மனத்தில் நினைத் துக் கும்பிடு போட்டுக் கொண்டே தொழிலைத் தொடங்கினர் தலையாரி.

காளைகளை ஒட்டிக் கொண்டு, கரிசல் காட் டுப் பெரும் பாதை வழியாகப் போகாமல், ஊடு காட்டு வழியாக விரைந்திருக்கிருர்கள், திருடர்கள். வந்தவர்கள் இருவர் போலும். தடங்கள் அப்படித்தான் காட்டின.

மலை வாயில் பொழுது விழுவதற்குள் தடங்கள் சங்கமமாகியிருந்த அந்தக் கிராமத் துக்குள் நுழைந்துவிட்டார்கள் அவர்கள்.

அது ஓர் அழகான கிராமம். மேற்புறம் பெரிய கண்மாய். கண்மாய்க் கரையெங்கும் குளுகுளு வேப்ப மரங்கள். நீர்த் துறையை அடுத்துப் பெரிய ஆலவிருட்சம். தவமுனி களின் சடாமுடிகள் போல் ஆல விழுதுகள்....

ஊருக்குள் சென்றதும் முதன் முதலில் யாரைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று தலையாரி எண்ணிக் கொண்டு வந்தாரோ, அந்தப் புள்ளியே, கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தது மாதிரி முன்னடியில் உள்ள கிராமப் பொது மடத்தில் உட்கார்ந்திருந் தது. அவர்தான் 'துப்புக் கூலிச் சுந்தர லிங்கம்'. தலை, தாடி, மீசை எல்லாமே செம் மண்ணில் துவட்டிய பஞ்சுப் பொறி மாதிரி இருந்தன. பார்ப்போருக்கு ஆண் சிங்கம் போலத் தோன்றும் அவரே ஊருக்குப் பெரிய மனிதர் — நியாயஸ்தர். மன்னன் சொல் லுக்கு மறு சொல் கிடையாது அங்கே.

அவரோடு இருந்த இளவட்டப் பையன் மடத்து விளக்கை எடுத்துத் துடைத்துக் கொண்டே அவரோடு உரையாடிக் கொண் டிருந்தான்.

அந்த இளவட்டப் பையனைக் கண்டதுமே ரணவீரசாமிக்குப் பழைய நிகழ்ச்சி பளிச் சென்று ஞாபகத்துக்கு வந்தது.

பக்கத்தில் நின்ற சடை நாயைத் தடவி விட்டுக் கொண்டே சுந்தரலிங்கம், ''என்ன.... வழி தப்புனப்போல வந் திருக்கேயே ?'' என்று இலேசாகப் பேச்சை ஆரம்பித்தார்.

'வழி தப்பாமத்தான் வந்திருக்கிருேம்' என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்ட தலையாரி, நிதானமாக, ''நம்ம ரணவீரசாமி மாடுக ராத்திரி காணமப் போயிடுச்சு.... தடம் பார்த்து வந்தோம். தடம்... நம்ம ஊருக்குள்ளேதான் கொண்டாந்து விடுது'' என்ருர்.

''அட ! ரணவீரசாமி மாடுக எப்படியய்யா காணமப் போகும்? அவர்தான் பெரிய காவல் புலியாச்சே!'' — சற்று இடக்கான தொனியிலேயே கேட்டார் சுந்தரலிங்கம். எதையோ பேச வேண்டும் என்று வாயெடுத்த ரணவீரசாமி, எதற்கோ அதை அடக்கிக் கொண்டார். ஆனல் மனம் மட்டும் உலைக் களமாகி ரத்தம் அங்கே கொதித்துக் கொண் டிருந்தது.

மாடுகளைத் தேடி வந்தவர்களிடம், மாடு களின் நிறம், கொம்புக்கட்டு, உயரம் முதலிய அடையாளங்களைச் சம்பிரதாயமாகக் கேட் டறிந்தார் சுந்தரலிங்கம்.

மடத்துக்கு விளக்கு வைத்தாயிற்று.

அந்த இளவட்டப் பையனைப் பார்த்து, ''அட வேல்முருகா ! முதல்லே விருந்தாளிங்

---



## பெரிய பட்ஜெட்!

சத்யஜித்ரே தம்முடைய சுயசரிதை எழுதியிருக்கிருர். விலை 60 ரூபாய். இதைப் பற்றி 'ஆனந்தபஜார்' பத்திரிகையில் வந்த விமரிசனம்: ''குறைந்த பட்ஜெட் படங்களையே தயாரிக்கும் சத்யஜித்ரேயின் பெரிய பட்ஜெட் தயாரிப்பு''

— பாபு

ஒருவர்: என் பிள்ளைக்கு எத்தனை தடவை ஒன்று இரண்டு சொல்லிக் கொடுத்தாலும் பத்துக்கு மேலே சொல்ல மாட்டேனென்கிறானே!

மற்றவர்: கவலைப்படாதீர்கள். எதிர்காலத்தில் அவன் சிறந்த மல்யுத்தப் போட்டி நடுவராக வருவான்!

- த. நாராயணன்



களைக் கூட்டிக்கிட்டுப் போயி, ஆளுக்கொரு வீட்டுல சாப்பிடச் சொல்லிக் கூட்டிக்கிட்டு வா'' என்றார் சுந்தரலிங்கம்.

அவன் அவர்களை அழைத்துச் சென்றான்.

ரணவீரசாமி மட்டும், 'தமக்குச் சாப்பாடே தேவையில்லை' என்று பிடிவாதமாகச் சொன்னார். ஆனாலும் அவர்கள் வற்புறுத்தினார்கள். கடைசி வரையில் அவர் சாப்பிடவே இல்லை, கைகால்களைக் கழுவிக் கொண்டதோடு சரி.

ஊர் மடத்துக்கு முன்னால் உள்ள முற்றத்தில், நல்ல நிலவொளியில் வட்டமாக எல்லாரும் வந்து உட்கார்ந்திருந்தார்கள். கிராமத்தில் உள்ள 'சிறிசு, பெரிசு'கள்கூட வந்திருந்தன. துப்புக்கூலிச் சுந்தரலிங்கம் நடுநாயகமாக அமர்ந்தார்.

வாயிலே போட்ட வெற்றிலையைக் குதப்பிக் கொண்டே, ''ஐயா, தலையாரிய்யா ! நீங்க தேடி வந்த மாடுக வேறெங்கும் போகலே. இங்கேதான் கெடக்குது. கவலைப்படாதீங்க....'' என்றார்.

'' உங்க தயவு என்னைக்கும் வேணும்ய்யா'' என்று தலையாரி குழைந்தார். ''நீங்கதான் மனசு வச்சு....''

''மனசு வைக்காம என்ன...? மாமூலா நடந்துக்கிட்டு இருக்கிறதுல ஏதாவது செய்துட்டு மாடுகளப் பத்திக்கிட்டுப் போங்க !''

''மாமூல்ன்னா...'' தலையாரி மெதுவாக இழுத்தார்.

''பிறகு என்ன? *துப்புக் கூலி குடுக்க வேண்டாமா ?'' உரத்து விழுந்தது குரல்.

''உங்களுக்குத் துப்புக்கூலி குடுத்துட்டுப் பொட்டச்சி மாதிரி எம்மாடுகளப் பத்திக்கிட்டுப் போவேன்னு நினைச்சீங்களா, பெரியவரே !... இதை யெல்லாம் ஏலமாட்டாத பயகிட்ட வைச்சுக்குங்க!'' எழுந்து நின்று மீசை துடிக்கச் சொன்னார் ரணவீரசாமி.

''அந்தப் ப(ரு)ப்பு மட்டும் இங்கே வேகாது தம்பி ! எங்க எல்லைக்குள்ள வந்த எந்தப் பொருளுக்கும் துப்புக்கூலி வாங்காம நாங்க விட்டது கிடையாது. நீங்க சரித்திரத்தையே மாத்தப் பார்க்கிறீங்களா?''

''என் மாடுக இந்த ஊருக்குள்ள எவன் வீட்டுல கிடந்தாலும் சரி, உள்ளே நுழைஞ்சு அவுக்கத்தான் போறேன். வர்றவன் வரட்டும் !'' – தடியைத் தூக்கி வீராவேசத்துடன் கிளம்பினார் ரணவீரசாமி.

அதற்குள் கூட்டத்திலிருந்த சிலர், ''ஐயா, வீரசிங்கமே ! உங்ககிட்ட மீசையும் கிருதாவும் அடர்த்தியா யிருக்குங்கிறதுக்காக, நீங்க போய் மாட்ட அவுக்கும்போது, இந்த ஊர்க்காரங்க எல்லாம் சேலையைக் கட்டிக்கிட்டு உட்கார்ந்திருப்பாங்கன்னு நெனப்பா ?'' – என்று சினந்து கேட்டார்கள்.

தலையாரியும் மஞ்சையாவும் ரணவீரசாமியின் வேகத்தைக் கட்டுப்படுத்திக் கீழே இருத்தி வைத்தார்கள்.

பக்கத்திலிருந்த மஞ்சையாவின் தொடையில் தட்டி, கூட்டத்தினின்றும் வெளியே அழைத்தார் தலையாரி. மீண்டும் சத்தமின்மை. அரை நாழிகை நேரம் கழித்துத் திரும்பவும் வந்து உட்கார்ந்தார்கள்.

நிலவு உச்சிக்கு வந்திருந்தது.

'' சரி. துப்புக் கூலி எவ்வளவுதான் கேட்குறீங்க ?'' தலையாரி கேட்டார்.

திடுக்கிட்டார் ரணவீரசாமி.

'' ஐந்நூறு ரூபாய் குடுத்துட்டு மாட்டைப் பத்திக்கிட்டு போங்க.'' – சுந்தரலிங்கம் சொன்னார்.

''என்னய்யா, மாட்டு விலையிலே நாலுலே ஒரு பங்கா?'' வாயைப் பிளந்தார் மஞ்சையா.

''ரொம்பவும் ஆச்சரியப்படுறீங்களே... ! இங்கே எப்படி நடந்துகிட்டு இருக்குதுன்னு, உங்க தலையாரிகிட்ட கேட்டுப் பாருங்க.... *'முள்ளடிக் கூலி' கட்டும்படியாக இருக்க வேண்டாமா? மாட்டை அவுத்து வெளியே பத்திக்கிட்டு வரும்போது உங்க கையிலே இவங்க அகப்பட்டுக்கிட்டாங்கன்னா, இவங்க பெண்டாட்டிமார் தாலி இங்கேயல்லவா, அறுந்து விழுந்திருக்கும் ! உங்ககிட்ட வாங்குகிற ஐந்நூறு ரூபாய்க் காசு என்னய்யா பெரிசு ?''

''குறைக்கிறதுக்கு வழி இருந்தா......'' இது தலையாரியின் கெஞ்சலான இழுவை.

''சரி. நானூத்தி ஐம்பது குடுத்துட்டு மாட்டைக் கையிலே பிடிங்க.... நீங்க இன்னும் ரெண்டு நாளைக்குத் தேடி வராம இருந்தீங்கன்னா, ** 'வளர்ப்புக்கூலி'யின்னு ஒரு நாளைக்குப் பத்து ரூபா ரேட்டுப் போட்டு வசூல் பண்ணிப் போடுவோம்.''

'துப்புக்கூலி' கொடுக்காமல் மாட்டைக் கண்ணிலேகூடக் காட்டமாட்டார்கள் என்பது தலையாரி அனுபவத்தில் கண்ட உண்மை. எனவே, கொஞ்ச நேரத்துக்கு முன்பு மஞ்சையாவிடமிருந்து வாங்கிய இரண்டு மோதிரங்களையும் துப்புக்கூலிச் சுந்தரலிங்கத்திடம் கொடுத்துக் கொண்டே சொன்னார் : ''நாங்க இப்போ ரொக்கமா ரூபா ஒண்ணும் கொண்டுக்கிட்டு வரல்லே. நானூத்தி ஐம்பது

* துப்புக் கூலி: திருட்டுப்போன பொருட்கள் எங்கே இருக்கின்றன என்று அறிந்து வந்து துப்புச் சொல்வதற்காகக் கேட்கப்படும் கூலி. இதில் கிடைக்கும் தொகையைத் துப்புச் சொன்னவரும், திருடிக் கொண்டு போனவர்களும் பங்கு போட்டுக் கொள்வர். துப்புக் கூலியின் உதவியின்றித் திருட்டுப் போன பொருட்களை மீட்டு வருவது என்பது, மயிரைக் கட்டி மலையை இழுப்பது போலாகும்.

* முள்ளடிக் கூலி: மாட்டைப் பத்திக் கொண்டு வரும்போது காலில் தைத்த முட்களுக்காக வாங்கப்படும் கூலி.

** வளர்ப்புக் கூலி: களவு மாடுகளைத் தேடி வரும் வரை, வளர்ப்பதற்காக வாங்கப்படும் கூலி.



கணவன்: வரும் வழியில் ஒரு ஹோட்டலில் சாப்பிட்டோமே அந்த ஹோட்டலின் பெயர் என்ன?

மனைவி: சற்றுப் பொறுங்கள். பையிலிருக்கும் டம்ளரைப் பார்த்துச் சொல்கிறேன்.

- த. நாராயணன்

---

ரூபாய்க்கு ஈடாக இதை வச்சுக்குங்க; நாளை வந்து ரூபாயைக் குடுத்திட்டு, மோதிரத்தைத் திருப்பிக்கிட்டுப் போறோம். இப்போ மாட்ட அவுத்துக் கையிலே கொடுங்க.''

தலையை அசைத்துக் கொண்டே அவற்றைப் பெற்றுக் கொண்டார் சுந்தரலிங்கம்.

ரணவீரசாமிக்கு அதற்கு மேலும் அங்கு பொறுமையாக இருக்க முடியவில்லை. தமக்கு முன்னே கிடந்த தடிக் கம்பை எடுத்துக் கொண்டு தெற்கு பார்த்து நடையைக் கட்டினார்.

சில நிமிஷங்களுக்குப் பின் ''அதோ வந்துட்டார்!'' என்று கூட்டத்திலிருந்து சில வெடிகள் வெடித்துச் சிதறின. எல்லாரும் பின்னுக்குத் திரும்பிப் பார்த்தார்கள். உறவினர் ஒருவரின் துஷ்டிக்கு வெளியூர் போய்விட்டு வருவதாக அவரைப் பற்றிக் கூட்டத்தில் பேசிக் கொண்டார்கள்.

கனத்த கட்டையான கறுத்த உருவம். கருவேல மரம் போன்ற கால்கள், கைகள். தோசைக் கல் மாதிரி ஊடே வழுக்கை விழுந்த தலை. அனல் கக்கும் கண்கள். கோழி அரிவாள் போன்ற நீண்ட மீசை. முரட்டுச் சுபாவத்தைக் காட்டும் நடை.

கூட்டத்தினுள் வந்த அவர், சுந்தரலிங்கத்தின் இருப்புக்குச் சமமாக அவருக்குப் பக்கத்திலே போய் உட்கார்ந்தார். நடந்த விசயத்தை ஆதியோடந்தமாக அவரிடம் ஒப்பித்தார் சுந்தரலிங்கம்.

இரண்டு கைகளையும் இடுப்பிலே வைத்து, தலையை ஒரு பக்கம் இலேசாகச் சாய்த்து ஒரு நிமிடம் யோசனையில் இருந்த அந்த முரட்டு மனிதர், திடீரென எழுந்து நின்று தமக்கு எதிரேயிருந்த அந்த இளவட்டப் பையனைப் பார்த்து, ''டேய் ! மாடுகள அவுத்திட்டு வந்து, அவுக கையிலே கொடு'' என்று கம்பீரமாக ஆணையிட்டார்.

கூட்டம் பிரமித்துப் போனது.

சுந்தரலிங்கத்திடமிருந்து அந்த மோதிரங்களைக் கேட்டு வாங்கிக் கொண்ட அந்த முதிய மனிதர், அவற்றைத் தலையாரியிடமே கொடுத்துக் கொண்டு, '' இதை நீங்களே வைச்சுக்குங்க.... மாடுக இப்போ வரும் ; பத்திக்கிட்டுப் போங்க !'' என்றார்.

''....!.....!.....!'' தலையாரி வியப்பால் கண்களை விரியத் திறந்தார்.

''இதை நானே செய்யணும்னுதான் இருந்தேன் தம்பி. ஆனாலும் உடையதாரி, நீ இல்லாமல் எப்படிச் செய்யறதுன்னுதான் தயங்கினேன். நீயும் நல்ல சமயத்திலே வந்துட்டே !'' என்றார் சுந்தரலிங்கம்.

'' அதுக்கென்ன மாமா; எல்லாம் நீங்களே தானே !'' என்று சொல்லிக் கொண்டே அவர், தலையாரியையும் அவரைச் சார்ந்த ஏனையோரையும் பரவலாகப் பார்த்துக் கொண்டே, ''பொதுவாகப் பாருங்க..... நம்ம தமிழ் நாட்டிலேயிருந்து அழிஞ்சுபோன எத்தனையோ கலைகள் மாதிரி, இதையும் நாங்க முக்காலேணிம்மாகாணி முக்கால்வீசம் மறந்திட்டோம். இருந்தாலும் உங்க பக்கத்திலே, ரணவீரசாமியின் காவலிலே ஒரு இம்மி கூடக் களவு போகாதுன்னு ஒரு முத்திரை இருந்தது பாருங்க, அதை எப்படியும் உடைச்சே ஆகணும்னு எங்கள்ள பல பேருக்கு ஆசை. அந்த முயற்சியிலே பல தடவை தோல்வியுற்றுத் திரும்பியதும் வாஸ்தவம். கடைசியாக ரணவீரசாமி படுத்திருந்த அவருடைய தொழுவிலேயே கைவரிசையைக் காட்டி அவரை ஜெயிச்சுட்டோம். எங்க சபதமும் முடிஞ்சது..... ரணவீரசாமியும் ஒரு வீரர் பாருங்க, அதுக்கு மதிப்பளிச்சுத்தான், வாங்கின துப்புக் கூலியையும் திரும்பக் கொடுக்கிறோம் '' என்றார்.

''..................!''

'' இனி மேல் நமக்குள்ளே எந்தவிதக் குரோதத்துக்கும் இடமில்லே. எல்லா விசயத்தையும் ரணவீரசாமியிட்ட போய்ச் சொல்லுங்க !'' — வேண்டிக் கொண்டார் சுந்தரலிங்கம்.

காளைகள் கைமாறின.

அவர்கள் ஊரைவிட்டு வெளியேறும்போது நிலவு மேற்கே சாய்ந்திருந்தது. சந்திரனின் பிரகாசமான ஒளியை ஒரு சிறிய கருமேகக் கூட்டம் வந்து சூழ்ந்து மறைத்ததால் இலேசாக இருள் படர்ந்தது.

**பொ**ழுது புறப்படுகிற நேரத்துக்கு மாடுகள் தொழுவத்துக்கு வந்து சேர்ந்தன.

காடிப் பலகைக்குக் கீழே உள்ள முளையில் காளைகளைக் கட்டிவிட்டுக் கூளம் அள்ளிப் போடுவதற்காகப் பரணுக்குச் சென்றார் மஞ்சையா.

பரண் தொழுவின் வடக்குக் கோடியில் ஒரு முடங்கிப் பக்கம் இருந்தது.

முடங்கிப் பக்கம் காலை வைத்தாரோ இல்லையோ, ஏறிட்டுப் பார்த்தவர் திடுக்கிட்டுப் போனார். மேலே உள்ள விட்டத்தில் கயிற்றைப் போட்டுத் தொங்கிக் கொண்டிருந்தார் ரணவீரசாமி.

ஓடிச் சென்று, தொங்குகிற அவரது கால்களைப் பிடித்து அணைத்துக் கொண்டு, ''மச்சான்..... நான் இப்படி நினைக்கலையே! ரெண்டு நாளைக்கு முன்னலே நான் கண்ட கனா பலிச்சுட்டுதே, மச்சான்....! ஒரு வேட்டை நாயைக் கழுத்திலே சுருக்குப் போட்டு மொட்டை வண்டியிலே கட்டி அஞ்சாறு பேர்கள் அடிச்சுக் கொன்னுகிட்டு இருந்தாங்களே !. இப்படி வரும்னு நினைக்கலையே மச்சான் ! நினைக்கலையே.... !'' என்று கதறிக் கதறி அழுதார் மஞ்சையா.

எந்த நேரமும் ரணவீரசாமியோடு அவராகவே இருந்த அந்தக் கறுப்பு நிறத் தடிக் கம்பு இரண்டாக முறிக்கப்பட்டு அவரது காலடியிலே கிடந்தது.

அதிகப்
பரப்புக்குப்
பூச,

அதிக
சேமிப்புக்கு,

கறைகளை
மறைக்க,

# ட்ராக்டர்—இந்தியாவின் அதிகமாக விற்பனையாகும் ஸிந்தெடிக் வாஷபிள் டிஸ்டெம்பர்

- ஒவ்வொரு முறையும் தரப் பரிசோதனை—ஒவ்வொரு முறையும் அதன் தரம் 50 முறைகள் ஆராய்ச்சிக கூடத்தில் கடுமையாகப் பரிசோதிக்கப்படுகிறது.
- துடைத்தால் போதும் தூய்மையாகிவிடும்..
- சீரான நீடித்த ஃபினிஷ்—நிறம் குன்றாமல் நீடித்து நிற்கும்.
- வண்ணங்களில் எண்ணிலா ரகங்கள்.




கண்கூடான நன்மைகளைப் பெற, ட்ராக்டர் வண்ணம் பிரயோகிக்குமுன் டெகோப்ரைம் சிமெண்ட் ப்ரைமரை உபயோகியுங்கள்.


ஏஷியன் பெயிண்ட்ஸ்

CMAP-3-183 tam

# அப்பாவுக்குக் கோபம் வந்தால்!

அன்னம்

**யா**ராவது ஜோசியரைக் கேட்டிருந்தால் லலிதாவுக்குப் போதாத வேளை என்று சொல்லியிருப்பார்களோ என்னவோ? அன்று அவளுக்கு அடுக்கடுக்காரகச் சோதனைகள்!

லலிதாவின் வீட்டுக்காரர் சிவராமன் தங்கக் கம்பி என்றால் தங்கக் கம்பிதான். ஆனால் கோபம் வந்தால் பிரளயம்தான்! எரிமலை வெடித்தாற்போலத்தான்! என்ன பேசுவார், என்ன செய்வார் என்று சொல்ல முடியாது. அப்படி நடந்து கொண்டதற்காக அவர் பின்னால் பச்சாத்தாபப்படுவார்.

லலிதாவுக்கும் குழந்தைகளுக்கும் அவரைக் கண்டால் நடுக்கம். எதற்குக் கோபம் வரும் என்று தெரிந்தால் எச்சரிக்கையாக இருக்கலாம். பெரிய பெரிய தவறுகளை யெல்லாம் 'போகட்டும் விடு' என்று மன்னித்துவிடுவார். இருபது காசு பெறாத விஷயத்துக்காக ஊரைக் கூட்டிக் கத்தி ரகளை செய்வார்.

புத்தம் புதிய பட்டுப் பாவாடையை வாங்கின அன்றே ஆணியில் மாட்டிக் கிழித்துக் கொண்டு வந்தாள் பெண் விஜயா. ''கொஞ்சம் பார்த்து உட்காரக் கூடாதா?'' என்று கேட்டதோடு சரி. அவருக்குத் தெரியாமல் ஐந்து பைசா எடுத்துக் கொண்டு போய் ஒரு கடலை மிட்டாய் வாங்கித் தின்று விட்டான் சின்னப் பையன் — பெல்ட்டை எடுத்து விளாசி விட்டார்.

அப்போதுதான் ஒரு கிலோ வெண்ணெயைக் காய்ச்சிக் கீழேஇறக்கி வைத்திருந்தாள் லலிதா. பந்து விளையாடிக் கொண்டு ஓடி வந்த சின்னப் பயல் அப்படியே கீழே சாய்த்து விட்டான். காலில் தெளித்துக் கொப்பளித்து இருக்கப் போகிறதே என்று பையனைக் கூப்பிட்டுப் பார்த்தாரே தவிர, நெய் போயிற்றே என்று லலிதா பதறியதைப் பொருட்படுத்தவில்லை. இப்படிப்பட்ட அலாதியான சுபாவம் படைத்தவர் சிவராமன்.

மறுநாள் சிவராமன் ''காம்பி''லிருந்து வருகிறார். எப்பொழுதுமே அவர் 'காம்ப்'பிலிருந்து திரும்பும்போது கொஞ்சம் எச்சரிக்கையாகத்தான் இருக்க வேண்டும். இந்தக் காலத்தில் எந்த ஆபீஸில்தான் தம் கீழ் இருப்பவர்களை இரண்டு வார்த்தை பேச முடிகிறது? உடனே 'ஒழிக' கோஷம் போட்டுக்கொண்டு கொடி பிடிக்க ஆரம்பித்து விடுவார்கள். அங்கே யெல்லாம் அடக்கி அடக்கி வைத்திருந்த கோபம் வீட்டுக்குத் திரும்பியவுடன் மனைவி மீதும் குழந்தைகள் மீதும் மடை திறந்தாற்போல் பாயும்.

அவர்கள் வீட்டில் ஒரு ராலே சைக்கிள் இருந்தது. 'முப்பத்திரண்டு ஆண்டுகள் முன்பு என் மாமா வாங்கியது' எனப் பெருமைப்பட்டுக் கொண்டிருந்தார் சிவராமன். மாமா, மாமாவுக்குப் பின் சிவராம் ஆகியோர் உபயோகித்தும் கூட அந்தச் சைக்கிள் நல்ல நிலையில் இருந்தது. இப்போது ஆபீஸ் கார் வந்து அழைத்துப் போவதால் அதை உபயோகிப்பதில்லை.

ஆனால் அவர் பிள்ளை ரவி அதை ஓட்ட ஆரம்பித்ததிலிருந்து அந்தச் சைக்கிள் நகரும் போது ஒரு தகர டப்பாவைத் தரையில் இழுக்கும் ஒலி கேட்கத் தொடங்கியது. அது அத்தனை தூரம் ஆடிப் போயிருந்தது. ''அதை எடுக்காதே. என் மாமாவின் ஞாபகத்துக்காகத்தான் நான் அதை வைத்திருக்கிறேன்'' எனப் பலமுறை எச்சரித்திருக்கிறார் சிவராமன். ஆனால் ரவி தன் அம்மாவிடம் கெஞ்சிக் கூத்தாடி, சத்தியாக்கிரகம் செய்து எடுத்துப் போய் அவர் வருவதற்குள் திருப்பிக் கொண்டுவந்து வைத்து விடுவான். சில சமயங்களில் அப்படி வைக்காமல் வகையாக மாட்டிக் கொண்டு உதையும் பட்டிருக்கிறான்.



மூன்று நாட்களாகச் சிவராமன் ஊரில் இல்லாதபோது, அவன் சாப்பிடும் நேரம், தூங்கும் நேரம் தவிர மீதிப் பொழுதெல்லாம் சைக்கிள் சவாரிதான். கடைசியில் இன்று அவன் வேறு ஒருவனுக்குக் கடன் கொடுத்திருக்கிறான். அந்த வானரம் சைக்கிளைக் கொண்டு போய்ச் சுவரில் மோதியிருக்கிறது. டைனமோ லைட் தூள் தூள்! முன் சக்கரம் எட்டாக வளைந்து போயிற்று. இரண்டு பேராகத் தூக்கி வீட்டுக்குள் போட்டார்கள். சைக்கிள் கடைக்காரரை அழைத்து வரச் சொல்லிக் காட்டினாள் லலிதா. சரிசெய்து தர எண்பது ரூபாய் வரை ஆகும் என்று தெரிந்தது. அப்படியும் சைக்கிள் திரும்ப ஐந்து நாட்கள் ஆகும் எனச் சொன்னார்கள். ''உதைபட்டுச் சாகத்தான் நீ பிறந்திருக்கிறாய்!'' என்று நொந்து கொண்டாள் லலிதா.

இந்த விஷயத்தை எப்படிச் சமாளிப்பது என்று அவள் குழம்பிக் கொண்டிருந்தபோது விஜயா பள்ளிக்கூடத்திலிருந்து அழுதபடி ஓடிவந்தாள். அவள் கழுத்தில் போட்டிருந்த மூன்று பவுன் சங்கிலியைக் காணோம். சும்மா இருக்கும்பொழுதெல்லாம் அவள் கைவிரல் அந்தச் சங்கிலியைத்தான் நெருடிக் கொண்டிருக்கும். 'தொடாதே! அறுந்து விழுந்து விடும்!' என எச்சரித்தபடிதான் இருந்தாள் லலிதா. அவள் பயந்தது பலித்து விட்டது. பள்ளிக்கூடத்தில் தேடிக் கொண்டிருக்கிறார்கள். கிடைத்தால் கொடுத்துவிடுவதாகச் சொன்னார்கள். லலிதாவுக்கு நம்பிக்கையில்லை.




அந்தச் சங்கிலியில் புலி நகம் கோத்துச் சிவராமன் தம் கழுத்தில் போட்டுக் கொண்டிருந்தார். தளதளவென்றிருந்த அவரது உடலில் அந்தச் சங்கிலி ஜொலித்தது.

விஜயா ஒரு நாள் தன் அம்மாவைத் தனியாகக் கூப்பிட்டாள். போய்விட்டு வந்த லலிதா ஒரு ஸ்பூன் சர்க்கரையுடன் சிவராமனைத் தேடி வந்து விஷயத்தைச் சொன்னாள். ''அப்படியா?'' எனக் கேட்ட சிவராமன் தம் கழுத்தில் இருந்த சங்கிலியை மறு கணம் கழற்றினார். ''இதோ பார் லலிதா! இது என் இருபத்திரண்டாம் வயதில் என்னுடைய சம்பளத்தில் வாங்கிப் போட்டுக் கொண்டது. என் பெண் இன்றைக்கு என் தோளுக்குச் சமமாக வளர்ந்து விட்டாள். இதிலிருக்கும் புலி நகத்தைக் கழற்றி அதற்குப் பதில் ஒரு டாலரை மாட்டி அவள் கழுத்தில் போடு!'' என்றார். பாவிப் பெண்! ஒரு நிமிஷத்தில் அதைத் தொலைத்து விட்டுவந்து நிற்கிறாள்.

மலை போன்ற இரண்டு விஷயங்கள் மனத்தைத் தாக்கியதால் லலிதாவுக்கு எதிலுமே மனம் செல்லவில்லை. எல்லாத் தெய்வங்களுக்கும் தெரிந்த மாதிரி யெல்லாம் வேண்டிக் கொண்டாள்.

''ஓ!'' என்று பெரிதாக அழுது கொண்டு வந்தான் கடைசிப் பிள்ளை பிரபு. நான்கு மணிக்குப் புதிய டிராயர், புதிய சட்டை போட்டு விளையாட அனுப்பினால் அவன் இரண்டையும் கிழித்துக் கொண்டு பத்து இடங்களில் காயம் பட்டுக் கொண்டு திரும்பி யிருந்தான்.

''அடப் பாவி!'' என்றாள் லலிதா இடிந்து போய். அவனுக்கு வேறு உடை மாற்றி எதிரிலிருந்த டாக்டர் வீட்டுக்கு அழைத்துப் போய் ஊசி போட்டு விட்டு வீட்டுக்குத் திரும்பினாள். மறுநாள் சூரிய உதயமே ஆகக் கூடாது என்று பயந்த நளாயினியின் நிலையில் ல்லிதா இருந்தாள்.

அன்றிரவு லலிதா— தூங்கவேயில்லை.

பொழுது விடிந்து விட்டது. குழந்தைகள் எழுந்து விட்டார்கள். புத்த

## அறிமுக எழுத்தாளர்

**ப**டிப்பை இடையில் தத்தளிக்க விட்டுத் தான் இந்த ரொட்டிக் கடையில் 'நான் நுழையவேண்டியிருந்தது. ஐயாவுக்கு மெத்தவும் தள்ளாமை வந்துவிட்டது. அப்போது நான் ஒன்பதாவது படித்துக் கொண்டிருந்தேன். நானும் ஐயாவும் ரொட்டிக் கடையில் தான் வாசம் என்றாலும் வியாபாரத்தில் என்னை நுழையவிடமாட்டார். படித்து முன்னேற வேண்டும் என்பதுதான் ஐயாவின் எண்ணம். எல்லா ரொட்டிக்காரர்களைப் போல — இந்தத் தொழிலுக்கு இது ஒரு சாபம் போலும், எங்கய்யாதான் எல்லாமே. மாவைப் பிசைபவர். ரொட்டி சுடுபவர், சேல்ஸ்மேன் எல்லாமே இவர்தான். ஒன் மேன் ஷோ.

நன்றாக ஞாபகம் இருக்கிறது. கடைசியில் அவரால் ஒன்றுமே செய்ய முடியவில்லை.

ஐயாவுக்குப் பிறகு ரொட்டிக் கடைக்குப் பூ வியாபாரம் செய்யும் பூக்கார அம்மாவைத் தான் எனக்கு அதிகம் தெரியும். முதன் முதலில் பூக்காரம்மாவைப் பார்த்தது நன்றாக நினைவில் இருக்கிறது.

பூக்காரம்மா வீடு அடையாற்றுப் பக்கம். அடையாற்றிலிருந்து பூக்கடைக்குச் சென்று, பூ வாங்கிக் கொண்டு, இங்கு நம் பேட்டை ரொட்டிக் கடைக்கு முன் வியாபாரம்.

அன்றைக்கு ஒரு நாள் பத்தாகியும் பூக்காரம்மா யாருக்கும் பூ விற்கவில்லை. யார் யாரோ வந்து பூ கேட்கிறார்கள்.

''கொஞ்ச நேரம் ஆகுங்க.....''

''இதோ கட்டிய பூ இருக்குதே....''

''இது வேறு ஒருத்தருக்கு. அவங்களுக்காகக் காத்திருக்கிறேன்.'' வந்தவர்கள், 'சூள்'கொட்டிவிட்டுப் போனார்கள். யார் அந்த முக்கியமான பேர்வழி என்று கவனித்துக் கொண்டிருந்தேன்.

''வாம்மா, ராஜாத்தி, உனக்காகத்தான் காத்திருக்கிறேன்.'' ஒரு பத்து வயதுப் பெண் செக்கச் செவேல் என்று, சதைப் பிடிப்பான, துருதுருத்த கண்களுடன் பூக்காரம்மாவின் முன் வந்து குனிந்து நிற்க, பூக்காரம்மா சற்று எம்பித் தன் கையாலேயே பூவைத் தலையில் செருகி முதுகைச் செல்லமாகத் தடவிவிட்ட பின், அந்தப் பெண் கொடுத்த காசை திருஷ்டி கழித்துத் தன் துணிப் பையில் போட்டுக் கொண்டே அந்தப் பெண் அங்கிருந்து



போன பிறகுதான் வியாபாரமே ஆரம்ப மானது.

மறு நாள் கேட்டேன், ''யார் அந்தப் பெண் பூக்காரம்மா ?''

''அதுவா, பெரிய இடத்துப் பெண். அவங்க அப்பா பெரிய ஆபீஸர். ஆயிரம் ரூபாய்க்கு மேலே சம்பளம். ஒரே பெண். வேறே குழந்தை குட்டி இல்லே. உங்க ஐயா வுக்குத் தெரியும். இந்தப் பாப்பா நம்ப கடை யில்தான் பூ வாங்கும். தினமும் வாங்கும். வாங்காத நாளே இருக்காது. லீவு நாளாக இருந்தால்கூட இங்கு வந்துதான் பூ வாங்கும். பூன்னு அதுக்கு உயிர். அது மட்டும் அல்ல. பூவை என் கையால்தான் வைக்கணும். நாலேஞ்சு வருஷமா இது பூ வாங்குது. இது வரல்லேன்னு என் வியாபாரம் அன்றைக்கு டல்லா இருக்கும். நான் பூ வைக்கலேன்னு அதுக்கும் என்னவோ போல் இருக்கும்..... ராசின்னு சொல்லுவாங்களே, இதன் கை தான் ராசியான கை. இது ஆரம்பித்தால் வியாபாரம் பிச்சிக்கினு போகும்.''

தினமும் காலே வேளையில் பத்துப் பன்னி ரண்டு மைல்கள் தூரம் உள்ள கிராமங்களுக்கு ரொட்டியை எடுத்துச் செல்வேன். ஆனுல் மனம் பொருந்தவில்லே. அதிகாலேயில் புறப் பட்டால் வீடு திரும்பப் பத்து பதினேரு மணியாகிவிடுகிறதே! பாப்பாவைப் பார்க்க முடிவதில்லே. அது ஒன்பதரைக்கெல்லாம் வந்து போய்விடுகிறது. அது வந்தபிறகு வியா பாரத்துக்குக் கிளம்பினுல் வெய்யில் வந்து விடுகிறது. சாப்பாடு தவறிவிடுகிறது. உடம் பும் அதிகமாகக் களேத்துவிடுகிறது.

பூக்காரம்மாவைப் போல் பாப்பாவைப் பார்க்காத நாட்கள் மிகவும் டல்லாக இருக் கும். சொல்லப் போனுல் இவை யெல் லாமே தேவை யில் லாத விசாரங்கள்தான். ஆனுல் மனம் நிம்மதி யற்று அலே பாய்ந்தது.

கிராமங்களுக்குப் போவதை விட்டு விட் டேன். காலேயிலேயே சூடான பால் விற் ருல் என்ன என்று ஆரம்பித்தேன். பாலுக்குப் பாலும் விற்கும். ரொட்டியும் விற்பனே ஆகு மில்லேயா? விற்பனே ஆனதுதான். ஆனுல் நிறைய மைனர்ப் பசங்க கடைக்குவர ஆரம் பிச்சானுங்க. பாப்பா பூ வாங்குகிற வேளே யில் பால் சாப்பிட வருவானுங்க.

கடைசியில் என் மடியிலேயே கைவைக்க ஆரம்பிச்சானுங்க. 'பால்னு இதுதாண்டா பால். முகம்னு இதாண்டா முகம்...' பூக் காரம்மா பாப்பாவின் தலேயில் பூவைத்து விட்டுக் காறி உமிழ்ந்தாள். மறுநாள் பூக் காரம்மா சொன்னுங்க: ''ரொட்டிக்காரரே, சொல்றேன்னு தப்பா நினேக்காதீங்க. உங்க ஐயாவுக்கு இதெல்லாம் பிடிக்காது. மைனர் பசங்க நிறையப் பேர் வரானுங்க. பாப்பா கூடச் சொல்லுது, 'இந்த ரொட்டிக்காரர் ஏன் பால் கடை வச்சாரு... கிண்டல் பண்ரு னுங்க.... பால் வியாபாரத்துக்குப் பதில் பெரிய பெரிய கம்பெனி பிஸ்கட்டுகளே வாங்கிக் கடையைப் பலப்படுத்தச் சொல் லேன்' என்று.''

மறு நாள் பூக்காரம்மா பூாப்பாவிடம் சொல்லிக் கொண்டிருந்தது: 'நல்ல புள் ளாண்டான். சொன்னேன் உடனே நிறுத்தி விட்டது. அவங்க ஐயாவும் இப்படித்தான். நான் சொன்னுத் தட்ட மாட்டாங்க. கண்ட காலிப் பசங்க இங்கு வந்து இனிமே புகை விட மாட்டானுங்க....'

பாப்பா என்னேப் பார்த்தது. பால் வடியும் முகம்னுங்களே, நூற்றுக்கு நூறு உண்மை. அந்தப் பார்வைக்காக எத்தனே கடையை வேண்டுமானுலும் நிறுத் தலாம் போலத் தோன்றியது. இளம் வயதில் எப்படி எல் லாமோ நினேத்துக் கொள்கிறோம்.

போட்டிக் கதை-3



இளம்வாணன்

பல வருஷங்களாகப் பாப்பா வைப் பார்க்கிறேன். பள்ளிப்படிப்பு முடிந்து கல்லூரிக்கும் போகுது. அது வரும். பூக்காரம்மா தலே யில் பூச்சூட்டி விடுவார்கள். சிரித்துக் கொண்டே போய் விடும். என்னே ஒரு கணம்

பார்க்கக் கூடாதா என்று ஏங்குவேன். அந்த ஏக்கம் பூக்காரம்மாவின் பூவைப் போல் மணமாக இருக்கும். பாப்பா பெரும்பாலும் பார்க்காது. சில நாட்களில் என்னைப் பார்த்துச் சிரிப்பதுபோலக் கூடத் தோன்றும். அன்றைக்கெல்லாம் என் மனம் மகிழ்ச்சியால் துள்ளும். இளம் வயதில்லையா?

ஒரு நாள் ஞாயிற்றுக் கிழமைதான். பூ வைத்துக் கொண்டு பூக்காரம்மா மூலம் ரொட்டி வாங்கப் பாப்பா வந்தது.

''ரொட்டிக்காரரே! உன் ஆசையும் தீர்ந்தது. பாப்பா என் கடையில் மட்டும் பூ வாங்குவதாகக் குறைப்பட்டுக் கொள்வாயே, இப்போது ரொட்டி வேணுமாம் போ!...''

எனக்கு மெத்த மகிழ்ச்சியாக இருந்தது. ஆனால் என் துரதிர்ஷ்டம் அன்றைக்குப் பார்த்துப் புதிய ரொட்டி இல்லை. பழைய ரொட்டியைக் கொடுக்கவும் மனம் இல்லை.

''அதனால் என்ன சார்... பரவாயில்லை. நான் வேறு இடத்தில் வாங்கிக் கொள்கிறேன்.''

''பூக்காரம்மா, கொஞ்சம் கடையைப் பார்த்துக் கொள்ளுங்கள். நான் நல்ல ரொட்டியாகப் பார்த்து வாங்கி வருகிறேன்'' என்று சொல்லி அவசரம் அவசரமாகத் தூரத்துக் கடையில் ரொட்டி வாங்கி வந்து கொடுத்தேன். மற்றவர்களுக்கு வேலை செய்யும்போது, அதுவும் நமக்குப் பிடித்தமானவர்களுக்கு ஏற்படுகிற மகிழ்ச்சியின் சுகத்தை முதன் முதலில் அன்றுதான் கண்டேன்.

''உங்களுக்கு ஏன் இந்தச் சிரமம்? ரொம்ப தேங்க்ஸுங்க.''

ஒரு நாள் பாப்பாவுக்குப் பூக்காரம்மா பூச்சூடிக் கொண்டிருக்கிறார்கள். தபால்காரர் ரிஜிஸ்டர் தபாலை என்னிடம் கொடுக்கிறார். அவசரமாக வாங்கிப் பார்க்கிறேன். விஷயம் சட்டென்று புரியவில்லை.

''ரொட்டிக்காரரே, என்ன விஷயம்? கடுதாசி இங்கிலீஷில் இருக்கிறதா? இதற்கென்ன வெட்கம்? உங்கய்யாவுக்கு இதெல்லாம் தலைகீழ்ப் பாடம். இங்கே கொடு. ரொட்டிக்காரரே, நம்ப பாப்பா படித்துச் சொல்லுது. வெண்ணெயைக் கையில் வைச்சிக்கினு நெய்க்கு அழுவானேன்?... கடிதத்தைக் கொடுத்தேன். பாப்பா சொன்னது: ''ஒன்றும் சந்தோஷமான விஷயம் இல்லை. இவர் ரொட்டி, பிஸ்கட் முதலானவைகளுக்கு ஏஜென்ஸி கேட்டிருந்தாராம். இவருக்கு பாங்க் பேலன்ஸ் இல்லையென்று ஏஜன்ஸி கொடுக்க முடியாதாம்.''

இந்த ஏஜென்ஸியை வெகுவாக நம்பியிருந்தேன். இந்த ஏஜன்ஸி மட்டும் கிடைத்திருந்தால் என் நிலைமையே மாறிவிட்டிருக்கும். இடுப்பை உடைத்து விட்டாற்போல் தோன்றியது. மேலும் பாப்பா எதிரில்தானா இந்தக் கடிதம் வந்திருக்க வேண்டும்? ஓர் இளம் பெண்ணின் எதிரில் படிப்பில்லா மூடனாகக் காட்சியளிக்கும் கொடுமையை விட வேறு தண்டனையே வேண்டாம் போல் தோன்றியது. இரண்டு மூன்று நாட்களுக்குப் பாப்பாவைப் பார்ப்பதற்கே கூச்சமாயிருந்தது.

ஒரு நாள் மெட்ரிகுலேஷன் பரீட்சையைப் பற்றிப் பாப்பாவைக் கேட்டேன். எல்லாம் பூக்காரம்மா மூலம்தான். வழி சொன்னது மட்டுமல்லாமல், அதனுடைய புத்தகங்களையெல்லாம் கூடக் கொடுத்து உதவியது.. பாப்பா பி.காம் பாஸ் செய்த வருஷம்தான் நானும் மெட்ரிகுலேஷன் முடித்தேன். பூக்காரம்மா பாப்பாவிடம் சொல்லிக்கொண்டிருந்தாள்.

''அவுங்க ஐயா என்னமா இங்கிலீஷ் பேசுவார் தெரியுமா? துரைகளே மூக்கு மேலே கை வைச்சுப்பானுங்க... புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?...''

பாப்பா ஏதாவது சொல்லும் என்று எதிர்பார்த்தேன். எதுவுமே சொல்லவில்லை. சிரித்துக்கொண்டே போய் விட்டது. எத்தனை வருஷமா பார்க்கிறேன். இன்னும் நேரிடையாகப் பேசினது இல்லை.

எப்பவுமே பாப்பா காலையில்தான் பூ வாங்கும். அன்றைக்குச் சாயங்காலம் வந்தது.

''பூக்காரம்மா... இன்றைக்கு என்னைப் 'பெண் பார்க்க' வருகிறார்கள். உன் கையால் பூ வைத்தால்தான் திருப்தி. அதனால்தான் வந்தேன்.''

என் உடல் முழுவதும் குப்பென்று வியர்த்துக் கொட்டியது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. பிஸ்கட் ஏஜென்ஸி கிடைக்கவில்லை என்று தெரிந்தபோது இடுப்பே உடைந்து விட்டது என்று சொன்னேனே, அது தப்புன்னு தோணுது. இப்பத்தான் இடுப்பு உடைந்து விட்டது.

''மகராசியா இரும்மா...'' என்றவாறு பூக்காரம்மா பூ வைத்து திருஷ்டி கழித்தாள்.

''ரொட்டிக்காரரே, நமக்கெல்லாம் கல்யாணச் சாப்பாடு நடக்கப் போவுது...'' பாப்பா சிரித்துக் கொண்டே போய்விட்டது.

பத்து வருஷங்களா இந்தக் கல்யாணச் சாப்பாட்டுக்காகவா காத்திருந்தேன்...?

பூக்காரம்மா ஒரு நாள் சொன்னாள்: ''ரொட்டிக்காரரே, நம்ப பாப்பாவுக்குக் கல்யாணம் ஏற்பாடாகி விட்டது. இதோ பத்திரிகை. அதுவே வந்தது. நீ அப்போ இல்லே. என்கிட்டக் கொடுத்திட்டுப் போச்சு. 'நேரில் கொடுக்கலேன்னு ரொட்டிக்காரர் கோவிச்சிக்க வேண்டாம். அவர்தான் கடையிலே இல்லையே. நான் இனிமே கல்யாணம் வரையில் அதிகம் வெளியே வரமுடியாது. கட்டாயம் அவரைக் கல்யாணத்துக்கு வந்திடச் சொல்லு...''

கொஞ்சம் கொஞ்சம் ஒட்டியிருந்த நம்பிக்கையும் போய்விட்டது. ஏன் வாழனும்னு புரியல்லே. குறைந்த பட்சம் பாப்பா வந்திருந்தபோது நான் கடையில் இருந்திருக்கக் கூடாதா? வாழ வேண்டும் என்கிற 'த்ரில்லே' போய்விட்டது. துரதிர்ஷ்டம்னா என்னன்னு புரிகிறது.

பாப்பாவின் கல்யாணத்துக்கு நான் போயிருந்தேன். பெரிய இடத்துக் கல்யாணம். எல்லாமே பெரிய மனிதர்கள். என்னை அவர்களுக்கு யார் என்று தெரியும்? நல்ல வேளையாகப் பூக்காரம்மாதான் என்னை வந்து அழைத்துப் போயிற்று. 'இதற்காகாவது சரியான நேரத்துக்கு வந்தீங்களே...' நான் சோகமாகச் சிரித்தேன். பாப்பா கல்யாண மணையில் அழகுப் பதுமையாக அமர்ந்திருந்தது.

பூக்காரம்மா இரவெல்லாம் கண் விழித்துக் கட்டிய இரண்டு பெரிய மாலைகளை மண

மக்கள் கையில் கொடுத்து மாலே போடச் செய்து, தன் ராசியான கையால் பாப்பா வுக்குத் தலையில் பூச் சூடும்போதே, யாருமே எதிர்பாராத வண்ணம் பாப்பா நெகிழ்ச்சி யுடன் பூக்காரம்மா காலில் விழுந்து வணங் கிய அந்தக் சணத்தில் எனக்குப் பாப்பாமேல் இருந்த வருத்தமெல்லாம் பறந்து போய் விட்டது. எப்பேர்ப்பட்ட பெண் இது!

என் பங்காக இரண்டு நாட்கள் ஓயாமல் பாடுபட்டுச் செய்த நீண்ட கேக்கை மண மக்களிடம் கொடுத்து, வெள்ளிக் கத்தியால் முதல் பாதியை மாப்பிள்ளை வெட்டுமாறும், மறு பாதியைக் கல்யாணப் பெண் வெட்டு மாறும் செய்தபோது, கேக்கினுள் 'இணைந்து வாழ்வீர்' என்ற வாழ்த்துக்கள் உதிர்ந்த போது அங்கிருந்த அனைவரும் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தார்கள். பூக்காரம்மா தனி யாகச் சொன்னாள், ''ரொட்டிக்காரரே... நீர் ஆகாசத்திலே பறக்க ஆசைப்படறது தப்பில்லே.... உங்கிட்ட சரக்கு இருக்கு...'' ஆனால் இப்பச் சொல்றது டூ லேட் இல்லையா?

**ப**த்து நாட்கள் கழித்து ஒரு நாள் மாலே பாப்பாவும் மாப்பிள்ளையும் புத்தம் புதிய மோட்டார் சைக்கிளை விட்டுப் பூக்காரம்மா முன் இறங்கினார்கள். ஜோடின்னா இதுதான் ஜோடி. காணக் கோடிக் கண்கள் வேண்டும்.

''பூக்காரம்மா இன்றைக்குத்தான் ஊரி லிருந்து வந்தோம். புது சினிமாவுக்குப் போகிறோம். உன் கையாலேயே பூவைத்து விடு...'' மாப்பிள்ளை சொன்னார்: ''நான் வைக்கக் கூடாதோ!...''

''பூக்காரம்மா கை ராசியான கை. காலம் காலமாக வைக்கிறாங்க...'' பாப்பா என்னைப் பார்ப்பது போல் தோன்றியது. பூக்காரம்மா தலையில் வைத்துக் கொண்டே ''நீ மகராசியா வாழணும்மா.,.. உன் பெண்களுக்குக் கூட நானே பூச்சூட்ட வேண்டும். ஐயாதான் சீக் கிரம் பெரிய மனுசு பண்ணணும்'' என்றாள்.

அவர்கள் இருவரும் மனம் கொள்ளா மகிழ்ச்சியுடன் சிரித்துக் கொண்டே போய் விட்டார்கள். எங்கிருந்தாலும் பாப்பா மகிழ்ச்சியாக வாழ வேண்டும்.

சொந்த ஊருக்குச் சென்று சில நாட்கள் தங்கி வரலாம் என்று திடீரென்று மறுநாள் முடிவுசெய்தேன். பூச்காரம்மாவிடம் சொல்லி விட்டுச் செல்ல வேண்டும் என்று காத்திருந் தேன். அன்று ஏனோ அவர்கள் வரவில்லை. மனக் குறையாகவே ஊருக்குச் சென்றேன். ஒரு வாரத்துக்குப் பின்பு திரும்பி வந்தும் பூச்காரம்மாவைப் பார்க்க முடியவில்லை.இந்த இடைவெளி நாட்களில் பூக்காரம்மா கடை போடவில்லை என்பதறிந்து ஏதோ இனம் தெரியாத துன்பத்தினுள் குழம்பினேன். அடுத்த நாள் காலை பூக்காரம்மா பெரிய கூடையோடு என் கடை எதிரே வந்துகொண் டிருந்தாள். என்னைப் பார்த்ததும் ''ரொட் டிக்காரரே, இனிமே பூக்கடை கிடையாது. காய்கறிக் கடைதான். அதற்கு அனுமதி தருவே இல்லே....'' என்று சொல்லிக் கொண்டே 'ஓ'வென்று அழுதாள்.

''என்ன விஷயம்? ஏன் அழறீங்க?...''

''உனக்குத் தெரியாதா ரொட்டிக்காரரே! நம்ப பாப்பா... அன்னைக்குத் தலை நிறைய பூ வைச்சேனே, அதுவும் மாப்பிள்ளையும் மோட்டார் சைக்கிளில் போனார்களே... மவுண்ட் ரோடு அருகே ஆக்ஸிடெண்டாகி அங்கேயே மாப்பிள்ளை இறந்து போனார். பாப்பா கண் கலங்கி நிற்குது ரொட்டிக் காரரே....''

நான் பொறி கலங்கி நின்றேன். என்ன சொல்வது என்றே புரியவில்லை. எப்பேர்ப் பட்ட கஷ்டம் இது?

''எந்தத் தொழிலானாலும் அதிலே ராசி வேணும் ரொட்டிக்காரரே. ஏன் கை ராசியானது என்று நம்பித்தான் பலபேர் என்னிடம் பிரியமாகப் பூ வாங்கினார்கள். அன்னிக்குப் பாப்பாவுக்குப் பூ வைச்சேனே என்ன ஆச்சு? எமனா முடிஞ்சு போச்சு. ராசி போன பிறகு அந்தப் பூ வியாபாரம் செய்வதில் என்ன பிரயோசனம் ரொட்டிக் காரரே.... அதனாலே பூ வியாபாரத்தை விட்டு விட்டுக் காய்கறி வியாபாரம் செய்யப் போகிறேன்....''

பூக்காரம்மா என்ன சொல்றாங்கன்னு சட் டுன்னு புரியல்லே. யோசிக்க யோசிக்கப் புரிந் தது. எவ்வளவு பெரிய விஷயம் இது! பொம் பளைன்னா சாதாரணப் பொம்பளே இல்ல. 'இணைந்து வாழ்வீர்' என்று நான் கூடத்தான் என் தொழிலான ரொட்டி மூலம் பாப்பாவை வாழ்த்தினேன். அந்த இருட்டுகிற நேரத்தில் தன்னந் தனியாக் கணவனைப் பலிகொடுத்து விட்டு, 'ஓ'வென்று கதறிப் பாப்பா அழுது கொண்டிருக்கிறதே, அந்தக் காட்சிக்குத்தான் பெயர் 'இணைந்து வாழ்வீர்' என்பதா? அந்த வாழ்த்தில் அந்தரங்க சுத்தம் இல்லையா? பூ என்றால் அதற்கு உயிர். பூ வைக்காத நாள் இல்லை. பூவோடு பிறந்து பூவோடு போக வேண்டிய புனிதப் பெண் அது. பூவும் பொட்டும் இல்லாத பாப்பாவைக் கற்பனை செய்யவே முடியவில்லை. காலம் காலமாகக் காத்திருந்த என்னைப் புரிந்து கொள்ளவில் லையே என்று நெஞ்சினுள் அழுத காலங்கள் உண்டு. ஆனால்.... ஒரு போதும் இப்படி ஆகும் என்று நினைத்தது கிடையாது. அந்த நிமிடமே பூக்காரம்மாவைப் போன்று ஒரு புனிதமான மலராக மாற முடியாவிட்டாலும் மலரோடு இணைந்து மணம் வீசும் நாராக வாவது இருக்க முடிவு செய்து கொண்டேன்.

''பூக்காரம்மா, என்னிடம் நீ காய்கறி விற்க அனுமதி கேட்கத் தேவையில்லை. உனக்குப் பூ ராசி இல்லை. எனக்கு ரொட்டி ராசி இல்லை. இந்த ரொட்டித் தொழிலுக்கு நான் வேண்டாதவன். கடையை விற்றுவிட்டு எங்கோ கண் காணாத இடத்துக்குச் செல்லப் போகிறேன். இனி எப்போதுமே உங்களை யெல்லாம் பார்க்க முடியாது என்பதுதான் எனக்குள்ள குறையெல்லாம்....''

அதற்கு மேல் என்னால் பேச முடியவில்லை. தேம்பித் தேம்பி அழுதேன். என் வாழ்நாளில் எத்தனையோ பேரைச் சந்திக்கக் கூடும்.ஆனால் சர்வ சாதாரண ஜீவன் என்று நினைத்திருந்த இந்தப் பூக்காரம்மாதான் எப்பேர்ப்பட்ட மனுஷி. தினம் தினம் மலரோடு பழகினால் மனமே மலராகி விடுமோ?

நான் சந்தித்த இந்த இரு மலர்களின் வாசனை சாதாரண வாசனை இல்லே. எப்போ தும் பூவோடு இருக்கிற தெய்வ வாசனை இது.



திருமலை செல்லும் யாத்திரிகர் கவனிக்க:

# தேவஸ்தான லட்டுகளை வாங்குதல்

பக்தியோடு வரும் யாத்ரீகர்களிடம் சில வஞ்சகர்கள் தாங்கள் தயார் செய்த லட்டுகளை தேவஸ்தான லட்டுகள் என்று கூறி ஏமாற்றி விற்று வருவதாகத் தேவஸ்தானத்துக்குத் தெரிய வந்திருக்கிறது.

ஆகவே யாத்ரீகர்களுக்கு தேவஸ்தானம் ஒரு விஷயம் தெரியப் படுத்த விரும்புகிறது. ஏழுமலையானுக்கு நிவேதனம் செய்யப்பட்ட பிரசாத லட்டுகள் கோவிலுக்குள்ளேயே தேவஸ்தானம் விற்று வருகிறது.

வெளியில் வேறு இடங்களில் விற்கப்படும் லட்டுகள் தேவஸ் தானத்தினுடைய பிரசாதமல்ல.

ஆண்டவனின் புனித பிரசாதம் வேண்டுமானால் தேவஸ்தானத் தாரால் கோவிலுக்குள்ளேயே விற்கப்படும் லட்டுகளையே வாங் குங்கள். திருமலைக்கு நீங்கள், பெருமாளை தரிசிக்கவும், அவன் அருளைப் பெறவுமே அல்லவா வருகிறீர்கள்? வந்த இடத்தில் எது சரியான இடம் எது சரியான முறை என்பது தெரிந்து கொண்டு காரியம் செய்யுங்கள். தயவுசெய்து வஞ்சகத் தரகர்களிடம் சிக்கிக் கொண்டு ஏமாந்து போகாதீர்கள்.

நிர்வாக அதிகாரி<br>
திருமலை – திருப்பதி தேவஸ்தானம்<br>
திருப்பதி

# தலைநகரில் ராஜாஜி சிலை

**(24–8–76 முதல் 7–9–76 வரை நிதி வழங்கியவர் பட்டியல்)**

| பெயர் | ரூ. | பை. |
|---|---|---|
| 23-8-76 வரை வசூல் | 1549 | 00 |
| இமயன், பெங்களூர் | 5 | 00 |
| எம். ஆர். ஸ்ரீநிவாஸன், கொரட்டூர் | 5 | 00 |
| ஏ. ராமசாமி, கிண்டி ராஜ்பவன் | 51 | 00 |
| ராஜ்ஸ்ரீ கோபாலன், ரூர்க்கேலா | 15 | 00 |
| பி. சுப்பிரமணியம், சென்னை | 21 | 00 |
| ரமண ஸேவக், புதுதில்லி | 10 | 00 |
| ஏ. என். வெங்கடராமன், புதுதில்லி | 30 | 00 |
| எஸ். டி. ஐயங்கார், திக்விஜய்கிராம் | 10 | 00 |
| சி. ஏ. நாராயண், பம்பாய் | 201 | 00 |
| டி. என். அகோரம் அய்யர், மாயூரம் | 10 | 00 |
| ஏ. ராம்சுவாமி, சேலம் | 5 | 00 |
| ஜே. ரகுவீரசிம்ஹா, தும்கூர் | 10 | 00 |
| கே. எஸ். அர்ஜுனன், புதுதில்லி | 5 | 00 |
| ஏ. எஸ். நரசிம்மன், ஆர்க்காடு | 5 | 00 |
| ஸ்ரீமதி ஜானகி மஹாதேவன், நந்தனம் எக்ஸ்டென்ஷன் | 5 | 00 |
| டி. எம். நரசிம்மன், ஹைதராபாத் | 5 | 00 |
| நேஷனல் கல்சுரல் அஸோஸியேஷன், திருச்சி | 101 | 00 |
| து. ராஜகோபால், புரசை | 10 | 00 |
| ஜி. பார்த்தசாரதி கோனார், பாலக்குறிச்சி | 10 | 00 |
| வி. வரதராமநாதன், மன்னார்குடி | 5 | 00 |
| சி. லக்ஷ்மி, பொன்மலை | 5 | 00 |
| எஸ்.வெங்கடேச்வரன், செங்கல்பட்டு | 10 | 00 |
| ஸ்ரீமதி கங்காராஜன், பம்பாய் | 15 | 00 |
| எல். ஆர். கணேசன், மதுரை | 5 | 00 |
| கே. கேசவன் தம்பதியர், நெய்வேலி | 10 | 00 |
| திசையன்விளை முத்து, மதுரை | 5 | 00 |
| பி. பெப்பின் ஃபெர்னாண்டோ, பாளையங்கோட்டை | 25 | 00 |
| வி. ராமகிருஷ்ணன், மேலை மாம்பலம் | 10 | 00 |
| டி. சுந்தரராஜன், ருபைதிஹா | 20 | 00 |
| ஜே. ராமகிருஷ்ணன், நாகபுரி | 5 | 00 |
| டி. ஸ்ரீநிவாஸன், சண்டிகர் | 5 | 00 |
| ஆர். நரசிம்மன், நந்தனம் எக்ஸ்டென்ஷன் | 101 | 00 |
| கே. ராமமூர்த்தி, கருங்கல்பாளையம் | 5 | 00 |
| பி. கோபாலகிருஷ்ணபாலிகா, நங்கைநல்லூர் | 25 | 00 |
| எஸ். லக்ஷ்மிதேவி, கோயமுத்தூர் | 5 | 00 |
| சாந்தாராமமூர்த்தி, ,, | 5 | 00 |
| வஸந்தாநரசிம்மன் ,, | 5 | 00 |
| என். சுதாகர், ,, | 5 | 00 |
| என்.ஆர். வேணுகோபால ஐயங்கார், திருச்சி | 11 | 00 |
| என். ஆர். வீ. ராமன், ,, | 11 | 00 |
| என்.ஆர். தேசிகம்ஐயங்கார் ,, | 11 | 00 |
| நாராயணஸ்வாமி ,, | 11 | 00 |
| எஸ். எம். ரங்கசாமி, செங்காப்பள்ளி | 5 | 00 |
| மிஸ் டி. ரமா, சென்னை | 5 | 00 |
| பிரேமா ராஜகோபால், சேலம் | 10 | 00 |
| பி. டி. ரங்கநாதன், பெங்களூர் | 5 | 00 |
| மன்னை எஸ். ராமசந்திரன், மடிப்பாக்கம் | 5 | 00 |
| டி. எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ஸ்ரீரங்கம் | 5 | 00 |
| திருச்செங்கோடு காந்தி ஆசிரமம், அமரர் வி. எஸ். தியாகராஜன் நினைவாக | 10 | 00 |
| ஏ. கிருஷ்ணன், தஞ்சாவூர் | 10 | 00 |
| என். முருகேசன், அரியலூர் | 10 | 00 |
| வி.சி.ராகவசிம்மன், குரோம்பேட்டை | 10 | 00 |
| ஆர். தியாகராஜன், கல்கி ஏஜண்ட், பரம்பிக்குளம் | 5 | 00 |
| மொத்தம் | 2458 | 00 |



## புது தில்லியில்
## ராஜாஜி சிலை அமைக்க

சங்கீத கலாநிதி

**எம். எஸ். சுப்புலக்ஷ்மி**

**உதவி நிதிக் கச்சேரி**

ராதா விசுவநாதன் உடன் பாடுவார்

கே. எஸ். அழகர்சாமி — வயலின்
டி. கே. மூர்த்தி — மிருதங்கம்
ஷியாம் சுந்தர் — கஞ்சிரா

அக்டோபர் 2ந் தேதி காந்தி ஜயந்தியன்று
மாலை 6 – 30 மணிக்கு

**கமானி ஹால், லிட்டன் ரோடு, புது தில்லி**

டிக்கெட்டுகள் விவரம்: 100, 50, 25, 10, 5

*அ*ந்தச் செய்தி எங்கிருந்து எப்படித் தோன்றியது? அதன் எதிரொலி உலகெங்கும் கிரகங்கள் எங்கும் மனிதன்... மனிதனுடன் பேசும்போதெல்லாம் அவன் சிந்தனையின் பெரும்பான்மையை அடைத்துக் கொண்டு அந்த ஆகஸ்டு மாதத்தை உயிர்களின் சரித்திரத்தில் ஒரு தழும்பாக, வடுவாக மாற்றியது. ஒரு சர்வதேச, சர்வ அம்ச ஆவேசமாக ஜுரமாக விரவிப் பரவிய அந்தச் செய்தி ஒரு தினத்தில் ஏறக்குறைய ஒரே சமயத்தில் செய்தித் தாள்களில், ரேடியோ டெலிவிஷன் போன்ற மனிதத் தொடர்புச் சாதனங்களில்—ஏன், மழை காலப் பச்சை போலத் திடீர் என்று தோன்றிய சுவரொட்டிகளில் எங்கும் தோன்றியது.

செய்தி இதுதான்.

**தருணம் வந்துவிட்டது. இன்னும் பதினைந்து தினங்கள் கழித்த வெள்ளிக்கிழமையில் சூரிய உதயத்தின்போது நான் உங்கள் முன் தோன்றுகிறேன். நாடு நகரங்களில் இருப்பவர்கள் ஒரு பொது இடத்தில் கூடி இருக்கவும் என்னை எதிர்நோக்கி.**

**—கடவுள்**

**விஞ்ஞானக் கதை**



செய்தித் தாள்களில் முன் பக்கத்தில் கட்ட மிட்டுப் பெரிய எழுத்துக்களில் நட்ட நடுவே—டெலிவிஷன் ஸ்டீரியோவிஷன் சாதனங்களில் நடந்து கொண்டிருந்த நிகழ்ச்சி நிறுத்தப்பட்டுத் திரைகளை ஆக்கிரமித்தது; ரேடியோ சங்கீதங்கள் வெட்டுண்டு அமைதியான குரல் ஒன்று இந்தச் செய்தியைப் பேசியது.

சுவரொட்டிகள் தோன்றின.... யாரோ கொடுத்தார்கள் என்று கத்தை கத்தையாகச் சிறிய பையன்கள் நோட்டீஸ் துண்டுகளை வீதிகளில் வாரி இறைத்தார்கள்.... எல்லாவற்றிலும் ஒரே வாசகம்.... ஒரே கடவுள்.... உலக அரசின் உள்துறை அமைப்பின் தலைமைச் செயலகத்தில் அவசரக் கூட்டத்தில் ஒரு பிரும்மாண்டமான அறையில் அவர்கள் கூடியிருந்தார்கள்.

ஆத்மாவின் தலை கலைந்திருந்தது. அவர் தூக்கமின்மை கண்களில் தெரிந்தது. அவர் இரத்த அழுத்தம் எகிறிப் போயிருந்தது.

'' என்னய்யா, கண்டு பிடித்தீர்களா ? எங்கிருந்து இந்தச் செய்தி கிளம்பியிருக்கிறது என்று.....''

எதிரே முட்டை வடிவ மேஜையைச் சுற்றிலும் உட்கார்ந்திருந்த அத்தனை முகங்களிலும் ஈயாடவில்லை.

''செய்தி வந்து இரண்டு நாட்களாகிறது. இன்னும் கண்டு பிடிக்கவில்லையா ! யார் இந்த விஷமம் செய்தது என்று? என்னய்யா, டாக்டர் பரஞ்சோதி... அத்தனை விஞ்ஞான சாதனங்கள் வைத்திருக்கிறீர் ! உலகின் தொடர்புச் சாதனங்கள் அனைத்தையும் பரிபாலனம் செய்து வருபவரிடம் இது எப்படிப் புகுந்தது? உங்கள் முட்டாள் கம்ப்யூட்டர்கள் என்ன சொல்கின்றன.... உங்களுக்கெல்லாம் தண்டத்துக்குச் சம்பளம் கொடுக்கிறதா?...''

'' நீங்கள் உணர்ச்சி வசப்படாமல் இருந்தால் நான் பேசுகிறேன்'' என்றார் டாக்டர் பரஞ்.

''ஆல்ரைட்! உணர்ச்சியே இல்லை எனக்கு! நீங்கள் சொல்லப் போவதைக் கூர்ந்து கவனமாக, நிதானமாகக் கேட்கிறேன். மௌனமாகக் குறுக்கிடாமல் கேட்கிறேன் சொல்லு'' என்று மேஜையைக் குத்தினார்.

எல்லோரும் எச்சிலை விழுங்கிக் கொண்டார்கள்.

'' ஆத்மா! இந்தச் செய்தி எப்படிப் புறப்பட்டது என்று இன்னும் கண்டுபிடிக்க முடியவில்லை. ஒரே சமயத்தில் அத்தனை சாதனங்களிலும் ஒரே வார்த்தை அமைப்பில் தோன்றுவது... மனித சாத்தியமில்லை.''

''அப்படியென்றால் நீயும் இது கடவுள் அனுப்பிய செய்தி என்கிறாயா? உனக்கும் ஜுரம் வந்துவிட்டதா ?''

''வேறு ஒரு காரணமும் கண்டுபிடிக்க முடியவில்லை.''

'' சரிதான் ! என்னய்யா செய்தி ஸ்தாபனம் நடத்துகிறீர்கள்..... இந்தப்....''

''ஒரே ஒரு கேள்வி'' என்று மேஜையின் ஓரத்திலிருந்து குரல் வந்தது. இளம் டாக்டர் க்ராஸ்மன்.... மனோதத்துவப் பாஷை...

''என்ன?''

''ஆத்மா, நீங்கள் என்ன நினைக்கிறீர்கள், இதைப் பற்றி ?''

''சத்தியமாக இது ஒரு விஷமம் ! யாரோ கிளப்பிவிட்ட புரளி..... திட்டமிட்டுச் செய்யப்பட்ட கேலி !''

'' எதற்காக அப்படி ஒருவர் செய்ய வேண்டும் ?''

'' எதற்காக ? நீயே பார்க்கிறாயே! உலகத்தின் இன்றைய மன நிலையை. எல்லாரும் இதைப் பற்றியே பேசுகிறார்கள். எங்கே போனாலும் கடவுள் வருகையைப்




பற்றித்தான் பேச்சு... இது நிஜமா.... ? பொய்யா ? நீ நம்புகிறாயா? நம்பிக்கை இல்லையா ? பந்தயங்கள், பேச்சுக்கள்....... பொதுக் கூட்டாளிகள்.... ஒருத்தன் கிருஷ்ணன் என்கிறான். ஒருத்தன் ராமன் என்கிறான். ஒருத்தன் யேசு என்கிறான். வைணவா என்கிறான். ராம் என்கிறான். சென்ற நூற்றாண்டுடன் இந்தக் கேலிக்கூத்தெல்லாம் முடிந்துவிட்டது என்று நினைத்தோம். கடவுளுக்கே அர்த்தமில்லாமல் செய்திருந்தோம். அவசியமில்லாமல் செய்திருந்தோம். மறுபடியும் அடியைப் பிடிடா என்று ஆரம்பமாகிவிட்டது. இந்தச் செய்தியின் மூலத்தை நாம் கண்டு பிடித்தே ஆக வேண்டும்.... உலகத்தில் கலகம் ஏற்படுத்த அமைதியைக் குலைக்க ஒரு சதி இது......''

''ஆத்மா ! கோபிக்காமல் இருந்தால் ஒன்று சொல்ல விரும்புகிறேன்.''

'' நான் கோபித்து என்ன பிரயோசனம்? வேலை நடக்க வில்லையே ! காரணம் இன்னும் தெரியவில்லையே! சொல்லு, கோபிக்கமாட்டேன்.''

டாக்டர் பரஞ்சோதி தன் வியர்வையைத் துடைத்துக் கொண்டு..... சட்டையைத் தளர்த்திக் கொண்டு ஒரு விழுங்கு தண்ணீர் எடுத்துக் கொண்டு....

'' ஒரே ஒரு வகையில் இந்தச் செய்தி வெளி வருவது சாத்தியம். ஒரே ஒரு ஆசாமியால்தான் அது முடியும் !''

'' யார் அது சொல்லு ? உடனே அவனைக் கைது செய்து கொண்டு வா? விளக்கடியில் போட்டு வாட்டி எடுத்துவிடலாம்.... யார்? அது, யார் ?''

'' நீங்கள்தான் ஆத்மா !''

'' நானா !'' நிதானமாகச் சிரித்தார். ''என்னய்யா, நீ உம்மாதிரி ஒரு முட்டாளையா உலகப் போலீஸ் தலைவனாக வைத்திருக்கிறார்கள்?''

''ஆத்மா ! டாக்டர் பரஞ்சோதி சொல்வதை முழுவதும் கேட்கலாம் எனத் தோன்றுகிறது '' என்றார் க்ராஸ்மென்.

''சொல்லு. சொல்லு !'' என்று கைக்குட்டையால் சிரிப்புக் கண்ணீரைத் துடைத்துக் கொண்டே சாய்ந்து கொண்டார் ஆத்மா.

''ஆத்மா, ஞாபகம் இருக்கிறதா? *Flash!* மற்றவர்கள் எவருக்கும் தெரியாது. உங்களுக்கும் தலைவருக்கும் எங்கள் டிபார்ட்மெண்டுக்கும்தான் தெரியும்.''

ஆத்மாவின் சிரிப்பு நின்றது.

மற்றவர்கள் மௌனமானார்கள். ஏர்கண்டிஷனரின் உறுமல் மட்டும் கேட்டது.

'' மூன்று வருஷங்களுக்குமுன் இந்த ஃப்ளாஷ் சாதனத்தை அமைத்தோம்.... அதைப் பற்றி இப்போது மற்றவர்களும் தெரிந்து கொள்ள வேண்டிய சந்தர்ப்பம் வந்துவிட்டது என நினைக்கிறேன்... சொல்லலாமா ஆத்மா? சொல்ல அனுமதி இருக்கிறதா ?''

''சொல்லு!'' என்றார் சிந்தனையின் ஊடே.

உலக அரசின் புதிய திட்டம் ஃப்ளாஷ். உலகின் பத்திரத்தைப் பாதிக்கக்கூடிய மகத்தான, மிகத் தீவிரமான அபாயம் நேர்ந்தால் உலகின் அத்தனை செய்திச் சாதனங்களையும் ஒரே சமயத்தில் கவர்ந்து ஒரே செய்தியை அனுப்ப ஏற்படுத்திய ஒரே ஒரு சாதனம். எலெக்ட்ரானிக்ஸ் நிபுணர்களின் மூன்று வருஷ உழைப்பிற்குப் பின் ஏற்படுத்திய ஒரு சூப்பர்

சாதனம் ! அது ஆத்மாவின் அலுவலகத்தில் ஒரு தனி அறையில் இரட்டைப் பூட்டுப் போட்டிருக்கிறது.

'' அதன் சாவி எங்கே இருக்கிறது?''

'' அதற்கு ஒரு சாவி இல்லை ! இரண்டு பூட்டுகள்; அதுவும் நம்பர் அமைக்கும் காம்பினேஷன் பூட்டுகள். ஒரு காம்பினேஷன் ஆத்மாவுக்குத் தெரியும்..... ம ற் ற து ?'' என்று ஆத்மாவைப் பார்த்தார்.

''மற்றது உலகத் தலைவருக்குத் தெரியும்!''

மறுபடியும் மௌனம். எல்லாரும் ஆத்மா பேசக் காத்திருந்தார்கள்.

ஆத்மா புன்முறுவலுடன், ''பரஞ்சோதி ! ம்ஹூம் !'' என்றார்.

''பரஞ்சோதி சொல்வது உண்மைதான். அப்படி ஒரு சாதனம் இருக்கிறது. இதைத் தலைவரோ நாமோ தனியாகத் திறக்க முடியாது. அவர் நம்பர் எனக்குத் தெரியாது. என் நம்பர் அவருக்குத் தெரியாது. இருவரும் சேர்ந்து சதி செய்திருக்கிறோம் என்று பரஞ்சோதி சொல்ல முற்படுகிறார் என்றால் அதையும் விசாரித்துப் பார்த்துவிடலாம்...தலைவர் இப்போது இங்கே இல்லை. நோவாவில் இருக்கிறார்..... இன்றுதான் இந்தக் கலாட்டாவைக் கவனிக்கப் புறப்படுகிறார்... அவரைப் பார்த்துப் பதினைந்து நாட்களாகிவிட்டன. செய்தி வந்தது நேற்று முன்தினம். அதற்கு மேலும் சந்தேகம் இருந்தால்...''

''சந்தேகத்துக்குச் சொல்லவில்லை, ஆத்மா! நீங்கள் என்னைத் தவறாகப் புரிந்துகொண்டு விட்டீர்கள்..... இந்தச் செய்தி தோன்றுவதற்கு இருக்கும் ஒரே ஒரு மார்க்கத்தைச் சொல்வது இந்தத் தருணத்தில் என் கடமையாகிறது.....''

'' இருந்தும் எங்கள் மேல் சந்தேகத்தை விதைத்துவிட்டாய் ! அந்த முட்டாள் பெட்டியை ஆரம்பப் பரிசோதனைகளுக்கு அப்புறம் பார்த்ததுகூட இல்லை நான்..எதற்கும் பார்த்துவிடலாம்....''

'' பார்க்க வேண்டிய அவசியமில்லை ! நீங்கள் அதை உபயோகிக்கவில்லை என்று சொன்னால் அந்த வார்த்தை போதும் !''

'' போதாது !.... பார்த்து விடலாம், வாய்யா !''

அவர்கள் ஃப்ளாஷ் சாதனம் அமைத்திருந்த அந்த அறை வாசலில் நின்றார்கள். நிபுணர்கள் அதன் இரண்டு பூட்டுக்களைப் பரிசோதித்தார்கள். பௌடர் அடித்து விரல் ரேகைகளைத் தேடினார்கள்...இன்ஃப்ரா ரெட் போட்டுப் பார்த்தார்கள். எக்ஸ்ரே எடுத்துப் பார்த்தார்கள்...

''ம்ஹூம், நிச்சயமாகச் சொல்லலாம், இது திறக்கப்படவில்லை என்று!''

''க்ராஸ்மன், என்ன செய்ய வேண்டும், சொல்லு! மனோதத்துவ நிபுணராயிற்றே நீ!''

''உடனே அரசாங்கச் சார்பில் ஓர் அறிக்கை விட வேண்டும். மக்கள் மிகவும் குழப்பமான நிலையில் இருக்கிறார்கள். எல்லாரும் இதையே பேசுகிறார்கள்..... உற்பத்தி குறைந்துவிட்டது... உலகின் மன நிலையே பாதிக்கப்பட்டு விட்டது. செய்தி எப்படிக் கிளம்பியது என நம்மால் கண்டுபிடிக்க முடியாவிட்டாலும்...செய்திதவறானது...வெறும் புரளி' என்று அறிக்கை விட வேண்டும்...!''

''ஒரே ஒரு சந்தேகம்!'' என்றொரு வயதான குரல் கேட்டது. ''என்னய்யா ?''

''செய்தி புரளி, ஆதாரமற்றது என்று நாம் முழுமையாகத் தீர்மானித்து விட்டோமா?''

''ஏன், அதில் என்ன சந்தேகம்! நீ என்ன சொல்லப் போகிறாய்? கடவுள் வரப் போகிறார் என்றா?''

''இன்னும் பன்னிரண்டு தினங்கள்தானே, பார்த்து விடலாமே!''

''சரிதான், நீகூட மாறிவிட்டாயா? பார்த்தாயா? செய்தி எவ்வளவு தூரம் பாதித்திருக்கிறது ! பெரியவரே ! நீர் கடவுள் இருக்கிறார் என்று நம்புகிறீரா ?''

''இருக்கலாம்.''

''கடவுள் இருந்தால் இப்படி முட்டாள்தனமாகப் பேப்பரில் போட்டுக் கொண்டு, டெலிவிஷனிலே அறிவித்துவிட்டு, ஒரு சினிமா நடிகனைப் போல் இன்ன தேதி, இன்ன நேரம் என்று அறிவித்துவிட்டு வருவாரா? இதென்ன அவதாரமா ? அதுவும் திடீரென்று நம் மேல் அவருக்கு அவ்வளவு கருணை... அவதாரம் எடுக்க வேண்டிய நிர்ப்பந்தம் ! நாம் என்ன பாவம் செய்துவிட்டோமா ? நாம் என்ன கொலைகள் செய்துவிட்டோமா? எவ்வளவு சந்தோஷமாக நிம்மதியாக இருக்கிறோம் ! கடவுளுக்கு என்ன அவசியம் ?''

விஞ்ஞானப் பிரிவைச் சேர்ந்த எலய்டோ என்பவர் பேசினார். ''எனக்கு ஒரு விஷயம் முக்கியமானதாகப் படுகிறது.''

''என்ன ?''

''அந்தத் தினம்! வெள்ளிக்கிழமை.''

''அதனால் என்ன?''

''அன்று உலக பையாலஜி கேந்திரத்தில் ஒரு முக்கிய பரிசோதனை நடக்க இருக்கிறது....''

''என்ன?''

''முதன் முதலாக முழுவதும் ரசாயன அடிப்படையிலேயே மனிதக் கருவை உண்டாக்கப் போகிறார்கள் !''

'' உண்டாக்கட்டும் ! இதற்கும் கடவுளுக்கும் என்ன சம்பந்தம் ?....''

'' முதல் தடவை கடவுள் அமைத்த சிருஷ்டி நியதியை மீறப் போகிறோம்'' என்றார் பெரியவர்.

''கடவுளாவது அமைத்ததாவது.... என்னய்யா, அபத்தம் இது! சென்ற நூற்றாண்டின் இறுதியிலேயே இந்த விவாதங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்துவிட்டுக் காரண காரியங்களுக்கு எல்லாம் ஆதாரங்களை அலசித் தீர்வு கண்டுவிட்டோம். எகிப்திய ராவிலிருந்து கிரேக்கக் கடவுள்களை, ஸென் தாமஸ் அக்வினஸ், யூதர்களின் ஜெஸோவின், யங்கின் மனத் தத்துவ அடிப்படை விசாரணைகளை ஹிந்துக்களின் வேத புராணங்களை, பௌத்தத்தை, ஜைனத்தை, இஸ்லாமை, தாவிஸத்தை எல்லாவற்றையும் அலசியாகிவிட்டது. கடவுள் என்பது மனிதனின் மன அமைதிக்கு ஏற்படுத்திக் கொண்ட சித்தாந்தம். அந்த அமைதியை அளித்து விட்டால் கடவுள் என்கிற சித்தாந்தத்துக்கு அர்த்தமும் இல்லை; அவசியமும் இல்லை என்று ஆணித்தரமாக நிரூபித்து விட்டோம். எல்லாவற்றையும் ஒழித்துக்கட்டி விட்டோம் ! பள்ளிப் பாடங்களிலிருந்து கடவுளை நீக்கிவிட்டோம்! பரிசுத்த ஆவிகளையும், தந்தைகளையும் மகன்களையும்

கிருஷ்ணர்களையும் அல்லாக்களையும் ஜார துஷ்டிரர்களையும் துப்புரவாக நீக்கிவிட்டோம். எங்கிருந்து கிளம்பியது இந்தக் கரையான்?''

''இருந்தும்!''

''சரிதான்! நண்பர்களே! வோட் எடுத்துப் பார்த்துவிடலாம். நாம் இந்தச் செய்தியை நம்புகிறோமா? 'நம்பவில்லை' என்பவர்கள் கை தூக்குங்கள்!''

அந்தப் பெரியவரையும் தேர்ந்த விஞ்ஞானியான எலெம்டோவையும் தவிர மற்றவர்கள் கை தூக்கினார்கள்.

''மெஜாரிட்டி தீர்ப்பு! பரஞ்சோதி! உடனே மறுப்புச் செய்தி தயார் செய்!''

◘ ◘ ◘

''மறுப்பு விட்டிருக்கிறார்கள். கவனித்தீர்களா?''

''ஏன் உடனே மறுப்புச் செய்தி அறிவிக்கவில்லை? ஏம்பா, இன்னொரு சோமா கொண்டு வா, சாருக்கு!''

''இல்லை, நான் சாப்பிடுவதில்லை.''

''சும்மா சாப்பிடுங்கள்! தேவர்களின் பானம்போல் சோமா!''

''நீங்கள் நம்புகிறீர்களா?''

''கட்டாயம்! நிச்சயம் வெள்ளிக்கிழமை வரப் போகிறார்.''

''எனக்கு அரசாங்கம் சொல்வது போல் இது ஒரு ஜோக் என்றுதான் படுகிறது!''

''சிரிக்கப் போவது நாங்கள்.''

''கடவுள் எப்படி இருப்பார்?''

''பார்க்கப் போகிறோமே!''

'நான் சொல்கிறேன்' என்று அருகில் இருந்த ஒருவர் எழுந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டார்!

''நீங்கள் எந்தக் கட்சி?''

''கட்டாயம் வரப் போகிறார்!''

''நண்பரே! கேட்டீரா? சபாஷ்!''

''ஸார் என்ன சொல்கிறார்? கடவுள் எப்படி இருப்பார் என்று....!''

''கீதை என்று ஒரு புத்தகம் இருக்கிறது. அரசாங்கம் தடை செய்த புத்தகம். (குரலைத் தாழ்த்தி) அதன் கையெழுத்துப் பிரதி ஒன்று என்னிடம் இருக்கிறது. என்ன அபாரமான பாடல்கள் தெரியுமா?''

''என்ன சொல்கிறது?''

''அது கடவுளே சொன்ன பாடல்கள்!''

''கடவுள் பெயர் என்ன?''

''கிருஷ்ணர்! அவர்தான் கடவுள்..... கீதையில் தெளிவாகச் சொல்லியிருக்கிறார். யுகத்துக்கு யுகம் நான் தோன்றுவேன் என்று.''

''நல்ல காமிராவாக ஒன்று வாங்கிக் கொள்ள வேண்டும். ஸார், உங்கள் பெயர் என்ன? கிருஷ்ணனா?''

''கிருஷ்ணன் என்றே கூப்பிடுங்களேன்.''

''உங்களுக்குச் சரித்திரம் தெரியுமா? கிருஷ்ணன், ராமன் என்பதெல்லாம் பிற்பட்ட கடவுள்கள். ஹிந்துக்கள் முதலில் சூரியனையும், இந்திரனையும், வருணனையும் உபாசித்தார்கள். தெரியுமா?....''

''கிருஷ்ணன்தான் எல்லாம். இந்திரன், வருணன், சிவன், விஷ்ணு, நீ, நான், அந்த ஸ்டீரியோவிஷன் பெட்டி — எல்லாம் கிருஷ்ணன்தான். கீதையிலே சொல்லியிருக்கிறார்!''



''எக்ஸ்க்யூஸ் மீ! டெய்லி உங்களுக்கு ஒரு ரூபாய் மணியார்டர் வருகிறதே! யார் எதற்கு அனுப்புகிறார்கள்?''

''அடிக்கடி என் பர்ஸைத் தொலைத்து விடுகிறேன் என்பதற்காக என் மனைவி ஜனதா சாப்பாட்டுக்கு அனுப்புகிறாள்!''

''இரண்டு மூன்று நாட்களாகச் சரியாகவே சாப்பிடுவதில்லை, நீங்கள்.''

''அதிக எதிர்பார்ப்பில் எனக்கு உணவு கொள்ளவில்லை......''

''தூக்கத்தில்கூடக் கடவுள் பேத்தலா?''

''இன்னும் பத்து நாட்கள்! இன்னும் பத்து நாட்கள்!''

''எனக்கு என்னவோ சூரியன்தான் கடவுள் எனச் சந்தேகம் ஏற்படுகிறது.''

''போடி, முட்டாளே! விளம்பரத்தைச் சரியாகக் கவனித்தாயா? சூரிய உதயத்தின் போது நான் உங்கள்முன் தோன்றுவேன்.... என்று இருக்கிறதே! அப்படி என்றால் என்ன அர்த்தம்? சூரியனும் அவரும் வேறு என்றுதானே! சூரியன் அவருக்குச் சின்னசமாசாரம். அவர் சூரியனை விட மிக மகத்தானவர்.....''

''நான் அன்றைக்கு என்ன உடுத்திக் கொள்வது என்று யோசிக்கிறேன்!''

''நீ நிர்வாணமாக வந்தாலும் ஒருவரும் உன்னைப் பார்க்கப் போவதில்லை!''

''எங்கேய்யா, அட்வர்டைஸ்மெண்ட் மானேஜர்?''

''உங்களுக்காகத்தான் காத்திருக்கிறார் ஸார்.......!''

''கூப்பிடு, அவரை. இன்னும் ஏழு நாட்கள் தான் இருக்கிறது.''

''நமஸ்காரம் ஸார்.''

''என்ன, விளம்பரம் தயாராகிவிட்டதா?''

''பாருங்கள்.''

அட்வர்டைஸ்மெண்ட் மானேஜர் ஏழெட்டுப் போஸ்டர்களை விரித்தார்.

''ம்ஹூம்...ம்ஹூம்...'' என்று அவைகளை ஒவ்வொன்றாக நிராகரித்துவிட்டு... ஒரு போஸ்டரை நிறுத்தி, ''ம்... இதையே அடியுங்கள். மூன்று கோடிப் பிரதிகள் பல வர்ணத்தில்....'' என்றார்.

அந்தப் போஸ்டரில்...

''கடவுள் இருக்கிறாரோ, இல்லையோ..... கோக்கா கோலா இருக்கிறது.''

''ஹே... அக்னியே! மர்த்யனான நான் மரணமில்லாத உம்மை ஸ்துதியிலீடுபட்டு மனத்தோடு அழைக்கிறேன். குழந்தைகளுடன் யான் மரணமில்லாமல் உண்ணும்படி அன்னத்தை அளியும்!

''அக்னிதான் கடவுள்! பார்த்துக் கொண்டேயிருங்கள்! கிட்ட நெருங்கமுடி

**கல்லூரி மாணவர்கள் கவனத்துக்கு :**

''தேவன் வருகை'' என்ற இந்தக் கதையுடன் சுஜாதாவின் இந்த விஞ்ஞானக் கதைகள் தொடர் முடிவடைகிறது. ஏற்கெனவே அறிவித்தது போல் இந்த விஞ்ஞானக் கதைகளைப் படித்துள்ள கல்லூரி மாணவர்களை அவை உங்கள் உள்ளங்களில் ஏற்படுத்திய உணர்ச்சிகளை, பாதிப்புகளைப் பற்றிச் சுருக்கமாக எழுதுமாறு கோருகிறோம். பிரசுரமாகும் கட்டுரைகளுக்கு அவரவர் விருப்பப்படி புத்தகப் பரிசோ அல்லது பணமாகவோ அனுப்பி வைக்கிறோம். முடிவு தேதி செப்டம்பர் 30ல.

**ஆசிரியர், கல்கி, சென்னை - 600 031**

ஏற்கப்படாத கட்டுரைகளைத் திருப்பி அனுப்புவதற்கில்லை. கடிதப் போக்குவரத்து கிடையாது. உறைமீது விஞ்ஞானக் கதை ஆய்வு என்று குறிப்பிடவும்.

யாதபடி ஓர் அக்னி தோன்றும்! நம் எல்லோரையும் அப்படியே அணைத்துக் கொள்ளும்....''

''தீயணைக்கும் படைக்குச் சொல்லியிருப்பார்கள் என்று நினைக்கிறேன்!''

'' உங்களுக்குக் கிண்டலாக இருக்கிறது... இன்னும் மூன்று நாட்களில் தெரிந்து கொள்ளப் போகிறீர்......''

''முட்டாள்தனத்தின் சிகரம்.''

''உங்களுக்கு நம்பிக்கை இல்லை, போலும்!''

''கடவுள் வந்தால் என்ன, வராவிட்டால் என்ன.... என் தூக்கம் கெட்டுவிட்டது. பக்கத்து வீட்டில் தினம் பஜனை செய்கிறார்கள்! இதையெல்லாம் அரசாங்கம் அனுமதிக்கிறது.''

''அரசாங்கத்தால் ஒன்றும் செய்ய முடியவில்லை. நிலைமை அளவுக்கு மீறிவிட்டது.''

''ஏன்யா, எத்தனை கடவுள் இருக்கிறார்கள். ஒருத்தன் கிருஷ்ணன், ஒருத்தன் அல்லா, ஒருத்தன் யேசு! நீர் புதுக் கட்சி! அக்னி! எத்தனை பேர் அய்யா தோன்றப் போகிறார்கள்..... அங்கே இடம் இருக்குமா?''

''அக்னிதான் கடவுள்!''

''அது சரி! நம் ஊரிலே எங்கே தோன்றப் போகிறார், மிஸ்டர் அக்னி!''

'' ஊருக்கு வெளியே பெரிய மைதானம் இருக்கிறது. அங்கேதான் எல்லாரும் கூடுகிற அளவு இடம் இருக்கிறது. இப்போதே ஜனங்கள் அமைதியாய்க் கூடித் தரிசிப்பதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்கிறார்கள். நீங்கள் வருகிறீர்கள், இல்லையா?''

'' நான் வரவே போவதில்லை.''

'' ஏன்?''

'' வீட்டிலே ஸ்டீரியோவிஷனில் நல்ல கலரில் காட்டுவார்கள். கூட்டம் இல்லாமல் பார்க்கலாம். அதிகாலையில் எழுந்து கூட்டத்தில் "மோதியடித்துக் கொண்டு யார் போவார்கள்?''

''**நா**சம், நாசம்'' என்றார் ஆத்மா.

'' என்ன செய்வது ஆத்மா! இந்த ஹிஸ்டீரியாவை எதிர்பார்க்கவில்லை....''

'' என்னதான் மறுப்புவிட்டாலும் அந்த முட்டாள் ஜனங்களுக்கு மண்டையில் ஏறவில்லையே?''

''இன்னும் இரண்டு நாட்கள்தானே! பல்லைக் கடித்துக் கொண்டு.... எக்கேடு கெட்டுப் போங்கள் என்று இருக்க வேண்டியதுதான்.''

''கூட்டம் அதிகம் இருக்கும்.''

'' என்ன செய்வது! அதற்கான போலீஸ் பந்தோபஸ்துக்கள் செய்தாக வேண்டும்!''

''தலைவர் என்ன சொல்கிறார்?''

''அவரும் இந்த விளையாட்டு எதில் முடிகிறது என்று பார்த்துவிடலாம் என்கிறார். ஜனங்கள் முண்டியடித்துக்கொண்டு சாகாமல் இருந்தால் சரி..... பரஞ்சோதி, ஒரு முக்கியமான விஷயம்..... கூட்டம் முடிந்தபின்தான் கவனமாக இருக்க வேண்டும்.... கலக மக்கள் கல்லடி எதுவும் ஏற்படக் கூடாது.......''

''பார்த்துக் கொள்கிறேன். நீங்கள் வருகிறீர்களா?''

'' நானா!'' என்று சிரித்தார்.

**அ**ந்த வெள்ளிக்கிழமை.

மனித மைதானம். சூரியன் இன்னும் உதயமாகவில்லை. மெல்லிய வெளிச்சம் வர ஆரம்பித்திருந்தது. அந்த இடத்தில் இருந்த அத்தனை அத்தனை மனிதர்களின் எண்ணிக்கைக்கு ஆரவாரம் கம்மியாக இருந்தது.

ஓர் எதிர்பார்ப்பு காற்றில் தொங்கியது.

''கிருஷ்ணா! கிருஷ்ணா! மறுபடியும் வா!''

''யேசுவின் இரண்டாவது வருகை!''

''தால்தான் கடவுள்!''

''அல்லாதான் எல்லாம்!''

''ஜாரதுஷ்டிரதை வரவேற்கிறோம்!''

'' அவன் சிவன்!''

— என்று அங்கங்கே அட்டைகளில் ஒட்டிய எழுத்துக்கள் நடனமாடின. பலவித ராகங்களில் பாடல் திட்டுக்கள் சிறிய சிறிய ஹோமங்கள், பூக்கள், காமிராக்கள்...... ஸ்டீரியோவிஷனின் டாலிக்கள் ஆர்க் விளக்குகள்....விளம்பரங்கள்...

சூரிய உதயம் ஐந்து ஐம்பத்தெட்டுக்கு.....

மணி ஐந்து ஐம்பத்து ஏழு. ஆரவாரம் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து அடங்கி.. மௌனம் மிக மிக மௌனம்..... தூரத்தில் மெதுவாகச் சோலையைஅலைக்கும் காற்று கேட்டது..... உறங்கி எழுந்த பட்சிகளின் உற்சாகக் குரல்கள் கேட்டன.... எல்லோரும் எல்லோரும் எதிரே தனியாக அமைக்கப்பட்டிருந்த அந்தக் காலி இடத்தை எதிர்நோக்கி இருந்தார்கள்.....

ஐந்து ஐம்பத்து எட்டு.

**ஆறுமணிக்கு அவர்கள் வீடு திரும்பினார்கள்.**

புதிய

# டால்ஃப்®

# மூட்டைப் பூச்சித் தொல்லையிலிருந்து 100% உத்தரவாதம்

## வாரக்கணக்கிலும் ...குறைந்த செலவிலும்



புதிய டால்ஃப, மூட்டைப பூச்சிகளை ஒழிந்து, உங்களுக்கு 100% விடுதலை அளிக்கிறது.



புதிய டால்ஃப், தெளிக்கப்பட்ட இடத்தில் வாரக்கணக்கில் தங்கிச் செயலாற்றுகிறது. (அது தெளிக்கப்பட்ட இடத்திலிருக்கும் வீரியமுள்ள மருந்துப் படலத்தைத் துடைத்து விடாதீர்கள்)

**நெடுங்காலம் 'தங்கிச் செயலாற்றும்' அபார சக்தி!**

சக்தி வாய்ந்த புதிய டால்ஃப் மூட்டைப் பூச்சித் தொல்லையிலிருந்து வாரக்கணக்கில் உங்களுக்கு விடுதலை அளிக்கிறது. ஏனெனில், அதன் இணையற்ற 'தங்கிச். செயல் புரியும் ஆற்றல்' நெடுங்காலம் நீடிக்கிறது.

**மிகுந்த சிக்கனம்!**

புதிய டால்ஃப் மிகவும் சிக்கனமானது. முதலில், இதற்காகும் செலவு மிக மிகக் குறைவு. இரண்டாவது, இது நெடுங்காலம் 'தங்கிச் செயல் புரிவதால்', பல வாரங்கள் வரை, நீங்கள் இதை மீண்டும் தெளிக்க வேண்டாம்!







புதிய
50 மி.லி.
பேக்!
ரூ. 2.47
மட்டுமே.
வரிகள் தனி

OBM/6788 TM

**டால்ஃப்®**

மூட்டைப் பூச்சிகளின் தொல்லையிலிருந்து பூரண விடுதலை

# போட்டிக்கதை:—4

கார் ஹாரன் சத்தம் கேட்டவுடனேயே கூர்க்கா அவசரமாகக் கேட்டைத் திறந்து விட்டு விறைப்பாக ஸல்யூட் அடித்தான். அந்தப் பளபளப்பான பியட் கார் புல்வெளியைச் சுற்றி வந்து போர்டிகோவில் நின்றது. கூர்க்கா கேட்டைத் திரும்ப மூடுவதற்குள் 'விர்'ரென்று பறந்து காரின் அருகில் வந்து நின்றது ஒரு வெஸ்பா ஸ்கூட்டர்.

''டாடீ! நான் உங்களை எவ்வளவு நேரமாகத் தொடர்கிறேன், நீங்க திரும்பிப் பார்க்கவேயில்லையே?'' என்று வேர்த்து, விறுவிறுக்கத் 'தொப்'பென்று ஸ்கூட்டரிலிருந்து குதித்தாள் நிருபமா. வெள்ளை முழுப் பாண்டும், 'ப்ரெட்பரி' பனியனும், கையில் டென்னிஸ் மட்டையுமாக நின்ற மகளைப் பார்த்துப் பெருமிதத்துடன் சிரித்தார் நரசிம்மன். ''ரோட்டிலே போறவங்கள்ளாம்தான் யார் இந்த வெண் துகிலுடுத்த தேவதைன்னு திரும்பித் திரும்பிப் பார்க்கிறாங்களே, நானும் பார்க்கணுமா என்ன?''

''போங்க டாடீ!'' என்று கொஞ்சினாள் நிருபமா. மகளை அணைத்தவாறே வீட்டுக்குள் நுழைந்தார் நரசிம்மன்.

அவருக்கு என்றுமே தம் மக்களைப் பற்றி அலாதிப் பெருமையுண்டு. சமுதாயத்தின் கீழ் மட்டத்திலிருந்து சொந்த முயற்சி ஒன்றால் மட்டுமே மேலேறி இன்று ஒரு பெரிய இன்ஜினீயரிங் கம்பெனியின் எக்ஸிக்யூடிவ் டைரக்டராகி இருப்பவர் அவர். தம் குழந்தைகளிடம் அறிவையும், பண்பையும் வளர்க்க அவர் பெரும் பாடு பட்டிருந்தார்.

சாதாரண நிலையில் இருந்தபோதும்கூட காலையில் ஆறு மணிக்கே பத்து வயது ரவியையும், எட்டு வயது நிருபமாவையும் பஸ் ஏறி ஒய். எம். ஸி. ஏ. நீச்சல் குளத்தில் பயிற்சிக்கு அழைத்துச் செல்வார். எங்கு மதச் சொற்பொழிவானாலும் சரி, நவீனபாணி ஓவியக் கண்காட்சியானாலும் சரி குழந்தைகளுடன் சென்று அவர்கள் கலை ஆர்வத்தையும் மத ஞானத்தையும் வளர்ப்பார். அதிகம் படித்திராத அவர் மனைவி சரஸ்வதிக்கு இதெல்லாம் ஒரு வேடிக்கையாகவே இருக்கும். ஆனால் தன் கணவரின் முயற்சி எப்படிப்பட்ட பலனை அளித்திருக்கிறது என்று அவளுக்கு இப்போது புரிகிறது.

ரவி இன்று பொறியியல் கடைநிலை மாணவன். வகுப்பில் ஒவ்வொரு வருடமும் முதல். கிரிக்கெட்டில் மாகாண ஆட்டக்காரன். கிதார் வாசிக்கிறான். ஆங்கில சங்கீதம் பாடுகிறான். கவிதை எழுதுகிறான். தற்கால நாகரிகத்துக்கேற்பப் பிடரி வரை முடி வளர்த்திருந்தாலும் எவரையும் மதிக்கும் பண்பின் உறைவிடமாக இருக்கிறான்.

பெண்களை வீட்டில் அடைத்து வைக்கும் பட்டிக்காட்டுத்தனம் பிடிக்காத நரசிம்மன் நிருவைப் பாரதியின் புதுமைப் பெண்ணாகவே உருவாக்கியிருந்தார். நிரு நல்ல அழகு. பேசும்போது அதிராது. அடக்கமாக, ஆனால் கம்பீரமாக ஓடும் நதியின் அழகு இருக்கும். பண்பு ஒளி வீசும். திறமை



பளிச்சிடும். புடவையை இழுத்துக் கட்டிக் கொண்டு அம்மாவுக்குச் சமையலறையில் உதவுவாள். சௌந்தரிய லஹரி சொல்வாள். பாண்டும், ஸ்கர்ட்டும் அணிந்து கொண்டு, டென்னிஸும் விளையாடுவாள். பி.காம் பரீட்சை தேறி, எம். பி. ஏ. என்ற நிர்வாகப் படிப்புப் படிக்கிறாள். பரதத்தில் தேர்ந்த பயிற்சி பெற்றிருக்கிறாள். கர்னாடக சங்கீதம் பாடுவாள். ஆங்கில சங்கீதத்திலும் லயிப்புண்டு. ஞாயிறு ஓவியர் சங்கத்தில் அவள் ஒரு புள்ளி.

நரசிம்மன் டிபன் சாப்பிடுவதற்குள் நிரூ குளித்து உடை மாற்றிக் கொண்டு வந்தாள்.

''டாடீ! உங்க ஈவினிங் புரோக்ராம் என்ன?''

''மாலையிலே ஒண்ணும் வேலை இல்லேம்மா. ராத்திரிதான் கிளப்பில் காக்டேல் டின்னர். இன்னிக்கு வருடாந்தர போர்ட் மீட்டிங் நடந்தது. அதற்கு மங்களம் இந்த டின்னர்.''

''இந்த டைரக்டர்களுக்கெல்லாம் வேறு வேலையே கிடையாதா டாடீ? பம்பாயிலிருந்தும், டெல்லியிலிருந்தும் விமான டிக்கட் வாங்கி வரதும், இங்கே ஐந்து நட்சத்திர ஹோட்டலில் தங்கி வயிறு முட்டச் சாப்பிட்டுவிட்டுக் குடித்துவிட்டுக் கம்பெனி தலையில் பில்லைக் கட்டுவதும் தவிர? ஐ ஆம் ஷ்யூர், உங்க டைரக்டர்களில் பாதிப் பேருக்கு பாலன்ஷீட்டைக்கூடப் படிக்கத் தெரியாதுன்னு.''

''அதெல்லாம் தெரிந்த விஷயங்கதானே?'' என்று நரசிம்மன் சூள்கொட்டினார்.

''டாடி! நாளைக்குப் பாஸ்கருக்குப் பிறந்த நாள். ஏதாவது பரிசு வாங்கணும்.'' தந்தையின் கழுத்தைக் கட்டிக் கொண்டாள் நிரூ.

''அதுக்கென்னம்மா, சீக்கிரமே போயிட்டு வந்துடலாம்.''

தந்தையும் மகளும் கடைக்குக் கிளம்புவதைப் பார்த்த சரஸ்வதி, ''அப்படியே வேஷ்டி, துண்டு எடுத்திட்டு வந்துடுங்க. நாளைக்கு ஒங்க ஐயா திதி. அய்யரைப் படையலுக்கு வரச் சொல்லியிருக்கிறேன்'' என்று ஞாபகமூட்டினாள்.

அந்த மாபெரும் டிபார்ட்மென்டல் ஸ்டோரில் பலருக்கும் நரசிம்மனைத் தெரிந்திருக்தது. அவர் மானேஜருடன் பேச்க் கொண்டிருக்கும் போதே நிரு பாஸ்கருக்குப் பரிசாக ஒரு நீல் டயமண்டும், ஒரு விக்டர் ஸில்வஸ்டருமாக இரண்டு ஸ்டீரியோ ரிகார்டுகள் எடுத்து வந்தாள்.

''டாடி! தொண்ணூத்திரண்டு ரூபாய் ஆகிறதே, அதிகமா?''

'' பரவாயில்லேம்மா. விலையைப் பற்றிக் கவலைப்படாதே. உனக்கு எது பிடிக்கிறதோ, எடுத்துக் கொள்.''

உஷா சுப்பிரமணியன்



நண்பர்: (பார்க்கில்) ஏன் சார், கடன்காரர் தொந்தரவுக்குப் பயந்து கொண்டு இருட்டும்வரை இப்படி பார்க்கிலேயே அமர்ந்திருந்தால் எப்படி? காலாகாலத்தில் வீட்டுக்குப் போங்கள்.

மற்றவர்: எப்படி சார் வீட்டுக்குப் போவேன்? கடன் வாங்கி இருப்பதே, என் மனைவியிடமாயிற்றே!

---

மானேஜர் பில் புத்தகத்தை எடுத்து வந்தார். அதன் அடியில் கையொப்பமிட்ட நரசிம்மன், "நாளைக்கு அகவுண்டண்டுக்கு வவுச்சர் அனுப்பிவிடுங்கள்" என்றார்.

இரவு மணி ஒன்று. போர்டிகோவிலும் முன் ஹாலிலும் விளக்கு எரிந்தது. சரஸ்வதி அம்மாள் ஓய்வில்லாமல் உலாவிக் கொண்டிருந்தாள். பரீட்சைக்குப் படித்துக்கொண்டிருந்த ரவி மாடியிலிருந்து கீழிறங்கி வந்தான்.

"ஏம்மா, இன்னும் படுக்கப் போகலையா?"

"என்னப்பா செய்யறது? உங்கப்பா வீடு வந்து சேரும் வரையில் மனம் நிலைகொள்ள மாட்டேங்கறதே. அதுவும் போன வருடம் இருதயக் கோளாறு வந்தபோது டாக்டர் மதுவே கூடாதுன்னு சொன்னதிலிருந்து 'காக்டெயில் பார்ட்டி' என்றால் மனம் 'பக் பக்' என்று அடிச்சுக்கிறது."

ரவி பதில் ஒன்றும் பேசவில்லை.

நரசிம்மன் தள்ளாடியவாறு உள்ளே நுழையும்போது மணி மூன்றைக் கடந்திருக்கும்.

"ஏங்க இவ்வளவு லேட் ஆயிடிச்சே? நான் ரொம்பக் கவலைப்பட்டேன்."

"ஸோ வாட்? நீ தூங்குவதுதானே?" அவர் குரல் உயர்ந்திருப்பதிலிருந்து உள்ளே சரக்கு சற்று அதிகமாகவே ஏறி இருப்பது அவளுக்குப் புரிந்தது.

"டாடீ! மணி எட்டாகி விட்டதே. நீங்க எழுந்திருக்கவில்லையா?" நிரு கர்ட்டனை விலக்கிக்கொண்டு எட்டிப் பார்த்தாள்

மனைவியை எதிர்பார்த்த அவருக்கு மகளின் வரவு சலிப்பை அளித்தது.

"அம்மா என்ன செய்யறா?"

"குளிச்சிட்டு இப்பத்தான் பூஜை அறைக்குள் போனாங்க."

"சரி. நீ போய் அம்மாவைக் கூப்பிடு." நிரு அவரை விநோதமாகப் பார்த்துவிட்டுக் கீழிறங்கிச் சென்றாள்.

"என்னங்க உடம்பை ஏதானும் செய்யுதா?" கலவரத்துடன் மாடி ஏறி வந்தாள் சரஸ்வதி. முடிச்சிட்ட தலையிலிருந்து ஈரம் சொட்டியது. முகத்தில் மஞ்சள் துலங்கியது. அப்போதுதான் செடியிலிருந்து பறித்த மலர் போல் ஒரு புதுமையும், மென்மையும் அவள் முகத்திலும் உடலிலும் பரவி நின்றது.

"என்னங்க அப்படிப் பார்க்கிறீங்க? நெஞ்சு வலிக்குதா?"

நரசிம்மன் சடாரென்று அவள் கையைப் பிடித்து இழுத்தார். சரஸ்வதி நிலைகுலைந்து அவர் மேல் சாய்ந்தாள்.

"ஐயா திதியாச்சேன்னு நான் காலையிலே குளிச்சுப் புதிசு உடுத்திட்டேன். இது சரியில்லைங்க." சரஸ்வதியின் மறுப்புக்களும் பொங்கும் கண்ணீரும் அவமானமும் குற்ற உணர்வும் மூடிய கதவின் பின் கரைந்தன.

படிஇறங்கும்போதே ரவி எதிரில் வந்தான். "அய்யரு வந்து பத்து நிமிஷமாகக் காத்துக்கிட்டிருக்காரு. கூப்பிட வந்தேன்..."

குற்ற உணர்வுடன் தன்னைப் பார்க்கத் திராணியற்று வேறெங்கோ நோக்கும் தாயைப் பார்த்தான்.

"அவரை உட்காரச் சொல்லி, தவிசுப் பிள்ளையிடம் காப்பி கொடுக்கச் சொன்னேன்" என்று சகஜமாகச் சொல்லிவிட்டு நகர்ந்துவிட்டான்.

இன்பமாக விடிந்திருந்த காலைப் பொழுதின் பிரதிபலிப்பாக அய்யருக்கு வெற்றிலை, பாக்கு, அரிசி வேஷ்டியுடன் நூறு ரூபாயும் கிடைத்தது. "என்ன இருந்தாலும் உங்க பெரிய மனசு யாருக்கு வரும்?" என்று பிருகஸ்பதி குறுகி நின்றார்.

ஆபீஸுக்குக் கிளம்பும்போது சரஸ்வதியைக் கூப்பிட்டார் நரசிம்மன். "இன்னிக்கு ஏழாந்தேதி பார். மறக்காம நம்ம தவிசுப் பிள்ளை, தோட்டக்காரன், வேலைக்காரன் மூணு பேரையும் நாலரை மணிக்குத் தொழிற்சாலைக்கு வரச் சொல்."

"சரிங்க."

"என் டாடி! அய்யருக்கும் ஆபீஸ் கணக்கில் பணம் தர முடியாதா? 'பாக்டரி ப்ரீஸ்ட்' என்று?" நிரு குலுங்கக் குலுங்கச் சிரித்தாள்.

"டோன்ட் ஒரி. அப்பா அதை வேறு எங்காவது எக்ஸ்பென்ஸ் அக்கௌண்டில் சேர்த்து விடுவார்." ரவி அவளுக்குப் பதிலளித்தவாறு ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான்.

எக்ஸிக்யூடிவ் டைரக்டர் என்ற முறையில் இரண்டு வேலைக்காரர்களை அமர்த்திக்கொள்ளும் சலுகை இருந்தும், அதனால் வரும் வரித் தொந்தரவைத் தவிர்க்க வீட்டு வேலைக்காரர்களுக்கு பிட்டர், டர்னர், வெல்டர் என்று தொழிற்சாலையில் சம்பளம் கொடுப்பது பலர் அறிந்தும் கண்ணை மூடிக் கொண்ட விஷயம்.

ந[illegible] ஆபீஸிலிருந்து கிளம்பும் சமயத்தில் அவருடைய பிரத்யேக காரியதரிசி அவருக்குப் போன் கால் வந்திருப்பதாக அறிவித்தான்.

பாபு: மளிகைக் கடை செட்டியார் பொம்மைக்குப் பக்கத்தில் என்ன எழுதி வைச்சிருக்கே?

ஸ்ரீதர்: விலைப் பட்டியல்.

—ல. செ.



''ஹலோ மிஸ்டர் நரசிம்மன், நான் உங்கள் மகன் ரவியின் டிபார்ட்மென்ட் தலைவர் குப்தா பேசுகிறேன்.''

''வணக்கம் குப்தா! நான் இதுவரை உங்களைச் சந்தித்ததில்லை என நினைக்கிறேன்.''

''உண்மைதான். ஆனால் நாம் கட்டாயம் சந்தித்தே ஆக வேண்டும். ரவியைப் பற்றி உங்களிடம் விவரமாகப் பேச வேண்டும்.''

''ரவியைப் பற்றியா? வாட் ஈஸ் ராங் வித் ஹிம்?''

''மிஸ்டர் நரசிம்மன், நீங்கள் நினைப்பது போல் பதற்றப்படக் கூடிய விஷயமில்லை இது. டெலிபோனில பேச முடியாது. ஆறு மணிக்கு என்னைச் சந்திக்க முடியுமா?''

''கட்டாயம் உங்களை உங்கள் கல்லூரி வாயிலில் ஆறு மணிக்குச் சந்திக்கிறேன். நன்றி.''

'ரவியைப் பற்றிப் பேச என்ன இருக்க முடியும்? இந்த வருடம் படிப்பு முடிந்ததும் அவனை அமெரிக்காவுக்கு அனுப்பி எம். ஐ. டி.யில் மேல் படிப்புப் படிக்க வைக்க வேண்டும் என விரும்புகிறேன். அவன் அறிவுக்கும், ஆற்றலுக்கும் நிச்சயமாக எங்கே போனாலும் சுடர் விடுவான். ஏதாவது காதல் விவகாரமா? அப்படி இருந்தாலும் என்னிடம் நேரிலேயே சொல்லி யிருக்கலாமே? நீரு தொழிலதிபர் நாகலிங்கம் பிள்ளையின் மகன் பாஸ்கருடன் அதிகம் பழகுகிறாள் என்று தெரிந்தும்கூட உண்மைக் காதலுக்கு ஜாதி, மத வித்தியாசமோ, பெற்றோரின் மறுப்போ தடையாக இருக்கக் கூடாது என்றுதானே காதல் மணமாகும் சூழ்நிலையையே உருவாக்கித் தருகிறேன்? ரவி ஏன் என்னிடம் எதையும் மறைக்க வேண்டும்?'' நரசிம்மன் குழம்பினார்.

மிஸ்டர் குப்தா சொன்ன விஷயத்தைக் கேட்டவுடன் அவர் அதிர்ந்து விட்டார். ''நீங்கள் சொல்வது உண்மைதானா?'' அவர் உடலின் ஒவ்வொரு அணுவும் குலுங்கியது. இது எப்படி நடக்க முடியும்?

''உங்கள் பிள்ளை படிப்பில் அதி கெட்டிக்காரன். ஒப்புக் கொள்கிறேன். விளையாட்டில் மன்னன்தான்.. ஆனாலும் வாழ்வில் சரி, தவறு என்று பகிர்ந்துரைக்கும் 'வால்யூஸ்' இல்லையே. அதனால் துளிர்த்துத் தழைவிட வேண்டிய தளிர் வாடுவதைப் பார்க்க முடியாமல்தான் உங்களிடம் சொல்கிறேன். நீங்கள் பதற்றப்படாமல், அவனுக்கு ஏதாவது மனோதத்துவ ரீதியான காம்ப்ளெக்ஸ் இருக்கிறதா என்று பாருங்கள்.''

''அவனுக்கு என்ன காம்ப்ளெக்ஸ் இருக்க முடியும்? அவனுக்கு நான் பண்பையும், அறிவையும், மரபையும் ஊட்டி யிருக்கிறேன். எத்தனை மனோதத்துவப் புத்தகங்கள் படித்திருப்பேன்? இன்னும் அவனுக்கு எந்தப் பிரச்னை இருந்தாலும் தந்தையாக இல்லாமல், தோழனாக அவனிடம் விவாதிக்கிறேன். எனக்கு ஒன்றும் புரியவில்லையே புரொபஸர்?'' நரசிம்மன் இடிந்து விட்டார்.

''ரவி இத்தனை நேரம் வீடு சேர்ந்திருப்பான். பரீட்சைக்குப் படிப்பதற்காக நண்பர்களுடன் ஹாஸ்டலில் தங்கி இருந்தவன் ஹெரோயின் போதையில் நினைவிழந்து கிடந்ததோ, டாக்டர் அவன் ஓர் 'அடிக்ட்' என்று சொல்லிச் சிகிச்சை அளித்ததோ தெரியாதது மாதிரி நடியுங்கள். பரீட்சைக்குப் பத்து நாட்கள் கூட இல்லை. நீங்கள் கண்டித்தால் அவன் கட்டாயமாக எதிர்ப்பான். ஒரு வருடம் வீணாகி விடும். அவனுக்குத் தரும் பணத்தைக் குறையுங்கள். படிப்பில் ஆர்வத்தை ஊட்டுங்கள். இந்த நிலையில் அவ்வளவுதான் நாம் செய்ய முடியும்.''

''புரொபஸர், நான் அதிகம் குழந்தைகளுக்குப் பாக்கெட் மணி தருவதே கிடையாது. அதுவும் மாத முடிவில் குடும்பத்தில் அனைவரும் ஒன்று கூடிக் கணக்கெழுதி, எந்தச் செலவு நியாயமானது, எதைக் குறைத்திருக்கலாம் என்று விவாதிப்போம்.''

''நான் உங்களைக் குறைகூறவில்லை மிஸ்டர் நரசிம்மன். நீங்கள் ஒரு லட்சியத் தந்தையாகத்தான் இருக்கிறீர்கள். ஆனால் மாதம் இருநூறு ரூபாய்க்கு மேல் போதைப் பொருளில் செலவழிக்க அவனுக்கு எங்கிருந்து பணம் வருகிறது?''

''அதுதான் எனக்கும் புரியவில்லை.''

நரசிம்மன் கனக்கும் இதயத்துடன் வீடு வந்து சேர்ந்தபோது, ரவி வெளியே கிளம்பிக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் வாட்டமோ, குற்ற உணர்வோ இம்மியும் இல்லை.

''எப்போது ரவி ஹாஸ்டலிலிருந்து வந்தாய்?''

''ஐந்து மணிக்கு.''

''நன்றாகப் படித்தாயா?''

''ம்...ம்.''

நரசிம்மன் பெருமூச்சுடன் வீட்டினுள் நுழைந்தார். ரவி அவரைத் தொடர்ந்தான்.

''டாடி, நான் காரைஎடுத்திட்டுப் போகட்டுமா, மாம்பலம் வரைதான்.''

''ஓ. கே.''

காரை எடுத்துச் செல்லும் ரவியை ஏமாற்றத்துடனும் ஏக்கத்துடனும் பார்த்தார். ஆறு வயதில் நீச்சல் குளத்தருகில் அவர் கையை இறுகப் பற்றிக் கொண்டு, ''நான் தண்ணீரில் இறங்கமாட்டேன். மூழ்கி விடுவேன்'' என்று சண்டித்தனம் செய்த இவனா, இன்று ஆளையே மூழ்கடிக்கும் போதைப் பொருட்களில் நீஞ்சியும், மிதந்தும் களிக்கிறான்?

''ஏங்க என்னவோ போல் இருக்கீங்க?''

''ஒண்ணுமில்லை, ஸரஸா, மனசே சரியில்லை.''

''ஆபீஸிலே வேலை அதிகமா?''

''ம் ...''

நீரு பாஸ்கரை அழைத்து வந்தாள். பாஸ்கரின் வாசில். நரசிம்மன் ரவியைப் பற்றிச்



"நான் தப்புத் தாளம் போட்டால், என் தலையில் நீ எத்தனை குட்டு வேண்டுமானாலும் குட்டலாம்; நயினா!"

சிறிது நேரம் மறந்தார். பாஸ்கர் 'எக்ஸைஸ்' வரிக் குறைப்பைப் பற்றிப் பேசினான். நரசிம்மன் அவனது கண்ணியத்தையும் வியாபாரத் திறமையையும் மனதார மெச்சிக் கொண்டார். நிரு, பாஸ்கருக்கு ரிகார்ட் போட்டுக் காட்டினாள். சிற்றுண்டி அளித்தாள். பத்தே நிமிடங்களில் திரும்பி வந்த ரவியும் பேச்சில் அவர்களுடன் கலந்து கொண்டான். பாஸ்கர் கிளம்பும்போது "நானே உன்னை ட்ராப் செய்து விடுகிறேன்" என்று அவன் மறுப்பையும் பொருட்படுத்தாமல் கிளம்பினார் நரசிம்மன்.

காரை ஸ்டார்ட் செய்யும்போது அவர் விழிகள் பெட்ரோல் அளவுகோலின் மேல் படிந்தது. வீட்டுக்கு வரும் வழியில்தான் முழு டாங்க் பெட்ரோல் போட்டார். இப்போது ரிஸர்வ்வுக்கு அருகில் நிற்கிறதே! ரவி பத்து நிமிடங்களில் எவ்வளவு சுற்றியிருந்தாலும் இரண்டு லிட்டருக்கு மேல் செலவழிந்திருக்காதே?

திடீரென அவர் முன் ஒரு முடிச்சவிழ்ந்தது. ஒரு மாபெரும் உண்மை புலனாயிற்று. ரவி காரிலிருந்து பெட்ரோல் எடுத்திருக்கிறான். ட்யூப் போட்டு உறிஞ்சி எந்த டாக்ஸி டிரைவரிடமோ விற்றிருக்கிறான். தற்போது பெட்ரோல் விற்கும் விலையில் ஒரு நாளைக்கு இரண்டு லிட்டர் பெட்ரோல் எடுத்தால்கூட மாதம் இருநூறு ரூபாய் ஆயிற்றே?"

"ரவீ..." வீட்டுக்குள் நுழையும்போதே நரசிம்மனின் குரல் கர்ஜனையாய் ஒலித்தது.

"என்னப்பா?"

"காரை எங்கே எடுத்துக் கொண்டு போனாய்?"

பதிலில்லை.

"பெட்ரோல் எடுத்தாயா?"

ரவி தைரியமாக நிமிர்ந்தான். "யெஸ். ஒவ்வொரு சமயம் ஸ்கூட்டருக்குப் பெட்ரோல் தேவைப்படும்போது காரிலிருந்து உறிஞ்சிப் போட நீங்கள் அனுமதித்ததில்லையா?"

"அது வேறு விஷயம். நீ இப்போது ஸ்கூட்டருக்குப் போடவில்லை. விற்றிருக்கிறாய்."

"தட் ஈஸ் கரெக்ட். ஆனால் இரண்டுக்கும் என்ன வித்தியாசம்?" ரவி கோபாவேசமாக நிற்கும் தந்தையை நிமிர்ந்து பார்த்தான். "ஆப்டர் ஆல், இது என்ன உங்கள் சொந்தப் பணத்தில் வாங்கிய பெட்ரோலா? தவிசுப் பிள்ளை, தோட்டக்காரன், மாதிரி இதுவும் ஒரு கம்பெனிக் கணக்கு. அவ்வளவுதானே? கவலைப்படாதீர்கள்."

பிரமை பிடித்தாற்போல் நிற்கும் தந்தையைத் தாண்டிக் கொண்டு நிதானமாக அலட்சியமாக மாடி ஏறினான் மகன்.

நிம்மதியற்ற மனத்துடன் படுக்கையில் புரண்டு கொண்டிருந்தவரை மெல்ல வருடினாள் சரசு.

",நீங்களே மனசு நிம்மதியில்லாமல் தவிக்கிறீங்க. உங்களிடம் எப்படிச் சொல்றதுன்னு தெரியல்லே. சொல்லாமலும் இருக்க முடியலே."

"என்ன ஸரஸீ?"

"சாயங்காலம் ரொம்பத் தலைவலியாக இருந்தது. தலைவலி மாத்திரை நிருவிடம் இருக்கும் என்று அவள் அறையில் பார்த்தேன். எனக்கு எப்படிச் சொல்றதுன்னு தெரியலீங்க." சரஸ்வதி விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள்.

"கலங்காமல் சொல்லு சரஸு, என்ன ஆச்சு?"

"அவ டிராயரிலே... அடியிலே... கர்ப்பத் தடை மாத்திரை பாதி தீர்ந்த பாக்கெட் இருந்ததுங்க. நம்ம பெண் இந்த மாதிரி செய்யுமாங்க? எனக்குத் தாங்கலீங்க. போன வாரம் முழுகியதிலேருந்து கணக்கா அஞ்சு மாத்திரை சாப்பிட்டிருக்கா. நீங்கதான் என்னவோ பாஸ்கருடன் இவ்வளவு பழக விட்டீங்க? இந்த வயசிலே பஞ்சும், நெருப்பும் மாதிரி. பத்திக்கிட்டாலும், ஊரறியாம இருக்கப் பிள்ளைங்க கத்துக்கிட்டாங்க. கல்யாணத்துக்கு முன்னே அப்படியா? படிச்ச பொண்ணு எப்படிங்க மனசு ஒப்பி இந்தக் காரியம் செய்யறா?" புலம்பிப் புலம்பி அழும் மனைவியைச் செய்வதறியாது பார்த்தார் நரசிம்மன்.

"ஸரஸு, வீணா மனசை நோகடிச்சுக்காதே. அவளுக்கு இத்தனை மத நூல்களைப் படிச்சும், தத்துவம் புரிஞ்சுண்டும் கூட சரி, தவறு எதுன்னு விளங்கல்லேன்னு நினைக்கிறேன். நீ நிருவுடன் பக்குவமாகப் பேசிப் பார். சீக்கிரமாக் கல்யாணத்தைச் செஞ்சுப்புடலாம். அப்புறம் படிக்கட்டும்."

"நான் எந்த வாயை வைத்துக்கொண்டு பேசுவேன்? இப்பத்தான் உங்க பிள்ளை உங்களைக் கேட்டுவிட்டுப் போகிறான், பகிரங்கத் திருட்டைக் கம்பெனிக் கணக்கிலே எழுதுவதுதானே என்று. பெண் என்னைப் பார்த்துக் கேட்க வேண்டியதுதான் பாக்கி, 'பட்டப் பகலில், சுற்றம், சூழல் பாராது சபலத்துக்குச் சோறு போடும் நீங்கள் கட்டுப்பாடு பற்றி எனக்கு வாத்தியாரா?' என்று."

"நான் என் குழந்தைகளுக்கு அறிவைக் கொடுத்தேன் சரஸு. பழகும் கலை கற்பித்தேன். திறமையைச் செதுக்கினேன். ஆனால் 'மாரல் வால்யூஸ்' வழிமுறை, வழிமுறையாக வரும் பிதுரார்ஜித சொத்துத்தானே? அந்தச் சொத்தை நான் மனதாரக் கறுப்புப் பணமாக அல்லவா சேர்த்து விட்டேன். நான் என் குழந்தைகளிடம் எப்படிக் கணக்குக் கேட்பேன்?" என்று மனைவியுடன் சேர்ந்து குழந்தை போல் மனம் விட்டு அழுதார் நரசிம்மன்.

நினைவு நாள்



திருமதி சீதாலக்ஷ்மி அம்மாள்
திருச்சிராப்பள்ளி

சென்ற ஆண்டு இந்நாள் (30-9-1975) இறைவனடி சேர்ந்த எங்கள் அன்னைக்கு அஞ்சலி.

இப்படிக்கு
குடும்பத்தினர்

**ரா**மசேஷன் இடிந்து போய் உட்கார்ந்திருந்தார். என்ன தவம் செய்து இப்படி ஒரு பிள்ளையைப் பெற்றோம்? இவனுடைய திருவிளையாடல்களுக்கு ஒரு முடிவே கிடையாதா?

எட்டாம் வகுப்பை மூன்றாம் தடவையாக முற்றுகை செய்தபோது, சொல்லிக் கொள்ளாமல் பம்பாய் ஓடி விட்டான். அங்கு என்னென்ன செய்து கொண்டிருந்தானோ, தெரியாது, மூன்று மாதங்களுக்குப் பிறகு திரும்பி வந்து சேர்ந்தான். அவர் அவனை ஒன்றுமே கேட்கவில்லை. நாலைந்து மாதங்கள் வீட்டிலேயே அடைந்து கிடந்த பிறகு, வியாபாரம் செய்யப் போகிறேன் என்றான். பணம் கொடுத்தார். என்ன வியாபாரம் செய்தானோ, அதுவும் அவருக்குத் தெரியாது. கள்ளக் கடத்தலில் ஈடுபட்டிருக்கிறான் என்று போலீஸ் வந்தபோதுதான், அவனுடைய தொழில் மேதைத்தனம் அவருக்குப் புரிந்தது. மனைவியின் வற்புறுத்தலின் பேரில், பணத்தைக் கொடுத்துக் கேஸ் வராமலேயே பார்த்துக் கொண்டார். அப்பொழுது தாம் அவ்வாறு செய்திருக்கக் கூடாது என்று அவருக்கு இப்பொழுது பட்டது. அதற்குப் பிறகு, மறுபடியும் பம்பாய் போனான். சினிமாவில் சேர்ந்திருப்பதாக அவன் அம்மாவுக்குக் கடிதம் எழுதினான். திரைப் படத்தில் தன் மகன் கதாநாயகனாக வரப் போகிறான் என்று அவர் மனைவி நம்பிக் கொண்டிருந்தாள்.

கதாநாயகனாக அவன் வீட்டுக்குத் திரும்பியதுதான் மிச்சம். தினுசு தினுசான உடைகள். திரைப்படத்தில் நடிக்கவில்லையா என்று அவர் கேட்கவில்லை. கமிஷன் ஏஜண்டாக இருப்பதாக அவன் தன் அம்மாவிடம் சொல்லிக் கொண்டான். அவர் நம்பவில்லை.

ஓர் இரவு அவன் நன்றாகக் குடித்துவிட்டு வீட்டுக்கு வந்தான். வாசனை 'குப்' என்று வந்தது. அவரால் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

''எதுக்காகடா, இப்படிக் குடிச்சிருக்கே?'' என்று அவர் கேட்டார்.

''பிஸினஸ் விஷயமா நாலு பேரைப் பார்க்கறப்போ குடிக்காமல் இருக்க முடியுமா?''

''பிஸினஸ் விஷயமா குடிச்சியா, இல்லாட்டா குடிதான் பிஸினெஸ்ஸா?''

''உங்களை நான் பணம் கேட்கலே, நான் என்ன பண்ணினால் உங்களுக்கென்ன?''

''கெட் அவுட்....''

''போக முடியாது. நீங்க என்ன வேணுமானாலும் செஞ்சுக்கலாம்....'' என்று சொல்லிக் கொண்டு அவன் உள்ளே போய் விட்டான்.

அவருக்கு என்ன செய்வது என்றுதான் புரியவில்லை. கழுத்தைப் பிடித்து வெளியில் தள்ளலாம். விரசமாயிருக்கும். அவர் மனைவி அழுது கொண்டே அவரைப் பார்த்தாள். அவர் வேகமாக மாடிக்குச் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டார்.

அப்புறம், அவர் அவனிடம் பேசியதே கிடையாது. ஒரு மாதத்துக்குப் பிறகு புறப்பட்டுப் போனவன்தான், அவனைப் பற்றி அவருக்குத் தகவலே கிடையாது, இதுவரை.

இப்பொழுது தகவல் வந்திருக்கிறது, மூன்று வருஷங்களுக்குப் பிறகு. ஏதோ ஒரு கம்பெனியிலிருந்து அவர்களுடைய சாமான்களை விற்றுத் தருவதாகச் சொல்லிவிட்டுப் பத்தாயிரம் ரூபாய் சாமான்களை எடுத்துப் போனவன்தான், என்ன ஆனான் என்று மூன்று மாதங்களாகச் செய்தியில்லை. பம்பாயிலிருந்த இந்தக் கம்பெனிக்கு அவன் தன் வீட்டு முகவரியைத்தான் நிரந்தர விலாசமாகக் கொடுத்திருக்கிறான். அவர்கள் போலீசுக்குச் சொல்வதற்கு முன்னால், ராமசேஷனை — ஃபோனில் கூப்பிட்டு, விஷயத்தைச் சொன்னார்கள். போலீசுக்குச் சொல்ல வேண்டாம், தாம் பணத்தைக் கட்டி விடுவதாக அவர் வாக்குறுதி அளித்துவிட்டார். தாம் அவ்வாறு கூறியது சரியா? — குடும்பப் பெயரை அப்படியாவது காப்பாற்ற வேண்டும் என்ன அவசியம்?

''என்ன இடிஞ்சு போய் உட்கார்ந்திருக்கீங்க?'' என்று கேட்டுக் கொண்டே வந்தாள் அவர் மனைவி.

அவர் பதில் கூறவில்லை. இவளிடம் விஷயத்தைச் சொல்லலாமா? அழத் தொடங்கிவிடுவாள். பணம் கொடுப்பது என்ற தம்முடைய தீர்மானத்தை அவரால் மறுபடியும் புனராலோசனை செய்யவே முடியாது. ஆனால்




நாளைக்கு அலுவலகம் சென்று அவர்களோடு தொடர்பு கொண்டு 'போலீசுக்குச் சொல்லி விடுங்கள்' என்று கூறுவதுதான் தர்மம். மனமறிந்து ஏமாற்றியவன் ஜெயிலுக்குத்தான் போக வேண்டும். ஒரே மகன், அவன் இப்படி இருப்பதற்கு என்ன காரணம்?

அவனைத் தாம் வளர்த்ததில் என்ன தவறு நேர்ந்து விட்டது? தம்முடைய கண்டிப்பின் காரணமாக அவன் தன் எதிர்ப்பு உணர்ச்சியை இவ்வாறு காட்டுகிறான் என்று சொல்வதற்கு இடமில்லை. அவருக்கு இரைந்தே பேசத் தெரியாது. மனைவியும் அப்படித்தான். சிறு வயதிலிருந்தே அவனுக்குப் படிப்பில் அக்கறையில்லை.

''அவனைப் பற்றி ஏதாவது தெரிஞ்சுதா?'' என்று கேட்டாள் அவர் மனைவி.

''எவனைப் பத்தி....?''

''உங்க பிள்ளையைப் பத்தி?''

அவர் பேசாமல் இருந்தார்.

''சொல்லுங்களேன்....''

''அவனைப் பத்தி ஒண்ணுமில்லே....ஏதோ ஆபீஸ் விஷயம்....''

அவள் சோபாவில் உட்கார்ந்தாள். சில விநாடிகள் சங்கடமான மௌனம் அங்கு நிலவியது.

''மூணு வருஷமாச்சே, விசாரிக்கக் கூடாதா ?''

அவர் எழுந்து மாடிக்குச் சென்றார். இன்னும் அவளோடு பேசினால், உண்மையைச் சொல்லிவிடும்படியாக இருக்கும். அவள் நம்பிக்கையை ஏன் குலைக்க வேண்டும் ?

அவளால் எப்படித் தன் மகனைப் பற்றி இவ்வாறு நினைக்க முடிகிறது ? பாசம் என்பது எவ்வளவு கண்மூடித்தனமாக இருக்க வேண்டும் ? தாமும் பாசத்துக்கு அடிமையாகக் கூடாது. நாளைக்கு அவர்களைப் போனில் அழைத்துச் சொல்லிவிட வேண்டும்: 'அவன் என் மகன்தான். ஆரம்பத்திலிருந்தே அவன் இப்படித்தான். நீங்கள் அவனைத் தாராளமாகப் போலீஸில் ஒப்படைக்கலாம்.'

அவனை இன்னும் என்னென்ன குற்றங்களுக்காக யார் யார் தேடுகின்றார்களோ? செய்தித்தாள்களில் அவனைப் பற்றிய விவரங்கள் வரும். இன்னாருடைய மகன் என்ற செய்தியும் வராமலா இருக்கப் போகிறது ? தம்முடைய பெயரும் இதில் இணைந்திருக்கிறது என்பதற்காக, ஒரு சமூக விரோதிக்குப் பாதுகாப்பு அளிப்பது என்ன நியாயம்?— அவன் சிறைக்குச் செல்வதுதான் சரி.... தமக்கு மகனே கிடையாது. மகனே கிடையாது....



''கொஞ்சம் கீழே வரேளா?'' என்று அவருடைய மனைவி கூப்பிடும் ஒலி அவர் காதுகளில் விழுந்தது. மறுபடியும் ஃபோனோ ? அவளுக்குத் தெரிந்து விட்டதோ ? பாசம் குறுக்கிடக் கூடாது. தாம் உறுதியாக இருக்க வேண்டும்.

அவர் கீழே இறங்கி வந்தார். ஹாலில் ஒரு கிழவர் உட்கார்ந்திருந்தார். நெற்றியில் பளிச்சென்று நாமம். வயது எழுபதுக்குமேல் இருக்கலாம். அவரைக் கண்டதும் கிழவர் எழுந்திருந்தார். கைகளைக் கூப்பினார். யார் இந்தக் கிழவர் ?

''உட்காருங்கோ....''

கிழவர் புன்சிரிப்புடன் உட்கார்ந்தார். இந்த உச்சி வெய்யிலில் இந்தக் கிழவர் எதற்காக வந்திருக்கிறார் ? அவர் கைகளில் ஒரு பிளாஸ்டிக் கைப் பை இருந்தது.

''என் பேர் ராகவன்'' என்றார் கிழவர்.

''என்ன விசேஷம்? இப்படி நல்ல வெய்யில்லே வந்திருக்கேளே?''

''வெளியிலே வெய்யில்தான். மகாலட்சுமி மாதிரி இந்த அம்மாவைப் பார்த்ததும், நிழலுக்கு வந்த மாதிரி இருக்கு.....''

''கொஞ்சம், நல்ல குளுமையான மோர் சாப்பிடறேளா ?'' என்று கேட்டாள் அவர் மனைவி.

''கொடுங்கோ... எதுவுமே வேண்டாம்னு சொல்ல மாட்டேன்...''

என்றார் ராகவன். இவ்வாறு சொல்லிவிட்டு அவர் பலமாகச் சிரித்தார்.

ராமசேஷன் மனைவி உள்ளே சென்றாள்.

''உங்களைப் பத்தி, ரிடையர்ட் ஜட்ஜ் ஜனார்த்தனம் இருக்காரோன்னோ,

அவர் நிறையச் சொன்னர்.....'' என்ருர் ராகவன்.

ராமசேஷனுக்கு ஒன்றும் புரியவில்லை.... இவர் எதற்காக இங்கு வந்திருக்கிருர்? யாசகம் கேட்கவோ....? பார்த்தாலும் யாசகம் கேட்பவராகத் தெரியவில்லை. வெள்ளை வெளேரென்று சட்டையும், வேட்டியும் அணிந்திருந்தார். மேலே சால்வை.

அவருடைய மனைவி ஒரு தட்டில் ஆப்பிள் துண்டுகளை நறுக்கிக் கொண்டு வந்தாள். வெள்ளித் தம்ளரில் மோர். அவற்றைக் கிழவர் முன் வைத்தாள்.

''இதெல்லாம் எதுக்கு ?'' என்று கேட்டுக் கொண்டே ஒரு துண்டை வாயில் போட்டுக் கொண்டார் ராகவன். அவர் முகத்தில் ஒரு புது மலர்ச்சி ஏற்பட்டது.

''உங்களைப் பார்த்தவுடனே — ஆழ்வாரோடு சேர்ந்து சந்தோஷமா பாடலாம் போல் இருக்கு. 'பொலிக பொலிக பொலிக போயிற்று வல்லுயிர்ச் சாபம், ஒலி நலியும் நரகமும் நைந்த நமனுக்கு இங்கு யாதொன்றுமில்லை.... கலியும் கெடும் கண்டு கொண்மின்'னு. இது கலியுகம்ங்கிறது, இங்கே வந்தவுடனே எனக்கு மறந்தே போச்சு...''

தட்டைக் காலி செய்துவிட்டு மோரைக் குடித்தார் கிழவர். பிறகு கைப் பையைத் திறந்து வெற்றிலைப் பெட்டியை எடுத்தார். நிதானமாக வெற்றிலை போட்டவாறு, புகையிலையை வாயில் அடக்கிக் கொண்டார்.

''இதெல்லாம் என்ன லௌகீகப் பழக்கம் ?'' என்று கேட்டார் ராமசேஷன்.

''பொகையிலையைச் சொல்றேளா ?.... சின்ன சின்ன வயசிலேயிருந்து வந்தது, விட மாட்டேங்கிறது.... பார்க்கப் போனு, உங்க எதிரே எனக்கு இந்த மாதிரிப் பழக்கமெல்லாம் இல்லேன்னு காட்டிக்கிறதுக்காக, நான் பேசாமல் இருந்திருக்கலாம். நான் அந்த மாதிரியெல்லாம் காட்டிக்கிறவனில்லே..... 'பி ட்ரு டு தைன் ஒன் செல்ஃப்'ன்னு ஷேக்ஸ்பியர் சொல்லி யிருக்கானில்லையா ?''

ராமசேஷனுக்கு ஆச்சரியமாக இருந்தது. கிழவர் ஆங்கிலத்திலிருந்து மேற்கோள் காட்டுவார் என்று அவர் எதிர்பார்க்கவே யில்லை.

''நீங்க ஆச்சரியப்படறது எனக்குப் புரியறது. நான் நாலாம்கிளாஸ் மட்டும்தான் பள்ளிக்கூடத்திலே படிச்சிருக்கேன். பாக்கி ஞானமெல்லாம் சொந்தமா சம்பாதிச்சது... சொந்தமான்னு சொல்றது தப்பு... எல்லாம் அவன் இட்ட பிச்சை. என்னலே ஆன மட்டும் பகவத் காரியத்தை ஒண்டி ஆளா இருந்திண்டு செய்யறேன். உடம்பிலே வலு இருக்கிற மட்டும் செய்வேன். அப்புறம் அவன் இட்ட வழி.....''

அவர் கைப் பையைத் திறந்து அச்சிடப் பட்ட ஒரு தாளை ராமசேஷனிடம் நீட்டினர்.

நாலு பக்கங்கள் அடங்கிய துண்டு வெளியீடு அது. முகப்பில் இராமன், சீதைப் படங்களும் அவர்களைப் பணிந்த நிலையில் அநுமான் படமும் இருந்தன. அடுத்த பக்கத்தில் பாஸ்போர்ட் அளவில் கிழவருடைய படம்— பத்து ஆண்டுகளுக்கு முன்பு எடுக்கப்பட்டிருக்கலாம் — இருந்தது. யார் யாரோ பெரிய மனிதர்கள் கிழவருடைய பணியைப் போற்றி நற்சான்றிதழ் வழங்கிய குறிப்புக்கள் பிரசுரிக்கப்பட்டிருந்தன. அவர் செங்கல்பட்டு அருகே களத்தூரில் ஹனுமான் கோயில் கட்டி வருகிருராம். இதற்காகத் தம் வாழ்க்கையை அர்ப்பணித்துக் கொண்ட ஒரு மகான் என்று அவரைக் குறிப்பிட்டிருந்தார்கள்... மூன்ரும் பக்கத்தில் ஹனுமான் பெருமையைப் பற்றிய வாசகங்கள். நாலாவது பக்கத்தில் கிழவர் வைணவ சமயத்துக்காக ஆற்றியுள்ள தொண்டுகள் பற்றிய விவரங்கள்.

ராமசேஷனுக்குப் புரிந்தது: கிழவர் நன்கொடைக்காக வந்திருக்கிருர்.

''கோயில் கட்ட ஆரம்பிச்சாச்சா?'' என்று கேட்டார் ராமசேஷன்.

''கட்டிண்டிருக்கேன்... இன்னும் முடிஞ்ச பாடில்லே.... எட்டு லட்ச ரூபாய் என் பட்ஜெட்.... இதுவரைக்கும் அஞ்சு லட்சம் ரூபாய் செலவாகியிருக்கு... ஹநுமாருக்கு இந்த மாதிரிக் கோயில் யாருமே கட்டிய தில்லேங்கிறது மாதிரிக் கட்டணும்கிறது என் ஆசை. ஏழு வருஷங்களுக்கு முன்னலே— அன்னிக்குச் சனிக்கிழமை. ஹநுமார் ராத்திரி என் கனவிலே வந்து, 'மதுராந்தகத்திலே கோதண்டராமன் இருக்கான்; களத்தூர்லே நான் இருக்கக் கூடாதா?' என்று கேட்டார். அப்புறந்தான் ஆரம்பிச்சேன்... நானும் பிரமச்சாரி, ஹநுமாரும் பிரமச்சாரி. ரெண்டு பேருக்கும் ரொம்பப் பொருத்தம்...''

இவ்வாறு சொல்லிக் கொண்டே ஒரு ரசீதுப் புத்தகத்தை ராம சேஷனிடம் நீட்டினர் கிழவர்.

அதில் பத்து, பதினைந்து ரசீதுகள் கிழிக்கப் பட்டிருந்தன. ஒவ்வொருவரும் ஆயிரம், ஐந்நூறு என்று நன்கொடை வழங்கியிருந்தார்கள்.

''என்னலே இத்தனை கொடுக்க முடியாதே. நான் ரொம்ப சாதாரணமானவன்'' என்ருர் ராமசேஷன்.

''பணமா பெரிசு?... பக்தி சிரத்தையோட எத்தனை கொடுத்தாலும் வாங்கிக்கிறேன்...'' என்ருர் ராகவன்.

ராமசேஷன் தன் மனைவியைப் பார்த்தார்.

''எங்களுக்கு ஒரே பிள்ளை. அவன் மூணு வருஷமா எங்கே இருக்கான்னுகூடத் தெரியலே... ஹநுமார்தான் வழி சொல்லணும்'' என்ருள் அவர் மனைவி.

''பேஷா... தன்னலே அவன் வந்து சேருவான் பாருங்கோ... நம்பினவர்களை ஹநுமார் கைவிடவே மாட்டார்... இப்படித்தான் ராமசுப்பன் இருக்காரே, அவரோட பிள்ளை 'அமெரிக்காலெந்து ஒரு வெள்ளைக்காரியைத் தான் கல்யாணம் பண்ணிக்கப் போறேன்'னு கடிதாசு எழுதியிருந்தானும். ராமசுப்பன் அத்யயனம் பண்ணினவர். கடிதாசைப் பார்த்தவுடனே இடிஞ்சு போயிட்டார். நான் அப்போ எதேச்சையா அவாத்துக்குப் போயிருந்தேன். கோயிலுக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுத்தார். நாலாம் நாள் பிள்ளையாண்டான் கடிதாசு எழுதியிருக்கான்... 'வெள்ளைக்காரிக்கும் எனக்கும் ஒத்துக்கலே. நான் ஊருக்கு வந்து நீங்க சொல்ற பொண்

---

''கணவன் மனைவி இருவரும் ரொம்ப நல்ல மாதிரி. ஒருவர் சுதந்திரத்தில் மற்றொருவர் தலையிடுவதில்லை.''

''அப்படியா?''

''ஆமாம். அதனால் இருவரும் தனித் தனியே தேன் நிலவுக்குப் போய் வந்தார்கள்.'' —முத்து



மிகச் சிறந்த படத்தைத் தயாரிப்பவருக்கு மத்திய அரசு 4000 ரூபாய் பரிசு கொடுக்கிறது. ஆனால் கர்நாடக மாநில அரசு எந்தப் படம் தயாரித்தாலும் 50000 ரூபாய் கடன் கொடுக்கிறது! - டெக்கான் ஹெரால்ட் - ''லரோ''

---

ணைக் கல்யாணம் பண்ணிக்கிறேன்'னு...நான் பொய் சொல்றேன்னு நெனச்சுக்க வேணும். இப்பொவே வேணுமானாலும் ராம சுப் பனை ஃபோன் பண்ணிக் கேளுங்கோ... அவ ரோட நம்பர் தரேன்...''

ராமசேஷன் சிறிது நேரம் பேசாமல் உட் கார்ந்திருந்தார். இவர் சொல்வது உண்மை யாக இருக்குமோ? — கிழவருடைய வாக்கு சாதுர்யம், தம் அடிமனத்தில் அவரைப் பற்றிப் பல சந்தேகங்களை எழுப்பினாலும் தம் மகனைப் பற்றி ஒரு நம்பிக்கை வேரூன்று வதற்கு இது காரணமாக இருக்குமென்ற அள வில் ஏன் நன்கொடை வழங்கக் கூடாது என்று அவருக்குத் தோன்றிற்று.

''என்னாலே நூறு ரூபாய்தான் தர முடி யும்'' என்றார் ராம சேஷன்.

''கொடுங்கோ, வாங்கிக்கறேன்... நீங்க இத்தனை தரணும், அத்தனை தரணும்னு நான் கட்டாயப்படுத்தலியே...''

ராம சேஷன் உள்ளே எழுந்து சென்றார். அவருடைய மனைவியிடம் ''நூறு ரூபாய் கொடு... ஆளைப் பாத்தா ஏமாத்தறவர்னு தோணலே...'' என்றார்.

''அப்பொ ஐந்நூறுக் கொடுங்களேன்... அவர் சொல்றது பலிக்கிறதான்னு பார்ப் போம்....''

''உன் பிள்ளை ஜெயிலுக்குப் போகப் போறான்.... இங்கே வந்து எப்படிக் குதிப் பான்?''

''என்ன சொல்றேள்?''

அப்பொழுது தாம் காலையில் ஃபோனில் கேட்ட செய்தியை அவளிடம் கூறினார். அவர் நினைத்தபடியே அவள் அழத் தொடங்கி விட்டாள்.

''எதுக்காக அழறே, எல்லாம் நடக்கிற படி நடக்கும்....''

''அப்போ....'' அவள் மேலே சொல்வ தற்குத் தயங்கினாள்.

''அப்போ என்ன? பத்தாயிரம் ரூபாய் கொடுக்கச் சொல்றியா, ராமசுப்பன் பிள்ளை வந்த மாதிரி உன் பிள்ளையும் வருவான்னு. இப்போ யாருக்குப் பத்தாயிரம் ரூபா கொடுக் கறதுன்னு புரியலே. அந்தக் கம்பெனிக்கா, ஹநுமாருக்கா...?''

''இப்படிப் பிடிவாதமா இருக்கிறது நன்னா இருக்கா? கம்பெனிக்குப் பத்தாயிரம் ரூபாய் கொடுங்கோ...ஹனுமாருக்கு நூறு ரூபாய் கொடுக்கிறதினாலே, அவனுக்கு நிச்சயம் நல்ல புத்தி வரத்தான் போறது.''

''இதுதான் பொம்மனாட்டிகளோட 'ப்ராக் டிகல் விஸ்டம்'ங்கிறது..... ஹனுமாருக்குப் பத்தாயிரம் ரூபா கொடுங்கோன்னு சொன் னியா நீ? — ஹனுமாரை நூறு ரூபாய்க்கு நம்பற நீ, பத்தாயிரத்துக்கு ஏன் நம்பக் கூடாது?....''

''மிஸ்டர் ராமசேஷன்'' என்று யாரோ கூப்பிடும் சத்தம் கேட்டது. அவர் காதில் அப்பொழுது விழுந்தது. ஜனார்த்தனன் அனுப்பியதாக இந்தக் கிழவர் சொல்லிக் கொண்டிருந்தார். அவரே வந்து விட்டார்!

''சரி.. நூறு ரூபா எடுத்துண்டு வா. நான் போறேன்.''

ஹாலில் ஜனார்த்தனன் நின்று கொண்டிருந் தார். கிழவரைக் காணவில்லை!

''எப்போ வந்தேள்?'' என்று கேட்டார் ராமசேஷன்.

''இப்போதான். என்னைக் கண்டதும் ஓடிவிட்டாரே ராகவன்... ஏன் ஏதாவது பணம் வாங்க வந்தாரா?''

''நீங்க அனுப்பிச்சதான்னு சொன்னார்?''

''நானா? இந்த ஃபிராட் கிழவரையா?''

''ஃபிராடா?''

''பின்னே என்ன? கோயில் கட்டப் போறேன்னு ஊரை ஏமாத்திண்டு திரியறார். இவர் யார்னு தெரியுமோன்னோ?''

''யாரு?''

''என்னோட தம்பிக்குச் சின்ன மாமனார். அண்ணா செத்துப் போகச்சே, அவுட் ஹவுஸை இவருக்குச் சாசனம் பண்ணிட்டுப் போயிட் டார். அதோட இல்லே. இவருக்கும் இவ ரோட பெண்டாட்டிக்கும் இவர் காலம் ஆகிறவரைக்கும் சாப்பாடு போட்டாக ணும்னு ஏற்பாடு வேறே... என் தம்பி மச்சினன் சாப்பாட்டைச் சாப்பிட்டுண்டே அவனைத் தூத்திண்டு திரியறார். இவர் பெண்டாட்டி மகா உத்தமி.''

ஜனார்த்தனன் உட்கார்ந்திருந்தார். ராம சேஷன் மனைவி கையில் நூறு ரூபாய் எடுத்துக் கொண்டு வந்தாள். ஜனார்த்தனன் அதைப் பார்த்துவிட்டுச் சிரித்துக் கொண்டே கேட்டார்: ''ஹநுமார் கோயிலுக்கு நன் கொடையா?''

''அவர் எங்கே?'' என்று கேட்டாள் ராம சேஷனின் மனைவி.

''அவர் இங்கே ஏன் இருக்கார்? என்னைப் பார்த்ததும் ஓடிப்போயிட்டார். சின்ன வயசி லேந்து இந்தக் கிழவர் பண்ணாத அக்கிரமம் கிடையாது. இத்தனைக்கும் நன்னா படிச்சவர்.

''...இதே படிப்பை வச்சிண்டு நல்லபடியா வும் இருக்கலாம். இவரோட அப்பா இருக் காரே, அவர் சம்ஸ்கிருதத்திலேயும் சரி, தமி ழிலேயும் சரி, மகா மேதை. என் தம்பி மாம னார் இருந்தாரே, இவரோட அண்ணா, பிலாஸஃபி ப்ரொஃபஸர்... நல்ல பேரு... அவரோட வழி அப்படி, இவரோட வழி இப்படி... இதெல்லாம் யார் நிர்ணயிக்கிறாங் கிறதுதான் புரியலே....''

ராமசேஷனுக்குத் தன் மகன் அவனுடைய எழுபத்தைந்து வயதிலே எப்படி இருப்பான் என்று மனக் கண் முன் தோன்றிற்று.

''இவாளையெல்லாம் கோவிச்சுண்டு ஒரு பிரயோஜனமும் இல்லே... இதை ஒரு வகை யான வியாதின்னு வேணுமானாலும் வெச் சுக்கலாம்'' என்றார் ஜனார்த்தனன்.

''இந்த வியாதியைக் குணப்படுத்தவே முடி யாதா?'' என்று கேட்டாள் ராமசேஷனின் மனைவி.

'தாற்காலிக மருத்துவச் செலவு பத் தாயிரம் ரூபாய்' என்று தமக்குள் கூறிக் கொண்டார் ராமசேஷன்.

போஷாக்குத்
துள்ளி எழ
அதிக கோகோ

## புதிய
# போர்ன்விடா




மற்றெந்த மால்ட் செறிந்த ஆரோக்கிய உணவுப் பானங்களைவிட, போர்ன்விடாவில் என்றுமே அதிக கோகோ சேர்க்கப்பட்டுள்ளது. இப்பொழுதோ, போர்ன்விடாவில் முன்னைக் காட்டிலும் அதிக போஷாக்கும் அதிக இன்கவையும் அளித்திட, அதிக கோகோ அடங்கியுள்ளது.

போர்ன்விடாவிலுள்ள கோகோவில், இரத்த அமைப்புககு அவசியமான இரும்புச் சத்து நிறைந்துள்ளது மற்றும் வைட்டமின்கள் 'பி' மற்றும் 'டி'யும் கால்ஷியம், பாஸ்பரஸ்.

காட்பரிஸ்
# போர்ன்விடா




இப்போது விளங்குகிறது. மனசுதான் எல்லாம். வாழ்க்கை இனிப்பதும் கசப்பதும் மனசைப் பொறுத்ததுதான்.

அப்படித்தான் சொல்லுகிறுள் இந்து. இந்த வயசிலேயே அவள் ஞானியாகி விட்டாள்.

நானுகவே குற்றவாளிக் கூண்டில் ஏறி நின்று, ''இந்து, என்னே மன்னிச்சுடு'' என்று கெஞ்சியபோது அவளது உதடுகளில் பூத்த புன்னகை! கவிழ்ந்த தலேயுடன் சுட்டு விரலால் தரையில் வட்டம் போட்டவாறே, நிதானமாக — ''அப்படி யொண்ணுமில்லே. நீங்க என்ன தப்புப் பண்ணிட்டேள்? அதெல்லாம் வேளேயின் அவசரம்'' என்று முகத்தை என் பக்கம் திருப்பாமலேயே கூறியபோது அவளது கண்கள் பனித்ததாக நான்தான் கற்பனை செய்து கொண்டேனே?

அக்கத்தில் இடுக்கிய ஆதாரக் கோல்களோடும் ஒற்றைக் காலோடும் தாவித் தாவி நடந்து, சந்து பொந்துகளேக் கடந்து ஒரு முச்சந்தியில் வந்து திரும்பிப் பார்க்கிறேன். திண்ணேத் தூணே அணேத்துக் கொண்டே தூரத்திலிருந்து இந்து பார்த்துக் கொண்டிருக்கிறுள். அருகில் அவளது கடைக் குட்டி புடவைத் தலேப்பை இழுத்துக் கையில் இடுக்கிக்கட்டை விரலேச் சப்புகிறது.

முனே திரும்பினுல் வேறு தெரு. அவள் மறைந்து விடுவாள். நான் கையைத் தூக்கி ''டாட்டா'' சொல்லுகிறேன். கண்ணீர் பார்வையை மறைக்கிறது.

சிந்தனேப் பொறியொன்று கால வெள்ளத்தில் எதிர் நீச்சல் போட்டுப் பழசைத் தேடிப் பதினேந்து வருஷங்களுக்கு முன்னுலிருந்த சித்தி வீட்டுக் கிணற்றடிக்குப் பக்கத்தில் தெறித்து விழுகிறது.

இந்து துணி தோய்த்துக் கொண்டிருக்கிறுள் — வேலே செய்வதற்கு அனுகூலமாகப் புடவையை முழங்கால் வரை தூக்கிச் சுற்றி இடுப்பில் சொருகிக்கொண்டு. மாடியிலிருந்து உற்றுப் பார்க்கிறுன் லெப்டினென்ட் மணி. செழிப்பு மிக்க அவளது உடற்கட்டில் தன்னே இழந்து லயித்திருக்கிற தருணத்தில், ஏதோ சாக்கில் அவள் முகத்தை மேலே திருப்புகையில் இவனைக் கண்டுவிட்டுச் சடாலென்று சொருகிய புடவையை இழுத்துவிட்டுக் கால்களே மூடிக்கொள்கிறுள். பிறகு மீதம் இருக்கும் துணிகளே அவசரம் அவசரமாகக் கசக்கிப் பிழிந்து கொண்டு சடுதியில் அவ்விடத்தை விட்டு அகல்கிறுள். உள்ளே போகுமுன் நெற்றியில் விழும் சுருட்டையை ஒதுக்கிக் கொள்ளும் பாவனேயில் எதேச்சையாகப் பார்ப்பது போல் மேலே பார்த்த பார்வை! அகலமான பளீர் வெள்ளேயில் உருளும் கருவண்டு விழிகள் பேசிய பாஷை! அன்றைய லெப்டினென்ட் மணி சொக்கிப் போனுன்.

லீவுக்குச் சித்தி வீட்டில் தங்கிய பதினேந்து நாட்களில் அவளுக்கு அடுப்படியில் உதவ வந்த இந்து மூலமாக எவ்வளவோ சின்னச் சின்ன ருசிகள், லயிப்புக்கள், கனவுகள், கற்பனேகள்....

—'நீங்க சண்டை போடற இடத்துலே சிங்கம் புலி யெல்லாம் வருமா?'

—'உங்களுக்கு யார் சமைச்சுப் போடுவா?'

—'நீங்க எவ்வளவு பேரைக் கொன்னுருப்பேள்?'

—'செத்தவாளேப் பார்த்தா பயமா யிருக்காது?'

—'சாகத் துணிஞ்சுதானே பட்டாளத்துலே சேரணும்?'

குழந்தை மாதிரி எவ்வளவு கேள்விகள்! தன்னே அவள் ஹீரோவாக நினேத்துக்கொள்ள வேண்டும் என்று அவன் அளந்த அளப்புகள்! அப்போது அவளேத் தொட்டு 'ஸல்யூட்' அடிக்க வைத்த இன்பம்! பிறகு அவள் இடுப்பைச் சுற்றி அவன் வளேத்தது...

'பலவீனமான தருணம்' ஒரு நாள் அவர்களேக் குப்புறக் கவிழ்த்தது.

குப்பென்று வைர மணிகளாய்ப் பூத்த வியர்வைத் துளிகள் ஒன்ருேடொன்று இணேந்து தாரை தாரையாக நெற்றியிலிருந்து கன்னத்தில் இறங்கி, அங்கு ஏற்கனவே பிரவாகமாய் வருஷித்துக் கொண்டிருந்த கண்ணீருடன் சங்கமமாகி, அலங்கோலமாக— அவசரமாக — அவளது உடலில் சுற்றியிருந்த நைந்துபோன புடவையை ஈரமாக்கின. அழுது கொண்டு அடுக்களேயின் ஒரு மூலேயில் முடங்கிக் கிடந்தாள். குளிர் ஜுரம் போல் உடலெல்லாம் உதறிக் கொண்டிருந்தது... அவன் பக்கம் திரும்புவதற்கே அஞ்சினுள்.

''போயிடுங்கோ... என் கிட்டேயே வராதீங்கோ... ஐயோ, போயிடுங்களேன்...''

ஏதேதோ புலம்பல்கள், ஏதேதோ சமாதானங்கள். ''இதோ பார், உனக்கு ஒன்றும் நேராது. நான் பார்த்துக் கொள்கிறேன்'' என்று தைரியம் சொல்கிறான் ஆண் பிள்ளை.

ஒரே தாவலில் இரு கைகளையும் நீட்டி அவனது கழுத்தைக் கட்டிக் கொண்டு, ''நெஜமாகவே என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறேளா?'' என்று கேட்கும்போது அவன் முகம் வெளிறிப் போகிறது. அவளது கைகளை மெதுவாக விலக்கிவிட்டு வேறு புறமாகத் திரும்பி நிற்கிறான். அவள் தொய்ந்து விடுகிறாள். மீண்டும் நயனங்களில் நீர்த்தாரை. நெற்றியிலே ஸ்படிக மணிகள். ''பகவானே!'' என்று அலற ஆரம்பிக்கும் அவளது வாயைச் சடாரென்று திருப்பிப் பொத்திவிட்டு, ''உஷ்... மாடியிலே சித்தப்பா இருக்கார்'' என்று எச்சரிக்கிறான்.

இரவு தூக்கத்தில் இந்து வந்து நிற்கிறாள். பார்வை பயங்கரமாக இருக்கிறது. அவ்விழிகளின் கொதிப்பு, மணியின் உடலுக்குள் இறங்கி இரத்தத்துடன் கலந்து ரோமத் துவாரங்கள் வழியாக புஸ் புஸ்ஸென்று சீறுகிறது. உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு விழித்துப் பார்க்கிறான். பிறகு தூக்கமே யில்லை.

மறுநாளிலிருந்து இந்து வேலைக்கு வரவில்லை. சித்தியே சமையலைக் கவனித்துக் கொள்ளும்படி யாயிற்று. இந்துவுக்குச் சொல்லியனுப்பியும் பயனில்லை.

நாலு நாட்கள் கழித்துச் சிவன் கோவிலில் அவள் நுழைவதைத் தூரத்திலிருந்து கவனித்த மணி அவசரம் அவசரமாக நடந்து மேலண்டைப் பிராகாரத்தில் மடக்கினான். டைபாயிட் ஜுரத்தில் அடிபட்டது போல் வெளிறிக் கிடந்தாள். ''இந்து'' என்று மெதுவாக அழைத்தான். அவள் அதிர்ந்து நின்றாள்.

''இந்து, ஏன் வராமல் நின்னுட்டே? சித்தி ரொம்பக் கஷ்டப்படறா... திடீரென்று இப்படி நின்னாத் தப்பா நெனச்சுக்க மாட்டாளா?''

பதில் இல்லை.

''லீவு முடிஞ்சு நாளைக்குக் கிளம்பறேன். அப்புறம் எப்போ வருவேனோ?''

விசும்பல் ஒலி கேட்கிறது. குலுங்குகிறாள். பீறிட்டு வரும் அழுகையை அடக்கிக்கொண்டு ஓடிவிடுகிறாள் இந்து. மணி ஒன்றும் புரியாமல் விழிக்கிறான்.

மறுநாள் மாட்டு வண்டியின் குலுக்கலோடு மல்லாடிக் கொண்டே சீருடையணிந்த லெப்டினன்ட் மணி, அருகிலேயே பவனி வரும் காவிரிச் சுழல்களில் கண்களை உலவ விட்டுக் கொண்டே அனுமார் கோவில் படித்துறையைக் கடக்கையில், கையில் குடமேந்திய இந்து ஒவ்வொரு படியாக மேலே ஏறி வருவதைக் கண்டு வண்டியை நிறுத்தச் சொல்லி, அவளிடம் ஓடுகிறான். மருண்டு





எமன் : இந்தப் பாவியை இன்னுமா எண்ணெய்க் கொப்பரையில் போடவில்லே ?

கிங்கரன் : பிரபோ, எங்கு தேடியும் எண்ணெய் கட்டுப்படியாகிற விலேயில் கிடைக்கவில்லேயே, என்ன செய்வது ?

---

ஒதுங்கிக் கொள்ளும் அவசரத்தில் குடம் தளும்பிப் புடவையை நனேக்கிறது. சீருடையில் சட்டென்று மணியை அடையாளம் கண்டுகொள்ள முடியாமல் முதலில் தவித்து விட்டு, பிறகு தலேயைக் குனிந்து கொள்கிருள். முதல் நாளிலிருந்த பதற்றமில்லே. முகம்கூடச் சற்றுத் தெளிவாகி யிருக்கிறது.

''ரயிலுக்குப் போயிண்டிருக்கேன். என் மனசு ரொம்பக் குழம்பியிருக்கு. நேத்திக்குக் குழந்தை மாதிரி கோவிச்சுண்டு ஓடிட்டே... என்னேப் பத்தி நீ என்ன நெனேக்கிறயோ.... வாயைத் திறந்து ஒரு வார்த்தை பேசக் கூடாதா ?''

சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு மீண்டும் தலேயைக் குனிந்தவாறே அவள் — ''திருப்பியும் யுத்தமா ?''

''சொல்ல முடியாது. இப்பொ ஒண்ணும் தெரியலே....''

''இந்த உத்தியோகம் வேண்டாமே....''

'' ஏன்? இதுக்கு என்ன கொறைச்சல் ?''

''எனக்குப் பயமா இருக்கு....''

''உன்னேயா போருக்கு அனுப்பரு ?''

அவள் களுக்கென்று சிரிக்கிருள்.

'' என் மேலே கோவமில்லேன்னு ஒரு வார்த்தை சொல்லேன்....''

'' கோவமா, இல்லேயான்னு எனக்கே புரியலே. ஆனுல், நீங்க திரும்பிப் போறது மனசை என்னவோ பண்ணறது. எப்படியோ புசுக்குன்னு இப்படியோர் உறவு முளேச்சுடறது. நீங்க இந்த நாட்டையே காப்பாத்தற போர் வீரர். நான் சமையல்காரி. நீங்க தியாகம் பண்றேள். நான் சமையல் பண்ணறேன். இரண்டையும் சேர்த்து நினேக்கிறப்போ சிரிப்பா வரது. இது சேர முடியாத விஷயம்..... உங்களுக்கு இந்த உடை ரொம்ப நன்னு இருக்கு....''

'' இந்து ! உன்னே என்னுலே மறக்கவே முடியாது. நான்தான் அயோக்கியத்தனமா நடந்துண்டுட்டேன். இதுக்கு என்ன தண்டனே காத்துண்டிருக்கோ....''

''ஐயையோ! அப்படியெல்லாம் சொல்லாதீங்கோ....''

''நேரமாயிடுத்து, இந்து.''

''நல்லபடியா போயிட்டு வாங்கோ...''

உயிருடன் பிரிவதும் இறப்பின் தரிசனம் தானே ? ஏன் இப்படி அழுகை பீறிடுகிறது? நெஞ்சக் கடைசல் உயிரைக் கொக்கி போட்டு இழுப்பானேன்? தனித் தனியாய், திமிருய் நிற்கிற அகங்காரங்களெல்லாம் எங்கே ? கண்களில் வழியும் உப்பு நீர்தான் உறவுக்கு உரமா ? உறவு என்பதே பிரிவில் பிரகாசிக்கும் தத்துவம்தானே ?

''போய்க் கடிதாசு போடுவேளா?'' என்று கூற வந்தவள் நாவை அடக்கிக் கொண்டு மென்று விழுங்குகிருள். எதற்கும் விலாசத்தைக் கேட்டு வாங்கிக் கொண்டால் என்ன வென்று சபலம் தட்டுகிறது. கேட்கிருள். அவன் நிமிஷத்தில் எழுதி நீட்டுகிருன்.

'' நான் எழுதினு சிரிக்காதீங்கோ. பைத்தியம் மாதிரி ஏதாவது கிறுக்குவேன். கையெழுத்துக்கூட நன்னு இருக்காது. ஆனுல் பதில் போடாதீங்கோ.... என்னே ஞாபகம் வச்சிப்பேளா? இல்லே, துஷ்யந்தன் மாதிரி மறந்துடுவேளா ?''

அவனிடம் பதில் இல்லே.

''மன்னிச்சுடுங்கோ. நான் தப்பாப் பேசிட்டேனே என்னவோ... இங்கே இந்த வேளேயிலே தனியா உங்களோட நிக்கறது சரியில்லே. நான் வரட்டுமா ?''

அவள் சடக்கென்று திரும்பி நடக்கிருள். இவன் வெகுநேரம் அங்கேயே நிற்கிருன். படித்துறையில் வந்து மோதும் சிற்றலேகள் 'களுக் களுக்' கென்று சிரிக்கின்றன.

வடமேற்கு எல்லேயின் முன்னணிப் பிரதேசமொன்றில் ஒரு 'டென்ட்'டுக்குள் அமர்ந்து கையில் இருக்கிற கடிதத்தையே வெறித்து நோக்குகிருன் லெப்டினென்ட் மணி.

''அநேக நமஸ்காரம். நீங்க உடம்பு ஒண்ணுமில்லாம இருக்கேளா? இங்கு எல்லாரும் சௌக்கியம். எனக்கு என்ன எழுதறதுன்னு புரியலே. ஒரு மணியா மன்னுடிண்டிருக்கேன். அம்மா உங்க சித்தியாத்துக்குத்தான் போயிருக்கா. பழையபடி நான்தான் அங்கே சமையல் பண்றேன். மூனு நாளா போக முடியலே. புரியறதா ? சமையல் பண்ணிண்டேயிருக்கும் போது மனசு திடீர்னு சூன்யமாயிடறது. உடம்பெல்லாம் என்னமோ பண்றது. சித்திகூட, ஏண்டி என்னமோ மாதிரியிருக்கேன்னு பல தடவை கேட்டுட்டா. என்ன பதில் சொல்றது? இப்படி மனசை ஓட விடறது தப்புன்னு எனக்கே புரியறது. அவாவா நிலேயைப் புரிஞ்சிண்டு ஆசைப்படணும். அந்த டிரஸ் உங்களுக்கு ரொம்ப நன்னுயிருந்தது. அப்படியே கண்ணிலே நிக்கறது. படித்துறைக்குப் போனு மனசு ரொம்பக் கஷ்டப்படறது. நாம நின்ன இடத்துக்குப் போய் உங்க வண்டி போன திக்கையே பார்த்துண்டு பைத்தியம் மாதிரி தினம் நிக்கறேன். அம்மாவுக்குத் தெரிஞ்சா கொன்னுடுவா. நீங்க எப்ப வருவேள்?நான் அப்போ எங்கே இருக்கேனே. அம்மா மொம்மறமா கல்யாணத்துக்குப் பார்த்துண்டிருக்கா. எனக்கு ஒண்ணும் புரியலே. இந்தக் கடுதாசைக் கிழிச்சுப் போட்டுடுங்கோ. அநேக கோடி நமஸ்காரம். — இந்துமதி.''

எப்பொழுதோ எழுதிய கடிதம். முகவரி தெளிவாக இல்லாததால் நாள் கழித்து வந்திருக்கிறது. இரண்டு நாட்கள் கழித்துச் சித்தியிடமிருந்து தபால் வந்தது. இந்துவுக்குக் கல்யாணம் நிச்சயமாகி இருப்பதாகவும் என்னால் முடிந்த உதவியைச் செய்யுமாறும் எழுதியிருந்தாள். இன்னும் இரண்டு நாட்கள் கழித்து இந்துவிடமிருந்து இரண்டே வரிகளில் ஒரு கடிதம் வந்தது.

''பதினெட்டாம் தேதி கல்யாணம். நான் எழுதின கடிதாசைக் கிழிச்சுப் போட்டேளா? எனக்குக் கையும் ஓடலே. காலும் ஓடலே. கிழிச்சுப் போட்டுடுங்கோ.''

மணி கிழித்துப் போடவில்லை. இன்னொரு முறை படித்துவிட்டுப் பெருமூச்சுவிட்டான். போர்க்களத்தில் மரணத்துக்கு வெகு அருகில் அமர்ந்து அதோடு அளவளாவும் அவ்வேளையிலும் எங்கோ ஒரு மூலையில் அநாதரவாக ஒரு ஜீவன் தனது அரவணைப்புக்காக ஏங்கித் தவிப்பதைச் சித்திரிக்கும் அக்கடிதம் அவனுக்கு மகாகாவியமாக இருந்தது. இத்தனைக்கும் அவள் வாக்குக் கேட்கவில்லை. அவனும் கொடுக்கவில்லை. ஆனால் —

மனசுதான். எல்லாம் மனசுதான்.

செல்லியம்மன் கோயில் வந்துவிட்டது. பஸ் ஸ்டாண்டுக்கு இன்னும் நாலு பர்லாங் இருக்குமா ? ஒற்றைக் காலை வைத்துக் கொண்டு எவ்வளவு நடப்பது ?

இந்துவுக்குக் கல்யாணமாகிப் பன்னிரண்டு வருஷங்களுக்கு மேலாகிவிட்டது. நாலைந்து குழந்தைகள்.

சித்தி சொன்னாள். தஞ்சாவூர் காமாட்சியம்மன் கோயிலில் எதேச்சையாக இந்துவைச் சந்தித்தாளாம். ''அவ அழகெல்லாம் எங்கே போச்சுன்னே தெரியலேடா ! வயசாறது வேறே, கிழவியாறது வேறேன்னு இப்போதான் புரியறது. அவளுக்கு இன்னிக்கெல்லாம் முப்பத்திரண்டு வயசு இருக்குமா ?''

அரசாங்க ஆஸ்பத்திரியில் இருக்கும் கணவனைப் பார்க்க வந்திருப்பதாகச் சொல்லி அதிகம் பேசாமலிருந்த அவள் வாயைக் கிளறியது சித்திதான். ஏதோ மேலெழுந்த வாரியாகச் சொல்ல ஆரம்பித்துக் கடைசியில் மடை திறந்தாற்போல் கொட்டித் தீர்த்து விசும்பி விசும்பி அழுதாளாம். ''அம்மாவும் போயிட்டா. இவருக்கும் மலையா வந்துடுத்து. நான் என்ன பண்ணுவேன் மாமி? விவரம் புரியாத குழந்தைகளை வைச்சுண்டு ரொம்பக் கஷ்டப்படறேன், மாமி!'' என்று கோவென்று கதறித் தீர்த்தாளாம்.

அந்த முப்பத்திரண்டு வயதுக் கிழவியைத் தேடி ஒரு நொண்டி விந்தி விந்திச் செல்கிறான். பழங்கள், பிஸ்கட்டுகள், பூச்சரம் ஆகியவை அடங்கிய பை ஒன்று அவன் தோளில் தொங்குகிறது. நாற்றம் எடுக்கும் சந்துகள் வழியாக வளைந்து வளைந்து அவசரமாகச் செல்கிறான்.

பத்து குடித்தனங்களைத் தாண்டி இந்துவின் அறைக்குமுன் போய் நிற்கிறான். பத்துக்கு எட்டில் ஒரு கரிய குகை. ''யாரு?'' என்று பதற்றத்துடன் குரல் வரும் திக்கை நோக்குங்கால் அவனுக்குத் தலையைச் சுற்றுகிறது. நிஜமாகவே கிழவிதான். இவனைக் கண்டதும் புடவையை இழுத்துப் போர்த்திக் கொண்டு—



மதுரை அருகே ஒத்தக்கடையில் 'நர்ஸரி ஸ்கூல்' என்பதை 'மழலையர் பள்ளி' என அழகாக மொழி பெயர்த்திருக்கிறார்கள். திருஞான சம்பந்தர் மழலையர் பள்ளி என்பது பள்ளியின் முழுப் பெயர்.

தகவல்: நா. சு. க. சரவணப்பிரபு

---

'' நீங்களா ? பகவானே ! இது என்ன கோரம் ?'' என்று கேட்டாள்.

'' நானேதான்.....!''

உள்ளே போய் அவள் இழுத்துப் போடும் ஸ்டூலில் உட்காருகிறான். பையை எடுத்து அவளிடம் கொடுக்கிறான். உடல் குப்பென்று வியர்க்கிறது.

'' எப்போ வந்தேள்?''

''ரெண்டு நாளாச்சு.''

''....காலுக்கு என்ன ஆச்சு ?''

'' சண்டையிலே போயிடுத்து.''

''ஈசுவரா.... ஐயோ, என்ன கொடுமை!''

''காலு போச்சு, பட்டம் வந்தது.''

''எனக்குப் புரியலையே....!''

'' நான் இப்போ மேஜர். மேஜர் மணி!''

அவன் போலிப் பெருமையாகக் கனைக்கிறான். அவள் இலேசாகச் சிரிக்கிறாள். ''அப்பவே நீங்க மேஜர்தான்!'' என்று மெதுவாகக் கூறிவிட்டுத் தலையை நிமிர்த்தி அவனை ஒரு கணம் பார்த்துவிட்டு மீண்டும் குனிந்து கொள்கிறாள். மேஜர் வாய்விட்டுச் சிரிக்கிறான்.

''ஒத்தைக் காலை வைச்சுண்டு ரொம்பக் கஷ்டமாயில்லே ?''

''பழகிப் போயிடுத்து...''

அவள் யோசிக்கிறாள். பிறகு, ''எனக்குந்தான்'' என்கிறாள்.

''நீ என்ன சொல்லறே ?''

''பொதுவாகச் சொல்றேன். எல்லாமே பழகித்தான் போயிடறது. இங்கே இருக்கிற இருட்டே எனக்கு வெளிச்சமா ஆயிடுத்து...''

''சித்தி ரொம்ப சொன்னா... மனசுக்குக் கஷ்டமா இருக்கு...''

'' நான்தான் அசட்டுத்தனமா உளறிக் கொட்டிட்டேன். என்ன பொல்லாத கஷ்டம் ? பழகிப் போயிட்டா அதுவே சந்தோஷமாயிடறது. சந்தோஷம்னு தனியே ஒண்ணு இருக்கா என்ன? கஷ்டந்தான் சந்தோஷம்.... சந்தோஷந்தான் கஷ்டம்...''

''இந்து !''

'' நெஜமாத்தான் சொல்றேன். என்னைப் பொறுத்தவரை வாழ்க்கைங்கிறது முடிவேயில்லாத தீ மிதி... நனவு தெரிஞ்ச நாளா நெருப்பிலேயேதான் நடந்துண்டிருக்கேன். பழகிப் போயிடுத்து. சந்தோஷமாயிருக்கு. இப்பொ குளிர்ந்த மண்ணிலே நடந்தால் கால் கொப்புளிச்சுடும்... அப்படியாயிடுத்து...''

'' நீ ரொம்ப நொந்து போயிருக்கே. உனக்கு ஆறுதல் சொல்றதுக்குக்கூட எனக்கு வக்கு இல்லை....''

''ஆறுதல் எதுக்கு? நெஜமா சொல்றேன். சந்தோஷமாத்தான் இருக்கேன். தெரு ஓரத்திலே சாக்கடைக்குப் பக்கத்திலே குடித்தனம் பண்ணற ஜனங்களுக்கெல்லாம் யாரா

---

வது ஆறுதல் சொல்றளா என்ன? அவாளுக்கு நான் எவ்வளவோ தேவலே. அப்படித்தான் நெனச்சுப் பார்த்துக்கணும். துக்கத்துக்குள்ளே ஆழமா மூழ்கிப் பார்த்தால் சூட்சுமம் புரியறது. சந்தோஷமும் துக்கமும் மனசுலே நெனச்சிக்கிறதுதான்....''

'' நீ என்னவெல்லாமோ பேசறே. நான் ஓர் அடி முட்டாள். உன் கஷ்டத்துக்கெல்லாம் நான்தானே காரணம்?''

'' அது எப்படி? உங்க பேரிலே என்ன தப்பு? வேளையின் அவசரத்துக்கு நாம முட்டுக்கட்டை போட முடியுமா? ஏதோ நேர்ந்துடுத்து.... நீங்க என்னைக் கல்யாணம் பண்ணிண்டிருக்கவும் முடியாது. சப்பை சொல்லக் கழுகாட்டமா ஒரு சமூகம் உட்கார்ந்திண்டிருக்கே! ராணுவ அதிகாரி எங்கே சமையல்காரி எங்கே! அப்படியே பண்ணிண்டிருந்தாலும் உங்களையும் இழுத்துண்டு நெருப்பிலே நடக்க வச்சிருப்பேனோ என்னவோ!''

இதைச் சொல்லிவிட்டுக் கலகலவென்று சிரிக்கிறாள். சூழ்நிலையின் கடுமை இளகுகிறது.

''கல்யாணம் ஆயிடுத்தா?''

''இல்லே....''

'' ஏன்?''

காலைக் காட்டிச் சிரிக்கிறான். அவள் முகம் கடுமையாகிறது. மௌனம். கண்களில் இரு மணிகள் பூக்கின்றன. புடவைத் தலைப்பு ஒற்றியெடுக்கிறது.

''இந்து....''

''ஹும்?''

''இந்து.... நீ மனுஷியே இல்லே.... உன்னைக் கண்டா எனக்குப் பயமா இருக்கு. எழுந்து நில்லேன். நமஸ்காரம் பண்றேன்...''

அவள் பதறி எழுந்து மூலையில் சென்று ஒதுங்குகிறாள். முகத்தைப் பொத்தியவாறே குலுங்கிக் குலுங்கி அழுகிறாள்.

''இந்து! உன்னை அழவிடறதுக்காகவா இங்கே வந்தேன்? பிளீஸ், அழாதே. நீ அழுதா எனக்கு என்னவோ பண்ணறது....''

''நீங்க என்னவெல்லாமோ பேசறேள். என்னால் தாங்கவே முடியலே....''

''உண்மையைத்தான் சொல்றேன், இந்து. தபஸ் பண்றதுக்குக் காட்டுக்குத்தான் போகணும்! அடுப்படியிலேயே இருந்துண்டு பண்ணிக் காமிச்சுட்டே. நான் தேசமெல்லாம் சுத்திட்டு நொண்டியா வந்து சேர்ந்திருக்கேன். நீ ஒரு இருட்டு அறையிலேயே உட்கார்ந்துண்டு ஞானியாயிட்டே. இந்து, நான் முதல் முதல்லே உன்னைப் பார்த்தபோது மனசுலே எழுந்த கிளர்ச்சிகளெல்லாம் இப்ப எங்கே போச்சுன்னே தெரியலே. நீ மேரு மலையா உசந்துட்டே. நான் ஏதாவது உதவி செய்யலாமான்னு கேக்கறதுகூட அபசாரமா தோணறது. நமஸ்காரம் பண்ணவும் விட மாட்டேங்கறே....''

'' மணி! என்னை ரொம்ப சோதிக்கிறேள். வேறே ஏதாவது பேசுங்கோ....''

''இந்து...''

''ஹும்?''

'' உன் கணவருக்கு எப்படி இருக்கு?''

மௌனம்.

''ரொம்ப நாட்களா உடம்பாமே. என்ன உடம்பு?''

மௌனம்.

''இந்து, ஏன் பேசமாட்டேங்கிறே?''

''அவர் போய் [illegible]''

# ஒரு விமர்சன நாடகம்

[அட்வொகேட் ராமசுப்பன் வீடு. மாப்பிள்ளை பாஸ்கரனும், பெண் பாமாவும் வெளியே போய்விட்டுத் திரும்பி வருகிறார்கள். வாசலில் பாஸ்கரன், மைத்துனன் வாண்டுப் பயலிடம் கசங்கிய தாள்களைக் கொடுத்துக் குப்பையில் போடச் சொல்கிறான். வாண்டு அதை ரகசியமாகப் பிரித்துப் பார்த்துவிட்டு உள்ளே ஓடுகிறான்.]

வாண்டு: அம்மா! அம்மா!

தாயார் லலிதா: எதுக்குடா அலறுகிறே? மாப்பிள்ளை வந்தாச்சா? தட்டுப் போட்டுத் தீர்த்தம் எடுத்து வை.

வாண்டு: அம்மா! அக்காவும் அத்திம்பேரும் இங்கிலீஷ் பிக்சர் போறதாத்தானே சொன்னா? 'அடல்ட்ஸ் ஒன்லி; உன்னை உள்ளே விட மாட்டான்'னு சொல்லி ஏமாத்திட்டுக் கடைசியில் நாடகத்துக்குப் போயிட்டு வந்திருக்காம்மா!

ராமசுப்பன்: பின்னே ஒன்னை மடியிலே கட்டிண்டு அவா வெளியே போவாளாக்கும்? போடா, போடா அஸமஞ்சம்! அபஸ்மாரம்!

லலிதா: என்ன நாடகம் பாமா?

பாஸ்கரன்: கால்கட்டு. ஹியூமரஸ் பிளே.

ராமசுப்பன்: நகைச்சுவை நாடகமா? கஷ்ட காலம். சம்பந்தா சம்பந்தமில்லாமெ பழைய ஜோக்குகளையெல்லாம் தொகுத்துச் சொல்லி இதுதான் ஹ்யூமர், சிரின்னு பிராணனை வாங்கியிருப்பாளே!

அம்மாஞ்சி (வந்துகொண்டே): பெரும்பாலான நாடகங்கள் அப்படித்தான், சுப்பு. தமாஷ், கதையோட ஒட்டாம தனி ஆவர்த்தனம் நடத்தும். ஆனால் கால்கட்டு அப்படி யில்லே. ஸிசுவேஷன்லேயே நகைச்சுவை இயற்கையா அமைஞ்சிருக்கு.

லலிதா: அம்மாஞ்சி! நீங்க எப்போ பார்த்தேள்? சொல்லவேயில்லியே!

அம்மாஞ்சி: அதுவா... வந்து... வந்து நான் இப்படி தினம் வாக் போவேனா. மெரீனாவும் காலமே எழுந்து வாக் போறாரா? ரெண்டு பேரும் ஒரே பேட்டையானதாலே அடிக்கடி பார்த்துக்கிறோமா? புன்னகையிலே ஆரம்பிச்சு ஓசி பாஸ் வரை வளர்ந்துடுத்து எங்க சிநேகம்!

பாஸ்கரன்: ரொம்ப நன்னா எழுதியிருக்கார் மாமா; நீங்க படிச்சதில்லையா? ஒரு ஆவரேஜ் மிடில் கிளாஸ் ப்ராமின் ஃபாமிலியை அப்படியே படம் பிடிச்சுக் காட்டி, தமாஷான வசனத்திலே நாடகத்தை இயல்பா வளர்த்துண்டு போறார். படிக்கறச்சே இருந்ததை விட நாடகமாப் பார்க்கறச்சே இன்னும் நன்னா இருக்கு.

பாமா: அதிலே அதிசயமென்னன்னா? நாடகமா விஷுவலைஸ் பண்ணித்தானே எழுதினார்.

ராமசுப்பன்: கதை?

பாமா: கதைன்னு ஒண்ணும் பிரமாதமா கிடையாது. ஆனா வாழ்க்கையைக் கலைக் கண்ணோடு பிரதிபலிப்பதுதான் இலக்கியம்னு



மேலே: மெரீனா
இடது: கால்கட்டு நாடகத்தில்
ஷோபா, பூர்ணம்

இது டாப் கிளாஸ் லிட்ரச்சர் — நகைச்சுவை இலக்கியம்.

ராமசுப்பன்: அடேயப்பா! ஒரேயடியா ஒசத்திட்டியே!

பாஸ்கரன்: பாமா மிகைப்படுத்திச் சொல்லலே மாமா. குண சித்திரங்களைத் துல்லியமா வரைஞ்சிருக்கார். எந்த இடத்திலும் பிசிறு தட்டலே. நான் அமெரிக்காவிலே நாலு வருஷம் படிச்சுண்டும் வேலை பார்த்துண்டும் இருந்தவன். பிராட்வேலே சில ஹியூமரஸ் ப்ளேஸ் பார்த்திருக்கேன். கால்கட்டு ஒண்ணும் குறைஞ்சு போயிட்டதா எனக்குத் தோணலை.

லலிதா: உம்...நடிப்பெல்லாம் எப்படி?

அம்மாஞ்சி: அதை நான் சொல்றேன். சாதாரணமா விமர்சகாள்ளாம் பலான நடிகர் நாடக கதாபாத்திரமாகவே மாறிட்டார்னு எழுதுவா. ஆனா இந்த நாடகத்திலே ரசிகர்களே ஒவ்வொரு நாடகப் பாத்திரமாகவும் மாறிடறா.

பாஸ்கர்: கரெக்டா சொல்லிட்டேள், அம்மாஞ்சி! ஆடியன்ஸ் ஐடெண்டிஃபிகேஷன் ஸெண்ட் பர்ஸெண்ட் இல்லாவிட்டாலும் நைண்டி பர்ஸண்ட் நிச்சயம் இருக்கு. யார் யார் நன்னா நடிச்சான்னு சொல்றதை விட யார் நன்னா நடிக்கலேன்னு சொல்றது ரொம்ப சுலபம்.

ராமசுப்பன்: யாரு?

பாஸ்கரன்: ஒருத்தருமில்லே!

வாண்டு: அதாவது எல்லாரும் பிரமாதமா நடிச்சிருக்கா. அதைவிட அத்திம்பேர் பிரமாதமா நடிச்சார். அடல்ட்ஸ் சினிமா போறதாக! என்னை விட்டுட்டுத்தானே போனேள். இருக்கட்டும் கவனிச்சுக்கறேன். பூனைக்கும் ஒரு காலம் வரும். என் தயவும் உங்களுக்கு வேண்டி யிருக்கும்.

ராமசுப்பன்: பேசாம இருடா, அபஸ்மாரம்!

பாமா: இருந்தாலும் பூரணமும் சோபாவும் கிளாஸ்தான்.

பாஸ்கரன்: நோ, நோ, பாமா! அப்படிப் பிரிச்சுப் பேசவே கூடாதுங்கறேன். இட் இஸ் தி டீம் ஒர்க் விச் மாட்டர்ஸ். நம்ம வாண்டுப் பயல் மாதிரி நாடகத்திலே ஒருத்தன் வரானே அவன் நன்னா நடிக்கல்லேன்னா பூர்ணம் எடுத்துக்கற பிரயாசை யெல்லாம் வீணாயிடும். விழலுக்கு இறைத்த நீராயிடும். காட்சி முடியற கட்டத்திலே லேட்டை அணைக்கிறவர் எவ்வளவு முக்கியம் தெரியுமோ? எவ்வளவு எஃபெக்ட் உண்டாறது?

லலிதா: சரி, சரி. சாப்பிட்டுண்டே பேசலாமே? உட்காருங்கோ. பாமா நீயும் உட்காரு. ரெண்டு பேரையும் சேர்த்து மறுபடியும் மணையிலே உட்கார்த்திப் பார்க்கிறேன். எல்லோரும் சுத்தி உட்கார்ந்துண்டு பேசலாம்.

(அமர்கிறார்கள்)

ராமசுப்பன்: டைரக்ஷன் யாரு?

பாஸ்கரன்: கே. எஸ். நாகராஜன். அழகா, அளவா செய்திருக்கிறார். ரொம்ப இயற்கையா டெவலப் பண்ணிண்டு போய், கடைசியிலே மெலொடிராமாவை 'ஓவரா' பண்ணிடாமே, ரசிகர்கள் இதயத்தைத் தொடுகிற அளவில் லேசா ஒரு சிக்கல் உருவாக்கி, அதற்கு எளிமையான ஒரு தீர்வு கண்டு, மறுபடியும் நகைச்சுவையை உச்ச கட்டத்துக்குக் கொண்டு வந்து ஜனகணமன ஒலிக்கிறச்சே உடம்பு சிலிர்த்துப் போச்சு.

பாமா: அது சரின்னா, இந்த மாதிரி நாடகங்களுக்கெல்லாம் ஆர்க்கெஸ்ட்ரா வேணுமா?

பாஸ்கரன்: யூ ஆர் ரைட். தேவையில்லை தான். ஆனா அதைச் சொன்னா 'என் பொழப்புலே ஏன் ஐயா மண்ணைப் போடறீர்?' என்று ஆர்மோனியம் வாசிப்பவர் கேட்பார். இருந்துட்டுப் போகட்டுமே. அதனால் நாடகம் கெட்டுப் போகல்லே. சம்பிரதாயத்தைக் காப்பாத்திண்டே புதுமையைப் புகுத்தினாப்போச்சு

வாண்டு: அப்பா! அம்மாஞ்சி டைரி எழுதறார்!

பாமா: ஐயய்யோ! வேண்டாம் அம்மாஞ்சி! நாடகத்திலே வந்த மாதிரி ஏதாவது வம்பிலே முடியப் போறது!

அம்மாஞ்சி: சேச்சே! அதெல்லாம் ஒண்ணும் நேராது. (படிக்கிறார்) மாப்பிள்ளையும் பாமாவும் கால்கட்டு நாடகம் போய்விட்டு வந்தார்கள். வீட்டில் நாடக விமர்சனம் நடந்தது. நாடகம் பிரமாதம், ஆனால் கதை தான் இல்லை என்பது தீர்ப்பு.

பாஸ்கரன்: நோ, நோ! கதை இல்லை, ஆனால் நகைச்சுவை இலக்கியம் இருந்தது; நாடகக் கலை இருந்ததுன்னு எழுதுங்கோ!

வாண்டு: நாளைக்கு வாக்கிங் போறச்சே மெரீனாவைச் சந்திச்சு, மறக்காம வாண்டுப் பயலுக்கு ஒரு ஒசிப் பாஸ் வாங்கித் தரணும்னும் எழுதிக்குங்கோ! (திரை)

—குட்டி கிருஷ்ணன்

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை கால்ஷியம்-ஸாண்டோஸ்®



ஸ்விட்சர்லாந்தில் ஸாண்டோஸ உருவாக்கியுள்ள, உலகிலேயே தலைசிறந்த கால்ஷியம்

கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புக்ளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் நலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம். எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்—ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையை நிறைவுசெய்யும் வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.




## கால்ஷியம்-ஸாண்டோஸ்®
## வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

cCA/CS/151 TAM.

# அணை உடைத்துக் கொண்ட போது..

அவர்கள் கும்பலாகக் கலந்து நின்றிருந்தார்கள். ஒழுங்கு இல்லை. ஆனால் ஒற்றுமை தெரிந்தது. அவர்கள் பலர். கிட்டத்தட்ட அறுநூறு பேர் இருக்கலாம். எல்லாம் ஒரு குறிப்பிட்ட வயதுக்குள் அடக்கம். பதினெட்டிலிருந்து இருபத்தொன்று. இளமை தெறித்துக் கொண்டிருந்தது. ஒரு மூர்க்கத் தனத்துக்குத் தயாராக இருந்தார்கள்.

நான் அவர்கள் முன்னால் வர நேர்ந்திருக்கிறது. எனக்கும் அவர்களுக்கும் துளிச் சம்பந்தமில்லை. ஆனால் என் கடமை அப்படிப் பட்டது. இந்த நாடு, இந்த அரசாங்கம், தன் சுய கணிப்பின் பின்னணியில் என் தேவையை உணர்ந்து எனக்கு முக்கியத்துவம் கொடுத்து என்னை நிறுத்தி யிருக்கிறது. நான் போலீஸ். என் பரிவாரங்களின் விரைப்பான யூனிபாரத்தின் விளிம்பில் 'ரிசர்வ்' என்னும் பச்சைத் தகட்டுச் சட்டி பளபளத்தது. என் ஆட்கள் கொஞ்சம் பேர். மூன்று சப்-இன்ஸ்பெக்டர்கள், பதினெட்டு ஜவான்கள். எங்களிடம் துப்பாக்கி இருந்தது. குண்டாந்தடி இருந்தது. இந்த நாடு, என் குண்டாந்தடி, என் துப்பாக்கி ரவை இவற்றை நம்பித் தன் அமைப்பை, தான் படைத்திருக்கும் சட்டங்களைப் பாதுகாக்க என்னை நிறுத்தியிருக்கிறது. காந்தீயத்துக்கு இங்கு வேலையில்லை.

அந்தக் கல்லூரியின் மாணவர்கள் அவர்கள். கல்லூரிக் கேட்டின் விளிம்பில் அவர்களது 'ஸ்டிரைக்' தொடங்கி, ரோட்டின் நெடுகே, ஒரு பெருங் கும்பலாகப் படர்ந்து கிடந்தது. உடைந்து கொண்டிருக்கும் அணையின் நீருக்கும் இவர்களுக்கும் அதிக வித்தியாசமில்லை. அவர்களில் எத்தனை ரகங்கள்!

கம்பி வலையால் மூடிக் கொண்டு பிரமாண்ட உறுமலுடன் வந்து நின்ற என் வெள்ளை லாரியைக் கண்டதும் அவர்களுக்குள் ஒரு பரபரப்பு. நான் அடுத்து என்ன செய்வது என்று யோசிப்பதற்குள் அவர்கள் எல்லோரும் எழுந்து நின்றார்கள். திடீரென்று குரல்கள்!

''பிரின்சிபால்!''

''டௌன், டௌன்!''

ஒரே குரலாக எப்படி மாறி விட்டார்கள்! அவர்கள் உணர்ச்சியின் வேகத்தில் என் காக்கிச் சட்டைக்குள் புல்லரித்தது. இது அவசியம்தானா? நான் யோசித்தேன்.

இன்னும் கொஞ்ச நேரத்தில் உடைத்துக் கொள்ளப் போகும் அந்த அணையை என் குரலின் ஆணையால் தடுக்க வேண்டும். வெள்ளத்தைத் திசை திருப்ப வேண்டும். என் முயற்சியில் அந்த மாணவர்களின் உணர்ச்சிகள் ரத்த விளாறுகளாக முகத்தில் தெறிக்கும்படி செய்ய நேரிடலாம். காந்தியத்தின் நம்பிக்கை சிதறச் சிதற அடிக்கப் போகிறேன். அவர்களைத் திணற அடித்து அவர்களது சக்தியைத் திசை திருப்ப வேண்டும். அது என் வெறி பிடித்த எண்ணமல்ல. என் யூனிபாரத்துக்கும் என் குண்டாந்தடிக்கும் அதுதான் வேலை. அதுதான் சட்டம்.

ஒருவர் பாக்கி யில்லாமல் விரட்டி அடித்து அந்த இளமை தெறிக்கும் இடத்தைச் சூனியமாக்கப் போகிறேன். அங்கு



முனகலும், தோல்வியின் ஆத்திரமும் பயம் கலந்த ஓலமும், மூர்க்கத்தனமான வன் முறையும் படைக்க நேரிடலாம். அழகான, சைத்திரிகனின் ஓவியத்தில், மையை விசிறி அடிக்கப் போகிறேன்.

அவர்களோடு என் சம்பந்தத்தை இப் படித்தான் ஏற்படுத்திக் கொள்ள வேண்டிய திருக்கிறது. நான் போலீஸ். என் காக்கிச் சட்டையை மாட்டிக் கொள்ளுவதற்கு முன் இதயத்தைக் கழற்றி வைத்துவிட வேண்டும்.

காரிலிருந்தபடியே நான் கணக்கிடுகிறேன். அவர்களில் சிலர் கையில் பிடித்திருந்த போஸ்டர்களில் உரிமைக் கோஷங்கள்.

'வீ வாண்ட் யூனியன்', 'யூனியன் கொடு', 'டௌன் வித் தி பிரின்சிபால்', 'அடக்கு முறை ஒழிக', 'மாணவர்களை மதி'. — உரிமைக் கோஷங்கள். உரிமைகள் எப்போதும் எங்கும் நிரப்பப்படுவதில்லை. அதனால்தான் ஏற்றத் தாழ்வுகளோ? அதனால்தான் வர்க்க பேதங்களோ!

காரிலிருந்து இறங்கி அந்தக் கல்லூரியைப் பார்க்கிறேன். அக்கல்லூரி எனக்குப் புதிதல்ல. பிரும்மாண்டமான மூன்று மாடிக் கல் கட்டிடம் அது. கம்பீரமும், தனி அமைதியும் கொண்டது. மற்றொரு கேட் அருகில் நடக்கிறேன். காவல்காரர் பூட்டியிருந்த கதவைத் திறந்து என்னை உள்ளே விட்டார்.

''பிரின்சிபால் எங்கே?''

''உள்ளே இருக்கிறாருங்க.''

''வேறு ஏதாவது கலாட்டா நடந்திச்சா?''

''இல்லிங்க.''

இன்னும் அணை உடைபடவில்லை. அது உடைந்துவிடக் கூடாது. அந்தக் கட்டிடத்தை நிமிர்ந்து பார்க்கிறேன். கண்ணாடி ஜன்னல்கள் சதுரச் சதுரக் கட்டங்களாக உயர்ந்து நின்றன. மரங்கள் சூழ்ந்த பாதையின் வழியே நடக்கிறேன், கல்லூரியின் நுழை வாசலை நோக்கி. அதே மரங்கள்தான் இன்னும் இருக்கின்றன. இன்றும் அவை அதே போல் அடர்ந்து ஒரு நிழலான இருட்டையும் மனத்துக்கு இதத்தையும் தருகின்றன. அந்தப் பாதையின் முடிவில் மூன்று பாதைகள் சந்திக்கும் இடத்தில் அதே சிலை இருந்தது. ஏசுவின் சிலை. கைகளைத் தூக்கியவாறு கான்க்ரீட்டில் செய்யப்பட்டு, சுண்ணாம்பு பூசிய வெண்மையான அதே சிலை. புனிதமானதாக நான் கருதி வந்த சிலை.

**அ**து ஒரு கிறித்துவக் கல்லூரி. மிஷன் ஒன்றின் ஆதரவில் நடக்கும் கல்லூரி. மிகச் சிறந்த ஒழுக்கமும், கட்டுப்பாடுகளும் அதன் பெருமையை உயர்த்தியிருக்கின்றன. அந்தக் கல்லூரி மாணவன் என்றாலே ஒரு தனிச் சிறப்பு இருக்கும். அந்தக் கல்லூரியில் நான் ஒரு பழைய மாணவன். எட்டு வருடங்களுக்குப் பிறகு நான் அதற்குள் பிரவேசிக்கிறேன். மாணவப் பருவத்துச் சட்டை இல்லை இப்போது. ஒரு பொறுப்புள்ள டி. எஸ். பி. ஆக, ஓர் அரசாங்க ஊழியனாக நான் அங்கே நிற்கிறேன். முன்னால் இந்தக் கல்லூரியில் கட்டுப்பாட்டுடன் வாழ்ந்தேன். அன்று அதே கட்டுப்பாட்டைக் காப்பாற்றப் போகிறேன். வீட்டில் கழற்றி வைத்துள்ள என் இதயம் என்னுள் எப்படி வந்தது? என் பழைய காலத்தின் நினைவுகள் எப்படி அதில் வந்தன?

இதோ இந்த இடத்தில்தான் நாங்கள் கும்பலாக நின்று அரட்டை அடிப்போம். 'பார்க்' போல அழகாக அமைக்கப்பட்டிருந்த அந்தச் சோலையின் பெஞ்சுகளில், ஷேக்ஸ்பியரையும், டால்டனின் அணுக் கொள்கையையும், பிதகோரஸின் பரிமாணங்களையும் அலசி அலசி நெட்டுருப் போட்டிருக்கிறேன். இதோ இந்த இடத்தில், ஞாயிற்றுக் கிழமைகளில் தனிமையை நாடி, பெஞ்சில் ஏகாந்தமாகப் படுத்துக் கொண்டு, உயர்ந்த அந்த வில்வ மரங்களின் இடைவெளியில் நீல வானத்தைப் பார்த்துக் கொண்டிருப்பேன். மாடி வராந்தாவில் வகுப்பறையின் வெளியே கைப்பிடிச் சுவர் அருகே நின்று, வாசலில் டவுன் பஸ்ஸில் வந்து இறங்கும் மாணவர்களை ஆர்வத்துடன் பார்த்துக் கொண்டிருப்பேன். இந்தப் பாதையில்தான் என். ஸி. ஸி. பரேடுகளின்போது பூட்ஸ் கால்கள் ரிதமாகச் சப்தமிட ஓடியிருக்கிறேன். அதோ அந்தச் சின்னத் தேவாலயத்தின் மூடிய கதவுகளுக்கு வெளியே, உயர்ந்த படிக்கட்டின் கடைசிப் படியில் அமர்ந்து என்னுடைய ஹாலோ கிதாரின் டென்ஷன் நரம்புகளில் ''ப்ளு ப்ளு லவ் இஸ் ப்ளு'' என்று இசைத்திருக்கிறேன். இந்த ஆடிட்டோரியம், லைப்ரரி, கேன்டீன்.... என்ன இனிமையான நாட்கள்!

அன்று சட்டத்தை நான் சுமக்கவில்லை. அதைக் காப்பாற்ற வேண்டிய கவலை எனக்கு இல்லை. என் உலகத்தை இங்கே நான் வரைய முயன்றேன். சமுதாயத் தச்சர்களை உருவாக்கும் இந்தப் பட்டறையில்தான் போலீஸாக உருவானேன். ஆனால் ஒரு காலத்தில் நானும் மாணவன். மாணவர்களின் உணர்ச்சி முழுமையும் எனக்கும் இருந்திருக்





**" தோல்வி மேல் தோல்வி "**

1831-ல் வியாபாரத்தில் தோல்வி
1832-ல் சட்டசபைத் தேர்தலில் தோல்வி
1833-ல் வியாபாரத்தில் மறுபடியும் தோல்வி
1834-ல் சட்டசபையில் தோல்வி
1836-ல் சட்டசபைத் தலைவர் தேர்தலில் தோல்வி
1840-ல் எலக்டர் தேர்தலில் தோல்வி
1843-ல் காங்கிரஸ் தேர்தலில் தோல்வி
1848-ல் காங்கிரஸ் தேர்தலில் மறுபடியும் தோல்வி
1855-ல் செனட் தேர்தலில் தோல்வி
1856-ல் உதவி ஜனாதிபதி தேர்தலில் தோல்வி
1858-ல் மறுபடியும் செனட் தேர்தலில் தோல்வி

இவ்வளவு தோல்விகளையும் சந்தித்தவர் யார் தெரியுமா ? ஆபிரகாம் லிங்கன்தான். இறுதியில் 1860-ல் ஜனாதிபதி தேர்தலில் வெற்றி பெற்றார்.

-- உதகைநாதன்

---

கிறது. இன்று என் சமூகம் தனி. நான் போலீஸ்.....

''குட் மார்னிங்''. குரல் கேட்டுப் பார்க்கிறேன். வெள்ளைக் கவுனும், சிவப்புக் கச்சையுமாகப் பிரமச்சரியத்தைச் சுமந்து கொண்டு பிரின்சிபால் நின்றார். என்னுடைய 'குட்மார்னிங்கி'ல் அவரைத் தெரிந்துகொள்கிறேன். அதே தோற்றம். அதே முக பாவம், அதே தோரணை. ரெவரெண்ட் ஃபாதர் மால்கம்.

''ஃபாதர்! என்னைத் தெரிகிறதா? நான் உங்க ஸ்டூடண்ட்.'' என் கை தொப்பியை எடுத்து மரியாதை செய்தது.

சில விநாடிகளில் அடையாளம் கண்டு கொண்டார்.

''ஓ நீயா? ... எப்படி இருக்கே? நீதான் அந்தப் புது டி. எஸ். பி.யா?''

''ஆமாம்'' என்றவன் கடந்த காலத்தைச் சொன்னேன். நேராக விஷயத்துக்கு வந்தேன்.

''என்ன ஃபாதர் பிரச்னை?''

''உனக்குத் தெரியும். நீ படிச்ச காலத்தில் இங்கே யூனியன் இருந்ததா? முப்பத்தெட்டு வருஷமா ஸ்டூடன்ட் யூனியன் இல்லாம இந்தக் கல்லூரி நடந்திருக்கு. இப்பவும் அவசியமில்லை. தேவையில்லாம இவங்க கலாட்டா செய்யறாங்க. யூனியன் கொடுத்தா அவங்க நம்மை விரட்ட ஆரம்பிச்சுடுவாங்க. எங்க நிர்வாகம் ஒத்துக்கலை.''

அதைத் தடுக்க வேண்டும். அதை நிறுத்தியாக வேண்டும். மாணவர்களின் முகத்தில் வழியப் போகும் ரத்தக் கோடுகளை நான் வரையத் தயாரில்லை. விழுந்துவிட்ட மாணவர்கள், அவசரமாகக் கர்சீப் கொண்டு காயத்தை அழுத்திக் கொண்டு போலீஸ் இல்லாத பக்கமாக ஓடும் மாணவர்கள்...சே! அந்த நிலைமை வராது. வர விடக் கூடாது. பேசு.... பேசு!

''ஃபாதர், நான் ஒன்று சொல்லலாமா?'' என்கிறேன்.

''கமான்.''

''ஸ்ட்ரைக்கை நிறுத்த வழி இருக்கிறதா?''

''இருக்கிறது. இந்த நிர்வாகம் பணிய வேண்டும் அல்லது கல்லூரியை இழுத்துப் பூட்ட வேண்டும்.'' பிரின்சிபால் வெறுப்புடன் என்னைப் பார்த்தார். அவர் பார்வையில் நான் 'லாயக்கற்றவ'னாகப் பட்டேன்.

''அவர்கள் ஃபுல் ஸ்விங்கில் இருக்கிறார்கள். கலாட்டா வரும்.''

''உன்னை எதற்காக வரச் சொல்லி யிருக்கிறது, வேடிக்கை பார்க்கவா?...'' பிரின்சிபால் சீறினார்.

''யூனியன் தானே கேட்கிறார்கள், கொடுத்துவிட்டால்தான் என்ன?''

''ஒன்று செய். உன் யூனிஃபாரத்தைக் கழற்றி வைத்துவிட்டு வாசலில் போய் அவர்களோடு நில்லு.'' பிரின்சிபால் காட்டமானார். அதே கண்டிப்பு, அதே விறுவிறுப்பு. என்னை உருவாக்கிய சிற்பி அவர். அவர் எண்ணம் வேறு. என் எண்ணம் வேறு.

''பேசித் தீர்த்துக் கொள்ளலாமே?'' என் குரல் வெளியில் கேட்டதா என்று தெரியவில்லை.

பிரின்சிபால் அமைதி யடைந்திருந்தார்.

''பேசினேன். சமாதானம் செய்தாயிற்று. அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. அந்த மாணவர் தலைவனுக்கு பொலிடிகல் சப்போர்ட் இருக்கு. நம்மை மிரட்டுகிறான் அவன்!''

நான் குழம்பினேன். அடுத்து என்ன செய்வது? அரசியல் பின்னணி உடைய மாணவர் தலைவன், பிடிவாதமான பிரின்ஸிபால். இருவருமே முடிவுக்கு வரப் போவதில்லை.

என் கண் முன்னால் மாணவர்கள் தெரித்தார்கள். அவர்கள் குண்டாந்தடியால் அடிபட்டு, கண்ணீர்ப் புகையில் சிக்கி, 'டொம்' 'டொம்' என்று பெரும் கற்களை வீசி, கல்லூரிக் கண்ணாடிகள் மீது, போலீஸ் மீது, போலீஸ் லாரி மீது வீசி.... வேண்டாம். எப்படியாவது தடுத்து நிறுத்து. முயற்சி செய்.

மாணவர்களின் கோஷம் மீண்டும் கேட்கத் தொடங்கியது. யாரோ வந்திருக்க வேண்டும். அல்லது கல்லூரியில் யாரோ தென்பட்டிருக்க வேண்டும். என் காக்கித் தொப்பியினுள் தலை கனத்தது. நின்றேன்.

''உங்கள் முடிவுதான் என்ன ஃபாதர்?''

''பையன்களைக் கலைஞ்சு போகச் சொல்லு. நாளைக்குக் கிளாஸுக்குப் போகச் சொல்லு.''

நான் எழுந்தேன். அந்த நீண்ட வராந்தாவில் நடந்தேன். இந்த வராந்தாவில் எட்டு வருடங்களுக்கு முன் ஒரு நாள் நடந்த ஸ்டிரைக்கை நினைத்துப் பார்த்தேன். ஒன்று விடாமல் நினைவில் தட்டியது.

அப்போது நான் ஃபைனல் இயர் படித்துக் கொண்டிருந்தேன். ஹாஸ்டல் மெஸ்ஸில் ஒரு கலாட்டா. அதைப் பயன்படுத்தி மாணவர்கள் யூனியன் வேண்டும் என்று கோரிக்கை வைத்தனர். பிரின்சிபால் பையன்களை அடக்க நினைத்தார். 'யூனியன் தர முடியாது' என்று முடிவாகத் தெரிவித்து விட்டார். மாணவர்கள் பாதிப்பேர் வெளியில் நின்றனர். மீதிப்பேர் பயந்து, ஸ்டிரைக்கில் நம்பிக்கை

யின்றி உள்ளே சென்று வகுப்பில் உட்கார்ந்து விட்டோம். வெளியில் இருந்தவர்கள் உள்ளே இருந்தவர்களைக் 'கருங்காலிகள்' என்றும், 'பொட்டைப் பசங்கள்' என்றும் கேலி செய்தார்கள். கற்களை வீசினார்கள். பிரின்சிபால் போலீஸைக் கூப்பிட்டார். போலீஸ் வந்தது. அடக்கிப் பார்த்தார்கள். வெளியில் நின்றவர்கள் கல்லூரிக்குள் நுழைந்தனர். போலீஸ் துரத்தி அடித்தது. வகுப்பறையில் அமைதியாகப் படித்துக் கொண்டிருந்தவர்களை அடிக்க ஆரம்பித்தனர். நாங்கள் ஓடினோம். லாபரட்டரியின் கண்ணாடிகள் நொறுங்கின. கல்லெறி தொடர்ந்தது. நானும் சில மாணவர்களும் ஒரு வழியாகத் தப்பி வராந்தாவில்ஓடினோம்.ஓர்அப்பாவி மாணவன்வெளியேறினால் போதும் என்று வெளியில் ஓடினான். போலீஸார் அவனைச் செம்மையாகத் தாக்கினார்கள். கொஞ்ச நேரத்தில் அடி தாளாமல் அவன் கீழே விழுந்து விட்டான். அதுவரை பயந்து கிடந்த எங்கள் உணர்ச்சி விழித்துக் கொண்டது. ஆத்திரம் எங்கள் கண்களை மறைத்துவிட்டது. நாங்கள் ஏழு பேர். அந்த ஜவான் மீது நாங்கள் பாய்ந்தோம். அவர் உறுமினார். அவர் கைத்தடியைப் பிடுங்கி எறிந்தோம். தொப்பி தரையில் பறந்தது. ஐந்து நிமிடங்களில் கீழே கிடந்தார். கீழே கிடந்த அந்த மாணவனைத் தூக்கிக்கொண்டு சந்தடியற்ற இடத்தை நோக்கி ஓடினோம். என் கர்ச்சிப்பால் இரத்தம் வழிந்துகொண்டிருந்த அவன் தலைக் காயத்தில் அழுத்தினேன். அவன் முனகினான். ''ஐயோ அம்மா.! என்னை வீட்டில் கொண்டு விட்டுடுங்க...'' அவன் இதயம் பலமாக அடித்துக்கொண்டிருந்தது. என் இருதயமும்தான்.

...இன்றும் அதே போராட்டம். இன்னும் அந்தக் கல்லூரி மாணவர்களுக்கு யூனியன் கொடுக்கப்படவில்லை. யாரோ சிலருக்காக ஏன் இந்தத் துயரங்கள்? ஒரு மாணவனின் அரசியல் செல்வாக்கு பலம் மிக்கதுதானா? நிர்வாகத்தின் பிடிவாதம் பலமானதா?

மகாத்மா காந்தியின் பெரிய உருவப்படம் எதிரில் இருந்தது. அந்தக் கல்லூரியின் பாரம்பரியம் வெகு அருமையானது. சிறந்த மனிதர்களை உருவாக்கும் பல்கலைக் கேந்திரம் அது. அதனுடைய பலம் பொருந்திய சுவர்கள், கண்ணாடிகள், விஞ்ஞானச் சாதனங்கள் இவற்றைவிட, அதன் பாரம்பரியம், அதன் ஒழுக்கம், அதன் கட்டுப்பாடு, அதன் உயர்வு இதில்தான் அதன் நிர்வாகத்துக்கு நம்பிக்கை அதிகம். உண்மையும் அதுதான்.

மகாத்மாவின் புன்னகை என்னை வதைத்தது. இன்று மட்டும் என் மனம் ஏன் சஞ்சலப்பட வேண்டும்? என் காக்கிச் சட்டைக்குள் என் இதயத்தை ஏன் அனுமதித்தேன்? அது என் தவறல்ல. என் பழைய கல்லூரி அது. புனிதமான கல்லூரி அது. ஏசுவின் மௌனமான அருள் விளங்கும் அழகான கட்டிடம் அது. அதில் மீண்டும் ஒரு கறை படிய வேண்டுமா?

மீண்டும் வாசலுக்கு வந்தேன். என்னைக் கண்டதும் பூரண அமைதி. மாணவர்கள் நல்ல முடிவை எதிர்பார்த்துக் காத்திருக்கிறார்கள்.

வட இந்தியாவில் ஒரு கிராமத்தில் டி. வி.யில் ஒரு நாள் பயிர்களை அழிக்கும் பூச்சிகளைப் பற்றிப் படம் காண்பிக்கப்பட்டது. பூச்சியைப் பற்றி நன்றாகத் தெரிந்து கொள்ள ஒரு பூச்சியைத் திரை அளவுக்குப் பெரிதாக 'க்ளோஸ் அப்'பில் காட்டினார்கள். படம் முடிந்தது. ஒரு கிராமவாசி சொன்னது: ''நல்ல வேளையாக எங்கள் கிராமத்துப் பயிர்களில் இவ்வளவு பெரிய பூச்சிகள் வரவில்லை.'' -யூத் டைம்ஸ்-பாலி



அவர்கள் முகத்தைப் பார்க்கிறேன். எதற்கும் தயாராகி விட்டார்கள். நான் அவர்களை நோக்கி நடக்கிறேன். சில மாணவர்கள் முன்னால் வருகிறார்கள்.

''பிரின்சிபால் சம்மதிக்கிறாரா?''

''மாட்டாரா?''

கேள்விகள் குவிகின்றன. சங்கடத்துடன் அவர்களைப் பார்க்கிறேன்.

''மாணவர் தலைவர் யார்?''

ஒரு மாணவன் முன் வருகிறான். நல்ல உயரம். களையான முகம். எதையும் சாதிப்பான். அலட்சியமாக வந்தான்.

''கோரிக்கையை வாபஸ் பண்ண முடியாதா?''

''நிச்சயம் முடியாது. பிரின்சிபால் என்ன சொல்கிறார்?''

''அவர் யூனியன் அவசியமில்லை என்கிறார். உங்களுக்குப் போதிய உரிமையும் சலுகையும் கொடுத்திருப்பதாகச் சொல்கிறார். யூனியன் வந்தால் பொலிடிகல் இன்புளூயன்ஸ் அதிகமாகும். டிசிப்ளின் போயிடும்னு பயப்படுகிறார். பொதுவாக அவர் சம்மதிக்கவில்லை.''

''என்னிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்?'' மாணவர் தலைவன் கேட்டான், நான் பேசு முன்.

மாணவர்களின் சின்னச் சின்ன உரையாடல்கள் பெரிதாகி, பெரிய கேள்வியாக ஒரே குரலில், ''பிரின்சிபால் சம்மதித்தாரா?'' என்று எழுந்தது.

''சம்மதிக்கவில்லை.'' மாணவர்கள் தலைவன் திரும்பிக் கத்தினான். அவர்கள் எழுந்து கொண்டார்கள். விறுவிறுப்புத் தொடங்கி விட்டது.

''ஸ்டிரைக்கை நீங்கள் நிறுத்தப் போவதில்லை. .ஆனால் அமைதியாக நடத்துங்கள். உங்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கத்தான் நாங்கள் இருக்கிறோம். உங்களில் யாராவது கல்லெறிந்து, வன்முறையில் ஈடுபட்டால் உங்கள் அனைவரையும் கலைக்கும்படி நேரும். அதைத் தவிர வேறு வழியில்லை. ஐ'ம் சாரி'' என்று கூறிவிட்டுக் காரை நோக்கி நடந்தேன். எனக்கும் அவர்களுக்கும் இருபதடி தூரம் தான். என் ஜவான்களும், என் எஸ். ஐ. களும் என் உத்தரவுக்காகக்காத்திருந்தார்கள். ஃபைரிங் ஆர்டர் வரையில் செய்ய எனக்கு உரிமை இருக்கிறது. நான் மௌனமாகக் காரில் உட்கார்ந்து கொண்டு இரும்பு வலையால் மூடப்பட்டிருக்கும் கண்ணாடி முகப்பு வழியே அவர்களைப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

## இங்கும் ஆரம்பித்தால் என்ன ?



சோவியத் ரஷ்யாவில் 'சமூக சேவைக் குழு' உள்ளது. அந்தக் குழுவுக்குப் போன் செய்து 'நான் வெளியே போகவேண்டி யிருக்கிறது; என் குழந்தையைக் கொஞ்சம் வந்து பார்த்துக்கொள்ள முடியுமா?' 'எனக்கு பிரெஞ்சு சொல்லித் தர ஏற்பாடு செய்யுங்கள்' 'என் பெண் இன்று ரயிலில் வருகிறாள்; அவள் பெயர், அடையாளங்களைச் சொல் கிறேன்; அவளை என் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து விட முடியுமா?' என்பன போன்ற உதவிகளைக் கேட்டுப் பெறலாம். இவ்வுதவிகளுக்குச் சிறிய தொகை கட்டணமாக வசூலிக்கப்படுகிறது.

-வொர்ல்டு நியூஸ் - முத்து

---

மாணவர் தலைவன் அவர்களோடு விவாதித்துக் கொண்டிருக்கிறான். அணை உடைத்துக்கொள்ளலாம். அந்த அணை நீரை ஒழுங்காகப் பாதுகாத்தால்....

அணையால் எத்தனை பயன்கள்! ஒரு நாட்டின் பொருளாதாரத்தின் முதுகெலும்பு அணை நீர்தானே? அணை நீருக்கும் மாணவர்களின் சக்திக்கும் என்ன வேற்றுமை இருக்கப் போகிறது.

தனிமனிதர்களின் பொது சொத்துக்களையும், ஜடப் பொருட்களையும் பாதுகாக்க வேண்டுமானால், சில நேரங்களில் உணர்ச்சிக் கொந்தளிப்பில் இளமை தெறிக்கும் மாணவர்களை அரசாங்கம் சந்திக்க வேண்டியிருக்கிறது. மாணவர்களுக்கும் அரசாங்கத்துக்கும் என்ன பகை? ஏதுமில்லையே?

இதே மாணவர்கள்தானே எதிர்கால சமூகத்தின் சிற்பிகள். இதே மாணவர்கள்தானே வருங்கால அரசாங்கம். பின் ஏன் இந்த முரண்பாடு. இது சமூகத்துக்கும் சமூகத்துக்கும் இடையிலான பிரச்னை இல்லை. இது உணர்ச்சிகளுக்கு இடையே நடக்கும் போராட்டம். இந்த உணர்ச்சிப் போரில் மாணவர்கள் பலியாகலாம். நிர்வாகம் பலியாகலாம். அரசாங்கமேகூடப் பலியாகலாம்.

நிர்வாகத்துக்கும் மாணவர்களுக்கும் இடையே அரசாங்கம் நின்றிருக்கிறது. அதாவது நான் நிற்கிறேன். அணை உடைபடப் போகிறது. அதை நான் கட்டுப்படுத்தியாக வேண்டும். இல்லையேல் நிர்வாகம் அழியலாம். அல்லது இந்த அரசாங்கம் அழியலாம். அது மாணவர்களின் சக்தி மட்டுமல்ல. ஒற்றுமையின் சக்தி.

என்னுடைய காக்கிச் சட்டைக்குள்ளே இருக்கும் என் இதயத்தைப் பிடுங்கி எறிந்துவிட வேண்டிய நேரம் வந்து கொண்டிருக்கிறது. அத்துடன் நானும் ஒரு காலத்தில் மாணவன் என்ற நினைப்பையும் தூக்கி எறிந்து கொண்டிருக்கிறேன்.

என் கண்ணில் அடிபட்டு விழுந்து முனகிய பையன் தெரிந்தான். நாங்கள் அடித்து வீழ்த்திய போலீஸ் தெரிந்தார். நினைப்பை உதறிவிட்டு எதிரில் பார்க்கிறேன். இவர்களில் யாருக்கேனும் ரோஷம் வந்து என் ஆளைக் காயப்படுத்தக் கூடும். அதே மாணவன் நாளைக்கே ஒரு டி. எஸ். பி. ஆகக் கூடும். மாணவ சக்தியை ஆக்க சக்தியாக மாற்ற முயன்றால் ஒழிய இந்தக் கால பேதங்களைத் தவிர்க்க முடியாதுதான்.

மாணவர்களின் உணர்ச்சிகள் உடைத்துக் கொண்டு விட்டன. யாரோ சிலர் கற்களை எறிகிறார்கள். 'சிலிங்' 'சிலிங்' என்று கண்ணாடிகள் பெயர்கின்றன. 'கேட்' மீது பலர் ஏறிக் கொண்டிருக்கிறார்கள். என் லாரியின் மீது ஒரு கல் வந்து விழுகிறது. நான் காக்கிச் சட்டைக்குள்ளிருந்து உத்தரவிடுகிறேன்.

''சார்ஜ்!''

நான் அரசாங்க ஆஸ்பத்திரியில் நிற்கிறேன். வராந்தாவில், எமர்ஜென்ஸி வார்ட் அருகே. வாசலில் மாணவர் கூட்டம். என் ஆட்கள் சமாளித்துக் கொண்டிருக்கிறார்கள். பதினெட்டு மாணவர்களும் இரண்டு ஜவான்களும், ஒரு எஸ். ஐ.யும் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்கள். மாணவர்கள் தங்கள் கோரிக்கையில் வெற்றி பெறக் கொடுத்த விலை. என் எஸ். ஐ.யின் உயிர் ஊசலாடுகிறது. மாடிக் கைப்பிடியில் இருந்து குதித்துத் தப்ப நினைத்த மாணவன் காலில் எலும்பு முறிவு. கிட்டத்தட்ட எல்லோருக்கும் தலையில் காயம். நான் வெளியில் வருகிறேன். என் கூடவே அந்த சப் இன்ஸ்பெக்டரின் மனைவி. அழுதவாறு வருகிறாள். கலெக்டர், ஆர். டி. ஓ. அனைவரும் பார்த்து விட்டுப் போகிறார்கள். பத்திரிகைக்காரர்கள் என்னைச் சூழ்ந்து கொள்கிறார்கள். மாணவர்களின் வெறியைத் தூண்டி விடப் போகிறார்கள், போலீஸ் மீது விரோதத்தைக் காட்டுவார்கள். நான் பேசுகிறேன். நிலைமையைச் சொல்கிறேன். என் பெயர் மட்டும் அடிபடும்.

பரபரப்புடன் ஆஸ்பத்திரி பெரிய டாக்டர் வருகிறார். என்னைக் கூப்பிடுகிறார். கூட்டத்தில் இருந்து விலகுகிறேன். டாக்டர் சொல்கிறார். ''சார்! உங்க எஸ். ஐ.க்கு உடனடியாக இரத்தம் தேவைப்படுகிறது. ஆஸ்பத்திரியில் அவர் குரூப் இரத்தம் இல்லை.''

என் இரத்த வகையைச் சொல்லி 'சேருமா' என்கிறேன். இல்லை என்கிறார். என்னுள் தவிப்போடு, சுற்றிப் பார்க்கிறேன். அந்த மாணவர்கள் கூட்டம் என் தவிப்பை உணர்கிறது.

கூட்டத்தில் இருந்து ஒரு குரல்: ''என் குரூப் ரத்தம் தேவையானால் நான் தருகிறேன்.''

என் ரத்தம் துடிக்கிறது. வேறு சில குரல்களும் ''நாங்கள் தயார்'' என்றன. என் அருகே சில மாணவர்கள் நின்றனர், என் பதிலுக்காக.

''ஓ.கே.'' போலீஸ் உத்தியோகத்தில் முதன் முறையாக என் குரல் கரகரத்தது.

வீட்டுக்கு ஜீப்பில் திரும்பிக் கொண்டிருந்தேன். நீண்டு கிடந்த அந்தச் சாலையில் கார் போய்க் கொண்டிருந்தது. தூரத்தில் வானத்தில் ஒரு பெரிய நட்சத்திரம் தெரிந்தது. பாதையின் முடிவில் அந்த நட்சத்திரம் இருப்பதாகப் பட்டது. மிக உயர்ந்த நிலையை நோக்கி இந்த நாடு போவதை உணர்ந்தேன். அந்த மாணவர்களை நினைத்தேன். புல்லரித்தது. இந்தப் பாரத நாட்டின் பாரம்பரியத்தை நினைத்து வியந்தேன். என்னுள் பெருமை பொங்கியது.

# அன்றும் இன்றும்



நேற்று நிறுவப்பட்டது ஜோதி யூனிபில்ட் பம்பு



இன்றே காணமுடிந்தது இன்ப நாள் இதனை

முன்னேற்றத்தின் இரகசியம்—

# ஜோதி யூனிபில்ட் பம்பு

வெற்றி மிகு ஜோடி



ஜோதி
யூனிபில்ட்
பம்பு



ஜோதி
ஸ்டார்ட்டர்

ஆழ ஈர்ப்பு (டீப் ஸக்ஷன்) மூலம் செவ்வனே நீரிறைக்கும் திறன், அன்ருடப் பழுதுபார்ப்புத் தொல்லைக்குத் தீர்வு, மின்சாரச் செலவுகளிலே மிச்சம், நீடித்த ஆயுள்—இவை யாவும் ஜோதி யூனிபில்ட் பம்புகளிலே கிடைக்கும் முக்கிய நன்மைகள். இக் காரணத்திஞல் தான் ஜோதி பம்பு காப்பியடிக்கப் படுகிறது. ஜோதி ஆராய்ச்சி நிலையத்தின் ஓயாத முயற்சிகளின் பயஞக, எப்போதுமே விவசாயிகள் இந்தப் பம்பையே கோருகின்றனர்.



## ஜோதி லிமிடெட், பரோடா

ஹைட்ராலிக்ஸ் ● எலக்ட்ரிகல்ஸ் ● பவர் எலக்ட்ரானிக்ஸ்

ev-rest/24r2/JY-tm

கிளை: எய்ர்லைன்ஸ் ஓட்டல், 177/179 மவுண்ட் ரோடு, சென்னை. போன்: 850 07.
விற்பனையாளர்கள்: ஸி. வி. & கோ., xxx/613, மகாத்மா காந்தி ரோடு, கொசசி 682 016.
ஆட்டொமேட்டிக் பம்ப் ஸ்பெஷலிஸ்ட்ஸ், நம்பர் 4, பாண்டி பஜாா, தி. நகர், சென்னை 600 017;
ஜயலட்சுமி டிரேடர்ஸ், நம்பர் 2, எர்ரபாலு செட்டி ஸ்ட்ரீட், சென்னை 600 001; ராஜம் & கோ., 61, சதி ரோடு, ஈரோடு; மேலக்கடை எலக்ட்ரிகல்ஸ், 215, மெயின ரோடு, பெண்ணுடம் 606 105; ஆக்ட் ஏஜன்ஸீஸ், நம்பர் 8, நியூ கொழும்பு ஸ்டோர்ஸ மாயூரம்;
∴பெர்மியர் இண்டஸ்ட்ரீஸ், 80/81, செம்புதாஸ் ஸ்ட்ரீட், சென்னை 600 001;
முருகன் ஆட்டொமேட்டிக்ஸ், காளியம்மன் கோயில் ஸ்ட்ரீட், உசிலம்பட்டி

# அவர்களுக்கு அப்பா வேண்டும்

போட்டிக் கதை: 7

சோம்பல் முறித்தவாறு சோபாவில் மறுபுறம் திரும்பி அமர்ந்தாள் லலிதா. காலை மணி பத்து ஆகியிருந்தும் இன்னமும் அவளுக்குக் காப்பிகூட வேண்டியிருக்கவில்லை. குழந்தைகள் ரவியும், ஜயந்தியும் இல்லாமல் நிமிடங்கள் யுகங்களாய் ஊர்ந்தன. 'ஆயிற்று. இந்நேரம் மணி அண்ணா கல்யாணப் பெண்ணின் கழுத்தில் மூன்று முடிச்சுப் போட்டிருப்பான்.

மதுரையில் கல்யாணம். நெருங்கிய சில உறவினர்களுக்கு மட்டும் அழைப்பு விடுத்து, வெகு எளிமையாய் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது திருமணம். லலிதாவும் வரவேண்டும் என்பதுதான் மணியின் ஆசை. இரண்டொரு முறை சொல்லியும் பார்த்தான். லலிதா கேட்கவில்லை. ''குழந்தைகளை வேணும்னா அழைச்சுண்டு போ, அண்ணா! நான் வரவில்லை'' என்று கூறி விட்டாள். அவள் மன நிலையை அறிந்து மணியும் வற்புறுத்தவில்லை.



எங்கெங்கோ அலைந்த நினைவுகளை இழுத்துக் கட்டி, வீட்டு வேலைகளில் ஈடுபட முயன்றாள் லலிதா. ஊஹூம். மனம் பிடிவாதமாய்ப் பழைய நினைவுகளிலேயே மெது நடை போட்டது. தன் கட்டுப்பாட்டை மீறிய மனத்தை அதன் பாதையிலேயே ஓட விட்டாள்.

பத்து வருடங்களுக்கு முன்னால் இதேபோல் ஒரு சுப நாளில் அமோகமாய் நடந்தது மணி, லலிதாவின் கல்யாணங்கள். ஒரே மேடையில் சுதாவின் கழுத்தில் மணியும், லலிதாவின் கழுத்தில் சுரேஷும் மங்கல வாத்தியம் முழங்கத் தாலி கட்டினார்கள். மணியும், சுதாவும் அழகிலே ஒருவரையொருவர் மிஞ்சினார்கள் என்றால், லலிதாவையும் சுரேஷையும் ஜோடியாய்ப் பார்த்தவர்கள் எல்லாரும், 'எங்கே தங்கள் கண்ணே பட்டுவிடுமோ' என்று பயந்தார்கள். அப்படியொரு ஜோடிப் பொருத்தம். பெங்களூரில் வேலை மணிக்கு. பானுவும், மீனாவும் பிறந்து சுதா—மணியின் இல்லறத்தை நல்லறமாக்கினார்கள். திருமணமானவுடன் கணவனோடு தனிக்குடித்தனம் நடத்த பம்பாய் சென்ற லலிதா எட்டு வருடங்கள் சுவர்க்கத்தில் இருந்தாள். ரவியும், ஜயந்தியும் வாழ்க்கையை இன்ப மயமாக்கினார்கள். இந்த எட்டு வருடங்களில் அவளும் சுரேஷும் விளையாட்டுக்காகக்கூடப் பிணங்கியதில்லை. இத்தனை சந்தோஷம் தெய்வத்துக்கே பொறுக்கவில்லையோ!

ஒரு நாள், எப்பொழுதும் போல் சிரித்த முகத்தோடு குழந்தைகளுக்கும், அவளுக்கும் 'டாடா' சொல்லிவிட்டு ஆபீஸ் சென்றான் சுரேஷ். அன்று மத்தியானம் மூன்று மணிக்கு ஆபீசிலிருந்து போன் வந்தது, சுரேஷுக்குத் திடீரென்று மாரடைப்பு ஏற்பட்டு நிலைமை சீரியஸாகி ஆஸ்பத்திரியில் சேர்ந்திருப்பதாக. அலறிப் புடைத்துக் கொண்டு டாக்ஸியில் ஆஸ்பத்திரிக்கு விரைந்த லலிதா, கணவனின் உடலோடு வீடு திரும்பினாள். தான் சுயப் பிரக்ஞை இழந்தது, குழந்தைகள் கதறியது, அலறிக் கொண்டு வந்த தாமு, நிலைமையைச் சமாளித்தது, அவன் கொடுத்த தந்தியின் பேரில் அம்மா அப்பா வந்து காரியங்களை முடித்துக் கொண்டு குழந்தைகளையும் தன்னையும் சென்னை அழைத்து வந்தது — எல்லாமே சென்னை வந்து சேர்ந்த பல நாட்களுக்குப் பிறகும் லலிதாவின் இதயத்தை அழுத்தின.

அவள் கணவனை இழந்த அதிர்ச்சியிலிருந்து ஓரளவு மீண்டபோது மூன்றாவது மகப் பேறுக்காக ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்ட சுதா திரும்பவில்லை, குழந்தையும் தக்கவில்லை என்ற செய்தியைச் சுமந்து வந்தது மணியிடமிருந்து தந்தி. குழந்தைகளை அழைத்துக் கொண்டு வந்தான் மணி. தாயை இழந்த குழந்தைகளைப் பார்த்த பொழுதெல்லாம் அழுதாள் லலிதா.

கல்யாணம் முடிந்து புதுப் பெண் வீட்டுக்கு வந்து நான்கு நாட்களாகி விட்டன.

மணிக்கு லீவு முடிந்துவிட்டது. நளினியையும் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு அன்று பெங்களூர் கிளம்ப விருக்கிருன். காரிலே மணியும், அருகிலே நளினியும் அவளை நெருக்கிக் கொண்டு பானுவும் மீனுவும்.... உற்சாகமாய்ச் சிரித்தபடியே கையாட்டி அவர்களுக்கு 'டாடா' சொல்லி அனுப்பிவிட்டு உள்ளே நுழைந்த போதுதான் ஜயந்தியைக் கவனித்தாள் லலிதா. அவள் கண்களிலே நீர். முகம் சிவந்து, உதடுகள் துடித்தன.

''ஜயந்திக் கண்ணு, என்னம்மா, என்ன ஆச்சு?'' என்று லலிதா பதறினுள். பின்னுலேயே அவள் அம்மாவும், அப்பாவும் குழந்தையை நெருங்கினர்.

ஜயந்தி விக்கினுள். ''பானுவுக்கும், மீனுவுக்கும் புதுசா ஒரு அம்மா கிடைச்சுட்டா. அப்பா, அம்மா, குழந்தைகள்னு அவா இப்ப ஒரு சந்தோஷ குடும்பம். ஆனுல்...நானும்மா? பானுவுக்கும், மீனுவுக்கும் ஓர் அம்மா கிடைச்ச மாதிரி எனக்கும் ஓர் அப்பா....''

தேள் கொட்டினுற் போல் துடித்தாள் லலிதா. குழந்தையை மேலே பேசவிடாமல், அவள் கவனத்தை மாற்ற அவள் பட்டபாடு. ஊஹூம்... ஜயந்தி விம்மி அழ ஆரம்பித்தாள். ''அப்பா என்னைப் பெரியவளானதும் 'பாரீன்' கூட்டிண்டு போறேன்னுளே, ஸ்கூட்டர் ஓட்ட, கார் ஓட்டக் கத்துக் குடுக்கிறேன்னுளே, இப்ப எனக்கு யாருமே இல்லையேம்மா.'' லலிதா வெகு சிரமத்தோடு தன் அழுகையைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். ''ஜயந்திக் கண்ணு, உனக்கு என்ன வேணுமோ நான் தரேன், அழாதேம்மா'' என்று கண்களைத் துடைத்துக் கொண்டார் தாத்தா.

திடீரென்று வாசலில் டாக்ஸி வந்து நிற்கும் சத்தம். 'வாசலில் யார் என்று பார்' என்று குழந்தைகளை வாசலுக்கு அனுப்பிவிட்டு உள்ளே திரும்பினுள் லலிதா. அடுத்த நிமிடம் ரவியையும், ஜயந்தியையும் இரண்டு தோள்களிலும் ஏந்திக் கொண்டு உள்ளே நுழைந்தான். தாமு! லலிதாவிடமிருந்து ஒரு நிம்மதிப் பெருமூச்சு. ஆஜானுபாகுவான அவன் தோள்களில் குழந்தைகளைப் பார்த்தவுடனே ஒரு நிம்மதி.

சுரேஷின் ஆருயிர் நண்பன் தாமு. நண்பன் என்பதைவிட அவன் உயிரின் மறு பாதி எனலாம். பள்ளிப் பருவத்திலிருந்தே இருவரும் இணைபிரியா நண்பர்கள். கல்லூரிப் படிப்பையும் ஒன்ருய் முடித்துவிட்டு, ஒரே ஊரில், வெவ்வேறு கம்பெனிகளில் வேலையில் அமர்ந்தார்கள். சுரேஷுக்குத் திருமணம் ஆகும் வரை இருவரும் ஒரே அறையில் பிரும்மச்சாரி வாழ்க்கை. தன்னிடம் எவ்வளவு பேண்ட், ஷர்ட் இருக்கிறது என்றுகூட சுரேஷுக்குத் தெரியாது. அவன் துணிமணிகளை வண்ணனுக்குக் கொடுத்து வாங்குவதில் இருந்து, மாதா மாதம் அவன் சம்பளத்தில் இருந்து ஒரு பகுதியை வற்புறுத்தி அவனிடமிருந்து வாங்கி பாங்கியில் அவன் கணக்கில் போடுவது வரை, சுரேஷுக்கு ஒரு 'கார்டியனுக' இருந்தான் தாமு. கல்யாணம் ஆன பிறகும் நட்பு நீடித்தது. தாமு இல்லாமல் சுரேஷின் வீட்டில் ஒரு விசேஷமும்



மைதிலி



### அப்படியா !

'வெனிஷியன் ப்ளைண்ட்' (Venetian Blinds) எனப் படும் ஜன்னல் திரைகளை வெனிஸ் நகரில் எப்படி அழைக்கிறார்கள்? 'பெர்ஷியன்' என்று அழைக் கிறார்கள்.

பேஜண்ட்-பாலி

நடக்காது. லலிதா வேடிக்கையாய்க் குறிப் பிடுவாள் சுரேஷிடம், 'தாமுதான் உங்கள் முதல் மனைவி' என்று.

சுரேஷ் அகால முடிவை எய்திய செய்தி அறிந்து அலறிக் கொண்டு வந்த தாமு, லலிதாவின் நிலைமையைப் பார்த்ததுமே தன் துக்கத்தை யெல்லாம் விழுங்கிவிட்டு, குழந்தைகளுக்கும், நிர்க்கதியாய் நின்ற லலிதாவுக்கும் ஆறுதல் கூறி, அவள் பெற் றோரை வரவழைத்து, காரியங்கள் முடிந்த பிறகு சென்னையில் கொண்டு விட்டுச் சென் றான். இது நடந்து இரண்டரை வருடங்கள் ஆகின்றன. இடையில் பல முறை வந்த தாமு இன்றும் வந்திருக்கிறான்.

லலிதாவின் அப்பா குழந்தைகளை அழைத்துக் கொண்டு 'வாக்கிங்' சென்று விட்டார். அம்மா சமையல் அறையில் வேலை யாக இருந்தாள். தாமுவிடம் பேசிக் கொண் டிருந்தாள் லலிதா. எங்கெல்லாமோ சென்ற சம்பாஷணை, கடைசியில் தாமுவின் குடும்பத் தினரைச் சுற்றி வந்தது.

''தங்கைகளுக்கெல்லாம் கல்யாணமாகி விட்டது. தம்பிகளும் செட்டில் ஆகிவிட் டார்கள். பின்னே இன்னும் எதற்காகக் காத் துக் கொண்டிருக்கிறீர்களாம் ? எப்போது எங்களுக்குக் கல்யாணச் சாப்பாடு ?'' சுவா தீனமாய்ச் சிரித்துக் கொண்டே கேட்டாள் லலிதா.

''என்ன பதிலையே காணோமே!'' என்று உற்சாகமாய்ச் சீண்டினாள்.

பிறகுதான் ஏன் கேட்டோம் என்று வருந்தினாள்.

ஒரு முறை அவள் முகத்தை ஏறிட்டுப் பார்த்துவிட்டு, தலையைத் தாழ்த்திக் கொண் டான் தாமு. பிறகு தலையை நிமிர்த்தி அவள் கண்களை உற்று நோக்கிவிட்டுச் சிவந்து போன தன் முகத்தைக் கைக்குட்டை யால் அழுந்தத் துடைத்தவாறு சொன்னான்: ''உனக் காகத்தான் காத்திருக்கிறேன், லலிதா !''

ஆயிரம் தேள்கள் ஒன்றாய்க் கொட்டியது போல் துடித்துக்கொண்டு எழுந்தாள் லலிதா. ''என்ன... என்ன வார்த்தை சொன்னீர்கள், தாமு !'' அதிர்ச்சியில் மேலே பேச முடி யாமல் அவள் தொண்டையை அடைத்தது. உடல் ஆடியது. கைகள் வாசற்புறம் நோக்கி நீண்டன. ''போய் விடுங்கள், தாமு!'' என் றாள் லலிதா.

தாமு குறுக்கிட்டான். ''ஒரே ஒரு வார்த்தை லலிதா. எனக்குக் காதல்னா என் னன்னு தெரியாது. பிரதிபலன் கருதாமல் ஒருத்தரை நேசிக்கிறதும், அந்த ஒருத்தரின் நலனுக்காக, சந்தோஷத்துக்காக உயிரையும் கொடுக்கத் தயாராய் இருக்கிறதும்தான் காதல்னா, நான் சுரேஷைக் காதலிச்சேன். உன்னையும் இந்தக் குழந்தைகளையும் மனசார நேசிக்கிறேன்.'' — நடுவிலே பேச முயன்ற லலிதாவைப் பேச விடாமல் மேலே தொடர்ந் தான் தாமு. ''இந்தக் குழந்தைகளைப் பற்றிச் சுரேஷ் எத்தனை கனவுகள் கண்டான்னு எனக் குத் தெரியும், லலிதா. அவன் கனவுகளை நனவாக்கி, உன் முகம் வாடாமல் பார்த்துக் கிறதுதான் வாழ்க்கையில் என் ஒரே லட்சி யம்!'' தாமு போய் விட்டான்.

அன்றிரவெல்லாம் லலிதா தூங்கவில்லை. இப்படி ஓர் அபிப்பிராயமா தாமுவுக்கு ? தன் னிடம் இப்படி ஒரு கேள்வி கேட்க அவனுக்கு என்ன தைரியம் ? இந்த இரண்டரை வருடங் களில் எத்தனையோ முறை அவள் வீட்டுக்கு வந்திருக்கிறான் தாமு. குழந்தைகளைப் பார்க், கடற்கரை, மியூசியம், மிருகக்காட்சிச் சாலை என்று எத்தனையோ இடங்களுக்கு அழைத்துச் சென்றிருக்கிறான். ஏன் சில சம யம் அவள்கூட அவர்களோடு சென்றிருக்கி றாள். அப்பொழுதெல்லாம் தாமுவுக்கு இப் படி ஓர் எண்ணம் இருப்பதாக அவளுக்குச் சம்சயம்கூடத் தட்டியதில்லையே! எத்தனை கண்ணியமாக நடந்து கொள்வான்!

மறு நாள் காலை குழந்தைகளைப் பள்ளிக்குத் தயார் செய்து அனுப்பிவிட்டு, வழக்கம்போல் அவள் தையல் வகுப்புக்குக் கிளம்பும் சமயம். ஹாலில் பேச்சுக் குரல் கேட்டு நின்றாள். முதலில் தாமுவின் குரல். அடுத்து அவள் அப்பாவின் குரல் தெளிவாகக் கேட்டது.

''நீ சொல்றது எனக்குப் புரியுது, தாமு! நீ லலிதா பேரிலும், குழந்தைகளிடமும் காட்டற பரிசுத்தமான அன்பை, பாசத்தை நானும் இந்த இரண்டு வருஷங்களா கவனிச் சுண்டுதான் வரேன். குழந்தைகளோட மன வளர்ச்சிக்கும், ஆரோக்கியத்துக்கும், உன் னுடைய உறவும், அன்பும் எந்த அளவுக்கு உதவும்னு எனக்குப் புரியறது. ஆனால் லலிதாவின் நிலைமையையும் புரிஞ்சுக்கணும், இல்லையா ? வாழத் துடிக்கிற ஓர் இளம் விதவை மீது கட்டாயமா வைதவ்யத்தைத் திணிக்கிறது எவ்வளவு கொடுமையோ, அது மாதிரி கணவனின் நினைவிலேயே வாழ்நாளைக் கழிக்க விரும்பும் பெண்ணை மறுமணம் செய்துக்கச் சொல்றதும் கொடுமைதான். எப்படி இருந்தாலும் உன் மனத் திண்மையை நான் பாராட்டுகிறேன். இந்த வீட்டுக்கு ஒரு நண்பனாக நீ எப்பொழுதும் வரலாம்.''

அடுத்துத் தாமுவின் கரகரத்த குரல்.

''சார்! ஒரு நல்ல நண்பனாக மட்டும் இருந்து சுரேஷின் குழந்தைகளையும், லலிதாவையும் தொடர்ந்து பாதுகாக்க, அவர்களுக்காக எதையும் செய்ய என்னால் முடியும். ஆனால் சமூகம் அதை ஒத்துக்காது. நம்ம சமூகத்தைப் பொறுத்தவரை ஒரு பெண் தனது கணவனை அல்லது தந்தையை அல்லது கூடப் பிறந்த சகோதரனைத்தான் தனது பாதுகாவலனாக ஏத்துக்க முடியும். சமூகத்தின் இந்த விதியை மீற எனக்குத் துணிவில்லை. தவிரவும் லலிதாவைத் தவிர இன்னொரு

பெண்ணை என் மனசிலே ஏத்துக்க முடியாது. அவளுக்காகக் காலம் முழுவதும் நான் காத்திருக்கத் தயார். அவள் எப்போ தன் முடிவை எனக்குச் சாதகமா மாத்திண்டாலும் எனக்கு அதைத் தெரியப்படுத்தட்டும். நான் வரேன்'' தாமு போய்விட்டான்.

சரசரவென்று மாடியேறிப் படுக்கையில் விழுந்தாள் லலிதா. சொல்லத் தெரியாமல் ஓர் அழுகை குமுறிக் கொண்டு வந்தது. அந்தத் துக்கத்தைக் கலைக்க வீட்டில் யாருக்குமே துணிவில்லை. அழுது அழுது ஓய்ந்தபின், ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாய் முகத்தைக் கழுவிக் கொண்டு ஒரு ஸூட்கேசில் தன்னுடைய, குழந்தைகளுடைய துணிமணிகளை அவசியமான சாமான்களைத் திணித்தாள். பள்ளியிலிருந்து திரும்பிய குழந்தைகளையும் தயார் செய்துவிட்டு, ஹாலில் இருந்த தந்தையை நெருங்கினாள்.

''குழந்தைகளை அழைச்சுண்டு திருச்சிக்குப் போகலாம்னு இருக்கேம்பா'' என்றாள் லலிதா. திருச்சியில்தான் சுரேஷின் அப்பா, அம்மா இருந்தார்கள்.

''திருச்சிக்கா? ஏம்மா? என்ன விசேஷம்? ஏதாவது கடிதாசு வந்ததா?'' அவள் அப்பாவின் குரலில் ஆதங்கம்.

''இல்லையப்பா. கொஞ்ச நாட்கள் அவர் மனுஷாளோட தங்கினால் மனசுக்கு நிம்மதியாய் இருக்கும்னு தோணறது.'' லலிதா விம்மலை அடக்க உதட்டைக் கடித்துக் கொண்டாள். அவள் தந்தை பதில் பேசவில்லை.

திருச்சிக்கு வந்து நான்கு நாட்களாயின. சுரேஷின் அப்பாவுக்கும், அம்மாவுக்கும் லலிதாவையும், பேரக் குழந்தைகளையும் பார்த்ததில் சந்தோஷம். பாட்டி ரவியையும், ஜயந்தியையும் தன்னோடு சேர்த்து அணைத்துக் கொண்டு, ''தங்க விக்கிரகங்களாட்டமா இவாளை விட்டுவிட்டுப் போக அந்தப் பாவிக்கு எப்படி மனசு வந்ததோ !'' என்று புலம்பினாள். ரவியின் முக ஜாடையில், பேச்சில், சிரிப்பில், நடையில் மறைந்து போன தம் மகனைப் பார்த்து மகிழ்ந்தார் அவன் தாத்தா. குழந்தைகளுக்கு என்னமோ இங்கே ஒட்டவில்லை. பாட்டி வாய்க்கு வாய், ''ஐயோ, பாவம் ! தகப்பன் இல்லாத குழந்தை'' என்பதும், ''பத்து வயசுக்குள்ளே தகப்பனை முழுங்கிட்டேயேடா, பாவி !'' என்று கழிவிரக்கத்தோடு புலம்புவதும் ரவிக்குப் பிடிக்கவில்லை. அவன் பெரும்பாலும் வீட்டில் இருப்பதில்லை. சதா நண்பர்களோடு வெளியில் விளையாட்டுத்தான். ஜயந்தி சொல்லத் தெரியாத 'அப்பா' ஏக்கத்தில் வாடுவது லலிதாவுக்குப் புரிந்தது.

அன்று தாமுவிடமிருந்து லலிதாவுக்கு ஒரு கடிதம் வந்திருந்தது. குழந்தைகளின் நலன் விசாரித்து அவன் கடிதம் எழுதுவதும், அவள் பதில் எழுதுவதும் சகஜம்தான். இம்முறை ஏனோ அவன் கடிதத்தைப் படிக்க அவள் மனம் தயங்கியது. வழக்கம் போலக் குழந்தைகளின் நலனை விசாரித்துக் கடிதத்தை இப்படி முடித்திருந்தான் தாமு:

''....குழந்தைகளுக்கு ஒரு தந்தையின் பாதுகாப்பு தேவை என்பதை நீ எப்போது உணர்கிறாயோ, அப்பொழுது எனக்கு ஒரு வரி எழுது. ஓடோடி வருகிறேன்.'' —தாமு.



அகமதாபாத்தில் ஒரு சுவாரசியமான நிகழ்ச்சியைப் பார்க்கலாம். அங்கு ஆண்களும் பெண்களும் வாரத்தில் ஒரு நாள் பசுவுக்குத் தானம் கொடுக்கிறார்கள். இதை 'கோதானம்' என்கிறார்கள். பசுவுக்குப் புல், பிற தீவனங்களை வாங்கிப் போடுவது அவர்கள் வழக்கம். இதைப் பயன்படுத்திக் கொண்டு ஒருவர், ஒரு வண்டி நிறையப் புல் கொண்டு வருகிறார். அதைத் தானம் கொடுப்பவர்களுக்கு விற்கிறார். கூடவே, தான் கூட்டி வந்திருக்கும் பத்துப் பசுக்களுக்கு ஆகாரமாகப் போடச் சொல்லிக் கேட்கிறார். எப்படி சாமர்த்தியம்! வியாபாரத்துக்கு வியாபாரம்; பசுவுக்குத் தீனிக்குத் தீனி!

-ராமு

தாமுவின் மனத்தை நோக அடிக்காமல் எப்படிப் பதில் எழுதலாம் என்று யோசித்துக் கொண்டிருந்த சமயம், கூடத்திலே பெரிய அழுகை சத்தம். தூங்கி எழுந்ததில் இருந்தே பிடிவாதம் பிடித்து அழுது கொண்டிருந்தாள் ஜயந்தி. பால், காப்பி, ஓவல், டிபன் எதுவும் வேண்டாம் என்றாள். பின் என்னதான் வேண்டும்? பாட்டியும் தாத்தாவும் எவ்வளவோ சமாதானப்படுத்தியும், அழுகை அதிகமாயிற்றே தவிர குறையவில்லை. கடைசியில் பாட்டி பொறுமை இழந்தாள். ''தகப்பன் இல்லாமல் வளருகிற பொண்ணு சண்டித்தனம் பண்ணாமல் இருக்குமா? விதவை வளர்த்த பிள்ளையும்....'' பாட்டி முடிக்கவில்லை.

''பாட்டி, நிறுத்து, பேசாதே !'' ரவியின் கூக்குரல்.

வாசற்படியில் ஆக்ரோஷமாய் நின்று கொண்டிருந்தான் ரவி. ''என்னையும் ஜயந்தியையும் என்ன வேணும்னா சொல்லு. எங்க அம்மாவைப் பத்தி அநாவசியமாப் பேசாதே !''

''பார்த்தேளா ! எப்படிப் பேசறான்னு. எல்லாம் அம்மா தர்ற செல்லம். அப்பன்காரன் கண்டிப்பு இருந்தா...'' லலிதா மேலே அங்கே நிற்காமல் குழந்தைகளை இழுத்துக் கொண்டு உள்ளே ஓடினாள். வெகு நேரம் வரை அவள் விம்மல் ஓயவில்லை. ரவி தேம்பினான்: ''என்னை மன்னிச்சுடும்மா. ஜயந்தி அப்பாவுக்காக ஏங்கறதைப் பாட்டி புரிஞ்சுக்காமல் அவளைக் கோவிச்சுண்டதும் எனக்குத் தாங்க முடியலையம்மா. அப்பா தவறிப் போனது எங்கள் தப்பாம்மா? பகவான் ஏனம்மா எங்களுக்கு இவ்வளவு பெரிய தண்டனையைக் கொடுத்துட்டார் ?''

லலிதா அவன் முதுகை மெல்லத் தடவி ஆசுவாசப்படுத்தினாள். குழந்தைகளைச் சமாதானப்படுத்திய பின்னர், தாமுவுக்குத் தனது சாதகமான பதிலைத் தெரிவித்து, ஒரு வரி எழுதினாள். அவள் மனத்தில் ஒரு நிம்மதி. கடிதத்தைப் படித்தவுடன் தாமு ஓடோடி வருவான். அந்த வலுவான கரங்களின் பாதுகாப்புடன் குழந்தைகளுடன் அவள் புது வாழ்வு தொடங்குவாள்.

# குட்மார்னிங் டாக்டர்!

இருபத்தாறு வயது கமலம், தாயின் தோளைப் பற்றியவாறு மெல்ல நடந்து வந்து பெஞ்சில் அமர்ந்ததும் கூறினாள்: ''ஆறு மாத மாகத் தலை முழுகாமல் இருக்கிறேன். சிறுநீர் இறங்குவது மிகக் குறைவாக இருக்கிறது. நிறைய பார்லி கஞ்சி குடித்தும் பலனில்லை. சிறுநீர் கழிக்கும்போது எரிச்சலும் இருக் கிறது. பசி, தாகமும் அவ்வளவாக இல்லை. தினமும் காலையில் எழுந்திருக்கும்போதே மிகக் களைப்பாக இருக்கிறது. தலைவலி தொடர்ந்து இருந்து கொண்டே இருக் கிறது. இரண்டு மூன்று தடவை தலை சுற்ற லும் ஏற்பட்டது. கண் பார்வையும் சற்று மங்கலாக இருக்கிறது.''

கமலத்தைப் படுக்க வைத்து நான் பரி சோதனை செய்யும்போது அவள் தாயார் கூறினார் : ''அவள் கால்களைப் பாருங்கள், டாக்டர். நன்றாக வீங்கியிருக்கிறது. முதல் பிரசவம் என்பதால் கவலையாக இருக்கிறது.''

''சூலுற்ற பிறகு உங்கள் உடம்பைப் பரி சோதித்துக் கொண்டீர்களா ?'' என்று கமலத்தைக் கேட்டேன்.

''இல்லை, டாக்டர்! நான் கிராமத்தில் இருந்ததால் அதற்கு வசதியில்லை'' என்றாள்.

சிறுநீர்ப் பரிசோதனையின் முடிவு நான் எதிர்பார்த்தபடியே இருந்தது. சிறுநீரில் ஆல்புமின் (ஒரு வகைப் புரதம்) மிக அதிக மாக இருந்தது. இரத்த யூரியா மிகுதியாக இருந்ததன் விளைவாகச் சிறுநீரகம் பாதிக்கப் பட்டிருந்தது. சிறுநீரை 'கல்ச்சர்' (*Culture*) செய்ததில் 'பாக்டீரியா' கிருமிகள் இருப்ப தும் தெரிய வந்தது. கமலத்தின் இரத்த அழுத்தமும் மிகுதியாக இருந்தது.

''உங்கள் மகளை நீங்கள் இன்றே மருத்துவ மனையில் சேர்த்துவிட வேண்டும்'' என்ற எனது யோசனைக்கு இணங்கினாள் கமலத்தின் அன்னை.

**''கமலத்துக்கு என்ன வியாதி? வீட்டி லிருந்து மருந்து சாப்பிட்டால் போதாதா ?''**

''இதற்கு 'டாக்ஸீமியா' (*Toxaemia*) என்று பெயர். நோயாளிக்குக் கொடுக்கப் படும் உணவில் உப்பு சேர்ப்பதை நிறுத்த வேண்டும். சிறுநீர் எளிதாகவும் தாராளமாக வும் வெளியேற மருந்து கொடுக்க வேண்டும். தினமும் காலை, மாலை இரு வேளைகளும் இரத்த அழுத்தத்தைச் சோதித்து அறிய வேண்டியது அவசியம். நோயாளி கர்ப்பிணி யாதலால் இயல்பாகவே வாரா வாரம் எடை கூடுதலாகும். அதைக் கருத்தில் கொண்டு தேவைக்கு அதிகமாக எடை கூடுதலாகாம லும், போதிய அளவு சத்து உள்ளதாகவும் உணவு கொடுக்க வேண்டும். சிலருக்கு இந்த நிலையில் வலிப்பு (*Fits*) வரவும் கூடும். அப்படி வராமல் இருக்கவும், வந்தால் உரிய சிகிச்சை அளிக்கவும் மருத்துவ மனையில்தான் வசதி உண்டு.''

**''தலைப் பிரசவமானால் வலிப்பு ஏற்படு வதற்கான வாய்ப்பு அதிகமா ?''**

''அப்படியில்லை. ஏற்கனவேயே பல குழந்தைகளைப் பெற்றுள்ள தாய்மார்களுக் கும் வரும் வாய்ப்பு உண்டு — போஷாக்குள்ள உணவு சூலுற்ற நிலையில் சாப்பிடாவிட்டால். பிரசவத்துக்கு முன்னரும், பின்னரும், பிரசவ நேரத்திலும்கூட வலிப்பு ஏற்படலாம். பிரசவிக்க இருக்கும் தருவாயில் வலிப்பு வந் தால் தாயின் மூளையும் பாதிக்கப்படலாம். அப்படி ஏற்படலாம் என்று தோன்றினால், மருத்துவரே வலுக் கட்டாயமாகக் குழந் தையை உரிய காலத்துக்கு முன்பே வெளிக் கொணரும்படி (*Induced Labour*) யாக லாம். தாயின் உயிரைக் காப்பாற்ற இது அத்தியாவசியமாகிவிடலாம். 'சிசேரியன் ஆப ரேஷன்' செய்து குழந்தையை எடுக்கும்படி யும் நேரிடலாம். பெரும்பாலும் இந்நிலையில் குழந்தை உயிர் பிழைப்பது அரிது.....''



கர்ப்ப வாசத்தில் இருக்கும் குழந்தையை எக்ஸ்ரே படம் எடுப்பது நல்லதல்ல. எக்ஸ் கதிர்கள் குழந்தை யைப் பாதிக்கலாம். எனவே இப்போது காதுக்குக் கேளாத ஒலி அலைகளைச் செலுத்தி (Ultra Sonic) கருவின் உருவைத் திரையில் காண்பிக்கும் கருவியை அமெரிக்காவில் உருவாக்கியிருக்கிறார்கள்.

**''இத்தகைய ஆபத்துக்களைத் தவிர்க்க, சூலுற்ற பெண்மணிகள் என்ன முன் எச் சரிக்கையை மேற்கொள்ளலாம்?''**

''மூன்றும் மாதத்திலிருந்தே மருத்துவ ரிடம் சென்று உடல் நிலையைப் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும். சிறுநீர் குறை வாகப் போனால் தாமதியாமல் மருத்துவரிடம் செல்ல வேண்டும். பார்லி நீர் குடித்தால் சிறுநீர் வெளியேறிவிடும் என்று அலட்சியமாக இருந்துவிடக் கூடாது. பார்லி நீர் இதற்குரிய மருந்து ஆகிவிடாது. சிறுநீரில் ஆல்புமின் மிகுதியாகாமல் இருக்கிறதா, இரத்த அழுத் தம் மிகுதியாகாமல் உளதா என்று மருத்து வரின் மூலம் சோதித்து அறிந்துகொண்டு எச் சரிக்கையுடன் இருந்தால் 'டாக்ஸீமியா' போன்ற நோய் வராமல் தடுக்க இயலும்.''

டாக்டர் **வி. கனகவல்லி** கூறக் கேட்டு எழுதியவர்: ஆர்.பி.

# கர்ப்பிணிகள் கவனத்துக்கு...

[திரு மனோஜ்தாஸ், அவரது தாய்மொழியான ஒரியாவிலும், ஆங்கிலத்திலும் எழுதிப் புகழ் பெற்றவர். அவரது ஒரியா மொழி சிறுகதைத் தொகுதி ஸாகித்ய அகாதெமியின் 1972 ம் வருஷத்திய பரிசு பெற்றது. அரவிந்தரிடம் ஈடுபாடு கொண்டவர். அரவிந்தரின் வாழ்க்கை வரலாற்றை எழுதியிருக்கிறார். சாகித்ய அகாதெமி வெளியிட்டுள்ளது. தற்சமயம் புதுச்சேரியில் ஆங்கில ஆசிரியராகப் பணி புரிந்து வருகிறார்.]

இருபது வருஷங்களுக்கு முன் நடந்தது. அதை இப்பொழுது ஞாபகப்படுத்துவது, நகைச்சுவைக்காக அல்ல. அதாவது, அன்று எங்கள் ராஜ்யத்தில் மீன் வளம், நுண் கலை மந்திரியாக இருந்த பாபு வீர் கிஷோர் அவர்களையோ, அல்லது திரு மெஹ்ரானா அவர்களையோ கேலி செய்வது என் நோக்கமல்ல. அதற்கு மாறாக அவ்விருவரிடமும் இதுகாறும், அதாவது இருபதாண்டுகளாக எனக்கு இருந்து வரும் அனுதாபத்தை வாசகர்களிடம் பகிர்ந்து கொள்ளுவதற்காகத்தான் இதை ஞாபகப்படுத்துகிறேன்.

திரு மெஹ்ரானா பணக்காரர். எங்கள் கிராமத்தில் இருபது வீடுகள் உண்டு. அவற்றில் எல்லாம் வைத்து இவர் வீடுதான் பெரிய வீடு. பாரதம் சுதந்திரம் அடைந்தபோது, இவ்வீட்டுக்குச் சுண்ணாம்பு அடிக்கப்பட்டது. இதை, எங்கள் ஊர் சுற்றுப்புறமிருந்து வரும் மக்கள் ஏதோ நடக்காத அதிசயம் நடந்துவிட்டது போல் வியந்து பார்ப்பார்கள். ஐம்பது வருஷங்களுக்குப் பிறகு இப்பொழுது தானே முதல் தடவையாகச் சுண்ணாம்பு பூசப்பட்டிருக்கிறது!

திரு மெஹ்ரானா நல்லவர். அவர் வீடு என்றும், ''அடையா நெடுங் கதவு''. விருந்தாளிகள் வந்துவிட்டால் வயிறாரச் சாப்பாடு பண்ணி வைப்பதில் அவருக்கு அலாதியான திருப்தி. அதற்கு வசதியாக அவர் வீட்டுக் கொல்லையில் மீன் பண்ணைக் குட்டை உண்டு, பால் கொடுக்கும் மாடுகள் உண்டு.

இந்தப் பழைய பாரத நாட்டில் பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்ற நான்கு ஜாதிகள் உண்டு என்று கேள்விப்பட்டிருக்கிறோம். சுதந்திரத்துக்குப் பிறகு ஒரு புது ஜாதி தோன்றலாயிற்று. அதுதான் தேசபக்த ஜாதி. இந்த ஜாதிக்கு 1947 ஆகஸ்டுக்குப் பிறகு ஒரு புது வேகம் ஏற்பட்டது.

இந்தப் புது ஜாதியினரிடம் திரு மெஹ்ரானா அவர்களுக்கு ஓர் ஈடுபாடு ஏற்பட்டது. அவர்களைப் பாராட்டினார்; கௌரவித்தார். தம் மீன் பண்ணையிலிருந்து மீன்களை அவர்களுக்கு வழங்கினார். இப்படியெல்லாம் செய்து நாளடைவில் அவரே தேசபக்தராகி வந்ததைக் கண்டு மக்கள் வியப்படைந்தனர். சில நாட்களில் எனக்கும் ஒரு விஷயம் புரியலாயிற்று.






# குல்லாயின் ரகசியம்

## மனோஜ்தாஸ்

அதாவது மெஹ்ரானா தாமும் ஒரு சட்ட சபை உறுப்பினராக வேண்டும் என்ற ஆசையை வளர்த்து வந்தார் என்பது தான். இதற்காக அவர் சில காரியங்கள் செய்தார். இதில் ஒன்றை நானே நேரில் பார்க்க நேர்ந்தது. அதைத்தான் இங்கே குறிப்பிட வந்தேன்.

என் மாமாவின் வீடு திரு மெஹ்ரானா அவர்களின் வீட்டுக்கு வெகு அருகில் இருந்தது. நான் சிறுவனாக இருந்த போது அடிக்கடி மாமா வீட்டுக்குப் போவேன். அந்த நாட்களில் ஒரிஸ்ஸா மந்திரி சபையிலிருந்த திரு பாபு வீர் கிஷோர் எங்கள் ஜில்லாவிலிருந்து போனவர். ஆகவே, திரு மெஹ்ரானாவை அரசியலில் புகுத்த விரும்பியவர்கள் பாபு வீர்கிஷோரின் ஆசிகளையும் ஆதரவையும் பெற வேண்டும் என்று விரும்பினார்கள்.

மந்திரிகளின் முக்கியமான பணி வரவேற்பு விழாக்களில், பொதுக் கூட்டங்களில் கலந்து கொள்வதுதான் என்றிருந்ததால் மெஹ்ரானாவின் ஆதரவாளர்கள் திரு பாபு வீர்கிஷோருக்கு ஒரு வரவேற்பு விழா நடத்த வேண்டும் என்று தீர்மானித்தனர். திரு மெஹ்ரானாவைத் தலைவராகக் கொண்ட ஒரு வரவேற்புக் கமிட்டி அமைத்து விழாவும் ஏற்பாடு செய்தனர்.

விழா நடப்பதற்கு 15 நாட்களுக்கு முன்பிருந்தே உள்ளூர் ஆரம்பப் பள்ளிச் சிறுமிகளுக்கு, மந்திரிக்கு வரவேற்புக் கீதம் பாடி வரவேற்கப் பயிற்சி அளிக்கப்பட்டது. இதில் வேடிக்கை என்னவென்றால் இந்தப் பள்ளியின் ஒரிய மொழிப் பண்டிதருக்கு, இப்பொழுது வயது அறுபத்தேழு ஆகிறது. இத்தனை ஆண்டுகளில் அவர் என்றும் கவிதை என்ன என்பது பற்றிக் கவலைப்பட்டதே கிடையாது. இப்பொழுது அவருக்கு மந்திரியை வரவேற்றுப் பாட்டு இயற்றும் அரும் பேறு கிடைத்தது. அவர் அன்று புனைந்த பாட்டின் ஒரு வரி இன்றும் என் நினைவில் இருக்கிறது.

ஓ! மந்திரியாரே! மந்திரியாரே !
எங்களுக்குச் சொல்லும்
இந்தப் பரந்த பாரை எப்படி
ஆள்கிறீர்? எங்களுக்குச் சொல்லும் !

அடுத்த அடிகள் மந்திரியின் வருகையினால் என்னவெல்லாம் மாறுதல் நேர்ந்திருக்கின்றன என்று அடுக்கடுக்காகக் கூறின. அன்று காலை சூரியன் என்றும் இல்லாத மகிழ்ச்சியோடு உதயமானானும். ஒவ்வொரு பறவை இனமும் ஒவ்வொரு ராகத்தில் குரல் எழுப்பி மந்திரியை வரவேற்றதாம். கிராமப் பெண்கள் சங்கூதி வரவேற்கிறார்களாம்.

இப்படி யெல்லாம் இன்று யார் வரவேற்கிறார்கள்? அந்தக் காலமே வேறு. அதிலும் பட்டிக்காட்டுக் குழந்தைகளாகிய நாங்கள் ஒருவரோடு ஒருவர் என்னவெல்லாமோ பேசி கொள்வோம். — மந்திரி என்ன சாப்பிடுவார் ? அவர் தூங்குவாரா? மாட்டாரா ? அவருக்கு ஜுரம் வருமா ? சளி பிடிக்குமா ?

இது எங்கள் நிலை என்றால் மெஹ்ரானாவைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை ! பொதுவாக, பகல் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு மணி நேரம் தூங்குவார். இப்பொழுது சென்ற பத்து நாட்களாக மத்தியானம் தூங்குவதே இல்லை. விழா ஏற்பாடுகளைக் கவனிப்பதற்கே நேரம் சரியாக இருந்தது ! இவ்வளவு சிரத்தை எடுத்துக் கொண்டும் அவருக்கு உள்ளுக்குள் ஓர் அச்சம் ! நடுக்கம் !

கடைசியாக வெகு ஆவலோடு எதிர்பார்க்கப்பட்ட அந்தத் திரு நாள் வந்தது. மந்திரிக்காக எங்கள் கிராமத்து நுழை வாயிலிலேயே ஒரு வரவேற்பு வளைவு அமைக்கப்பட்டிருந்தது. மந்திரியார் அங்கே தம் ஜீப்பை விட்டு இறங்கினார். திரு மெஹ்ரானா ஒரு பெரிய மாலை அணிவித்துப் பெரிதாகக் கும்பிட்டார். மந்திரி நடக்கத் தொடங்கினார். மந்திரி தங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ள இடம் ஒரு பர்லாங்கு தூரத்துக்கு அப்பால் இருப்பதால் மந்திரியாரை ஜீப்பிலேயே வரும்படி கோரினார் மெஹ்ரானா. அதற்கு மந்திரியார் ஒரு புன்னகையை உதிர்த்துவிட்டு ஏதோ சொன்னார். அதன் கருத்து, அதிர்ஷ்ட தேவதை அவரை எவ்வளவு உயரத்துக்குக் கொண்டு போனாலும், தாம் பூமியில் பாதம் பட நடப்பதையே விரும்புபவர் என்பது தான். இதைக் கேட்டு, திரு மெஹ்ரானாவும் அவர் நண்பர்களும் பெரு வியப்பில் ஆழ்ந்து போனார்கள்.

திரு மெஹ்ரானா அவர்கள் வீட்டுக்கு மந்திரியாரும் அவரைச் சேர்ந்த குழுவினரும் வந்ததும் எல்லாருக்கும் இளநீர் வழங்கப்பட்டது. பிறகு இருபது வகை காய்கறிகள், இனிப்புகள் உள்ள விருந்து நடைபெற்றது. அத்தகைய விருந்து என்றும் நடந்ததே இல்லை என்று சொல்ல வேண்டும்.

மந்திரிக்காக ஓர் அறை ஒதுக்கப்பட்டிருந்தது. மந்திரி ஓய்வெடுத்துக் கொள்ளச் சென்றார். கோடைகாலம். மந்திரியார் படுத்திருந்த அறையின் ஜன்னல்கள் தோட்டத்தின் பக்கம் இருந்தன. தோட்டத்தில் குளமுமிருந்ததால் குளிர்ந்த காற்று அறைக்குள் வீசியது.



அரபு நாடுகளில் ஒன்றுன அபுதாபி நாட்டுக்குப் பெரிய பிரச்னை. சென்ற ஆண்டு எண்ணெயில் சம்பாதித்த லாபம் முழுவதையும் அந்த நாட்டினுல் செலவு செய்ய முடியவில்லை. முதலில் பட்ஜெட் போட்டபோது 65 கோடி டாலர் துண்டு விழும்படியாக பட்ஜெட் போட்டார்கள். ஆனுல் ஆண்டு முடிவில் 100 கோடி உபரியாகி விட்டது. எப்படி? எண்ணெய் உற்பத்தி எதிர்பார்த்ததை விடப் பல மடங்கு அதிகமாகி விட்டது. எதிர்பார்த்த இனங்களில் பணத்தையும் செலவு செய்ய முடியவில்லை. எகிப்து, சிரியா நாடுகளுக்குக் குறைந்த வட்டியில் கடன் கொடுத்திருக்கிறது. அப்படியும் பணம் மிச்சமாகி விட்டது. அந்த நாட்டில் இப்பொழுது சராசரி வருமானம் தலைக்குக் கிட்டத்தட்ட முப்ப தாயிரம் டாலர்.

-இந்தியன் எக்ஸ்பிரஸ்-கே.ஆர்

அது அந்தப் பூதாகாரமான மந்திரியாரை இனிய நித்திரையில் ஆழ்த்தியது. மந்திரியாரின் தூக்கத்தைக் கெடுக்காமல் இருக்க, கிராமத்தின் எந்தப் பகுதியிலிருந்தும் சத்தம் வராமல் பார்த்துக் கொள்ளத் தொண்டர்கள் நியமிக்கப்பட்டார்கள்.

எனக்கோ மந்திரியாரைப் பக்கத்திலிருந்து பார்க்க வேண்டும் என்ற ஆசை.

ஜன்னல் வழியாகப் பார்த்தபோது தலையணையின் மீதிருந்த மந்திரியாரின் வழுக்கைத் தலை தெரிந்தது. அவருக்குப் பக்கத்திலிருந்த சிறிய மேஜையின் மீது அவருடைய வெள்ளைக் குல்லாய் இருந்தது. திடீரென்று ஜண்டு எங்கிருந்தோ வந்து குதித்து அறைக்குள் இருந்த மந்திரியாரின் குல்லாயை ஜன்னலின் வழியாக எடுத்துக் கொண்டது. அர்த்தபுஷ்டியுள்ள ஒரு பார்வையை என் மீது வீசிவிட்டு, ஜண்டு தோட்டத்துக்குள் மறைந்துவிட்டது. எனக்கு ஒரே ஆச்சரியம்! கத்தக்கூட குரல் வரவில்லை. இதற்குக் காரணம் ஒரு வேளை ஜண்டுவின்பால் எனக்கு இருந்த அன்புதானே? ஜண்டு செய்த காரியம் அதற்கு உயிராபத்தையே விளைவிக்கக் கூடியதல்லவா? அல்லது நான் கூச்சல் போட்டால் மந்திரியாரின் குறட்டை நின்று விடலாம் என்ற பயத்தில் நான் என் குரல் எழும்பாமல் நின்று விட்டதோ! பெரிய குழப்பத்தில் சிக்கிக் கொண்டேன். அந்தப் பெரிய மனிதரின் குறட்டை முக்கியமா? குல்லாய் முக்கியமா?

இப்படிக் குழம்பிய உள்ளத்தோடு என் வீட்டை நோக்கி வந்து கொண்டிருந்தேன். அதற்குள் ஆங்காங்கு மக்கள் கசமுசவென்று பேசும் அரவம் கேட்டது. மந்திரியாரின் அந்தரங்கச் செயலாளர், ''என்ன விசித்திரமாக இருக்கிறதே!'' என்று அடிக்கடி பொரிந்து தள்ளி, துள்ளிக் குதிப்பதையும் பார்த்தேன்.

திரு மெஹ்ரானு நடுங்கிக் கொண்டிருந்தார். உடல் எல்லாம் வியர்த்துக் கொட்டிக் கொண்டிருந்தது.

திரு மெஹ்ரானுவின் இந்த நிலை எனக்கு ஒரு தெளிவைத் தந்தது. திரு மெஹ்ரானுவை என்னைப் பின்தொடர்ந்து வருமாறு சைகை காட்டினேன். அவர் உடனே என்னைப் பின் தொடர்ந்தார். மூழ்கிக் கொண்டிருக்கும் மனிதனுக்கு ஒரு சிறு வைக்கோல் துண்டு கிடைத்தாலும் பற்றிக் கொண்டு கரை ஏறத்தானே பார்ப்பான்.

அவரைத் தனியே அழைத்துப் போய் நடந்த விவரத்தைக் கூறினேன். அதைக் கேட்டு ஒரு நிமிஷம் மௌனமாகப் போனுர். கண்களை மூடிக் கொண்டார். தம் நெற்றியில் துளிர்த்த வியர்வையைத் துடைத்துக் கொண்டு கலகலவென்று சிரித்தார். பிறகு என்னைப் பார்த்து, ''அப்பா, மகனே! இவ் விஷயத்தை என்னிடம் சொன்னது நல்லதாகப் போயிற்று. இதை வேறு யாரிடமும் சொல்லாதே. உன் மனத்துக்குள்ளேயே வைத்துக் கொள். பிறகு உனக்கு ஒரு நல்ல பரிசு தருகிறேன்'' என்றுர்.

அறைக்குள்ளேயே இருந்த மந்திரியும் மெஹ்ரானுவும் வீட்டு வெளி முற்றத்துக்கு வருவதைப் பார்த்தேன். திரு மெஹ்ரானு விஷயத்தை மந்திரிக்கு விளக்கினுரா இல்லையா என்பது புரியவில்லை. ஆனுல் மந்திரியோ ஒரே ஆனந்த சாகரத்தில் மூழ்கியவராகக் காணப்பட்டார். அவர் முகத்தில் அரும்பிய மகிழ்ச்சிப் புன்னகை இது வரையில் அவர் முகத்தில் எப்பொழுதும் காணுத வகையினதாக இருந்தது.

இப்பொழுது அரை டஜன் குல்லாய்கள் வாங்கி வரப்பட்டிருந்தன. மந்திரியார் அவற்றில் ஒன்றைக்கூட ஏற்றுக் கொள்ளவில்லை. வெறும் தலையுடனேயே கூட்டம் நடக்கும் இடத்துக்குச் சென்றுர்.

விசேஷ ஏற்பாடுகள் செய்து அமைக்கப்பட்டிருந்த மேடையில் ஏறி மந்திரி அமர்ந்தார். கூட்டத்தை ஒரு முறை பார்த்தார். ஐயாயிரம் பேருக்குக் குறைவில்லை. மந்திரியாரின் முகத்தில் தோன்றிய அந்த விநோதப் புன்சிரிப்பு இன்னும் ஒட்டிக் கொண்டிருந்தது.

மெஹ்ரானு வரவேற்புக் கமிட்டியின் தலைவர் என்ற முறையில் ஒரு சில வார்த்தைகள் சொல்ல வேண்டும். மைக்கைப் பிடித்துக் கொண்டு ஒரு மணி நேரத்துக்கு, ''பாபு, வீர்கிஷோரின்'' சாதனைகளைச் சொல்லிக் கொண்டு வந்தார். கடைசியாக இப்படிப்பட்ட அரும் புதல்வரைத் தந்த அவரது காலம்சென்ற பெற்றேர்களுக்கு நன்றி நவின்றுர். அவர் தமது முதல் பிரசங்கத்தை — கன்னிப் பேச்சை — வெற்றிகரமாகச் செய்து முடித்ததற்கு நான் மிகவும் மகிழ்ந்தேன். ஆனுல் பெரிய அதிசயம் அவரது பேச்சின் கடைசியில்தான் இருந்தது.

அதைக் கேட்டவர்கள் பலர் திரு மெஹ்ரானு ஒரு கடைந்தெடுத்த அரசியல்வாதி என்ற முடிவுக்கு வருவார்கள். ஆனுல் நான் உங்களுக்கு ஒன்று உறுதி கூற முடியும். அவருடைய நல்ல பண்பின் காரணமாகவும் சமீபத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சியினுல் விளைந்த குழப்பம் காரணமாகவும் திரு மெஹ்ரானு அந்தப் பொய் சொல்ல நேர்ந்ததே தவிர

அவர் பொய் சொல்லக்கூடியவரே அல்ல. அவர் தம் குரலை மெள்ள மெள்ள உயர்த்தி, ''சகோதரர்களே! சகோதரிகளே! நீங்கள் எல்லாரும் மேன்மை தங்கிய மந்திரியாரின் குல்லாய் மாயமாய் மறைந்து போனதைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். அது திருடு போய்விட்டதாக நினைக்கிறீர்கள். இல்லையா? இயல்புதான். ஆனால் அப்படியல்ல, பெரியோர்களே, தாய்மார்களே, அப்படியல்ல.'' திரு மெஹ்ரானா ஒரு பொருள் பொதிந்த புன்னகை உதிர்த்தார். மந்திரியார் தம்பெரிய வழுக்கை மண்டையைத் தடவிக் கொடுத்தார். திரு மெஹ்ரானா தொடர்ந்தார். ''நீங்கள் எல்லாரும் குல்லாய் என்ன ஆயிற்று என்று அறிந்து கொள்ளத் துடிக்கிறீர்கள் அல்லவா? ஆம், இயற்கைதான்! உங்கள் ஆவல் இயல்பானதுதான்! நடந்தது இதுதான்: நம் பகுதியைச் சேர்ந்த ஒரு பெரிய மனிதர் எடுத்துக் கொண்டு போய் விட்டார். ஏன்? அதை ஒரு புனித ஞாபகார்த்தப் பொருளாக வைத்துக் கொள்வதற்காகத்தான். அவர் அதை ரகசியமாக எடுத்துச் செல்ல வேண்டியதாகப் போய்விட்டது. ஏனெனில், நமது மேன்மை தங்கிய மந்திரியார் அடக்கமே உருவானவர். மந்திரியார் தமது குல்லாயைப் புனிதப் பொருளாக நினைக்க அனுமதிக்கமாட்டார். ஆகவே, அவர் அப்படிச் செய்தார்.''

இப்படிச் சொல்லிக் கொண்டே திரு மெஹ்ரானா சற்று நிறுத்தினார். தமது பைக்குள்ளிருந்து தமது கைக் குட்டையை எடுத்தார். அந்தக் கைக்குட்டையில் ஏராளமான நாணயங்கள் இருந்தன. அதைச் சபையோருக்குக் காண்பித்தபடி, ''தாய்மார்களே! பெரியோர்களே! நமது நண்பராகிய அந்தப் பெரிய மனிதர் இதோ இந்தக் கைக் குட்டையில் உள்ள நூற்றியொரு ரூபாயை மந்திரியாரிடம் கொடுத்து மந்திரியாரின் விருப்பத்துக்கு ஏற்ப மக்களுக்குப் பயன்படும் வகையில் செலவழிக்க வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டிருக்கிறார்'' என்று சொல்லி இந்தப் பணத்தை மந்திரியாரிடம் சமர்ப்பித்தார். மந்திரியும் மிகவும் பண்போடு ஏற்றுக் கொண்டார். அப்போது எழுந்த கரகோஷமும் சபையோரிடமிருந்து வந்த பாராட்டுரைகளும் புயல் போல் வீசின. மந்திரியும் திரு மெஹ்ரானாவும்கூடக் கைதட்டினார்கள். பிறகு மந்திரியார் இரண்டரை மணி நேரம் பேசினார். இடை இடையே நாலு டம்ளர் பாலைக் காலி செய்தார். பேச்சின் இறுதியில் தம்முடைய குல்லாயை எடுத்துக் கொண்ட, தமக்குத் தெரியாத அந்த ரசிகருக்கு மரியாதை செலுத்தும் வகையில் அன்று இரவு முழுதும் குல்லாய் இல்லாமல் இருப்பது என்று முடிவு செய்திருப்பதாக அறிவித்தார்.

திரு மெஹ்ரானாவின் பேச்சைக் கேட்டு முதலில் நான் அதிர்ச்சி அடைந்தேன். என்றாலும் பின்னால் எனக்கு இரு வகை உணர்ச்சி ஏற்பட்டது. திரு மெஹ்ரானாவின் சமயோசித புத்தியை வியந்து பாராட்டினேன். ஆனால் அடுத்தாற்போல் ஜண்டு என்ற குரங்கின் விஷமத்தை மூடி மறைக்க நூற்றி ஒரு ரூபாயை அவர் செலவழிக்க நேர்ந்ததே என்றும் வருத்தப்பட்டேன்.

மறு நாள் காலை மெஹ்ரானாவைப் பார்த்த போது அவர் கண்களில் அவர் குற்றம் நன்கு பிரதிபலித்தது. குறைந்தபட்சம் என்னைப் பார்க்கும்போதெல்லாம் அந்தக் குற்றப் பார்வை நன்கு தெரியும். பாவம் மெஹ்ரானா தம் வாழ்க்கையில் என்றும் பொய் சொன்னவர் இல்லை. கடைசியில் அவர் பொய் சொல்ல நேர்ந்ததென்றால் ஆயிரம் பேர் முன்னிலையிலா சொல்ல வேண்டும். அவர் இனி சத்தியசந்தரல்ல என்னும் விஷயம் கடவுளைத் தவிர இன்னும் ஒரு பிரகிருதிக்குத் தெரியும் என்றால் அது நான்தான்!

மந்திரி விடைபெறும் நேரம் நெருங்கி வந்தது. புறப்படுமுன் அவருக்குச் சர்க்கரை போட்ட தயிர் கிண்ணத்தில் வழங்கப்பட்டது. மந்திரி தயிரைக் குடித்து விட்டுப் பின்பக்கம் குளமும் தோப்பும் இருந்தபக்கம் தம்வாயைக் கழுவிக் கொள்ள வந்தார். என்னைத் தவிர பின்பக்கம்வராந்தாவில் யாரும்இருக்கவில்லை. நான் யதேச்சையாக அங்கு போய்ச் சேரவில்லை. சில நிமிஷங்களுக்கு முன் அந்த அயோக்கியக் குரங்கு ஜண்டு, மந்திரியின் குல்லாயை வைத்து விளையாடிக்கொண்டே வராந்தாவை நெருங்கிக் கொண்டிருந்தது. மந்திரி கண்களில் ஜண்டு படாமலிருக்க வேண்டுமே என்று நான் அப்போது கடவுளை வேண்டிக் கொண்டது போல் எப்போதுமே வேண்டிக் கொண்டதில்லை. ஜண்டு




○ உங்கள் பேனாவில் இங்க் ஒழுகுகிறதா? இதைத் தடுக்க ஒரு நல்ல வழி இருக்கிறது. பேனாவில் ஒரு சொட்டுக்கூட இங்க் இருக்கக் கூடாது.

○ உங்கள் ரிஸ்ட் வாட்ச்சில் கீறல் விழுகிறதா? நீங்கள் கையில் கட்டியிருப்பதால்தான் கீறல் விழுகிறது. கழுத்தில் தொங்க விட்டுக்கொள்ளுங்கள்!

○ பெல்பாட்டம் பாண்ட் மண்ணில் பட்டு அழுக்காகி விடுகிறதா? இதோ ஒரு யோசனை: ஒவ்வொரு நாளும் அன்று எங்கெங்கு போவோமோ அந்தத் தெருவை யெல்லாம் கொஞ்சம் காலையிலேயே எழுந்து போய்க் கூட்டிவிட்டு வந்துவிட வேண்டும்.

○ முதுகுப்புறம் உள்ள ஜாக்கெட் பட்டன் திடீரென்று கழன்று விடுகிறதா? காலையில் புறப்படும் போது ஊசி நூல் எடுத்து முதுகுப்புறம் ஜாக்கெட்டை நீளமாகத் தைத்துவிட்டால் தொந்தரவு இல்லை. — கிருஷ்ணகுமார்

குழந்தைக் குரங்காக இருந்தபோது, தந்தைக் குரங்கின் கோபத்திலிருந்து தப்ப அதன் தாய்க் குரங்கு மெஹ்ரானுவின் வீட்டில் தஞ்சம் அடைந்தது. அப்போது மெஹ்ரானு வீட்டில் இல்லை. வேலைக்காரர்கள் தாய்க் குரங்கைக் கொன்றுவிட்டார்கள். இதை அறிந்த மெஹ்ரானு மிகவும் வருத்தப்பட்டார். அன்ன ஆகாரமின்றிப் பட்டினி கிடந்தார். தாய்க் குரங்குக்குச் செய்த அநீதிக்குப் பிராயச்சித்தமாகக் குட்டிக் குரங்கை எடுத்து வளர்க்கலானார். மிகுந்த பரிவோடு அதற்கு ஜண்டு என்று பெயர் சூட்டினார்.

ஜண்டு சிறிது வளர்ந்து பெரிய குரங்கான தும் அடிக்கடி தோப்புக்குள் ஓடி ஒளிந்து கொள்ளும். ஜண்டு பாதி வீட்டுக் குரங்காகவும் பாதி காட்டுக் குரங்காகவும் வளர்ந்தது. அது எல்லாருடனும் விளையாடியது. எல்லாரும் அதன் விஷமங்களைப் பொறுத்துக் கொண்டனர். சிறுவர்களாகிய எங்களுக்கு அதனிடம் அலாதியான மோகம்.

ஜண்டு குளத்தின் அக்கரையிலிருந்து எங்களை நோக்கிப் பாய்ந்து வந்தது. நான் மெஹ்ரானுவுக்கு எச்சரிக்கை செய்ய வேண்டும் என்று விரும்பினேன். ஆனால் என் முயற்சி பலிக்கவில்லை. கண் இமைக்கும் நேரத்தில் ஜண்டு பாய்ந்து வந்து மந்திரிக்கும் மெஹ்ரானுவுக்கும் இடையில் வந்து உட்கார்ந்து கொண்டது. ஒரு முறை குல்லாயைத் தன் தலையில் போட்டுக் கொண்டு அடுத்த கணம் மந்திரியிடம் மிகப் பெருமிதத்துடன் நீட்டியது.

என் இதயம் மூன்று பங்கு வேகத்தில் அடித்துக் கொண்டது. மெஹ்ரானுவின் முகத்தைப் பார்த்தேன். இரத்தமெல்லாம் வறண்டு, பேய் அறைந்தவன் முகம் போல் பரிதாப மாகக் காணப்பட்டது.

ஆச்சரியத்தில் ஆழ்ந்த மந்திரி, "எ...எ.. அந்தப் பெரிய மனிதர் கொண்டு போன குல்லாய் அல்லவா இது?" என்று தடுமாறிக் கொண்டே கேட்டார்.

மெஹ்ரானுவின் வறண்டு போன உதடுகளிலிருந்து சற்றும் எதிர்பாராத வார்த்தைகள் வெளிவந்தன. அத்துடன் அவரும் அப்படியே மயங்கி விழுந்து விடுவார் போல் இருந்தது. அவர் கூறிய வார்த்தைகள் இவைதாம்: "ஆம்; ஆம். இதுதான் அந்தப் பெரிய மனிதர்....."

இதைக் கேட்டதும் மந்திரியின் கண்கள் பிதுங்கி வெளியே வந்துவிடும் போல் ஆகிவிட்டது. "என்ன? என்ன? என்ன சொன்னீர்கள்?.... சரி!" என்றார் மந்திரி.

திரு மெஹ்ரானு பதில் சொல்லக்கூடிய நிலையிலேயே இல்லை. அவர் கண்களிலிருந்து நீர் ஆறாகப் பெருகிற்று. அடுத்த கணம் மீன் வளம் நுண் கலைத் துறை மந்திரியின் கண்களிலிருந்தும் கண்ணீர் பெருகுவதைப் பார்த்தேன்.

முன் பக்கத்தில் இருந்த வராந்தாவில் இருந்து அந்தரங்கக் காரியதரிசி மந்திரியாரிடம், "ஸார், ஜீப் தயாராக இருக்கிறது, புறப்பட" என்றார்.

மந்திரி குவளை நிறைய இருந்த தண்ணீரைக் கடகடவென்று விழுங்கிவிட்டு ஜீப்பை நோக்கி நடந்தார். மெஹ்ரானு மந்திரியைப் பின்தொடர்ந்தார். அவர்கள் இருவர் முகங்களும் நீண்டு, கண்களும் சிவந்திருப்பதைப் பார்த்தவர்கள், பிரிவாற்றாமைத் துயர் அவர்களை எவ்வளவு தூரம் பாதித்திருக்கிறது என்று பேசிக் கொண்டார்கள்.

மெஹ்ரானுவின் அரசியல் பிரவேச முயற்சி இதற்கு மேல் ஓர் அடிகூட முன்னேறியதாகத் தெரியவில்லை.

(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்: எல். வி. எஸ்.)

## தமாஷ் "க்விஸ்"

காலியாக இருக்கும் அறையில் என்ன இருக்கும்?
நிரம்ப இடம் இருக்கும்!

நீ நகர்ந்தவுடன் அதுவும் நகர்ந்துவிடும். அது என்ன?
கண்ணாடியில் தோன்றிய உன் உருவம்.

எது திறந்தவுடன் மூடிக்கொள்ளும், மூடியவுடன் திறந்துகொள்ளும்?
ரயில்வே கேட். ரயிலுக்காகத் திறந்தால் ஜனங்களுக்கு மூடிக்கொள்ளும். ஜனங்களுக்காகத் திறந்தால் ரயிலுக்கு மூடிக்கொள்ளும்.

அதை உடைத்தால்தான் சிலருக்கு உபயோகப்படும். அது என்ன?
முட்டை!

எதுவரையிலும் யாரும் உயிருடன் இருப்பார்கள்?
கடைசி மூச்சு வரையிலும்!

வழியில் இரவில் ஒன்று இடைத்தது. அதை வீட்டில் வெளிச்சத்தில் பார்த்ததும் எறிந்துவிட்டேன். அது என்ன?
காலில் தைத்த முள்!

எதைக் கடலில் எறிவார்கள்; மறுபடியும் எடுத்து வைத்துக்கொள்வார்கள்?
நங்கூரம்.

எது இரவில் வேலை செய்யும், பகலில் வேலை செய்யாது?
தெரு விளக்கு!

எது சூரிய வெளிச்சத்தில் போனாலும் அதன் நிழல் பூமியில் விழாது?
காற்று!

வயது முதிர்ந்தவர்களும் விளையாட்டுச் சாமான்களை அடிக்கடி உபயோகிப்பார்கள். அவர்கள் யார்?
விளையாட்டுச் சாமான்கள் விற்பவர்கள்!

எது ஓடிக்கொண்டே யிருக்கும், ஆனால் ஓரிடத்துக்கும் போகாது?
கடிகாரம்!

நீ எதைப் பார்க்க முடியாதோ அதைப் பிறர் பார்க்கிறார்கள். அது என்ன?
நீ தூங்குவதை!

ஒரு பந்துக்கு எத்தனை பக்கங்கள் இருக்கின்றன?
இரண்டு பக்கம். உள் பக்கம், வெளிப் பக்கம்.

எது எப்பொழுதும் தலைகீழாக நடக்கும்?
உன் செருப்பின் அடிப்பாகத்தில் அடிக்கப்பட்டிருக்கும் ஆணி.

உனது வலக்காலால் எதை உதைக்க முடியாது?
உனது வலக்காலை!

— என். என்.



# ஜீவகாருண்யம்

(26)



ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

திவசம், தர்ப்பணம் முதலான பித்ரு காரியங்களும் பரோபகாரத்தைச் சேர்ந்தவை தான் என்று நிறையச் சொல்லியாயிற்று. சிராத்தம் முதலானவை பித்ருக்கள் எங்கே, எப்படிப்பட்ட ஜன்மா எடுத்திருந்தாலும் அங்கே அவர்களுக்குத் திருப்தி உண்டாக்கும் என்று சொன்னேன்.

ஒருத்தர் செத்துப் போனவுடனே பித்ரு லோகம் போய் விடுவதில்லை; இன்னொரு ஜன்மா எடுத்துவிடுவதில்லை. இறந்துபோனவனின் ஜீவன் ஒரு வருஷம் பிரயாணம் பண்ணித்தான் பித்ரு ஸ்தானத்தை அடைகிறது. இதை நம் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற மாதிரியே கிரீக் மைதாலஜி முதலான மதாந்தரங்களிலும் சொல்லியிருக்கிறது. ஜீவன் வைதரணி நதியைக் கடந்து யம பட்டணம் போக வேண்டும் என்று நாம் சொல்கிற மாதிரியே அவர்களும் ஒரு நதியை *(Styx)* சொல்லி அதைத் தாண்டி மறு லோகத்துக்குப் *(Hades)* போக வேண்டும் என்கிறார்கள். நாம் சொல்கிற மாதிரியே யம பட்டணத்தில் இருக்கிற காவல் நாய் போல அவர்களும் ஒன்றைச் *(Cerberus)* சொல்கிறார்கள். ஒரு ஜீவன் பரலோகம் செல்வதற்குப் பிடிக்கிற இந்த ஒரு வருஷத்தில்தான் அதன் திருப்திக்காக மாஸா மாஸம் சில சடங்குகளைச் செய்வது. இம்மாதிரி பரலோக யாத்திரையில் வழிக்குணவு தருவதைக்கூட இதர மதங்களிலும் சொல்லி யிருப்பதாகக் கேட்டிருக்கிறேன். பிள்ளை குட்டி இல்லாதவர்களுக்கும் நாம் கயை, பதரி போன்ற இடங்களில் பிண்டம் போடுவது போலவே, கிறிஸ்தவர்களும் *(All Souls Day)* என்று ஒரு நாளில் எல்லா ஆத்மாக்களின் திருப்திக்காகவும் வழிபாடு நடத்துகிறார்கள். லோகம் பூராவும் இப்படி ஒரு நம்பிக்கை, அபிப்பிராயம் இருக்கிறது என்றால் அது சத்தியமாகத்தான் இருக்க வேண்டும்.

பித்ரு காரியங்கள், 'உத்தரகிரியை' என்ற பேரில் எல்லா ஜாதிக்காரர்களும் செய்யும் அபரகாரியங்கள் ஆகியன யதோக்தமாக நடக்கச் சௌகரியம் செய்து தர வேண்டும். இதிலே முதலில் வருவது பிரேத ஸம்ஸ்காரம்—அதாவது இறந்து போனவரின் உடலை அவரவர் குலாசாரப்படி தகனமோ, அடக்கமோ செய்வது. இது ரொம்பவும் அவசியமான கர்மா.

ஒரு கேள்வி தோன்றும். உடம்பைவிட்டுப் போன ஜீவனின் திருப்திக்காக சிராத்தம் முதலானவை செய்வது பரோபகாரம் என்றால் சரிதான். ஆனால் ஜீவன் (உயிர்) போன இந்த வெறும் உடம்புக்கு எதற்கு ஸம்ஸ்காரம் என்று தோன்றலாம். சாஸ்திரங்களிலோ தகனம் பண்ணுவதை 'அந்த்யேஷ்டி' — அந்திய இஷ்டி — அதாவது 'இறுதியான வேள்வி' என்றே ரொம்பவும் உயர்த்திச் சொல்லியிருக்கிறது. கருத்தரிப்பதிலிருந்து ஒரு ஜீவனை ஒவ்வொரு பருவத்திலும் எப்படி சுத்தி பண்ண வேண்டும் என்பதற்காக சாஸ்திரங்களில் நாற்பது சம்ஸ்காரங்களைச் சொல்லியிருக்கிறது. 'ஸம்ஸ்—காரம்' என்றால் 'நன்றாக ஆக்குவது' என்று அர்த்தம். ('நன்றாக ஆக்கப்பட்ட' பாஷைதான் 'ஸம்ஸ்கிருதம்'.) உபநயனம், விவாகம் ஆகிய எல்லாமே ஜீவனை அந்தந்த நிலையில் பக்குவப்படுத்துவதற்காக ஏற்பட்ட ஸம்ஸ்காரங்கள்தான். வாழ்நாள் முழுவதையும் வேள்வியாக ஈசுவரனிடம் ஆஹுதி செய்து கொண்டே இருக்கிற ரீதியில் இந்த நாற்பது ஸம்ஸ்காரங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன. வேள்விதான் 'இஷ்டி'. இஷ்டம் — பூர்த்தம் என்று பல தடவை சொன்னேனே, அதிலே வருகிற 'இஷ்டம்' இதுதான். இப்படி வாழ்க்கையையே யாகமாகச் செய்கிற போது கடைசியில் நாற்பதாவதாக வருகிற யாகம்தான் — அந்திய இஷ்டி — பிரேத ஸம்ஸ்காரம். எந்த உடம்பை வைத்துக் கொண்டு பாக்கி யக்ஞங்களை ஒருத்தன் பண்ணினானோ, அந்த உடம்பையே சிதாக்னி (சிதைத் தீ)யில் ஹோமம் பண்ணிவிடுவதுதான் இது. பிரேத ஸம்ஸ்கார மந்திரங்களில் அப்படித்தான் சொல்லியிருக்கிறது. ஹவிஸ், பலி முதலான மற்ற ஹோமத்துக்குரிய வஸ்துக்களை நெய்யினால் சுத்தி செய்து அக்னியில் போடுகிற மாதிரித்தான் பிரேதத்தையும் சுத்தம் பண்ணி, தகனம் செய்யச் சொல்லியிருக்கிறது. உடம்பு ஈச்வரனுக்கு அர்ப்பணம் பண்ணப்படுகிறது.

இதைப் பற்றி இன்னும் கொஞ்சம் விரிவாகச் சொல்கிறேன். (தொடரும்)

---

**[1932ம் வருஷத்திலிருந்து பெரியவர்கள் வழங்கிய உரைகள், ஸ்ரீமுகங்கள், கட்டுரைகளிலிருந்து தொகுத்தது]**

நிலவுலகம் மிகப் பெரியது. அதனினும் பெரியது அதைச் சூழ்ந்துள்ள கடல். அக் கடலில் எப்போதும் அலைகள் எழுந்தவண்ணம் இருக்கும். அதனால்தான் அதனை அலைகடல் என்று கூறுகிறோம்.

கடலில் எழுகின்ற அலைகள் எண்ணற்றவை. இரவு பகல் என்னாது கடலில் அலைகள் மோதிக் கொண்டேயிருக்கும். அவை தொடர்ச்சியாக ஒன்றன்பின் ஒன்றாக எழும். அதற்கு ஓய்வும் உறக்கமும் கிடையாது. இதை ஒத்ததுதான் மனிதன் மனத்திலே எழுகின்ற ஆசைகள்.

மனிதன் மற்ற உயிர்களைவிட உயர்ந்தவன். ஆறறிவு படைத்தவன். இன்ப வாழ்க்கை வாழ விரும்புகிறான். ஆனால் அவன் மனத்தில் எழுகின்ற ஆசை என்னும் அலையால் வாழ்வில் அலைப்புண்டு துன்பப்பட்டு உழல்கிறான்.

ஆசை வலையில் சிக்கிய உள்ளத்துக்கு அமைதி கிடையாது. எதனைப் பெறினும் திருப்தி ஏற்படுவதில்லை. ஒன்றைப் பெற்றதும் மற்றொன்றின் மேல் ஆசை எழும். அதையும் பெற்றதும் அதற்கு மேல் ஒன்றின் மேல்

# ஆசைக்கோர் அளவில்லை!

சி. சுப்பிரமணியம்

~ பாரத நிதி அமைச்சர் ~



ஆசை வரும். இப்படிக் கடல் அலைகள்போல் ஒன்று மாறி ஒன்றாக ஆசை வர மன நிம்மதி இன்றி மனிதன் அல்லலுற்றுத் துன்பப்படு கிறான்.

இதனைத்தான் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பு வாழ்ந்த நம் திருமூலர் பெருமான், ''ஆசைப்படப்பட ஆய்வரும் துன்பம்'' என்று ஓதினார்.

ஆசைச் சுழலில் துன்பப்படுகிறவர்களில் ஏழை பணக்காரர் என்ற வேறுபாடு இல்லை. பொதுவாக ஏழைகளைவிடப் பணக்காரர்களே அதிகமாக அதிருப்தி உடையவர்களாயிருக் கிறார்கள். ஏழை லட்சாதிபதியாக மாற வேண்டும் என்று ஆசைப்படு கிறான். லட்சாதிபதியோ கோடீசுவரனாக வேண்டும் என்று ஆசைப்படுகிறான். அவன் விரும்பியது போலவே கோடீஸ்வரனாக ஆகிவிட்டாலும் அவனது ஆசை அந்த அளவில் நின்று விடுகிறதா? ஆசைக்குத்தான் அளவேது? எல்லை ஏது? அவன் மேலும் மேலும் ஆசையைப் பெருக்கிக் கொண்டு துன்பப்படுகிறானே தவிர குன்றத்தனை நிதியைப் பெறினும் திருப்திப் படுவது கிடையாது.



கோடீசுவரன் தன்னுடைய வருமானத்தை அடுத்தவனுடைய வருமானத்தோடு ஒப்பிடுகிறான். தன் வருமானம் 50 சதவிகிதம் உயர்ந்த போது அடுத்தவனுடைய வருமானம் 60 சதவிகிதம் உயர்ந்திருந்தால் இவனுக்கு இயல்பாக வரவேண்டிய திருப்தி மறைந்து போகிறது. இதனால் மனிதனுடைய திருப்தி, தான் பெற்றவற்றைப் பொறுத்து அமைய வில்லை என்றாகிறது. தன் உடைமையையும் தன் அந்தஸ்தையும் மனிதன் மற்றவன் உடைமையோடும் அந்தஸ்தோடும் வைத்து அளந்து பார்க்கிறான். அதனால் விளைவது அவனுக்குப் பொறாமையும், அதிருப்தியும், மகிழ்ச்சி இன்மையும்தான்.

ஆசை பெருகப் பெருக மகிழ்ச்சி குறைந்து போகும். அதனால்தான் நம் பெரியோர்கள் ஆசையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று கூறினார்கள். ஆசையை விட்டால் உலகில் மகிழ்ச்சியோடும் மனக் குறைவின்றியும் வாழலாம் என்றும் போதித்தார்கள்.

''ஆசை விடவிட ஆனந்தமாமே''
என்றார் திருமூலர்.

''இன்பம் இடையறா தீண்டும் அவா என்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்''
என்றார் திருவள்ளுவர் பெருமான்.

## இன்றைய நிலை என்ன?

இன்று மனிதன் விஞ்ஞான அறிவிலும் தொழில் நுட்பத் துறைகளிலும் உயர்ந்து நிற்கிறான். விஞ்ஞானம் தொழில் நுட்ப அறிவுகளை நன்கு பயன்படுத்திப் பல மேற் கத்திய நாடுகள் செல்வத்தாலும் பொருள் வளத்தாலும் மிகவும் செழித்து வாழ்கின்றன. அந்நாடுகள் தொழில்களை யந்திர மயமாக்கி, உற்பத்தியை ஏராளமாகப் பெருக்கிக் குவித்து வருகின்றன. உற்பத்தி பெருகப் பெருக அப்பொருள்களை விற்பதற்கு வழி தேட வேண்டும் அல்லவா? எனவே பொருளை உற்பத்தி செய்து குவிப்பவர்கள் தங்கள் பொருள்களை மக்கள் வாங்க வைப்பதற்காக அவர்களது ஆசையைத் தூண்டுவதற்கான எல்லா வழி களையும் கையாள்கிறார்கள். போக வாழ்வின் மீது ஆசையைத் தூண்டி விட்டால்தான் மக்களிடையே தங்கள் பொருள்களை விற்க முடியும். "போதும் என்ற மனமே உயர்ந்தது" என்ற நீதியை மக்களிடம் போதித்தால் பொருள்கள் எப்படி விற்பனையாகும்?

## ஆசையைத் தூண்டும் விளம்பரங்கள்

பொருள்களை உற்பத்தி செய்பவர்கள் தங்கள் பொருள்களைப் பற்றிப் பத்திரிகை களில் விளம்பரம் செய்கிறார்கள். அந்த விளம் பரங்களைக் கவர்ச்சியாக அமைக்கிறார்கள். பொருள்களைப் பற்றிய விளம்பரங்களைப் பொதுமக்கள் கூடும் இடங்களிலும் கடை களின் முன்னும் மக்கள் மனத்தைக் கவரும் வகையில் காட்சிக்கு வைக்கிறார்கள். ஆசை யைத் தூண்டும் வகையில் வசனங்களும் சித் திரங்களும் எழுதி வைக்கப்படுகின்றன. சுவ ரொட்டி முதலான இதர விளம்பர சாதனங் களிலும் சுகபோக ஆசைகளைத் தூண்டும் அத்தனை வாசகங்களையும் காணலாம். அப் பொருளில்லா விட்டால் வாழ்க்கையேஇல்லை என்ற உணர்ச்சியை ஊட்ட முயற்சி செய் கிறார்கள்.

உடை போன்ற சில பொருள்களுக்கு விளம் பரம் தரக் கவர்ச்சிக் கன்னிகளை வாடகைக்கு அமர்த்தி, அவர்களை வித விதமான உடை களை அணிந்து நடை போடச் செய்து ஆசை யைத் தூண்டும் ஒரு காட்சியை இன்று அநேகமாக எல்லா இடங்களிலும் நடத்து கிறார்கள்.

இப்படி மனத்தைக் கவரக் கூடிய விளம் பரங்களை யெல்லாம் கண்டு மக்கள் தேவை யில்லாத பொருள்களிலும் கூட ஆசையை வளர்த்துக் கொள்கிறார்கள். மக்கள் அவற்றை வாங்க முடியாதபோது மனம் உடைந்து கவ லைப்பட்டு ஏங்குகிறார்கள். குன்றனைய செல்வம் உடையோரும் கூடத் தாயுமானவர் கூறியது போல் ஆசைக்கோர் அளவில்லாமல் தேவை களைப் பெருக்கிக் கொண்டுஒன்று போக ஒன் றின் மேல் ஆசைப்பட்டு அவ்வாசைகள் பூர்த்தியடையாமல் நெஞ்சு புண்ணாகி நொந்து போகிறார்கள்.




## ஆசையை வளர்ப்பதே ஒரு கலை

பொருள்கள் விற்றுக்கொண்டே இருக்க வேண்டுமானால் மக்களுக்குத் தங்களிடம் உள்ளது போதாதென்ற ஓர் அதிருப்தி நிலை எப்போதும் இருந்து கொண்டே இருக்கவேண்டும். ஆகவே பொருள் உற் பத்தி செய்வோர்கள் தேவையில்லாத பொருள்களையும் தேவை உள்ளது போலத் தோன்றச் செய்து மக்களுடைய ஆவலைத் தூண்டி விடுவதை இப்போது ஒரு கலை யாகவே ஆக்கி வளர்த்து வருகிறார்கள்.

போதாக் குறைக்கு இன்று திரைப்படம் மனிதனின் புலன் உணர்ச்சிகளைத் தூண்டி விடும் கருவியாக விளங்குகிறது. காம இச்சையைத் தூண்டும் காட்சிகள் அதில் அதிகமாகக் காட்டப்படுகின்றன. இன்றைய இலக்கியங்கள், சிறுகதைகள், நாடகங்களி லும் ஆசையைத் தூண்டும் முறையில் பச்சை பச்சையாக விஷயங்கள் எழுதப்பட்டு வரு கின்றன. கவர்ச்சியான முறையில் எழுதப் படும் புலன் நுகர்ச்சி விஷயங்கள் அடங்கிய புத்தகங்கள் மேற்கு நாடுகளில் ஏராளமாக வெளியாகின்றன. மொத்தத்தில் போக வாழ்வின் அடிப்படையில் எழுந்த ஒரு நாகரிகம் மேலை நாடுகளில் வேகமாகப் பரவி வருகிறது.

### மேல் நாகரிகத்தின் பின் விளைவுகள்

இந்த நிலையில் போனால் இதன் பின் விளைவுகள் யாதாகும் என்பதை அறிய நாம் மேற்கு நாட்டவரின் வாழ்க்கையிலிருந்தே தெரிந்து கொள்ளலாம்.

இன்று மேற்கு நாட்டவர்களில் பலர் மன நிறைவு ஏற்படாமல் தவித்து அது எங்கே எப்படிக் கிடைக்கும் என்று தேடி அலைகின் றனர். எதைச் செய்தால் மன நிறைவு ஏற் படும் என்ற வேட்கையில் பலர் பரதேசிக ளாக (ஹிப்பிஸ்) வெளிக் கிளம்பிக் கட்டுப் பாடில்லாதபடி சுற்றித் திரிகிறார்கள். 'ஹரே ராமா ஹரே கிருஷ்ணு' இயக்கத்தில் சேர்ந்து வாழ்வில் அமைதி கிடைக்குமா என்று தேடு கிறார்கள். பலர் யோக முறைகளைக் கையாண்டு அமைதியைத் தேட முயற்சி செய்கிறார்கள்.

குற்றங்கள் மேலை நாடுகளில் இப்போது அதிகரித்து வருகின்றன. குடும்பத்தில் பாச உணர்வு நாளுக்கு நாள் தேய்ந்து வருகிறது. மனிதனை மனிதன் சார்ந்து வாழும் நிலை மாறி மனிதன் எந்திரத்தைச் சார்ந்து வாழ் கின்ற தன்மை அதிகமாகி விட்டதால், மனி தாபிமானம், நட்புத் தொடர்பு முதலியவை களும் குறைந்து வருகின்றன. இளம் தலை முறையினர் பலர் மன அமைதிக்காக என்று கூறிப் போதை மருந்துகளின் பழக்கத்துக்கு அடிமையாகி வருகிறார்கள். 'எதையும் அனு மதிக்கிற வாழ்க்கை',' திறந்த மனப்பான்மை' என்ற கொள்கைகளால் ஆண் பெண்கள் நிலைதடுமாறிய ஒழுக்கக் கேடுகளை வளர்த்து வருகிறார்கள்.

இப்படி ஒழுக்க நலனுக்குத் தீமை விளை விக்கும் தன்மையுடைய பொருளாதார உயர்வோ, வளர்ச்சியோ நமக்கும் வேண்டுமா?

### மகாத்மா என்ன சொன்னார்?

இந்தப் பின் விளைவுகளை யெல்லாம் மனத் தில் கொண்டுதான் மகாத்மா காந்தியடிகள் தீர்க்கதரிசனமாக உற்பத்திப் பெருக்கம் என்ற மனப் போக்குத்தான் உலகில் பல நெருக்கடி களுக்கும் காரணம் என்றும், எந்த நாட்டுக் கும் பெரும் அளவில் எந்திரங்களை அமைத் துத் தொழில்மயமாக்கிவிடுவது அவசியமான தென்று தாம் நம்பவில்லை என்றும், இந்தியா வுக்கு அது அவசியமேயில்லை என்றும் கூறினார்.

இதைக் கேட்ட பலர் அன்று மகாத்மா காந்தியடிகளை விஞ்ஞானத்தின் எதிரி என் றும், அறிவியல் வளர்ச்சியை எதிர்க்கும் பழைமைவாதி என்றும் பலவாறாகத் தூற்றி னார்கள்.

உண்மையிலேயே மகாத்மா அறிவியலுக்கு எதிரியல்ல. அவர் ஆட்சேபித்தது எந்திர மோகத்தை; எந்திரத்தை அல்ல. அவரே அதைப் பல தருணங்களில் விளக்கியிருக்கிறார். செல்வம் ஒருசிலரிடம் மட்டும் குவிவதற்குக் காரணமாயும், கோடிக் கணக்கானவர்கள் முதுகில் ஒருசிலர் மட்டும் ஏறிச் சவாரி செய் வதற்கு வழி வகுப்பதாகவும் இருக்கும் எந்திர மயத்தைத்தான் அவர் எதிர்த்தார். ஒழுக்க மதிப்புக்களை உதாசீனம் செய்யும் பொருளா தாரம் பொய்யானது என்றும் அப்படிப்பட்ட பொருளாதார உயர்வு பாபமானது என்றும் அவர் கருதினார்.

மகாத்மா காந்தியடிகளின் தத்துவமே சரியானது என்று இன்று மேலும் மேலும் நிரூபிக்கப்பட்டு வருகிறது. ஆதலால் அவரை 'விஞ்ஞான யுகத்தின் ஞானி' என்று உலகம் மதித்துப் போற்றத் தொடங்கியுள்ளது.

### மேல்நாடுகள் தரும் படிப்பினை

மேற்கத்திய நாடுகளின் போக்கால் ஏற் பட்ட விளைவுகளையும் பணத்தைத் தேடி அலையும் உலகாயதக் கொள்கையின் பைத்தி யக்காரத் தனத்தையும் நாம் உணர வேண் டும். நாமே ஒன்றை அனுபவித்து அதன் நன்மை தீமைகளை அறிந்து கொள்வதை விடப் பிறருடைய அனுபவத்திலிருந்து நாம் செல்ல வேண்டிய வழியைத் தீர்மானிப்பதுதான் அறி வுடைமையாகும்.

பொருளாதார வளர்ச்சியை உண்டாக்கும் ஆரம்பக் கட்டத்தில் நாம் இப்போது இருந்து வருகிறோம். அந்தப் பொருளாதார வளர்ச்சி எந்த அடிப்படையில் அமைய வேண்டுமென் பதைப் பிற நாட்டினர்கள் படிப்பினையி லிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

மேற்கிலிருந்து வருவதெல்லாம் மேன்மை யானது என்று பின்பற்றிப் பின்பு அதன் தீய விளைவுகளிலிருந்து தப்ப முடியாமல் தவிப் பதை விட முன்கூட்டியே அந்த மோகத்தைத் தடுத்துக் கொள்வது நல்லது.

### இன்றைய யுகத்தின் நரகாசுரன்

ஒவ்வொரு யுகத்திலும் ஒரு நரகாசுரன் தோன்றுகிறான். மனித முன்னேற்றத்துக்கு எதிரியான எந்தத் தீமைகளையும் அறிவு கொண்டு அடக்கி ஒழிப்பதுதான் நரகாசுரனை அழிப்பது என்ற தீபாவளியின் தத்துவம்.

இன்றைய நரகாசுரன் 'போக வாழ்வின்மீது மோகம்' என்னும் கொடிய அரக்கனுவான். போக வாழ்வில் மனிதனுக்கு ஏற்படுகின்ற ஆசைகளுக்கு அளவேயில்லை. அதனால் வரும் துன்பங்களுக்கும் அளவில்லை. ஓர் ஆசை பூர்த்தி யானால் நரகாசுரனின் மாயத் தலைகள் வளர் வது போல் மற்றும் பல ஆசைகள் வளரும். அந்த ஆசைகளைக் கட்டுப்படுத்தி அகற்றுவ தென்ற விரதத்தை இந்தத் தீபாவளி நன் னாளன்று நாம் எல்லோரும் எடுத்துக்கொள் வோமாக! அதுவே புதிய நற்சமுதாயத்தை அமைப்பதற்கு வழி.

ஒரு பெரிய ஆசாரியர் மட்டுமல்ல, ஒரு புனித ஆன்மாவுமாவார். தெற்கே பிறந்தவர் என்றும் ஜகத்குருவின் உலக அமைதிக்கான அருளுரை சர்வதேச முக்கியத்துவம் பெற்றுள்ளது. திருவண்ணுமலையிலிருந்த பகவான் ரமண மகரிஷி மற்றுமோர் உன்னத ஆத்மா. இன்றையத் தலைமுறையினரான நமது வாழ்க்கையை ஒழுக்கம் நிறைந்ததாகவும் ஆன்மிகம் ஒளிர்வதாகவும் உயர்த்திச் செம்மைப்படுத்த முயன்றவர்.

புனிதத் துறவிகளைப் போலவே புராதனக் கோயில்களுக்காகவும் தமிழ் நாடு பிரசித்தி பெற்றுள்ளது குறித்து நான் உண்மையில் பெருமைப்படுகிறேன். உதாரணமாக ராமேசுவரம், ஸ்ரீரங்கம், சிதம்பரம், மதுரை, திருவண்ணுமலை, காஞ்சி, திருத்தணி, ஸ்ரீபெரும்புதூர் ஆகியவை புனிதக் கோயில்களும் சரித்திர முக்கியத்துவமும் கொண்ட இடங்களாகும். ஆந்திரப் பிரதேசத்தில் பாலாஜியாம் ஏழுமலையான் எழுந்தருளியுள்ள திருப்பதி, காளஹஸ்தி, ஸ்ரீ சைலம்; கர்நாடகத்தில் ஸ்ரீ சாமுண்டேசுவரி கோயில் ஆகியவற்றை உள்ளடக்கியதாகத் தென் நாட்டில் எத்தனையோ பல புனிதத் திருத்தலங்கள் உள்ளன. இந்தத் தென்னிந்தியக் கோயில்கள் எல்லாம் சமூக அமைப்பிலும் மதாச்சார அமைப்பிலும் இந்தியர்களின் வாழ்வில் பெரிய மையக் கேந்திரங்களாக விளங்குகின்றன. உண்மையைச் சொல்வதெனில் இவை நமது ஒருமைப்பாட்டின் புறச் சின்னங்கள்.

தீபாவளித் திருநாளைக் கொண்டாடும் மகிழ்ச்சிகரமான சந்தர்ப்பத்தில் நான் எனது பாராட்டுக்களைத் தமிழக மக்கள் அனைவருக்கும் தெரிவித்துக் கொள்கிறேன். நமது தேசம் அமைதியும் ஆனந்தமும் பெற அருள் மழை பொழியுமாறு எங்கும் நிறைந்த இறைவனை நாம் பிரார்த்திப்போம். ஜெய் ஹிந்த்!

**(ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம்)**



''எனக்கு எதற்கு மெமோ கொடுத்தீர்கள மாமா ?''

''26 வடையைக் காணேம். சமையலறை சாவியையும் காணேம். இந்தக் குற்றச் சாட்டுக்குத் தகுந்த பதில் காரணம் எழுத்து மூலம் தெரிவிக்கவும். தவறினுல் உமக்குக் கட்டாய ஓய்வு அளிக்க வேண்டிய கட்டாயம் எனக்கு ஏற்படும் என்பதை அறிவீர்...''

• • •

''உங்கப்பா எந்த மனசோடு ஸ்கூட்டர் வாங்கித் தந்தாரோ...?''

''ஏன்? என்ன ஆச்சு? எதற்கு அவரைக் கரிக்கிறேள்?''

''ஸ்கூட்டரைக் காணேம்!''



• • •

''தம்பி, லட்சுமணு !
இந்தப் பட்டாசை
எங்கே செலுத்த ?''





''தீபாவளி என்றுலே என் மனம் பட் பட் பட் என்று அடித்துக் கொள்கிறது.''

''அது ஏன் சார் அப்படி ?''

'''பட்'டாசு செலவு. 'பட்' சணம் செய்யச் செலவு, போதாக் குறைக்குப் 'பட்'டுப் புடவைச் செலவு வேறு. அதனுல்தான் !''

— எஸ். என். ராஜாராம்

• • •

''ஜீரணத்துக்காக ஒரு மாத்திரை தந்தீங்களே அந்த மாத்திரை ஜீரணமாகலே !''

''சரி! அது கரைய ஒரு மாத்திரை தருகிறேன்.''





அடுத்தாற்போல வேறு ஒரு போயிங்கையே தயார் செய்ய முனைந்தார்கள். அதிலும் ஏதோ சிறு கோளாறு. கிளம்ப முடியவில்லை.

சில பிரயாணிகள் வீடு திரும்பும் வேகத்திலும், ஆர்வத்திலும் விமான நிலையச் சிப்பந்திகளை மாற்று ஏற்பாட்டுக்கு வற்புறுத்தினார்கள். சில மணி நேரங்களுக்கு முன்னால் நல்லபடியாகவே டில்லியிலிருந்து பம்பாய்க்குப் பறந்து வந்திருந்த காரவெல் விமானத்தைச் சென்னைக்குப் புறப்படத் தயார் செய்தார்கள் அதிகாரிகள். அந்த விமானம் தொடர்ந்து பிரயாணம் செய்யத் தகுதியுள்ளது என்று சான்றிதழ் வழங்கினார்கள்.

காரவெல் விமானத்தில் இட வசதி குறைவானதால் சில பிரயாணிகள் பின்தங்க வேண்டியிருந்தது. ஆகவே அவர்கள் உயிர்களும் அவர்களுடன் தங்கிவிட்டன.

தோல் ஏற்றுமதி வியாபாரத் துறையில் ஈடுபட்டிருக்கும் திரு பார்த்தசாரதியும், அவர்

# விண்ணிலே விபத்து!

கடந்த பத்து ஆண்டுகளில் இந்தியன் ஏர் லைன்ஸ் விமானங்களுக்கு நேர்ந்த விபத்துக்களில் இதுதான் மிகப் பெரியது. விமானம் கிளம்பியவுடன் என்ன நடந்தது என்று சொல்ல ஓர் உயிரைக்கூட விட்டு வைக்காத பெருமையைச் சம்பத்திய விபத்து தேடிக் கொண்டது.

சகுனம் சரியில்லை என்று கூறுவதுண்டு. அதை நம்பாதவர்களைக் கூட நம்ப வைத்து விடும்போலிருக்கிறது இந்த விபத்து. எண்பத்தி ஒன்பது பிரயாணிகளும், விமானக் குழுவினரும் மாலை ஆறுமணிக்குப் புறப்பட்டிருக்க வேண்டும். ஆனால் போயிங் வான வெளியில் ஒரு கழுகை உள்ளிழுத்து உறிஞ்சிவிட்டதால், அது மேற்கொண்டு பறக்காமல் திரும்பி விட்டது.

மனைவியும் வெளிநாட்டுக் கண்காட்சிகளுக்கு வியாபார சம்பந்தமாகப் போய்விட்டு மிலானிலிருந்து பம்பாய் திரும்பினார்கள். உடனடியாகச் சென்னைக்குத் திரும்பிக் குழந்தைகளைப் பார்க்க ஒரே ஆவல். ஆனால் அவர்களுடைய பம்பாய் உறவினர்கள் அவர்களை நடு இரவில் சென்னைக்குப் புறப்படுவதற்குப் பதிலாக மறுநாள் காலை விமானத்தில் புறப்படும்படி வற்புறுத்தினார்கள். அவர்கள் கேட்காமல் விடாப்பிடியாக இந்தக் காரெவல் விமானத்தில்தான் கிளம்பினார்கள்!

சென்னை ஹோட்டல் உரிமையாளர்கள் சங்கத் தலைவர் திரு ஜெயராமன், தம்முடைய சகாக்கள் பத்துப் பதினைந்து பேருடன் அவுரங்காபாத்தில் ஐந்து நாட்கள் தொடர்ந்து

படங்கள் நன்றி: இந்தியன் எக்ஸ்பிரஸ்





நடந்த ஹோட்டல் தொழில் சம்பந்தமான மகாநாட்டுக்குப் போயிருந்தார். பம்பாயிலிருந்து எல்லோரும் சேர்ந்து சென்னைக்குத் திரும்ப ஏற்பாடு. விமானம் புறப்படுவதில் சிக்கலும் தாமதமும் இருப்பதை ஜெயராமன் உணர்ந்தார். இந்த நேரத்தில் கூட வந்த உறவுக்காரர் ''ராத்திரி லேட்டா மெட்ராஸுக்குப் போய் என்ன செய்யப் போகிறீர்கள் ! காலை விமானத்தில் போய்க் கொள்ளலாம், வாருங்கள்!'' என்று சொல்லி வைத்தார்.

ஜெயராமன் அவர்களுக்குச் சகுனங்களில் நம்பிக்கை உண்டு! நண்பர்களுக்குக் கையை ஆட்டிவிட்டு மீண்டும் தாஜ் ஹோட்டலுக்குத் திரும்பினார். மறுநாட் காலைப் பேப்பரைப் பார்த்தபோது பதறிப் போனார். ஹோட்டல் துறையில் பல காலம் பழகிய ஆப்த நண்பர்கள் பலரையும் மொத்தமாகப் பறிகொடுத்திருந்தார். உறவினர் உருவத்தில் சகுனத் தடை தோன்றி அவரைத் தப்ப வைத்தது.

ஜனாப் குலாம் மொகைதீன் மத்திய கிழக்கு நாடுகளில் சில வருஷங்களாகப் பணியாற்றுபவர். ஈஸ்ட் கோஸ்ட் கன்ஸ்ட்ரக்ஷன் நிறுவனத்தில் ஸீனியர் கணக்குப் பரிசோதகர். கடைசிப் பெண் நஸீமாவுக்குப் பதினைந்து வயது. அவளுக்குத் திருமணம் நிச்சயிக்க, அவளையும் அழைத்துக் கொண்டு துபாயிலிருந்து கிளம்பி பம்பாய்க்குத் திங்கட் கிழமை பகலில் வந்திருக்கிறார்.

பம்பாயிலிருந்து சென்னையிலுள்ள குடும்பத்தினருக்கு டெலிபோன் செய்திருக்கிறார். அன்று மாலை விமானத்தில் பம்பாயிலிருந்து கிளம்பி வருவதாகவும், குடும்பத்தினர் அனைவரையும் மீனம்பாக்கம் விமான நிலையத்தில் சந்திக்க விரும்பதாகவும் போன் செய்திருக்கிறார்.

இப்படி அவர் எல்லோரையும் விமான நிலையத்துக்கு அழைக்கும் வழக்கம் இல்லை. இந்தத் தடவை இது புதிதாக இருந்தது. ஒருவேளை ஒன்றரை வருடம் கழித்துத் தாயகம் திரும்புவதால் இந்த ஆசையோ என்று குடும்பத்தினர் எண்ணினார்கள். விமான நிலையத்தில் இரவு இரண்டு மணி வரை காத்திருந்தார்கள். அவர் வரவில்லை. அவலச் செய்திதான் வந்தது!

டி. டி. கே. நிறுவனத்தின் அதிபர் ஸ்ரீ டி. டி. வாசு இந்த விமானத்தில் பிரயாணம் செய்திருக்க வேண்டியவர். அவரை அதிருஷ்டம் 'தாமதம்' என்ற போர்வையில் காப்பாற்றியது. அவர் ஃபிராங்பர்ட்டிலிருந்து கிளம்பிய விமானம் தாமதமாக வந்ததால், இந்தக் காரெவல்லில் அவர் ஏற முடியவில்லை.

வயோதிகத் தாயாரைப் பார்க்க அமெரிக்காவிலிருந்து விடுமுறையில் வந்த டாக்டர் ராமமூர்த்தி, அமெரிக்காவிலிருக்கும் மகனைப் பார்த்துவிட்டுத் திரும்பிய திருச்சி சாமுவேல் தம்பதிகள், தலை தீபாவளிக்கு ஆவலாகத் துபாயிலிருந்து வந்த இளைஞன் ராமதாஸ், பதவி உயர்வை ஏற்றுக்கொள்ளக் கிளம்பிய வினோத் சர்மா, வெற்றிப் படம் தயாரித்து, அதன் விளைவாகத் திருப்பதி தரிசனத்துக்குக் கிளம்பிய ஆத்ம பிரகாஷ், மறுநாள் அமெரிக்காவுக்குக் கிளம்ப வேண்டும் என்ற அவசரத்தில் துபாயிலிருந்து திரும்பி வரும் நடிகை ராணி சந்திரா, அலுப்பினால், முந்திய விமானத்தில் ஏறாமல், இந்த விமானத்தைத் தேர்ந்தெடுத்த குண்டூர் புகையிலை வியாபாரி ஆதிநாராயணா, முன்னாள் காங்கிரஸ் எம். எல்.ஏ. பொன்னப்ப நாடார், மிருதங்க வித்வான் கோதண்டராமன், மனைவி, தாயாருடன் உற்சாகமாக உலகப் பயணம் மேற்கொண்டு அந்த அனுபவங்களை உறவினர்களிடம் சொல்லி மகிழத் துடித்த அருணாசலம், முன்னாள் டென்னிஸ் ஆட்ட வீரர் ஜிம்மி மேத்தா— இப்படி வாழ்க்கையைப் பல கோணங்களிலிருந்து பார்த்து மகிழும் பலரையும் ஒரே நேரத்தில் ஒன்றாகத் தன் பாசக் கயிற்றால் பிணைத்து இழுக்கக் காலதேவனுக்கு எப்படித்தான் மனம் வந்ததோ ?

இந்தச் சோகத்துக்கிடையிலும் நமக்கு மெய் சிலிர்ப்பை ஏற்படுத்துகிற விஷயமும் ஒன்றுண்டு. விமானப் பைலட் குப்தா மரணம் நிச்சயம் என்பது தெரிந்தும் கடைசி வினாடி வரை கடமையுணர்ச்சியுடன் செயலாற்றியுள்ளார். சுற்றுப்புறத்தில் இருக்கும் விமானங்களுக்கோ, எண்ணெய்க் கிடங்குகளுக்கோ, கட்டடங்களுக்கோ எதற்கும் சேதமில்லாதபடி பற்றி எரிந்து கொண்டிருக்கும் விமானத்தை வெட்ட வெளியில் தரை தட்டச் செய்திருக்கிறார். தேசபக்தத் தியாகியின் மகன் அல்லவா!

—கோமதி ஸ்வாமிநாதன்

தூமகேது தமிழகத்தில் முளைத்துவிட்ட பதினெட்டாம் நூற்றாண்டு.

கொங்கு நாட்டுப் பாளையக்காரர்கள் காட்டிய வீர தீரச் செயல்கள்தாம் எத்தனை!

பெருமை வாய்ந்த அந்த நாட்டின் தண்டநாயகன் கோட்டை இப்போது மூச்சு விட முடியாமல் தவித்துக் கொண்டிருந்தது.

ஸ்ரீரங்கப்பட்டணத்துச் சிறப்பு மிக்க மன்னரும், பெரும் வீரருமான ஹைதர் அலியின் முற்றுகை அத்தகைய நெருக்கடியான நிலையை உண்டுபண்ணிக் கொண்டிருந்தது.

தண்டநாயகன் கோட்டையுள் மக்கள் கண்ணோடு இமை சேர்க்க மறந்து கவலையே உருவாகிக் காணப்பட்டனர். அவர்களுடைய நெஞ்சமெல்லாம் உலைக்களங்களாகியிருந்தன! நினைவெல்லாம் நெருப்பலையால் கருகிச் சுருங்கிக் கொண்டிருந்தது! இத்தனையும் கோட்டைக் கில்லேதாரரான சரவண ராஜாவுக்குப் பெருத்த வேதனையைத் தந்தன. அவர் என்ன செய்வார்? சீர்கேடான நிலைமை அவரைச் செயலற்று நிற்க வைத்துவிட்டது.




அரண்மனைக் கூடத்தில் இங்கும்அங்குமாக உலவிக் கொண்டிருந்த சரவணராஜாவைப் புரிந்துகொள்ள முடியாத இரு இளம் நெஞ்சங்கள் துடியாய்த் துடித்தன. ஆம், பாலராஜனுக்கும், தேவராஜனுக்கும் கோட்டைக் கில்லேதாரரின் போக்கு இம்மியும் பிடிபடாமல்தான் இருந்தது. அனுபவமற்ற அந்த இரு இளம் நெஞ்சங்களும் போர்முனைக்கே ஆயத்தமாயின.

''பாலராஜா! வயதில் மூத்தவன் நான். இந்தக் கோட்டையைக் கட்டிக் காத்தவன். அப்பேர்ப்பட்டவன் பாளைய மரபுக்கு இழுக்கு வர நடப்பேனா என்று யோசித்துப் பாருங்கள்! நான் கோட்டை அதிகாரி மட்டுமல்ல, உங்கள் உறவினனும் கூட. அப்படி இருக்க மானம் காக்க மறந்துவிட்டதாக நீங்கள் கூறும் குற்றச்சாட்டை என்னால் சகிக்க முடியவில்லை. தயவுசெய்து சமாதானத்துக்கு உடன்படுங்கள்!''

சரவண ராஜா கண்ணீர் மல்க இவ்வாறு கூறினார். பாலராஜனுக்குக் கொஞ்சம் பொறுமை ஏற்பட்டது. ஆனால் தேவராஜன்?

''அண்ணா! சமாதானத்தால் உண்டாகப் போகும் பலன்? கைப்பூட்டி, கட்டியம் வெட்டி, கப்பம் கட்டும் அடிமை நிலை நமக்குத் தேவைதானா?''

இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல கில்லேதாரர் சரவணராஜா முன்வந்தார்: ''வாலிப முறுக்குவேறு; வாழ்வு வேறு. தேவராஜா! மன்னாதி மன்னர்களெல்லாம் சந்தர்ப்பச் சதியால் சரணடைந்து போயிருக்கிறார்கள். பிறகு, அதே சந்தர்ப்பத்தின் வலிமையால் மேலெழுந்து, அடக்கியவனை ஆண்டிருக்கிறார்கள். நாமும் இப்போதைக்கு இந்த இராஜதந்திரத்தையே கையாள்வோம். நீங்கள் பூரண தெளிவு பெற்ற பிறகு தக்க படை பலத்துடன் ஹைதர் அலியைஎதிர்க்கமுயலுங்கள். அட்டியில்லை. ஆனால், இப்போதைக்கு ஹைதர் அலியே பெரும் படை கொண்டு கோட்டையை முற்றுகை யிட்டுக் கொண்டிருக்கிறார். லட்சோப லட்ச முகலாய வீரர் எங்கே? நாம் எங்கே? ஏற்கெனவே நம் படைவீரர்களில் முக்கால் பகுதியினர் அழிக்கப்பட்டு விட்டனர். எஞ்சியிருப்பவர்களைக் கொண்டாவது நாம் உரிமைப் போருக்கு ஆயத்தமாகலா மல்லவா?''

''தம்பி! கில்லேதார் சொல்வதும் உண்மைதான்! ஹைதர் அலியே நேர்முகமாகத் தண்டு இறங்கியிருக்கிறான். அவனுடைய கோபத்துக்கு நாம் ஆளாகக் கூடாது!'' — பாலராஜன் பக்குவம் உணர்ந்தான். அப்படியும் தேவராஜன் துடிப்பு அமர்ந்ததாகக் காணோம்!

''சமாதானத் தூது அனுப்புவதால் ஹைதர் அலி மசிந்துவிடுவானா என்ன? அப்படி அவன் மசிந்தாலும் கண்ணைப் பறிகொடுத்த யாசின்கான் மசிய மாட்டானே! அவன்தான் அதிகமாகத் துடிப்பதாக நேற்று ஒற்றன் கூடக் கூறினானே? மேலும் அவன் பேச்சுக்கு ஹைதரிடம் மறு பேச்சில்லை என்பதையும் நாம் அறிவோம். ஹைதர் ஒப்புக்கொள்வாரா என்பதைத் தீர ஆலோசியுங்கள், சரவணப்பா!''

பன்னிரண்டு வயதுச் சிறுவனாயிருந்தாலும் பேச்சில் பாதை இருந்ததைக் கண்டு சரவண ராஜா மெய்மறந்து போனார். இறந்துபோன

பெரிய பாளையக்காரரை ஒரு கணம் எண்ணிப் பார்த்தார். புலிக்குப்பிறந்தது பூனையாகிப் போகாது என்பது எத்துணை உண்மை!

''தேவராஜா சொல்வதில் தவறில்லை. எதற்கும் சமாதானத் தூது அனுப்பிப் பார்ப்போம்! மெலிந்தவர்கள் வணங்கிப் போவதில் தவறில்லை. சமாதான உடன்படிக்கைக்கு வராவிட்டால்உங்கள் விருப்பப்படி போர்க்களத்திலேயே வீர சொர்க்கம் புகுவோம்! உங்கள் தந்தையின்ஆவி நமக்குத் துணை நின்று ஆசிஅளிக்குமாக!''




தந்தையாரான பெரிய பாளையக்காரரின் பேச்சை எடுத்ததும் பாலராஜனும் தேவராஜனும் தங்களை மறந்து சரவண ராஜாவைச் சேர்த்துக் கட்டிக் கொண்டு வேதனையைத் தெரிவித்தனர். கோட்டையுள் அடைபட்ட மக்களே சரவணராஜாவை நம்பியிருந்தார்கள் என்றால், இந்த இரு பிஞ்சு உள்ளங்கள் வேறு என்ன செய்ய முடியும்?

**தூ**ண்டு நிலா வானிலே தொத்திக் கொண்டிருந்தது. தூது செல்லும் மேகங்கள் அவ்வப்போது மறைத்தும், வெளிப்படுத்தியும் மாய வித்தை காட்டின.

கடல் போன்ற படைகளுக்கிடையே வண்ணக் கூடாரம் அமைத்து ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தார், முகம்மதிய வரலாற்றிலேயே புகழ் ஏணியை நிறுத்திய மாவீரர் ஹைதர் அலி. அவருடைய கண்கள் மூடிக் கொண்டிருந்தாலும், தூக்கம் அரைத் தூக்கம்தான். சிந்தனையும் அதனால் அவ்வப்போது தொத்தித் தொடர்ந்த மின்னல் கனவுகளும் தண்ட நாயகன் கோட்டையை வலம் வந்து கொண்டிருந்தன.

இந்தச் சரவண ராஜா பணிந்தால் என்ன மூழ்கிவிடப் போகிறது? பெரிய பாளையக்காரரும் போரில் மாண்டு விட்டார். புகழ் பெற்ற கோட்டையும் தரை மட்டமாக வேண்டுமா?

முற்றுகையிட்ட போர் வீரர்கள் அனைவரும் மகிழ்ச்சியில் நிம்மதியாக நித்திரை செய்து கொண்டிருந்தனர். பகல் முழுதும் கோட்டையைத் தகர்க்கக் குண்டு மாரி பொழிந்தவர்கள் ஆயிற்றே! ஆனால் ஒரே ஒருவன் மட்டும் உலவிக் கொண்டிருந்தான்! அவன்தான் யாசின்கான். குதிரைப் படை செலுத்துவதில் தனக்கு நிகரில்லாதவன். இரண்டு கண்கள் இருக்கும்போதே தூக்கம் சிந்தனைக்கு விரோதி என்று நினைப்பவன். இப்போது ஒற்றைக் கண்ணன்! அதுவும் ஒரு கண் யாரால் பழுதானதோ, அவர்களைப் பாழாக்க வேண்டிப் படையெடுத்து வந்திருக்கிறான்! தூக்கம் பக்கத்தில் நிற்குமா?

பாளையக் கோட்டைகள் அனைத்தையும் பணிய வைத்துவிட்ட ஹைதர் அலியால், தண்ட நாயகன் கோட்டையைப் பணிய வைக்க முடியாமல் போய்விட்டது. எனவே, யாசின் கான் தலைமையில் பெரும் படையை அனுப்பி வைத்தார். பவானி நதி அப்போது இரத்தப் பிரவாகம் எடுத்து ஓடியது. ஹைதர் அலியின் படைகள் அழிவுற்றுச் சின்னா பின்னமாயின!

மருண்ட யாசின்கான் தப்பியோட வழி தேடினான். அப்படித் தப்பும்போது அவனுடைய கொடூரக் கண்களுள் ஒன்று குத்தப்பட்டுக் குழியாயிற்று. பெரிய பாளையக்காரர் தம்முடைய வஞ்சத்தைத் தீர்த்துக் கொண்டார். ஆனால் யாசின்கானுடைய வஞ்சம் மட்டும் தீர்ந்தபாடில்லை. அது தீராத வஞ்சமாகவே கடைசி வரையில் நிலைத்தது.



## தீபாவளிக் காட்சி!

படரும் வண்ணங்கள் ;
புனித எண்ணங்கள்
இனிப்புப் பண்டங்கள் ;
இன்சொல் கண்டங்கள்.

**நேயர்களுக்குத் தீபாவளி வாழ்த்துக்கள்!**

மேலட்டை வண்ணப்படம் :
**சரஸ்வதி சத்தியமூர்த்தி**





கண்ணிழந்து தப்பி வந்த யாசின் கானைக் கண்டதும் ஹைதர் கடுங் கோபம் கொண்டார். ''தண்டநாயகன் பாளையத்துக்கு இத்தனை செருக்கா? தக்க தண்டனையை அளித்தே தீர வேண்டும்'' என்ற மனப்பாங்கில் மீண்டும் படைகளைத் தயாராக்கினார். வஞ்சம் தீர்க்கும் வாய்ப்பை எதிர் நோக்கிக் கொண்டிருந்த யாசின் கானும் படைக்குத் தலைமை தாங்கிப் பவானி ஆற்றங் கரை நோக்கி மீண்டும் வந்தான்.

யாசின் கான் மாவீரன்தான். ஆனால், கொடிய வீரன். அப்போதை ஹைதர் அலியின் 'சாட்டை' ஆட்சிக்குத் தலைவனும் அவனே! அந்தப் போரில்தான் பாளையக் காரர் வீர சொர்க்கம் அடைந்தார்.

பாளைப் படைகள் கலகலத்தன. கோட்டைக் கதவங்கள் மூடப்பட்டன. பணிவை எதிர்பார்த்த யாசின்கான், அது கிடைக்காமல் போய் விடவே பயங்கர உருவெடுத்து முற்றுகையை நீடிக்கவிட்டான். இப்படி ஒரு மாத காலம் கழிந்தது.

முற்றுகை நீடிப்பைக் கேள்விப்பட்ட ஹைதர்அலி, பெரும் படையுடன் சண்ட மாருதம் போல் சீறி வந்தார்! அவருடைய வருகைதான், கோட்டையுள் வேதனையே உருவாகியிருந்த அதிகாரி — கில்லேதாரர் சரவண ராஜாவைக் கலங்கச் செய்தது! அதன்பிறகு தான் அவருடைய இதயத்தே சமாதான உடன்படிக்கை அரும்பி, இளவரசர்களான பாலராஜனிடமும் தேவராஜனிடமும் வாதாடி அமைதி காண முனைந்தது.

சூரியன் கிழ்வானில் உதயமானான். உதயத்துக்குப் பிறகு ஒன்பது நாழிகைகள் ஓடி மறைந்தன. தூது அறிக்கையை ஏந்திய கண்ணப்பராஜாவும் அவனைத் தொடர்ந்து இரு போர்வீரர்களும் பகைவரின் படை முகாமுள் நுழைந்தனர்.

சமாதானக் கொடி ஏந்தி வரும் வீரர்களைக் கண்ட முகம்மதிய வீரர்கள் பெருத்த ஆரவாரம் செய்தனர். அந்த ஆரவாரத்தினூடே கேலிக் குரல்களும் எழத்தான் செய்தன.

இதற்குள் செய்தி ஹைதர் அலிக்கு எட்டி விட்டது. யாசின்கான் பற்களை நரநர என்று கடித்துக் கொண்டான். சில நாழிகைகளுக்குப் பிறகு பாளையக்காரர்களிடமிருந்து தூது வந்திருக்கும் செய்தியைத் தெரிவித்துவிட்டுச் சென்றான் வாயிற் காவலன் ஒருவன்.

கண்ணப்பராஜா உள்ளே வரவழைக்கப்பட்டான். வீரார்ந்த கோலத்துடன் வீற்றிருந்த ஹைதர் அலியைக் கண்டதும் கண்ணப்ப ராஜா ஒரு கணம் மரத்துவிட்டான். அவன் ஸ்ரீரங்கப்பட்டினத்துச் சிங்கத்தைப் பற்றிய செய்திகளைப் பல கோணங்களில் கேள்விப் பட்டிருந்தான். அமைதியே உருவானவராய் அமர்ந்திருந்த ஹைதர்அலி வியப்பான உருவம் போன்றே தோன்றினார்!

சமாதானச் செய்திச் சுருள் மன்னர் ஹைதர் அலியின் முன் படைக்கப்பட்டது. செய்தியை அறிந்த ஹைதர் அலி, அதை யாசின்கானிடம் நீட்டினார். அவருடைய முகத்திலிருந்த அமைதி, படித்து முடித்த யாசின்கானுடைய முகத்தில் படர மறுத்தது. அதனைக் கண்ணப்பன் குறிப்பால் உணர்ந்து கொண்டான்.

அடுத்த கணம் யாரும் எதிர்பாராதவண்ணம் யாசின்கான் கெக்கலி கொட்டிச் சிரித்தான். மாமன்னர் ஹைதர் அலிக்குக்கூட அது என்னவோ போல் இருந்தது. யாசின் கானுக்கு அவர் கொடுத்திருந்த செல்வாக்கு—இடம் அவ்வாறானவை.

''யாசின்கான்! உன் சிரிப்பை நோக்கும் போது முடிவில் சீற்றம் இருப்பதாக நினைக்கிறேன்!''

''சந்தேகமில்லை, சர்க்கார்! இந்த உடன் படிக்கையை நம்மால் ஏற்க முடிகிறதா?''

''ஏன்?''

''கண் கெட்டபிறகு சூரிய நமஸ்காரம் செய்பவர்கள் பாளையக்காரர்கள்! என் கண் கெட்டது அதற்காகவல்ல! பாளையக் காரர்கள் வம்சத்தையே பழி வாங்க!''

''யாசின்! சமாதானம் என்று வரும் போது நாம் ஏற்கத்தான் வேண்டும்! அது தான் அரசியல் முறை — மனிதாபிமானம்!''

''உண்மை! ஆனால் இந்த நச்சரவங்கள் போன்ற பாளையக்காரர்கள் விஷயத்தில் மனிதாபிமானம் பார்க்கக் கூடாது, சர்க் கார்! இன்று சமாதான என்பார்கள்; நாளைக்கு நாம் எதிர்பாராதபோது நம்மையே தாக்குவார்கள்! மனிதாபிமானம் அற்ற

1980 ல் மாஸ்கோவில் நடைபெறவிருக்கும் ஒலிம்பிக் பந்தயங்களுக்கான சின்னம் இது. 8000 ஓவியர்கள் வரைந்த 20,000 சின்னங்களில் இருந்து இச்சின்னம் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளது. இதை வரைந்த ஓவியர் 25 வயதான *Vladimir Arsentyev.*

ஆதாரம்: *Sports in the U.S.S.R*
தகவல்: நா. நாகரத்தினம்



வர்கள் ! இல்லையென்றால் என் கண்ணைப் பிடுங்கி இருப்பார்களா ?''

யாசின்கான் பேச்சை முடிக்கும் வரை காத்திருந்த கண்ணப்பராஜன் வாய் திறந்தான். அவனால் பொறுக்க முடியவில்லை.

'' சர்க்கார் ! கண்ணை யாரும் வேண்டும் என்றே பிடுங்கி இருக்கமாட்டார்கள்! தென்னாட்டவர்கள் எப்போதுமே பண்பானவர்கள்! போரில் அசந்தர்ப்பவசமாகத் தளபதி அவர்கள் கண்ணை இழந்திருக்கலாம் ! அதற்காகப் பாளையக்காரர்களை மனிதாபிமானம் அற்றவர்கள் என்று சொல்லிவிட முடியாது ! சர்க்கார் பெரிய மனம் கொண்டு சமாதான உடன்படிக்கைக்கு ஒப்புதல் வேண்டும் !''

கண்ணப்ப ராஜாவின் தலை வணங்கியது. அப்படி வணங்கியபோது அதற்குத்தான் எத்தனை நாணம் !

ஹைதர்அலி, யாசின்கானை மீண்டும் நோக்கினார். பிறகு கண்ணப்பராஜாவுக்குப் பதில் சொன்னார் :

'' தூதனே ! வாயை அடக்கிப் பேசு ! சமாதானத்தை ஏற்க முடியாது ! போர் முகத்தில் கோட்டையைச் சரணடைய வைக்க வேண்டும் என்பதே எமது அவா !''

''அதைவிடப் பாளையக்காரர்கள் வமிசத்தின் கண்களைப் பிடுங்கி வேண்டுமானால் காணிக்கைப் பொருளாக அனுப்புங்கள் ; அப்போது சமாதானத்தை ஏற்க முடியும் என்று கூறுங்கள் ! உங்கள் ஆத்திரத்துக்குப் பொருளுண்டு !'' என்றான் கண்ணப்பராஜா.

''அதை ஏன் செய்ய மறந்து இப்படி உடன்படிக்கை அனுப்ப வேண்டும் ? யாசின்கான் சென்ற முறை ஓடியது போல் ஓடமாட்டான் என்பது உங்களுக்குத் தெரியும்தானே? அவன் கண்ணாடியில் தன்னுடைய முகத்தைப் பார்க்கும்போதெல்லாம் பாளையக்காரர்களுடைய முகங்கள் எதிரே வந்து நிற்கின்றன.'' — ஹைதர் அலி முகத்தைச் சுழித்தார்.

'' சர்க்காரும் அதை விரும்புகிறாரா ?''

— மாவீரன் ஹைதர் அலிக்கே தர்மசங்கடமாகப் போய்விட்டது, கண்ணப்பராஜாவின் இந்தக் கேள்வி. உடன் யாசின்கானை நோக்கிய ஹைதர், ''யாசின், இதை நீ விரும்புகிறாயா?'' என்றார்.

யாசின்கான், ''என் கண்ணுக்குக் கண் ! இதை எடுத்துக் கூறித்தான் இரண்டாம் முறை படை திரட்டினேன் ! தாங்களும் இதற்கான ஒப்புதலோடுதான் படை அனுப்பினீர்கள், சர்க்கார் !'' என்றான் கடுகடுப்புடன்.

'' யாசின்கான் !'' — ஹைதர் அலறினார். ''அப்படியென்றால்....''

'' கண்ணுக்குக் கண்! பாளைய வம்சத்தின் கண்களைப் பிடுங்கியே தீர வேண்டும்.''

யாசின்கான் குரலில் உறுதி இருந்தது.

'' அப்போதுகூடத் தாங்கள் இழந்த கண்ணைப் பெற முடியாதல்லவா ?'' — கண்ணப்பராஜன் விம்மிய குரலில் இரக்கம் தெரிந்தது.

''இல்லை; அப்போதுதான் இழந்த கண்ணைப் பெற முடியும் ! அந்தப் பாளைய வம்சத்துக் கண்ணை என் குழி விழுந்த கண்ணில் பொருத்தியாவது உலகை நோக்குவேன் !''

—இம்முறை யாசின்கான் அதிகமாகவே கெக்கலி கொட்டிச் சிரிக்கத் தொடங்கினான். அவனுடைய பேய்ச் சிரிப்பு அடங்குமுன்னம் எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி நடந்து விட்டது. யாரும் எதிர்பாராத நிகழ்ச்சி அது ! கெக்கலி கொட்டிச் சிரித்த யாசின்கான், ''உய்'' என்று கூவிவிட்டான் ! அவனுடைய கை நடுங்கியது ; கண் மருண்டது !

கண்ணப்ப ராஜாவின் ஒரு கண்ணில் ரத்தம் பீறிட்டுக் கொண்டிருந்தது. ஆம் ; அவன் ஒரு கணம் யோசித்து, மறுகணம், இடுப்பிலிருந்த குத்துவாளை உருவி, ஒரு கண்ணைப் பிடுங்கி, யாசின்கானுடைய கையில் வைத்து, '' உலகம் தெரிகிறதா என்று பாருங்கள், யாசின் ! தெரிந்தால் போரைத் தொடங்கலாம் !'' என்று கூறினான். அடுத்து மயக்கம் அவனை ஆட்கொண்டது. ஹைதர் அலி செய்வதென்னவென்று தோன்றாதவராய் விழித்து, வெலவெலத்து எழுந்தோடி வந்தார்.

'' தூதுவனே ! என்ன காரியம் செய்து விட்டாய் !''

ஹைதர்அலி மேலும் பேசவில்லை. உடன் அரச வைத்தியர் வரவழைக்கப்பட்டார். கவனிப்பில் கனிக் கரம் தென்பட்டது.

யாசின்கான் நாடி தளர்ந்து மரத்து நின்றுவிட்டான்.

''யாசின் ! செயலாற்றுபவன்தான் வீரன்! முரடனல்ல !''

மன்னர் ஹைதர்அலியின் வாயிலிருந்து வெளிவந்த ரத்தினச்சுருக்கமான சொற்கள் இவைதாம் ! அடுத்துக் கண்ணப்பராஜாவை நோக்கினார்:

'' தூதுவனே ! உன் நெஞ்சுறுதி நிறைந்த தியாகத்தை மெச்சுகிறேன்! சரவணப்பாவுக்கு ஆள் அனுப்பியாகிவிட்டது! சமாதானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது! இதன் மூலம் யாசின்கானுடைய கொடூரத் தன்மையும் அமைதி அடைந்திருக்கும் என்று நினைக்கிறேன் !''

துன்பப்படும் அந்த நேரத்தில் — ஹைதர் அலியின் முடிவு கேட்டு, கண்ணப்பராஜாவின் முகம் துருவ நட்சத்திரம்போல் பிரகாசித்தது.

டாக்டர் ஜோன்ஸ் இதயமாற்று ஆபரேஷனுக்காகவே அமெரிக்காவில் ஆறு வருடப் பயிற்சி பெற்று வந்தவர். அவரோடு இணைந்து பணியாற்றியவர் ஜாகப்.

''டாக்டர்! ஒரு சின்னச் சந்தேகம். அது அபத்தமாகக்கூட இருக்கலாம்...'' ஹவுஸ் சர்ஜன் ஹரி பீடிகையுடன் ஆரம்பித்தார்.

''சரி. சொல்லுங்கள்.'' பச்சைக் கொடி காட்டினார் ஜோன்ஸ்.

''இந்த ஆபரேஷனுக்குப் பிறகு நோயாளியின் உணர்ச்சிகள்... குறிப்பாகக் குண நலன்கள் மாறுவதற்கு வாய்ப்புண்டா?''

''இல்லை. நிச்சயம் இல்லை. நீங்க சொல்கிற மாதிரி கதையிலே கவிதையிலே நடக்கலாம். இதயம் உணர்ச்சி இதெல்லாம் இருதயம் சம்பந்தப்பட்டதே அல்ல. மூளையே அத்தகைய எண்ணங்களையும் செயல்களையும் தரும் பிறப்பிடம்!''

''நான் ஒத்துக்கறேன், டாக்டர். ஆனால் நோயாளிக்கு நாம் பொருத்தற இதயம் யாருடையதுன்னு தெரியறதாலே ஸைகாலாஜிகலா - அவனைப் போல் நாம ஆயிடுவோமோங்கற எண்ணத்தாலே மாற வாய்ப்புண்டல்லவா?'' டாக்டர் ஜாகப் மூளை வைத்தியத்தில் நிபுணர். 'நியூரோ சர்ஜரி'யில் விரல் விட்டு எண்ணக்கூடிய சிலருள் ஒருவர்.

''இந்த மாதிரி இதய மாற்று ஆபரேஷனே இல்லாமல் கூட நல்லவர் கெட்டவர் ஆவதில்லையா? கெட்டவர் நல்லவராகத் திருந்துவதில்லையா?'' ஜோன்ஸ், ஜாக்கப்பைக் கேட்டார்.

''இருக்கலாம்... இப்போது நாம் ஆபரேஷன் செய்யும் கேஸ் ரொம்ப விசித்திரமானது!''

''ஆமா, ஆமா! கர்த்தரின் தொண்டருக்குக் கசாப்புக் கடைக்காரன் இதயத்தைப் பொருத்தினால் ஃபாதர் அருள்சாமி காதர்

போட்டிக் கதை

8

# இதயம் மாறினால்......



பாட்சாவாக மாறிவிடுவாரோன்னுசந்தேகம், அதுதானே...!'' ஜோன்ஸ் முகத்தில் புன்னகை அரும்பியது.

ஹரி குறுக்கிட்டார்: ''ஃபாதர் அருள் சாமி ஒழுக்கத்துக்கு உறைவிடமாய், சேவையே லட்சியமாய் வாழ்கிறவர்...''

ஜாகப் தொடர்ந்தார்: ''காதர் பாட்சா தொழில்தான் கசாப்புக் கடைன்னு இல்லே... அவன் வாழ்க்கையே கசாப்புக் கடை தான்... அவன் செய்யாத பாவம் இல்லே....''

''இப்பக்கூட ஆயுள் கைதியா ஜெயில்லே இருந்தவன். அங்கே ஏதோ கைகலந்து மண்டையைப் பிளந்து, இவனும் மண்டையைப் போட இங்கே வந்திருக்கிறுன்.''

ஜோன்ஸ் கேட்டார்: ''கடைசி நேரத்திலே யாவது இவனுக்கு நல்ல எண்ணம் வந்து தானே இவன் இதயத்தை வழங்க முன் வந்திருக்கணும்....?''



''ஆஸ்பத்திரியிலே சாகணும் அல்லது தூக்கிலே தொங்கணும். ஆபத்து சந்நியாசம் மாதிரி அவன் இதயம் நன்கொடை! போயும் போயும் ஃபாதருக்கு இவன் இதயமா கிடைக்கணும்?'' ஹரியின் சந்தேகம் விட்டதாகத் தெரியவில்லே.

''ஏன், இதிலே தப்பு என்ன இருக்கு? அவன் இதயம் நல்ல பலமா யிருக்கு.''

''சரி. ஒரு பரிசோதனையாகத்தான் செய்து பார்ப்போமே... ஃபாதர் அருள்சாமி காதர் பாட்சா ஆயிடருருன்னு.'' ஜாகப் மத்தியஸ்தம் செய்து வைத்தார்.

''ஆகமாட்டார். அப்படியே ஆனுலும் அது ஆபரேஷனுலே இல்லேன்னு அடிச்சுச் சொல்லுவேன். ஒரு கேஸை வைச்சு உலக உண்மையாகவும் பேசக் கூடாது.'' ஜோன்ஸ் விவாதத்துக்கு முற்றுப்புள்ளி வைத்து விட்டுத் தம் தனி அறையை நோக்கி நடந்தார். மௌனமாக ஜாக்கப்பும் ஹரியும் அவரைத் தொடர்ந்தார்கள்.

அவர்களுடைய இத்தனை விவாதங்களிலும் பங்கு பெருதவராக அங்கேயே அந்தத் தனி ஏ.ஸி. அறைக் கட்டிலில் கண்ணயர்ந்தவராகப் படுத்திருந்தார் ஃபாதர் அருள்சாமி. தமக்கு எந்த விதமான தனிச் சலுகையும் கூடாது என்று வற்புறுத்திய போதிலும் அவருக்கு அந்தப் பொது மருத்துவமனையில் அளிக்கப்பட்ட சலுகைக்குக் காரணம் அவர் தன்னலமற்ற தொண்டுதான்.

'தொண்டு' என்ற வார்த்தையில் அடங்கு பவையா அவர் சாதனைகளும், அதை அடைய அவருக்கு ஏற்பட்ட சோதனைகளும்? வெறும் பாதிரி மேடு என்று அழைக்கப்பட்ட அந்தக் குப்பை மேட்டைப் பாதிரிமங்கலமாக மாற்றியவரே அவர்தான்! அவருடைய தொண்டையும் அந்த ஊரின் பெயரையும் மக்கள் இணைத்துவிடக் கூடாதே என்பதற்காகவே தனியாக நின்ற பாதிரி மரத்தை அடுத்து ஒரு பாதிரித் தோப்பையே வளர்த்துவிட்டார். வல்லத்திலும், போந்தூரிலும் பட்டு நூல் சத்திரத்திலும் அவதிப்பட்டுக் கொண்டிருந்த ஏழை ஹரிஜன மக்களை ஒன்றுதிரட்டினுர். அவர்களோடு தாமும் ஒன்ருக நின்று மண் சுமந்து, குழைத்து, சுவர் எழுப்பி, ஓலை வேய்ந்து குடியிருப்புக்களை உருவாக்கினுர். அதே குடிசைஒன்றில் சிலுவையைநட்டு மாதா

ஆர். பி. சாரதி

கோயில் ஒன்றையும் அமைத்துக் கொண்டார். அவரது தனிச் சிறப்பு அவர் யாரையும் மதம் மாறும்படி வற்புறுத்தாததுதான். உண்மையில் மனம் மாறி, மதம் மாறியவரை விரும்பி ஏற்றுக் கொண்டது போலவே மற்ற ஹரிஜன மக்களுக்குப் பாதிரி மரத்தடியில் பிள்ளையாரை வைத்து வழிபடவும் வழி செய்திருந்தார். அவருக்குப் பிள்ளையாரின் துதிக்கையில் சிலுவையையும், சிலுவையில் துதிக்கையையும் காணும் பக்குவம் இருந்தது. அருள்சாமியும் அருணகிரியாக அரசமரத்தடிப் பிள்ளையாருக்கு மாணவனுக இருந்த போது தோப்புக்கரணம் போட்டவர்தானே! அருள்சாமியின் தந்தையைத் தொடர்ந்து, மதம் மாறியவர்தானே அவர்! இதை அவரே கூட அடிக்கடி சொல்வதுண்டு!

பாதிரிமங்கலத்தில் பிள்ளையாரையும், மாதா கோவிலேயும் கொண்டு வந்ததோடு அவர் திருப்தியடைந்துவிட வில்லே. இரண்டு ஆசிரியர்களோடு ஒரு துவக்கப் பள்ளியையும்

தொடங்கி வைத்தார். அதைச் சமயப் பள்ளி ஆக்காமல், 'தேசியப் பள்ளி'யாக்கினர்.

அந்த ஊரில் ஒரு டாக்டரோ மருத்துவ மனையோ இல்லாத குறையையும் அவருக்குத் தெரிந்த ஹோமியோபதியால் ஈடு செய்து கொண்டிருந்தார்.

ஒண்டக் குடிசையும், உழைக்கப் புறம் போக்கு நிலத்தில் அரசு உதவியுடன் பண்ணையும் அமைத்துக் கொடுத்த அவர், கர்த்தராகவே காட்சியளித்தார்.

ஆரோக்கியம் அவருடைய முதல் சீடன் மட்டுமல்ல. அவர்பள்ளிக்கூடத்துக்குப் பியூன், டாக்டருக்குக் கம்பவுண்டர்... சுருக்கமாகச் சொன்னல் அவருக்கு மூன்ருவது கை— கூடப் பிறக்காத தம்பி!

ஆரோக்கியம் மட்டுமல்ல; அவன் மனைவி மரியம்மா, மகள் ரோஸி, மகன் செல்லக் கண்ணு அனைவருமே அவரிடம் ''சாமி, சாமி'' என்று உயிரையே வைத்திருந்தார்கள்.

அவர்கள் தெய்வத்துக்கு இதயநோய் என்று பட்டணத்து டாக்டர் சொன்னபோது பாதிரிமங்கலத்து மக்கள் பதறித்தான் போய் விட்டார்கள். அதுவும் படமெல்லாம் எடுத்து 'வேறே இதயம்தான் வைக்கணும்'னு சொல்லிவிட்டபோது துடித்துப் போய்விட்டார்கள். 'எப்படியாவது அவர்கள் தெய்வம் உயிர் பெற்று வந்தால் போதும்' என்று பிரார்த்தனை செய்யாத இதயமே இல்லை.

ஃபாதர் அருள்சாமிக்கு மட்டும் முழு விருப்பம் இல்லை. 'தம் வாழ்க்கையைக் கர்த்தர் கையில் ஒப்படைத்து விட்ட பிறகு இதய மாற்று ஆபரேஷன் எல்லாம் தேவைதானு?' என்றுதான் எண்ணினர். ஆனல் பாதிரி மங்கல மக்கள் அன்பை, ஆசையை, வேண்டுகோளை அவரால் உதாசீனம் செய்துவிட முடியவில்லை. எல்லாம் வாய்ப்பாக ஒன்று சேருவதைப் போல், இதற்கென்றே அமெரிக்கா சென்று திரும்பிய டாக்டர் ஜோன்ஸ் பற்றி ஜாகப் கூறியபோது அரைமனசாகத் தான் சம்மதித்தார். அவரைக் கவனித்துக் கொள்வதற்காகவே ஆரோக்கியத்தின் குடும்பமும் மருத்துவ மனைக்கே வந்துவிட்டது!

''டப் டப் டபடப் டப் டப்....'' இது என்ன இப்படி ஒரு சத்தம் ஒருவர் இதயத்திலிருந்து கேட்க முடியுமா? ரத்த அணுக்கள் நாளத்துக்குள்ளேயே ஸ்கூட்டர் விட முடியுமா?

ஃபாதர் அருள்சாமிக்கு இந்த மாறுதலுக்குக் காரணம் புரியவில்லை.

சாந்தமே உருவமாயிருந்த பழைய ஃபாதர் அருள்சாமி இப்போது எங்கே? அவருக்கு என்ன வந்துவிட்டது? ஏன் அடியோடு மாறி விட்டார்?

'பசிக்கிறது' என்று ஒரு மாம்பழத்தைப் பறித்துத் தின்ற செல்லக்கண்ணுவை ஏன் பேய் போல் அறைந்தார்?

'ஒரு குத்துவிளக்கைத் திருடிப் போன திருடனுக்கு இன்னெரு குத்துவிளக்கைக் கொடுத்து அனுப்பிய பாதிரியாராகத்தான் அவரும் இருப்பார்' என்றுதானே செல்லக் கண்ணு நினைத்திருப்பான்? அந்தக் கதையை அவனுக்குச் சொன்னதே அவர்தானே?

தமக்குள் இனம் தெரியாத விரும்பத் தகாத உணர்வுகள் மேல் எழுவதை அவர் அறிந்துதான் இருந்தார். அவரால் ஏனே அதைத் தடுக்க முடியவில்லை!

இன்றுகூட அப்படித்தான். காலை பத்து பத்தரை மணி இருக்கலாம். ஒப்புக்குத் தம் அறையில் உட்கார்ந்து கொண்டு 'உடம்பு சரியில்லை' என்று வந்தவருக்கு ஏதோ மருந்தைக் கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தார். இப்போதெல்லாம் அதில் கொஞ்சம்கூட நாட்டம் இல்லை. 'வழக்கத்தை விட்டு விடக் கூடாதே' என்றுதான் தினந்தோறும் அதை ஏதோ சடங்காக ஒப்பேற்றிக் கொண்டிருந்தார்.

எழுந்து வெளியே புறப்படும் சமயம்.... மரியம்மாள் வேகமாக உள்ளே வந்துகொண்டிருந்தாள்.

''ஸாமி, வெளியே கிளம்பிட்டிங்களா?''

''பரவாயில்லை. என்ன வேண்டும்...என்ன உடம்பு?'' என்றுதான் எப்போதும் கேட்டிருப்பார். ஆனல் அவர்தான் எப்போதும் போல் இல்லையே... ஸாமி சீறினர். ''ஏன்... யாருக்கு என்ன? வாந்தியா, பேதியா? கண்டதைத் தின்னுட்டு....'' மரியம்மா திடுக்கிட்டாள். தலைவலிக்குத் தைலம் ஏதாவது வாங்கிப் போகலாம் என்றுதான் வந்தாள். அவள் இதை எதிர்பார்க்கவே யில்லை. மாம்பழம் பறித்த செல்லக்கண்ணுவை அறைந்த போதே அவரிடம் ஒரு மாறுதல் ஏற்பட்டு விட்டதோ என்று அஞ்சினள் மரியம்மா. ஆனல் ஆரோக்கியத்துக்கு மட்டும் இந்தச் சில்லறைக் கோபங்கள் தவருகவே தோன்ற வில்லை. ஏதோ படபடப்பில் இப்படியெல்லாம் அவர் நடந்து கொள்வதாக எண்ணினன். ஃபாதர் அருள்சாமிக்கு மட்டும் 'தாம் நடந்துகொண்டது தவறு' என்று தெரியாமல் இல்லை.

இவையெல்லாம் சாதாரணத் தவறுகள். ஆனல் அன்று செய்ய முயன்றது... தூ... நினைத்துப் பார்த்தாலும் நெஞ்சம் கசக்கும் அந்தத் தவறு. தவரு? தெரியாமல் செய்ததா அது? தெரிந்தே திட்டமிட்டுச் செய்த கேவலமான குற்றம் அது. கருணையே வடிவமான கர்த்தர் குடிகொண்ட அவர் நெஞ்சில் கொலைகாரச் சாத்தான் எப்படிக் குடியேறினன்?

அன்று இலேசாக மார் வலித்தது என்னவோ உண்மைதான். அதைப் பெரிது படுத்தி ஆரோக்கியத்தைச் சென்னைக்குத் துரத்திவிட்டு... ஜாகப் டாக்டரை அழைத்து வரச் சொல்லிவிட்டு அவன் கிளம்பும்போது... ''கோதுமைத் தவிட்டை வறுத்து ஒத்தடம் கொடுத்தால்...'' என்று இழுத்து...

ஆரோக்கியம் கேட்டான்: ''சாமீ, நானே ஒத்தடம் கொடுத்திட்டுப் போகட்டுமா?''

''வேண்டாம்... வேண்டாம்... உன் மகள் ரோஸியை அனுப்பிவிட்டுப் போ. போதும்.''

---



சாஸ்திரிணி

பூனவில் இப்போது பூஜை, மந்திரம் - இவை செய்து வைக்கும் வைதிகப் பணியைப் பெண்கள் செய்ய ஆரம்பித்திருக்கிறார்கள். ஏழெட்டு பேர் பயிற்சி பெற்று வருகின்றனர்.



''ஆக மொத்தத்திலே நம்ம சேகர் ரொம்ப நல்ல பையன் சார்!''
''அப்படியா ...! சில்லறை விஷயத்திலே எப்படி?''
- சரஸ்வதி பஞ்சு

அவன் போய்விட்டான்.

இதே ரோஸ்... இரண்டு வருஷங்களுக்கு முன்னால் ஜபம் முடிந்து வெளியே வரும்போது மயங்கி விழுந்து விட்டாள். அவருக்குக் காலும் ஓடவில்லை, கையும் ஓடவில்லை. ''ஆரோக்கியம் ஆரோக்கியம்.... மரியம்மா... மரியம்மா!'' என்று குரல் கொடுத்தார். மரியம்மாதான் ஓடிவந்தாள். கால்களைத் தூக்கிப் பிடித்து, ''தலைப்பக்கம் பிடிங்க சாமீ!'' என்று பதறினாள். அப்போதுகூட அவர் தயங்கினாரே! ''என்ன சாமீ..ஒங்க கொழந்தை மாதிரி...'' மரியம்மா வற்புறுத்தியபோதுகூட அவருக்கு அரை மனசுதான்! அவர் சொன்னார், ''மரியம்மா உனக்குத் தெரியாதா? நம்ப நாட்டிலே வயசு வந்த பெண்ணைத் தகப்பன்கூடத் தொட மாட்டானேம்மா.''

''அது சரிங்க... நீங்க தகப்பனுக்கும் மேலே—சாமி ஆச்சுங்களே!''

அந்த மனம்...அழுத்தமான அந்த இதயம்தான் இப்போது எப்படி விரிசல் கண்டு விட்டது?

கறி அடுப்பும், வாணலியில் கோதுமைத் தவிடுமாக வந்தாள் ரோஸ்.

''சாமீ.... ஏதாவது துணி... கர்சீப் தர் நீங்களா, தவிட்டைக் கொட்டி ஒத்தடம் கொடுக்க?''

''நீ எடுத்து வரலையா ரோஸ்... இங்கே எதுவும் இல்லையே'' அவர் கவுன் பையில் இருந்த கைக்குட்டை முள்ளாகக் குத்தியது.

''போய் எடுத்து வரவா?'' என்று எழுந்தாள் ரோஸ்.

''வேண்டாம்... சூடு ஆறிப் போயிடுமே?'' என்று இழுத்தார் அவர்.

ரோஸ் தயங்கவில்லை. வாணலியில் வறுத்த தவிட்டை முந்தானையில் கொட்டிக்கொண்டு ''ஸாமி, படுத்துக்கொள்ளுங்க...'' என்று ஒத்தடம் கொடுக்க ஆரம்பித்து விட்டாள். இதை எதிர்பார்த்திருந்த அவர் மனம் விழிகளை ஓடவிட்டுப் பேயாய் அலைந்தது. கள்ளம், கபடமில்லாத ரோஸ் கடமையே கண்ணாக இருந்தாள். அவள் மனசில் கல்மிஷம் இல்லை. அவளைப் பொறுத்தவரையில் சாமிக்குச் செய்யும் எந்தக் காரியமும் கர்த்தர் காரியம்தான். அப்படித்தான் ஆரோக்கியமும் சொல்லியிருந்தான்!

அருள்சாமியின் புதிய சைத்தான் மனத்தில் விஷம் ஏறிக் கொண்டிருந்தது. மனத்தின் வெம்மை வியர்வையாக வெளி வந்து கொண்டிருந்தது.

''ரோஸ்... குளிருதே... கதவு... ஜன்னலை மூடேன்.''

''சாமீ... உடம்பு வேர்க்குது... குளிருதுன்னு சொல்றீங்களே!'' அப்படிச் சொன்ன போதிலும் எழுந்து போய்க் கதவு, ஜன்னலை மூடத் தவறவில்லை.

மெல்ல அவள் கையைப் பிடித்துப் பிடித்து மார்பில் ஒத்தடம் கொடுத்துக் கொண்டே இருந்த அவர் சட்டென்று எழுந்து உட்கார்ந்து கொண்டார்.

கோதுமைத் தவிடு சிதறியது....

''வேண்டாம் சாமீ... வேண்டாம்...'' அலறினாள் ரோஸ்.

''சாமீ... சாமீ...: அம்மா... அம்மா...''

வெளியே செல்லக்கண்ணுவின் குரல் கேட்டது.

''சாமிக்குச் சாப்பாடு.''

நெற்றிப் பொட்டில் 'பட்'டென்று ஒரு தெறிப்பு... அவர் கை தளர்ந்தது.

அன்னமிட்ட வீட்டில் கன்னக்கோலா?

''வேண்டாம்... வேண்டாம்...'' அலறினார் ஃபாதர் அருள்சாமி.

''என்ன ஃபாதர்... என்ன வேண்டாம்?'' டாக்டர் ஜாகப் அவர் அருகே வந்தார்.

முகத்தில் துளிர்த்த வியர்வையைத் துடைக்க வந்த சிஸ்டரைக்கூடத் தடுத்து விட்டார் அருள்சாமி.

''ஏதாவது கனவா, ஃபாதர்?'' சிரித்துக் கொண்டே கேட்டார் ஜாகப்.

''கனவுதானா அது? ஓ... கடவுளே! என்ன பயங்கரம்!''

''கவலைப்படாதீங்க ஃபாதர்... கட்டிப் போட்ட மாதிரி கட்டில்லே கெடக்கறதனாலேதான் இப்படி.... ஆப்பரேஷன் முடிஞ்சு மறுபடியும் உங்க சேவையிலே மூழ்கிட்டா...''

''இல்லை, டாக்டர்! மன்னிச்சுடுங்க... எனக்கு ஆபரேஷன் வேண்டாம்... கர்த்தர் கொடுத்த பலவீனமான இதயமே போதும். காதர்பாட்சா இதயம் வேண்டாம்.''

''நீங்க 'டிஸ்கஸ்' பண்ணின விஷயம் இவர் காதிலே பட்டிருக்கு போலே இருக்கு.'' சிஸ்டர் சொன்னாள்.

''அதனால் என்ன? ஃபாதரெல்லாம் கூட சாதாரண மனிதர் போலவா? அப்படி நெனைச்சிருந்தால் அதை இங்கே டிஸ்கஸ் செய்திருப்போமா? டாக்டர் ஜோன்ஸ்தான் உறுதியாகச் சொல்லிட்டாரே... நீங்க பயப்பட வேண்டாம். நீங்க கசாப்புக் கடை காதராகிவிட மாட்டீங்க...''

''என்னைக் கட்டாயப்படுத்தாதீங்க...''

''உங்களைக் கட்டாயப்படுத்தலை. ஆனால் காதர் பாட்சாவுடைய கடைசி வேண்டுகோள் ஒன்று இருக்கு உங்களுக்கு.''

''எனக்கா, என்ன அது?''

'''கொடுமைக்கார கசாப்புக்காரன் இதயம்'னு வேண்டாம்னு சொல்லிடப்போறாரு சாமீ... அவர் கிட்டே சொல்லுங்க... அவர் கொடுக்கிற பாவ மன்னிப்பா இருக்கட்டும் இது... கொடுமைக்காரனா... கொலைகாரனா ஆயுசு முழுதும் வாழ்ந்தாச்சு. அவர் இதயமா என் இதயம் மாறி நாலு நல்ல காரியம் செஞ்சாத்தான் எனக்கு மன்னிப்பு'ன்னு கதறிட்டான்.''

ஃபாதர் அருள்சாமி பேசவில்லை. கண்களை மூடிக்கொண்டு ஜபத்தில் இறங்கிவிட்டார். அவர் இனி மறுப்புச் சொல்ல மாட்டார் என்பது டாக்டர் ஜாகபுக்குத் தெரியும்!

# வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் உடம்புக்குத் தேவை கால்ஷியம்-ஸாண்டோஸ்®



ஸ்விட்சர்லாந்தில் ஸாண்டோஸ உருவாக்கியுள்ள,
உலகிலேயே தலைசிறந்த கால்ஷியம்

கர்ப்பத்தின் ஆரம்பக் கட்டத்திலேயே குழந்தையின் பற்களிலும் எலும்புகளிலும் அமையத் தொடங்குகிறது கால்ஷியம். கருவிலுள்ள குழந்தைக்கு அதிகப்படி கால்ஷியம் அவசரமாகத் தேவை. எனவே, வழக்கத்தைவிட இருமடங்கு தேவைப்படும் உங்களுக்கு முன்னதாகவே சாப்பிடத் துவங்குவீர் கால்ஷியம்-ஸாண்டோஸ்.



பாப்பாவின் பற்களுக்கும் எலும்புகளுக்கும் கால்ஷியம் வழங்குவது பாலூட்டும் தாயன்றி வேறில்லை. அவளுக்கு வழக்கத்தைவிட மும்மடங்கு கால்ஷியம் தேவை.

வளரும் குழந்தைக்கு வலுவான எலும்புகளும் நலமுள்ள பற்களும் அமைய இன்றியமையாதது கால்ஷியம்- எனவே, பெரியோரைவிட குழந்தைக்கு அதிகக் கால்ஷியம் தேவைப்படும்.





ஒவ்வொரு கட்டத்திலும், ஒவ்வொரு வயதிலும், மனித உடம்புக்கு அத்யாவசியம் கால்ஷியம். மிகச் சிறந்த வடிவிலுள்ள கால்ஷியம்: கால்ஷியம்-ஸாண்டோஸ். ராஸ்ப்பெர்ரி சுவையூட்டிய இனிமையான கால்ஷியம்–ஸாண்டோஸ், நாள் ஒன்றுக்கு 2 அல்லது 3 வில்லைகள் போதும், உங்கள் கால்ஷியம் தேவையைன நிறைவுசெய்யும் வைட்டமின் C, D, B 12 சத்துக்களோடு.

நம்பிக்கைக்குரியோர் ஸாண்டோஸ்-கால்ஷியம் துறையிலே உலக முன்னோடிகள்.




## கால்ஷியம்-ஸாண்டோஸ்
## வில்லைகள் தினமும் தேவை எவருக்கும்

CA/CS/151 TAM

லேடி டாக்டர் கபிலா, டாக்டர் சங்கர் இருவரும் மருத்துவக்குடி கிராமத்து ஆஸ்பத்திரியில் வேலை பார்க்கின்றனர். கல்யாணம் செய்து கொண்டு விட்ட பிறகு டாக்டர் சங்கருக்குத் தம் மனைவியிடமே 'தொழில் பொருமை' ஏற்பட்டு விடுகிறது. இதிலிருந்து பல கோளாறுகள் விளைந்தாலும் நாடகக் கதை கோளாறு ஏதுமின்றி நிறைவு பெறுகிறது. பல தர்மசங்கடமான சூழ்நிலைகளைப் புனைந்து நாடகத்துக்குச் சுவையூட்டியிருக்கிறார், வெங்கட்.

குமாரி சச்சு டாக்டர் கபிலா. ஒன்பது தினுசு தினுசான புடவைகளைக் காட்சிக்குக் காட்சி மாற்றி, சூழ்நிலைக்கு ஏற்ப முகபாவங்களையும் மாற்றி மிக நன்றாக நடித்திருக்கிறார். கவர்ச்சியோடு, உருக்கமும், அனுபவமும் போட்டி போட்டுக் கொண்டு அவர் நடிப்பில் பளிச்சிடுகின்றன.

தில்லை ராஜன், டாக்டர் சங்கர். மேடைக்கேற்ற நல்ல தோற்றம். பாத்திரத்தை உணர்ந்து நன்றாய் நடிக்கிறார்.

போஸ்ட் மாஸ்டர் தாமோதரம், காட்சிக்குக் காட்சி வளையவரும் டமாரச் செவிடு ராமய்யா, சம்பந்தி மாமா இவர்களெல்லாம் போதாக் குறைக்கு ஸ்டேஷன் மாஸ்டர் வேறு—எல்லாருமாகச் சேர்ந்து கொண்டு காலஞ்சென்ற பழைய விகடத் துணுக்குகளுக்குப் புத்துயிர் கொடுத்து அறு அறு என்று அறுக்கின்றனர்.

கனமான நாடகத்துக்கு நகைச் சுவை வேண்டியதுதான். அதற்காக இப்படியா? ஒரு செவிட்டு மனிதரை வைத்துக் கொண்டு ஓயாமல் 'செவிட்டுப் பிணம்' என்று திட்டிக் கொண்டே நகைச் சுவையைப் புனையப் பார்ப்பது கீழ்த்தரம். நாடகம் பார்ப்பவர்கள் மீது அநுதாபம் கொண்டு நாடகத்துக்குத் தொடர்புள்ள நகைச் சுவைக் காட்சிகளை அமைக்கக் கூடாதா?

நாடகம் பார்ப்பவர்கள் சிரிக்க வேண்டும் என்பதற்காக எள்ளத்தை யெல்லாமோ சேர்த்துக் குட்டை குழப்பலாமா? இந்நாடகத்தில் பல பாத்திரங்கள் அவசியமே இல்லை!

## தனி ஆவர்த்தனம்





## அல்லி தர்பார்

ஸ்ரீமதி தர்மா இரண்டு பிள்ளைகளுக்குத் தாயார். மூத்தவன் அமெரிக்காவில் தங்கி விட்டான். (நல்லதாய்ப் போயிற்று! நாடகத்தில் ஒரு நடிகரைப் பற்றிக் கவலையில்லை. நாடகக் குழுவினருக்கல்லவா அந்தக் கஷ்டம் தெரியும்!) இரண்டாவது பிள்ளை ராஜாவின் மனைவி லக்ஷ்மி பரம ஏழையாதலால் அவளை ஏசிப் பேசி மாமியார் தர்மா கொடுமைப் படுத்துகிறாள். 'திடீர் இட்லி' மாதிரி 'திடீர்' அமெரிக்க மாமா, (லக்ஷ்மிக்கு) தோன்றி அல்லி தர்பாரை அடக்கி ஒடுக்குகிறார். கடைசியில் 'திடீர் அமெரிக்க மாமா'வின் உண்மை சொரூபம் வெளியாகி, ஒரே நனைப்பில் சாயம் வெளுத்துப் போன மட்டரகப் புடவை மாதிரி பல்லிளித்துவிடுகிறது.

தர்மாவாக (அல்லியாக) வரும் வசந்தா மட்டும் இல்லை யென்றால் இந்த நாடகமும் இல்லை. என்ன நொடிப்பு! என்ன நடிப்பு! அவருக்கு அடுத்தபடியாக மேடையை ஆட்கொண்டவர் தர்மாவின் சாதுக் கணவராக வந்து சக்கைப் போடு போட்ட ஆர். வி. ரமணிதான்! ஒவ்வொரு அசைவிலும் அவர் நடிக்கிறார்.

'திடீர் அமெரிக்க மாமா'வாக வந்து நாடகத்துக்கு ஒரு திடீர் மாற்றத்தைத் தரும் கே. மோகன் பாராட்டுக்குரியவர். அமெரிக்காவிலேயே வாழ்ந்து பழகிய பெரும்போக்கான பேச்சு, எதிலும் ஓர் அலட்சிய சுபாவம் எல்லாம் மோகனின் நடை, உடை பாவனைகளில் நன்கு வெளிப்பட்டது.

இந்நாடக ஆசிரியர், டைரக்டர் கே. கே. வைத்தியநாதனிடம் கேட்டேன், "நினைத்து உருகுகிற மாதிரி நாடகத்தில் ஒரு காட்சி கூட இல்லை; அழுத்தமான கதையும் இல்லையே!" என்று. "சிரித்து மகிழத்தான் இந்த நாடகம். பழைய ஹாஸ்யங்கள்தான் என்றாலும், ரசிகர்களின் ஆரவாரக் கையொலியைப் பார்த்தீர்களா? நகர சபா மெம்பர்கள் இந்த மாதிரி 'லைட் தீமை'த்தான் விரும்புகிறார்கள்" என்று கேட்டுக் கேட்டுப் புளித்துப் போன சமாதானத்தைச் சொன்னார்.

நாடகத்தில் 'தீம்' இல்லாவிட்டால் பரவாயில்லை. தீமை இல்லாவிட்டால் சரிதான் என்று நினைத்துக் கொண்டேன். —காந்தன்

# அணை உடைத்து எழும் எண்ணம்!



(ஜெயராஜ்)

☐ 'அணை உடைத்துக் கொண்டபோது' கதை படித்ததும் பாராட்டியே ஆகவேண்டும் என்ற உணர்ச்சியை என்னால் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை. எனவே எழுதுகிறேன்.
சென்னை—31
11—10—76 துர்வாஸ ஜே. வி. நாதன்

☐ வட்டமேஜையில் பிரசுரமாகியுள்ள திரு கே. இராமமூர்த்தியின் கடிதம் பார்த்தேன்.

பாரதியார் திருவல்லிக்கேணியில் வாழ்ந்த வீட்டை அரசுடைமையாக்க ஆக்க பூர்வமாகச் சிலம்புச் செல்வர் ம. பொ. சி. முயற்சி எடுத்ததை இத்தருணத்தில் போற்றக் கடமைப் பட்டுள்ளோம். அவர் சென்னை மாவட்ட நூலக ஆணைக் குழுத் தலைவராக இருந்த போது, அந்த நூலக ஆணைக் குழு சார்பிலேயே பிரஸ்தாப வீட்டை விலைக்கு வாங்க முயற்சி எடுக்கப்பட்டது. அதற்காக நூலக ஆணைக் குழுவின் நிதியிலிருந்து அடையாள மாக ஒரு லட்சம் ரூபாயும் ஒதுக்கி வைக்கப் பட்டது. வீட்டின் சொந்தக்காரரோடு தமிழரசுக் கழகத் தலைவர் பேச்சு வார்த்தையும் நடத்தினர். பேச்சு வார்த்தை வெற்றி பெற வில்லை. அப்போதைய கல்வி அமைச்சரை அணுகி, பாரதியார் வாழ்ந்த வீட்டைக் கைப் பற்றித் தரவேண்டும் என்று தமிழரசுக் கழகத் தலைவர் கேட்டுக் கொண்டார். அரசு தயங்கியது. வீட்டுக்காரர் அரசின் நடவடிக்கையை ஆட்சேபித்து நீதி மன்றம் சென்றால் என்ன செய்வது என்பதே அரசின் தயக்கம். இன்று ஆளுநர் அரசுடைமையாக்கத் துணிந்து விட்டார்! எப்படியோ அன்று தமிழரசுக் கழகத் தலைவர் எடுத்த முயற்சி வெற்றி பெற வில்லை என்றாலும், அவருடைய விருப்பம் இன்று நிறைவேறுகிறது.

வாழ்க, பாரதியார் புகழ்!

சென்னை-33
8—10—76 பெ. சு. மணி

☐ பாரதியார் இல்லம் தேசிய உடைமையாக வேண்டும் என்றும், பைகிராப்ட்ஸ் ரோட்டை மகா கவி பாரதியார் சாலை என்று மாற்ற வேண்டும் என்றும் முதல் தீர்மானம் போட்டவர் திருவல்லிக்கேணி சர்க்கிள் காங்கிரஸ் தலைவராகப் பணியாற்றும் இளம் தொண்டர் திரு பி. நாகராஜன்.
9—10—76
சென்னை—5 ஆ. செல்லப்பா

☐ எழுத்தில் தெளிவும் தேசிய நோக்கும் பிரவகிக்கும்படி செய்யும் வல்லமை பெற்ற திரு நா. பார்த்தசாரதி, 'கல்கி'யில் கடந்த பதினான்கு வாரங்களாக எழுதி வந்த 'புது உலகம் கண்டேன்' பிரயாணக் கட்டுரைகள் சுவையும் பயனும் மிக்கதாய் இருந்தன. தமிழுக்குப் பிரயாணக் கட்டுரை புதிதல்லவெனினும், பிரயாணக் கட்டுரை இலக்கியத்துக்குப் 'புது உலகம் கண்டேன்' ஒரு புதிய பாதையை வகுத்துக் கொடுத்தது. படிக்கப் படிக்கப் புதிய செய்திகள், சுட்டப்பட்ட விதத்தால் சுவை மிகுந்து பயன் நல்கின.
இராஜபாளையம்,
9—10—76 குன்றக்குடி பெரியபெருமாள்

☐ நாளைய திங்கள் முதல் ஹோட்டல் பண்டங்களை ஐந்து பைசா கூடுதலாக்கி விற்க அரசு அனுமதி வழங்கியுள்ளது. ஹோட்டல் பண்டங்கள் தயாரிக்க உபயோகப்படுத்தப் படும் எண்ணெய், ஏனைய பண்டங்கள் விலை ஏறியதை மூன்று மாதங்கள் கணித்த பின் அரசு மேற்கொண்ட முடிவு இது. நிற்க,

மத்திய அரசு ஊழியர்களின் ஊதியத்தில் ஐந்தாவது தவணையை *(Additional D.A.)* பிடித்து விட மத்திய அரசு இன்று உத்தர விட்டு விட்டது. ஜூலை மாதமே விலைவாசி இறங்கி விட்டதால் இம்முடிவாம்!
கம்பரசம்பேட்டை.
10—10—76 என். பாலு

☐ எத்தனையோ பெருமக்கள் எம். எஸ். அவர்களைப் பற்றி எழுதியுள்ளார்கள். ஒரு சாமானியன் என்ற முறையில் சில வரிகள் எழுத விரும்புகிறேன்.

சக்கர நாற்காலியிலேயே வாழும் நண்பர் ஒருவர் எனக்கு உண்டு. அவர் சிரமம் பாராமல் கச்சேரிக்கு வருவார். இப்படி உங்களை வருத்திக் கொள்ள வேண்டுமா என்றால் அவர் கூறும் பதில்: ''எம். எஸ். பாடும்போது கடவுளர் சொர்க்கத்தில் இல்லை; அவர்கள் கீழே இறங்கி வந்து எம். எஸ். அவர்களைச் சூழ்ந்திருந்து ஆர்வத்துடன் கேட்கிறார்கள்.''

பக்தி சிரத்தையால் இறைவனைப் பூவுலகத்துக்குக் கொண்டு வர முடியுமானால் தூய இசை இன்னும் சீக்கிரமாகவே அவரை அழைத்து வந்து விடுகிறது. எனவேதான் தியானம் செய்வது மட்டுமின்றி ஞானிகள் இசையாலும் ஆதியந்தமற்றவனைத் துதித்தார்கள். எம். எஸ். பொன் குரலெடுத்துப் பாடும்போது நாம் அகிலாண்டங்களின் இசையையே கேட்கிறோம். இன்னிசையின் அரசி அவர். அவரது கச்சேரிகளின் முடிவில் ஒரே ஒரு ஏமாற்றம் நமக்கு ஏற்படத்தான் செய்கிறது. சொர்க்கலோகத்தில் எங்கெங்கெல்லாமோ ஆனந்தமாய்ச் சஞ்சரித்துக் கொண்டிருந்துவிட்டுக் கடைசியில் இப்போது வீடு திரும்பவேண்டியிருக்கிறதே என்ற எண்ணம் தான் அது!
சென்னை — 8
15—10—76 எஸ். விட்டல்ராவ்

# மறக்கமுடியாத பேராசிரியர்கள்!

விஜயா பாலகிருஷ்ணன்

**கை**ரளியா கல்லூரியில் என் மனத்தை மிகவும் கவர்ந்தவர் பேராசிரியர் சிவசங்கர மேனன்தான். 'கே. பி. எஸ்.' என்று மாணவர்களால் அழைக்கப்பட்ட இவருடைய ஆங்கிலப் புலமை அபாரம்! (அசல் வெள்ளைக்கார உச்சரிப்பில் ஆங்கிலம் பேசும் இவர் எங்கேயாவது பெரிய சர்வகலாசாலையில் பேராசிரியராக இருந்திருக்க வேண்டியவர். நம் சர்வகலாசாலைகளின் துரதிர்ஷ்டம், இவர் சொந்த ஊரையும், வீட்டையும் விட்டு வெளியே எங்கும் வேலைக்குப் போக விரும்பவில்லை.)

மேனன் ஒரு மேதை. அழகாகச் சித்திரங்கள் தீட்டுவார். மிருகங்களை வேட்டையாடுவது அவருக்குத் தண்ணீர்பட்ட பாடு. மலையாளத்தில் சிறந்த நகைச்சுவை எழுத்தாளரான அவர் வருடக் கடைசியில் கல்லூரியில் அரங்கேற்றும் நாடகத்தைப் பார்க்க ஊரே காத்திருக்கும்.

பரீட்சையில் நோட்ஸை அப்படியே காப்பி அடித்து ஒப்பித்தீர்களோ, மேனன் பூஜ்யம் கிஜ்யம் போட்டு உங்கள் மானத்தை வாங்கமாட்டார். விடைத் தாளின் 'மார்ஜினில்' அழகாக ஒரு கூண்டும், கிளியும் வரைந்து வைத்திருப்பார்! வயதானபின் நோய்வாய்ப்பட்டு அவர் ஆஸ்பத்திரியில் கிடந்த போதுகூட, நர்ஸ்களையும் இதர சிப்பந்திகளையும் சுவரில் தீட்டத் தவறவில்லை. 'துணிப் பஞ்சம்' என்ற தலைப்பின் கீழ் அவர் வரைந்த வேடிக்கைச் சித்திரத்தை நான் எங்ஙனம் மறப்பேன்? உடம்பிலே மருந்துக்குக்கூடத் துணி இல்லாத ஒருவன் தலையிலே 'யானை முண்டாசுடன்' காட்சி அளித்தால் யாருக்குத்தான் சிரிப்பு வராது?

மாணவர்களைத் தன் எதிர்பாராத செயல்களினால் திடுக்கிட வைப்பதில் மன்னன். அவருடைய அழகிய மகள் கார்த்தியாயினி மீது அத்தனை மாணவர்களுக்கும் 'ஒரு கண் உண்டு' (ஏன், இளைஞர்களான என்னைப் போன்ற ஆசிரியர்களுக்குக் கூடத்தான்!) மேனன் வேட்டையாட நிலம்பூர் காடுகளுக்குப் போயிருக்கிறார் என்று எண்ணி அவர் வீட்டுக்கு மெல்ல விஜயம் செய்தான் ஒரு 'ரோமியோ'. கார்த்தியாயினியிடம் ஓரிரு வார்த்தைகளாவது பேசலாமே! ஆனால் எதிர்பாராத விதமாகத் துப்பாக்கியைத் துடைத்துக் கொண்டிருந்த மேனன்தான் வீட்டில் எதிர்ப்பட்டார். ஏமாந்த இளம் சிங்கம் பாடத்தில் சந்தேகம் கேட்க வந்திருப்பதாக ஒரு சமயோசித அஸ்திரம் தொடுத்தான். ஆனால் மேனனுக்கா தெரியாது, பிள்ளையாண்டானின் அந்தரங்க ஆசை? உட்காரச் சொல்லிவிட்டு உள்ளே சென்றார். மகள் கார்த்தியாயினியுடன் வெளியே வந்தார்.

''என்டே பொன்னு மகளே! இந்தப் பிள்ளையாண்டானுக்கு முன் ஐந்து நிமிஷம் அசையாமல் நில். அவன் நன்றாகப் பார்த்துத் திருப்தி அடையட்டும்! பாவம், ஐந்து மைலுக்கப்பால் இருந்து உன் தரிசனத்துக்காகவே இந்தச் சுடும் வெய்யிலில் வந்திருக்கிறான்'' என்றாரே பார்க்கலாம்!

மேனனுக்கு அடுத்தபடியாகக் குறிப்பிட வேண்டியது பேராசிரியர் முகுந்தையரைத்தான். சதா தலைப்பாகையும், கோட்டுமாகக் காட்சி அளித்த இவருக்கு 'எக்ஸ்டிரா ஸென்ஸரி



கல்லூரிக் கதை-2

பெர்செப்ஷன்' இருப்பதாகப் பேசிக் கொள்வார்கள். ஒரு தடவை இவருக்குப் பதின்மூன்றும் நம்பர் கட்டடமொன்று தீப் பிடித்து எரியப் போவதாக 'மனத் தந்தி' வந்தது! தொடர்ந்து கட்டடம் இருக்கும் தெரு அவர் மனக் கண் முன் தோன்றியது. தெருவிலிருந்த ஆலமரம், கோயில், குளம் முதலியவற்றிலிருந்து தீப் பிடிக்கப் போகும் கட்டடம் கல்லூரியேதான் என்று சாதித்தார். கல்லூரியின் கதவு நெம்பர் பதின்மூன்றாக இருக்கப் போய் எல்லாரையும் அச்சம் பிடித்துக் கொண்டது. ஏற்கனவே ஐயர் சொன்ன ஜோசியம் ஓரிரு தடவை பலித்திருந்தது. எதற்கும் ஜாக்கிரதையாக இருப்பது நல்லது என்று தீர்மானித்தார் பிரின்ஸிபால் ராமையர். கல்லூரி காம்பவுண்டுக்குள் யாரும் ஒரு வார காலத்துக்கு சிகரெட் பிடிக்கக் கூடாது என்று உத்தரவு போட்டார். திடீரென்று தீப்பற்றிக் கொண்டுவிட்டால் எந்த ஜன்னல் வழியாகக் குதித்து வெளியேறுவது என்று கணக்குப் போடத் தொடங்கினோம் பயந்தாங்கொளிகளான நானும், முகம்மது கோயாவும்.

ஐயரின் ஜோசியம் பலிக்காமல் போக வில்லை. கட்டடம் தீப்பிடித்து எரிந்தது! ஆனால் நாங்கள் பணியாற்றின கைரளீயா கல்லூரியல்ல. ராவுண்ணி நாயரின் டீக் கடை. உடனே ஐயர் அந்தக் கடையின் கதவு நம்பரைக் கேட்டார். முப்பத்தொன்று என்று தெரிந்ததும் பின்வருமாறு மொழிந்தார். ''பார்த்தீர்களா, என் ஜோசியம் பலித்து விட்டது. என் மனத்தில் தோன்றிய நம்பர் பதின்மூன்று. அதைத் திருப்பிப் போடுங்கள். முப்பத்தொன்று. நான் நம்ம ஊர் குமாஸ்தாக்கள்தான் கவனக் குறைவினால் தவறுகள் செய்வார்கள் என்று எண்ணியிருந்தேன். ஆவி உலகிலும் இதே கதைதான் போலிருக்கு! எங்குமே அந்த நாளையத் திறமை இல்லை.''

பௌதீகப் பேராசிரியர் ஆராவமுதாச்சாரியை நினைக்கையில் ஒரு நிகழ்ச்சி



ஒரு பையன்: என் அப்பா எந்த சப்ஜெக்ட் கொடுத்தாலும் ஆறுமணி நேரங்கூடப் பேசுவாங்க தெரியுமா உனக்கு!
மற்றவன்: போடா போ. என் அம்மா சப்ஜெக்ட் இல்லாமேயே ஆறுமணி நேரம் பேசுவாங்க!
-சரசுவதி பஞ்சு

நினைவு வருகிறது. மாணவர்களால் 'குடை தாங்கிப் பெருமாள்' என்று அழைக்கப்பட்ட இவருக்கு அரை டஜன் பெண்கள் உண்டு. யாரைச் சந்தித்தாலும், ''பெண்கள் எல்லாம் குதிராட்டம் வளர்ந்து விட்டதுகள். சீக்கிரம் கல்யாணத்தை முடித்து விட வேண்டும். உங்களுக்குத் தெரிந்து யாராவது நல்ல பையன்கள் இருக்கிறார்களா?'' என்று விசாரிப்பார்.

வழக்கம்போல் ஆங்கில டியூட்டரான மூர்த்தியிடமும் இதே கேள்வியைக் கேட்டார். அவன் கொஞ்சம் யோசித்த பின் ''பக்கத்து மிஷனரி காலேஜில் ஒரு பையன் இருக்கான்; தங்கமானவன்'' என்றான்.

''பிள்ளையாண்டான் ஆஸ்திகன்தானே? அது ரொம்ப முக்கியம். சிகரெட் கிகரெட் பிடிக்கக் கூடாது. கெட்ட பழக்கங்கள் எதுவுமே இருக்கக் கூடாது.''

''நான் சொல்கிற பையன் படிப்பில் மகா கெட்டிக்காரன். சதா ஈசுவர விசாரம்தான். சிகரெட் குடிக்க மாட்டான். சிறந்த குணங்களென்று நாம் போற்றும் அத்தனையும் அவனுக்குண்டு.''

''அவன் விலாசத்தைத் தா. உனக்குக் கோடிப் புண்ணியம் உண்டு.''

''அங்கேதான் ஒரு சின்னச் சிக்கல். அவன் பெயர் எனக்குச் சரியாகத் தெரியாது. ஆனால் ரோல் நம்பர் 300. பி.ஏ. பொருளாதாரம்.''

ஆராவமுதாச்சாரி மறு நாள் அதிகாலையில் பக்கத்துக் கல்லூரிக்குப் போன் செய்தார். நெம்பர் 300ஐத் தான் அவசரமாகப் பார்க்க விரும்புவதாகத் தெரிவித்தார். கைரளீயா கல்லூரியிலிருந்து தன்னை ஏன் 'அர்ஜன்டா'க அழைக்கிறார்கள் என்று ஒன்றும் புரியாமல் குழம்பின கத்தோலிக்க பிரதர் பெஞ்சமின் (பாதிரி) அமுதாச்சாரியைத் தேடி வருவதற்குள் கல்லூரி காண்டீனுக்கு ஓடி விட்டான் மூர்த்தி. அங்கே தன் நண்பர்களிடம் அமுதாச்சாரியை 'ஏப்ரல் முட்டாளா'க்கின விஷயத்தை விவரித்துக் கொண்டிருந்தான்.

கதை அத்துடன் முடிந்துவிடவில்லை. வருஷக் கடைசியில் 'ஸ்மார்த்தப் பையனாக' இருந்தும் மூர்த்தி தலையில் தன் பெண் நப்பின்னையை வைத்துக் கட்டினார் பேராசிரியர். இடைக்காலத்தில் மூர்த்திக்கும் அந்தப் பெண்ணுக்குமிடையே தெய்விகக் காதல் தோன்றி வளர்ந்திருந்தது!

''அவன் என்னை ஏப்ரல் முட்டாளாக்கினதாக ஊர் முழுதும் சொல்லிண்டு திரிகிறான். நான் அல்லவோ அவனை முட்டாளாக்கினேன். சல்லிக் காசு வரதட்சிணை தராமல் அவனை மாப்பிள்ளையாக்கிக் கொண்ட என் சாமர்த்தியமல்லவோ சாமர்த்தியம்?'' என்று நீண்ட காலம் சொல்லி மகிழ்ந்து கொண்டிருந்தார் ஆராவமுதாச்சாரி.




ஜெயசித்ரா 'பெல்பாட்ஸ்' அணிந்து விழுந்தடித்துக்கொண்டு ஓடுகிறார்; அவரைத் தொடர்ந்து இரு முரடர்கள் ஓடுகின்றனர்; மோட்டார் சைக்கிளில் ஓடுகிறார், ஜெய சித்ரா; முரடர்கள் ஜீப்பில் அவரைத் துரத்து கின்றனர்; முரட்டுக் காளையை ஓட ஓட விரட்டுகிறார் விஜயகுமார்; பழைய காரில் நாகேஷும் அசோகனும் ஓடுகின்றனர்; இதற்கும் மேலே படம் ஓட என்ன வேண்டும் என்கிறீர்கள்? மேற்கூறிய ஓட்டங்களைத் தடுத்து நிறுத்த, மூன்று பாடல்கள் இருக்கின்றன!

இரட்டை வேடம் போடுவது நிஜவாழ்க்கையில் மிகப் பெரிய தவறு. ஆனால் சினிமாவில் அது பெரிய வாய்ப்பு.

பணக்காரப் பெண் சித்திரா மாமன் மகனிடமிருந்து தப்பியோட முயன்று தாயில்லாக் குழந்தைக்குத் தாயாக நடிக்கும் நிலையில் நிர்ப்பந்தமாக அகப்பட்டுக் கொள்கிறார். இறந்து போன சிவகாமியின் உருவமும், சித்ராவும் ஒரே மாதிரி இருப்பதால் திரைக் கதையில் பல குழப்பங்கள், சிக்கல்கள், 'சஸ்பென்ஸ்'கள்....! பழைய, மிகப் பழைய குப்பைகளைக் கிளறி அதிலிருந்து திரைக் கதையைத் தயாரித்திருக்கிறார்கள்! என்னத்தைச் சொல்ல! அநுபவம் மிக்க படத் தயாரிப்பாளர்களே இப்படிச் செய்தால்...?

ஜெயசித்ரா திறமை மிக்க நல்ல நடிகை. இரட்டை வேடத்தில் சிறப்பாக நடித்திருக்கிறார்.

ஹீரோ விஜயகுமார் வீரம் மிக்க விளையாட்டுக்களான ஏறு பிடித்தல், ரேக்ளா ரேஸ் முதலியவைகளில் சக்கைப் போடு போட்டு ஒரு சுண்டு விரலில்கூடக் காயம் படாமல், ஒரு கோடீசுவரியின் காதலுக்குப் பாத்திரமாகி விடுகிறார்!

ஏவி. எம். ராஜன் ஒரு முதியவராக வந்து பாந்தமாக நடிக்கிறார். இப்படத்தில், பேபி பபிதாதான் ஹீரோயின்! குழந்தைக்கு நிறைய 'சான்ஸ்'! நன்றாய் நடித்திருக்கிறாள்.

தண்டாயுதபாணி பிலிம்ஸாருக்கே உரிய பாணியில் ஏறு அடர்த்தல் காட்சி பிரமாதமாயிருக்கிறது. அந்தக் காளைக்கு நட்சத்திர அந்தஸ்து கொடுத்துவிட வேண்டியதுதான்!

இவ்வண்ணப் படத்தின் ஒளிப் பதிவு சிறப்பிடம் பெறுகிறது. வி. ராமமூர்த்தி பாராட்டும் விதத்தில் காமிராவை அதியற்புதமாக இயக்கியிருக்கிறார்.

நாகேஷும், அசோகனும் நகைச்சுவைப் பகுதியின் நாயகர்களாக விளங்குகின்றனர். ''நீங்க இதையும் செய்வீங்க. இதுக்கு மேலே எதையும் செய்வீங்க'' என்று அடிக்கடி பாட்டாகப் பாடி, அசோகன் சிரிக்க வைக்கிறார். இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது என்று கேட்காதீர்கள். எல்லாரும் கொல்லென்று சிரிக்கும்போது நீங்களும் முடிந்தால் சிரியுங்கள். இல்லாவிட்டால் போங்கள்!

தூயவன் வசனம் எழுதியிருக்கிறார். ஆர். தியாகராஜன் டைரக்ட் செய்திருக்கிறார்.

சாதாரணமாகத் தாயில்லாக் குழந்தை என்றாலே எல்லாரும் அநுதாபப்படுவார்கள். இது தேவரின் தாயில்லாக் குழந்தை! பிழைத்துக் கொள்ளும்!

—காந்தன்

போட்டிக் கதை - 9

# களங்கம்

ராஜ சியாமளா

"ஒரு துளி ஹைட்ரோக்ளோரிக் அமிலத்தை உங்கள் உடம்பின் ஏதாவது ஒரு பாகத்தின் மீது தெளித்துக் கொண்டு அதன் பயங்கரமான விளைவைப் பாருங்கள். ஆனால் அதே அமிலத்தை நம் வாழ்நாள் முழுதும் ஜாடராக்னியாய், உண்பவற்றை யெல்லாம் ஜீரணிக்கச் செய்வதாய், நம் உடலுக்குள் சுரப்பியாக இறைவன் வைத்திருக்கிறானே, அது ஏன் நம் உடலை ஒன்றும் செய்வதில்லை? இறைவனைவிடச் சிறந்த 'பையோகெமிஸ்ட்' யார்? வேறு யாரால் இவ்வாறு செய்ய முடியும்?"

தலைமையுரையில் இத்தகைய சிந்தனைக் கீற்றுக்களை இழைய விடுவது டாக்டர் சபேசனின் வழக்கம். அவர் பிரபல 'பயோ கெமிஸ்ட்' நிபுணர் மட்டும் அல்ல. விஞ்ஞானத்தின் எல்லாப் பிரிவுகளிலும் கரை கண்டவர். அத்துடன் விஞ்ஞானத்தின் எல்லைக் கோடுகள் எல்லாமே மெய்ஞானத்தின் சுற்றுச் சுவர்களுக்குள்தான் என்ற கொள்கையையும் உடையவர். இந்த மேதையின் வரலாற்றை, "டாக்டர் ஜான்ஸனு"க்கு ஒரு "பாஸ்வெல்" போல், "ஷெர்லக் ஹோம்சு"க்கு ஒரு "டாக்டர் வாட்ஸனை"ப்போல் கூடவே இருந்து அதை வருங்காலத் தலைமுறையினருக்குத் தரவேண்டும் என்று கூறி ஒரு மேனாட்டு ஆராய்ச்சிக் கழகம் என்னை அமர்த்தியுள்ளது. டாக்டர் சபேசனும் அதற்கு ஒப்புக் கொண்டு, மதுரையில் தம் வீட்டிலேயே மாடியறையில் தங்க வழி செய்துள்ளார்.

மதுரையில் நடந்த அந்த மாநாட்டுப் பிரதிநிதிகளைத் தனியே சந்தித்து, என்னுடைய வரலாற்றுநாயகனைப் பற்றி அவர்கள் அபிப்பிராயங்களைச் சேகரித்துக் கொண்டு டாக்டரின் வீடு திரும்பும்போது நேரமாகி விட்டது. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தவரை எழுப்புகிறோமோ என்ற ஐயத்துடன் 'பஸ்ஸரை' மெல்ல அழுத்தினேன். கதவு திறக்கச் சற்றுத் தாமதமாயிற்று. கதவைத் திறந்தவரின் முகத்தில் ஓர் அதீதமான ஒளி, நான் இத்தனை நாட்களாகக் கண்டிராத ஒளி தெரிந்தது. ஒருவேளை மாநாட்டுப் பிரதிநிதிகள் சொன்ன புகழ் மாலையை இப்போதுதானே கேட்டு வந்திருக்கிறோம்! அந்த "அரோமா" பிரபையாக இருக்கும் என்று சமாதானப்படுத்திக் கொண்டு உள்ளே சென்றேன்.

நான் மாடிப்படி ஏறும்பொழுது டாக்டரின் தனி அறையின் சாளரம் சற்றே திறந்திருந்தது. எதேச்சையாக அதன் வழியே நோக்கினேன். ஆயிரம் பேரிடிகள் என் மண்டையைத் தாக்குவது போலத் தோன்றியது. அந்தச் செண்பக மலர்கள் அங்கு எப்படி வந்தன? அதுவும் அவர் படுக்கையறையில், சிதறலாய்!

மாநாட்டுக்குமுன், பிரதிநிதிகளிடம் அவர் அளவளாவிக் கொண்டிருந்தபோது செண்பக மலர் சூடிக் கொண்டிருந்த ஒரு பெண்ணைப் பார்த்து, 'வெரி நைஸ்' என்று புகழ்ந்து விட்டு டாக்டர் என்னிடம் சொன்னது நினைவுக்கு வந்தது.

"ராஜசேகரன்! எனக்குச் செண்பகப் பூ என்றால் ரொம்பப் பிடிக்கும். உனக்குத் தெரியுமோ, செண்பகப் பூ என்றால் முருகனுக்குப் பிடிக்கும் என்பதால் முருகனுக்கே 'செண்பகப் பாண்டியன்' என்று ஒரு பெயரும் உண்டு."

அந்தச் செண்பகப் பூக்கள் அல்லவா அவர் படுக்கையறையில் சிதறியிருந்தன!

பெங்களூர் அசோகா ஹோட்டல் கான்ஃபரன்ஸ் ஹாலே மோனத் தவத்தில் ஆழ்ந்து கிடந்தது. காரணம் விஞ்ஞானி



களின் கருத்தரங்கில் டாக்டர் சபேசன் கிளப்பிய ஒரு பிரச்னைதான்.

"இறைவனின் பேராற்றலை யாரும் அளவிட முடியாது. நாம் சாப்பிடும் உணவை உமிழ்நீர் மூலமாகச் சர்க்கரையாக மாற்றி, தொண்டைக் குழாய், உணவுக் குழாய் மூலமாக வயிற்றில் செலுத்தி அதை இரத்தமாக மாற்ற நான்கு மணி ஆகிறது. ஆனால் அதையே செயற்கை முறையில் பத்து விஞ்ஞானிகள் நுண்ணிய இயந்திரங்களின் உதவியுடன் செய்ய நாற்பத்தெட்டு மணி நேரம் பிடித்தது. ஆனால் அந்தச் செயற்கை ரத்தத்தில் ஹெமோக்ளோபின் இல்லை.

"அப்படிப் பார்க்கையில் எத்தகைய நுண்ணிய தொழிற்சாலைகளை இறைவன் நம் உடலில், அதுவும் கோடிக்கணக்கானவர்களின் உடல்களில் அமைத்திருக்கிறான்.

"'மெய் ஞானியாகி மிளிர்கின்ற அந்த மெய்ச்சுடர்' என்று மணிவாசகப் பெருமான் கூறும் அவரின் மெய்ஞானத்தின் முன் எல்லாம் தெரிந்ததாகப் பறைசாற்றிக் கொள்ளும் விஞ்ஞானிகள் நாம் எம்மாத்திரம்?"

மனிதனின் பரிணாம வளர்ச்சியைக் கூறி, அவன் மெய்ச்சுடரிலிருந்து தெறித்த ஒரு சின்னஞ் சிறு பொறி தான் என்று கூறினால், அந்த உண்மையைக் கேட்டு ஏன் அந்த விஞ்ஞானிகள் உலகம் மெய்சிலிர்க்காது? ஆனால் மகாநாட்டுக்கு விசேஷமாக அமர்த்தப்பட்டிருந்த ஹோட்டலில் தங்காது டாக்டர் சபேசன் அவருக்கும் எனக்கும் வேறு ஹோட்டலில் ஏற்பாடு செய்திருந்தார்.

வழக்கம்போல் மாநாட்டுப் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு நாங்கள் தங்கியிருக்கும் ஹோட்டலை நோக்கி



## மனித தெய்வமா?

## யார் சொன்னது!



வள்ளலார் - காந்தி விழாவை வழக்கம் போல் சிறப்பாக நடத்தினர் பொள்ளாச்சி திரு நா. மகாலிங்கம். பிறப்பால் இஸ்லாமியரானாலும் வள்ளலார்-காந்தியின் கொள்கையை ஏற்று, புலால் மறுத்து விட்ட நீதிபதி இஸ்மாயில் கூறிய ஒரு கருத்து:

வள்ளலாரும் காந்தியும் அண்மையில் நம் காலத்தில் நம்மிடையே வாழ்ந்தவர்கள். ஆனால் நாம் வெகு சுலபமாக அவர்களைத் தெய்வங்களாக்கி விடுவோம். தெய்வங்களாக்கி, 'அவர்கள் அவதார புருஷர்கள், தெய்வங்கள்; அதனால் அவர்களால் அவ்வளவு தூய்மையாக வாழ முடிந்தது; நாம் சாமானிய மனிதர்கள்; அந்த நிலையை நாம் எட்ட முடியுமா?' என்று நம்மை நாமே சமாதானப்படுத்திக் கொண்டு மெத்தனமாக இருந்துவிடுவோம்.

இந்த மனப்பான்மை நம்மிடமிருந்து மாற வேண்டும். காந்தியும் வள்ளலாரும் தெய்வங்களல்லர்; நம்மைப் போன்ற மனிதர்களே என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டு அவர்களைப் போன்ற ஒழுக்கமான வாழ்க்கை நடத்த முயல்வோம். அவர்களை மனிதர்களாக எண்ணினால்தான் அவர்களைப் போன்று நாமும் வாழ முடியும் என்ற உறுதி ஏற்படும்.

xxxxxxxxxx xxxxxxxx xxx

விரைந்தேன். டாக்டரின் அறையைத் தாண்டித்தான் என் அறைக்குப் போக வேண்டும். நான் வந்து விட்டேன் என்பதையும் என் இரவு வணக்கத்தையும் சொல்ல அவர் அறையின் கதவை மெல்லத் தட்டினேன். அறையின் வெளியே சில சம்பங்கிப் பூக்கள் கிடந்தன. பெங்களூரிலா சம்பங்கிப் பூக்களுக்குப் பஞ்சம் என்று நினைத்துக் கொண்டேன்.

கதவைத் திறந்த டாக்டரிடம் முன்பு நான் கண்ட அதே ஒளி. உள்ளே நோட்டம் விட்டேன். படுக்கையில் அதே சம்பங்கி மலர்கள்?

▫ ▫ ▫

புது தில்லியில் ஓர் அனைத்துலக விஞ்ஞானிகள் மகாநாடு. 'விஞ்ஞான பவனி'ல் ஏற்பாடு செய்திருந்தார்கள். பெங்களூரில் டாக்டர் பேசிய பேச்சைத் திட்டிச் சென்னையிலிருந்து ஓர் அரசியல்வாதி எழுதியிருந்தார்.

''மேனாட்டு விஞ்ஞானிகள் அம்புலியைத் தொட்டுவிட்டு வரும்போது, நம் ஊர் விஞ்ஞானி திருவாசகம் பேசிக் கொண்டிருந்தால், எத்தனை தலைமுறை எடுத்தாலும் நம் நாட்டுக் குழந்தைகள் ''நிலா, நிலா ஓடி வா, நில்லாமல் ஓடி வா!'' என்றுதான் பாட வேண்டியிருக்கும்'' என்று.

''பரவாயில்லை. நம் ஊர் அரசியல்வாதிகள் தான் தாங்கள் இறைவனைவிட ஆற்றல் மிக்கவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்கள் ஆயிற்றே!'' என்று சமாதானமாகச் சொன்னேன். இருந்தாலும் டாக்டர் சபேசன் அன்றைய விழாவில் பேச்சின்போது அதுபற்றி ஏதேனும் சொல்லுவார் என்று நினைத்தேன். ஏமாந்தேன். ஆனால் ஆங்கில நாட்டு விஞ்ஞானி ஒருவர் சபேசனின் ஆலோசனையைக் கேட்டபோது எல்லோருக்குமே ஆச்சரியமாகவும் பெருமையாகவும் இருந்தது.

''இல்வாழ்வுத் துறையில் ஈடுபடுவதற்கும், மனிதனின் முகத்தில் ரோமங்கள் வளர்வதற்கும் உள்ள சம்பந்தத்தை ஆராய முற்பட்டேன். குடும்பத்தினருடன் தங்கி யிருக்கும் நாட்களிலும், குடும்பத்தைவிட்டு வெளியூரில் தனியே இருக்கும் நாட்களிலும் ரோமங்களின் வளர்ச்சி முகத்தில் எப்படிப் பாதிக்கப்படுகிறது என்பதற்காகச் சில 'டிராவலிங் சேல்ஸ்மென்'களை ஆராய்ந்தேன். படையினரிடமும் ஆராய்ச்சி செய்தேன். இம்மாதிரி ஆராய்ந்து பார்க்கையில் என்னுடைய கூற்றுக்கும் நடைமுறைக்கும் காரண காரிய சம்பந்தம் இருக்குமோ என்ற சம்சயம் உண்டாகிறது. இது குறித்து டாக்டர் சபேசனின் ஆலோசனையையும் கேட்க விரும்புகிறேன்.''

அந்த 'விஞ்ஞான பவனே' டாக்டர் சபேசனின் பக்கமாகத் திரும்பியது.

''இல்வாழ்வில் ஈடுபட்டிருப்பவர்கள், ஈடுபடாதிருப்பவர்கள் என்பதைவிட, மேலான ஒரு நிலையை நான் யோசித்துப் பார்த்தது உண்டு. தெய்வங்களின் உருவங்களை நாம் சித்திரமாகப் பார்க்கிறோம். அது உண்மையா, பொய்யா என்ற வாதத்தில் நான் இறங்க விரும்பவில்லை. ஆனால் வரலாற்றுக் காலத்தில் வாழ்ந்திருந்த மகான் புத்தர், சங்கரர், இராமானுஜர், விவேகானந்தர் இவர்கள் முகத் தோற்றத்தைப் பார்க்கும் போதெல்லாம் இவர்கள் எல்லோருக்குமே,'வழித்துவிட்டாற் போல் 'முகம் பிரகாசமா யிருக்கிறதே! ரோமத்தின் சாயலையே முகத்தில் காணோமே' என்று சந்தேகத்துடன் பார்த்ததுண்டு. அதை ஜடா மகுடதாரிகளாக, மனைவி மக்களுடன் வாழ்ந்த புராதன ரிஷிகளின் முகத் தோற்றத்துடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, இவர்களுடைய தோற்றப் பொலிவுக்குக் காரணம் பிரம்மச்சரிய விரதமேதான் என்ற முடிவுக்கு வரத் தோன்றுகிறது. அந்த வகையில் ஆங்கில நாட்டு விஞ்ஞானிக்கு என் பாராட்டுதல்கள் உரியன'' என்று கூறி முடித்தார்.

▫ ▫ ▫

எனக்கு எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது.

இன்றைக்கு இவரைக் கையும் களவுமாகப் பிடித்துவிட வேண்டும்' என்று எண்ணினேன். 'மாநாட்டுப் பிரதிநிதிகளின் அபிப்பிராயத்தைக் கேட்டுக் கொண்டு வருவதற்குள் இவர் தப்பி விடுகிறார். இன்று இவர் உண்மையில் எப்படி இருக்கிறார் என்பதைப் பார்த்துவிட வேண்டும்' என்று நினைத்துக் கொண்டேன். என் நண்பர் ஒருவரின் வீட்டில் சாப்பிட ஒப்புக் கொண்டுள்ளதாகக் கூறி, அவரை முன்னே போக விட்டேன்.

சற்று நேரம் கழித்து டாக்டருக்காக ஒதுக்கியிருந்த ஹோட்டல் அறைக்குச் சென்றேன். நாளைய கருத்தரங்குக்குத் தேவையான சில

குறிப்புக்கள் என்னிடம் தங்கி விட்டதாகவும் அதை அவரிடம் ஒப்படைக்க வந்திருப்பதாக வும் ஒரு சமாதானத்தை மனத்துக்குள்ளேயே நூறு முறை சொல்லிப் பார்த்துக் கொண் டேன். அறையின் வாசலிலோ வெளியிலோ 'பூக்கள்' ஏதும் இல்லை. என் மனத்துக்குள் ளேயே, ''அப்பாடா, அப்படி ஒன்றும் இல்லை'' என்ற ஆறுதல். அதே சமயம் தவருகக் கணக்குப் போட்டுவிட்டோமோ என்ற குற்ற உணர்ச்சி வேறு.

அறை திறக்கப்பட்டது. திறந்தவள் ஒரு பூங்கொடி. அறையின் உள்ளே டாக்டர் அமர்ந்திருந்தார். அவர் முகத்தில் அதே ஒளி, அதே 'அரோமா'. அவளிடம் ஒரு தயக்கம்.

''என்ன வேண்டும்? மோடாவைப் போட் டுக் கொண்டு உட்கார்'' என்று என்னிடம் கரிசனமாகக் கூறினர். மதனு என்று அவளை எனக்கு அறிமுகப்படுத்தினர்.

''இவர்தான் மிஸ்டர் ராஜசேகரன். இவர் விஞ்ஞானத் துறையில் எவ்வளவோ சாதிக்க லாம். இருந்தாலும் என்னைக் கட்டிக்கொண்டு அழுகிருர். என் வாழ்க்கை வரலாற்றை எழுதுவதாக ஆரம்பித்து என் அந்தரங்கக் காரியதரிசியாகவே ஆகி விட்டார். இவ ரைப் பற்றி நான் ஓர் ஏற்பாடு செய்து வைத் திருக்கிறேன். இட் இஸ் ஏ மிஸ்டரி'' என்று சொல்லிவிட்டு, ''விருந்துக்குப் போகவில் லையா?'' என்று கேட்டார் என்னை.

அறையின் வாசலில் நிழலாடியது. மதனு வெளியே சென்றுள்.

''போக வேண்டும். நாளைய கருத்தரங்குக் குத் தேவையான குறிப்புக்கள் என்னிடம் தங்கி விட்டன. அதைக் கொடுத்துவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன். வந்த இடத்தில் இந்த மாதிரி.....''

''ஏன் இழுக்கிருய் ராஜசேகரன். நீயும் ஒரு விஞ்ஞானி என்பதை மறந்துவிடாதே. சந்தேகத்தை அப்படியே சம்சயமாக வைத் திருப்பவன் சாமானியன். அதன் காரண காரி யங்களை விண்டு ஆராய்பவன் விஞ்ஞானி.''

''அப்படியானுல் மதுரையில் தங்கள் வீட்டில் படுக்கையறையில் பார்த்த சண்பக மலர்கள், பெங்களூரில் ஹோட்டல் அறையில் பார்த்த சம்பங்கி மலர்கள், இப்போது இங்கே—''

''எல்லாமே பொருள் ஒன்றுதான்...... மாமேதை ஹக்ஸ்லி சொன்னுர். 'மேதை என்பவன் கழுகைப்போல் உயர, உயர வட்டமிடும் பருந்தாக இருக்கக் கூடாது. அவ்வப்போது பூமியில் இறங்கி அதன் தன்மையை ஆராயும் 'ஆஸ்ட்ரிச்' பறவை யாக இருக்க வேண்டும்' என்று. அது மாதிரி தான் ஞானியும். அவனுக்கும் அவன் வாழும் பூமிக்கும் 'டச்' இருந்து கொண்டே யிருக்க வேண்டும்.

''மின்னலில் மின்சாரம் என்றைக்கும்தான் இருக்கிறது. அது 'மார்க்கோனி'யின் வீட்டுச் சாளரத்தில் உள்ள கம்பியின் மூலமாக, 'எர்த்தாகி'க் கீழே கிடந்த இறந்த தவளையை உலுக்கிவிட்ட போதுதான் மின்சாரத்தின் உண்மை உலகுக்குத் தெரிந்தது. மின்சாரத் துக்கு 'எர்த்' எவ்வளவு தேவையோ, அவ் வளவு விஞ்ஞானிக்கும் அவன் வாழும் அன்றாட உலகுடன் தொடர்பு இருக்க வேண்டும்.''

''ஒப்புக் கொள்கிறேன். இருந்தாலும் உங்கள் வயதுக்கும், பெயருக்கும், உலகம் ஒப்புக் கொள்ளுமா ?''

''ஒப்புக் கொள்ளாதுதான். அதனுல் தானே நான் மறுமணமே செய்து கொள்ள வில்லை ? என் மனைவி இறக்கும் போது என் மகள் மதனுவுக்கு ஆறு வயது. நான் மறு மணம் செய்து கொண்டால் அவள் வாழ்வு என் வாழ்வு இரண்டுமே நரகமாகிவிடும் என்றுதான் மறுமணம் செய்து கொள்ள வில்லை. என் மகள் சென்னையில் மருத்துவத் துறையில் டாக்டர் பட்டம் பெற்று விட்டாள். இனி அவளுடனேயே தங்கி விடுவதாக உத் தேசம். அவளுக்குச் செண்பகம், சம்பங்கி என்ருல் உயிர்.''

''அப்படியானுல் இந்த ராஜசேகரனுக்கு இனி வேலை இல்லை என்று சொல்லுங்கள்!'' எனக்கு என் கவலை. வேலைக் கவலை !

''அதென்ன, அப்படிச் சொல்லிவிட்டாய்? நான் என் மகளுடன் தங்கப் போகிறேன். நீ என்னுடன் தங்கப் போகிருய். அப்போது ஊர் உலகம் ஒன்று சொல்லக் கூடாது, பார்! அதற்கு ஓர் உறவு வேண்டுமே ! ஏ சிம்பிள் ஈகுவேஷன்!''

நான் வானத்தை நோக்கினேன். அம்புலி யில் உள்ள கறுப்பு அதன் அழகை மெருகு ஊட்டுவதாகவே தெரிந்தது.



திண்டிவனம் வட்டம், புளிச்சம்பள்ளம் என் னும் ஊரில் ஆனந்தவல்லி சமேதராக ஸ்ரீசுந்தர ஜோதீசுவரர் குடிகொண்டுள்ளார். அவரது பழம் பெரும் ஆலயம் பழுதுபட்டிருக்கிறது. அதைப் புதுப்பித்து நவக்கிரக சந்நிதியும் அமைக்க ஏறக் குறைய ஐம்பதினுயிரம் ரூபாய் செலவாகலாம் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தப் புனிதத் திருப் பணியில் பங்கு கொள்ள விரும்புபவர்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி: ஸ்ரீ டி. அ. சுப்பிர மணிய சிவாச்சாரியார், செயலாளர் - பொருளாளர், ஸ்ரீஆனந்தவல்லி சுந்தரஜோதீசுவர ஆலயத் திருப் பணிக் குழு, புளிச்சம்பள்ளம், திண்டிவனம் வட்டம். தென் ஆர்க்காடு மாவட்டம்.

**சர்வர்:** சார், இட்லிக்குச் சாம்பார் வேணுமா, சட்னி வேணுமா ?

**வந்தவர்:** இரண்டுக்கும் என்ன வித்தியாசம் ?

**சர்வர்:** மூன்று நாள் !

— சம்பத்குமாரி



# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி



## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்-கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லா-வற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களி லிருந்து கரை திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகிய வற்றுக்கான நுட்பநவீனமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான்-முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது ஸெல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ள-தோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது; இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

## குவாலியர் ரேயான்—

தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

# இந்த ஸ்டீல் கப்போர்ட்கள் போலவே தயாரித்தளிக்க மற்றவர்கள் மிகவும் முயன்று கொண்டிருக்கிறார்கள்.

பல ஆண்டுகளாக கோத்ரெஜ் மிகச் சிறந்த ஸ்டீல் கப்போர்ட்களைத் தயாரித்தளித்து வருகிறது. உதாரணமாக, ஸ்டாண்டர்ட் ஸ்டோர்வெல் 6 வகைகள், ஸ்டோர்வெல் மைனர் 2 வகைகள், மேலும் சமீபத்தில் வெளிவந்துள்ள காம்பேக்ட் ஸ்டோர்வெல் வகைகள். அத்துடன் இவை அனைத்திலும் அதிக இடவசதி கொண்ட, புதுமைச் சிறப்புகள் அமைந்த ஸ்டோர்வெல் வார்ட்ரோப்.

காலங்காலமாக, கோத்ரெஜ் தரம், மற்றும் டிஸைன்களையே பின்பற்றி மற்றவர்களும் தயாரிக்க முயன்று வருகின்றனர். ஆயினும் இந்தத் துறையில் நாங்களே முன்னணியில் நிற்கிறோம். காரணம் எங்களின் கடும் முயற்சிகள். எங்களின் இம் முயற்சிகளினால் உங்களுக்கு ஈடிணையற்ற ஸ்டோர்வெல் கிடைக்க வழி ஏற்படுகிறது.

உண்மையில் அன்று முதல் இன்று வரை உள்ள நிலை இது.

நாங்கள் ஸ்டோர்வெல்லை உட்புற உறுதி மிக்கதாய்த் தயாரிக்கத் தொடங்கினோம். அதன் பளபளப்பான மேற்புறப் பெயிண்ட் பூச்சுக்கு அடியில் உள்ள, துருப்பிடிக்காத பகுதி ஆண்டுக் கணக்கில் உழைக்கிறது.

நாங்கள் நவீன பாணியில், மும்முனைத் தாழ் (போல்ட்டிங்) அமைப்பு மூலம் கூடுதல் பாதுகாப்பு திறன் கொடுத்துத் தகர்க்க முடியாத கோத்ரெஜ் பூட்டை இணைத்தோம்.

இன்னும் பல புதுமைகளை நாங்கள் புகுத்தினோம் : வெளிக்குத் தெரியாத, விசேஷ 'சானல் க்ரிப்' லாக்கர்கள், தகர்க்க முடியாத கதவுக் கீல்கள் மற்றும் குழைவளைவான விளிம்புகள்.

ஒவ்வொரு முறை புதுமை ஒன்றை நாங்கள் புகுத்தும்போதும், அதனை மற்றவர்களும் பின்பற்றத் தொடங்கினர்.

ஆயினும் மற்றவர்கள் எளிதாகப் பின்பற்ற முடியாத சிறப்புகளும் இருக்கின்றன.

தரச் சோதனை—தயாரிப்பின் ஒவ்வொரு கட்டத்திலும் நூற்றுக்கு நூறு பரிசோதனை.

நவீனப்படுத்தும் முயற்சிகளை மேற்கொள்ள கோத்ரெஜிற்கு இருக்கும் அபரிமிதமான வசதிகள்.

மேலும் அபிவிருத்தி அம்சங்களுக்குப் பின்பலமாக உள்ள தனிப்பட்ட ஆராய்ச்சி நிலையம்.

இன்னும் சொல்லப் போனால், தரச் சிறப்பு என்று வருகிறபோது எங்களுக்கு நாங்களேதான் மிகப் பெரும் போட்டியாளர்கள்!



**ஸ்டோர்வெல் மாடல் 1**
—வெளிநாட்டுக் கண்ணாடி அமைந்த ஆளுயரக் கண்ணாடி— முழு உருவம் பார்க்கும் வசதி.

## இலவசம்!

**கோத்ரெஜ் ஸ்டோர்வெல் விவர வெளியீட்டுக்கு**
இம் முகவரிக்கு எழுதவும்:
**கோத்ரெஜ் அண்ட் பாய்ஸ் மா. கம். பிரை. லிட்.**
4 ஏ, ஹோம் ஸ்ட்ரீட், போர்ட்,
பம்பாய்-400 001

**உன்னதமான தயாரிப்புகளுக்கு ஒப்பற்றது — கோத்ரெஜ்**

'டி.ஜி.எஸ். அண்ட் டி.' ரேட் காண்ட்ராக்டில் கிடைக்கிறது.

U/GS/16/6A TAM



# இனிமையான ஒரு மாலைப் பொழுதும் இருட்டான ஒரு நிகழ்ச்சியும்!



விமலா ரமணி

அவனுக்குச் சுவாரசியம் குறைந்துவிட்டது! பொழுது போகாமல் ஒரு கடை வாசலில் நின்று கொண்டு சிகரெட் புகைத்துக் கொண்டிருந்த அவனுக்கு எதிர்காலம் இருட்டாக இருந்தது. அவன் நம்பி இருந்த வேலை போய் விட்டது. அவன் நம்பியிருந்த 'கேர்ல் பிரண்ட்ஸ்' எல்லாம் அவன் நிலையைப் புரிந்து கொண்டு மெல்ல மெல்ல விலகிவிட்டார்கள்.

அவன் அழகும், அவன் மிக நாசூக்காக நடந்து கொள்கிற விதங்களும் இன்னும் எத்தனை நாட்களுக்குத் தாக்குப் பிடிக்க முடியும்? அவனைப் புரிந்து கொண்ட பலர் விலகி விட்டார்கள். அவனைப் புரிந்து கொள்ளாத பலர் இன்னும் இவனுக்குப் புரியாதவர்களாக இருந்தார்கள். பாங்கில் இருக்கும் கொஞ்சப் பணம்.... இன்னும் எத்தனை நாட்களுக்கு? இந்த மாதிரி 'டபுள்நிட்' பேண்டுகளை 'டிரை வாஷு'க்குத் தரவே அவனுக்கு நூறு ரூபாய்க்கு மேல் செலவாகுமே?

திடீரென்று எதிர்க் கடையில் புடவைகளை அலசிக் கொண்டிருந்த ஒருத்தியின் பின்புறம் தெரிந்தது. 'கச்சிதம்' — மனத்துக்குள் சொல்லிக் கொண்டான். அவள் மெல்ல நடந்தபடி அந்தக் கடையின் ஒவ்வொரு 'ரேக்காக'ப் பார்த்தபடி நகர்ந்து கொண்டிருந்தாள்..... 'ஒயில் நடை' — என்று 'சர்டிபிகேட்' தந்தான் அவன் இங்கிருந்தபடியே.... புடவையை வாங்கிக் கொண்டு கவுண்டரில் அவள் பில்லை வாங்கியபடி ஹேண்ட் பேக்கைத் திறந்து பணம் எடுத்த விதம் அழகாக இருந்தது. கவுண்டரில் அவள் தன் கரங்களை நீட்டிப் பணத்தைத் தந்தபோது அவளின் 'ப்ரொஃபைலில்', கூர்மையான நாசி, அங்க வளைவுகள் அனைத்துமே எடுப்பாகத் தெரிந்தன. வாளிப்பான கரங்கள் வெண் சங்கு போல் அழகாக நீண்டு மடங்கின. அவள் புடவைப் பார்சலுடன் கடையிலிருந்து இறங்கினாள். தெரு விளக்கின் ஒளி அவள் முகத்தில் பட்டது.

அவன் திடுக்கிட்டான்!

அவள்.... அவள்....?

நெற்றி வெறுமையாக இருந்தது. கழுத்து மூளியாக இருந்தது. அவனுக்குச் சுவாரசியம் குறைந்துவிட்டது! ஆனால்... அவள் ஏறிச் சென்ற அந்தப் பெரிய காரைப் பார்த்ததும்? சுவாரசியம் 'கிறுகிறு' என்று ஏறியது..... அவனையும் அறியாமலே.! விதவையா? பரவாயில்லை! அவளுக்கு நான் தேவை! எனக்கு அவள் பணம் தேவை.... கார் நம்பரை ஒரு முறை மனத்துக்குள் சொல்லிப் பார்த்துக் கொண்டான்....

◘ ◘ ◘

அந்தப் பிரும்மாண்டமான வீட்டைப் பார்த்தபடி ஒரு கணம் திகைத்து நின்றான்.

முன்னேற்பாடாகப் புடவைக் கடையின் சொந்தக்காரனை தன் நண்பன் ஒருவனிடம் சொல்லிச் சில புடவைகளை எடுத்து ஒரு பெட்டியில் போட்டுக் கொண்டு 'சேல்ஸ் மேன்' மாதிரி வேஷம் போட்டுக் கொண்டிருந்தான். 'ட்ரிம்மாக' இருந்த தன் மீதே தனக்கு ஒரு காதல் பிறந்ததை எண்ணித் தனக்குள் சிரித்துக் கொண்டான். பெண்களிடம் எப்படிப் பழகுவது, எப்படி நாசூக்காக நடந்து கொள்வது, எப்படி அவர்களைக் கவருவது — என்பதெல்லாம் அவனுக்குக் கைவந்த கலை! 'காலிங் பெல்லின்' இனிமையான சங்கீத ரீங்காரம்! தன் எதிர்காலம் 'டுயட்' பாடுவதைப் போல் இருந்தது. கதவு திறந்தது...

''யார்?'' — அவள்தான். இனிமையான குரல். வெள்ளைப் புடவையில், அவள் ஒரு தேவதை போல் தோன்றினாள்.

''யார் நீங்கள்? என்ன வேண்டும்?''

முன்னேற்பாடாகத் தான் அடித்து வைத்திருந்த 'விசிட்டிங் கார்டை'த் தந்தான். பத்து ரூபாய் தண்டம்! பரவாயில்லை....ஒரு பெண்ணின் அன்பைப் பெற இது ஒன்றும் அத்தனை பெரிதல்ல!

''புடவைகளா? நோ... ஸாரி... போன வாரம்தான் இரண்டு மூன்று புடவைகள் எடுத்துவிட்டேன். இப்போது வேண்டாம்.''

''அப்படிச் சொல்லக் கூடாது. எங்கள் கடையின் புடவைகளைப் பாருங்கள்.... தேவையில்லை என்று நீங்கள் நினைத்தால் கூடப் புடவைகளைப் பார்த்தால் அவைகளைக் கட்டிக் கொள்ள வேண்டும் என்று தோன்றாமல் போகாது..... ப்ளீஸ்....'' — உள்ளே போக இருந்தவள் ஒரு கணம் தயங்கினாள்....

அவன் புன்சிரிப்பும், அளவான பேச்சும், வினயமாக மற்றொரு 'ப்ளீஸு'ம் அவளைத் திரும்ப வைத்தன.

''ஓ. கே.... வேண்டாம் என்று சொன்னால் கோபித்துக் கொள்ளக் கூடாது....''

அவன் மகிழ்ச்சியுடன் பெட்டியைத் திறந்தபடி சொன்னான். ''நிச்சயமாக மாட்டேன். ஐ யேம் ஏ சேல்ஸ்மேன்.... நான் தோல்விகளைப் பற்றிக் கவலைப் படமாட்டேன்.....''

அழகான புடவைகள்! கண்களில் எந்தவித பாவமும் இன்றி அவள் அவைகளைப் பார்த்தாள்....

''நோ... தேங்க்ஸ்....இதில் எதுவுமே எனக்குப் பிடிக்கவில்லை!''

அவன் கண்களில் ஏமாற்றம் படர்ந்தது.... ''எதுவுமே பிடிக்கவில்லையா?''

''அப்கோர்ஸ் பிடித்திருக்கிறது.... ஆனால் இந்த மாதிரி புடவைகளை நான் கட்டுவதில்லை.... சிம்பிளாக வெள்ளைக்கலரில் 'ப்ரண்டட் சாரீஸ்'தான் நான் கட்டுவது.''

அவன் புரிந்து கொண்டான். அவனுடைய நடிப்புக்கு ஒரு நிலைக்களத்தை அவள் உருவாக்கித் தந்துவிட்டாள்.... இனி அவன் புகுந்துவிளையாடிவிட மாட்டானா? ரொம்பப் பரிதாபமாக, அப்பாவித்தனமாகக் கேட்டான்...''ஏன் அப்படி? வெள்ளைக் கலரில்தான் புடவை கட்டுவது என்று ஏதாவது விரதமா?''

அவள் ஒரு நிமிடம் பேசவில்லை.

அவன் சற்றுத் தயங்கினான்.

''நான் கேட்டது தப்பிதமாக இருந்தால் மன்னியுங்கள்....''

''நோ... தப்பில்லை.... அது விரதமா? இல்லை தவமா? எனக்கே தெரியவில்லை.''

''ஏன்?''

அவள் கண்களில் கண்ணீர் நிரம்பியது....

''என் கணவர் இறந்ததிலிருந்து இப்படித்தான் இருக்கிறேன்.''

அவன் ஒரு நிமிடம் திகைத்தவன் போல் செயலற்று இருந்தான்...

''உங்கள் கணவர்.... இறந்த...நீங்கள்...நீங்கள்.. ஓ! ஐயேம் ஸாரி..... நான், நீங்கள் குளித்துவிட்டு அப்படியே அவசரமாக நெற்றிக்கு இட்டுக் கொள்ளாமல்... ஸாரி... நான்..... தப்பு.... இல்லை வருகிறேன்.....''

ரொம்ப நேரம் கழித்துத்தான் வாசல் கதவு சாத்தப்படுவதை அவன் கவனித்தான். ''என்னடா.... யாருக்கோ புடவை காட்ட வேண்டும் என்று ஐந்தாறு புடவைகள் வாங்கிக் கொண்டு போனாய்..... அப்படியே திருப்பித் தந்துவிட்டாயே! ஒன்றும் பிடிக்கவில்லையா?'' — என்றான் நண்பன்.

'பிடித்திருக்கிறது... இப்போதுதான் சூடு பிடித்திருக்கிறது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் அவன்.

ஒரு வாரம் கழித்து அவளுக்கு 'போன்' செய்தான்..... அவள்தான் பேசினாள்..... தன்னை அறிமுகப்படுத்திக் கொண்ட



அட்டைப்பட விளக்கம்:

## மணியான கலையில் தணியாத ஆர்வம்



மணிகளைக் கோத்து மணிபர்ஸ் செய்வது என்பது ஓர் அரிய கலை. ஆர்வம் மட்டும் இருந்தால் போதாது. அசாதாரணப் பொறுமையும் வேண்டும். பிளாஸ்டிக் மணிகளையும் பிளாஸ்டிக் நூலையும் ஆசைப்பட்டுக் காசு கொடுத்து வாங்கிவிட்டுப் பிறகு ஒரு பர்ஸோ கூடையோ அல்லது ஒரு பொம்மையோ எதுவும் முழுசாகச் செய்யாமல் மூலையில் தூங்க விடுவார்கள் பல பெண்கள்.

ஆனல் இவ்விதழ் மேலட்டையில் காட்சி தரும் பெண்மணியோ மணிபர்ஸ், கூடை மட்டுமின்றிப் பலவித அழகிய பொம்மைகளையும் அபாரமான கலை உணர்வுடன் செய்து குவித்திருக்கிருர். அத்தனை பொருள்கள் தயாரித்தாலும் ஏழுமலையான் வடிவத்தை உருவாக்கிய போது ஏற்பட்ட மன நிறைவு வேறு எதிலும் உண்டாகவில்லை என்று அவர் கூறக் கேட்டிருக்கிருர் வண்ணப் படம் பிடித்த திரு **ஹரலிங்கம்**.

---

போது... ''ஓ ! நீங்களா ? எப்படி இருக்கிறீர்கள் ?'' என்ற அவள் கேள்வியில் ஒரு புது உற்சாகம் இருப்பதைக் கவனித்தான்.

''இந்தத் தடவை உங்களை... உங்களுக்குப் பிடித்தமான புடவைகளுடன் சந்திக்கலாம் என்று நினைக்கிறேன்... எப்போது வரட்டும்?''

''யூ ஆர் ஆல்வேஸ் வெல்கம்'' என்றவள், 'சட்'டென்று தன்னை அடக்கிக் கொண்டவள் மாதிரி தோன்றியது.

◘ ◘ ◘

''இந்தப் புடவை உங்களுக்கு ரொம்பப் பிரமாதமாகப் பொருந்தும்.'' — அவன் ஓர் அழகான பிரிண்டட் ஸாரியை எடுத்து வைத்து வியாக்கியானம் செய்து கொண்டிருந்தான்.

'' பொருத்தம் பார்த்து நான் கட்டிக் கொள்வதில்லை.... ஏதோ கட்டிக் கொள்கிறேன்....'' — அவள் பெருமூச்சுவிட்டாள்.

''நீங்கள் இப்படிப் பேசக் கூடாது.... அழகற்றவர்கள் எல்லாம் சம்பந்தா சம்பந்தம் இல்லாமல் 'டிரஸ்' செய்து கொள்வதைப் பார்க்கும்போது நீங்கள்.... ஸாரி.... நான் சற்று அதிகப்படியாகப் பேசி விட்டேன்.''

''புடவை விற்க வேண்டுமே என்ற கவலை உங்களுக்கு....''

''அது மட்டுமல்ல....'' — என்றவள் திடீரென்று குரலைத் தாழ்த்தி.... ''உங்களை நீங்கள் கண்ணடியில் பார்த்துக் கொள்வதில்லையா ?'' — என்ருன்.

அவள் திடுக்கிட்டவள்போல் ஒரு கணம் செயலற்றுப் போனாள்... தப்பித் தவறிக்கூட அவள் கண்களை அவன் சந்திக்கவில்லை....

எப்போது எரிமலை வெடிக்கும், எப்போது மலர் மாரி பொழியும் ! ஒன்றும் சொல்வதற்கில்லை. அவன் எதற்கும் தயாராக இருந்தான். ஏனெனில், அவன் ஒரு சேல்ஸ்மேன் !

இந்த முறையும் நண்பன் சண்டைக்கு வந்தான்....

''சும்மா சும்மா புடவைகளை வாங்கிக் கொண்டு போய்த் திருப்பித் தருகிருயே.... அடுத்த தடவை....''

''நானே பணம் கொடுத்து வாங்கிக் கொள்வேன்..... உன் கடை நம்பருக்கு ஏதாவது 'போன்' கால் வந்தால் உடனே எனக்குத் தகவல் தெரிவி... நான் வெளியூர் போயிருப்பதாகச் சொல்.''

நண்பன் கண் சிமிட்டினன்.

'போன்' வந்ததாக நண்பன் தகவல் அனுப்பினன்.... நாலு நாட்கள் கழித்துத் தலைவிரி கோலமாக அவளைக் காணப் போனன் அவன்.... அவனைக் கண்டு அவள் திகைத்தாள்....

'' நீங்கள்.... நீங்கள்.....''

'' நீங்கள் போன் பண்ணியதாகத் தகவல் சொன்னர்கள்....''

'' வெளியூர் போயிருப்பதாகச் சொன்னர்களே....''

''ஆமாம்.... வேலை தேடி...''

''அந்தக் கடை சேல்ஸ்மேன் வேலை....'' தயங்கினன்.

''சொல்லுங்கள்....'' — அவள் அவனை ஊக்கினள்.

'' அது எதற்கு ? போகட்டும்... எதற்குக் கூப்பிட்டீர்கள் ?''

'' புடவை வேண்டும்....''

அவன் திகைத்து நிமிர்ந்தான்.

'' நான் புடவைகளை எடுத்துக் கொண்டு வந்தபோதெல்லாம் வேண்டாம் என்றீர்கள். நான் 'ஆர்டர்' கான்வாஸ் செய்யவில்லை, புடவைகளைச் சரியாக விற்கவில்லை என்று என்னைக் கடையைவிட்டு அனுப்பிய பிறகு புடவை கேட்கிறீர்கள்....''

அவள் படபடத்தாள்.

'' ஓ! உங்களுக்கு வேலை போய்விட்டதா?''

அவன் பேசவில்லை.

அவள் மெல்லப் பேசினள்.... முதலில் தன் பதற்றத்தை வெளிப்படையாகக் காட்டிக் கொண்டதற்கு வெட்கப்பட்டவள் போல் மெல்லப் பேசினள்.

''என்னலே உங்களுக்கு வேலை போய்விட்டது. ஸாரி. இரண்டு முறையும் உங்களை வெறும் கையுடன் அனுப்பிவிட்டேன்..''

''பரவாயில்லை. இது எனக்குச் சகஜம் தான். ஏனென்ருல் நான் ஒரு சேல்ஸ்மேன்!''

''நான் பணம் தருகிறேன். புடவையைக் கொண்டு வந்து தாருங்கள்...''

அவன் மெல்லச் சொன்னன்... ''என்னை மன்னித்து விடுங்கள். நான் இனி புடவைக் கடைக்குள் நுழைவதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன்...''

''ஏன்?''

''ஏனே... ஏனே தெரியவில்லை. அந்தக் கடையில் இருந்தபடி ஒவ்வொருவருக்காகப் புடவைகளை நான் பிரித்துப் போடும்போது



பலுச்சரி

மேற்கு வங்காளத்தில் முர்ஷிதாபாதிலுள்ள பலுச்சர் கிராமத்தின் சித்திர வேலைப்பாடுகள் 'அம்ரு' என்னும் பெயரால் புகழ் பெற்றவை. இவை எவ்வித ஜரிகையும் உபயோகிக்கப்படாமல், வண்ணப் பட்டு நூல்களாலேயே நேர்த்தியாக நெய்யப்படுகின்றன. இத்துணிகள் தனிச் சிறப்புள்ள முறையில், 'பலுச்சரி' புடவைகளில் உபயோகிக்கப்படுகின்றன. இந்தப் புடவைகள், மனிதர் மற்றும் பிராணிகளின் உருவங்களைத் ... 'குஞ்ச்' எனப்படும் டிசைன்களுக்கும் புகழ் வாய்ந்தவை.

ஒவ்வொரு புடவையின் மடிப்பிலும் வெறுமையான உங்கள் முகம்,மூளிக் கழுத்து இவை... இவைகள்தாம் என் கண்முன் வந்தன.

''நானேதான் வேலையைப் போக்கிக் கொண்டேன்.... எனக்கு... எனக்கு இதற்கு மேல் சொல்லத் தெரியவில்லை.''

அவள் நிமிரவே யில்லை.

அவளிடமிருந்து விம்மல் ஒலி வெளிப்பட்டது. அதற்குப் பிறகு...?

அவனுக்கு அவள் தயவில் ஒரு வேலை கிடைத்து விட்டது.

அவன் அவளைச் சந்திக்க அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தான்.

அவர்கள் பழகினர்கள்,பேசினர்கள். அவன் மிக ஜாக்கிரதையாக நடந்து கொண்டான். தப்பித் தவறிக்கூட அவள் பணத்துக்காகவும் அவள் உடலழகுக்காகவும் அவன் அலைவதை வெளிப்படுத்திவிடவில்லை.

அன்று மாலை அவளைக் காண வந்தான். அவள் சிரித்தபடி அவனை வரவேற்ருள்.

''ஏது இன்று ரொம்பக் குஷியாக இருக்கிறீர்கள்... என்ன சமாசாரம்?''

''இன்றுதான் என் முதல் சம்பளத்தை வாங்கினேன்.... முதல் சம்பளத்தைத் தெய்வத்துக்குத்தான் காணிக்கை செலுத்துவார்கள். இல்லையா?''

''சொல்லுங்கள்...''

''என் தெய்வத்துக்கு ஒரு பரிசு கொண்டு வந்திருக்கிறேன் .... தெய்வம் ஏற்றுக் கொள்ளுமா?''

''தெய்வம் கல்தானே... எதையும் ஏற்றுக் கொள்ளும்... நாஸ்திகனையும் அது ஒன்றும் செய்வதில்லையே...''

அவன் தயங்கினன்.

அவள் காலடியில் ஓர் அழகான வெல்வெட் பெட்டியை வைத்தான். அதற்குள்...? ஓர் அழகான மோதிரம்!

''நவரத்தின மோதிரம்... நவரசங்களில் அன்பையும் பக்தியையும் தவிர நீங்கள் எதையுமே வெளிப்படுத்துவதில்லை... அதனல் இந்த நவரத்தினங்களாவது தங்கள் விரலை அலங்கரிக்கட்டும்...''

அவள் பேசாமல் இருந்தாள். ''இது ரொம்ப அதிகம்... டு மச்.''

''இல்லை. உங்கள் அன்புக்கு முன் ரொம்ப அற்பம்...''

அவள் அதையே வெறிக்கப் பார்த்தாள்.

''ஒரே ஒரு சின்ன ஆசை...''

அவள் உடல் நடுங்குவதை அவனல் உணர முடிந்தது.

''சொல்லுங்கள்...''

''இதை... இதை... நான்தான் என் தெய்வத்தின் விரலில் போட வேண்டும். அனுமதிப்பீர்களா?''

அவள் இன்னமும் பேசாமல் இருந்தாள். அவள் மௌனத்தையே சம்மதத்தின் அறிகுறியாக எடுத்துக் கொண்டு அவள் கரங்களை மெல்லப் பிடித்தான். மிக மிக நிதானமாக அந்த நவரத்தின மோதிரத்தை அவள் மோதிர விரலில் அணிவித்தான். மிக மென்மையாக அந்தக் கையை முத்தமிட்டான்.

''நான் வரட்டுமா?'' என்று அவன் விடைபெற்றபோது அவள் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள்.

''நீங்கள் ஏன் வந்தீர்கள்? நீங்கள் ஏன் வந்தீர்கள்?'' அரற்றியபடியே பலவீன உணர்ச்சியால் உந்தப்பட்டவளாக அவள் தன் முகத்தை மூடிக்கொண்டு அழுதாள். அந்த விரலில் அந்த மோதிரம் மிக அழகாகப் பொருந்தி யிருந்தது.

மாலை அவன் 'போன்' செய்தான்.

''வருகிறீர்களா? இன்று 'எண்டர் தி டிராகன்' இரண்டு டிக்கட்டுகள் ரிசர்வ் செய்திருக்கிறேன். போகலாமா?'' — அவள் ஒரு கணம் தயங்கினள்.

''ஓ! ரொம்ப நல்லது! சாயங்காலம் ஐந்து மணிக்கு வருகிறேன். தயாரா யிருங்கள் !''

அவள் ரெடியாக இருந்தாள்.

இன்னமும் அவள் வெள்ளைப் புடவை, பிரிண்டட் சாரிதான் கட்டியிருந்தாள்.

இருவரும் கிளம்பினர்கள். அவள் காரை அவனே ஓட்டினன். அருகில் அவள்.

மாலை நேரம்... மயக்கும் பொழுது..ஏ.ஸி. தியேட்டர்... தனியான 'பாக்ஸ்'.

'இண்டர்வெல்...'

பாப்கார்னும், ஐஸ்க்ரீமும், வெஜிடபிள் பப்பும் சுவைத்தபடி சினிமாவைப் பற்றிய பேச்சுக்களில் அவன் இறங்கினன். அவள் 'மூடை' மாற்றி, அவளை இயல்பாக்க முயன்ருன். அவளும் பேச முயன்ருள். ''உங்களுக்கு இந்தப் படத்தில் எந்த இடம் பிடித்தது?''

''ஓ ! கராத்தே சண்டை பிரமாதம் இல்லை ?''

''அந்தக் கதாநாயகனின் சகோதரி போடும் 'கராத்தே சண்டை' ரொம்பவும் கவரும்படியாக இல்லை?'' — அவள் ஐஸ்கிரீமைச் சுவைத்தபடி கேட்டாள்.

''ஆமா. உண்மையா அற்புதம்தான்! அதுவும் தன் கற்பைக் காப்பாற்றிக் கொள்ள அவள் ஓட்ட ஓட்டமாக ஓடியபடி...சண்டை போட்டபடி... கடைசியில் தன்னைக் காப்பாற்றிக்கொள்ள வேறு வழியே இல்லை என்றதும் அந்த உடைந்த கண்ணடித் துண்டால் தன்னைக் குத்திக் கொண்டு சாகிருளே... அவள் ஓர் உண்மையான கதாபாத்திரம்!''

விளக்கு அணைந்து விட்டது. ஐஸ்கிரீமை அவளால் சாப்பிட முடியவில்லை...உள்ளமே பனியாக உறைந்தது. நெற்றியில் பொட்டுப் பொட்டாக வியர்வைத் துளிகள்... அவன் என்ன சொன்னன்? 'கற்பைக் காப்பாற்றியபடி...ஓடியபடி...அவள் ஓர் உண்மையான கதாபாத்திரம்!' அவள் எழுந்தாள்.

''என்ன? ஏன்? ஏன்?'' — அவன் படபடத்தான். என்ன தவறு? என்ன நடந்தது?

''நம்ம கதை முடிந்து விட்டது, 'எண்டரிங் தி டிராகன்'...நுழைந்ததுமே! என்னை மறந்துவிடுங்கள். தோல்விகள் உங்களுக்குப் புதிதல்ல... ஏனெனில் நீங்கள் ஒரு சேல்ஸ் மேன்! நான் வருகிறேன்.'' அவள் தனியாகக் கிளம்பி விட்டாள்.

அவனுக்கு ஒன்றும் புரியவில்லை. மறுநாள் நவரத்தின மோதிரம் திருப்பி அனுப்பப்பட்டு வரும்போது புரியும்.

---

### எடுத்தால் குற்றம் வைத்தால் குற்றம் !

[illegible] பேஸ்ட் டியூபின் மூடியைத் திருப்பிப் போடுவதில்லை என்று என் மனைவி குறை கூறி வந்தாள். ஒரு நாள் ஞாபகமாக டியூப் மூடியைத் திருப்பி மூடி வைத்தேன். அன்று என் மனைவி [illegible] பல் தேய்க்கவில்லை என்று குறை கூறினாள்!

கே. ஆர். • [illegible]

Interpub/GSC/2/76 Tml

என்னை நேமப் பாதைக்குப் போகச் சொல்லி என்னுடைய அலுவலகத்திலிருந்து உத்தரவு வந்தபோது எனக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. ஒன்று நான் பதவி உயர்வு பெற்று அங்கு செல்கிறேன்; இரண்டாவது அங்கே நான் என் நெடுநாள் நண்பன் சாமாவைச் சந்திக்க முடியும்.

நேமப்பாறை சாமா என்றால் அங்கே தெரியாதவர்கள் இருக்க மாட்டார்கள். பஸ் நிலையத்தை யொட்டியுள்ள சங்கரி லஞ்ச் ஹோம் புரொப்ரைட்டர் அவன். ஹோட்டல் நடத்தி நிலையாக வாழ்ந்தவர்கள் கிடையாது என்று சொல்வார்கள். அந்தப் பேச்சுக்கு அவன் விதிவிலக்கு. சங்கரி லஞ்ச் ஹோம் மூன்று தலைமுறைகளாக நடக்கிறது.

திருச்சியில் சாமா என்னுடன் கல்லூரியில் படித்தான். யாருக்கும் அவன் எப்போதும் முதலிடத்தை விட்டுத் தந்ததில்லை. கல்லூரிப் படிப்பு முடிந்த பிறகு அவன் ஒரு பெரிய ஐ. ஏ. எஸ். அதிகாரியாகவோ, கல்லூரிப் பேராசிரியராகவோ வருவான் என்று எதிர்பார்த்தேன். அவனிடம் அது பற்றிக் கேட்கவும் செய்தேன்.

''அங்கேயெல்லாம் நான் ஏன் போகிறேன்? நேமப்பாறையில் எங்கள் ஹோட்டல் இருக்கிறது. அதைப் பார்த்துக் கொள்ளவே ஆள் போதவில்லை'' என்றான். பரீட்சை முடிந்ததும் என்னையும் நேமப்பாறைக்குக் அழைத்துப் போனான்.

நேமப்பாறை பஸ் நிலையம் நான்கு சாலைகளின் சந்திப்பு. எப்போதும் பஸ்கள் வந்த வண்ணமும் புறப்பட்ட நிலையிலும் இருக்கும். புகை வண்டி நிலையம் இல்லாததால் மக்கள் பஸ்ஸையே நம்பி யிருந்தார்கள்.

அவனுடைய ஹோட்டல் சாதாரண ஓட்டுக் கட்டடம்தான். ஆனால் அதற்குள் உட்காரக்கூட இடம் இல்லாமல் கூட்டம். என்ன வேகம்! என்ன சுறுசுறுப்பு! சாமாவின் தாத்தா அடுப்படியில் நின்று பார்த்துக் கொள்கிறார். பம்பரம் போல் சர்வர்கள் சுழன்றார்கள். நான் நேமப்பாறையில் தங்கிய மூன்று நாட்களிலும் எனக்கு அந்த ஹோட்டல் சாப்பாடுதான்... காப்பிதான்... எல்லாமே அமிருதம். அதற்கும் ஒரு படி மேலே.

நெருங்கிய தோழன் ஊருக்கு அழைத்துப் போயத் தன் வீட்டில் தங்க வைக்கலாம். ஒரு ஹோட்டலில் சாப்பிட வைத்ததற்கு முக்கிய காரணம் இருந்தது. சாமா என் நெருங்கிய நண்பன்தான். ஆனால் நான் அக்கிரகாரத்து வகுப்பைச் சேர்ந்தவன் இல்லையே... லால்குடியில் நிலச் சாகுபடி செய்து கொண்டிருந்த குடியானவன் முத்து சேர்வையின் மகன்— இந்த நமசிவாயம் — நேமப்பாறையில் பிரபல அந்தண குடும்பத்தில் ஒரே வாரிசான சாமாவுடன் அவன் வீட்டில் சம. பந்தியில் அமர முடியுமா?

சாமா என் சௌகரியங்களைக் கவனித்துக் கொண்டான். ஊரைச் சுற்றிக் காண்பித்தான். தன் வீட்டுக்கு மட்டும் அழைத்துப் போகவில்லை. அவன் அப்பாவும் தாத்தாவும் — வழக்கமாகப் பில்லுக்குப் பணம் கொடுக்காமல் போகும் சில பெரிய மனிதர்கள் ஜாபிதாவில் என்னையும் 'தாற்காலிகமாக'ச் சேர்த்துக் கொண்டார்கள்.

ஒரு நாள் பிற்பகல் நான்கு மணி இருக்கும் காப்பி சாப்பிடுவதற்காகச் சாமா தன் ஹோட்டலுக்கு அழைத்துப் போனான். அவன் அப்பா உள்ளே இருந்தார். தாத்தா கல்லாவில் உட்கார்ந்திருந்தார். தன் கையால் ''டிகிரி'' காபி கொண்டு வருவதாகக் கூறி விட்டுச் சாமா உள்ளே போனான். கல்லாவில் உட்கார்ந்திருந்த அவன் தாத்தாவின் குரல் சற்று உரத்துக் கேட்கவே நான் என் செவிகளை அந்தப் பக்கம் திருப்பினேன்.

''வேலை காலி இல்லைனு யார் சொன்னது? இருக்கு... இன்னும் நாலு சர்வர் எனக்கு வேணும்தான்... நீ மட்டும் பிராமணப் பையனாக இருந்தால் வேலைக்கு எடுத்துக் கொண்டுடுவேன்... என்னை என்ன செய்யச் சொல்றே!'' என்று கூறிக் கொண்டிருந்தார்.

நான் என் பார்வையை ஓட்டலினுள் ஓட விட்டேன். அங்கிருந்தவர்கள் எல்லோரும் அந்தணர்களாகத்தான் தெரிந்தது.

''நான் ஏழை ஸார்! வேறு வழியில்லை. என்ன வேலை கொடுத்தாலும் செய்யறேன்!'' என்று கெஞ்சிக் கொண்டிருந்தான் அந்த வாலிபன்.

''ஏழைன்னு ஒரு வேளைச் சாப்பாடு இனாமாப் போடலாம். என்னாலே முடிஞ்சது அவ்வளவுதான். கூட்ட நேரத்திலே நச்சு நச்சுன்னு பிடுங்காதே போ!'' என்று விரட்டினார் அவர்.

இந்தச் சம்பவம் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது. இத்தனை கண்டிப்பாகப்

பெரிய கதை::

பேச அந்த மனிதருக்குத் துணிச்சல் அசாதாரணம்தான்.

நான் சாமாவிடம் கேட்டேன்: ''உன் தாத்தா பத்தாம் பசலியாக இருக்கிறார். காலத்தோடு மாறிப் போக இவர் கற்றுக் கொள்ள வேண்டும்!'' என்றேன்.

சாமா அதை மறுத்தான். ''அவர் சொன்னதில் என்ன தப்பு?... 'எந்த வேலையையும் கொடு!' என்றான் அவன். ஆனால் இங்கு இருப்பவர்கள் வேறு எந்த வேலைக்கும் லாயக்கில்லாதவர்கள். படிப்புக் கிடையாது. வயிறு மட்டும் இருக்கிறது. காப்பாற்றக் குடும்பம் உண்டு. இப்படிப்பட்ட பிராமண வாலிபர்களுக்கு நாங்கள் ஏன் ஆதரவு காட்டக் கூடாது?... நமசு!... இந்த ஹோட்டலை என் அப்பாவின் தாத்தா வயிற்று ஜீவனுக்காகத்தான் ஆரம்பித்தார். இப்போது எங்களுக்கு வசதி இருக்கிறது. இதை இழுத்து மூடி விட்டால் உட்கார்ந்து சாப்பிட இரண்டு தலைமுறைக்குச் சொத்து இருக்கிறது. வேறு வேலை தேடிக் கொள்ளப் படிப்பும் இருக்கிறது. இப்போது நாங்கள் செய்வது வியாபாரம் இல்லை. ஓர் உபாசனையாக நினைத்துத்தான் நடத்துகிறோம்....'' என்றான் வேகமாக.

அந்தக் கேள்வியைக் கேட்டிருக்கக் கூடாது என்று நான் அப்போது வேதனைப்பட்டது உண்டு.

வருஷங்கள் ஓடிக் கொண்டிருந்தன. என் கல்யாணத்துக்குச் சாமா வந்திருந்தான். தாலி கட்டும்வரை இருந்து விட்டுப் போயிருந்தான். கையைக்கூட நனைக்கவில்லை. நானும் அவனை வற்புறுத்தவில்லை.

அதற்குப் பிறகு ஒவ்வொரு பொங்கலுக்கும் நான் அவனுக்கு ஒரு வாழ்த்து அனுப்புவேன். வருடப் பிறப்புக்கு அவன் ஒன்று அனுப்பி வைப்பான். அவன் தாத்தா — அவன் தந்தை எல்லோரும் இப்போது இல்லை. ஹோட்டல் தன் பொறுப்பில் நன்றாக நடந்து வருவதாகவும் பக்கத்தில் ஒரு ''லாட்ஜ்'' கட்டியிருப்பதாகவும் ஒரு முறை எழுதி யிருந்தான்.

நேமப்பாறையில் என்னைச் சந்திக்க என் ''ஆபீஸ்'' அப்படியே காத்திருந்தது. ''தங்குவதற்கு எங்கு ஏற்பாடு செய்யட்டும்?'' என்று ஹெட் கிளார்க் விசாரித்தார். ''சங்கரி லாட்ஜ்'' என்றேன். என்னை அவர் வியப்புடன் பார்த்தார். ''இதற்கு முன் இங்கு வந்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''ஒரு முறை!'' என்றேன்.

''சங்கரி லஞ்ச் ஹோம்'' முன்பு இருந்தது போலவேதான் காணப்பட்டது. போர்டுகள் மட்டும் புதிதாகத் தெரிந்தன. ''ஜனதாச் சாப்பாடு கிடைக்கும்'' எனப் புதிதாக ஒன்று மாட்டப்பட்டிருந்தது. இட்டிலி, பூரி, விலையையும் எடையையும் பெரிதாக எழுதி வைத்திருந்தார்கள்.

கல்லாவில் நான் சாமாவை எதிர்பார்த்தேன். ஆனால் ஒரு வாலிபன் — நல்ல சிவந்த நிறம் — நெற்றியில் பட்டையாக விபூதி, குங்குமம். வயது முப்பதுக்குள் இருக்கும்.— உட்கார்ந்திருந்தான்.



''சாமா இல்லையா?'' என்று கேட்டேன்.

''வீட்டில் இருக்கிறார்.... நீங்கள்...''

''என் பெயர் நமசிவாயம். சாமாவுக்கு ரொம்பவும் வேண்டியவன். எப்போது வருவான்?''

''ஆறு மாதங்களாக அவர் கடைக்கு வருவதில்லை. நான்தான் கடையைப் பார்த்துக் கொள்கிறேன்...''

''நீங்கள்?''.. எனக் கேட்டு நிறுத்தினேன்.

அவன் சட்டென்று பதில் சொல்லவில்லை.

பக்கத்திலிருந்த பையன் ''ஐயாவோட மருமகப் புள்ளைங்க... நீங்க வாங்க... பத்தாம் நெம்பர் ரூம்.... நல்ல சௌகரியமா காற்றோட்டமாக இருக்கும்...'' என்று அழைத்துப் போனான்.

பழைய லஞ்ச் ஹோம் பக்கத்தில் புதிதாக இரண்டு மாடிக் கட்டிடமாக ''சங்கரி லாட்ஜ்' வளர்ந்திருந்தது. என்னுடைய அறை முதல் மாடியில் இருந்தது. நான் மௌனமாக அறைக்குப் போனேன். சாமாவுக்கு ஒரே பெண் என்று எனக்குத் தெரியும். அவன் என்னுடன் படித்துக் கொண்டிருந்தபோதே திருமணம் ஆகிவிட்டது. பரீட்சைக்கு முதல் நாள் பெண் பிறந்திருப்பதாகத் தந்தி வந்தது. 'அந்தப் பரீட்சையில் பாஸ்... இந்தப் பரீட்சையில்?' என்று அவனைக் கேலி செய்தது கவனத்துக்கு வந்தது. அவன் ஏன் தன் பெண் திருமணத்துக்கு அழைப்பு அனுப்பவில்லை? அனுப்பியிருப்பான். எனக்குக் கிடைத்திருக்காது. அவனைப் பார்க்கும் ஆவல் எனக்கு அதிகமாகியது.

என் சிந்தனையின் ஓட்டத்தை என் ஆபீஸ் ஹெட் கிளார்க் புரிந்து கொண்டிருந்தார். ''ஸாருக்குத் தெரியாதுன்னு நினைக்கிறேன்... நீங்க பார்த்த பையன் — சாமா ஐயரின் மாப்பிள்ளை... ஒரு ஹரிஜன்... கொல்லி மலையைச் சேர்ந்த பையன்...'' என்றார்.

நான் சட்டென்று திரும்பினேன். ''நோ! இருக்காது... நான் நம்ப மாட்டேன்!'' என்றேன்.

''நாங்களும்தான் நம்பவில்லை. உண்மை என்னமோ அதுதான். அந்தப் பையன் கொஞ்ச நாட்களாக சர்வராக இருந்தான். திடீரென்று ஒரு நாள் 'இவன்தான் என் மாப்பிள்ளை!' என்று கல்லாவில் உட்கார்த்தி வைத்து விட்டார்!'' என்றார் அவர்.

உடனடியாகக் கவனிக்க வேண்டிய வேலை நிறைய இருந்தது. எனக்கு முன் இருந்தவர் பத்து தினங்கள் முன்பு விடுப்பில் சென்றிருந்தமையால் பார்க்க வேண்டிய ''ஃபைல்''கள் குவிந்திருந்தன. மாலையில்தான் திரும்பினேன். என் அறைக் கதவைத் திறந்து உள்ளே நுழைந்ததும் முதலாளி ஐயா பார்த்து வரச் சொன்னதாக ஒரு பையன் வந்து நின்றான்.

சாமா வந்து விட்டானா? ஆவலுடன் அந்தப் பையன் பின்னால் சென்றேன்.

அவன்தான் ஒரு சோபாவில் உட்கார்ந்திருந்தான். தலையில் முக்கால்பங்கு வழுக்கை. கண்கள் இடுங்கி யிருந்தாலும் கூர்மையான பார்வை.

''வாடா! நமசு! வா!... பெரிய ஆபீஸராகப் போய் விட்டாய். வரப்போவதாக ஒரு கார்டு போடக் கூடாது?... லாட்ஜில்தான் தங்குவாயா? 'ஏண்டா சாமா!' ன்னு கூப்பிட்டுக் கொண்டு வீட்டுக்குத்தானேடா வரணும்!'' என்று கேட்டான் சாமா.

''உன் வீட்டுக்கா? நானா?...'' என்றேன் என் செவியை நம்ப முடியாமல்.

சாமா என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தான். பிறகு எதையோ நினைத்துக்கொண்டு தலையைக் குறுக்கிக் கொண்டான்.

''ஓ! அந்தப் பழைய சாமாவைச் சொல்கிறாயா?... அவன் போய்விட்டாண்டா, நமசு ...செத்துத் தொலைந்து போய்விட்டான்!'' என்றான் சாமா. அவன் கண்களில் நீர் துளித்தது.

''என்னப்பா இது... சின்னக் குழந்தை மாதிரி... இருந்து இருந்து ஒரு பெண்ணுக்குக் கல்யாணம் செய்திருக்கிறாய்!... எனக்கு ஓர் அழைப்பைக் காணோம்...'' என்று வேடிக்கையாக முனகினேன்.

சாமா உரக்கச் சிரித்தான். ''என் பெண் கல்யாணமா?... நான் நினைத்தபடி நடந்திருந்தால் உனக்கு அழைப்பு என்ன? நேரேயே வந்து கட்டி இழுத்து வந்திருப்பேன். இது சும்மா தானம் கொடுக்கிற மாதிரி — ஜஸ்ட் லைக் தட் — முடிந்து விட்டது!'' என்று ஒரு கைவிரலைச் சொடுக்கிக் காண்பித்தான்.

''பையனைப் பார்த்தேன்!'' என்றேன்.

''பார்த்தாயா? எப்படி இருக்கிறான்... நல்ல பர்சனாலிடி?... எத்தனை சுறுசுறுப்பு பார்த்தாயா? ... கடையில் நல்ல லாபம்... லாட்ஜில் எப்பொழுதும் கூட்டம்... என்ன சாமர்த்தியம், என்ன சாமர்த்தியம்... இந்தச் சாமிநாத ஐயரின் மாப்பிள்ளை செல்லப்பன் திறமை...''

''கேள்விப்பட்டேன்!''.

''என்ன கேள்விப்பட்டாய்?...'' சாமாவுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. 'தன் ஒரே பெண்ணை ஒரு பறையனுக்குக் கட்டி வைத்துப் புரட்சி செய்து விட்டான்' என்று தானே?''

''நான் அப்படி நினைக்கவில்லை. இதெல்லாம் இந்தக் காலத்தில் சகஜமாக நடப்பது தானே?''

''உலகத்தில் நடக்கலாம். ஆனால் நேமப் பாறை சாமிநாத ஐயர் குடும்பத்தில் இப்படி நடக்கலாமா என்று அங்கலாய்ப்பவர்கள் எத்தனை பேர் இருக்கிறார்கள் தெரியுமா?''

''போகட்டும்! அவர்கள் ஒற்றுமையாக, ஒருவருக்கொருவர் அநுசரணையாக இருந்தால் சரி!'' என்றேன் நான்.

''இதெல்லாம் நாமாகக் கற்பித்துக்கொள்ளும் சமாதானம்... நான் ஏமாந்து விட்டேண்டா நமசு!... ஒரு பொடிப் பயல் என்னை நன்றாக ஏமாற்றி விட்டான்!'' என்ற சாமா விவரமாகச் சொல்ல ஆரம்பித்தான்.

ஒரு நாள் பகல் மூன்று மணி. இருபத்தைந்து வயது இருக்கும் ஒரு பையன். காப்பியைச் சாப்பிட்டுவிட்டு நாற்பது பைசா பில்லைக் கொடுத்தான். நாலு முழ வேஷ்டியும் கைத்தறிச் சட்டையும் போட்டிருந்தான். பார்க்கக் கண்ணியமாகத் தெரிந்தான். பில்



''உங்கள் கணவரை ஆபீஸில் கீழே தள்ளி விட்டாங்களாமே, அநியாயமா இருக்கே!''
''அதில்லீங்க. மேட்டூரிலிருந்து பள்ளத்தூருக்கு டிரான்ஸ்பர் பண்ணிட்டாங்க. அவ்வளவுதான் !''

- கோ. கணேஷ் குமார்

லைக் கொடுத்த பிறகு தயங்கித் தயங்கிச் சொன்னான்:

''ஸார்! நான் எஸ். எஸ். எல். ஸி. பாஸ் செய்திருக்கிறேன். மார்க் எதிர்பார்த்தபடி கிடைக்கவில்லை... அதனால் எங்கேயும் வேலைக் குச் சேர முடியவில்லை.... உங்கள் ஹோட்ட லில் ஒரு வேலை... க்ளீனராக இருந்தால் கூடத் தேவலை...தாற்காலிகமாக இருந்தால் கூடப் போதும்...'' என்றான்.

''உன் பெயர்?'' என்று கேட்டேன்.

''செல்லப்பா!'' என்று பதில் சொன்னான்.

அவன் சட்டைக் காலருக்கு அடியில் அவன் போட்டிருந்த பூணூல் தெரிந்தது.

''நீ பிராமணப் பையன்தானே?'' என்று நான் கேட்டேன்.

''ஆமாம், ஸார்!'' என்றவன் தன் பூணூலை இழுத்து வெளியே காட்டினான்.

என் அப்பா, தாத்தா பழக்கத்தை நான் மாற்றவில்லை. பிராமணப் பையன்களை மட்டுமே சர்வராகச் சேர்த்துக் கொண்டேன். ''சைவ சிற்றுண்டிச் சாலை'' என்று போர்டு மாட்டியதுடன் சரி. மனம் மாறவில்லை.

அவனை நான் வேலைக்குச் சேர்த்துக் கொண்டேன்.

அவன் சுறுசுறுப்பு என்னை மயங்க வைத்தது. ஒரு கெட்ட பழக்கம் கிடையாது. சிகரெட்டு, வெற்றிலை பாக்கு, மூக்குப் பொடி வம்புப் பேச்சு எதுவுமே இல்லை. காலையில் குளித்துவிட்டு நெற்றியில் விபூதி அணிந்து அவன் வந்தால் அந்தப் பால முருகனைப் போல் இருக்கும். நான் சொல்லாமலே அவன் ஹோட்டல் கணக்குகளைச் சரி பார்த்தான். பால்காரனைக் கண்டித்தான். சரக்கு மாஸ்டர் அம்பி ரகசியமாக வெளியே அனுப்பிக் கொண்டிருந்த ''ஸ்வீட்'' பாக்கெட்டுகள் என் கவனத்துக்குக் கொண்டு வரப் பட்டன. சர்வர் ஒருவனுக்கும் பாத்திரம் துலக்குபவளுக்கும் வளரவிருந்த விரும்பத் தகாத நட்பு அவன் உதவியால் வெட்டப்பட்டது.

வேலை முடிந்த பிறகு என்னுடன் அவன் என் வீட்டுக்கு வருவான். என்னுடன் அமர்ந்து சாப்பிட வற்புறுத்துவேன். முதலில் தயங்கியவன் பின்னர் உரிமையுடன் பழகினான். என் மகள் — யாருடனும் பேசக்கூடத் தயங்குவாள் — இவன் சிரிப்பில் மயங்கினாள். எங்கள் பேச்சில் கலந்து கொள்வாள். என் மனைவியையும் அவளையும் அவனுடன் சினிமாப் பார்க்க அனுப்பி யிருக்கிறேன். அவன் கண்ணியத்தையும் பரிவையும் பற்றி அவள் பெருமையாகச் சொல்வாள். ஒரு நாள் என் மகள் கௌரியின் பெட்டியைத் திறக்க நேர்ந்தது. அவசரமாகக் கசக்கிப் போட்ட ஒரு காகிதம் கிடந்தது. பிரித்துப் பார்த்தேன். என் மகள்தான் எழுதியிருந்தாள். வரிசையாக... ஸ்ரீராமஜெயம் எழுதுவது போல் கௌரி—செல்லப்பா... கௌரி—செல்லப்பா...

அவள் மனம் எனக்குப் புரிந்தது. எனக்கு அப்படி ஒரு நாட்டம் உண்மையில் இருந்தது. பணக்காரப் பையன் கௌரிக்கு இலகுவாகக் கிடைப்பான். அவனுக்கு இந்த ஹோட்டலில் விருப்பம் இருக்காது. எனக்குப் பிறகு இந்த ஆலமரம் போன்ற ஸ்தாபனத்தை இழுத்து மூட வேண்டியதுதான். எனக்குப் பையன்




இல்லை. செல்லப்பா என் மருமகனாக வந்தால் ஹோட்டலை நன்றாகப் பார்த்துக் கொள்வான். என் மனைவியிடம் கேட்டேன்.

''எனக்கே இப்படி ஓர் எண்ணம் உண்டு. நீங்கள் தப்பாக நினைத்தால் என்ன செய்வது என்று பயந்து கொண்டிருந்தேன்'' என்றாள்.

ஒரு நல்ல நாளாகப் பார்த்துச் செல்லப்பாவைத் தனியாகக் கூப்பிட்டு எங்கள் திட்டத்தைச் சொன்னேன். அவன் திடுக்கிட்டுப் போனான்.

''இது ஒத்து வராது ஸார்!... நான் ரொம்ப ஏழைப்பட்ட குடும்பம்'' என்றான்.

''சுத்தப் பைத்தியக்காரத்தனமாக உளறுதே!... இன்று கடை முடிந்தவுடன் நீ என்னுடன் வருகிறாய்... நாளைக் காலை உன் வீட்டுக்குப் போக வேண்டும். பாக்கு வெற்றிலை மாற்றிக் கொள்ள வேண்டும்...நாளைக்கு நல்ல நாள்!'' என்றேன்.

அவன் ஏதோ சொல்ல வாயெடுத்தான். ''சரி, போய் வேலையைக் கவனி!'' என்று அனுப்பி வைத்தேன்.

**மா**லை நான்கு மணி இருக்கும். ஹோட்டலை ஒட்டி ஒரு கிழவனும் கிழவியும் வந்து நின்றார்கள். அவர்கள் அணிந்திருந்த உடையும் நின்ற நிலையும் அவர்கள் பட்டிணத்துக்குப் பழக்கப்பட்டவர்களாகத் தெரியவில்லை.

''நம்ம தம்பி இங்கே வேலை பார்க்குது, கூப்பிட நீங்களா சாமி!'' என்றான் கிழவன்.

யாராவது டேபிள் க்ளீனராக இருக்கும் என்று நினைத்தேன்.

''உன் பையன் பேர் என்ன?'' என்று கேட்டேன்.

''செல்லப்பனுங்க!'' என்றான் கிழவன்.

''அந்தப் பெயரில் யாரும் இல்லை!'' என்றேன் நான் அசுவாரசியமாக.

அந்தக் கிழவன் தன் இடுங்கிய கண்களை இன்னும் குறுக்கிக் கொண்டு, உள்ளே சுற்றிப் பார்த்தான். ''அதோ இருக்கானுங்க நம்ம தம்பி... டேய், செல்லப்பா, செல்லப்பா!'' என்று குரல் கொடுத்தான்.

திரும்பிப் பார்த்தவன் செல்லப்பா...நமசு! நான் யாரை என் மருமகனாக வரித்திருந்தேனோ அந்தச் செல்லப்பா... நல்ல பழக்கம் உள்ள பிராமணப் பையன் என்று நான் மதித்திருந்த அந்தச் செல்லப்பா...




அண்மையில் நான் கோவில்பட்டிக்குச் சென்றிருந்தேன். அப்போது ஒரு தெருவில் சிறு கூட்டமொன்று கூடியிருந்தது. பார்ப்பதற்கு ஏதோ சண்டை போல் தோன்றியது.

அங்கே இருந்த பெரியவர் ஒருவர், "நமக்குள்ளே இருக்கும் பிரச்னையைப் பள்ளத்திலேயே முடித்துக் கொள்வோம். வீணாக மேட்டுக்குப் போய் அவஸ்தைப்பட வேண்டாம்" என்று கூறினர். அனைவரும் அவரது பேச்சை ஏற்றுக் கொண்டனர்.

அருகில் இருந்த ஒருவரிடம் இது பற்றிக் கேட்டேன். அவர் கூறியதாவது:

"கோவில்பட்டியில் இரண்டு பகுதிகள் இருக்கின்றன. ஒரு பகுதி பள்ளம்; ஒரு பகுதி மேடு. மேட்டுப் பகுதியில்தான் போலீஸ் ஸ்டேஷன், கோர்ட், ஆஸ்பத்திரி எல்லாம் இருக்கின்றன."

தகவல்: ஆழ்வை அ. பட்சிராஜன்

---

எனக்குத் தலை சுற்றியது. "நம்ம பேரப் புள்ளைங்க!" எனக் கூறிய அந்தக் கிழவன் என் ஆத்திரத்தை அதிகமாக்கினன்.

நான் கல்லாவிலிருந்து புயலாக எழுந்தேன். செல்லப்பனின் கையைக் கரகரவென்று இழுத்துப் பக்கத்திலிருந்த அறைக்குள் தள்ளினேன். கதவைக் காலால் தள்ளி மூடினேன். என் இடுப்புப் பெல்டைக் கழற்றிக் கையில் எடுத்து விட்டேன்.

செல்லப்பன் கலங்கவில்லை. நிமிர்ந்து நின்று என்னைப் பார்த்தான். "அடியுங்கள் ஸார்! நன்முக அடியுங்கள்! உங்கள் கை வலிக்க அடியுங்கள். சொன்னது ஒரு பொய்தான். வயிற்றைக் கழுவ வேறு வழி தெரியாமல் சொன்னேன்.... பொய் பொய்தான். அடியுங்கள் ஸார்! நான் உங்க ஜாதியில் பிறக்கலே ஸார்... ஆனல் பிறந்தது முதல் இதுவரையில் உங்க யாதிரிப் பழக்கம்தான் ஸார்!... ஒரு நாள் கூட அந்தச் சாப்பாடு சாப்பிட்டதில்லை. அதனல் நான் பிராமணன் ஆக முடியுமா? செய்த தப்புக்குத் தண்டனை வேண்டும், நீங்கள் உங்கள் கை வலிக்கும் வரையில் அடியுங்கள்!" என்முன்.

மௌனமாக நான் வெளியே நடந்தேன்.

செல்லப்பா மௌனத்தைக் கலைத்தான். 'சட்' என்று என் காலைத் தொட்டுக் கும்பிட்டான். வெளியே போகக் காலடி எடுத்து வைத்தான்.

"எங்கேடா போறே!... உள்ளே போய் உன் வேலையைக் கவனி!" என்ற நான் ஒன்றுமே நடவாதது போல் கல்லாவில் அமர்ந்து அடுத்த பில்லுக்குச் சில்லறை வாங்க ஆரம்பித்தேன்.

பத்து நிமிடங்கள்கூட என்னல் உட்கார முடியவில்லை. நம்பகமான ஒருவரை உட்கார வைத்துவிட்டு வீட்டுக்கு விரைந்தேன். அவளிடமும் கௌரியிடமும் எப்படி விஷயத்தைச் சொல்வது?

வாயிற் கதவு தாழிடப்பட்டிருந்தது. ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தேன். கௌரி கட்டிலில் உட்கார்ந்து ஒரு புகைப்படத்தை வைத்துக் கொண்டிருந்தாள். அதில் உள்ள உருவத்தைத்தொட்டுப்பார்த்து மனத்துக்குள் ஏதோ சொல்லிச் சிரித்தாள். அந்தப் புகைப்படம் என் லாட்ஜ் திறந்த அன்று எடுத்தது. என் உருவத்தைப் பெரிதாக 'என்லார்ஜ்' செய்யும்போது அருகே செல்லப்பாவும் தெளிவாக விழுந்திருந்தான்.

நான் வீட்டுக்குச் செல்லவில்லை. திரும்பவும் ஹோட்டலுக்கு நடந்தேன். மறுநாள்—பாக்கு வெற்றிலை மாற்றிக் கொள்ள நினைத்த அந்த நாளில் — பிள்ளையார் கோவிலில் செல்லப்பாவை என் மருமகனக்கிக் கொண்டு விட்டேன். என் உறவினர்கள் யாரையும் அழைக்கவில்லை. ஹோட்டலில் சாப்பிட்டவர்களிடம் அன்று பணம் வசூலிக்கவில்லை. என் பெண்ணுக்கு நடத்திய கல்யாண விருந்து அதுதான்.

● ● ●

**சா**மா சொல்லி முடித்தான்.

"அந்தப் பையனை அப்புறமாவது வேலையை விட்டு நீக்கியிருக்கலாம்... இல்லை... கல்யாணமாவது செய்து வைத்திருக்க வேண்டாம்" என்றேன் நான்.

"வேலையை விட்டு விரட்டி யிருக்கலாம்டா நமசு! ஆனல் அந்தப் பாவி இந்த மனசில் நங்கூரம் போட்டு உட்கார்ந்து விட்டாண்டா. அந்தப் பெண் கௌரியின் நிர்மலமான மனசில் எப்படி யெல்லாம் ஆசைகளை வளர்த்து விட்டேன்! எத்தனை கனவுகள் அவள் கண்டிருப்பாள்? எப்படி யெல்லாம் நினைத்துப் பார்த்து மகிழ்ந்திருப்பாள்?... அவள் ஆசையில் எப்படி நான் மண்ணை அள்ளிப் போடுவது?" என்று கேட்டான்.

"சரி! பெண்ணுக்குப் பிடித்த கணவன்... உனக்குப் பிடித்த மாப்பிள்ளை... நீ ஏன் ஹோட்டலுக்கு வருவதை நிறுத்திக்கொண்டாய்?" என்று கேட்டேன்.

"என் அடி மனத்தில் ஒரு முள் நெருடிக் கொண்டிருக்கிறது, நமசு. அந்தக் கல்லாவில் என் அப்பாவுக்குத் தாத்தா, என் தாத்தா, என் அப்பா எல்லோரும் உட்கார்ந்திருந்தார்கள்... தவறே, சரியோ அவர்கள் ஒரு நெறியுடன் வாழ்ந்தார்கள். அந்த நாற்காலியில் நான் உட்காரத் தகுதி அற்றவன் என்று எனக்குப் பட்டது. அது மட்டுமில்லை. ஊரில் அத்தனை பேரும் என்னைத் தெரிந்தவர்கள்தான். யாருமே என்னைப் பாராட்டவில்லை. அதையும் நான் எதிர்பார்க்கவில்லை.... ஆனல் நான் எதையோ பறிகொடுத்து விட்டாற் போல் பார்க்கிருர்கள். அதைத்தான் என்னல் தாங்க முடியவில்லே!" என்முன் சாமா.

அவர்கள் பார்வை சில நாட்களில் மாறி விடும். ஆனல் சாமாவின் மனத்தைக் குத்தும் அந்த முள்ளின் நெருடல் — கௌரியின் குழந்தை அவன் மார்பில் உதைக்கும்போது உதிர்ந்துவிடலாம் — இல்லை, சாமாவின் உடல் மண்ணில் சாயும்போது மட்டுமே அவனை விட்டு அகலலாம்!

எதிர்காலம்தான் பதில் சொல்லவேண்டும்!




☐ 'கல்கி' தீபாவளி மலர் 1976 கண்களுக்குச் சிறப்பான விருந்தாக அமைந்திருந்தது. அப்பப்பா, எவ்வளவு வண்ணப் படங்கள், வண்ண ஓவியங்கள், கட்டுரைகள், கவிதைகள்! இலக்கியச் சோலையிலிருந்து ஆன்மிகத் துறை வரை அனைத்தும் சிறப்புற்றுச் சுடர் ஒளி வீசுகின்றன. ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகள் அவர்களின் வண்ணப் படமும், அதற்குப் பொருத்தமாக அமைத்த தாயுமான ஸ்வாமிகளின் கவிதையும் பக்திப் பரவசத்தை உண்டாக்கின. அக்னிஹோத்ரம் ஸ்ரீ ராமானுஜ தாதாச்சாரியார் எழுதிய 'சீதை சொல்லும் சீதா கல்யாணம்' உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. கல் நெஞ்சினையும் கரைய வைப்பார் ஸ்ரீ சரத் சந்திர சாட்டர்ஜி என்றால், மாருதி வரைந்த ஓவியங்களை என்னவென்று சொல்வது ? அரசியலையும் விட்டு வைக்கவில்லை; அச்சத்தையும் அகற்றிவிட்டீர். 'கார்ட்டூன் அகராதி' பலே ஜோர். 'வினு'வின் வண்ண முகப்பு 'வெரி பைன்'. ஆனால் ஒன்று, இம்மலர் தீபாவளித் திருநாளன்றோ அதற்கு முன்னரோ வரும் என எதிர்பார்த்தேன்; ஏமாற்றிவிட்டீர். இருப்பினும், இம்மலர் பெற்ற நாள் மற்றொரு நாளும், இம்மலர் பெற்ற நாள் மற்றொரு தீபாவளி நாளாகக் கண்டு மனம் மகிழ்ந்தேன்.

சேலம் 636 007
29–10–76 வி. வாசு

☐ தலையங்கம் படித்து மகிழ்ந்தேன்.

அமெரிக்க ஜனநாயக முறையும், கண்ணிய மான அரசியல் பேச்சுப் போட்டிகளும் நம்மைப் பொறாமை கொள்ள வைக்கின்றன.

மேலும் பிராந்திய வெறி பிடித்த கட்சிகளும், தன்னலம், தற்பெருமை, குறுகிய நோக்கு முதலியவை கொண்ட சின்னஞ் சிறு கட்சிகளால் நம் நாடு எவ்வளவு நலங்குன்றி விளங்குகின்றது என்று எண்ணி வேதனை அடைய வேண்டியிருக்கிறது. தன்னலங் கருதாத, தேசப் பணியே முக்கிய குறிக்கோளாகக்கொண்ட ஒரு சிறந்த எதிர்க் கட்சி தேசிய அளவில் உண்டாக நாம் ஆண்டவனைப் பிரார்த்திப்போமாக.

அறந்தாங்கி
1–11–76 வி. எஸ். அனந்தராமன்

☐ காலத்தால் அழிக்க முடியாத கானங்களைப் பாடிச் சென்ற 'ஏழிசை மன்னர்' தியாகராஜ பாகவதரின் நினைவு தினம் நவம்பர் 1ந் தேதி. அன்று காலை 6-15க்கு இலங்கை வானொலி வர்த்தக ஒலிபரப்பில் 'நினைவில் நிறைந்தவை' நிகழ்ச்சியில் பதினைந்து நிமிடங்களும் பாகவதரின் பாடல்களை ஒலிபரப்பி மெய்மறக்கச் செய்தனர். அன்று மாலை 4–30 மணி முதல் 5 மணி வரை 'அஞ்சலி' நிகழ்ச்சி ஒலிபரப்பாயிற்று. அது போலவே இலங்கை வானொலியின் ஆசிய சேவை ஒலிபரப்பும் அன்று மாலை 6–30 மணி முதல் ஏழு மணி வரை அரை மணி நேரம் பாகவதரின் 'அஞ்சலி' நிகழ்ச்சியை ஒலிபரப்பிற்று.

அன்று நமது சென்னை, திருச்சி, பாண்டிச்சேரி நிலையங்கள், விவிதபாரதியில் 'ஏழிசை மன்ன'ரின் பாடல் ஒன்றைக்கூட ஒலிபரப்பியதாகத் தெரியவில்லை.

தலைஞாயிறு
2–11–76 எஸ். ராஜகணேஷ்

☐ குட்மார்னிங் டாக்டர்! பகுதியில் சிறு திருத்தம்.

ஒரு கன மி. மீ. இரத்தத்தில் 150 முதல் 300 வரை ஈசனோஃபில் செல்கள் 'நார்மலாக' இருக்கலாம். நீங்கள் குறிப்பிட்டுள்ளபடி 30 முதல் 50 செல்கள் அன்று.

மைக்ரோபிலேரியாக்களால் (Microfilaria) ஏற்படும் ஈசனோஃபிலியா நோய் (Tropical Pulmonary Eosinophilia) மட்டுமே கொசுக்களால் பரப்பப்படுகிறது.

சிலவித மருந்துகள், 'ஆஸ்துமா' போன்ற அலர்ஜி நோய்கள், நாக்குப்பூச்சி, கொக்கிப் புழு போன்ற குடற் புழுக்கள் ஆகியவையும் 'ஈசனோஃபிலியா' நோய் ஏற்படுத்தலாம். எனவே 'ஈசனோஃபிலியா' நோயாளிகள் தங்கள் 'மலத்தை'ப் பரிசோதனை செய்து கொண்டு அதில் புழுக்கள் இருந்தால் அதற்குத் தக்க சிகிச்சை மேற்கொள்ளுதல் அவசியம்.

சென்னை—7
29–10–76 டாக்டர் எல்.வி. சீனிவாசன்

"புடவை என்ன விலை?"

"ரெடி கேஷ் என்றால் ரூ. 80. செக் தருவதானால் ரூ. 100, கடனுக்கு ரூ. 150!"

"இரண்டு நாள் இரவல் என்றால்...?"



ஒவ்வொரு கல்லூரியிலும் நாடக சங்கத்தின் தலைவராக என்னைத்தான் தேர்ந்தெடுப்பார்கள். தமிழ் எழுத்தாளனாச்சே! பாஷை தெரியாத ஆந்திராவிலும் இப்பதவி என்னைத் தேடி வந்தது. ஆயிரம் பாடுபட்டு நான் தமிழில் எழுதின நாடகங்களைத் தெலுங்கில் மொழிபெயர்த்து அரங்கேற்றினார்கள் ஆர்வம் மிக்க மாணவர்கள். ஒரு தடவை பிரபல மேதை திரு விசுவநாத சத்தியநாராயணா மேடை ஏறி வந்து என்னைத் தாராளமாகப் பாராட்டினார். அதுபோல் மெய்சிலிர்க்க வைக்கும் எத்தனையோ நிகழ்ச்சிகள்!

மாணவர்களிடம் 'வித்தியாசமான' நாடகங்களை மட்டும்தான் அரங்கேற்றலாம் என்று தொடக்கத்திலேயே சொல்லிவிடுவேன். மாறுவேஷப் போட்டி விஷயத்திலும் நான் மிகக் கண்டிப்பு. பிச்சைக்காரன், நர்ஸ், பைத்தியக்காரன், பாம்பாட்டி, கல்யாண கோஷ்டி, நீக்ரோ போன்ற பார்த்துச் சலித்துப் போன வேஷங்களை அனுமதிக்கமாட்டேன். இந்தியன் ஏர்லைன்ஸ் மகாராஜா, கர்நாடக சங்கீத வித்துவான், மேல்நாட்டு சிஷ்யைகளுடன் தாய்நாட்டுக்குத் திரும்பும் 'மெடிடேஷன் யோகி' என்று புதுசு புதுசாக வேஷங்கள் போட்டுக் கொள்ளும்படி ,கட்டாயப்படுத்துவேன்.

நாடகம் போடுகையில்தான் எத்தனை நகைப்பூட்டும் நிகழ்ச்சிகள். கஷ்டமான ஒரு வேலைக்குக் கிடைக்கும் போனஸ் இது!

ஆங்கில நாடகம். பாரசீக ராஜகுமாரியை நாலைந்து முட்டாள் கவிஞர்கள் பல்லக்கில் தூக்கி வரும் காட்சி. மாணவர்களில் ஒருவன் வராததினால் பல்லக்கைத் தூக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. ஒருவிதமாக ராஜகுமாரியை மேடைக்குக் கொண்டு வந்துவிட்டோம். பிறகு ஆளுக்கு ஒரு கவிதை படித்தோம். ஒவ்வொன்றும் அவளைச் சந்திரன், ரோஜா என்று தூக்கி வைத்துப் பேசியது. அடுத்தபடியாக அலங்கார உடையில் அவள் வெளியே வர வேண்டும். கலர் ஒளியை மேடையின் மீது பாய்ச்சி அதைத் தேவலோகமாக்கினார் 'லைட் பாய்'. பல்லக்கின் பட்டுத் திரை விலகியது. ராஜகுமாரிக்குப் பதிலாகக் கல்லூரி குண்டன் விசுவம் வெளியே வந்தான்! 'ஆடியன்ஸை'ப் பார்த்து அசட்டுச் சிரிப்பு சிரித்தவன், 'இன்று ஏப்ரல் முதல் தேதி' என்று கூறிவிட்டுத் தொள தொள அரை நிஜாருடன் திரைக்குப்பின்னால் ஓடி விட்டான்! பின்னர் ராஜகுமாரி நடந்து மேடைக்கு வந்தாள்!

'சிரசாசன தண்டனை' என்ற வேடிக்கை நாடகம். குருவின் அடக்குமுறையை எதிர்த்து 'ஸ்டிரைக்' செய்கிறார்கள் சிஷ்யர்கள். கதை நடப்பது வேத காலமாகையால் அவர்கள் பின்வரும் 'டெக்னிக்கை' மேற்கொள்கிறார்கள். அதாவது, குரு வகுப்புக்குள் நுழைகையில் பத்மாசனத்தில் இருக்காமல் சிரசாசனத்தில் இருக்கிறார்கள்! இந்தக் காட்சியை மேடையில் நடித்துக் காட்டுவது மிகப் பிரயாசை. அத்தனை சிஷ்யர்களும் திடீரென்று அந்தரடித்துத் தலைகீழாக நிற்க வேண்டுமே! யோகாசன நிபுணர் ஒருவரது உதவியை நாடினேன். அவர் சிரசாசனம் கற்றுத் தருவதுடன் ஒரு சீடனாக நடிக்கவும் ஒப்புக் கொண்டார். ஒத்திகையின் போது சராசரி ஓரிரு மாணவர்களாவது கீழே விழுந்து காயப்படுத்திக் கொண்டார்கள். நாடக தினத்தன்று எனக்கு ஒரே கவலை. முதல் உதவிப் பெட்டியுடன் தயாராக நின்று கொண்டிருந்தேன். என்ன ஆச்சரியம்! அன்று அத்தனை மாணவர்களும் அநாயாசமாகச் சிரசாசனம் போட்டு விட்டார்கள். 'தொபுகடீர்' என்ற சத்தம். யோகாசன நிபுணர் மேடையிலிருந்து உருண்டு கொண்டிருந்தார்!

துப்பறியும் கதை. 'சஸ்பென்ஸ்' காட்சி. விளக்கை மங்கச் செய்தோம். கடமை வீரனான கதாநாயகன் முகமூடி அணிந்தபடி வில்லனிடம் நீண்ட வசனம் பேசிக் கொண்டிருந்தான். உலகத்தில் இருக்கும் அத்தனை இளம் பெண்களையும் சொந்தப் பாட்டியாக நினைத்துக் கும்பிட வேண்டிய அவசியத்தை வற்புறுத்திக் கொண்டிருந்தான். ஆனால் வில்லனாவது, கதாநாயகன் வார்த்தைக்குச் செவி சாய்ப்பதாவது! ஓயாமல் சிகரெட் புகைத்துக் கொண்டிருந்தவன் இருந்திருந்தாற் போல் ஒரு கத்தியை வெளியே எடுத்தான். கதாநாயகனா ஏமாந்து போவான்? '' ஹாண்ட்ஸ் அப் '' என்று கம்பீரமாக மொழிந்து விட்டுத் துப்பாக்கியை எடுப்பதற்காக ஜேபியில் கையை விட்டான். அடுத்த நிமிஷம் கொட்டகையில் ஒரே சிரிப்பொலி. துப்பாக்கிக்குப் பதிலாக மலையாள நேந்திரம் பழம் வெளியே எடுக்கப்பட்டால் யார்தான் சிரிக்க மாட்டார்கள்? துப்பாக்கி இன்னொரு பக்கம் பாக்கெட்டில் தூங்கிக் கொண்டிருந்தது.

குரங்காட்டி வரும் காட்சியில் நிஜமான குரங்கொன்றைக் கொண்டு விட்டான் ஒரு மாணவன். குரங்கின் சேஷ்டைகளைக் காட்டுவதற்காக நாடகத்தில்கூடக் கடைசி நிமிஷத்தில் சில சில்லறை மாறுதல்கள் செய்யப்பட்டன. ஒரு காட்சியில் குரங்கு மேடையை விட்டுத் திடீரென்று இறங்கிச் சென்று முன் வரிசையில் வீற்றிருந்த பிரின்ஸிபால் பூச்சி ஐயங்காரின் பஞ்சகச்சத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு 'விடமாட்டேன்' என்



றது. அவர் ஏற்கனவே பயந்தாங்கொளி. பல் இளிக்கும் குரங்கினிடமிருந்து தப்பித்துக்கொள்வதற்காக 'கௌரவம், மண்ணுங்கட்டி' எல்லாவற்றையும் காற்றில் பறக்க விட்டு நாற்காலியின் மீது ஏறி நின்றார். 'குரங்கைப் பிடி, குரங்கைப் பிடி' என்று அபயக்குரல் எழுப்பினர். குரங்கின் சொந்தக்காரனை மாணவன் அதற்குப் புரியும் பாஷையில் 'விடாதே' என்று கத்திக் கொண்டிருந்தான். ஐயங்காருக்கு இனிமேல் மாணவ மணிகள் காப்பாற்றுவார்கள் என்ற நம்பிக்கை விட்டுப் போயிற்று. அவர் அனுமாரின் உதவியை நாடினர்! 'மனோஜவம் மாருத துல்லிய வேகம்' என்று சுலோகங்கள் சொன்னதுடன் 'மாருதி! ராம தூதா! என்னைக் காப்பாற்று! உனக்கு வடைமாலை சாத்தறேன்' என்று உரக்கவே வேண்டிக் கொண்டார். நாடகத்தை விட இந்தக் காட்சி சுவையாக இருக்கப் போக மாணவர்கள் சீட்டியடித்தார்கள். ஒரு மாணவன் பிரின்ஸிபாலுக்கு 'மைக்'கில் அவசர வேண்டுகோள் விடுத்தான். 'வடை மாலை வேண்டாம். நாடக விழாவை யொட்டி நாளை விடுமுறை என்று சொன்னால் போதும். குரங்கு விட்டுவிடும்' என்றான். வேறுவழியின்றி ஏற்கனவே லீவு விட மறுத்திருந்த பிரின்ஸிபால் 'நாளை விடுமுறை' என்று அறிவித்தார். அதற்குப் பின் அவர் நாடக சங்கத்தின் பக்கம் தலை வைத்துக்கூடப் படுக்கவில்லை!

நாடகம் நடத்துகையில் எனக்கு ஏற்பட்ட கீழ்க் காணும் அனுபவத்தைப் போல் வேறு சிலருக்கும் ஏற்பட்டிருப்பதாகத் தெரிகிறது. நிகழ்ச்சியில் அவ்வளவு புதுமை இல்லாவிட்டாலும் என் வாழ்க்கையில் ஏற்பட்ட அனுபவம் என்ற முறையில் அதையும் குறிப்பிடுகிறேன்.

குண்டூர் மாணவர்கள் 'போஸ்ட் மாஸ்டர்' என்ற என் ஆங்கில நாடகத்தை நடித்துக் கொண்டிருக்கையில் ஓர் அவசர வேண்டுதல் வந்தது. தெலுங்கு காவிய நாடகத்தில் மண்டோதரியாகத் தோன்ற வேண்டிய பிள்ளையாண்டான் வரவில்லையாம். ஆங்கில நாடகம் முடிந்ததும் எங்கள் கதாநாயகியைக் கடன் கேட்டார்கள். குறிப்பிட்ட காட்சியில் ராவணன் அலறுவானே தவிர, மண்டோதரிக்குப் பேச்சே கிடையாதாம். 'மேக்அப் மேன்' மதுசூதன ராவ் நொடிப் பொழுதில் நாகரிகப் பெண்ணான ஷீலாவைப் பழங் காலத்து மண்டோதரியாக மாற்றித் தருவதாக வாக்களித்தார். வாக்களித்ததுடன் தன் வார்த்தையைக் காப்பாற்றவும் செய்தார். ஆனால் மண்டோதரி மேடையில் தோன்றியவுடன் ஒரே சிரிப்பு. சீட்டி, கொம்மாளம். ராவண வேஷம் போட்டு அலற விருந்த குணசித்திர நடிகர் பிரசாத ராவ்கூட அஹ்ஹ ஹஹஹா என்று அசுரச் சிரிப்புச் சிரிக்காமல், ஹிஹிஹி என்று அவுட்டுச் சிரிப்புச் சிரித்து விட்டான். 'ஹைஹீல்ட் ஷூ' அணிந்த மண்டோதரி மட்டும் திருதிரு என்று விழித்தாள்! சமீபத்தில் ஒரு சினிமா நடிகரிடம் இந்த அனுபவத்தைச் சொன்னேன். அந்தக் காலத்து நாடகத்தில் இரணியன் மூக்குக் கண்ணாடியுடன் மேடைக்கு வந்ததைக் குறிப்பிட்டார் அவர்!

கள்ளிக்கோட்டை கதாநாயகன் சுகுமாரன் நாயர் இருந்திருந்தாற்போல் தலையை மொட்டை அடித்துக் கொண்டு விட்டான். அந்த மொட்டைத் தலைக்குத் தகுந்த குல்லாய் தைக்கும்படி கட்டாயப்படுத்தினார்கள் மாணவர்கள். நானும் அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி ஒரு மொட்டைக் கதாநாயகனின் கதையை எழுதினேன். நாடகம் சக்கைப் போடு போட்டது. அடுத்த நாடகத்திலும் கதாநாயகன் மொட்டையாகத்தானிருக்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார்கள் மாணவர்கள். தொடர்ந்து பக்கத்திலிருந்த கல்லூரிகளுக்கெல்லாம் இந்த வியாதி பரவிற்று. கொஞ்ச நாளைக்கு அத்தனை கல்லூரிகளிலும் மொட்டைக் கதாநாயகர்கள் மாணவர்களை மகிழ்வித்தார்கள். மீண்டும் 'கிராப் கதாநாயகனு'க்கு ஒரு 'சான்ஸ்' வாங்கித் தர நான் பட்ட பாடு!

துர்வாசராகத் தோன்றின மாணவி ஆரம்பத்திலிருந்தே கொஞ்சம் கூடுதலாகத் துள்ளினாள். ஒத்திகையின்போது எவ்வளவோ திருத்திப் பார்த்தேன்.



# நடிக்கத் தெரியுமா?

ஜயா பாலகிருஷ்ணன்

ஆனால் குறிப்பிட்ட ஒரு தமிழ் நடிகரை 'மாடலா'க வைத்துக் கொண்டிருந்த அவள் செவி சாய்க்க மறுத்து விட்டாள். கடைசியில் சகுந்தலைக்குச் சாபம் கொடுக்கும் இடத்தில் தீப்பொறி பறக்கும் வசனங்களைக் கக்கின பின், 'பிடி சாபம்' என்று சொல்லுகையில் ஒரு குதி குதித்தாள் பாருங்கள், தாடியும் மீசையும் கழன்று விழுந்து விட்டன. சகுந்தலை அதைப் பொறுக்கித் தர, உள்ளே ஓடின துர்வாசர் முகத்தில் கோபாக்கினிக்குப் பதில் புன்னகைதான் பளிச்சிட்டது!

என் நாடக அனுபவத்தில் நான் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய குணசித்திர நடிகன் கைரளீயா கல்லூரியைச் சேர்ந்த பிரான்ஸிஸ் நைனான். அவன் 'மோனோ ஆக்டிங்'கில் நிபுணன். (வசனம், டைரக்ஷன் எல்லாம் அவனேதான்!) ஏசுநாதரைக் காட்டிக்கொடுத்த ஜூடாஸாகத் தோன்றி அவன் மனச் சாட்சியுடன் போராடுகையில் கொட்டகை அதிரும்படி அலறுவான். (கலையைப் பற்றி ஒன்றுமே தெரியாத பல மாணவக் கழுதைகள் சிரித்தார்கள் என்பதற்காக நடிப்பை நிறுத்தி விடுவதா?) பகத் சிங்காகத் தோன்றித் தூக்குக் கயிறு கழுத்தை இறுக்க இறுக்க என்னமா தீப்பொறி பறக்கும் வசனங்களைக் கக்குவான்? சாக்ரடீஸ் வேஷம்தான் அவனுக்கு மிகவும் விருப்பமானது. விஷக் கோப்பையைக் கையிலேந்தி அவன் 'லெக்சர்' பண்ணுகையில் 'சீக்கிரம் குடிடா' என்று மாணவர்கள் கூவினதற்காக மனம் கலங்கி விடுவானா? கடைசிவரையில் வசனத்தை ஒப்பித்தே தீருவான்!... நைனானைப் பற்றி நான் அந்தக் காலத்தில் கவலைப்பட்டதுண்டு. பட்டம் பெற்று வேலைக்குப் போன பின் அவன் எங்கே அலறுவான்? அந்தச் சிம்மக் குரலுக்கு ஓய்வு என்பது நினைக்க முடியாததாக இருந்தது. நல்ல வேளை! நைனான் கேரளத்து அரசியலில் குதித்து விட்டான். இனிமேல் அவனுக்குச் சுத்துவதற்கு மேடையா இல்லை?

---



# இரண்டு தலைப் பாம்பு

பாம்புகள் எத்தனை வகை உண்டோ அத்தனை வகைக் கதைகள் நம்பிக்கைகள் அவை பற்றி உண்டு. பாம்புகள் பற்றிய தங்கள் சந்தேகங்களை தெளிவுபடுத்துமாறு பாரதத்தின் மூலை முடுக்குகளிலிருந்தெல்லாம் ஒவ்வொரு நாளும் சென்னைப் பாம்புப் பண்ணையில் இருக்கும் எங்களுக்குக் கடிதங்கள் வந்தவண்ணம் இருக்கின்றன. பாம்புகள் பால் குடிக்குமா ? அவை பழி வாங்குமா ? புதையல் காக்குமா ? — இப்படிப் பல கேள்விகள்.

பாம்புகள் பற்றிய சில தவறான நம்பிக்கைகள் உண்மைகளிலிருந்தே தோன்றுகின்றன — அதாவது அளவுக்கு மீறி மிகைப்படுத்தப்பட்ட உண்மைகள். உதாரணமாக மண் பாம்புக்கு இரண்டு தலைகள் உண்டு என்ற நம்பிக்கையை எடுத்துக் கொள்வோம். உண்மையில் இரண்டு தலைப் பாம்பு என்றே அதனைப் பல மொழிகளில் குறிப்பிடுகின்றனர். தமிழ், ஹிந்தி, ஆங்கிலம் ஆகிய மொழிகளிலும் அதற்கு இப்பெயர் உண்டு. இப்பாம்பு ஆறு மாதம் ஒரு பக்கமும், ஆறு மாதம் மற்றொரு பக்கமும் வளரும் என்று நம்புகின்றனர். ஆனால் உண்மை என்ன ? மண் பாம்புக்கு மற்ற எல்லாப் பாம்புகளையும் போல் ஒரு தலையும் ஒரு வாலும்தான் உண்டு. ஆனால் வால் பகுதி கிட்டத்தட்ட தலை போலவே காட்சி அளிக்கிறது. தொலைவிலிருந்து பார்க்கும் போது பழக்கப்பட்ட கண்களுக்கு அல்லாது மற்றவர்களுக்குத் தலைக்கும் வாலுக்கும் வித்தியாசம் தெரியாது. வாலுக்கும் தலைக்கும் உள்ள இந்த ஒற்றுமை இயற்கையின் ஏமாற்று வேலை. இது பாம்புக்குப் பாதுகாப்பு அளிக்கிறது. ஒரு பெரிய பட்சி அல்லது கீரி மண் பாம்பைத் தாக்கும்போது அது தன் தலையைத் தனது உடல் சுருள்களுக்கிடையில் ஒளித்துக் கொள்கிறது. வாலை மட்டும் மேலே உயர்த்துகிறது (படம்). தன்னைத் தாக்க வரும் பிராணி வாலைத் தலை என்று நினைக்குமாறு செய்கிறது. இதனால் பல சந்தர்ப்பங்களில் மண் பாம்பின் வால் காயம் அடைந்து அல்லது கீறல் விழுந்து காணப்படும். ஆனால் தலை தப்பித்துக் கொள்கிறதே !

மண் பாம்பையும் வேறு பல பாம்புகளையும் விஷமுள்ளவையாகக் கருதிப் பார்த்த மறுகணம் அடித்துப் போடுகிறார்கள். ஆனால் உண்மையில் மண் பாம்பும் வேறு பல பாம்புகளும் விஷமற்றவை. துன்பம் விளைவிக்காதவை. எலிகளை அவை உண்பதால் நமது உற்ற நண்பர்கள். பாம்புகளைக் கொல்வதை நாம் முடிந்த மட்டும் தவிர்க்க வேண்டும்.

அவை எலிகளை ஒழித்து நமது உணவு தானியங்களைக் காக்கின்றன. நன்கு வளர்ந்த ஒரு சாரைப் பாம்பு ஒரு வாரத்தில் ஆறு எலிகளைச் சாப்பிட்டுவிடும் என்பதையும் இந்தியாவில் நமது உணவு தானியத்தில் முப்பது சதவீதத்தை எலிகளிடம் பறி கொடுக்கிறோம் என்பதையும் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். —ஸாஹிடா விட்டேக்கர்.

தமிழாக்கம் : குட்டிகிருஷ்ணன்

சின்ன விஷயங்களைக்கூட அவனால் சரியாகச் செய்ய முடியவில்லை.

சிகரெட் பிடிப்பான்; அணைக்காமல் கீழே போட்டு விடுவான். இப்படித்தான் வீட்டில் தீப்பற்றிக் கொண்டது. அதிகமாக இல்லை, துணிமணிகள் — மரச் சாமான்கள் — பாத்திரங்கள் — சில புத்தகங்கள் — இவைதாம் நாசம். புகை விட்டுக் கொண்டே, 'இந்தப் பழக்கத்தை நாளைக்கே விட்டுவிடலாமா ?' என்று நினைத்தான். நாளைக்கு... ஒவ்வொரு நாளும் நாளைக்கு !

ஒரு வாரமாக ரிப்பேர் என்பதை மறந்து, ரேடியோவைத் திருகினான். நாளைக்காவது பழுது பார்க்கக் கொண்டு போக வேண்டும். பிரிட்டிஷ் கவுன்சிலிலிருந்து மூன்று புத்தகங்களை எடுத்து வந்திருந்தான். படிச்சுக் கிழிச்சு விடுபவனைப் போல்... ஒரு பக்கம்கூடப் படிக்கவில்லை. தூசு படிந்து கிடக்கின்றன அவை, மேஜையில்.

அதிகாலையில் எழுந்து 'வாக்கிங்' போக வேண்டும். அல்லது வெள்ளை ஆஃப் பேன்ட், வெள்ளைப் பனியன் போட்டுக் கொண்டு, வெள்ளை கேன்வாஸ் ஷூ போட்டுக் கொண்டு கையில் 'ராக்கெட்'டைப் பிடித்துக் கொண்டு டென்னிஸ் ஆடப் போக வேண்டும் என்று நினைப்பான். அதிகாலையில் எழுந்திருக்க எங்கே முடிகிறது ? நிச்சயம் நாளைக்கு...

''இன்றைக்கு முதல் தேதி'' என்றாள் ராதை.

தூக்கத்தைக் கெடுக்கிறாள். கண்களைத் திறக்காமலே, ''தெரியும்'' என்றான்.

''நான் கேட்டது...''

''கிடைக்கும், நாளைக்கு!''

இது பத்தாவது தடவை. அவனுக்கு வேலை கிடைத்தபோது, முதல் மாதச் சம்பளத்தில், தனக்கொரு பட்டுப் புடவை வாங்கித் தர வேண்டும் என்று ராதை, அவன் தங்கை— கேட்டிருந்தாள். சம்மதித்திருந்தான். கேட்ட நேரம் ராசியில்லாத நேரம்.

முதல் மாதச் சம்பளத்தை வாங்கிக் கொண்டு, மகிழ்ச்சியோடு வந்து கொண்டிருந்தபோது, வழியில் நண்பர்கள் சிலர் சேர்ந்தார்கள். அவர்களோடு விடிய விடிய 'ரம்மி'யாடிப் பணம் முழுவதையும் தோற்றான். காலையில் ஒருவரிடம் பத்து ரூபாய் கடன் வாங்கிக் கொண்டு வீடு திரும்பினான்.



# நாளைக்கு...

டீ. நமசிவாயம்

□ □ □

பெண்களை அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். அழகான பெண்களை...! ஆனால் அம்மாவிடமும், தங்கையிடமும் தவிர, வேறு எந்தப் பெண்ணிடமும் பேசியதில்லை. யாரையாவது காதலிக்க விரும்பினான். யாரும் அவனைக் காதலிக்கவில்லை, ஸ்பேட்ஸ்ராணியைத் தவிர.

ஒரு மாதத்துக்கு முன்பு — புதன் கிழமை என்று ஞாபகம் — காலை எட்டரை மணிக்கு வழக்கம்போல் எழுந்தான். குளிப்பதற்கு ஐந்து நிமிஷங்கள்; உடை மாற்றிக் கொள்வதற்கு ஐந்து நிமிஷங்கள்; பறந்து பறந்து ஓடி, பஸ்ஸைப் பிடிக்க வந்தான்.

அன்று அவள் மட்டுமே இருந்தாள். அழகாக இருந்தாள். மல்லிகை சூடிய பெண்களை அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். மல்லிகை சூடியிருந்தாள். சந்திரா என்ற பெயர் அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். அவள் பெயரும் சந்திரா. (அதைத் தெரிந்து கொள்ளச் சில நாட்கள் பிடித்தன.) காலேஜ் லெக்சரர் வேலை பார்க்கும் பெண்களை அவனுக்கு ரொம்பப் பிடிக்கும். அவள் லெக்சரராக இருந்தாள். சுருக்கமாக, முதல் நாள், முதல் சந்திப்பிலேயே அவளை அவனுக்குப் பிடித்துவிட்டது.

அப்பொழுது அவன் சற்றும் எதிர்பாராமல், அவளே அவனிடம் பேசினாள் : ''குட்—மார்னிங் ! டைம் ப்ளீஸ்...''

'சரியாகத் தலை வாரியிருக்கிறானோ ?' அவனுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. கடிகாரம் கட்டிக் கொள்ள மறக்கவில்லையே ? நல்ல வேளை! ''ஒன்பதுக்கு ஐந்து நிமிஷம்.''

''தேங்க்ஸ் !'' — ஒரு புன்னகை.




''குட்மார்னிங் !'' என்றான் பதிலுக்கு.

பஸ்ஸில் ஏறி உட்கார்ந்ததும், கண்டக்டரைப் பார்த்துச் சொன்னான் : ''குட்மார்னிங் மவுண்ட் ரோடு போஸ்ட் ஆபீஸ் ஒன்று....'' பஸ்ஸில் இருந்தவர்கள் 'ஆசாமி ஒரு மாதிரியோ' — என்று சந்தேகமாகப் பார்த்தார்கள். பஸ்ஸை விட்டிறங்கிச் சிறிது தூரம் நடந்ததும் ஒரு பெட்டிக்கடை. கடைக்காரனிடம் கேட்டான் : ''குட்—மார்னிங் ! ஒரு பாக்கெட் வில்ஸ் — வில்ஸ் பில்டர்.''

அன்று முழுதும் அதைத் தொடர்ந்தும் அவன் உற்சாகம் நீடித்திருக்கும். ஒரு தவறு செய்துவிட்டான். மாலையில் நண்பர்கள் ஒரு புதிய இடத்துக்கு 'ரம்மி' விளையாட அவனை அழைத்தார்கள். அவன் போயிருக்கமாட்டான். முதலிலேயே அது அவள் வீடு என்று தெரிந்திருந்தால்...!

◘ ◘ ◘

ஒரு படை போல் அவர்கள் அந்த வீட்டுக்குள் நுழைந்தபோது, சோபாவில் புத்தகம் படித்துக் கொண்டு உட்கார்ந்திருந்த அவள் எழுந்து, ''யார் வேண்டும் ?'' என்று கேட்டாள். ''நான்தான் சந்திரா வரச் சொன்னேன்'' என்று அவள் சகோதரன் உள்ளேயிருந்து வந்தான். ''மாடிக்குப் போய்விடலாம், வாருங்கள். அங்கே ஒரு தொந்தரவும் இருக்காது.''

மெல்ல நழுவிவிடலாமா என்று நினைத்தான். விடமாட்டார்களே, பாவிகள். மாடிப்படி ஏறிக் கொண்டிருக்கையில் திரும்பி ஒரு தடவை பார்த்தான். அவள் காணப்படவில்லை. என்ன எண்ணியிருப்பாள் அவனைப் பற்றி ? நிச்சயமாக உயர்வாக எண்ணியிருக்கத் தோன்றுது.

மாலை ஆறு மணிக்குத் தொடங்கிய ஆட்டம் இரவு பத்தரை மணி வரை நடந்தது. அவனைத் தவிர, மற்றவர்கள் உற்சாகமாக ஆடினார்கள். சத்தம் போட்டுப் பேசினார்கள்; சிரித்தார்கள். ''மெதுவாக...மெதுவாக....'' என்று அவன்தான் அவர்களை அடக்கினான். சிலர் சிகரெட் பிடிக்க நெருப்பைப் பற்ற வைத்த போது, ''ப்ளீஸ்...இங்கே வேண்டாம். காப்பி சாப்பிடலாம்'' என்றான்.

ஆட்டம் முடிந்து அவர்கள் புறப்பட்ட போது, இந்நேரம் அவள் தூங்கியிருந்தால் நல்லதென்று நினைத்தான். இல்லை. அவளுடைய அறையில் விளக்கெரிந்து கொண்டிருந்தது. ஜன்னல் வழியாக ஒரு ஜோடி விழிகள் அவனை நோக்கிக் கொண்டிருந்தன. அவை அவளுடையவையென்று அவனுக்குத் தெரியும். நாளையிலிருந்து சீட்டையே கையில் தொடுவதில்லை என்று சத்தியம் செய்து கொண்டான்.

◘ ◘ ◘

மறு நாள் விடிந்த நேரம் சரியாக இல்லை. பஸ் ஸ்டாப்புக்கு அவன் வந்தபோது, அவள் இருக்கவே செய்தாள். கொஞ்சம் துணிச்சலோடு அவளைப் பார்த்து, ஒரு புன்னகை செய்தான். அவளும் புன்னகை செய்தாளா எனத் தெரியவில்லை. ரம்மியில் பணத்தை மட்டும் இழக்கவில்லை; காதலையும் இழந்தாச்சு என்று நினைத்தான்.

விடை :

**NO 17**



நெம்பர் 17க்குள் இலக்கம் ஒளிந் திருக்கிறது. தலைகீழாகத் திருப்பிப் பாருங்கள்.

---

பஸ்ஸில் ஏறிப் பத்து ரூபாய் நோட்டை நீட்டினுன். கண்டக்டர், ''சில்லறை இல்லே சார்; இறங்கிக் கொள்ளுங்கள்'' என்ருன். கண்டக்டரோடு தகராறு. கேண்டினில் ஆறிப் போன காப்பியைக் கொண்டு வந்து வைத் தான் சர்வர். அவனேடு மோதல். ஆபீஸில் வேலே ஓடவில்லே. மாலேயில் சினிமாவுக்குப் போஞன். படத்தை ரசிக்க முடியவில்லே. பாதியிலேயே திரும்பி விட்டான். ஆரம்பத்தி லேயே அவள் அவனேப் பற்றித் தப்பாக எண் ணும்படி நேர்ந்துவிட்டதே. அதை மாற்ற அவன் ஏதாவது செய்தாக வேண்டும். இவ் விஷயத்தை நாளேக்கு... நாளேக்கு.... என்று ஆறப் போட்டுவிடக் கூடாது. என்ன செய்ய லாம் ?

இரவு நீண்ட நேரம் வரையில் யோசித்து, இந்த முடிவுக்கு வந்தான். தன் நிலேயை விளக்கி அவளுக்கொரு கடிதம் எழுதுவது... கடிதத்தை உடனே எழுதத் தொடங்கினுன்.

என் சின்ன ராணி !

என் சிறிய இதயத்தில் பெரிய இடத்தை நீ பிடித்துக் கொண்டிருப்பதால், உன்னே ராணி என்று அழைக்கிறேன், உரிமையோடு. உன் னிடம் முக்கியமானதொரு விஷயத்தைப் பற்றிப் பேச வேண்டியதிருக்கிறது.

நான் உன் மீது கொண்டிருக்கும் அன்பில், ஆயிரத்தில் ஒரு பங்கு என் மீது உனக்கு இருந் தால், காலேஜுக்கு 'லீவ்' போட்டுவிட்டு, நாளேக் காலே பதினெரு மணிக்கு அமெரிக்கன் லேப்ரரிக்கு வா. நான் ஆபீசுக்கு இன்றும் நாளேயும் லீவு போடுகிறேன். தவருமல் வா. உனக்காகக் காத்திருப்பேன்.

உன் அன்பான,

..............

பின்னர், இரண்டு நாட்கள் லீவு வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டு ஆபீஸ் மானேஜருக்கு ஒரு கடிதம் எழுதிவிட்டுத் தூங்கினுன். காலேயில் போஸ்ட் ஆபீசுக்குப் போய் இரண்டு கவர் வாங்கினுன். தான் எழுதியதை ஒவ்வொரு கவரிலும் வைத்து ஒட்டினுன். பிறகு இரண்டு கவரிலும் விலாசம் எழுதிப் பெட்டியில் போட்டுவிட்டு விட்டுக்கு வந்தான்.

அடுத்த நாள் அமெரிக்கன் லேப்ரரிக்கு விஜயம் செய்த முதல் நபரே அவன்தான். மணி பதினென்று. பதினென்று முப்பது. பன்னிரண்டு. அவனுக்குச் சற்றுச் சலிப்புத் தட்டிற்று. 'போர்' அடிக்கிறுளே. ஒரு சிகரெட் பிடிக்கலாமா? சே, கூடாது. அந்த நேரத்தில் அவள் வந்து தொலேப்பாள்! மணி ஒன்று. வருவாளா, மாட்டாளா ? ஒரு சந் தேகம். என்னேக் காதலிக்கிறுளா, இல்லேயா? மற்றெரு சந்தேகம். மணி இரண்டாவதற் குள் ஆயிரம் சந்தேகங்கள் தோன்றின. இரண் டரை. பசிக்க ஆரம்பித்தது. சாப்பிட்டு விட்டு வரலாமா? வேண்டாம். அந்த நேரத் தில் வந்து பார்த்துவிட்டுத் திரும்பிவிடப் போகிறுள் ! மூன்று. உட்கார்ந்தபடியே தூங்க ஆரம்பித்தான். ஆருவதற்குச் சில நிமிஷங்கள் இருந்தபோது, ''நேரமாகிவிட் டது. லேப்ரெரியை மூடப் போகிறேம்'' என்று பணிவாகச் சொல்லி, அவனே எழுப்பி விட்டார்கள்.

◘ ◘ ◘

''மானேஜர் உங்களேக் கூப்பிடுகிருர்'' என்று பியூன் ராமசாமி சொன்னுன். 'எதற் காக இருக்குமோ' என்று யோசித்துக் கொண்டே அவருடைய அறைக்குப் போனுன். ஹெட்கிளார்க் ரங்கநாதனும், டைப்பிஸ்ட் வத்சலாவும் அங்கே இருந் தார்கள்.

'' நீர் வேலே செய்கிற லட்சணத்தைப் பாரும் !'' என்று ஒரு கவரை அவனிடம் விட்டெறிந்தார் மானேஜர்.

அதை எடுத்துப் பிரித்தான்.

''படியும்... சத்தம் போட்டுப் படியும்.''

படித்தான். ''சந்திரா, என் சின்ன ராணி ! என் சிறிய இதயத்தில் பெரிய இடத்தை....''

மானேஜரும், ரங்கநாதனும், வத்சலாவும் ஏன் விழுந்து விழுந்து சிரிக்கிருர்கள் ? இது... ஓ... இது அவன் சந்திராவுக்கு எழுதிய கடிதம் ! இங்கே எப்படி வந்தது ? கவரின் மேல் எழுதியிருந்த விலாசத்தைப் பார்த் தான். ஆபீஸ் விலாசம். அப்படியாளுல்.... புரிந்துவிட்டது. 'லவ் லெட்டரை' ஆபீசுக் கும், லீவ் லெட்டரைச் • சந்திராவுக்கும் அனுப்பியிருக்கிறுன். அவசரத்தில் இந்தச் சின்ன விஷயத்தைக்கூட....

வத்சலா இன்னும் சிரித்துக் கொண்டிருந் தாள்.

'' சார்..... இது....''

''கடைசியாக உம்மை எச்சரிக்கிறேன். இந்த மாதிரியான பைத்தியக்காரத்தனமெல் லாம் வேண்டாம் !'' என்ருர் மானேஜர்.

''நான் மடையன் சார் !''

''காதலில் குதித்துவிட்டால், எல்லாருமே முட்டாள்களாகி விடுகிருர்கள்!'' என்ருள் வத்ஸலா.

'' உமது காதலியைப் பார்ப்பதற்காக ஆபீசுக்கு லீவு போட வேண்டியதில்லே. ஆபீஸ் முடிந்த பிறகு, சாயங்கால வேளேயில் சந்திக்கலாம்!'' என்ருர் மானேஜர். அவன் அந்த அறையைவிட்டு வெளியேறிய போது, மூவரும் குபீரென்று சிரித்துக் கொண்டிருந் தார்கள். வெட்கம். அவன் செய்த காரியத் தைக் கண்டு இப்போது இந்த ஆபீஸ் சிரிக் கிறது. நாளே இந்த நகரமே சிரிக்கப் போகி றது. சந்திராவுக்கு இது தெரிந்தால்....



ஆதாயம் இல்லாத செட்டியார் கதை!

'ஆதாயம் இல்லாத செட்டியார் ஆற்றோடு போவாரா?' என்கிற பழமொழி எப்படி வந்தது தெரியுமா?

ஓர் ஊரில் ஒரு செட்டியார். மிகவும் சாமர்த்திய சாலி! தருமம் செய்தால் கூட விளம்பரம் வரும்படி பார்த்துச் செய்வார். இது அந்த ஊரில் எல்லோருக்கும் தெரியும். ஒரு நாள் அவர் ஆற்றைக் கடந்து கொண்டிருந்தார். திடீரென்று ஆற்றில் வெள்ளம் வந்துவிட்டது! செட்டியாரைக் கீழே தள்ளி உருட்டிக் கொண்டு போயிற்று வெள்ளம். அது சமயம் இருவர் கரை மீது நடந்து வந்து கொண்டிருந்தனர். ஒருவன் செட்டியாரைப் பார்த்துவிட்டான். மற்றவனிடம் ''செட்டியாரை வெள்ளத்தில் அடிங்சுண்டு போகிறது போலிருக்கே; காப்பாற்றுவோமா?'' என்றான். மற்றவன் சொன்னான்: ''அட நீ ஒண்ணு, நம்ப செட்டியார் ஆதாயம் இல்லாமல் போகமாட்டார். ஏதாவது காரணம் இருக்கும். நீ பேசாமல் வா!''

- கிட்டு

---

'சரியான கோமாளி!' என்று அவளும் அவனைப் பார்த்துச் சிரிப்பாள்.

சோர்ந்து போய் ரோட்டில் நடந்துகொண்டிருந்தான். திடீரென்று அது சம்பவித்தது. பயங்கர வேகத்தோடு பின்னால் வந்து கொண்டிருந்தது அந்த லாரி. டிரைவர் பல முறை ஹார்ன் அடித்தார். அவன் அதையெல்லாம் கவனிக்கவில்லை. '' சார்.... சார்!'' என்று அவர்கள் ஏன் கத்துகிறார்கள்? அந்தப் பாத சாரி திடுக்கிட்டு ஏன் நின்றுவிட்டார் அப்படியே? திரும்பினான். புயல் போல் விர்ரென்று வந்து கொண்டிருக்கும் லாரிக்கும், அவனுக்கும் அதிகத் தூரம் இல்லை. ஒதுங்குவதற்கும் நேரமில்லை. செத்தான். 'ஓ...' என்ற அலறல் கிளம்பி, அவனுள்ளேயே அடங்கிற்று.

நிலை தடுமாறினான். ஓரங்குல இடைவெளியில் லாரி அவனைக் கடந்து சென்றபோது, யாரோ அவனைப் பிடித்துக் கீழே தள்ளியதைப் போல் விழுந்தான். ஜனங்கள் அவனைச் சூழ்ந்து கொண்டார்கள். எல்லாரும் லாரிக்காரனைத் திட்டினார்கள். ஒரு நிமிஷம். மெல்ல அவன் எழுந்து உட்கார்ந்தான். ''பலமான அடியா சார்?'' என்றனர் சிலர். '' சார் அதிர்ஷ்டக்காரர்! செத்துப் பிழைத்திருக்கிறார்!'' என்றார் ஒருவர்.

லாரி மோதி அவனைத் தூக்கி எறிந்திருந்தால்.... ஓர் எலும்புகூட மிஞ்சியிருக்காது. அதன் பிறகு அழகிய பெண்களை அவனால் பார்க்கவே முடியாது. குழந்தைகளின் சிரிப்பைக் கேட்க முடியாது. நட்சத்திரங்களைப் பார்க்க முடியாது. மலர்களின் மணத்தை நுகர முடியாது. லதா மங்கேஷ்கர் பாட்டைக் கேட்கவே முடியாது. க்ளார்க் கேபிள், ராக் ஹட்சன், ஜெர்ரிலூயிஸ், சோபியா லாரன் படங்களைப் பார்க்கவே முடியாது. அம்மா ஆசையோடு செய்து கொடுக்கும் பால் கொழுக்கட்டையைச் சாப்பிட முடியாது.

வாழ்க்கை எவ்வளவு இனிமையானது, மனோகரமானது, மகத்தானது, அர்த்தமுள்ளது, அற்புதமானது, செத்த பிறகு திரும்பக் கிடைக்கவே கிடைக்காதது! அதை அநியாயமாக ஒரு நிமிஷத்தில் இழக்கவிருந்தான். இன்று முதல் — இப்பொழுது முதல்—ஒரு நாளையும் — ஒரு நிமிஷத்தையும் வீணுக்கக் கூடாது. புது மனிதனாக எழுந்து நடந்தான்.

அதோ, சந்திரா! பஸ் ஸ்டாப்பில் நின்று கொண்டிருக்கிறாள். நாளை... நாளை... நாளை என்பதே வேண்டாம். உடனே செயலில் இறங்கு. அடுத்த நிமிஷம் என்ன நடக்கும் என்று உனக்குத் தெரியாதே. திடுமெனச் சந்திராவின் முன் நின்றான். ஒரு துண்டுக் காகிதத்தில் சில வரிகளை எழுதினான். அவளிடம் நீட்டினான்.

படித்துவிட்டு, '' பிரயோஜனமில்லை!'' என்றாள்.

'' சந்திரா! நீ என்னைக் காதலிக்கவே இல்லையா?'' (முன்பே தெரிந்திருந்தால் அந்த லாரியிலேயே அடிபட்டுச் செத்திருக்கலாம்!)

'' நான் அதைச் சொல்லவில்லை!''

'' வேறு எதைச் சொல்கிறாய்?''

'' 'சந்திரா, ஐ லவ் யூ!' என்பதை 'சந்திரா, ஐ லிவ் யூ!' என்று எழுதியிருக்கிறீர்களே... அதை!''

'' சந்திரா, எம். ஏ. அவர்களே! தவறு இருந்தால் திருத்துங்கள். ஆயுள் முழுவதும் உங்களிடம் பாடம் கேட்கத் தயாராக இருக்கிறேன். ஐ லவ் யூ, சந்திரா!.... ல...வ்.... ஆட்சேபணை இல்லையே?''

''இல்லை!'' என்றாள் வெட்கத்துடன்.

''இன்னொரு தரம்.''

''இல்லை.''

''இன்னும் ஒரே ஒரு தரம்.''

''இல்லை... இல்லை... இல்லை.''

'' ஹுர்ரே...'' என்று அவள் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு ஓடினான். ''எங்கே போகிறோம்?'' என்றாள்.

''ரயில்வே ஸ்டேஷனுக்கு.''

'' எதற்காக?''

''கொடைக்கானலுக்கு இரண்டு டிக்கெட் ரிசர்வ் பண்ண...''

'' ஏன்?''

''நம் ஹனிமூனுக்கு.''

'' நாளைக்குப் பார்த்துக் கொள்ளலாமே.''

'' அந்தப் பேச்சே வேண்டாம். இன்று... இன்று... இன்று என்பதே நன்று!''

வழியில் ஒரு சில்க் எம்போரியம். தங்கை ராதையின் நினைவு வந்தது. உள்ளே நுழைந்துவிட்டான் சந்திராவோடு.

நாளை என்ற பேச்சு இனி எப்போதுமே அவனிடம் இல்லை.

அந்த உறையைப் பிரிக்காமலேயே திருப்பித் திருப்பிப் பார்த்தாள் ரஞ்சனி. அவள் பெயருக்கு வந்த உறைதான் அது. அந்தச் சந்தேகம் இன்னும் போகவில்லை. ஒரு பிரபல 'பியூட்டி கிளினிக்குக்கு'ச் சென்ற மாதம் பேட்டிக்குப் போய் வந்திருந்தாள். அங்கே வேலைக்கு வந்து சேர வந்த உத்தரவு அது. யாருக்காவது அனுப்ப வேண்டிய உத்தரவை அவள் பெயருக்கு – முகவரிக்கு அனுப்பிவிட்டார்களா?

''என்ன தபால் ரஞ்சனி?'' – உள்ளே இருந்து அம்மாதான் கேட்டாள்.

''போன வாரம் பேட்டிக்குப் போய் வந்தேனே... அந்த வேலைக்கு உத்தரவு வந்து விட்டது.''



# அழகு

லட்சுமி ராஜரத்னம்

அம்மாவின் முகத்தில் மலர்ச்சி. கணவர் இறந்து ஐந்தாண்டு காலம் ஆகிறது. ரஞ்சனி, கஸ்தூரி என்ற இரு மகள்கள் கொண்ட சிறு குடும்பம்தான். கணவர் வைத்து விட்டுப்போன பணத்தை எடுத்துச் செலவழித்துக் கொண்டே போனால்? இப்படிப்பட்ட சூழ்நிலையில் அவளுடைய வருமானம் எத்தகைய வரவேற்பைப் பெறும் என்பது புரிந்த விஷயமே!

''போ, சுவாமி படத்தண்டை வைத்து நமஸ்காரம் செய். கடைசியில் கண் திறந்து விட்டார். நீயும் எத்தனை இடங்களுக்குப் போய் அலைந்து திரிந்தாய். இப்படி ஒருநாள் மாப்பிள்ளைப் பையனிடமிருந்தும் திடீரென்று பெண்ணைப் பிடித்துவிட்டது என்று கடிதம் வராதா?'' – ஏக்கப் பெருமூச்சுகள் அவள் நெஞ்சிலிருந்து எழுந்தன.

கல்யாணம்தான் தகையவில்லை. வேலைக்குப் போய் வருவதில் என்ன தவறு! அவளுடைய பிரச்னை அவர்களுக்குப் புரியாது. கண்ணாடியில் காட்டிய அவள் உருவம்! கறுப்பாக இருந்தால்தான் என்ன? கொஞ்சமாவது லட்சணமாக இருக்கக் கூடாதா? தனக்கு எப்படி ஒரு ப்யூட்டி க்ளினிக்கில் வேலை கிடைத்தது? நினைத்து நினைத்து ஆற மறுத்தது மனம்.

தன்னை அழகுபடுத்திக் கொள்ள வரும் அழகிகள் முன்பு அவள் விகாரமாக விளங்க, திரும்பிய பக்கமெல்லாம் கண்ணாடிகள் அவளைப் பிரதிபலித்து ஏச... அப்பப்பா! என்ன கொடுமை! அவள் இந்த வேலைக்குப் போக வேண்டுமா?

மாலையில் அவள் தங்கை கஸ்தூரி திரும்பி வந்தாள். ''ஹாய், அக்கா! கங்க்ராஜுலேஷன்ஸ். வேலை கிடைத்து விட்டதாமே? அதுவும் பியூட்டி பார்லரில்!'' என்று கேட்டாள் கஸ்தூரி.

'அதுவும் பியூட்டி பார்லரில்' என்பதற்கு என்ன பொருள் இருக்க முடியும் என்று ரஞ்சனிக்குப் புரிந்தது.

கஸ்தூரி நல்ல அழகு. மூக்கும் விழியுமாகச் சித்திரத்தில் வரைந்தாற்போல என்று புகழும் வண்ணம் ஓர் அற்புத ஒயில்! முகம் கழுவித் துடைத்துக் கொண்டு நின்ற அவளைப் பார்த்தாள் ரஞ்சனி. பளிங்கைத் துடைத்து மெருகு ஏற்றியது போன்ற வழுவழுப்பான முகம். மெல்ல எழுந்த பெருமூச்சுக்கள் அடங்கின அவளுக்குள். மலிவாகப் பிளாட்பாரத்தில் வாங்கிய சோளித் துணிகள் உடலோடு ஒட்டினாற்போல் எத்தகைய பொருத்தம்! அவள் எதை உடுத்தினாலும் அழகுதான் தெறிக்கும்.

''எவனாவது வந்து கஸ்தூரியை அவளுடைய அழகுக்காகவே கொத்திக்கொண்டு போய்விடுவான். என் கவலையெல்லாம் ரஞ்சனியைப் பற்றித்தான்'' என்பாள் அம்மா.

ஊசியாகக் குத்தும் பேச்சுக்கள். அம்மாவின் பேச்சில் பாரபட்சம்தான் புரியும். கவலையோ, தாபமோ புரிவதில்லை. தன்னை–தன் குறையைப் பற்றி மட்டுமே விசாரக் கற்பனை ஓட்டங்கள். அதில் மற்றவர்களுக்குப் பங்களித்து இணைத்துத் துணை சேர்த்துக் கொள்ள விரும்பாத தனிமை.

"ஹல்லோ, குட்மார்னிங் ரஞ்சனி!'' நிரஞ்சன் கூறினன்.

தடுமாற்றத்துடன் தலைநிமிர்ந்த ரஞ்சனி அவசரமாகக் 'குட்மார்னிங்' போட்டாள். ஸ்டீம் பாத்திற்காகச் சுடு தண்ணீர் தயாரிப்பில் பதமான கொதி நிலைக்காக இயந்திரத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள். அவளுடன் வேலை பார்க்கும் நித்யா, நிரஞ்சன் பற்றி நிறையக் கூறியிருந்தாள்.

இந்த அழகுக் கலையைப் பயில அவன் ஜப்பான், ஜெர்மன், பாரீஸ் என்று பல தடவைகள் மேனுடுகளில் சுற்றி வந்திருந்தான். வந்த சில நாட்களிலேயே அவனுடைய கலா ரசனைகள் அவளுக்குப் புரிந்து விட்டன. சற்று நேரம்கூடச் சோம்பிஇராத சுபாவம், புதிது புதிதாக எதையாவது செய்ய வேண்டும் என்ற துறுதுறுப்பு. அந்த வகையில் மற்றவர்களையும் வேலை வாங்கும் லாகவமான பேச்சுத் திறன். புரியும் வகையில் சொல்லும்பொழுது 'இன்னும் கொஞ்சம் பேசிக் கொண்டிருக்க மாட்டோமா' என்று ஆவலைத் தூண்டவைக்கும் சங்கீதக் குரல்.

சில சமயம் போனில் அவள்தான் பேசுவாள். அவசியமானல் தான் நிரஞ்சனுக்குத் தொடர்பை இணைத்து விடுவாள். அப்பொழுது வனிதா என்ற பெயரில் அடிக்கடி கேட்கும் ஒரு பெண் குரல். அவனை மட்டுமே அழைத்துப் பேசும் ஆர்வம் துள்ளும் நளினம். அவள் தன்னைச் சுருக்கிக் கொள்வாள். அப்பொழுதெல்லாம் கண்களை மலர்த்திக் கண்ணுடியைப் பார்ப்பதில்லை. அவனையும் ஏறிட்டுப் பார்க்கத் துணிவதில்லை.

கல்யாண வீட்டின் ரிஸப்ஷனுக்காக மணமகளுக்கு அலங்கரிக்கச் செல்ல வேண்டும் அவள். தனியாகப் போகும் முதல் தினம். மனத்தில் பரபரப்பு. நேரமாகவில்லை என்ற தைரியத்தில் நிரஞ்சன் போட்டு அனுப்பிய 'டைக்கிராம்' ஒன்றைப் பார்வையிடத் தொடங்கினுள். புது மாதிரி தலையலங்காரம்.




அவள் கவனம் அதில் ஒன்றி விட்டது.

''குட் ஈவினிங் மேடம்.''

''உங்களுக்கு என்ன வேண்டும்? ஏதாவது அலங்காரமா, இல்லை எக்ஸர்ஸைஸ் பண்ண வேண்டுமா?'' என்றுள்.

பெரிய மனிதர் வீட்டுப் பெண்கள் பெருமைக்காக 'ஸ்டீம் பாத்'துக்கு வந்து போவார்கள்.

''இதெல்லாம் தேவையில்லை. நிரஞ்சன் இருக்கிருரா? என்னை வரச் சொன்ஞர். ஐயாம் வனிதா.''

திடுக்கிட்டு நிமிர்ந்தாள். அடிக்கடி போனில் பேசும் குரல் அவள் முன்பு அழகான கொடி போன்ற



**நாலு பேர்கள் !**

நாலு பேரிடம் நல்ல பெயர் வாங்கு ! நாலு பேருக்கு நல்லதைச் செய் ! நாலு பேருக்கு மரியாதை கொடு ! இப்படி நாலு பேர் நாலு பேருன்னு பெரியவர்கள் அடிக்கடி சொல்கிறார்களே ! ஏன் ஐந்து பேர் ஐந்து பேருன்னு சொல்லக் கூடாது என்றால் கடைசியில் நம்மை முன்பக்கம் இரண்டு பின்பக்கம் இரண்டு என்று 'பாலன்ஸ்' தவறாமல் தூக்கிக் கொண்டு போகிறவர்களை நினைவுறுத்தத்தான் !

- கண்ணதாசன் சொற்பொழிவினிடையில் கூறக் கேட்டது - - கிட்டு

வடிவில் நிரஞ்சனைத் தேடிக் கொண்டு நின்றது.

''ஓ எஸ். ப்ளீஸ் கோ திஸ் சைட்'' என்று கையை நீட்டி வழியைக் காண்பித்தாள்.

உண்மையிலேயே வனிதாவுக்கு இந்தப் பயிற்சிகளும் செயற்கை அழகும் தேவையில்லை. இயற்கையான அழகு அவளிடம் செழித்துக் கிடந்தது. ரஞ்சனி அப்படியே உட்கார்ந்துவிட்டாள்.

''ரஞ்சனி!'' நிரஞ்சன் அப்படிப்பட்ட காரமான குரலில் அவளை அழைத்ததேயில்லை.

''எஸ்...'' உள்ளே ஓடினாள் அவள்.

''கல்யாண வீட்டுக்குப் போக நேரமாகவில்லை? அங்கிருந்து ஃபோன் வந்து விட்டது. உங்க 'எங்கேஜ்மெண்டை' எல்லாம் நான் நினைவுபடுத்த வேண்டுமா? 'இர்ரெஸ்பான்ஸிபிள்'!'' என்று பொரிந்தான் நிரஞ்சன்.

இப்படி ஒரு தவறு இதுவரையில் நேர்ந்ததில்லை. முதல் முறையாக நேர்ந்து விட்டது! அதுவும் வனிதா முன்பு! கண்களில் ததும்பிய நீரைக் கரை கட்டிச் சமாளித்தவளாக ''ஸாரி அங்குதான் கிளம்பிக் கொண்டிருக்கிறேன்'' என்று கூறியபடியே வெளியேறினாள். நடை தளர்ந்து விட்டது.

''நாளை நாம் குமரன் ஆர்ட் அகாடமியில் போஸ் கொடுக்கணும். நினைவிருக்கா? அதற்காகத்தான் நான் முக்கியமாக வந்தேன்'' என்றாள் வனிதா. அது ரஞ்சனியின் காதில் மோதியது.

'வனிதா ஒரு மாடல் கேர்ளா! அழகு, கவர்ச்சி, இனிமை என்று எல்லாம் பொருந்தி இருக்கிறது. அதனால் நிரஞ்சன் நெஞ்சில் சீக்கிரமாகக் குடிபுக முடியும்' என்று பொருமினாள் அவள்.

நிரஞ்சன் மாடலாக நின்ற 'போஸ்'களை நித்யா சுட்டிக் காட்டியது அவள் நினைவுக்கு வந்தது. அவனுடன் ஜோடியாகப் போஸ் கொடுத்து நின்றவள் வனிதா. கனத்த இதயத்துடன் வேகமாகக் கல்யாண வீட்டுக்குக் கிளம்பினாள் ரஞ்சனி.

எதிர்பாராமல் ஒரு விடுமுறை தினத்தில் நிரஞ்சன் அவள் வீட்டு வாசலில் 'ஹார்ன்' பண்ணி அவளை அழைத்தான். கார் சத்தம் கேட்டு ஓடி வந்த ரஞ்சனிக்கு அவனைக் கண்டதும் திகைப்பும், அச்சமும் ஏற்பட்டன. வரவேற்கக்கூட வாய் எழும்பவில்லை.

''என்ன, அப்படியே நின்று விட்டாய்? நான் உள்ளே வரலாமா?'' என்று கேட்டான் நிரஞ்சன்.

''ப்ளீஸ், கம் இன்'' என்றாள் பரபரப்புடன். ''ஏதாவது விசேஷமா ஸார்?''

அவள் கண்ணாடியில் பெயிண்ட் பண்ணியிருந்த ஜப்பானிய நங்கை மேல் அவன் பார்வை பதிந்திருந்தது. கறுப்புப் பின்னணியில் குடை விரிப்புடன் நின்ற ஜப்பானிய நங்கை அவனைக் கவர்ந்தாள்.

'' நீ செய்த பெயிண்டிங்கா ?''

அவள் 'ஆம்' என்ற பாணியில் தலை அசைத்தாள்.

'' நன்றாக இருக்கிறது. ரஞ்சனி, ஜப்பானிய கலைக் கண் காட்சிக்கு அழைப்பிதழ் வந்தது. காரில் இந்த வழியாகப் போகும் பொழுது உன் வீட்டு முகவரி நினைவுக்கு வந்தது. தனியாகப் போவதைவிட உன்னையும் அழைத்துப் போகலாமே என்றுதான் வந்தேன். நீயும் பார்த்தால் நம் பார்லருக்கு ஏதாவது பயன்படுமே.''

அப்பொழுதுதான் கஸ்தூரி வெளியிலிருந்து வந்தாள். ''என் தங்கை கஸ்தூரி. பி.எஸ்ஸி. முதலாண்டு'' என்று அறிமுகப்படுத்தியவள் தன்னைத் தயார்ப்படுத்திக் கொள்ள உள்ளே போனாள்.

கஸ்தூரியின் கலகலத்த குரலும், சிரிப்பும், நிரஞ்சனின் கேலிக் குரலும் அவளுக்குக் கேட்டன. அவள் வீட்டில் சுடர் விடும் ஒரே அழகு கஸ்தூரிதானே.

அன்று அவளுடைய வேலை முடிந்து விட்டது. மதியத்துக்கு மேல் அவள் எங்கே வேண்டுமானாலும் போகலாம். வீட்டில் அவளுக் கென்று எந்த வேலையும் காத்துக் கொண்டிருக்கவில்லை. சினிமாவுக்குப் போகலாமா ? தீர்மானமின்றிப் போனவள் வழியில் உள்ள தியேட்டரினுள் நுழைந்தாள்.

ஆனால் உள்ளே நுழைந்து இடத்தைத் தேர்ந்தெடுத்தபொழுது பார்வை உறுத்தி ஓர் இடத்தில் நின்றது. அந்த வரிசையில் கஸ்தூரியும், நிரஞ்சனும்! கையில் குளிர் பானப் பாட்டில் ! இப்படி வெளியே வரும் அளவுக்கு நெருக்கம் கஸ்தூரிக்கும் அவனுக்கும் எப்படி ஏற்பட்டது ? அழகுடன் அழகு இணைந்து போகிறதா ?

அவளால் அங்கே உட்கார முடியவில்லை. எழுந்து வெளியே வந்து விட்டாள். மனம் போனபடி தோழிகள் வீடு, கடற்கரை என்று போய்விட்டு இருட்டும் பொழுது வீட்டுக்குப் போனாள். அம்மா ஒரு கவரை எடுத்து நீட்டினாள்.

அவள் கவரைப் பிரித்தாள். அவளைப் பெண் பார்த்துவிட்டுப் போனவர்களிடமிருந்து வந்த வழக்கமான பதில்தான்.

'' அம்மா! இனிமேல் பெண் பார்க்க யாரையும் அழைத்து வராதே. கஸ்தூரிக்குக் கல்யாணம் பண்ணப் போகிறேன் நான்.''

அம்மா விக்கித்து நின்றாள். ''யாரடி மாப்பிள்ளை?'' என்று கேட்டாள். மூத்தவள் இருக்க இளையவளுக்குக் கல்யாணம் பண்ணினால் இந்த உலகம் சந்தேகம் கிளப்பாதா ?

'' சீக்கிரம் சொல்கிறேன் மாப்பிள்ளை யாரென்று. கொஞ்சம் பொறுத்துக் கொள்.''

அன்றைய வேலை நேரம் முடிந்ததும் வழக்கம் போல் நிரஞ்சனிடம் விடைபெற வந்தவள் தயங்கினாள். கூர்மையான மூக்குத் தண்டின் சிறு பிடிப்பில் நின்ற கறுப்புக் கண்ணாடி வில்லைகள்தான் அவனுக்கு எத்தனை அழகைக் கூட்டிக் காண்பிக்கின்றன !

அந்த அழகின் ரசிப்பில் தன்னை இழந்து நின்ற அவளை, ''என்ன ரஞ்சனி ?'' என்று கேட்ட நிரஞ்சனின் குரல் உலுக்கிற்று. தங்கை சரியான ஆணழகனைத்தான் தேர்ந்தெடுத்திருக்கிறாள்.

'' நான் போய் வருகிறேன். தங்களிடம் சில விஷயங்கள் தனிமையில் பேச வேண்டும். எப்பொழுது வசதிப்படும்?''

''நானும் உன்னிடம் ஒரு விஷயம் பேசக் காத்துக் கொண்டிருக்கிறேன். இன்றே கடற்கரைக்குப் போகலாமா ?''

அவளுடைய வேலை சுலபம். அவள் கேட்கப் போகும் விஷயத்தையே அவன் பேசப் போகிறான். நெஞ்சின் சுமை குறையும்.

அவர்களைச் சுமந்து சென்ற கார் கடற்கரையில் போய் நின்றது. கடலோரத் தனிமை. அவனுடைய காதலியின் அக்கா என்ற முறையில் தரும் மரியாதையாக அவள் அதை எடுத்துக் கொண்டாள்.

'' இங்கேயே உட்காரலாமே ?''

அவர்கள் மணலில் உட்கார்ந்தபொழுது அதிக நெருக்கம் இல்லாவிட்டாலும்கூடக் குபீரென்று அவனிடமிருந்து பாய்ந்தது மணம். எப்படிப் பேச்சை ஆரம்பிப்பது ?

'' என்ன பேச நினைத்தாய், ரஞ்சனி ?''

'' நீங்களும் ஏதோ பேசப் போவதாகச் சொன்னீர்களே ?'' சந்தித்த பார்வையின் வேகத்தில் இருவருமே சிரித்து விட்டார்கள்.

'' அன்று சினிமாவில் என் தங்கையுடன் உங்களைப் பார்த்தேன். சம்மதமென்றால்...''

'' சம்மதம் என்றால் ?'' என்று அவன் திருப்பினான் கேள்வியை.

'' சம்மதமென்றால் எல்லாம் முறைப்படி நடக்கும்.''

'' உன் தங்கையை நான் சினிமாத் தியேட்டரில் தற்செயலாகத்தான் சந்தித்தேன். முன்னேற்பாடுடன் அல்ல.''

அவள் மனத்தில் குபீரென்று பொங்கிய நிம்மதி. அதற்குக் காரணம் என்ன ? அந்த நிம்மதி எழுந்த கணத்தில் அடங்கியது. ஒருவேளை வனிதாவை அவன் நினைத்துக் கொண்டிருக்கலாம். '' ஓ... ஸாரி.... நான் கேட்டது தப்பென்றால் ?''

''தப்பு இல்லை. சிறு மாற்றம் செய். அவ்வளவுதான். நான் என்ன கேட்கப் போகிறேன்என்பதைப் புரிந்துகொள்வாயல்லவா?''

அவள் தலையைக் குனிந்து கொண்டாள். அவன் எழுந்து வலது பக்கமாக அவள் அருகே வந்து உட்கார்ந்தான். ரஞ்சனி என்று மணலில் அவள் எழுதிய எழுத்துக்குப் பக்கத்தில் நிரஞ்சன் என்று எழுதினான். எழுதி முடித்த கையோடு அவள் கரத்தைப் பிடித்துக் கொண்டான்! '' வனிதா, கஸ்தூரி போன்றவர்கள் தங்களுக்காகக் காத்துக் கொண்டிருக்கும் பொழுது.... கலை உணர்வுள்ள உங்களுக்கும் எனக்கும்....'' கண்களில் திரண்ட நீர் கன்னத்தில் உருண்டது.

அவன் சிரித்தான். ''தொழில் முறையில் வனிதாவுடன் பழகுகிறேன். ரஞ்சனி, பக்தன் என்று ஒருவன் இருந்தால்தான் கடவுளுக்கு மதிப்பு அதிகம். அழகை ஆராதிக்கும் ஒரு கலை உள்ளம் என் கண்களுக்குத் தெரிகிறது. அதை நான் ஆராதிக்கிறேன்.''

அந்தக் கரங்கள் இணைந்து நின்றன. ஆராதிக்கும் உள்ளமும், ஆராதனைக்கு உட்பட்ட பொருளும் பிரித்துச் சொல்ல முடியாத அளவுக்கு அன்பில் பிணைபட்டன.



# குட்மார்னிங் டாக்டர்!

# இறங்கிய குடல் ஏறாவிட்டால்...





ஆம்பூரிலிருந்து வந்த இருபத்தெட்டு வயது இளைஞர் கூறினார்: "தொடை இடுக்கில் ஒரு சின்ன வீக்கம் இருக்கிறது. கொட்டைப் பாக்கு அளவுக்கு இருக்கும். பத்துப் பன்னிரண்டு வருஷங்களாக நான் தினமும் கால்பந்து ஆடுவது வழக்கம். ஒரு வாரத்துக்குமுன் நிகழ்ந்த பந்தயத்தில் ஆடிய போதுதான் இந்த வீக்கம் ஏற்பட்டது. உள்ளூர் மருத்துவரிடம் ஆலோசனை கேட்டேன். 'உங்களுக்குக் குடல் கீழே இறங்கியிருக்கிறது. ஒரு சிறிய அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால் சரியாகிவிடும்' என்று அவர் கூறினார். உடனே பட்டணத்துக்குக் கிளம்பி வந்தேன்."

அந்த இளைஞரை இருமச் சொல்லிப் பரிசோதனை செய்தேன். அவருடைய குடல் வெகுவாகக் கீழே இறங்கியுள்ளது புரிந்தது. "ஆங்கிலத்தில் இதற்கு 'இங்குவைனல் ஹார்னியா' (Inguinal Hernia) என்று பெயர். விளையாட்டு வீரர்கள் சிலருக்கு இது வரக் கூடும். அறுவைச் சிகிச்சை செய்தால் சரியாகிவிடும். பின்னர் விளையாட்டுக்களில் ஈடுபடுவதிலும் தடை இராது" என்று விளக்கினேன். அந்த இளைஞர் அறுவைச் சிகிச்சைக்கு உடன்பட்டார். பத்து நாட்களில் பூரண குணமடைந்து திரும்பினார்.

**"அறுவைச் சிகிச்சை செய்து கொள்ளாவிடின், ஓடியாடி விளையாட முடியாது என்பது தவிர வேறு ஏதாகிலும் ஆபத்து நேரக் கூடுமா?"**

"குடல் கீழே இறங்கினாலும் சாதாரணமாக அது மேலே சென்றுவிடும். ஆனால் சிலருக்கு, சில சந்தர்ப்பங்களில் இறங்கிய குடல் மேலே ஏறாமலே இருந்துவிடும். இம்மாதிரிக் குடல் அடைப்பு (Strangulation) ஏற்பட்டால் உயிருக்கே ஆபத்து விளையக்கூடும். அப்படிப்பட்ட நிலையில் சற்றும் தாமதியாமல் மருத்துவரிடம் சென்றால் குடலைச் சீராகப் பொருத்தி அறுவைச் சிகிச்சை செய்து குணப்படுத்திவிடலாம். பொதுவாகக் குடல் அடைப்பு — இயல்பாக மேலே செல்ல முடியாத நிலை (strangulation) ஏற்படும்வரை தாமதிப்பது விரும்பத்தக்கதல்ல."

**"தாமதித்தால் என்ன ஆகும்?"**

"குடலின் ஒரு பகுதி அழுகிப் போகும் (Gangrene) வாய்ப்பு உண்டு. அந்நிலையில் உயிருக்கு ஆபத்து மேலும் அதிகமாகிறது. சிலருக்கு 2—3 அடி நீளம் வரை குடலின் அழுகிய பகுதியை வெட்டி எடுக்கும்படி நேரிடலாம். இது விரும்பத்தக்கதன்று. குடல் இறக்கம் ஏற்பட்டவுடனேயே சிகிச்சை செய்து கொண்டால் இது போன்ற ஆபத்துக்களைத் தவிர்க்கலாம். வீக்கம் சிறிதாக இருக்கும் போது அறுவைச் சிகிச்சை செய்வது மிகவும் எளிது."

**"அறுவைச் சிகிச்சை செய்யாமலே பெல்ட் போன்ற 'டிரஸ்ஸெஸ்' அணிந்து கொள்வது பலனளிக்காதா?"**

"ஆபத்தில்லாத, எளிய அறுவைச் சிகிச்சையால் நன்கு குணப்படுத்தக் கூடியபோது, நிரந்தரமாக 'trusses' அணிந்து நோயாளி என்றென்றும் சிரமப் படுவானேன்? இதய நோயாளி, கடுமையான ஆஸ்துமாவினால் சிரமப்படுவோர், எலும்புருக்கி நோயினால் பீடிக்கப்பட்டவர்கள் — இம்மாதிரி நபர்களுக்குக் குடல் இறக்கம் வந்தால் அவர்களுக்கு அறுவைச் சிகிச்சை செய்வது உசிதமன்று என மருத்துவர் கருதினால் அம்மாதிரி நோயாளிகளுக்கு 'டிரஸ்ஸெஸ்' அணிந்து கொள்ளுமாறு மருத்துவர்கள் சிபாரிசு செய்யலாம். உடல் நலம் நன்றாக உள்ளவர்கள் அறுவைச் சிகிச்சை செய்து கொள்வது தான் நல்லது. 'டிரஸ்ஸெஸ்' அணிந்து கொள்பவர்களுக்கும் குடல் அடைப்பு (strangulation) ஏற்படும் ஆபத்து உண்டு."



**"ஓடியாடி விளையாடுவோர் தவிர மற்றவர்களுக்கும் குடல் இறங்கும் வாய்ப்பு உண்டா?"**

"அடிக்கடி இருமுகிறவர்களுக்கும் இந்த வாய்ப்பு உண்டு. எலும்புருக்கி, ஆஸ்துமா நோயாளிகள் அதிகமாக இருமுவதால் அவர்

களுக்கு ஹெர்னியா வரக்கூடும். புகை பிடிப்போர்க்கும் குடல் கீழே இறங்கும் வாய்ப்பு உண்டு. பொதுவாகப் பெண்களுக்கு இங்கு லைனல் ஹெர்னியா ஏற்படுவது மிகக் குறைவு.

''உம்பிலிகல் ஹெர்னியா (Umbilical Hernia) என்று ஒரு வகை குடல் இறக்கம் பொதுவாக மகளிர்க்கு வரும். குடலில் திரவம் (Fluid) மிகுதியாகச் சேருவதாலும், அடிக்கடி பிரசவம் நிகழ்வதாலும், உடல் பருமன் அளவுக்கு மீறி அதிகரிப்பதாலும் ஏற்படும் உபாதை இது. எடை குறைந்தவுடன் சிலருக்கு இந்த உபாதை நீங்கிவிடும்.

''மனிதர்களுக்கு வரும் குடல் இறக்கம் (ஹெர்னியா) நான்கு கால் பிராணிகளுக்கு வருவதில்லை. விலங்கின் உடல் கனம் சீராக நான்கு கால்களாலும் பரவலாகத் தாங்கப் படுவதே காரணம்.''

**டாக்டர் எம். எஸ். வேங்கடராமன் கூறக் கேட்டு எழுதியவர்: ஆர். பி.**

---

# இளைய தலைமுறை

ஹாஸ்டல் வார்டனை உயர்த்திக் காட்ட வேண்டும் என்பதற்காக மாணவர்களை அயோக்கியர்களாகக் காட்டியிருப்பது மன்னிக்க முடியாத குற்றம்.

தற்காலத்து மாணவர்களுக்குள்ள பலப்பல பிரச்னைகளை மனத்தில் கொண்டு அநுதாபத்தோடு அணுக வேண்டிய விஷயத்தை விஷமாக்கி விட்டார்கள்.

போதாக்குறைக்கு ஏழு நீண்ட பாடல்களைப் புகுத்திப் படத்தை நீட்டோ நீட்டு என்று நீட்டி, பெருமூச்சு, நெடுமூச்சு, நீண்ட நெடுமூச்சு எல்லாம் விடப் பண்ணிவிட்டார்கள்.

வேலை தேடி அலையும் கதாநாயகன், கொஞ்சம்கூடத் தன் குடும்ப நிலையைச் சிந்தித்துப் பார்ப்பதாகத் தெரியவில்லையே! வேளை தவறாமல், டிப்டாப்பாக டிரஸ் பண்ணிக்கொண்டு வயலிலும், வரப்பிலும், நந்தவனத்திலும், நதிக் கரையிலும் ''அறை கொடுத்தால் தெரியும்'' என்று கூறி, காதலியுடன் குதித்துக் குதித்துப் பாடிக் கொண்டிருந்தால் வேலை எப்படிக் கிடைக்கும்? (என்ன கதையோ, கண்ணறாவியோ!)





சிவாஜிகணேசன், சிங்கார நடை நடந்து காதல் காட்சிகளில் சக்கைப் போடுபோட்டது போலவே, வார்டனாகப் பணி புரியும்போது கண்டிப்பையும், கருணையும் காட்டிச் சிறப்பாக நடித்திருக்கிறார்.

கதாநாயகி, வாணிஸ்ரீ. காதலனுடன் ஆடிப் பாடிக் குதித்து ஆடுவதோடு தன் காதல் கைகூடாமல் போய்விடுமோ என்று கண் கலங்கவும் செய்கிறார். அவர் தம் உடம்பைக் கச்சிதமாக வைத்துக் கொண்டிருக்கும் பாங்கு பாராட்டுக்குரியது.

ஹாஸ்டல் மாணவர்கள் குழுவில், வார்டனை எதிர்த்து நிற்கும் வில்லன் ஸ்ரீகாந்த், ஒழுங்கான மாணவனாக வார்டனுக்கு ஒத்துழைப்புத் தரும் நீலகண்டன், சீக்கிய மாணவன் மகேந்திரன் ஆகியவர்கள் நினைவில் நிற்கிறார்கள்.

யோக சித்ராவின் வண்ணப் படமான ''இளைய தலைமுறை''யில் பாராட்டுக்குரிய அம்சம் எஸ். மாருதி ராவின் ஒளிப்பதிவுதான். திரைக்கதையின் அசட்டுத்தனங்களையெல்லாம் காமிரா கண்ணியமாக மறைத்து விடுகிறது.

— காந்தன்

சிறப்பான
சுவையூட்ட
அதிக கோகோ

# முன்னைக்காட்டிலும் அதிக கோகோவுடன்.

சோடியம், பொட்டாஷியம் போன்ற விலை மதிப்பற்ற கனிஜ உப்புகளும் அடங்கியுள்ளன. அவை மட்டுமா? போஷாக்கு தரும் நற்பண்புகள் அடங்கிய, மால்ட், பால் மற்றும் சர்க்கரை போர்ன்விடாவில் மண்டிக் கிடக்கின்றன. ஒரு கப் சூடான பாலில் இரண்டு ஸ்பூன் போர்ன்-விடா கலந்து, இன்சுவையுள்ள போஷாக்கைப் பருகுங்கள்.

உங்கள் செல்வங்களுக்கு தினமும் இருவேளை போர்ன்விடா வழங்குங்கள். அவர்களுடைய உடல் சீராக வளரத் தேவையான, அசாதாரண போஷாக்கைத் தந்து உதவுகிறது அது. ஏன், அவர்களுடன் ஈடுகொடுக்க, உங்களுக்கும் அது தேவை.

## 75 பைசா மிச்சம்

போர்ன்விடா 450 கிராம் ரீ:பில் பேக் வாங்கி, 75 பைசா மிச்சப்படுத்துங்கள்! இந்தப் பேக்கைத் திறந்தவுடனே, வழக்கமான போர்ன்விடா டின்னில் அதை நிரப்பி, புதுமை கெடாமல் பாதுகாருங்கள்.




**அதிகப்படியான கோகோ, அதிகப்படியான வலிமை, அதிகப்படியான இன்சுவை**

OBM 6714 TM



# பிரின்ஸிபால்கள் பலவிதம்



ஜயா பாலகிருஷ்ணன்

நான் எத்தனையோ பிரின்ஸிபால்களிடம் வேலை பார்த்தேன். சிடுசிடுவென்றிருக்கும் கடுவன் பூனைகளிலிருந்து, சிரிக்கச் சிரிக்கப் பேசி உங்களைச் சிந்திக்க வைக்கும் அறிஞர்கள் வரையில் !

பத்திரிகைகளில் நான் கதை எழுதின குற்றத்துக்காக என்னைக் கல்லூரியை விட்டு வெளியேற்றினார் ஒரு பிரின்ஸிபால். ஏதோ பஞ்சமா பாதகங்களில் ஒன்றைச் செய்தவனை விசாரிப்பது போல் என்னை விசாரித்துவிட்டு, ''நகைச்சுவையாவது ஒண்ணாவது ! அதையெல்லாம் கல்லூரியில் இறக்குமதி செய்யாதே. 'அகாடமிக் டிக்னிடி' கெட்டுவிடும். காலேஜ் கதை என்ன வேண்டியிருக்கு.....? காலேஜ் கதை? இப்படிப் பேராசிரியர்களை நீ நையாண்டி செய்தால் நாளைக்கு நம்மிடம் யார் மதிப்பு வைப்பார்கள்? தவிர, கம்பனும், வள்ளுவனும், ஷேக்ஸ்பியரும் எழுதாததை எல்லாமா நீ எழுதிவிடப் போகிறாய்? உன்னுடைய தறுதலைக் கதைகளும் நீயும்!'' என்ற தோரணையில் என்னென்னமோ சொன்னார்.

பிரபல வாரப் பதிப்பு ஒன்றில், பிரபல நகைச்சுவை எழுத்தாளர் ஆசிரியராக இருக்கப் போய் நான் தொடர்ந்து காலேஜ் கதைகள் எழுதி வந்தேன். என்னுடைய கதாபாத்திரங்கள் எல்லாம் நிஜமானவர்கள் என்ற பேச்சு எப்படியோ எங்கும் அடிபட்டது. இந்தக் கூற்று நிஜமல்ல. சுக்ராச்சாரி என்ற கதாபாத்திரம் தான்தான் என்று நாலைந்து நபர்கள் சண்டைக்கு வந்தார்கள். ஏன், என்னைக் கல்லூரியை விட்டு வெளியேற்றின பிரின்ஸிபாலே அது தம்முடைய 'காரிகேச்சர்' தான் என்று எண்ணினதாகப் பின்னால் தெரிந்தது. எந்தச் சூட்டுடன் அந்தக் கல்லூரியைவிட்டு வெளியேற்றப்பட்டேனோ அதே சூட்டுடன் எனக்கு இன்னொரு கல்லூரியில் வேலை கிடைத்தது. ஆங்கிலத்தில் சிறந்த எழுத்தாளரான இந்தக் கல்லூரி பிரின்ஸிபால் என் எழுத்துக்காகவே தம் கல்லூரியில் வேலை போட்டுத் தந்தார். கடைசி மூச்சு இருக்கும் வரையில் என்னுடன் இலக்கியச் சர்ச்சைகள் நடத்தின அவரை நான் எளிதில் மறக்க முடியுமா என்ன?

மதச் சார்புள்ள கல்லூரி ஒன்றில் வேலை பார்க்கும் துர்ப்பாக்கியமும் எனக்கு ஏற்பட்டது. இங்கே சட்ட திட்டங்களிலெல்லாம் மிகக் கெடுபிடி. தும்முவதாக இருந்தாலும், கொட்டாவி விடுவதாக இருந்தாலும் மூன்று நாட்கள் முன்னதாகவே பிரின்ஸிபாலின் சம்மதம் பெற வேண்டும். அவர் அவ்வளவு எளிதில் சம்மதித்து விடுவாரா என்ன? மாணவர்களைக் கண்காணிப்பது போல் ஆசிரியர்களையும் கண்காணித்தார்கள். இரகசியமாகக் காதல் கதைகள் படிப்பதாகத் தெரிந்தால் கல்லூரியை விட்டு 'கல்தா' தந்துவிடுவார்கள். காதலித்து விட்டாலோ கேட்கவே வேண்டாம்!

இந்தக் கல்லூரியில் வேலை பார்ப்பது சுதந்திரப் பறவையான எனக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. கல்லூரியின் புகழைக் கண்டு ஏமாந்து விட்டேன் நான். 'எப்படா பிய்த்துக் கொண்டு போகலாம்' என்று காத்துக்கொண்டிருந்த என்னை ஓர் அரிய வாய்ப்பு தேடி வந்தது. சம்பள தினத்தன்று என்







**பிரதிபலிப்பு !**

முல்லைப் பற்கள் சிரிக்கும்போது
சேலைப் பூக்கள் எதற்காக ?
இதய மலர்கள் இருக்கும்போது
இணையும் கரப்பூ எதற்காக ?
பாலின் சுவையைக் கண்டவர்கள்
பழமும் வேண்டாம் என்பரோ ?
பாவை மனத்தைச் சேலை மலர்கள்
பார்க்கச் செய்தல் பாவமோ ?

மேலட்டை வண்ணப் படம்:
- சரஸ்வதி சத்தியமூர்த்தி

‘பே பாக்கட்’டில் ஐந்நூறு ரூபாய்தான் இருந்தது. அறுநூறு ரூபாய்க்குக் கையெழுத்துப் போட்டிருந்தேன். ஓடினேன் பிரின்ஸிபால் அறையை நோக்கி. அவர் ‘நான் வருவேன்’ என்று எதிர்பார்த்தார் போலும்! ஒரு டம்ளர் ஐஸ் வாட்டர் தந்து உபசரித்த பின் உட்காரச் சொன்னார்.

''ஏன் இந்தப் பரபரப்பு? ஏன் இந்த அமைதியின்மை?''

நான் வந்த காரியத்தைச் சொன்னேன்.

''எங்கள் கல்லூரியின் வழக்கமே அப்படித்தான். உத்தியோகமில்லாமல் எத்தனை பேர் இருக்கிறார்கள்? உங்களுக்கு நாங்கள் வேலை போட்டுத் தந்ததே பெரிய காரியமில்லையா? தவிர, ‘டீச்சிங்’ என்று வந்தது விட்டால் பணத்தைப் பற்றி நினைக்கக் கூடாது. இலட்சிய வெறிதான் முக்கியம்'' என்று பேசிக் கொண்டு போனார். இலட்சிய வெறி மனைவிக்கும், குழந்தைகளுக்கும் சோறு போடாது என்று கூறி அப்பொழுதே கால் கடுதாசி தந்தேன். அது மட்டுமா? எனக்குத் தரவேண்டிய பாக்கிப் பணத்தையும் வசூலித்த பின்தான் மிகப் புனிதமான அந்தக் கல்லூரியை விட்டு வெளியேறினேன்.




நேர்மாறாகத் தமக்குக் கிடைக்கவிருந்த பதவியை எனக்கு விட்டுத் தந்த பெருந்தன்மை படைத்த பிரின்ஸிபாலுமுண்டு. இவர் ரிடையரான பின் டில்லியில் ஒரு பெரிய வேலைக்கு மனுப் போட்டுப் பேட்டிக்கு வந்திருந்தார். அதே வேலைக்கு மனுப் போட்டுப் பேட்டிக்கு அழைக்கப்பட்டிருந்த இன்னொருவன் நான்! கடைசி நிமிஷத்தில்தான் இது அவருக்குத் தெரிய வந்தது. இளைஞனை நான் முன்னுக்கு வருவதைத் தாம் தடுக்க விரும்பவில்லை என்று கூறித் தம் மனுவை வாபஸ் வாங்கிக் கொண்டு விட்டார். மனுஷன் நான் எவ்வளவு சொல்லியும் கேட்கவில்லை. என் துரதிர்ஷ்டம், பிரின்ஸிபால் விட்டுத் தந்தும், சில சொந்தக் காரணங்களினால் என்னால் அந்தப் பொறுப்பை ஏற்க முடியவில்லை. ஆனால் இந்தச் சம்பவம் என் மனத்தில் ஒரு நிலையான இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டு விட்டது. பின்னர் நான் எழுதின ‘அஞ்சலி யாருக்கு?’ என்ற கவிதையின் கரு இந்த நிகழ்ச்சியில்தான் அடங்கியிருந்தது.

தம்மை ‘கிளப்’பில் கண்டாலும் எழுந்து நிற்கவேண்டும், இல்லாவிட்டால் தொலைத்து விடுவேன் என்று பூச்சாண்டி காட்டும் பிரின்ஸிபால், வலது காலுக்கு ஒரு நிற ‘ஸாக்ஸு’ம், இடது காலுக்கு இன்னொரு நிற ‘ஸாக்ஸு’ம் அணிந்து வகுப்புக்குச் செல்லும் ஞாபக மறதி பிரின்ஸிபால், ‘கோ எஜுகேஷனா? அது நோ எஜுகேஷன்’ என்று காத தூரம் ஓடும் பிரின்ஸிபால், கல்லூரி தீப்பிடித்தாலும் கல்லுளிமங்கனாட்டம் வீற்றிருக்கும் பிரின்ஸிபால், ஞானச் சுடரான பிரின்ஸிபால், எனக்கு வாழ்க்கையில் வழிகாட்டி இன்னும் உதவிகள் செய்து வரும் தாடிக்கார பிரின்ஸிபால் — அப்பப்பா, இவர்களைப் பற்றியெல்லாம் தனித் தனியாக எழுத எனக்கு ஏது நேரம்? ஏது பொறுமை?

# அக்கா

கே. ஆர். விஜயாவுக்குத் தகுந்த பாத்திரம் கிடைத்திருக்கிறது. கச்சேரியில் பாடும் போதுதான் முகத்தில் எத்தனை அமைதி! எதிர்பாராத நிலேயில், கமலாவை ஒருவன் காதலித்ததும் அவள் அடைந்த பரவசத்தை விஜயா நன்கு பிரதிபலிக்கிருர். இறுதியில், கட்டிய கணவன் நிர்ப்பந்தமான சூழ்நிலேயில், நஞ்சைக் கொடுத்தபோது குளிர்ந்த நெஞ்சுடன் அதை ஏற்றுக் கொண்ட கமலாவின் முடிவை விஜயா அதியற்புதமாகத் திரையில் நடித்துக் காட்டி விட்டார். அவருக்கு ஒரு சபாஷ் !

கமலாவின் தங்கை ராதாவாக நடிக்கும் அறிமுக நடிகை விஜயபாலா அநுபவ நடிகையைப்போல் சோகமாகவும் சுறுசுறுப்பாகவும் நடிக்கிருர். அவருக்கு ஒரு பலே!

கடத்தல்காரனுகவும், கமலாவின் கணவனுகவும் ஜெய்கணேஷ் மிக நன்ருக நடிக்கிருர் என்ருலும் சற்று மிகையான நடிப்பு காணப்படுகிறது. கொஞ்சம் கட்டுப்பாடு வேண்டும். மற்றப்படி பரவாயில்லே. அவருக்கு ஒரு 'பெட்டர் லக் நெக்ஸ்ட் டைம் !'

சுருளிராஜன், மனேரமா நடிக்கும் காமெடிக் காட்சிகள் நிஜமாகவே சிரிக்க வைக்கின்றன. அவர்களுக்கு ஒரு 'கீப் இட் அப்!'

விறுவிறுப்பும், சுவாரசியமும் நிறைந்த கதைக்குச் சிறந்த ஒளிப்பதிவு அமையாதது மிகவும் வருந்தத்தக்கது. — 'வாட் எ பிட்டி!'

பாடகி கமலாவின் வீணையில் வைரத்தை மறைத்து வைத்துத் திரைக் கதையில் 'த்ரில்' ஏற்படுத்துகிருர்கள். கமலாவின் தங்கை ராதாவிடம் இருந்த கிருஷ்ணன் பொம்மைக்குள் கடத்தல் வைரம் ! அது படம் முழுதும் 'சஸ்பென்ஸாக'த் தொடர்ந்து வந்து கடைசியில் குட்டு வெளிப்படுகிறது. — 'ஹூர்ரே!'

ஓர் எழுத்தாளன் எழுதிய நாவலின் பாத்திரங்கள் நிஜ வாழ்க்கையில் பலரையும் பிரதிபலிக்கவே அவர்கள் அந்த நாவலாசிரியனிடம் வந்து சண்டை போடுகின்றனர். அவர்கள் போடும் சண்டையே திரைக் கதையாகிறது. இந்த உத்தி மிகவும் புதுமையானது ; அதன் காரணமாக நல்ல 'சஸ்பென்ஸ்' (கொஞ்சம் கூடப் பொத்தல் இல்லாமல்) உருவாகிறது. — 'சீர்ஸ்!'

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் ஆகியவற்றின் முழுப் பொறுப்பையும் ஏற்றிருப்பவர் மதுரை திருமாறன். அவருக்கு ஒரு 'வெல்டன்'!

எழுத்தாளராக வரும் வி. கே, ராமசாமி, வி. எஸ். ராகவன், விஜயகுமார் ஆகியவர்கள் 'சஸ்பென்ஸ்' நிறைந்த திரைக் கதையை ஒழுங்காக முடித்து வைக்கிருர்கள். பேஷ்!

வெகு நாட்களுக்குப் பிறகு பாராட்டும்படியான ஒரு நல்ல படம் வந்திருக்கிறது. பார்த்து மகிழ்வதை விட்டு விட்டுத் தலேப்பு கவர்ச்சிகரமாய் இல்லேயே என்று ரசிகர்கள் குறைகூறிக் கொண்டிருக்கலாமா? அவர்களுக்கு ஒரு 'குட்லக்!'

— காந்தன்






**போ**லீஸ் அதிகாரியின் பிள்ளை என்று எண்ணியோ என்னமோ என் மகன் ஜீவனை மட்டும் விசாரிக்காமல் விட்டு விட்டார்கள். அவனுடைய ஆருயிர் நண்பர்கள் பேபியையும், சின்னுவையும் போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று குடைந்திருக்கிறார்கள்.

அந்தப் பெண் சொன்ன அடையாளங்களை வைத்துப் பார்த்தால் ஜீவனையும் சந்தேகிக்க வேண்டியதுதான். ஹிப்பியாட்டம் கிராப், டீன்ஏஜர் என்று மட்டும்தான் குழம்பிப் போன அவளால் குறிப்பிட முடிந்தது. நல்ல வேளை! காரியம் மிஞ்சுவதற்குள் எப்படியோ தன்னைக் காப்பாற்றிக் கொண்டுவிட்டாள். வயதில் பெரியவளல்லவா?

ஜீவன் குற்றவாளியா? யாருக்குத் தெரியும்? அவன் 'ஷேவிங் ஸெட்' வாங்கி ஒரு வாரம்தான் ஆகிறது. இன்னும் சரி வர இழுக்கக்கூடக் கை பழகவில்லை. பார்வைக்குப் பச்சிளம் குழந்தை. ஆனால் எத்தனை பயங்கர 'காமிக்ஸ்' படிக்கிறான்? எத்தனை 'அடல்ட்ஸ் ஒன்லி' படங்களை இரகசியமாகப் பார்க்கிறான்? அவன் 'ஷெல்பி'ல் டெட் மார்க் புத்தகங்கள் இருந்ததாகக்கூட நினைவு.

மூவரில் ஒருவர்தான் குற்றவாளி. ஆனால் யார்?

பேபிக்கு ஏறக்குறைய ஜீவனுடைய வயதுதான். ஆனால் கூடுதல் வளர்த்தி. வசதியான வாழ்வுதான் காரணம். முகத்தைப் பார்த்தால் அவனும் 'பச்சா'தான். 'பீடிங் பாட்டில்' விளம்பரத்துக்குப் பயன்படுத்தலாம்! சின்னு நல்ல கறுப்பு. ஆகிருதியில் இவர்களை விட மிகப் பெரியவன். முகத்தில் நிறைய கரு கரு தோன்றியிருந்தது. ரெண்டுங்கெட்டான் தொண்டை. ஹிப்பி கிராப். ஆனால் அது அவனுக்கு எடுப்பாகவே இராது. வர்ணச் சட்டை. பார்ப்பதற்குக் கோரமாக இருக்கும். ஜீவனுக்கும் பேபிக்கும் பக்கத்தில் அவன் ஒரு திருஷ்டி பரிகாரம்.

ஜீவனைக் கூப்பிட்டனுப்பினேன். சிரித்துக் கொண்டே வந்தான். கையிலே பட்சிகளைச் சுடும் துப்பாக்கி. கழுத்தில் 'கிதார்'.

அப்பா என்று என்னிடம் பயம் கியம் கிடையாது. நான் உறுமுவது அரிது. உதைப்பது 'நில்'. இந்த விஷயத்தில் நான் எங்கப்பாவுக்கு நேர் எதிர். அவர் சுத்த 'டைரண்ட்'. எடுத்ததற்கெல்லாம் பூசைதான். அதனால்தான் எனக்கு இவ்வளவு 'காம்ப்ளெக்ஸ்'. ஜீவனாவது 'நார்மலாக' வளர வேண்டும் என்பதால் நான் அவனிடம் சாடுவதில்லை.

முன்னொருதடவை ஜீவனை இதேபோல் என் அறைக்கு அழைத்திருக்கிறேன், அவன் இரகசியமாகச் சிகரெட் பிடிப்பது தெரிந்தபோது.

''ஜீவன்.''

''என்ன டாடி?''

''எங்கே கிளம்பினே?''

'' 'டிஸ்கோதே'க்கு.''

''உன்னை எதற்குக் கூப்பிட்டு அனுப்பினேன், தெரியுமா?''

முகத்தை ஆராய்ந்தேன். குற்ற உணர்ச்சி ஏதுமில்லை.

''எனக்கு எப்படித் தெரியும்? யாராவது கஞ்சா குடிப்பதாக வத்தி வைத்தார்களா?''

''அதெல்லாம் இல்லை. அந்தப் பெண் விஷயம்.''

''வேறு 'இண்டரஸ்டிங்'காக ஏதாவது கேளேன் டாடி.''

''ஜீவன், உண்மையைச் சொல்லிவிடு. யார் குற்றவாளி? நீதானே?''

''எதற்காக என்னைச் சந்தேகிக்க வேண்டும்?''

''அப்படியென்றால் நீ இல்லையா? பின்னே யார்? பேபியா, சின்னுவா?''

''நண்பர்களைக் காட்டிக் கொடுக்கும் வழக்கம் எனக்குக் கிடையாது.''

''நீ 'இன்னஸன்ட்' என்று தெரிந்தால் போதும். மற்றவர்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை.''

''நான் எதுவுமே சொல்லப் போவதில்லை.''

''ஜீவன்.....''

''அதட்டலுக்கெல்லாம் நான் பயப்பட மாட்டேன். டோண்ட் பி ஏ ஸ்டுப்பிட் ஸ்கொயர் டாடி.''

ஜீவன் போய் விட்டான். பேபியையும் சின்னுவையும் கூப்பிட்டு அனுப்பினேன்.

''பேபி, நீ நல்ல பையன் இல்லையா?''

சின்னு இடைமறித்தான்.

''இவனா? இவனைப் பற்றி உங்களுக்குத் தெரியாது ஸார். பெரிய 'ரோக்'. காலேஜிலே அத்தனை பேருக்கும் இரகசியமாக லாகிரிப் பொருள்கள் தருவது இவன்தான்.''

''நிஜமாகவா பேபி? நீ அவ்வளவு மோசமாகிவிட்டாயா?''

பேபி பதில் சொல்லவில்லை.

''ஆமாம், அந்தப் பெண்ணைப் பலாத்காரம் செய்தது யார்?''

''தெரியாது.''

''உங்கள் மூவரில் ஒருவர்தான். சந்தேக மில்லை. ஆனால் யார் ?''

''சொல்ல முடியாது ஸார்.''

''நீ சொல்லித்தானாக வேண்டும்.''

''மிரட்டாதீங்க ஸார். எங்க பிரின்ஸி பாலைக் கண்டே நான் பயப்படலை. உங்களைக் கண்டு மிரள்வேனா ? தடை செய்யப்பட்ட புத்தகங்களை வகுப்புக்குள் கொண்டு சென்றேன் என்பதற்காக மிரட்டிப் பார்த்தார் மனுஷன். இந்தப் பேபியா பயப்படுவான் ? இது துணிந்த கட்டை ஸார்.''

''நீ எப்படியோ ஒழிந்து போ ! அதைப் பற்றி எனக்கு அக்கறை கிடையாது. ஆனால் என் பிள்ளை ஜீவன் குற்றவாளியா ?''

''பெரியவர்களாட்டம் நாங்கள் ஒருவரை ஒருவர் காட்டிக் கொடுக்க மாட்டோம்.''

'' நீ சொல்லப் போகிறாயா, இல்லையா?''

''நோ ஸார்.... நெவர்.''

'' ஹாங் யுவர் செல்ப் !''

சின்னு பக்கம் திரும்பினேன். அதற்குள் அவனே பேசத் தொடங்கிவிட்டான்:

''என் பெயர் சின்னு. வயது பதினெட்டு. எத்தனையோ வம்புகளில் மாட்டிக் கொண்டு வெற்றிகரமாக வெளிவந்தவன். கடைசியாகச் செய்த துணிகரமான செயல் அப்பாவின் காரை லைசென்ஸில்லாமல் ஓட்டியது. ஹாபிகள் : 'காஸிபிங்', 'ஸ்மோக்கிங்', 'செக்ஸ்' புத்தகங்கள் படிப்பது. நீங்கள் கேட்கப் போகும் கேள்விக்குப் பதில்: தெரியாது, தெரியாது, தெரிந்தாலும் சொல்வதற்கில்லை.''

''ஏண்டா, எல்லாம் சுத்த 'இவன்'களாக இருக்கிறீர்கள் ?''

'' ஜெனரேஷன் காப் ! உங்கப்பாவும் அந்தக் காலத்தில் இப்படித்தான் அழுதார்.''

தாரா வந்தாள். அவளிடமிருந்து ஜீவன் சமாசாரத்தை மறைத்து வைத்திருந்தேன். தெரிந்தால் 'பிய்த்து'விடுவாள். பள்ளிக்கூட 'ஹெட்மிஸ்டிரஸ்' ஆயிற்றே ! 'டிஸிப்ளின்' விஷயத்தில் ஒரே கெடுபிடி.

இப்பொழுது சொல்லித்தானாக வேண்டும். மெதுவாகப் பிரஸ்தாபித்தேன்.

''ஏன் இவ்வளவு நாட்கள் சும்மா இருந்தீர்கள் ? எல்லாம் நீங்க தர்ற அசட்டுச் செல்லம்தான் ! அடித்தால்தான் பிள்ளைகள் திருந்தும். உங்கள் 'மாடர்ன் தியரி'களை எல்லாம் குப்பையில் வீசுங்கள். சிறு வயதில் நீங்கள் எவ்வளவு போக்கிரியாக இருந்தீர்கள்? உங்கப்பா அவ்வப்போது தரப் போய்த்தானே உருப்பட்டீர்கள்? ஜீவன் வரட்டும்.''

பாதி ராத்திரிக்கு மேல் ஜீவன் வந்தான். ''மம்மி'' என்று நீட்டி முழக்கியபடி உள்ளே சென்றவன் கன்னத்தில் 'பளார்' என்று ஒன்று விழுந்தது. தொடர்ந்து அநேகம்!

ஜீவன் அழும் சத்தம். தொடர்ந்து 'இல்லை மம்மி.... இனிமே இல்லை மம்மி....' என்ற விசும்பல்.

விளக்கை அணைத்ததும் தாரா காதருகில் மெதுவாகக் கிசுகிசுத்தாள்.

'' எனக்கு நேற்றே சந்தேகம்தான்.''

'' ஏனாம் ?''

''ஜீவன் முகத்தில் ஒரு கீறல் இருந்தது. புது ஷேவிங் செட் மீது பழியைப் போட்டான் பிள்ளையாண்டான். எனக்கு நம்பிக்கை இல்லை...உம், பாரம்பரியம் எங்கே போகும்?''

நான் விளக்கைப் போட்டு நிலைக்கண்ணாடியில் என் முகத்தைப் பார்த்தேன். அந்தக் கீறலின் வடு இன்னும் இருந்தது! முப்பது வருஷங்களுக்குமுன் நான் தாராவிடம் வாலாட்டினபோது கிடைத்த பரிசு. தொடர்ந்து, எங்கப்பா எனக்குஅளித்த 'பளார்', 'பளார்' செவிகளில் ஒலித்தது.



# சிலம்புச் செல்வம்!



ம.பொ.சி

கண்ணகியும் கோவலனும் ஒரு நாள் விடியற்காலை நேரத்திலே புகார் நகரை விட்டுப் பிரிந்து மதுரை நோக்கிப் பயணமாயினர். இதனை, ''பாத யாத்திரை'' என்று சொல்லலாம். ஆனால் இதை விடவும் புனிதமானது கண்ணகியும் கோவலனும் மேற்கொண்ட யாத்திரை! அதனால், அதனை ''மான யாத்திரை'' எனலாம். இந்த யாத்திரையை நாடு காண் காதை, காடுகாண் காதை, வேட்டுவ வரி, புறஞ்சேரியிறுத்த காதை, ஊர்காண் காதை ஆகிய காதைகளிலே விவரிக்கிறார் அடிகள். நாடுகாண் காதையிலே சோழ நாட்டின் வளம் முழுவதையும் வருணிக்கின்றார்.

'' வயலும் சோலையும்
அல்லது யாங்கணும்
அயல்படக் கிடந்த
நெறியாங்கு இல்லை ''

என்ற வரிகளிலே, சோழ நாட்டிலே பார்க்குமிடந்தோறும் பச்சைப் பசேலென்ற வயல்களும், இருபுறமும் சோலைகளைக் கொண்ட சாலைகளும் தவிர வெற்று நிலமே இல்லை என்கிறார். இன்றும் சோழ நாட்டின் பிரதான பகுதியான தஞ்சை மாவட்டம் வயலும் சோலையுமாகத் தானே நம் கண்களுக்குக் காட்சி அளிக்கின்றது.

வேட்டுவ வரியிலே காட்டுப் பிரதேச மக்களின் வாழ்க்கை முறையைக் காட்டுகின்றார். அவர்கள் — ஆண்களும் பெண்களுமாக ஒருங்குகூடி கொற்றவைத் தெய்வத்தை வழிபடும் காட்சியைப் படிப்போரின் அகக் கண்கள் காணும்படி காட்டுகின்றார்.

சோழ காண்டத்தை நாடு காண் காதையோடு முடித்த கவிஞர், மதுரைக் காண்டத்தைக் காடு காண் காதையிலே தொடங்குகிறார். இதனால், பாண்டி நாட்டில் அந்நாளிலும் காட்டுப் பிரதேசமே மிகுந்திருந்தது என்பதனை அறிகிறோம்.

வேட்டுவ வரியிலே குறவர் மக்களால் கொண்டாடப்படும் தெய்வமேறிய சாலினி என்பாளைக் கொண்டு, கண்ணகியாள் உலகோர் தொழும் பத்தினித் தெய்வம் ஆகப் போவதனை முன்கூட்டி கவிஞர் அறிவிக்கின்றார்.

'' இவளோ, கொங்கச் செல்வி
குடமலை யாட்டி ;
தென்தமிழ்ப் பாவை
செய்த தவக் கொழுந்து ;
ஒரு மாமணியாய்
உலகிற்கு ஓங்கிய
திருமா மணி ''

என்பது தெய்வமேறிய சாலினி வாக்கு.

கோவலனுடைய ஊழ்வினையானது யாழின் மூலம் அவனும் மாதவியும் பாடிய கானல் வரிப் பாடலை ஒரு காரணமாகக் கொண்டு மாதவியிடமிருந்து அவனைப் பிரித்துவிட்டது. இதனை உணர்த்தவே, ''யாழிசை மேல் வைத்துத் தன் ஊழ்வினை வந்து உறுத்தது'' என்கிறார் கவிஞர். இது முதல் திருப்பம்.

ஊழ்வினையால் மாதவியை விட்டுப் பிரிந்த கோவலன் கண்ணகியிடம் வந்து சேர்ந்தான்.

கண்ணகியைக் கைப்பிடித்துப் புகாரை விட்டுக் கோவலன் புறப்பட்டது கதையில் இரண்டாவது திருப்பமாகும். இதற்கும் வினையையே காரணமாக்குகிறார், ''வினை கடைக்கூட்ட வியங் கொண்டான்'' என்னும் சொல்லால். கோவலன் தன்மானம் உடையவன். அதனால்தான், தன் பத்தினியோடு நாடுவிட்டுப் பெயர்வதனை ஊரிலுள்ளோர் கண்டுவிடாதபடி, காலைக் கதிரவன் அடிவானத்தில் எழுவதற்குமுன் உள்ள இருள் சூழ்ந்த விடியற்காலை நேரத்திலே புறப்பட்டான்.

கண்ணகியாளின் சிலம்பை விற்றுப் பொருள் தேடுவதுதான் கோவலனின் குறிக்கோள். ஆனால், அதனை, தான் பிறந்த ஊரிலேயே செய்வதற்கு அவன் மனம் நாணியது. அதனால், வேற்று நாடான மதுரைக்குச் சென்று அங்கே சிலம்பை விற்றுப் பொருளீட்ட விரும்பினான். இப்படிப்பட்டவனைத் தன்மானத் தமிழன் என்று சொல்லாமல், வேறு யாரைச் சொல்வது ?

புகார் நகரை விட்டு ஒரு காத தூரம் கடந்து சென்றதும், ''மதுரை மூதூர் யாது?'' என்று கோவலனைக் கேட்கின்றாள் கண்ணகி. வழிநடைத் துன்பத்தை ஒரு காத தூரம் நடந்ததற்குள்ளேயே உணர்ந்துவிட்டாள். கண்ணகியின் மன நிலையைக் கோவலன் அறிந்து கொண்டான். ''இன்னும் முப்பது காத தூரம் இருக்கிறது'' என்று பதில் சொல்ல வேண்டியவன் அவள் அஞ்சுவாளே என்று,

'' ஆறு ஐங் காதம் நம்
அகல் நாட்டு உம்பர் ''

என்று கூறுகின்றான். ஆறும் ஐந்தும் சேர்ந்து பதினொரு காத தூரத்தில் மதுரை இருக்கிறது என்று கண்ணகி நம்பும்படியாகக் கூறுகின்றான்.

புகார் நகரை விட்டு ஒரு காதம் சென்றதும் வழியில் ''கவுந்தி'' என்னும் சமணப் பெண் துறவியைக் காண்கின்றனர். (தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தின் சார்பில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600 031.
Managing Editor: T. Sadasivam Associate Editor: K. Rajendran.

# மூன்று முடிச்சு

''மூன்று முடிச்சு'' என்றதும் ஏதோ கல்யாணமாக்கும் என்று நினைத்து ஏமாந்து போகாதீர்கள். அது மனச்சாட்சியின் குமுறல்!

''கல்கி''யில் தொடர் கதையாக வந்த டைரக்டர் பாலசந்தரின் ''மூன்று முடிச்சுக்கள்'' அல்ல இது. ''ஓ சீதா கதா'' என்ற தெலுங்குக் கதையின் தமிழாக்கம்.

ஸ்ரீதேவியின் மூலம் தமிழ்த் திரைப் படத்துக்கு ஒரு புதுக் கதாநாயகியை அறிமுகப் படுத்தியிருக்கிறார், டைரக்டர். ரஜனிகாந்த் மூலம் ஒரு புது வில்லன் கிடைத்திருக்கிறார். வில்லன் என்பதற்காகக் கொஞ்சம்கூட அலட்டிக்கொள்ளாமல், அவர் அநாயாசமாக நடித்திருக்கிறார்.

ஆரம்பக் காட்சிகளில் கமலஹாசனைக் காதலித்தபோது ஸ்ரீதேவியும் சரி, படமும் சரி, படு ஜோர்! தனக்குப் பிரியமான ரிக்கார்டுகளைப் போடச் சொல்லிக் கேட்டுக் கமலஹாசனின் உள்ளம் கவர்ந்த போதும், இருவரும் 'மௌத் ஆர்கனை'யும் பூவரச இலை ஊதலையும் வைத்துக் கொண்டு ஊதியே தங்கள் காதலை வளர்த்துக் கொண்ட போதும் எனக்குண்டான மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. 'முற்றிலும் புதுமையான படம் வந்திருக்கிறது' என்று நான் புளகாங்கிதம் அடைந்த போது 'இடைவேளை' வந்தது. அதன் பிறகு படம் எப்படி யெல்லாமோ திசை தப்பிப் போய்விட்டது. உல்லாசப் படகுச் சவாரியில் நீச்சல் தெரியாத கமலஹாசன் நீரில் முழுகிப் போனதும் திரைக் கதையும் முழுகிப் போய் விட்டது!

'இடை வேளை'க்குப் பிறகு ஏன். எஸ். விசுவநாதன் தம் அமைதியான நடிப்பினால் நமக்குத் திருப்தி அளிக்கிறார். வில்லனின் தந்தையான அவருக்குக் கம்பீரமான தோற்றம் இருக்கிறது.

பாலசந்தரின் நறுக்கென்று அமையும் சுருக்கமான வசனம் ரசிக்கத்தக்கது.

மனச்சாட்சி என்ற ஒரு பைத்தியம் அடிக்கடி வில்லனின் மனக்கண்முன் தோன்றி, ஆர்ப்பாட்டமாகச் சிரிப்பதும், கயிற்றில் முடிச்சுக்களாகப் போட்டுக் கொண்டிருப்பதும் என்ன உத்தியோ! வேண்டியிருக்கவில்லை!

ஒய். விஜயா, ஸ்ரீதேவியை ஆதரிக்கும் அக்கா; எக்ஸ்ட்ரா நடிகை; தீப்புண் பட்டு விகாரமடைந்து பிறகு தற்கொலையும் செய்துகொள்ளும் பாத்திரம் அது. தம் பாகத்தைத் திறமையாகச் செய்திருக்கிறார்.

பிற்பகுதியில் ஸ்ரீதேவியும், ரஜனிகாந்த்தும் சுவையான சந்திப்புக்களில் படத்துக்குச் சுவையூட்டுகின்றனர். ஆனால் முற்பகுதியுடன் இணைத்துப் பிற்பகுதியில் போடப் பட்ட முடிச்சு அழுத்தமாக விழவில்லை. கழன்று கொண்டுவிட்டது! — காந்தன்

## சரித்திர 'சிப்ஸ்!'

பாபர் என்ற சொல்லுக்குப் புலி என்று பொருள். தந்தை வழியில் மாவீரன் தைமூரையும், தாய் வழியில் வெற்றி வீரன் செங்கிஸ்கானையும் முன்னோர்களாகக் கொண்டவர். பட்டத்துக்கு வரும்போது பாபருக்கு வயது பதினொன்றுதான்.

✠ பாபரின் மைந்தர் ஹுமாயூன். ஹுமாயூன் என்ற சொல்லுக்கு அதிர்ஷ்டக்காரன் என்று பொருள். ஆனால் வாழ்க்கையில் கொஞ்சம்கூட அதிர்ஷ்டத்தையே அடையாதவர் ஹுமாயூன். டெல்லி ஆட்சிப் பீடத்தில் அமர்ந்து நிம்மதியாக ஆட்சி செய்த காலம் ஆறு மாதங்கள்தான். ஒரு சமயம் மாடிப்படியிலிருந்து இறங்கி வரும்போது கால் இடறி விழுந்து இறந்து விட்டார். ஹுமாயூன் இனிமையாகப் பாடுவதில் வல்லவர்.

✠ பாபரை 1527ல் கான்வா என்ற இடத்தில் ரஜபுத்திர வீரன் ராணா சங்கா கடுமையாக எதிர்த்துப் போரிட்டார். அவருக்கு அது சமயம் ஒரு 'கண்ணும்' ஒரு 'காலும்' ஒரு 'கையும்' கிடையாது. மேலும் 'நூறு போர்க்களம்' கண்டு, உடலில் '80 விழுப்புண்'களைப் பெற்றிருந்தார்.

— லலிதா நாராயணன்



# சில சுவையான நிகழ்ச்சிகள்

**கா**வேரிக் கலாசாலை சம்ஸ்கிருதப் பேராசிரியர் அனந்தகிருஷ்ண சர்மாவுக்கு ஆங்கிலத்திலும் நல்ல புலமை. 'மேகதூதம்' நடத்துகையில் 'வேர்ட்ஸ் வொர்த்' (Wordsworth)திலிருந்தும் 'ஷெல்லி'யிலிருந்தும் மேற்கோள்களாக அள்ளி விடுவார். ஆள் உயரம். தலைப் பாகையுடன் அவர் வகுப்புக்குள் நுழைந்தால் ஒரே 'கப்சிப்'. ஓரொரு சமயம் வடமொழிப் பாடம் எடுத்துக் கொள்ளாத மாணவர்கள் கூட அவர் வகுப்புக்கு வந்து 'ஆ' என்று வாயைப் பிளந்தபடி வீற்றிருப்பார்கள். இலக்கியத்தைச் சுவைபடச் சொல்லித் தருவதில் அவருக்கு நிகர் அவரே. அனந்தராம தீட்சிதரைப்போல் கம்பீரமான குரலில் சுலோகங்களை அவர் படிக்கையில் யார்தான் சொக்கிப் போக மாட்டார்கள்? ஆங்கில இலாகாவைச் சேர்ந்த என் போன்ற இளைஞர்களுடன் அவர் இலக்கியச் சர்ச்சை தொடங்கி விட்டால் பொழுது போவதே தெரியாது.

கல்லூரி ஆசிரியர்களுக்கும் மாணவர்களுக்குமிடையே கயிறு இழுக்கும் போட்டி நடக்குமல்லவா? அதை வகுப்பில் அவர் தேவர்களும் அசுரர்களும் மந்தர மலையைக் கடைந்ததற்கு ஒப்பிட்டுப் பேசினார். 'யார் தேவர்கள்? யார் அசுரர்கள்?' என்று வினவினார்கள் போக்கிரி மாணவர்கள். சர்மா பதில் சொல்லாமல் மழுப்பிவிட்டார்.

அந்த வருஷக் கடைசியில் வழக்கம்போல் கயிறு இழுக்கும் போட்டி நடந்தது. மாணவ மாணவிகள் சர்மாவையும் கலந்து கொள்ளும் படி கட்டாயப்படுத்தினார்கள். தலைப்பாகை, கோட்டு முதலியவற்றைக் கழற்றி வைத்து முண்டா பனியனுடன் ஐம்பது வயது இளைஞராகக் கோதாவில் இறங்கினார் சர்மா.

போட்டிக்குப்பின் எல்லோருக்கும் 'ஐஸ் க்ரீம்' வழங்கப்பட்டது. சர்மாவிடமும் 'ஐஸ் க்ரீம்' கோப்பையை நீட்டினாள் அவர் மாணவி சுஜா.

''இதெல்லாம் என்ன அம்மா?''

''அமிர்தம்! மந்தர மலையைக் கடைந்த பின் வேறு என்ன எதிர்பார்க்கிறீர்கள்? என்னைப் பார்த்தால் மோகினியாட்டம் இல்லையா?''

''சரிதான், சரிதான்! யார் தேவர்கள், யார் அசுரர்கள் என்பது இப்பொழுதாவது புரிந்ததோன்னோ?'', என்று கேட்டுப் புன்னகை செய்தார் சர்மா. ஆசிரியர்கள் வெற்றி பெற்றதைத்தான் அவர் இவ்வாறு குறிப்பிட்டார்.

எதிர்பாராத குண்டுகளைத் தூக்கிப் போடுவதில் வல்லவர் திரு சர்மா. ஆசிரியர்களுக்கான சங்கீதப் போட்டி நடந்து கொண்டிருந்தது. மாணவ மாணவிகளுக்கு ஒரே கொம்மாளம். யாரோ சர்மாவை மேடைக்கு வந்து பாடும் படி 'மைக்'கில் அழைப்பு விடுத்தார்கள். மற்ற வயதான வாத்தியார்களைப் போல் மறுத்து விடுவார் என்றுதான் எதிர்பார்த்தார்கள். ஆனால் எமகாதகரான சர்மா, மாணவர்கள் ஆரவாரத்துடன் கைதட்ட, மேடைக்குப் போனார்.

''சினிமாப் பாட்டுத்தான் பாடலாம், சுலோகங்கள் கூடாது'' என்றது ஒரு மாணவரது குரல்.

''சினிமாப் பாட்டுத்தானே? பாடினாப் போச்சு'' என்று கூறித் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். யாரும் எதிர்பாராத வகையில் 'கல்யாண சமையல் சாதம், காய் கறிகளும் பிரமாதம்' என்று 'ஆக்ஷ'னுடன் பாட ஆரம்பித்து விட்டார். மாணவர் கர கோஷம் வானைப் பிளந்தது. சங்கீதப் போட்டியில் முதல் பரிசு சர்மாவுக்கே தரப் பட்டது!

ரிடையரானதற்குமுன் தம் உயிரைத் திருணமாக மதித்து, தண்ணீரில் தத்தளித்துக்

கொண்டிருந்த ஒரு மாணவனை அவர் காப்பாற்றினதையும் இங்கு குறிப்பிட்டாக வேண்டும். இத்தனைக்கும் அவருக்கு நீந்தத் தெரியாது. இளைஞர்கள் எல்லாம் பார்த்துக் கொண்டு நிற்க, தண்ணீரில் பாய்ந்து குதித்த சர்மாவின் அஞ்சா நெஞ்சத்தைப் பாராட்டுவதா? தியாக புத்திக்குக் கவி பாடுவதா? இன்னும் சர்மாவின் கம்பீரமான குரல் என் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. ஏன், என்றும் ஒலிக்கும்!

சர்தார் பாட்டியா அந்த வடநாட்டுக் கல்லூரியில் ஆங்கிலப் பேராசிரியர் வேலையை ஒப்புக் கொள்வதற்குமுன் நாலைந்து பேர் அப்பதவிக்கு வந்து, விட்டுப் போய்விட்டார்கள். மாணவர்கள் மேள தாளத்துடன் ஊருக்கு அனுப்பி வைத்தார்கள் என்பது இன்னும் பொருந்தும். பாட்டியாவுக்குமுன் வேலைக்கு வந்த ரங்கராவை நாற்காலியுடனேயே தூக்கிச் சென்று கல்லூரிக்கு வெளியே வீசிவிட்டார்கள் (இத்தனைக்கும் அவர் முழுசாக இருநூறு பவுண்டு!) ரங்கராவுக்குப்பின் இரண்டு மூன்று இளைஞர்கள் வந்தார்கள். எல்லோரும் இரவோடு இரவாகச் சொல்லிக் கொள்ளாமல் ஓடி விட்டார்கள்.

பாட்டியா முதல் வகுப்பிலேயே ஏதோ சொக்குப் பொடி தூவிவிட்டார். மாணவர்கள் கப்சிப்பென்று அடங்கினதுடன் பாட்டியாவின் புலமைக்குக் கவி பாடத் தொடங்கினார்கள். 'அவரிடம் பாடம் கேட்கக் கொடுத்து வைக்க வேண்டும். லெக்சரா அது? மறக்க முடியாத ஓர் அனுபவம்' என்ற தோரணையில் அவரைப் பற்றி மிக உயர்வாகப் பேசத் தொடங்கினார்கள்.

அப்பொழுதுதான் அந்த விஷயம் அம்பலத்துக்கு வந்தது! பாட்டியாவுக்கு பி. ஏ. பட்டம்கூடக் கிடையாதாம்! அவர் ஒரு 'மெட்ரிகுலேட்'. தேசப் பிரிவினையின் போர்து கராச்சியிலிருந்து ஓடி வந்தவர். தம் பட்டங்களை எல்லாம் ஓடி வரும் அவசரத்தில் எங்கேயோ தொலைத்து விட்டதாக அவர் கல்லூரி நிர்வாகிகளிடம் கூறி யிருந்தார். குட்டு வெளிப்பட்டதும் கிழவரைப் போலீஸில் ஒப்படைக்கவில்லை பிரின்ஸிபால். வேலையை விட்டு விலகும்படி கூறினர்.

ஆனால் மாணவர்கள் பாட்டியா போகக் கூடாதென்று வேலைநிறுத்தம் செய்தார்கள்! யார் யாருக்கோ தந்தி அடித்தார்கள். பட்டம் இல்லாவிட்டால் என்ன? முதல் வகுப்பில் பாஸ் பண்ணின எம்.ஏ.க்களைவிடச் சிறப்பாகப் பாடம் சொல்லித் தரும் திறமை இருந்ததே! ஓர் ஆசிரியருக்கு அது போதாதா?

**எஸ்.** எம். ஜானகிராமன் என்று ஒரு பேராசிரியர். எப்பொழுதும் வெள்ளைக் கோட்டும் 'பாண்டும்' அணிந்திருப்பார். போக்கிரி மாணவர்கள் 'எஸ். எம்.' என்ற அவர் இனிஷியலுக்கு ஸ்டேஷன் மாஸ்டர் என்று இரகசியமாக விளக்கம் தந்திருந்தார்கள்.

1946ம் வருஷம் என்று நினைவு. ரயில்வே 'ஸ்டிரைக்' ஒன்று நடந்தது. விசுவாசத்துடன் வேலைசெய்த ரயில்வேச் சிப்பந்திகளை வேலை செய்யவிடாது தடுத்தவர்களைப் போலீசார் கைது செய்து கொண்டிருந்தார்கள். எதேச்சையாக ரயில்வே ஸ்டேஷன் பக்கம் தலை காட்டின எஸ். எம். ஜானகிராமனையும் 'போலீஸ் வேனி'ல் ஏற்றிவிட்டார்கள். தாம் ரயில்வே சிப்பந்தியில்லை என்று எவ்வளவோ முறையிட்டுப் பார்த்தார் பேராசிரியர். ஆனால் போலீஸார் கேட்டால்தானே? 'பெரிய பெரிய யூனியன் தலைவன் எல்லாம் இப்படித்தான் புளுகி எங்களைக் குழப்புவான். நாங்களா ஏமாந்து போவோம்? வெள்ளை யூனிபாரத்தைப் போட்டுக்கிட்டு, 'நான் ரயில்வே சிப்பந்தியில்லை'ன்னு யார் ஸார் நம்புவா? இந்தக் காலத்திலே எந்தக் காலேஜ் புரொபஸர் ஸார் வெள்ளை போடறான்?' என்று கேட்டு 'லாக்—அப்'பில் தள்ளி



# ஜோக்கர் சீட்டு!



''இதோ இருளைக் கிழித்துக் கொண்டு இந்த டார்ச் வெளிச்சம் போகின்றதே, அதன் மேலே நீ நடந்து சென்றால் நான் உனக்கு நூறு ரூபாய் தர்றேன்!''

''பேறவேன். ஆனால் நான் வெளிச்சத்தின் மேல் நடந்து கொண்டிருக்கும்போது பாதியில் நீ டார்ச்சை அணைத்து விட்டால் கீழே விழுந்து விடுவேனே. அதான் யோசிக்கிறேன்.''

''ஏய்! உன் சைக்கிளைக் காணலே. யாரோ திருடிட்டுப் போயிட்டாங்க போல் இருக்கு.''

''நல்ல வேளை. அந்தச் சமயத்தில் நான் சைக்கிளை ஓட்டிக் கொண்டிருக்கவில்லே. நானும் இல்ல திருட்டுப் போயிருப்பேன்.''





''எனக்கு வழியில் பணம் கிடைச்சா ஒரு பங்கு கடவுளுக்குக் கொடுத்துவிட்டு மீதியை நான் எடுத்துக்குவேன்.''

''நான் அப்படிக் கிடைச்சா அந்தப் பணத்தை மேலே தூக்கிப் போடுவேன். கடவுள் வேணுங்கிறதை எடுத்துகிட்டு மீதியை எனக்காகக் கீழே போடுவார். அதை மட்டும் நான் எடுத்துக்குவேன்.''

- பிரகாஷ்

---

விட்டார்கள். முழுசாக நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குப்பின்தான் அவருக்கு விடுதலை கிடைத்தது.

அன்றே அப்பொழுதே வெள்ளை யூனிபாரம் என்ன, மேல் நாட்டு உடைக்கே தலை மூழ்கி விட்டார் எஸ். எம். ஜே. வெள்ளை வெளேர் என்று கதர் ஜிப்பாவும் வேஷ்டியுமாக அவர் கல்லூரிக்குள் நுழைந்த போது அவரை ஆரவாரத்துடன் வரவேற்றார்கள் மாணவர்கள்.

ஆனால் 'ஸ்டேஷன் மாஸ்டர்' என்ற செல்லப் பெயர் அவரை விட்டுப் போக மறுத்தது. கல்லூரி ஆண்டு விழாவின் போது மாணவர்கள் அவருக்கு ஒரு பச்சை — சிவப்பு விளக்கு தந்து கௌரவித்தார்கள்!

காவி உடையில் கல்லூரிக்கு வரும் பேராசிரியரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அவர்தான் கணிதமேதை விநாயகராவ். மற்ற பேராசிரியர்களைப் போல் முழு நேரமும் கல்லூரியில் வீற்றிருக்கமாட்டார். எம். ஏ. வகுப்பு முடிந்தவுடன் வெள்ளைத் துணி போட்ட குடையுடன் வீட்டுக்குக் கிளம்பிவிடுவார். அங்கு போய்ப் பார்த்தால் திரையாட்டம் கட்டப்பட்ட ஈரப் புடவைக்குப்பின் (குளிர் சாதன அறைகள் எல்லாம் பிச்சை வாங்கணும்!) தரையில் வீற்றபடி 'ஸ்லேட்'டில் ஏதோ கிறுக்கிக் கொண்டிருப்பார், அல்லது தீவிரமாகப் பூஜை செய்து கொண்டிருப்பார்.

விநாயகராவ் உலகப் புகழ்பெற்ற கணித மேதை. 'உங்களால் எப்படி இவ்வளவு கடினமான பிரச்னைகளுக்கு விடை கண்டுபிடிக்க முடிகிறது?' என்று ஒரு தடவை அவரை வினவினேன். அவர் சிரித்துக் கொண்டே சொன்னார்: 'கணிதமேதை ராமானுஜத்துக்கு நாமக்கல் தேவி உதவினாள். எனக்கு இந்தச் சாளிக்கிராமம்தான் உதவுகிறது. இது எங்கள் குடும்பத்தில் இருநூறு ஆண்டுகளுக்கு மேலாகப் பூஜிக்கப்பட்டு வருகிறது. விநாயகராவின் சாதனைகள் அத்தனையும் இந்தச் சாளிக்கிராமத்தினுடையதுதான்.'

எவ்வளவு சிக்கலான கணக்குக்கும் சடுதியில் விடை கண்டுபிடிக்கும் விநாயகராவுக்குச் சில எளிய விஷயங்கள் புரியாதது விந்தையிலும் விந்தையே! ஒரு தடவை அவரைச் சினிமாவுக்கு இழுத்துச் சென்றேன். அவருக்குக் கதை புரியவில்லை. என்னிடம் விடாது விளக்கம் கேட்டு நச்சரித்தார்.

மிகக் கடினமான கணக்குகளை அம்மானை ஆடும் மேதைக்குச் சிறுவர்களுக்குப் புரியும் சினிமாக் கதை புரியாதது ஆச்சரியம்தானே? ஒவ்வொருவருக்கும் ஒரு Blind Spot உண்டு போலும்!

கல்லூரி யூனியன் மீட்டிங்குக்கு ஒரொரு சமயம் கூட்டம் சேராது. நாலரை மணிக்கு மேல் 'கேரளாவில் சோப்புத் தொழில்' என்று யாராவது பேசினால் மாணவர்கள் வருவார்களா என்ன? டென்னிஸ் கோர்ட்டுக்குப் போவார்கள் அல்லது காண்டீனில் டிபன் யுத்தம் நடத்துவார்கள்.

கூட்டம் சேருவதற்கு அந்தக் கல்லூரியில் ஒரு தந்திரம் செய்வார்கள். 'மீட்டிங்குக்குப் பின் பேராசிரியர் கிருஷ்ணமாச்சாரி மாஜிக் காட்டுவார்' என்று கொட்டை எழுத்தில் அறிவிப்பார்கள். அப்பொழுதுகூட மாஜிக்குக்கு வந்துவிட்டு ஓடிவிடும் பிள்ளைகள் உண்டு!

கிருஷ்ணமாச்சாரியின் கண் கட்டு வித்தைகளில் பிரபலமானது' சாக்குப் பை'வித்தை.

யாராவது மாணவன் ஒருவனைச் சாக்கில் போட்டுக் கட்டுவார். சற்றுப் பொறுத்துச் சாக்கை உதறுவார். அது காலியாயிருக்கும். கிருஷ்ணமாச்சாரி மூன்று தடவை அந்த மாணவனின் பெயரைச் சொல்லி அழைப்பார். சொல்லி வைத்தாற்போல் கூட்டத்துக்குள்ளிருந்து ஓடி வருவான் அவன்.

ஒரு தடவை கேசவன் என்ற மாணவனைச் சாக்குக்குள் போட்டுக் கட்டினார். அவர் மும்முறை அழைத்தும் வரவில்லை. பிரின்ஸிபால் பயந்து போனார். ஆசிரியர்களுக்கும் அச்சம்தான். கிருஷ்ணமாச்சாரி மட்டும் கலங்கவில்லை. 'அத்தனை வகுப்புகளுக்கும் ஐந்து நிமிஷங்கள் தாமதமாகத்தானே வருவான் கேசவன்? இங்கும் 'லேட்டாக' வருகிறான் போலும்' என்று அவர் சொல்வதற்கும் கேசவன் ஓடி வருவதற்கும் சரியாக இருந்தது!





ஹோட்டல் சுதர்ஸன். காரிபியன் பெண்கள் கிரிக்கெட் சங்கத் தலைவி மோனிகா டெய்லர் பத்திரிகையாளரிடம் அளவளாவும் போது சொன்னாள்:

''எங்கள் தேசத்தினைப் போலவே இங்கு வெய்யில் இருக்கும் என்று எதிர்பார்த்தோம்!''

''இம்மாதங்களில் மெட்ராஸில் அவ்வளவு குளிராது; டில்லியில் குளிர் அதிகம். ஜம்மு காஷ்மீரில் இன்னும் கடுங் குளிர்!'' என்றார் பத்திரிகைப் பிரதிநிதி ஒருவர்.

''அப்படியா? கடுங்குளிர் என்றால்எங்களுக்கு அலர்ஜி!'' என்று நடுங்கினாள் டெய்லர்.

சிதம்பரம் ஸ்டேடியம். பார்வையாளர் பத்தாயிரம் பேருக்கு மேல் குழுமியிருந்தனர். தமிழகப் பெண்கள் கிரிக்கெட் சங்கத்துக்கு அதைக் கண்டு பெரும் வியப்பு.

''காப்டன் சாந்தா உணவே சாப்பிடவில்லை. வெறும் ஆப்பிளும் கூல்டிரிங்கும், சாப்பிட்டே ஆடிக் கொண்டிருக்கிறாள்! 'Cramp' வந்துவிடாமலிருக்க வேண்டுமே என்று கவலை!''— கூறியது துணைக் காரியதரிசி ஷீலு.

இந்தியக் கோஷ்டியின் 218 ரன்களைக் கண்டு அசந்து போய் வருண தேவன் இரண்டு நாட்கள் 'தாரை தாரை'யாகக் கொட்டித் தீர்த்துவிட்டான்! ஆடமுடியாத இரு கோஷ்டிகளுக்கும் கண்களில் 'நீர்' துளித்தது!

தமிழகக் கிரிக்கெட் சங்கத்தினர் மைதானத்தை 'ஆபரேஷன்' செய்து குணப்படுத்தினர்! அதற்கு நடந்த 'நர்ஸிங்' பணிவிடைகள் கொஞ்சநஞ்சமல்ல. இதன் விளைவாக இரண்டாம் மூன்றும் நாட்களில் ஒரு 'சிறிது' ஆட்டத்தைக் காண முடிந்தது. மூன்றும் நாள் 41 ரன்களிலேயே இந்திய கோஷ்டி மேற்கிந்தியப் பெண்களின் நான்கு விக்கெட்களை வீழ்த்தியதும் வருண தேவனுக்குப் பொறுக்கவில்லை! கொட்டித் தீர்த்து மைதானத்தை விட்டு ஆட்டக்காரிகள் அனைவரையுமே விரட்டி விட்டான்! அவன் 'பொல்லாதவிளையாட்டை'க் கண்டு வருந்தாதவர் இல்லை. ஆனால் மழைக் காலம் என்று தெரிந்ததுதானே. இந்தச் சமயத்தில் டெஸ்ட் வைபவத்தை வைத்துக் கொண்டது வருண பகவான் தவறு இல்லையல்லவா? ஆட்டம் 'டிரா'வில் முடிந்தது. வருணன் வென்றான்.

காப்டன் லூஸி பிரௌனிடம், ''உங்களுக்குச் சென்னை பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''எல்லாம் பிடித்திருந்தது — இந்த மழையைத் தவிர!'' என்றார்.

''நீங்கள் உங்கள் கோஷ்டியில் பௌலர் பேர்வெதரை, (Fair weather) அழைத்து வந்தீர்கள்! என்ன பிரயோஜனம்?... அது சரி, இந்திய கோஷ்டி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?''

''இவ்வளவு தரமான ஆட்டம் இங்கு இருக்கும் என்று நாங்கள் எதிர்பார்க்கவில்லை. ஆஸ்திரேலிய, நியூஸிலந்து வெளி நாட்டுக் குழுக்களோடு அவர்கள் நன்கு ஆடித் தேர்ந்திருக்கிறார்கள். காப்டன் சாந்தா, ஷோபா பண்டிட் ஆகியோர் ஆட்டம் என்னைக் கவர்ந்தது!'' என்றார் லூஸி பிரௌன்.

# வருணன் வென்றான்!

''லூஸி பிரௌன் ஆட்டத் திறனோடு கிரிக்கெட் சட்ட நுணுக்கங்களும் அறிந்தவள். பன்னிரண்டாவது ஆட்டக்காரி ஸ்லிப்பில் நின்றதைக் காப்டன் சாந்தாவிடம் நாசுக்காகக் காட்டி இடம் மாற வைத்த அழகைப் பார்த்தீர்கள், அல்லவா?'' என்று அம்பயர் ராமசாமி வியந்தார்! —குண்டுமணி





படங்கள்: 1. சாந்தா ரங்கசாமி. 2. லூஸி பிரௌன். 3. டெஸ்டில் இந்திய விக்கெட் வீழ்ச்சி!

# ஏழுமலையான் அருள்!

## வாரிஜகுமாரி

"அம்மா! நானும் விமலாவும் ஏழு மணிக்குக் கிளம்பறோம். மலையடிவாரத்துக்குப் போகும்போது எப்படியும் எட்டாயிடும். நடந்து போகிறவங்களுக்கு நாலு மணி நேரமாகுமாம். விமலா, குழந்தையையும் எடுத்துண்டு நடக்க ஒரு மணி நேரம் அதிகமானாலும், சுமார் ஒரு மணிக்கு மேலத்திருப்பதி வந்து சேர்ந்துடுவோம்.... நீ பன்னிரண்டு மணி பஸ்ஸில் புறப்பட்டுத் திருமலைக்குப் போய் பஸ் ஸ்டாப்பிலேயே காத்திரு. நாங்க வந்து சேர்ந்த பிறகு 'காட்டேஜ்' கிடைக்குமான்னு பார்ப்போம்..." என்றான் அனந்தராமன்.

"குழந்தையையும் எடுத்துண்டு பாவம் விமலாவால் நடக்க முடியுமாடா அனந்து? நானும் உங்களோடவே நடந்து வந்துடவா?" என்று கேட்டாள் அனந்தராமனுடைய தாயார். பத்துப் படிகள் கூடத் தன்னால் ஏற முடியாது என்று அந்த அம்மாளுக்குத் தெரிந்த விஷயம் தான். இருந்தாலும் பிள்ளையும் நாட்டுப்பெண்ணும் அவ்வளவு தூரம் நடந்து வரவேண்டுமே என்ற அங்கலாய்ப்பில் தானும் நடந்து வருவதாகச் சொன்னாள்.

"உங்களால் முடியாதும்மா... இந்தச் சத்திரத்து மாடி ஏறி வந்ததே அரை மணி நேரம் மூச்சு வாங்கித்து..." என்றாள் விமலா.

"நீயும் நடந்து வந்தால் சூட்கேஸை யாரும்மா தூக்கிண்டு வர்றது? வீட்டையே காலி பண்ணிண்டு வரமாதிரி விமலா சூட்கேஸிலே சாமான்களை வைச்சுத் திணிச்சிருக்கா... அதையும் தூக்கிண்டு மலை ஏற முடியுமா?..." என்றான் அனந்தராமன்.

"அதுவும் வாஸ்தவம்தான்" என்று ஒப்புக் கொண்டாள் தாயார்.

அடிவாரத்தை அவர்கள் அடையும்போது மணி ஒன்பது. விமலா முதல் படியில் குழந்தையைப் படுக்க வைத்தாள். சுமார் ஐந்து நிமிஷங்கள் ஏழாவது மலையில் எழுந்தருளி யிருக்கும் எம்பெருமானை நினைத்து "வேங்கடாசலபதி! இந்தக் குழந்தை பேசுமா பேசாதாவென்றே புரியவில்லை. இந்தக் காதுகளுக்குச் சப்தங்களைக் கேட்கும் சக்தி இருப்பதாகத் தெரியவில்லை. உன் சன்னதிக்கு எடுத்து வருகிறேன். உனக்குக் கல்யாண உற்சவம் செய்து வைக்கிறோம். இந்த ஜீவனைப் பெற்றெடுத்த நாங்கள் இருவரும் உன் சன்னதியை அங்கப் பிரதட்சிணம் செய்கிறோம். என்ன அபசாரம் செய்திருந்தாலும் அதை மன்னித்து இந்தக் குழந்தைக்குப் பேசும் சக்தியையும் கேட்கும் சக்தியையும் கொடு!" என்று வேண்டிக் கொண்டாள். அவள் விழிகளில் நீர் ததும்பி நின்றது. குனிந்து குழந்தையைப் பார்த்து "ராஜா!... கோவிந்தா கோவிந்தான்னு சொல்லும்மா கண்ணு!" என்றாள். குழந்தையின் பார்வை எங்கோ லயித்திருந்தது. விமலாவின் குரலுக்கு அதன் செவிகளில் நுழையும் சக்தி இல்லை. குழந்தையை எடுத்து இடுப்பில் வைத்துக்கொண்டு 'கோவிந்தா! கோவிந்தா!' என்று மெள்ளக் கூறியவாறு மலையேறத் தொடங்கினாள். அவளுடைய ஒவ்வொரு மூச்சும் ஒரு கோவிந்தா நாமத்துடன் வெளிவந்து கொண்டிருந்தது. சுமார் ஐம்பது படிகள் ஏறியதுமே மூச்சு வாங்கத் தொடங்கியது. ஒரு கையால் வலது முழங்காலைப் பிடித்தவாறு சிறிது நின்றாள். ஐந்தாறு படிகள் முன்னதாகச் சென்று கொண்டிருந்த அனந்தராமன் திரும்பி விமலாவைப் பார்த்தான். அவள் மார்பு விம்மித் தணிந்து கொண்டிருந்தது.

"ராஜாவை எங்கிட்டக் கொடுக்கிறியா?" என்றான்.





"நீங்கதான் கூடையை எடுத்துண்டு வறேளே....." என்று கூறியவாறு நடக்கத் தொடங்கினாள் விமலா.

"ஏணியில் ஏறுவது போல் மலையேறக்கூடாது விமலா... ஒவ்வொரு படியிலும் இரண்டு அடி நடந்து அடுத்த படிக்குப் போகணும். அப்பத்தான் லகுவாயிருக்கும்" என்று மலையேறும் வித்தையைச் சொல்லிக் கொடுத்தான் அனந்தராமன்.

"இன்னும் எவ்வளவு தூரம் இருக்கு?"

"இன்னும் நூறு படிகள்கூட ஏறல்லியே விமலா. அதுக்குள்ளே எவ்வளவு தூரம் இருக்குன்னு கேக்கறியே?... காளி கோபுரம் வரைக்கும் கொஞ்சம் கஷ்டமாகத்



தான் இருக்கும். காளி கோபுரம் ஏறிட்டால் அப்புறம் அவ்வளவு சிரமம் தெரியாது'' என்று ஊக்கமளித்தான் அனந்தராமன்.

''காளி கோபுரம் ரொம்பத் தூரமா?''

''அதோ தெரியறதே! அதுதான் காளி கோபுரம்!'' என்று கையை உயர்த்திக் கோபுரத்தைக் காட்டினான். சுமார் இரண்டு தென்னை மரம் உயரத்தில் கோபுரம் தெரிந்தது. விடுவிடுவென்று ஏறினால் ஐந்து நிமிஷங்களில் காளி கோபுரத்தை அடைந்துவிடலாம் போல் தோன்றியது விமலாவுக்கு. பத்துப் பதினைந்து படிகள் வேகமாக ஏறினாள். அதற்குள் முழங்கால்கள் கழன்று விழுந்து விடும்போல் வலித்தன. உட்கார்ந்து விட்டாள். அனந்தராமன் ஒன்றும் சொல்லவில்லை. அவனும் உட்கார்ந்தான். விமலா காளி கோபுரத்தை அண்ணாந்து பார்த்தாள். எப்படிப் போய்ச் சேரப் போகிறோம் என்று பிரமிப்பா யிருந்தது.

அப்பொழுது விமலாவைப் புதிய குரல் ஒன்று இருபது முப்பது படிகள் கீழே பார்க்கச் செய்தது. சுமார் பதினைந்து வயதுச் சிறுவன் ஒருவன் 'கோவிந்தா! கோவிந்தா!' என்று ஏழுமலையானை அழைத்துக் கொண்டு மலையேறிக் கொண்டிருந்தான். சில நிமிஷங்களில் அவன் வெகுவாக முன்னேறிவிட்டான். விமலாவும் எழுந்தாள். இனி எங்கும் உட்காராமல் விடுவிடுவென்று காளி கோபுரத்தை அடைந்துவிட வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டு ஏறத் தொடங்கினாள். நான்கு இடங்களில் சிரம பரிகாரம் செய்து கொண்டு ஒரு வழியாகப் பத்தரை மணிக்குக் காளி கோபுரத்தையடைந்தனர் விமலாவும் அனந்தராமனும்.

பதினைந்து நிமிஷங்களுக்கு மேல் ஓய்வு எடுத்துக் கொண்டு பயணத்தை மீண்டும் தொடங்கினர். ''இனிமேல் அவ்வளவு சிரமமாயிருக்காது'' என்றான் அனந்தராமன். சிறிது தூரம் சமதரையில் நடந்ததும் மீண்டும் படிகள் பயமுறுத்தின. குழந்தையையும் சுமந்து கொண்டு விமலா மேல் மூச்சு வாங்கப் படிகள் ஏறுவதைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது அனந்தராமனுக்கு.

''குழந்தையை அம்மாவிடம் கொடுத்திருக்கலாம்...'' என்றான் அனந்தராமன்.

''இந்தப் பிரார்த்தனையே குழந்தையை உத்தேசித்துத்தானே! ராஜா நம்மோடு வருவது அவனே மலையேறி வருவதாகத்தான் அர்த்தம்'' என்றாள் விமலா. அனந்தராமன் குழந்தையின் முகத்தைப் பார்த்தான். அந்தப் பாசாங்கு வெய்யிலிலும் குழந்தையின் மலர் முகம் வாடி வதங்கியிருந்தது. அவனைத் தூக்கிக்கொண்டு நடக்க முடியாமல் நடக்கும் தாயின் கஷ்டத்தை உணர முடியாத அந்தக் குழந்தை அனந்தராமனைப் பார்த்துச் சிரித்தது! அதன் சிரிப்பில்தான் எத்தனை அழகு! சிரிக்கத் தெரிந்த அதற்கு வாயைத் திறந்து 'அம்மா' 'அப்பா' என்று அழைக்கத் தெரியவில்லையே!

வழியில் வாகனங்கள் செல்லும் தார் போட்ட ரஸ்தா குறுக்கிட்டது. பாதையின் ஓரமாக நின்றுகொண்டு கீழே தெரிந்த கிடு




**அயல்நாட்டு ஹாஸ்யம் - 1**

கிடு பள்ளத்தைப் பார்த்துக் கொண்டிருந்தனர் சிலர். அதில் அவர்களை முந்திக் கொண்டு வந்த பையனும் இருந்தான். அனந்தராமனைப் பார்த்ததும் ''இப்பத்தான் வர்றீங்களா? நான் ரொம்ப நேரத்துக்கு முந்தியே இங்கே வந்துட்டேன்...'' என்று மிகவும் பழகியவன் போல் சொன்னான்.

''நீ சின்னப் பையன்... ஓட்டமும் நடையுமா வந்துட்டே....'' என்றாள் விமலா. அவனும் அவர்களுடனேயே நடந்தான். ''அதோ தெரியறதே... அதுதான் முழங்கா முடிச்சு... அதைத் தாண்டிட்டா அப்புறம் கஷ்டமே இல்லே...'' என்றான் பையன்.

''உனக்கு இந்த ஊர்தானா?'' என்று விசாரித்தான் அனந்தராமன்.

''இல்லீங்க... நான் மெட்றாஸ்... ஆறு மாசத்துக்கு முந்தி ஒருவாட்டி சினேகிதப் பசங்களோட வந்தேன்....''

''இப்ப நீ தனியாத்தான் வந்திருக்கியா?''

''ஆமா...''

''படிக்கிறியா?''

''எட்டாவது வரை படிச்சேன். இப்ப கார் மெக்கானிக் வேலை கத்துக்கிறேன்... வேலையெல்லாம் ஓரளவு புரிஞ்சுக்கிட்டேன்க. நானே பழுது பார்ப்பேனுங்க... வேறே இடத்துக்கு வேலைக்குப் போனா நூறு ரூபாய்க்கு மேலே கொடுப்பாங்க... இப்ப இருக்கிற முதலாளி அறுவது ரூவாதான் கொடுக்கிறாரு... ஆனா அவருதான் வேலை யெல்லாம் கத்துக் குடுத்தாரு... அவரை விட்டுப் போகலாங்களா?''

''உன் பேர் என்ன?'' என்று கேட்டாள் விமலா.

''இப்ப நாம போற மலையோட பேருதான்!...''

''திருமலையா?''

''ஏழுமலை... ஸார்!... அந்தக் கூடையைக் கொடுங்க, நா எடுத்துட்டு வறேன்...'' என்று கூறியபடி அனந்தராமன் கையிலிருந்த பிரம்புக் கூடையை வாங்கிக் கொண்டான் ஏழுமலை.

மலை மலையாக ஆறு மலைகளைக் கடந்து ஏழாவது மலையில் அவர்கள் நடந்து பஸ் ஸ்டாண்டை அடையும்பொழுது மணி இரண்டேமுக்கால். அனந்தராமனின் தாயார் சூட் கேஸைப் பக்கத்தில் வைத்துக்கொண்டு அவர்கள் வரும் வழியையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

'' ரொம்பக் கஷ்டப்பட்டுட்டியோடி ?'' என்று விமலாவைப் பார்த்து வாஞ்சையுடன் கேட்டாள். விமலா வாயைத் திறந்து பதில் சொல்லவில்லை. லேசாக ஒரு புன்னகை செய்தவாறு குழந்தையை மாமியாரிடம் கொடுத்தாள். 'இவனைச் சுமந்து பெற்ற கஷ்டத்தை விடவா?' என்று கேட்பதைப் போலிருந்தது அவள் செய்கை.

''யார் இந்தப் பிள்ளை?'' என்று ஏழுமலையைக் காட்டிக் கேட்டாள்.

''மோட்டார் மெக்கானிக் ஏழுமலை!'' என்றான் அனந்தராமன். விமலா அவனைப் பற்றிச் சொன்னாள்.

அனந்தராமன் 'காட்டேஜ்' கிடைக்குமா என்று பார்க்கப் போனான்.

அன்று இரவு பகவானைத் தரிசனம் செய்தார்கள். மறுநாள் காலை கணவனும் மனைவியும் அங்கப் பிரதட்சிணம் செய்வதற்கும் மத்தியானம் கல்யாண உத்சவத்துக்கும் பணம் கட்டி ஏற்பாடு செய்தார்கள். கோவிலை விட்டு வெளியில் வரும்பொழுது பத்து மணியாகிவிட்டது. அதுவரை ஏழுமலையும் அவர்களுடனேயே இருந்தான். குழந்தையை அவன்தான் பார்த்துக் கொண்டான்.

மறுநாளும் அவர்களுடனேயே இருக்குமாறு ஏழுமலையைக் கேட்டுக் கொண்டாள் அனந்தராமனின் தாயார். காலையில் அங்கப் பிரதட்சிணம் செய்யும்பொழுது உதவிக்கு அந்த அம்மாள் பக்கத்தில் இருக்க வேண்டும். அப்பொழுது குழந்தையையும் எடுத்துப் போவது முடியாத காரியம். விடியற்காலை குளிரில் குழந்தையை எடுத்துப் போனால் அதன் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாது என்பது ஒரு காரணம். அத்துடன் பிரதட்சிணம் செய்யப் போகிறவர்களுக்கு உதவிக்காகப் போகும் அந்த அம்மாளும் ஸ்நானம் செய்துவிட்டு ஈரப் புடவையுடன் இருப்பாள். குழந்தையை எப்படி வைத்துக் கொள்ள முடியும்? ஆகையால் ஏழுமலையிடம் குழந்தையை ஒப்படைத்துவிட்டுப் போவதாகத் தீர்மானித்தார்கள். ஏழுமலையும் சம்மதித்தான்.

காலை மூன்று மணிக்கு எழுந்து கோவிலுக்குப் போனார்கள் மூவரும். ஏழுமலையிடம் பால் பாட்டிலைக் கொடுத்துக் குழந்தை அழுதால் கொடுக்குமாறு சொல்லி விட்டுப் போனார்கள்.

அங்கப் பிரதட்சிணம் செய்து பகவானைத் தரிசனம் செய்துவிட்டு அவர்கள் காட்டேஜை அடையும்பொழுது ஒன்பது மணியாகிவிட்டது. ஆனால் ஏழுமலையைக் காணவில்லை. குழந்தையை எடுத்துக் கொண்டு போயிருப்பான் என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் எங்கிருந்தோ வந்து கொண்டிருந்தான். குழந்தை அவனிடம் ஒட்டிக் கொண்டு விட்டது.

''எங்கேப்பா போயிருந்தே?'' என்று கேட்டாள் அனந்தராமனின் தாயார்.

''குழந்தை அழுதுச்சுங்க... எடுத்துக்கிட்டுப் போய் வேடிக்கை காட்டிட்டு வரேன்'' என்றான்.

அப்புறம் அவர்கள் கல்யாண உற்சவத்துக்காகக் கோயிலுக்குப் போகையிலும் குழந்தையை அவனிடமே விட்டுச் சென்றார்கள்.

மாலை ஆறு மணி சுமாருக்கு எல்லாவற்றையும் முடித்துக் கொண்டு திரும்பினர்.

---



**இதோ ஒரு பிற்போக்காளர்!**

கலிபோர்னியாவைச் சேர்ந்த ஒருவர் பின்புறமாகவே 8000

ஏழுமலையைக் காணவில்லை. தேடி அலைந்து கண்டு பிடித்து எட்டு மணிக்கு அனந்தராமன் குழந்தையுடன் திரும்பினன். ஏழுமலையும் கூட வந்தான். உள்ளே வந்ததும் குழந்தையை அம்மாவிடம் கொடுத்துவிட்டு, ''விமலா! அந்தக் கதவைச் சாத்து!'' என்றான். குரலிலும் முகத்திலும் கடுமை நிறைந்திருந்தது. அம்மாவும் விமலாவும் ஒன்றும் புரியாமல் அவனைப் பார்த்தார்கள்.

''இந்த ராஸ்கல் என்ன செய்திருக்கிறான் தெரியுமா?'' என்று ஏழுமலையைச் சுட்டிக் காட்டிக் கர்ஜித்தான்.

''என்ன விஷயம் அனந்து?'' என்று அமைதியாகக் கேட்டாள் அம்மா.

''இந்தப் பிச்சைக்காரக் கழுதை நம்ம குழந்தையைக் காட்டி க்யூ வரிசையில் பிச்சை வாங்கிக் கொண்டிருக்கிறான்...'' என்ற அனந்தராமனின் கோபம் உச்ச நிலையை அடைந்தது.

''நிஜமாவா?'' என்றாள் விமலா.

''என் கண்ணால் பார்த்தேன்... வேணும்னா அந்தப் பயலையே கேளேன்'' என்று சீறினான். விமலாவும் அவள் தாயாரும் ஏழுமலையைப் பார்த்தார்கள். ஏழுமலையே பேசினான்.

''பிச்சை வாங்கினேங்க...ஆனா எனக்காகப் பிச்சை வாங்கலீங்க... சாமி உண்டியலிலே போடறதுக்குத்தான் வாங்கினேன்'' என்றான். ஒரு நிமிஷம் யாரும் எதுவும்பேசவில்லை. அவனே தொடர்ந்தான். ''எங்க அப்பன் ஒரு குடிகாரனுங்க. தினமும் குடிச்சுட்டு வந்து எங்கம்மாவை உதை உதைன்னு உதைக்கும். தினமும் எங்கம்மா அடி வாங்கி உடம்பெல்லாம் புண்ணாயிடுச்சு. கடைசியிலே இனிமே அடிவாங்க முடியாதுன்னுட்டு ஆறு மாசத்துக்கு முந்தி எங்கோ போயிடுச்சு... எனக்கு அம்மா போனது வருத்தமாயிருந்தாலும் அடிவாங்காம எங்கேயாவது நல்லா இருக்கட்டும்னு தோணிச்சு... 'அவ எங்க போயிடுவா? தேடிப் பிடிச்சு ரெண்டா வெட்டிப் போட்டுடறேன்'னு சொல்லிக்கிட்டே இருந்தாரு எங்கப்பா. போன வாரம் மதுரையிலே எங்கம்மாவைப் பார்த்ததாக யாரோ அப்பா கிட்டச் சொன்னார்களாம். அவளை விட்டேனா பார்னு கறுவிக்கிட்டு மதுரைக்குப் போயிருக்காரு எங்கப்பா...நான் சின்ன வயசிலே வாய் பேசாம இருந்தேனும். அப்போ எங்கம்மா 'சாமி! நாலு இடத்திலே பிச்சை வாங்கி உனக்குக் காணிக்கை போடறேன். என் பிள்ளையைப் பேசவை'ன்னு வேண்டிக்கிட்டு அதன்படி செஞ்சாங்களாம். அப்புறம் எனக்குப் பேச்சு வந்ததாம். இப்ப நான் 'சாமி! எங்கப்பன் கண்ணிலே படாமல் எங்கம்மாவைக் காப்பாத்து. உனக்குப் பிச்சை வாங்கிப் பதினொரு ரூபா உண்டியிலே போடறேன்'னு வேண்டிக்கிட்டு வந்தேன். பத்து ரூவா சேர்ந்ததும் உண்டியிலே போட்டேன். இன்னும் ஒரு ரூவாதான் போடணும்...'' என்று கூறினான் ஏழுமலை. அவன் விழிகள் கலங்கிவிட்டன. ''நீ பிச்சை வாங்கிப் போட எங்க குழந்தைதான் கிடைச்சுதா?'' என்று கத்திக்கொண்டு ஏழுமலையின் கன்னத்தில் பளார் என்று அறைந்தான் அனந்தராமன்.



Laugh Magazine

## அயல்நாட்டு ஹாஸ்யம் - 2

''கோவிந்தா!...'' என்ற சொல்தான் ஏழுமலையிடமிருந்து வெளிப்பட்டது. அப்பொழுது ஓர் ஆச்சரியம் நடந்தது!

அடி விழுந்த சப்தத்தைக் கேட்டோ அல்லது 'கோவிந்தா!' என்று அவன் எழுப்பிய குரலைக் கேட்டோ எங்கோ பார்த்துக்கொண்டிருந்த குழந்தை ஏழுமலையைத் திரும்பிப் பார்த்தது!

''இருடா அனந்து!'' என்றாள் தாயார். அனந்துவும் அதைக் கவனித்தான். விமலா விரலைச் சொடுக்கினாள். குழந்தை அவள் பக்கம் திரும்பிற்று. எந்த மூலையிலிருந்து ஒலி எழுப்பினாலும் குழந்தையின் பார்வை அந்த இடத்துக்குத் தாவியது.

''குழந்தைக்குக் காது கேட்கிறது!'' என்று ஆனந்தத்துடன் கூறினாள் விமலா.

''அனந்து! பகவானுக்கு நீங்கள் செய்த அங்கப் பிரதட்சிணமோ கல்யாண உத்சவமோ போதவில்லையடா... குழந்தை மூலமாகவே காணிக்கை வாங்கிக் கொண்டிருக்கிறான்!...'' என்றாள். அனந்தராமன் கோபம் தணிந்து ஏழுமலையை அனுதாபத்துடன் பார்த்தான்.

''நா வறேனுங்க...'' என்று கிளம்பினான் ஏழுமலை.

''இந்த ராத்திரியிலே எங்கேப்பா போவே? இரு... நாளைக் காலையிலே போகலாம்...'' என்றாள் அம்மா.

''எங்களோட டில்லிக்கு வறியா? உனக்கு ஒரு நல்ல வேலை வாங்கித் தருகிறேன்...'' என்றான் அனந்தராமன்.

''வறேனுங்க. மெட்ராஸ்லேதான் எனக்கு யார் இருக்காங்க?'' என்றான்.

மறுநாள் அவர்களுடன் ஏழுமலையும் டில்லிக்குப் பயணமானான்.

இதில் இன்னொரு விஷயம் என்னவென்றால், ஏழுமலையின் தாயார் டில்லியில் அனந்தராமன் வீட்டுக்குப் பக்கத்தில் ஒரு வீட்டில் தான் வேலை செய்து கொண்டிருந்தாள். மதுரையில் அவளைப் பார்த்ததாக யாரோ கூறியது தவறான செய்தி!

டில்லி போய்ச் சேரும்வரை மூவருடைய சிந்தையிலும் ஒரே சொல் ஒலித்துக்கொண்டிருந்தது: ''கோவிந்தா!...கோவிந்தா!''

---



'' அரசியல் சாஸனம் போய்விட்டது. பாக்கி இருப்பது மாறுதல்கள்தாம்.''

— கிருபளானி

டெபோனேர் - பாபு

நெடுங் கதை



# கானல் நீர்

ரமா நாராயணன்

அன்றைய நடன நிகழ்ச்சிக் குத்
யா ராகிக் கொண்
ருந்தாள் ராதிகா.
டிகாரத்தைப் பார்த்
வள் கிளம்புவதற்கு
ன்னும் அவகாசம்
ருக்கிறதே என்று
ண்ணியபடி அங்கே
ருந்த பஞ்சு மெத்தை
ல் அலுங்காமல்
லுங்காமல் அமர்ந்
ாள். அருகிலிருந்த
க்காலியில் அப்போது
ான் வந்திருந்த பல
த்திரிகைகள் இறைந்து
டந்தன. அவற்றை
வ்வொன்றாக யந்திர
தியில் புரட்டினாள்.
ல்லாப் பத்திரிகை
ளிலும் அவளைப்
ற்றிய செய்திகள்
வளியாகியிருந்தன.
ல பத்திரிகைகளில்
நற்றைய அவள் நடன
கழ்ச்சியை ஓகோ
ன்று புகழ்ந்திருந்த
ர். அவற்றை நோட்
ம் விட்டாள். ஒரு
ாரப் பத்திரிகையில் அவளைப் பற்றிய
ட்டுரை ஒன்றும் தென்பட்டது. அதையும்
டித்தாள். திடீரென்று அவள் கண்கள் ஒரு
த்தியில் லயித்தன; மனம் விழிப்படைந்தது.
வனத்துடனும், ஆர்வத்துடனும் மேலும்
டித்தாள்.

'முப்பது வயதே நிரம்பப் பெற்ற குமாரி
ாதிகா நாட்டிய உலகில் தனி இடம் பிடித்துக்
காண்டு விட்டார். கடந்த பதினான்கு ஆண்டு
ளாகக் கலையுலகுக்கு அயராமல் சேவை
சய்து வருகிறார். ராதிகாவின் நடனம் பரதத்
க்கே இலக்கணமாக இருக்கிறது. ரசிகர்கள்
ங்களை மறந்து அநுபவிக்கும்படியான ஒரு
வர்ச்சியும், வேகமும் அவளுடைய நாட்டியத்
ின் சிறப்பு அம்சங்கள். இந்த முறையில்
ாதிகா, ஸ்ரீ ப்ரேம்குமாருக்கு அடுத்த படியில்
ிற்கிறார். எட்டு வருஷங்களுக்கு முன்பு உடல்
லை காரணமாக நாட்டியத்தினின்றும் ப்ரேம்
மார் ஓய்வு பெற்றபோது, ரஸிகர்களுக்கு
ற்பட்ட ஏமாற்றத்தையும், நாட்டிய உலகில்
ற்பட்ட வெற்றிடத்தையும் அவருடைய
ிஷ்யையான ராதிகா பெருமளவுக்குப் பூர்த்தி
சய்கிறார். ப்ரேம் குமாரின் மாணவிகளில்
தலிடம் பெறும் ராதிகாவின் நடனம்,
வருக்கு அந்தக் கலையின்மேல் இருக்கும்
டுபாட்டை நன்கு தெரிவிக்கிறது....'

மேலே படிக்கவில்லை, ராதிகா. பத்திரி
கையை மடித்து அலட்சியமாக மற்றவற்றுக்கு
த்தியில் போட்டாள். அவள் மனத்தில்
வதனை எழுந்தது. எல்லா விமரிசகர்களும்
வளைப் பற்றிச் சிறப்பாகக் கூறியபோதிலும்
ரேம்குமாருக்கு அடுத்த ஸ்தானத்தையே
வளுக்கு அளித்தார்கள். தன் குரு பிரேம்
மாருக்கு இணையாகத் தன்னையும் ரஸிகர்கள்

குறை அதற்கு இடைஞ்சலாக இருக்கிறது. அந்தக் குறை எது? நாட்டியத்தின் சாராம் சத்திலா? அல்லது பாவத்திலா? 'என்றைக்குப் ப்ரேம்குமாருக்கு இணையாக நான் கருதப் படுவேன்!'

புகழ் பெற்ற நாட்டிய மணியின் வருத்தமும் இதுதான். 'ப்ரேம்குமார், ப்ரேம் குமார்...' குரு மாத்திரமா அவன்? அவனைப் பற்றிய நினைவே இனித்தது.

அன்றைக்கு ராதிகா பருவத்தின் நுழை வாயிலில் நிற்கும் பதினேழு வயதுப் பெண். புகழ் ஏணியில் ஏறி வந்த நாட்டியமணி. ரசிகர்களும், விமரிசகர்களும் அவளுடைய கலையைப் போற்றத் தொடங்கிய காலம். ஒரு நாள் அவள் தந்தை மகாதேவன், தாயார் காந்திமதி, தங்கை சந்திரா, அவள் யாவரும் சேர்ந்து உணவருந்திக்கொண் டிருந்தனர். மகா தேவனின் கண்ணின் மணிகளான ராதிகாவும், சந்திரிகாவும் அவருக்கு இருபக்கத்திலும் அமர்ந்திருந்தனர். ராதிகா பூத்துக் குலுங் கும் செடியாக ஒருபுறம் அமர்ந்திருந்தாள். இதழ் விரியாத மொட்டாக மறுபுறம் அமர்ந் திருந்தாள் பத்து வயது சந்திரிகா. மகிழ்ச்சி யான, அமைதியான குடும்பம். பேச்சுக் கிடையில் ராதிகா சொன்னாள்:

"அப்பா, நான் பிரேம்குமாரிடம் நடனம் கற்றுக்கொள்ள ஆசைப்படுகிறேன்."

வாயில் போட இருந்த கவளம் அப்படியே தங்கியது.

"ப்ரேம்குமாரிடமா?"

வியப்புடன் அதிர்ச்சியும் கலந்திருந்தன, அவர் கேள்வியில்.

"ஆமாம். ப்ரேம்குமாரிடந்தான். நாட்டிய

''ஆனால் ராது, அவனுக்கு நல்ல பெயர் கிடையாதே? நாட்டியத்தைச் சொல்லவில்லை; நடத்தையைச் சொல்கிறேன்.''

''நான் நாட்டியத்துக்காகத்தான் அவரிடம் போகிறேன். மற்றப்படி அவர் எப்படியானால் எனக்கு என்ன?''

மகாதேவன் யோசனையில் ஆழ்ந்தார். ராதிகாவும் பேசவில்லை. அன்று மாலை, குடும்பத்துக்கு வேண்டியவர், மகாதேவனின் நண்பர், சேதுராமன் வந்திருந்தார். அவருக்குக் காபி கொணர்ந்து கொடுத்தாள் ராதிகா.

''என்ன மாமா, இப்போதெல்லாம் இந்தப் பக்கமே வருவதில்லை?''

''ஏன்? உன்னையுந்தான் காண்பதில்லை. நிறைய நிகழ்ச்சிகள் வருகின்றன. கிழவன் சேதுவை மறந்தே போய்விட்டாய்.'' அவளைச் சீண்டினார் சேதுராமன். அப்போது மகாதேவன் குறுக்கிட்டார்.

''சேது, ராதுவுக்குப் பிரேம்குமாரிடம் நாட்டியம் கற்றுக்கொள்ள வேண்டுமாம்.''

''பிரேம் குமாரிடமா?'' சேதுராமனின் புருவங்கள் உயர்ந்தன. சில விநாடிகள் மௌனமாக இருந்தார். பிறகு, ''அதெல்லாம் வேண்டாம். இப்போதே நன்றாகத்தானே ஆடுகிறாள்?'' என்றார்.

''பிரேம்குமார்தானே நாட்டியத்தில் மன்னன்? அவனிடம் நுணுக்கங்களையெல்லாம் கற்றுக்கொள்ள ஆசைப்படுகிறாள்'' என்றபடியே பக்கவாட்டில் ராதிகாவைப் பார்த்தார் மகாதேவன்.

''ஏன் மாமா, வேண்டாம் என்கிறீர்கள்? கற்றுக்கொள்ள எவ்வளவோ பாக்கி இருக்கிறதே.''

''வேறு யாரிடமாவது கற்றுக்கொள்; அவன் வேண்டாம்.''

''அதுதான் ஏன் என்கிறேன்?''

''பருவப் பெண்கள், குறிப்பாக உன்னைப் போல் அழகானவர்கள் தவிர்க்க வேண்டியவர்களுள் அவனும் ஒருவன்.''

ராதிகா பதில் கூறவில்லை. அவள் பார்வை தரையில் பதிந்தது. பின் விர்ரென்று உள்ளே போய்விட்டாள்.

அப்படியென்றால் நாட்டிய சிரோமணி பிரேம்குமார் நடத்தை கெட்டவரா? பெண்களுடன் லீலை புரிபவரா? அந்த நீசச் செயலுக்குப் புனிதமான போர்வைதானா அவருடைய கலையார்வம்? சிந்தனை அலைகள் மோதின. கிடைத்தற்கரிய நடனப் பயிற்சியை அவருடைய சொந்த வாழ்க்கையை உத்தேசித்து நழுவவிடுவதா? கலையார்வத்தில் திணறிய ராதிகாவுக்கு அது உசிதமாகப் படவில்லை.

'அவர் எப்படிப்பட்டவராக இருந்தால் என்ன? என்னைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டிய மனோதிடம் எனக்குக் கிடையாதா? என் ஆத்ம பலமே என் கற்புக்குக் கவசமாகும். ஆன்மாவுக்கு உரமிட்டுப் பலம் கொடுத்துச் சாமான்ய நிலையிலிருந்து உயர்நிலைக்குத் தூக்கிவிடும் கருவிகள்தாமே நாட்டியம், சங்கீதம் ஆகிய நுண் கலைகள்? அத்தகைய கலையுள்ளம் கொண்ட நான் பலவீனமாக இருக்கலாமா?' கேள்விகள் அவளை அரித்தன. விடையும் தீர்மானமாகத் தெரிந்தது.

தந்தையே பேச்சை எடுக்கட்டும் என்று பொறுமையுடன் காத்திருந்தாள். அவருடைய வார்த்தையைப் பெரிதாக மதிக்கும் ராதிகா இவ்விஷயத்தில் அவர் தனக்குத் தடை விதிக்கக்கூடாதே என்று பிரார்த்தித்தாள். இரண்டு மூன்று நாட்கள் கடந்தன.

அன்று ராதிகாவின் அன்னை காந்திமதி, கணவனிடம், ''நான் கிளப்பில் விசாரித்தேன். ஒரு முகமாக, 'உன் பெண்ணை எந்தக் காரணத்தைக் கொண்டும் பிரேம்குமாரிடம் அனுப்பாதே' என்கிறார்கள்'' என்றாள்.

மகாதேவன் சிரித்துக்கொண்டார். 'உலக அநுபவம் உள்ளவர். சொந்த முயற்சியால் பல இன்னல்களையும் சமாளித்துப் பெரிய தொழிலதிபர் ஆனவர் அவர். பெருந்தன்மையான உள்ளம் கொண்டவர். அவர் என்ன சொல்லப்போகிறாரோ?' என்ற கவலையுடன் அவரையே ஆவலுடன் பார்த்தவண்ணம் நின்றிருந்தாள், ராதிகா. கடைசியில் அவர் கேட்டார்.

''நீயே பிரேம்குமாரைப் பற்றிப் பலர் கூறுவதைக் கேட்டாய். இப்போது நீ என்ன சொல்கிறாய் ராது?''

''நான் அவரிடம் கற்றுக்கொள்ளத்தான் போகிறேன். அவர் எப்படிப்பட்டவரானாலும் எனக்கு அக்கறை இல்லை. என்னைக் காத்துக்கொள்ளும் தைரியம் எனக்கு இருக்கிறது.''

''அசடு மாதிரி, சிங்கத்தின் வாயில்...''

குறுக்கிட்ட தாயாரை இடைமறித்தாள்.

''என் விருப்பம் இல்லாமல் என்னை ஒருவரும் ஒன்றும் செய்ய முடியாது.'' அழுத்தமாகக் கூறினாள் ராதிகா.

''சரி, உனக்கு அந்தத் தைரியம் இருந்தால் நீ பிரேம்குமாரிடம் செல்வதில் எனக்கு எந்த வித ஆட்சேபமும் இல்லை.'' தந்தையின் இந்தப் பதிலில் ராதிகாவின் மனம் குளிர்ந்தது. குதூகலித்தது.

''நன்றி, அப்பா!'' என்றாள் நன்றிப் பெருக்குடன். மனம் சிந்தனையில் ஆழ்ந்தது. 'சிஷ்யை ஆவதற்குமுன் அவரைப் பார்க்க வேண்டும். அவர் எப்படிபட்டவர் என்று எடை போட ஒரு சந்தர்ப்பம் வேண்டும்' என்று தீர்மானித்தாள்.

''இன்று மத்தியான்னம் நான் அவரைப் போய்ப் பார்க்கிறேன்'' என்றவள், தாயார் ஏதோ கூற வந்ததை யூகித்தவள்போல், ''சந்திரிகாவையும் என்னுடன் அழைத்துக்கொண்டு போகிறேன்'' என்று கூறி முடித்தாள். காந்திமதி நிம்மதிப் பெருமூச்சுவிட்டாள்.

ராதிகா, தன்னை நேர்த்தியாக அலங்கரித்துக்கொண்டு, சந்திரிகாவுடன் பிரேம்குமாருடைய வீட்டை அடைந்தாள். அவள் மனம் ரப்பர்ப் பந்து மாதிரி துள்ளித் துள்ளி எழும்பியது. நுழைவாயிலைத் தாண்டியதும் விஸ்தாரமான கூடம். அந்தப் பெரிய கூடம் எதிர்ப்புறத்தில் திரும்பி நீளவாக்கில் இருந்தது. மழ மழவென்று ஒளிவீசும் சலவைக் கல் தரை. அங்கங்கே வெண்கலப் பொம்மைகள் நின்றிருந்தன. ஹாலை அழகாக அலங்கரித்திருந்தார்கள். அந்தக் கூடத்தின் ஒரு கோடியில் வரவேற்பறை போல் ஓர் அறை தோற்றம் அளித்தது. நாலைந்து சோபாக்கள், மேஜை, அதன்மேல் பூச்செண்டும் பத்திரிகைகளும் இருந்தன. ஒரு பக்கத்தில் தொலைபேசி, தரையில் ரத்தின கம்பளம், சுவரில் அழகிய படங்கள்—எல்லாம் அந்த அறையில் காட்சியளித்தன. அவை விலையுயர்ந்தவையாக இருந்தன. இவற்றை எல்லாம் கவனித்துக் கொண்டாள் ராதிகா.

அப்போது அந்தப் பெரிய கூடத்தின் நடுவே வகுப்பு நடந்துகொண் டிருந்தது. அதற்குப் பக்கத்தில் விரித்திருந்த ரத்தினகம்பளத்தில் சிலர் அமர்ந்து, தங்கள் முறைக்காகக் காத்திருந்தனர். ஐந்தாறு பேர்களுக்குப் பயிற்சி நடந்துகொண் டிருந்தது. வகுப்புக்கு இடையூறு விளைவிக்க விரும்பாமல் மெதுவாக, சந்திரிகாவின் கையைப் பிடித்தவண்ணம், தோகை விரித்த மயில்போல் நடந்து சென்று தானும் விரிப்பில் அமர்ந்தாள். அவன் பயிற்சி அளிப்பதைப் பார்த்து மகிழ்ந்தாள். பிரேம்குமார் அறியாமல் அவனை ஆராயவும் நல்ல சந்தர்ப்பம் கிடைத்து விட்டதே! அவள் மெதுவாகச் சென்று அமர்ந்தாலும், அங்கே உட்கார்ந்திருந்த அனைவரும் அவளைப் பார்த்துவிட்டனர். ராதிகாவின் அழகு அவர்களைக் கவர்ந்தது. நடனம் கற்றுக் கொண்டிருந்த அனைவரும் இடையே அவளைப் பார்வையால் வெட்டினர். தன் அழகின் கவர்ச்சியை நன்கு உணர்ந்த ராதிகா நட்சத்திரக் கூட்டத்திடையே பூர்ண சந்திரன்போல் கம்பீரத்துடன் அமர்ந்திருந்தாள். அமர்ந்தபடியே பிரேம்குமாரையும் நடனமணிகளையும் நோட்டம் விட்டாள். பிரேம்குமார் அவள் வந்ததைக் கவனித்ததாகவே தெரியவில்லை. தன் கடமையில் ஒன்றிப் போயிருந்தான். பிரேம்குமார் நின்றிருந்த கோணத்தில் ராதிகாவால் அவனைச் சரியாகப் பார்க்க முடியவில்லை. தன் மாணவிகளிடம் அவன் எப்படி நடந்து கொள்கிறான் என்று நுட்பமாகக் கவனித்தாள் ராதிகா.

சற்று நேரத்துக்கெல்லாம் பிரேம்குமார் மாணவிகளைப் பார்த்தபடி சற்றே நகர்ந்தான். அப்பப்பா, என்ன அழகு! இருபத்தெட்டு, இருபத்தொன்பதே வயது மதிக்கத்தக்க வாலிபப் பருவம். அகன்று விரிந்த நெற்றி, அதற்குக் கரைகட்டி வளைந்துநின்ற புருவங்கள், பாலம் போன்று நிமிர்ந்து நின்ற தீர்க்கமான நாசி; இருபுறமும் ஆழப் பதிந்த கண்களில் கத்தியின் கூர்மை, மெல்லிய, சிவந்த உதடுகள், செதுக்கியதுபோல் முகவெட்டு, பெருங்காவியத் தலைவனைப் போன்ற தோற்றம். அவனது மேனியழகில் கிறங்கிப் போய் இமை கொட்டாமல் அவனையே பார்த்திருந்தாள் ராதிகா. பத்து நிமிஷங்கள் ஆகியிருக்கும். சதங்கையொலியையும் தாள ஒலியையும் தவிர வேறு சத்தமே கேட்கவில்லை. கலாதேவியின் சாந்நித்தியம் அங்கே பரவியிருந்தது.

அந்த இனிமையான சூழ்நிலையைக் கலைத்தது பிரேம்குமாரின் குரல்.

"நிறுத்து, நிர்மலா, இந்த இடத்தில் நீ ஆடியது தவறு."

வைரத்தால் கண்ணாடியை அறுப்பது போன்ற கூர்மை நிறைந்த குரல். கண்ணாடிப் பாண்டம் கீழே விழுந்து உடைந்தது போன்ற தீட்சண்யம். ராதிகாவின் மென்மையான மனத்தில் வலித்தது.

"இப்போது நான் ஆடிக் காண்பிக்கிறேன். பார்த்துக் கொள்ளுங்கள்." அதிகாரத்துடன் கூறியவன் ஆட ஆரம்பித்தான். அவன் ஆட்டத்தில்தான் எத்தனை நளினம், லாகவம், மிடுக்கு! ஒவ்வோர் அபிநயமும் பாவமும் தாளமும் இலக்கணக் குன்றுகளாக விளங்கின. சதங்கையொலியே தாளத்தை வரையறுத்தது. பாவமே சங்கீதத்தை விளக்கியது. அழுக்குப் படிந்த உள்ளத்தையும் காணும் அநுபவத்திலேயே பரிசுத்தமாக்கி தெய்வ சந்நிதானத்துக்கு இட்டுச் செல்லு தெய்விக நடனம். ஒவ்வோர் அசைவிலு இந்த அழியும் உடலுக்கு அதன் சிருஷ் கர்த்தா அளித்திருக்கும் அழகு பரிணமித்தது. அந்த இறைவனை விடச் சிறந்த சிற்பியு உண்டோ?

இந்த ரஞ்சகமான அநுபவத்தில் சொக்கி பரவசமடைந்தாள் ராதிகா. அவனிட கற்றுக்கொள்ள எத்தனை புண்ணியம் செய்தி ருக்க வேண்டும் என்ற உவகையில் பூரித்திருந் நேரத்தில் அவன் ராதிகாவைப் பார்த்தான். நாட்டியத்தினூடே பிரேம்குமார் அவளை பார்த்த அந்தப் பார்வையில்தான் எத்தனை வசிகரம்? ராதிகா அவனுக்கு அடிமையானாள். தன் இதயத்தைப் பறி கொடுத்தாள். அவனோ அவளை நன்கு பார்த்தானே யன்றி, அந்த பார்வையில் கனிவு இல்லை, பரிவு இல்லை. ஏன் புதிதாக ஒருவரைப் பார்க்கும் வியப்புக்கூட இல்லை. அவனுக்குத்தான் எத்தனை இறுமாப்பு ராதிகாவுக்கு என்னவோபோல் இருந்தது ஆணவமும், அகம்பாவமும் அல்லவா எதிர் கொள்கின்றன?

அதிர்ச்சியினின்று மீண்டும் நாட்டி யத்தில் லயித்தாள் ராதிகா. தில்லைச் சபாபதியே பொன்னம்பலத்தை விட்டு இந்த மண் அம்பலத்துக்கு வந்து விட்டார் என்று வியந்தபடியே நாட்டியத்தில் மனமொன்றிப் போனாள். நாட்டியம் முடிந்த பயிற்சி தொடர்ந்தது. நாட்டியம் முடிந்ததும் தன்னிடம் பேசுவான், தன்னை விசாரிப்பான் என்று நம்பியிருந்த ராதிகா ஏமாந்தாள். அவன் அவளை மீண்டும் பார்க்கா தது, அவளுக்கு அதிசயமாக இருந்தது. தன் அழகைப் பற்றிப் பெருமை அடைந்த அவளு டைய கர்வத்துக்கு நல்ல சவுக்கடி. 'யாருக்கு வேண்டும் இந்த அயோக்கியனின் பார்வை?' என்று தன் கோபத்தை அடக்கிக்கொண்டாள். 'நடனம் கற்றுக்கொள்ளத்தானே வந்தேன்?' என்று தனக்குத் தானே ஆறுதல் அளித்துக் கொண்டாள்.

நடன வகுப்பு முடிந்தது. ஒவ்வொருவராக அனைவரும் சென்றுவிட்டனர். ராதிகா கடிகா ரத்தைப் பார்த்தாள். மணி ஐந்து ஆகியி ருந்தது. பிரேம்குமார் எல்லாரும் போகும் வரை வாயிலையே பார்த்திருந்தவன், ராதிகாவின் பக்கம் திரும்பினான். ராதிகாவையும் சந்திரிகாவையும் தவிர வேறு யாரும் இருக்கவில்லை. அவன் தன்னைப் பார்க்கவும் ராதிகா எழுந்து நின்றாள். மனம் திக்திக்கென்று அடித்துக்கொண்டது. இத்தனை நாழிகை பேசாமல் இங்கே இருந்தது அசட்டுத்தனமோ? அவள் அழகையே கவனியாதவன்போல் கண்ணாடித் துகளை ஒத்த கூர்மையுடன் கேட்டான்.

"உனக்கு என்ன வேண்டும்?"

"நான்...என் பெயர் ராதிகா. உங்களிடம் நடனம் கற்றுக்கொள்ள விரும்புகிறேன்." சன்னமாக அவள் கூறியது மீட்டிய வீணையைப் போல் இனிமையாக ஒலித்தது.

ஒரே ஒரு விநாடி யோசித்த அவன், "மன்னிக்கவும், எனக்கு நேரம் இல்லை. வேறு யாரிடமாவது கற்றுக்கொள்." தயங்காமல் கூறிவிட்டுத் தாமதிக்காமல் சென்றும் விட்டான். கூடத்தினின்றும் பிரிந்து வரவே

பறைபோல் காட்சி அளித்த பகுதியில், சோபா வில் அமர்ந்தவன் பத்திரிகை ஒன்றைப் படிக்க ஆரம்பித்தான். அதில் ஒன்றியும் விட்டான். தன்னை மாணவியாக ஏற்றுக்கொள்ள மறுப் பான் என்று இம்மியும் எதிர்பாராத ராதிகா, அவன் பதிலைக் கேட்டு இடி கேட்ட நாகம் போல் அதிர்ந்து நின்றாள்.

தான் இன்னார் என்றுகூடத் தெரிந்து கொள்ளாமல் தன் கலையையும் அழகையும் உதாசினப்படுத்திய அவன் மமதையை நினைத்த போது, அவளுக்கு ஆத்திரம் பொங்கி வந்தது. இருந்தாலும் தன்னைக் கட்டுப்படுத்திக்கொண் டாள். 'பிரேம்குமார் எவ்வளவு அழகாக நாட்டியம் ஆடினான்! எவ்வளவு பெரிய பண்டி தன்! எத்துணை அற்புதமாகக் கற்றுக் கொடுத் தான்! அவனுடைய சிட்சையைக் கைநழுவ விடு வதா? எப்படியாயினும் அவனைக் குருவாக்கிக் கொண்டே ஆகவேண்டும்' என்ற தீர்மானத் துடன் அங்கேயே நின்றாள். எத்தனை நாழிகை நின்றாளோ, அவன் எத்தனை நாழிகை படித் தானோ? யதேச்சையாக அவள் பக்கம் திரும்பிய பிரேம்குமார் ராதிகா இன்னமும் அங்கேயே நிற்பதைப் பார்த்து வியப்பு மேலிட, "நீ இன்னும் போகவில்லை?" என்றான் கடுமை யான குரலில்.

"இல்லை. நீங்கள் என்னைச் சிஷ்யையாக ஏற்று..." அவன் அவளை அருகே அழைத் தான். அவர்கள் இருவரும் வரவேற்பறைக்குச் சென்றார்கள்.

"முன்பே நடனம் கற்றுக்கொண்ட துண்டா?"

"அரங்கேற்றமாகி மூன்று வருஷங்களாக ஆடுகிறேன்."

"ம்..சரி, உனக்குச் சொல்லித் தருகிறேன். ஆனால் ஒரு நிபந்தனை." அவன் இதைச் சொல்லுமுன்பே ராதிகாவின் மனத்தில் ஒரு கெட்ட யோசனை பூதம்போல் கிளம்பிற்று.

"என்ன நிபந்தனை?"

"எதையும் ஒரு முறைதான் ஆடிக் காட்டு வேன். அதிலிருந்து கற்றுக்கொள்வது உன் திறமையைப் பொறுத்தது."

"சரி."

"நாளைக் காலை பத்து மணிக்கு வா. நீ போக லாம்."

"அப்பாடா! அசம்பாவிதமாக ஒன்றும் நடக்கவில்லை" என்ற நிம்மதியுடன் அவன், அவளைச் சிஷ்யை யாக ஏற்றுக் கொண்ட மகிழ்ச்சி யும் சேர்ந்துகொண் டது.

"நன்றி" என்று கூறிவிட்டுக் கிளம் பினாள். வாயிலை அடைந்தவளை நிறுத் தியது அவனுடைய வெண்கலக் குரல்.

"ஒரு நிமிஷம்!" நின்ற இடத்திலேயே மனம் பதைபதைக் கத் திரும்பிப் பார்த் தாள் ராதிகா.

"இனிமேல் நீ வரும்போது அந்தப் பெண்ணை அழைத்து வரத் தேவையில்லை. தனியாகவே வரலாம்" என்று கூறிவிட்டுப் புத்தகத்தைப் படிக்க ஆரம்பித்தான். ராதிகா கலகலத்துவிட்டாள். தன்னைச் சுதாரித்துக் கொண்டு கிளம்பவே சற்று நேரம் பிடித்தது. மனத்தில் இனம் புரியாத மகிழ்ச்சி கரை புரண் டோடியது. அவனைப் பார்த்த மாத்திரத்தில், தன் மனம் அவனிடம் இணையத் துடிப்பதை அறிந்து கொண்டாள்.

பயிற்சி ஆரம்பித்து ஆறு மாத காலம் ஆகி விட்டது. அதற்குள் அவள் கற்றுக்கொண்டது கணக்கில் அடங்காதது. வளர்பிறைச் சந்திரன் போல் அவள் கலை வளர்ந்தது. ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் ஒரு முன்னேற்றம் தெரிந்தது. லாகவம் மிகுந்து நளினம் மிளிர்ந்தது. அவளுடைய நாட்டியம் ஓர் ஆன்மிக அநுபவம் ஆயிற்று. அவள் நாட்டியம் ரசிகர்களை மகிழ் வித்தது. ராதிகாவுக்குத் தன் வாழ்க்கை பயனுற்றதாகத் திருப்தி ஏற்பட்டது. மிகவும் சிரத்தையுடன், தீராத வேட்கையுடன் இராப் பகலாக, நாட்டியத்தில் ஒன்றிக் கற்றுக்கொண் டாள். குரு சிஷ்யை என்ற முறையில் மட்டு மன்றிப் பிரேம்குமாருடன் அவளுக்கு ஏற்பட்ட தொடர்பும் புது அநுபவம் ஆயிற்று.

அன்று ராதிகா பல வருஷங்களுக்குப் பிறகு சிநேகிதி உஷாவைக் கடைத் தெருவில் சந்தித் தாள்.

"ராதிகா, மிகவும் பிரமாதமாக ஆடுகிறு யாமே! படித்தேன். நான் உன் நாட்டியத்தைப் பார்க்க வேண்டும்."



''அதற்கென்ன? வரும் ஞாயிற்றுக்கிழமை யன்றுகூட ஒரு நிகழ்ச்சி இருக்கிறது.''

''அவசியம் வருகிறேன். ஆமாம், நீ இன்னும் நீ கற்றுக்கொண் டிருக்கிறாயாமே!''

''ஆமாம், பிரேம்குமாரிடம்..''

''என்ன? பிரேம்குமாரிடமா?'' வியப்பும் சந்தேகமுமாகக் கேட்டாள் தோழி.

ராதிகாவுக்கு 'அவனுக்கு என்ன குறைச்சல்?' என்று கத்த வேண்டும்போல் இருந்தது. இருந்தாலும் உஷாவின் சந்தேகப் பார்வையைப் பார்த்ததும் வாளாவிருந்து விட்டாள். இந்த மாதிரியான உரையாடல் அவளுக்குப் புதிதல்ல. யாரும் இப்படித்தான் கேட்கிறார்கள். ஏன்? அதற்கு இன்னமும் அவளால் விடை காணமுடியவில்லை.

ராதிகாவைப் பொறுத்தவரை பிரேம்குமார் கண்ணியமானவர். மற்றவர்களுக்குப் பாடம் கற்றுத் தரும்போது மிகவும் உன்னிப்பாகக் கவனித்திருக்கிறாள். அவனிடம் ஒருவிதமான அப்பழுக்கும் கிடையாது. நாட்டியம் சொல்லித் தரும் சாக்கில் பண்புக் குறைவாக நடந்து கொள்ள எத்தனையோ வாய்ப்புகள் உண்டு. விரசமாகப் பேசவும் இடமுண்டு. ஆனால் பிரேம்குமார் அதற்கெல்லாம் அப்பாற்பட்டவன் என்று அவள் நேரிடையாகத் தெரிந்து கொண்டாள்.

ஒரு நாள் வகுப்பு முடிந்து வெளியே வரும் போது ஜயாவும் பாரதியும் பேசிக்கொண் டிருந்ததை அவள் கேட்க நேர்ந்தது. ஜயா சொன்னாள்: ''சே ஸார்! ரொம்ப மோசம், என்ன இருந்தாலும் இப்படியா நடந்து கொள்வது!''

''ஏன் இன்றைக்கும் 'ரிபீட் பர்ஃபாமன்ஸ்தானு? (செய்ததையே செய்தல்) நான் தான் சொன்னேனே, அவரிடம் ரொம்பவும் ஜாக்கிரதையாகப் பழகணும் என்று.''

''என்ன இருந்தாலும், எவ்வளவு பெரிய நாட்டிய மன்னனாலும் இவ்வளவு அகம்பாவம் கூடாது.''

அதற்குமேல் அவர்கள் பேசியதைக் கவனிக்க முடியவில்லை. ஆர்வத்துடன் கேட்டுக் கொண்டிருந்த ராதிகாவுக்கு ஏமாற்றம். நெடு நாட்களாக அவரிடம் பயின்று வரும் இவர்களும் பிரேம்குமாரை மோசமானவர் என்கிறார்கள். 'அப்படியென்றால் வகுப்புகளுக்குப் பிறகு சல்லாபங்கள் நடைபெறுகின்றன' என்றுதானே அர்த்தமாகிறது? மற்ற மாணவிகளுக்கு அவரைத் தெரிந்திருக்கும்போது என்னிடம் மாத்திரம் நல்லவராக நடந்துகொள்கிறாரா? என்னைத் தனியாக நினைக்கிறாரா? நினைத்து ஒதுக்கிவிட்டாரா?'

காதல் கைகூடாவிட்டாலும் அவனுடன் பழகும் வாய்ப்புக் கிடைத்ததையே பெரும் பாக்கியமாகக் கருதி, நடனம் பயின்றாள்.

ஆறு மாத காலம் ஆயிற்று. ஒரு நாள் பயிற்சி முடிந்து கிளம்பும்போது இருட்டத் தொடங்கியது. ராதிகா பயிற்சி முடிந்து தன் தோற்பையுடன் கிளம்பினாள். வகுப்பைத் தவிர மற்றச் சமயங்களில் அவளிடம் பேசியிராத பிரேம்குமார் நட்பின் உரிமையுடன், ''ராதிகா!'' என்றான்.

''என்ன?'' பரமானந்தத்தில் மனம் குறுகுறுக்க வியப்பு அலைமோதக் கேட்டாள் ராதிகா.

''அவசரமாகப் போகவேண்டுமா? காபி சாப்பிட்டுவிட்டுப் போயேன்.''

''கட்டாயமாக. என்னைப் பாக்கியசாலியாகக் கருதுகிறேன்.''

வரவேற்பறையில் இருவரும் அமர்ந்தனர். அவன் மணி அடித்துப் பணிக்கவும் பணியாள் போண்டா, மைசூர்ப் பாகு, கடக்கடக் காபி எல்லாம் கொண்டு வந்து வைத்தான். முதலில் புத்துணர்வுடன் அவன் பேச ஆரம்பித்தான். தன் கலை அனுபவத்தைப் பற்றிக் கூறினான். தன் குருநாதரைப் பற்றியும், தன் பயிற்சியைப் பற்றியும் விளக்கினான். அவள் மெய்ம்மறந்து கேட்டாள். தன் சுகானுபவத்தைப் பங்கிட்டுக் கொள்ளத் தன்னைத் தேர்ந்தெடுத்ததை உணர்ந்து பூரித்துப் போனாள். திடீரென்று பேச்சுத் திசை மாறியது.

''ராதிகா, உனக்குத் திருமணம் ஆகிவிட்டதா?''

ராதிகா திகைத்தாள். திடீரென்று சொந்த வாழ்க்கையைப்பற்றிக் கேட்டதனால் அவளுக்குக் கொஞ்சம் வெட்கமாக இருந்தது.

மேலும், ஆறு மாதங்களாகப் பயிலும் ஒரு மாணவி திருமணமானவளா இல்லையா என்று கூடத் தெரிந்து கொண்டிராத அவனை எண்ணி வியந்தாள். சாதாரண ஆண்மகனுக்கு இயற்கையில் ஏற்படும் அந்த அவாக்



கூட இல்லாதவன் எப்படி அயோக்கியனுக இருக்க முடியும்? இந்த எண்ண அலைகள் எழுந்தபோதுங்கூட அவனுடைய கூரிய விழிகள் அவள்மேல் ஊர்ந்து அவளை மெய் சிலிர்க்க வைத்தன. பிரேம்குமாருக்குத் தன்னிடம் இருக்கும் அக்கறையை எண்ணி மனத்துக்குள் பூரித்தாள்.

"இல்லை" என்பதுடன் தன் பதிலை நிறுத்தவில்லை ராதிகா.

''இல்லை; உங்களுக்கு?''

''இல்லை, திருமணம் செய்து கொள்ளும் எண்ணமும் கிடையாது.''

''ஏன்?''

"குறுகிய வாழ்க்கையை இல்லறத்தில் வீணுக்க விரும்பவில்லை."

அவள் பாம்பை மிதித்தவள்போல் அதிர்ந்து போனுள்; அவனுடைய இந்தச் சொற்கள் ராதிகாவின் வாழ்க்கையின் கனவையே நொறுக்கிவிட்டதை அவன் எப்படி அறிவான்? பேசமுடியாமல் துக்கம் நெஞ்சை அடைத்தது. ஆவலுடன் எதிர்பார்த்த தனி உரையாடல் நிரந்தரமான ஏமாற்றத்தை அவளுக்கு அளித்தது.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு அவர்கள் தனியாகச் சொந்த வாழ்க்கையைப் பற்றிப் பேசவே அல்லை. அபூர்வமாக எப்போதாவது நடனத்தைப்பற்றியே பேசுவார்கள்.

காலச் சக்கரம் உருண்டது. ஒரு தினம் வீட்டில் ஒத்திகை செய்துகொண்டிருந்தாள் ராதிகா. அதை ரசித்தபடி அமர்ந்திருந்த மகாதேவன், ஒத்திகை முடிந்தவுடன் அவளைப் பாராட்டினுர்.

''நீ பிரேம்குமாரிடம் போனது நல்லதாயிற்று. உன் நாட்டியத்தில் நல்ல மெருகு ஏற்பட்டிருக்கிறது. தன்னம்பிக்கையுடன் ஆடுகிருய்? மூன்று வருஷங்களில் பிரமிக்கத் தக்க முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.''

ராதிகா தந்தையின் வார்த்தையில் அக மகிழ்ந்து போனுள். தந்தையின் பக்கத்தில் வந்தமர்ந்த மகளை வாஞ்சையுடன் அணைத்துக் கொண்ட மகாதேவன் தொடர்ந்தார்.

''உன்னுடைய தைரியத்தையும் பாராட்டுகிறேன். அன்று நீ சொன்னதுபோல் உன்னை நீயே காப்பாற்றிக்கொண்டு விட்டாய். அதில் எனக்கு இரட்டிப்புச் சந்தோஷம். ஆனுலும் ஒரு சந்தேகம், உண்மையில் பிரேம்குமார் எப்படிப்பட்டவன்? நாம் அவனைப்பற்றிக் கேள்விப்பட்டதெல்லாம் உண்மைதானு?''

ராதிகா சிலிர்த்துக் கொண்டாள். உடலைக் காப்பாற்றிக் கொண்ட அவள் மனத்தைப் பறிகொடுத்ததை மகாதேவன் அறிவாரா? அல்லது அறிந்துகொள்ளத் தூண்டில் போடுகிருரா? மறைமுகமாக எதையும் கேட்கும் பழக்கம் இல்லாதவர் மகாதேவன்; அதனுல் உண்மையை அறிந்துகொள்ளவே விசாரிக்கிருர் என்று நம்பினுள். தனக்கு ஏற்பட்ட சந்தேகத்துக்காகத் தன்னையே கடிந்துகொண்டாள். தீர்மானத்துடன் பதிலும் அளித்தாள். ''அவர் நல்லவர்தாம், அப்பா. மிகவும் பண்புமிக்கவர்!'' இப்படிக் கூறியபோது ராதிகாவுக்கு மின்னல் போன்று ஓர் உண்மை ஞானோதயம் ஆயிற்று.

பிரேம்குமாருடைய செருக்கும், அதிகாரமும் ஆண்மக்களுக்குப் பிடிக்காமல் போவதில் வியப்பில்லை. நிகழ்ச்சி கேட்டு வருபவர்களிடமும், வாத்திய கோஷ்டியினரிடமும் அவன் நடந்துகொள்ளும் விதம் மோசமானதே. அவன் மாத்திரம் இவ்வளவு பெரிய மேதையாக இராவிட்டால் ஒருவரும் அவனை நெருங்கவே மாட்டார்கள். முன்பொரு நாள் ஜயாவும் பாரதியும் அவனை அகம்பாவம் பிடித்தவன் என்றும், மோசமானவன் என்றும் சாடவில்லையா? அதன் காரணமும் இப்போது புரிந்தது. பிரேம்குமாருடைய ஆண்மை கலந்த காம்பீர்யத்தில் மயங்காதவர்கள் உண்டோ? எத்தனை எத்தனை பெண்கள் அவன் தலையசைவுக்காக ஏங்கி நின்றனர்? அவன் கடைக்கண் பிச்சைக்காகக் காத்துச் சலித்தனர்? ஏன், ராதிகாவே அவர்களுள் ஒருத்திதானே? ஒரு பெண்ணின் அன்பையும் அழகையும் உதாசீனப்படுத்துவது போன்ற குற்றம் வேறு எதுவும் இருக்கமுடியாது. அந்தக் காயம் பெண்கள் மனத்தில் ஆறவே ஆருது.

இப்படிக் காயப்பட்ட பல பெண்கள் அவனை நல்லவன் என்று எப்படிச் சொல்லுவார்கள்?

இந்த ஐயம் விலகியதும் ராதிகாவின் மனத்தில் விவரிக்க முடியாத பெருமிதம் பரவியது. இன்பம் பம்பரமாய்ப் பரந்து சூழ்ந்து அவளை ஆட்கொண்டது. இந்நிலையில், தான் அவனைத் திருமணம் செய்துகொள்ள முடியாது என்ற ஏமாற்றங்கூடக் கரைந்து போயிற்று. பிரேம்குமார் ஈடுபாடு கொண்ட ஒரே பெண் தான் என்று உணர்ந்த உண்மைக்கு எதிரில் அந்த ஏமாற்றம் எம்மாத்திரம்? மகாதேவன் பேசிக்கொண்டிருந்தார்.

''பின் ஏன் அவனுக்கு?''

''அப்பா, அவரைச் சூழ்ந்துள்ளவர்கள் தான் நீசபுத்தியுள்ளவர்கள். அவர்கள் கண்களுக்குப் பிரேம்குமார் கெட்டவராகத் தெரிவதில் வியப்பில்லையே!'' அதற்குமேல் அங்கே நிற்க விரும்பவில்லை ராதிகா, தன் மனநிலையை முகம் காட்டிவிடுமோ என்ற அச்சத்தில் உள்ளே சென்று விட்டாள்.

அதற்கடுத்த நாளே தன் காதல் யாகத்துக்கு மற்றுமொரு சோதனை வரும் என்று அவள் நினைக்கவில்லை. நடனப் பயிற்சி முடிந்து சலங்கையைக் கழற்றிக்கொண்டிருந்தவளைப் பார்த்துப் பிரேம்குமார் கூறினுன்.

''ராதிகா, இந்த வாரத்துடன் உன் பயிற்சி முடிந்துவிடும், அதற்கப்புறம் நீ இங்கே வரத் தேவையில்லை.''

''ஏன்?'' ஏமாற்றம் மனத்தைக் கவ்வக் கோபம் கொண்ட பாம்பைப் போல் சீறினுள்.

''உனக்கு நான் கற்றுக் கொடுக்க வேண்டியவற்றைக் கற்றுக் கொடுத்து விட்டேன். அத்துடன் என் பொறுப்புத் தீர்ந்தது.'' கட்டுப்பாட்டுடன் உணர்ச்சிகளை வெளிக் காட்டாத வகையில் அவன் பேசினுலும், முகம் அவன் அகத்தைக் காட்டியது.

ஆலமரத்தின் வேரில் ஆட்டம் கண்டுவிட்டதா? தன் காதல் புயல் அவனுடைய லட்சிய மரத்தை வீழ்த்திவிடும் என்ற பயம் ஏற்பட்டுவிட்டதா? ஏற்கனவே அவளுடைய ஆருவது அறிவுக்கு அந்தக் காதல் மணம் தெரிந்திருந்தது. சம்பக மலரை வைத்து முடினுல் வாசனை அடங்கிப் போகுமா? அது தன் மனத்தின் மாயையா அல்லது உண்மையா

யெனப் புரிந்துகொண்டாள். இனிமேல் அவனை இழந்துவிடும் முட்டாள் அல்லவே அவள்.

''என்ன ஸார், அள்ள அள்ளக் குறையாத அமுதசுரபி நாட்டியக் கலை என்று வாய்க்கு வாய் சொல்லும் நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? 'குரு இறந்திருக்காவிடில் இன்னமும் கற்றுக்கொண்டிருப்பேன்; இன்னமும் சோபித்திருப்பேன்' என்று கலைமன்னனாகிய நீங்களே சொல்லவில்லையா? அந்த மாதிரி வாய்ப்பை நான் நழுவ விடுவேனா?'' ராதிகா, பிரேம்குமாரை மடக்கியபோது வேறு வழியின்றிப் போயிற்று. பிரேம்குமார் மனத்தின் பலவீனத்தைப் புரிந்துகொண்டதில் அவளுக்கு மகிழ்ச்சி. ஆனால் அதைத் துஷ்பிரயோகம் செய்யாமல் சர்வ ஜாக்கிரதையுடன் பழகினாள். அவனே என்றாவது தன் இதயக் கூண்டைத் திறந்து காட்டுவான் என்று நம்பி, தன் கலை வேட்கைக்கு உணவிட்டுக் காதல் வேட்கையைத் தணித்துக்கொண்டாள்.

ராதிகா அமெரிக்கா செல்ல இருந்தாள். மூன்று மாதங்களுக்கு அமெரிக்காவில் கலை நிகழ்ச்சிகள் பல இடங்களில் ஏற்பாடாகியிருந்தன. தொடர்ந்து ஜெர்மனிக்குச் செல்லவும் அழைப்பு வந்திருந்தது. அதைப்பற்றி இன்னும் முடிவு செய்யவில்லை. அமெரிக்காவுக்குப் புறப்பட இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. பிரேம்குமாரிடம் பிரத்தியேகமாக விடைபெற வேண்டி அவன் இல்லத்துக்குச் சென்றாள். வகுப்பு நடந்து கொண்டிருந்தது. இடையே அவன் ஓய்ந்திருந்தபோது அவனை அணுகினாள்.

''நான் அமெரிக்கா செல்ல இருக்கிறேன்...'' ஆரம்பித்தவள், பயிற்சியில் குறுக்கிட்ட கோபத்தால் வெகுண்ட பிரேம்குமாரின் பார்வையைக் கண்டு நடுங்கி நிறுத்திக்கொண்டாள்.

காத்திருந்தாள், அவனுடைய கடமை முடியும்வரை. கடைசியில் எல்லாரையும் அனுப்பிவிட்டே அவளை அணுகினான். பிரேம்குமார் சமாதானமாக, ''நீ கூறவந்ததை இப்பொழுது சொல்'' என்று ஆணையிட்டான்.

''நான் நாளை மறுநாள் அமெரிக்கா செல்ல இருக்கிறேன்.''

''ஆமாம், ஏதோ பத்திரிகையில் அப்படிப் படித்ததாக நினைவு.''

யாரோ சாட்டையால் அடிப்பது போல் அவள் மனம் வலித்தது. அந்தக் குரலில் இருந்த எகத்தாளம், குமுறல் இரண்டும் அவளை வருத்தின. குற்றம் செய்த கைதியைப் போல் வெட்கினாள் ராதிகா.

''ம்....மேலே சொல்.''

''மூன்று மாதத்துக்கு நிகழ்ச்சி நிரல் கொடுத்திருக்கிறார்கள். அழைப்பு நிச்சயமானால் ஜெர்மனிக்கும் ஒருவேளை போய்விட்டுத் திரும்பிவர ஐந்து மாதங்களாகும்.''

''ம்....''

மேலே தொடர முடியாமல் உணர்ச்சிகளை மென்று விழுங்கினாள். கண்கள் பனித்தன. பெருமுயற்சியுடன் அவற்றை உள்ளடக்கினாள்.

''நன்றாக ஆடி, உங்களுக்கும் எனக்கும் புகழ் வரும்படி, வெற்றியாகத் திரும்பக் குருவாகிய உங்கள் ஆசீர்வாதத்தை வேண்டுகிறேன்.'' அவனுடைய கடுமை, காதலியாக விடைபெற வந்தவளை ஒரே கணத்தில் சிஷ்யை

கத்தை அவள் கவனித்தாலும் தன் கடுமையைத் தளர்த்தாமல், ''நீ நன்றாக ஆடினால் அந்தப் பெருமை உனக்கே ஆகும். அதில் எனக்குப் பங்கு கிடையாது'' என்றான்.

இந்த வெட்டுக் காயத்தினின்றும் அவள் தன்னைச் சுதாரித்துக் கொள்வதற்குள், ''ராதிகா, நீ நன்றாக ஆடுவாய் என்று எனக்குத் தெரியும். அங்குள்ளவர்கள் எல்லாரும் உனக்கு, உன் கலைக்கு அடிமையாகப் போவது நிச்சயம். என்றும் என் நல்வாழ்த்துகள் உனக்கு உண்டு. அதுவும் நிச்சயம்'' என்றான்.

அவன் குரலில் தொனித்த உணர்ச்சியின் தீவிரத்தால், கவிந்த தன் தலையை நிமிர்த்தி அவனைப் பார்த்தாள். அந்தக் கண்களில் தீயின் தீட்சண்யம் இருந்தது. இது காதல் நெருப்பல்லவா? அந்தப் பார்வை அவளைச் சுட்டது. திணறிப் போய் அவள், ''ஏன் அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

''உன் அழகு என்னைத் தடுமாற வைத்து வைத்துவிட்டது.''

''என்னால் நம்ப முடியவில்லை. அழகை உணர முடியாதவர் அல்லவா நீங்கள்?''

''அப்படியல்ல; அந்த அழகு என் வாழ்க்கை லட்சியத்துக்குக் குறுக்கே வராமல் இருக்க எனக்கே நான் செய்து கொண்டிருக்கும் கட்டுப்பாடு.''

''அதுதான் எனக்கு விளங்கவில்லை. திருமணம் எப்படி உங்கள் கலைக்கு ஊறு விளைவிக்க முடியும்? சில சமயங்களில் இன்னமும் பிரகாசிக்கச் செய்யும். திருமணத்தை ஒதுக்கிவிட்ட உங்கள் லட்சியம் எனக்கு வேடிக்கையாக இருக்கிறது.''

''ராதிகா, இல்லறத்தின் பொறுப்பில் என் கலையைக் கரையவிட எனக்கு விருப்பமில்லை. இது யதார்த்தமான காரணம். அதற்கும் மேல் ஒரு காரணமும் உள்ளது. இந்த உடலையும் உள்ளத்தையும் நான் நாட்டியக் கலைக்கும், இறைவனுக்கும் சமர்ப்பித்துள்ளேன். அதனால் இவை இரண்டையுமே மனைவியிடமோ, காதலியிடமோ நான் இழக்க விரும்பவில்லை. இல்லறம் சேர்ந்த கலை வாழ்க்கை என்னதான் முழுமதியானாலும் அது கிரகணத்தால் பீடிக்கப்பட்ட நிலா என்பது என் உறுதியான நம்பிக்கை.''

மேலும் தொடர்ந்தான் அவன்.

''ஒரு வேளை எனக்கு அந்த உறுதி தளர்ந்து போகுமேயானால் நான் நாட்டியத்தைக் கைவிட்டுவிடுவேன். ஆனால் அப்படி ஏதும் நேராது என்று ஒரு நம்பிக்கை. இப்போது புரிகிறதா ராதிகா? நான் பிறரை விரும்புவதோ, பிறர் என்னை விரும்புவதோ வாழ்க்கையைக் கானல் நீராக்குவதுபோலத்தான்.''

''இவ்வளவு உன்னதமான உங்களை உலகம் எப்படியெல்லாமோ பேசுகிறதே; அதை ஏன் அநுமதிக்கிறீர்கள்?''

''யார் எப்படிப் பேசினாலும் எனக்கு அக்கறை இல்லை.''

பழையபடி கொடூரமாக இருந்தது அவன் குரல். ராதிகாவுக்கு வருத்தம் அளித்தது அவன் பதில்.

''நல்லவராக இருந்தும் எதற்காகக் கெட்ட பெயர் எடுக்க வேண்டும்?''

அவன் இரைந்து சிரித்தான்.

''என்னுடன் நெருக்கமாகப் பழகிய உனக்கே என்னைத் தெரிந்து கொள்ள இவ்

எவ்வளவு பெரிய உண்மை! "சரி, இருட்டிவிட்டது; நீ போய் வா ராதிகா. வெற்றியோடு திரும்பி வந்ததும் என்னை வந்து பார்." இதைச் சொல்லும்போது உணர்ச்சிப் பிழம்பாகிக் கரைந்தான் பிரேம்குமார். ஒரே கணந்தான்; அதற்குள் தன்னைச் சுதாரித்துக் கொண்டான். அந்தக் கண நேரத்துப் பார்வைக் கணையின் தீவிரத்தில் நிலை குலைந்து தடுமாறிய ராதிகாவும் கலங்கிய மனத்துடன் விடை பெற்றுச் சென்றாள்.

ராதிகாவின் கலைத்திறனைக் கண்டு வியந்தனர், அக்கரை ரசிகர்கள். அவர்களுடைய புகழுரைகளைப் பார்க்கச் செய்தித்தாளைப் புரட்டிக்கொண் டிருந்தாள். ஆனந்தம் பெருக்கெடுக்க அதில் திளைத்திருந்த ராதிகாவைக் கதிகலங்க வைத்தது, அன்றைத் தினசரியின் ஒரு மூலையில் அவள் கண்ட செய்தி. 'உலகப் புகழ் பெற்ற இந்திய நாட்டியக் கலாமணி, பிரேம்குமார் உடல் நிலை காரணமாக, நாட்டியத்தினின்றும் ஓய்வு பெறுகிறார்' என்று கண்டிருந்தது. அதைப் படித்ததும் செயலற்றுப் போனாள் ராதிகா, கண்களைக் கசக்கிக் கொண்டு செய்தி உண்மைதானா என்று பார்த்தாள். அவளுக்கு மீண்டும் படபடப்பு, துயரம், கோபம், ஏமாற்றம்.

ராதிகாவுக்குத் தான் அவனிடம் விடை பெற்ற காட்சி நினைவுக்கு வந்தது. அன்றுதான் அவனைக் கடைசியாகப் பார்த்துப் பேசியது. அன்று அவன் அவளைப் பார்த்த பார்வை இன்றும் அவள் மேனியைக் கிளுகிளுக்கச் செய்தது. இப்போது பல்லாயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால், ஒன்றும் செய்ய முடியாத தொலை தூரத்தில் அவளுக்கு அன்றைய உரையாடலின் அர்த்தம் நன்றாகவே புரிந்தது. அன்றே பிரேம்குமார் ஓய்வு பெற நிச்சயித்திருக்கிறான். அப்பொழுதே அவன் உடல் நலம் இல்லையா? அப்படியானால் ஏன் தன்னிடம் ஒன்றுமே கூறவில்லை?

கடைசி இரண்டு மூன்று மாதங்களாக அவன் நடனமாடும்போது எப்போதாவது உடலில் முறுக்கு ஏற்படுவதையும் அவள் கவனித்திருந்தாள். நடனமாடும் கலைஞனுடைய தசைகளுடன் நரம்புகளும் வீணையின் தந்தியைப் போன்று மிடுக்குடன் இருக்கவேண்டும். வீணையின் கானத்துக்குத் தந்தியின் முறுக்கு எவ்வளவு முக்கியமோ, அதைவிட அவசியம் நாட்டியக் கலைஞனுக்கு உடற்கட்டு. அவனுடைய ஒவ்வொரு தசைநாரும், நரம்பும் அல்லவா பேசவேண்டும்? அவள் அவனைப் பார்க்கத் துடித்தாள். அவனுடன் சண்டை போடப் பரபரத்தாள். ஆனால் தூரம் தடுத்தது. அடுத்தடுத்து நடக்கவிருக்கும் நிகழ்ச்சிகள் தடுத்தன. இவ்வளவு தூரம் தன் கலையால் மகிழ்விக்க வந்துவிட்டு அரைகுறையாய்த் திரும்பவும் முடியவில்லை.

அவளால் முடிந்தது ஒன்றுதான். ஜர்மானிய நிகழ்ச்சிகளை ஒத்துக்கொள்ளாமல் சென்னைக்கு மூன்று மாதங்களில் திரும்பினாள். திரும்பி வந்தவுடனேயே அவன் வீட்டுக்குச் சென்றாள். வீடு பூட்டியிருந்தது. யாருக்கும் அவன் எங்கே சென்றான் என்று தெரியவில்லை. அவளுக்கு அது அதிசயமாகவும் வருத்தமாகவும் இருந்தது.

சிந்தனை ஓட்டத்தில் மறைந்திருந்த உண்மையில் தடுக்கி விழுந்தாள்; 'நாட்டியத்திலிருந்து விலகுவதற்கு வேறு ஏதோ ஆழ்ந்த காரணம் இருந்ததை மறைத்து, தன் உடல் நிலையைக் காரணமாகக் கொண்டு விலகிவிட்டானோ? அது என் மேல் இருக்கும் காதலோ? அவனுடைய குறிக்கோள், லட்சியம் எல்லாவற்றையும் சாம்பலாக்கிகொண்டு என் மேல் ஏற்பட்ட அன்புதான் அவனைக் கலையையும் துறக்க வைத்துவிட்டது. நான் ஊரில் இல்லாத சமயம் அதனால்தான் தலைமறைவாகிவிட்டானோ?'

இதற்குமேல் அவளால் சிந்திக்க முடியவில்லை; அவள் உணர்ச்சிக் கொந்தளிப்பில் மூழ்கித் தத்தளித்தாள். ஓர் அதீத மெய்யுணர்வு ஏற்பட்டது. மனத்தில் சலனம் அடங்கி, சாந்தமும் அமைதியும் ஆட்சி புரிந்தன. அன்று பார்த்த கண்களின் தீட்சண்யம் அவளை ராப்பகலாக மகிழ்வித்தது. அந்தப் பார்வையின் செய்திக்காக வாழ ஆரம்பித்தாள். அவனுடைய காதலுக்காக நடனமாடினாள்.

ஒரு நாள் மகாதேவன், "ராதிகா, உனக்கு வயது ஏறிக்கொண்டே போகிறது. 23 ஆகிவிட்டது, உனக்கென ஒரு வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டாமா?" என்று கேட்டார்.

"அப்பா, என் வாழ்க்கையே நடனந்தான். எனக்குத் திருமணத்தில் நாட்டம் இல்லை."

"ஒரு கால் நீ விரும்பியவர் கிடைத்திருந்தால் இந்த வார்த்தை உன் வாயில் வந்திருக்காது அல்லவா?" அவள் பேசவில்லை.

"ஏம்மா, நீ பிரேம்குமாரைக் கல்யாணம் செய்துகொள்ள ஆசைப்பட்டாய் அல்லவா?" அவள் தலையை அசைத்தாள்.

"எனக்குப் புரிகிறது. அதில் உனக்குக் கிடைத்த ஏமாற்றந்தான் வெளியாகித் திசை திரும்பிவிட்டது; நடனத்தில் தீராத வேட்கைத் தீயாகிவிட்டது." அவள் சிரித்துக் கொண்டாள்.

"உன்னுடைய ஆத்மபலத்தைப் பாராட்டுகிறேன். நீ கட்டாயம் அவனைப் போல் புகழ் பெறுவாய்."

ராதிகா தன் உணர்ச்சிகளைப் பெட்டியில் மூடி அழுத்திப் பூட்டிவிட்டாள், பிரேம்குமாரைப் போலவே அவர்களுக்கிடையே இருந்த பிரேமை ரகசியமாகவே இருந்துவிட்டது.

அவளைப் பேட்டியில், "நீங்கள் ஏன் மணம் செய்துகொள்ளவில்லை?" என்று யாராவது கேட்டால், "தற்சமயம் அந்த யோசனை இல்லை. நாட்டியத்துக்குக் குந்தகம் ஏற்படாமல், சரியானவர் கிடைத்தால் மணந்து கொள்வேன்" என்று கூறுவாள்.

ஆனால் அவள் மனத்துக்குத் தெரியும், அவன் கிடைக்க மாட்டான் என்று. இப்படி அவளுடைய இல்லற வாழ்வு கானல் நீர் ஆகிவிடவே, அவள் நாட்டியத்தில் ஐக்கியமாகி விட்டாள், கடந்த ஏழெட்டு ஆண்டுகளாக.

சந்திரிகாதான், "ஏய் ராது, நேரமாயிடுத்து என்ன, கனவுலகில் இருக்கிறாயா?" என்று உலுக்கினாள். பரக்க பரக்கப் 'மேக் அப்'பைச் சரி செய்துகொண்டு கிளம்பினாள் அன்றைய நிகழ்ச்சிக்கு.

நிகழ்ச்சிக்குப் போகும் வழியெல்லாம் மனப் போராட்டம். ரசிகர்கள் எத்தனை பாராட்டினாலும் அவளுக்குத் திருப்தி இல்லை. 'என் நடனத்தில் என்ன குறை? ஏன் நான் இன்னும் நட்சத்திரக் கூட்டத்திலேயே இருக்கிறேன்? ஏன், பிரேம்குமாருக்கு நிகராக முழுமதி

யாகச் சுடர்விடவில்லை?' அவளும் கடந்த ஏழு வருஷங்களாக இந்தக் கேள்விக்கு விடை தேடுகிறாள்; கிடைக்கவில்லை.

நடனத்தின் நடுவே சபாக் காரியதரிசி அவளுக்குப் புகழ்மாலை சூட்டினார். 'அடுத்த வாரம் இந்நேரம், நாட்டிய கலாமணி ராதிகா, இவ்வளவு சிறிய வயதில் பல பெரிய விருதுகளைப் பெற்ற ராதிகா, கலைவானில் நட்சத்திரமாகச் சுடர்விடும் ராதிகா, ஜப்பானில் நம் கலாசாரத்தைப் பரப்பி, அவர்களை மகிழ்விக்கப் போகிறார். அவருடைய இந்தப் பயணம் மற்றைய முந்திய பயணங்களைப் போல் வெற்றி பெற நம் வாழ்த்துக்களைத் தெரிவித்துகொள்கிறோம்.' ஒரு சிறுமி அவளுக்கு மலர்மாலை சூடினாள்.

அவள் நாட்டியத்தைத் தொடர்ந்தாள். கரகோஷத்தினால் கொட்டகை அதிர்ந்தது. ரசிகர்கள் அவளைச் சூழ்ந்துகொண்டனர்; பாராட்டினர். சிலர் மாணவியராக விரும்பினர். பத்திரிகை நிருபர்கள் பேட்டி காண விரும்பினர்.

அவர்களை மறு நாள் வீட்டுக்கு வரச் சொன்னாள் அவள். சிறிது சிறிதாக அவளைச் சுற்றிக் குழுமியிருந்த குழாம் குறைந்தது. ஆதனூடே வந்தவனைப் பார்த்து விக்கித்துப் போனாள்.

இந்த ஜன்மத்தில் பிரேம்குமாரைப் பார்ப்போமா என்ற ஐயத்துடன் இருந்தவள் அவள். கறுத்து, அடர்ந்த தாடியும், திடீரென நடனத்தை விட்டதால் கட்டுத் தளர்ந்துவிட்ட மேனியுமாகப் பிரேம்குமார் காட்சியளித்தான். ஒரு சமயம், அவனை எங்கே கண்டாலும் குழுமி ஆர்ப்பரிக்கும் ரசிகர்களுக்குக்கூட அவனை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. ஆனால் அவன் கண்களின் ஒளியும், கம்பீரமும் சிறிதும் மாறவில்லை. அவனை, அவனது ஒவ்வோர் அங்க அசைவை, அவன் பார்வையை, அறிந்து காதலித்த ராதிகாவுக்கு அவனை அடையாளம் கண்டுகொள்வதில் சிறிதும் சிரமம் இருக்கவில்லை.

"நீங்களா!" என்று ஆச்சரியத்தில் வாயைப் பிளந்தாள். உணர்ச்சிப் பெருக்கில் திணறினாள். தொண்டை வறண்டுவிட்டது. அவனை அந்த நிலையில் பார்த்ததும் துக்கம் தொண்டையை அடைத்தது. தன் குரு வந்திருக்கும் உணர்வில் தன்னிச்சையாகக் காலில் விழுந்து வந்தனம் செய்யக் குனிந்தவளை அவன் கண்களினாலேயே நிறுத்தினான். கண்களின் குறிப்பிலேயே சுற்றியிருப்பவர்கள் முன்னிலையில் தன்னை அறிமுகப் படுத்திக்கொள்ள விரும்பவில்லை என்பதை உணர்த்தினான் அபிநய மன்னன். "உங்களைப் பார்த்ததில் எனக்கு ரொம்பச் சந்தோஷம்" என்றாள் ராதிகா.

"எனக்கு உன்னைப் பார்க்கவேண்டும். உனக்கு ஒரு கடைசிப் பாடம் சொல்லித் தரத்தான் வந்திருக்கிறேன்." அவன் சன்னமாகக் கூறினான்.

"நாளைக்கு என் வீட்டுக்கு வாருங்களேன்." அவன் வலிய அவளை நாடியதை எண்ணிப் புளகாங்கிதம் அடைந்தாள். இது தனக்குக் கடவுள் அளித்திருக்கும் கடைசிச் சந்தர்ப்பம் என்று கருதினாள். இதை நழுவவிடக்கூடாது என்றும் தீர்மானித்தாள்.

காதலன் என்பதைவிடக் குரு என்ற வாஞ்சை அதிகரித்துவிட்டதை உணர்ந்த

மறு நாள் சொன்னபடி அவன் வந்தான். கூடத்தில் அவனை வரவேற்றாள் ராதிகா.

அவள் அவனை கேட்டாள்: "நீங்கள் நோயால் பாதிக்கப்பட்டு நாட்டியத்தை விட நேர்ந்தது உண்மையா? உடலுக்கு என்ன நேர்ந்தது?"

அவன் விரக்தியுடன் சொன்னான்: "என்னைப் போன்ற கலைஞனுக்கு அத்தியவசியமானது உடல். அது வாதத்தினால் பாதிக்கப்பட்ட பிறகு நான் நாட்டியத்தை விடுவதைத் தவிர எனக்கு வேறு வழி இல்லை."

பிறகு, "ராதிகா, உன் நடனத்தைச் சில தடவை பார்த்தேன். கடைசியாக, ஒரு நுணுக்கத்தை நீ கற்றுக்கொள்ள வேண்டும். இதுவரை ஒருவருக்குமே சொல்லித் தராததை உனக்கு இப்பொழுது சொல்லித் தருகிறேன். நன்றாகப் பார்த்துக்கொள்" என்று ஒரு பதம் ஆடிக் காண்பித்தான்.

தன் உடல் உபாதையைப் பொருட்படுத்தாமல் இரண்டாம் முறையும், மூன்றாம் முறையும் ஆடிக் காண்பித்தான். அவன் பழைய லாகவம், நளினம், அபிநயம், அனைத்துடனும் ஆடினாலும், ஆடி முடித்ததும், அவன் உடல் தள்ளாட உட்கார்ந்த விதம், அவனுடைய உடல் வலிமை குறைந்திருந்ததைக் காட்டியது. அவன் ஆடுவதையே பார்த்துக்கொண்டிருந்த ராதிகாவுக்கு அவன் ஆட ஆடத் தான் அறிந்திராத பாணி ஒன்று பிடிபட்டது. அவள் மனம் மகிழ்ச்சியால் துள்ளியது. இதுவரை மண்டையைக் குடைந்த அந்தக் குறை புரிந்துவிட்டது. அபிநயத்திலேயே அவள் தன் குறையைப் புரிந்துகொண்டாள்; அவள் ஆடிக் காண்பித்தாள். குறையைப் புரிந்துகொண்டதை அறிந்து அவன் நிறைவுடன் சிரித்தான். பின்னர் அவனுக்குச் சிற்றுண்டி அளித்தாள், வற்புறுத்தி. அப்போது தன் உள்ளக்கிடக்கையைத் தெரிவித்தாள். "நான் உங்களை நினைக்காத நாள் கிடையாது. என்னை மறக்காமல் வந்ததற்கு நன்றி. இன்னும் நேரம் தப்பிவிடவில்லை. என் கலையையும், என்னையும், சமர்ப்பணம் செய்யக் காத்திருக்கிறேன்." சற்றே மங்கிய அவன் கண்களினூடே அவளால் அதே தீட்சண்யத்தைப் பார்க்க முடிந்தது. அவள் கண்களில் நீர் மல்கியது.

"ராதிகா, உனக்குப் புரியவில்லையா? இன்றைய இந்தப் பாடத்துக்குப் பிறகு சொல்கிறேன். நீ திருமணம் செய்துகொண்டு உன் கலையை வீணாக்காதே." அவள் துணுக்குற்றாள். இவ்வளவு வருஷங்கள் போதித்து வந்தது, தன்னை அவனுக்கு வாரிசாகத் தேர்ந்தெடுக்கத்தானா? தன் காதலைப் புடம் போட்டுப் பார்க்க இல்லையா? மேலும் அவளால் பொறுக்க முடியவில்லை.

"அப்படியானால் நீங்கள் என்னை மாணவி என்ற முறையைத் தவிர வேறு எப்படியும் நினைக்கவில்லையா?"

"உன்னை மறக்கமுடியாமல் என் கலையையே விட்டு விடவேண்டுமோ என்று பயந்த காலம் உண்டு. கடவுளின் அருளால் அது உடல் நோய் உருவில் வந்தது."

"அப்படியானால் என்னை மணந்து கொள்ளக் கூடாது என்ற வைராக்கியம் ஏன்?"

"உன்னை நான் மணந்தால் உலகம் இரண்டு

உனக்கு அளித்திருக்கும் வரப்பிரசாதத்தைப் பிடுங்கிக் கொள்ள நான் யார்?''

''திருமணம் செய்துகொண்டு நான் கலைப் பணி புரியலாமே!''

''என் சொத்தை மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளும் பக்குவம் எனக்குக் கிடையாதே!''

''அப்படியானால் என்னைத் தேடி வந்த காரணம்?

''என்னுடைய உன்னதமான, உண்மையான சிஷ்யையைக் கைவிடக்கூடாது என்றுதான் வந்தேன்.'' சில விநாடிகள் அவள் ஒன்றும் புரியாமல் நின்றாள். அவன் சிறிது மௌனத்துக்குப் பிறகு தொடர்ந்தான். ''உன் பயிற்சியில் ஒரு குறை இருந்தது. அது சிறியதானாலும், நீக்குவது என் பொறுப்பு. உனக்கு அது புரியட்டுவிட்டது அல்லவா?'' அவன் சிரித்தான். அவளுக்கு அழுகையே வந்தது.

''ராதிகா, ஒரு வேண்டுகோள். நீ உன் வாழ்க்கையைத் திருமணத்தில் வீணாக்காதே. அந்த உரிமை உனக்குக் கிடையாது. அது கலையின் சொத்து'' என்று அவன் கூறியதைக் கேட்டதும் அவள் ஸ்தம்பித்து நின்றாள். அவன் ஓர் உயர்ந்த பூவைக் கலைமகளுக்கு அர்ச்சித்த திருப்தியுடன் சென்று விட்டான். யோசிக்க யோசிக்க ராதிகாவின் உடல் புல்லரித்தது. அவன் எவ்வளவு உயர்ந்தவன்! கலைக்கு அவன் அளித்திருக்கும் மரியாதைதான் அவனை அவ்வளவு மேன்மையாக்கி விட்டது. இப்போது அவளுக்கு, அவன் தன்னைக் காதலித்தான் என்பதில் ஐயம் இல்லை. அது அவளுக்கு மிகுந்த சந்தோஷத்தை அளித்தது. அதில் காதலின் தோல்வி கூடப் பெரிதாகத் தோன்றவில்லை. மேலும் கலையின் வாரிசாக, சந்ததியாக, மாணவிகளுள் அவளைத் தேர்ந்தெடுத்ததே அவளுக்குப் பெருமையாக இருந்தது. அந்தச் சந்திப்புக்குப் பிறகு அவள் ஜப்பான் போய் வெற்றியுடன் திரும்பினாள்.

இப்போதெல்லாம் அவளைப் பேட்டி காணும் போது, ''நீங்கள் திருமணம் செய்துகொள்ளவில்லையா?'' என்று கேட்டால், அவள் கூறும் ஒரே பதில்: ''குறுகிய வாழ்க்கையைத் திருமணத்தில் வீணாக்கும் உத்தேசம் இல்லை.''

ஜப்பானிலிருந்து அவள் திரும்பி வந்ததும் அவள் அளித்த நிகழ்ச்சியைப் பற்றி ஒரு பத்திரிகையின் விமரிசனம்: 'ராதிகாவின் நடனம் அவளுடைய பயணத்துக்குப் பிறகு இன்னும் மெருகேறி, உன்னத நிலையை அடைந்திருக்கிறது. இவர் தம் நாட்டியத்தால் பாமர ஜனங்களைப் பரவசப்படுத்துவதில் பிரேம் குமாருக்கு ஈடாக, ஏன், அவரையும் மிஞ்சி விட்டார். நாட்டிய உலகில் முதன்மையான அவர் நடனம் முடிந்ததும் அவையினருக்கு இவ்வுலக உணர்வு ஏற்படுவதற்குச் சில நிமிஷங்கள் பிடித்தன. துரதிர்ஷ்டவசமாகப் பிரேம் குமாரை இழந்த நாம், அவர் ஸ்தானத்தில் ராதிகா பல்லாண்டு வாழ்ந்து, நடனமாடி, பாரதத்துக்குப் பெருமை தேடித் தருவார் என்று பிரார்த்திப்போம்.'

அதைப் படித்த ராதிகா சூரியனைக் கண்ட தாமரையென முகம் விரித்தாள். தன் வாழ்க்கை லட்சியம் நிறைவேறி ஜன்ம சாபல்யம் அடைந்ததாய் எண்ணி அகமகிழ்ந்தாள். ★



ஸ்ரீ ஆசாரிய சுவாமிகள் உபந்நியாசம்.

**உறங்குவதும் ஆனந்தம்.
ஆடுவதும் ஆனந்தம்.
இந்த இரண்டு
கோலத்திலும் இரண்டு
ஆனந்த மூர்த்திகள்
இருக்கிறார்கள்.**

*சந்நிதியைப் பார்த்த கோபுர வாசலை உடையதாகவே இருக்கிறது. காமாட்சி அம்பாள் கோவில் வடக்கே இருப்பதாக இருந்தால் தெற்குக் கோபுரம் பெரியதாக உயரமாக இருக்கும். தெற்கே இருக்கிற கோயிலாக இருந்தால் வடக்குக் கோபுரம் பெரிதாக உயரமாக இருக்கும். காஞ்சீபுரத்தில் 108 தேவாலயம் இருக்கின்றன. 18 பெருமாள் கோவில்கள் இருக்கின்றன. அங்கெல்லாம் கோபுரங்கள் அப்படித்தான் இருக்கின்றன.*

# இரண்டு ராஜாக்கள்

அநேகமாக எல்லாக் கோவில்களிலும் கிழக்குப் பார்த்துத்தான் சந்நிதி இருக்கும். சில இடங்களில் மாத்திரம் மேற்குப் பார்த்த சந்நிதி இருக்கும். மேற்குப் பார்த்த சந்நிதியில்கூடப் பெருமாள் மேற்கே பார்த்துக்கொண்டிருந்தாலும் கிழக்குக் கோபுரத்தைப் பெரியதாகக் கட்டிவிடுவார்கள். மயிலாப்பூரில் கபாலீசுவரருக்கு அப்படித்தான் இருக்கிறது.

பெருமாள் கோவில் என்று காஞ்சீபுரத்துக்குப் பெயர். தேவப் பெருமாள் என்று பெயர் வரதராஜருக்கு. அவருக்கும் அப்படித்தான். பெருமாள் மேற்கே பார்த்துக்கொண்டிருக்கிறார். கிழக்குக் கோபுரம் உயரமாக இருக்கிறது. ஆனால் காஞ்சி க்ஷேத்திரத்தில் ஒரு விசேஷம் இருக்கிறது. அநேகமாகப் பெருமாளோ, ஈசுவரனோ கிழக்கே பார்த்துக்கொண்டிருந்தாலும் சரி, மேற்கே பார்த்துக்கொண்டிருந்தாலும் சரி, கோவில் நகரத்துக்கு மத்தியில் இருக்கும் காமாட்சி அம்பாள்

ஸ்வாமி என்றால் பொதுஜனங்களுடைய வார்த்தையில் பகவான் என்று அர்த்தம். வைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஸ்வாமி என்றால் அவர்களில் பெரியவர்களைத்தான் குறிக்கும். பெருமாளைப் பெருமாள் என்றே சொல்ல வேண்டும். அல்லது பகவான் என்று சொல்ல வேண்டும். ஆனால் ஸ்மார்த்தர்கள் வைஷ்ணவர்களைச் சொல்லும்போது, 'பெருமாள் வந்திருக்கிறார்' என்று வேடிக்கையாகச் சொல்லுவார்கள். வைஷ்ணவர்கள் மற்றொரு வைஷ்ணவரைச் சொல்லும்போது, 'சுவாமி' என்று சொல்வது வழக்கம். ஸ்மார்த்தர்களும் சரி, பொது ஜனங்களும் சரி, சாமி என்று ஈசுவரனைச் சொல்கிறார்கள். கொஞ்சம் பிராமணர்களிடத்திலே அன்பு உள்ள மற்றச் சாதிக்காரர்கள் ஸ்வாமிக்குச் சமானமாக அவர்களையும் நினைக்கிறதனால் அவர்களையே 'சாமி' என்று சொல்வதும் உண்டு.

இப்படி லோகத்தில் ஒவ்வொரு சம்பிரதாயத்தில் ஒவ்வொரு பழக்கம் இருக்கிறது.

பரிபாஷைகள் இருக்கின்றன; ராமானுஜ சம்பிரதாயத்தில் அதிகமான பரிபாஷைகள் உண்டு. சைவ சித்தாந்திகளாகிய வேளாளர்களுடைய பழைய கிரந்தங்களைப் பார்த்தாலும் பரிபாஷைகள் நிறைய இருக்கின்றன. வைஷ்ணவ பரிபாஷை, சைவ பரிபாஷை என்று இரண்டு வகைகளும் அதிகமாக இருந்தன, அந்தக் காலத்தில். மற்றப்படி ஸ்மார்த்தர்கள், சாமான்ய ஜனங்கள் இவர்களுக்கு அதிகப் பரிபாஷை கிடையாது.

இந்தப் பரிபாஷைகளைப் பற்றி நான் சொல்ல வந்ததற்குக் காரணம்? 'நான் சுவாமி என்று சொல்வது மனுஷ்யரைக் குறிக்க அல்ல; பகவானைத்தான் குறிப்பிடுகிறேன்' என்பதற்காகச் சொன்னேன். கிழக்கிலோ, மேற்கிலோ பெருமாளோ, ஈசுவரனே பார்த்துக்கொண் டிருப்பார். ஆனால் தெற்கே பார்க்கிற சுவாமிகள் முக்கியமாக இரண்டே இரண்டு. இந்த இரண்டு சுவாமிகளும் ராஜாவாக இருக்கிறார்கள். ஒருவர் நடராஜா. இன்னொருவர் ரங்கராஜா. இந்த இரண்டு சுவாமிகளும் எப்போதும், எல்லாக் கோவிலிலும் தெற்கே பார்த்துக்கொண் டிருப்பார்களே தவிர, கிழக்கே பார்த்துக்கொண் டிருக்க மாட்டார்கள். இவர்கள் இரண்டு பேருமே கலாக்ஷேத்திரத்தைச் சேர்ந்தவர்கள். ரங்கம் என்றால் நாடக மேடைக்குப் பெயர். ஜனங்கள் எல்லாம் உட்கார்ந்திருக்கிற இடத்தைக் காட்டிலும் எல்லாருக்கும் தெரியும்படியாக உயரமான மேடை ஒன்று கட்டப்பட்டிருக்கும். அதிலே நடனம் ஆடுவார்கள்; நாடகம் நடிப்பார்கள். அந்த நாடக மேடைக்கு ரங்கம் என்று பெயர். அதற்கு ராஜாவாக இருப்பவர், ரங்கராஜா. இன்னொருத்தர் நடராஜா; அவர் நடனம் ஆடுகிறவர்களுக்கு எல்லாம் ராஜா. இரண்டு பேரும் தெற்கே பார்த்துக்கொண் டிருப்பார்கள். இவர்கள் இரண்டு பேருக்கும் ராஜா என்று பெயர்.

திருப்பதிப் பெருமாளுக்கு ஈசுவரன் என்று தான் பெயர். ராஜா என்ற பட்டம் கிடையாது. வேங்கடேசுவருலு என்று தெலுங்குப் பிரதேசத்துக்குப் போனால் சொல்வார்கள். மலையாளப் பக்கத்தில் போனால் வேங்கடேசுவரன் என்று சொல்வார்கள். அவருக்கு ஈசுவர சப்தந்தான். ராஜா சப்தம் இரண்டு பேருக்குத்தான்.

ஒவ்வொரு சிவன் கோவிலிலும் பெரும்பாலும் சுவாமி கிழக்கே பார்த்துக்கொண் டிருப்பார். அவருடைய ஈசான்ய திக்கிலே நடராஜா இருப்பார்; தெற்கே பார்த்துக்கொண்டுதான் இருப்பார். காலைத் தூக்கிக்கொண் டிருப்பார். அவரை எப்போதும் நாம் இருதயத்தில் தியானம் பண்ணி, அவரை நினைத்தவுடனே அவருடைய ஸ்வரூபம் ஸ்புரிக்கும்படியாக ஆகிவிட்டால், சித்தியாயிற்று என்று சொல்வார்கள்.

மந்திர சித்தி, ஞான சித்தி என்று சொல்வதுண்டு. நமக்கு மிகவும் பிரியமான குழந்தை, மனைவி இவர்கள் பக்கத்தில் இல்லாவிட்டாலும் நினைத்தவுடனே அவர்கள் ஸ்வரூபம் மனசுக்குள் வந்துவிடுகின்றன. அவர்களை நினைத்து நினைத்துப் பார்த்துப் பழகியதனால் இப்படி ஏற்படுகிறது. ஆனால் நம்முடைய இதயத்திலே நம் குழந்தை, மனைவி, சிநேகிதர் ஆகியவர்களுடைய ஸ்வரூபம் ஸ்புரித்து என்ன பயன்? இவர்களை நினைப்பதே துக்கத்துக்குக் காரணமாகி விடுகிறது. ஒன்று, நம்மை விட்டு அவர்கள் போய்விடுவார்கள்; அல்லது அவர்களை விட்டு நாம் போகும்படியாகிவிடும்.

இரண்டு பேரும் இருக்கிறபோதே ஒருத்தருக்கொருத்தர் பேரில் இருக்கிற அபிமானத்தை விட்டுவிட்டால் அதுதான் நல்லது; எப்படி இருந்தாலும் கத்தரிப்புச் சமயம் வரத்தான் போகிறது. சுவாமிக்கும் நமக்குந்தான் கத்தரிப்பு என்பது வரவே வராது. ஆகையால் சுவாமியிடத்திலே அன்பு வைப்பது ஒன்றுதான் துக்கத்துக்கு இடம் இல்லாதது. குழந்தையை நினைத்தவுடன் நம் எதிரே வருகிற மாதிரி எப்போது நடராஜாவை நினைத்தாலும் இருதயத்தில் அந்த ஸ்வரூபம் தோன்றவேண்டும்; நினைத்து நினைத்துப் பார்த்து அது சித்தியாகவேண்டும். இதுதான் துக்க நிவர்த்திக்கு உண்மையான மார்க்கம்.

அவர் ஏன் தெற்கே பார்த்துக்கொண் டிருக்கிறார்? தெற்கே இருக்கிறவனுடைய உபத்திரவம் நமக்கெல்லாம் வராமல் இருப்பதற்காகத்தான் அவர் தெற்கே பார்த்துக்கொண்டிருக்கிறார். தெற்கே இருக்கிறவனைப் பார்த்து, 'உனக்குச் சிட்சை பண்ணுகிற கால் இதோ இருக்கிறது' என்று ஒரு காலைத் தூக்கிக்கொண் டிருக்கிறார். அந்தத் திருவடிக்குக் குஞ்சிதபாதம் என்று பெயர். குஞ்சிதபாதம், குஞ்சிதபாதம் என்று மனுஷ்யர்கள்கூடப் பெயர் வைத்துக்கொள்கிறார்கள்.

தெற்கே இருக்கிறவன் வராமல் இருப்பதற்காக நடராஜாவும், ரங்கராஜாவும் தெற்கே பார்த்துக்கொண் டிருக்கிறார்கள். என்றாலுங்கூட இவர்கள் இரண்டு பேருடைய நிலையும் ஒன்றுக்கொன்று விரோதம். ரங்கராஜா ஆனந்தமாகத் தூங்கிக்கொண் டிருக்கிறார்; நடராஜா ஆனந்தமாகக் கூத்தாடிக்கொண் டிருக்கிறார். ஒன்று எப்போதும் ஆனந்தக் கூத்து; மற்றொன்று எப்போதும் ஆனந்தத் தூக்கம். தூக்கத்திலேயும் ஆனந்தம் உண்டு. 'சுகமாகத் தூங்கினேன்' என்று சொல்கிறோம் அல்லவா? ஆனந்தம் நிறைய உண்டானால் கூத்தாடத் தோன்றும்.

வெள்ளைக்காரர்களுக்குச் சந்தோஷம் அதிகமாக வந்துவிட்டால் அப்படி அப்படியே கூத்தாட ஆரம்பித்துவிடுவார்கள் என்று கேட்டிருக்கிறேன். பால் (Ball) டான்சு எல்லாம் அவர்களுக்குப் பழக்கம். நமக்கு எங்கே? சோற்றுக்குத் திண்டாடிக் கொண்டு, எப்போதும் அழுதுகொண்டே இருப்பதனால் அவ்வளவு ஆனந்தம் இல்லை; சந்தோஷம் இல்லை.

எப்போது பார்த்தாலும் கண்ணெல்லாம் உள்ளே போய், முகம் சுருங்கி, யாரைக் கண்டாலும் பயம், யாரைக் கண்டாலும் அழுகை என்று நாம் உட்கார்ந்திருக்கிறோம். அவர்கள் சர்வ சுதந்தரமாக இருக்கிறார்கள்;

சந்தோஷம் வந்தால்தான் பாட்டே வரும். நிரம்ப ஆத்மஞானம் வந்தவன்கூடப் பாட்டுப் பாட ஆரம்பித்துவிடுவான். ஆத்மவித்தாக இருப்பவன் சதா சாமகானம் பண்ணிக்கொண் டிருப்பான். எப்போதும் ஆத்ம வித்தாக இருப்பவர்கள் பாடிக்கொண் டிருப்பவர்கள் என்று உபநிஷத்துக்கள் சொல்லுகின்றன.

இப்படி உலகத்தில் இருக்கும் ஆனந்தம் எல்லாம் என்றும் நிறைந்திருக்கும்படியான

ஆனந்த சமுத்திரமாகிய பரமாத்மாவினிடத்தி லிருந்து தெறித்த ஒரு லேசம் என்று உபநிஷத்துக்களில் சொல்லியிருக்கிறது. உலகத்தில் இருக்கும் வெளிச்சம் எல்லாம் சூரியனுடைய ஜோதியின் ஒவ்வொரு தெறிப்பு.

ஒரு பந்தல் போட்டிருக்கிறோம். கொஞ்சம் ஓலை விலகி இருக்கும் இடத்தின் வழியாகப் பளீர் என்று வெளிச்சம் உள்ளே வருகிறது. வந்தது அது? எங்கும் நிறைந்திருக்கிற ஜோதிதான். பந்தல் அதைத் தடுத்துக்கொண்டிருக்கிறது. கொஞ்சம் ஓலையை விலக்கினால் உள்ளே ஒளி வருகிறது. அப்படி, எங்கும் நிறைந்து இருக்கும் ஆனந்த சமுத்திரத்தின் ஒரு லேசந்தான், கொஞ்சம் கொஞ்சம் நாம் புண்ணிய கர்மா பண்ணுகிற போது பளீர் பளீர் என்று உண்டாகிறது. எப்படி இருட்டை நீக்கிப் பிரகாசத்தைச் சூரியன் கொடுக்கிறதோ அப்படி நம்முடைய பாபகர்மாக்களின் விளைவாகிய துக்கத்தைப் போக்கி ஆனந்தத்தைக் கொடுக்கிறது அது. அது எப்போதும் ஆனந்த ரூபியாக இருக்கிறது. அதனால் எப்போதும் கூத்தாடிக் கொண்டிருக்கிறது. அதனால்தான் அவன் கூத்துக்கு ஆனந்தக் கூத்து என்று பெயர்.

ஆனந்தம் இரண்டு விதம். பொங்குகிற ஆனந்த நிலை ஒன்று. அடங்கி அநுபவிக்கின்ற நிலை ஒன்று. நடராஜா சடை தூக்கி இருக்கிறது. சதா கூத்தாடிச் சுற்றிக்கொண்டிருக்கிறதனாலே சடை விரிந்து போகிறது; விரிசடையார் ஆகிவிடுகிறார். சாதாரணமான சடையென்றால் கீழே தொங்கும். ஆனால் நடராஜா ஆடுகிற ஆட்டத்திலே விரிந்து மேலே தூக்கிக்கொண்டிருக்கிறது. பொங்குகிற ஆனந்தமூர்த்தி நடராஜா. அவர் கையில் இருக்கிறது உடுக்கு. அந்த உடுக்கிலிருந்து வருவது பதினாறு சூத்திரம்.

உடுக்கையை அப்படியே ஆட்டிக்கொண்டே இருக்கிறார். அதிலிருந்து கிளம்பும் சப்தங்களை எல்லாம் அடக்கிப் புஸ்தகமாக எழுதி வைத்துக்கொண்டிருக்கிறார் ஒரு சுவாமி. மேலே பொங்குவது இங்கே அடங்கியிருக்கிறது. கோவிலிலே சுவாமிக்கு ஈசான்யத்தில் இருப்பார் நடராஜா. கர்ப்பக்ருஹத்துக்குத் தென்னண்டைப் பிராகாரத்தில் இவர் - தட்சிணாமூர்த்தி - உட்கார்ந்து கொண்டிருப்பார். அவர் உடுக்கில் சொல்கிற நாதத்தை இவர் புஸ்தகத்தில் எழுதி வைத்திருக்கிறார். அங்கே விரித்த சடை; இங்கே சடை தொங்கிக்கொண்டிருக்கும். சந்திரன் முதற்கொண்டு அங்கே அசைந்துகொண்டிருக்கும். இங்கே ஆனந்தமாக நின்று பிரகாசித்துக்கொண்டிருக்கும். அவர் அப்படி ஒரு காலைத் தூக்கிக்கொண்டு நர்த்தனம் பண்ணிக்கொண்டிருப்பார். இங்கே இவர் ஒரு காலை இன்னொரு கால்மேலே தூக்கிப் போட்டுக்கொண்டு உட்கார்ந்திருப்பார். இவர் காட்டிக்கொண்டிருப்பது சின்முத்திரை, ஞான முத்திரை.

சத், சித், ஆனந்தம் என்று கேட்டிருக்கிறோம். சச்சிதானந்தம் என்றால் என்ன அர்த்தம் என்று அநேகமாகத் தெரியாது. சத் என்பது ஒரு பக்கத்தில் இருக்கட்டும். சித் என்றால் ஞானம். தட்சிணாமூர்த்தி காட்டுகிற முத்திரைக்குச் சின்முத்திரை என்று பெயர். கட்டை விரலையும், ஆள்காட்டி விரலையும் சேர்த்து வைத்துக்கொண்டிருக்கிறார். ஞானம் நிறைந்தால் சாந்தம். சாந்தமாக இருக்கும் இடத்திலே ஆனந்தமும் நிறைந்திருக்கும்.

அமைதியாக ஜபம் பண்ணவேண்டும் என்றால் தட்சிணாமூர்த்தி சந்நிதானத்திலே போய் உட்கார்ந்து கொள்ளவேண்டும். தரிசனம் பண்ணுவதானால் நடராஜாவின் சந்நிதானத்திலே சென்று பண்ணவேண்டும். தரிசனத்துக்கு ஆனந்தத் தாண்டவமூர்த்தி. தியானம் பண்ணுவதற்குத் தட்சிணாமூர்த்தி சந்நிதிதான். அவர் கண்ணை மூடிக்கொண்டிருப்பது போல அவரது சந்நிதானத்திலே போய் நாமும் கண்ணை மூடிக்கொண்டு உட்காரவேண்டும். அவருடைய சந்நிதானத்தில் நமக்கும் அந்தர்முகத் தியானம் கிடைக்கும். இப்போதும் நான்கைந்து பாட்டிமார்களாவது தட்சிணாமூர்த்தி சந்நிதானத்தில் போய் ஜபம் பண்ணிக்கொண்டிருக்கிறார்கள். இந்தத் தலைமுறையில் இதுதான் தெரிகிறது. அடுத்த தலைமுறையில் எப்படியோ? அடுத்த தலைமுறையிலாவது நன்றாக இருக்கவேண்டுமென்பது நம் பிரார்த்தனை. பெரியவர்கள் எல்லாருமே, பிரம்மசாரிகள், கிருஹஸ்தர்கள், பஞ்சாட்சர உபதேசம் ஆனவர்கள் எல்லாருமே அந்தச் சந்நிதானத்தில் கொஞ்ச நேரமாவது உட்கார்ந்து ஜபம் பண்ணவேண்டும்.

தட்சிணாமூர்த்தி காட்டும் முத்திரை சின்முத்திரை என்று பெயர். பிட்சாடனமூர்த்தி கீழ் முகமாகக் காட்டிக்கொண்டிருப்பது சன்முத்திரை என்கிறார்கள், ஆகமப் பிரகாரம். நடராஜாவின் முத்திரை ஆனந்தம். இப்படி சத், சித், ஆனந்தம் என்கிற முத்திரைகள் அந்த அந்த அவசரத்திலே வெவ்வேறாக இருக்கின்றன. சோமாஸ்கந்த மூர்த்திக்குக் கையிலே மான் இருக்கும். பிட்சாடனருக்குக் கீழே மான் இருக்கும். இரண்டு விரலால் ஒரு புல்லை அதன் எதிரே காட்டிக்கொண்டு, 'உனக்கு ஒரு வஸ்து இருக்கிறது' என்கிற மாதிரி அமைந்திருக்கும்.

இன்னொரு ராஜா தெற்கே பார்த்துக் கொண்டிருக்கிறார் என்றேன். அவர் நித்திரா முத்திரை உடையவர். நித்திரையில் ஓர் ஆனந்தம் இருக்கிறது அல்லவா? இதுவும் அடங்கின ஆனந்தந்தான். தட்சிணாமூர்த்தியும் தெளிவான அடங்கின ஆனந்தம் உடையவர். ஆனால் இவர்கள் இரண்டு பேருக்கும் அவஸ்தைதான் வேறே.

ஆனந்தக் கூத்துத் தரிசனத்துக்குப் பிரதானமானது. ஒரு சுவாமிக்கு ஒவ்வொரு க்ஷேத்திரம் விசேஷமாக இருக்கும். நடராஜா என்றால் சிதம்பரம். சோமாஸ்கந்தமூர்த்திக்கு திருவாரூர் விசேஷம். தட்சிணாமூர்த்திக்கு ஆலங்குடி விசேஷம்.

எல்லா இடங்களிலும் இரண்டு ராஜாக்கள் எப்போதும் தெற்கே பார்த்துக்கொண்டிருக்கிறார்கள் என்று சொன்னேன். மரண பயம், யமனுடைய வாதனைகள் எல்லாம் நமக்கு இல்லாமல் ரட்சிப்பதற்காக அந்தப் பக்கத்தில் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த மூர்த்திகளுடைய தியானம் நமது சித்தத்திலே சித்தி ஆகிவிட்டால் நமக்கு மரண பயம் இல்லை. நம்முடைய பயத்தைப் போக்கவே நிவர்த்தி மார்க்கத்துக்கு நமக்கு உபகாரம் செய்யத்தான், இவர்கள் இருக்கிறார்கள்.

அட்டைப்படக் கதை:



# உணர்வுகள்

கோமகள்—

கதவருகே திரையாடியது.

தியாகராஜன் நிமிர்ந்தார்.

அங்கே சோமசுந்தரம் நின்றிருந்தார்.

''ஓ! சோமு! வாப்பா வா. என்ன திடீர்னு?'' குரலில் உற்சாகம் ஓங்கக் கூவி வரவேற்றார் தியாகராஜன்.

''உன்னைப் பார்க்க வரணும்னு சொல்லிட்டுத் தான் வரணுமா என்ன?'' என்று உரிமையோடு கூறியவாறே சோமசுந்தரம் உள்ளே வந்தார். அவர் கூடவே குத்துவிளக்கு மாதிரி ஒரு பெண்ணும் நாணத்தின் நகையோடு வந்தாள்.

''அட! இது யாரு? நம்ம உமாவா? அடையாளமே தெரியலையே! வாம்மா!'' என்று அவளையும் வரவேற்றார் தியாகராஜன்.

''என்ன தியாகு! குமார் படிப்பு முடிஞ்சு வேலைக்குச் சேர்ந்துட்டானுமே! கனிந்த பழம் மரத்துக்கும் கனந்தானே? ஒப்படைக்க வந்துட்டேன்.''

''ஓ! நாங்களும் அதற்குத்தானே காத் திருக்கிறோம்?''

உமா, அந்த அறையின் மையத்தில் மாட்டி யிருந்த குமாரின் புகைப்படத்தைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''உட்காரம்மா உமா!'' அழைப்பு மணியை அடித்தார் தியாகராஜன்.

சமையற்கார வேம்பு ஓடி வந்தான்.

''வேம்பு! அம்மாவைக் கூப்பிடு. அப் படியே காபி கொண்டுவா.'' அவனுக்கு உத்தரவிட்டார் தியாகராஜன்.

வேம்பு உள்ளே ஓடினான்.

''உம்! உமாவுக்கு ஹவுஸ் ஸர்ஜன் முடிஞ் சுட்டதா?''

''முடியப் போகிறது. அப்புறம் வேலைக்குக் காத்திருக்கணும். தனியா நர்ஸிங்ஹோம் வைக்கலாமான்னு யோசிக்கிறாள்.''

''பேஷ்! நல்ல யோசனை!'' என்று ஆமோ தித்தார் தியாகராஜன்.

உமா குமாரின் புகைப்படத்தையே பார்ப் பதைக் கண்டு தியாகராஜன் தமக்குள் சிரித்துக் கொண்டார். எடுப்பான நாசி. தீட்சண்யமான கண்கள். மிகுந்த கவனம், ஆழ்ந்த அமைதியைப் பிரதிபலிக்கும் முகம். பொறுப்பையும், கவலையையும் ஏற்றுப் பகிர்ந்து கொள்ளக்கூடிய மனப் பக்குவம் வந்துவிட்டதை உணர்த்தும் அடக்கம். ஓ! அந்தச் சின்னஞ்சிறு உமாவா இவள்?

மெட்டியொலியும், மல்லிகை மணமும் கட்டியம் கூற விசாலம் வருகிறாள்.

''விசாலம்! யார் வந்திருக்கான்னு பாரு!'' என்றார் தியாகராஜன்.

விசாலம் சற்று நிதானித்துப் பார்த்தாள்.

''உமாவையா உனக்குத் தெரியலை விசா லம்?'' என்று ஆச்சரியப்பட்டார் தியாகராஜன்.

''உமாவா? எப்படி வளர்ந்துட்டாள் குழந்தை!'' அன்புப் பிரவாகம் மனம் எங்கும் வழியப் பாசம் பெருக்கெடுக்கும் குரலோடு ஓடிச் சென்று, மரியாதைக்கு எழுந்து நின்ற உமாவை அணைத்துக்கொண்டாள். சற்றுக் கூச்சத்துடன் நெளிந்தவாறே, அவள் அணைப் பின் விடுதலைக்குக் காத்திருந்தாள் உமா.

அதன்பிறகே விசாலம் சோமசுந்தரத்தை வரவேற்றாள்.

''வாம்மா உமா! உள்ளே போகலாம். சீதா ஹாஸ்டல்லே தங்கிப் படிக்கிறாள். இல்லேன்னு உன்னைச் சுத்திச் சுத்தி வருவாள்.''

''சீதாவைப் பார்த்து ரொம்ப நாளாச்சு அத்தை!'' குரலில் இனிமை நிறையக் கூறினாள் உமா.

''அத்தையோடு உள்ளே போ உமா. உனக்கு ஒருவிதத்தில் அத்தை, அம்மாமாதிரி தான்!'' நன்றியோடு பழமையை நினைவு கூர்ந்தார் சோமசுந்தரம்.

அதைப் பெருமையோடு ஆமோதிக்கும் விதமாக விசாலத்தின் முகத்தில் முறுவல் படர்ந்தது.

உமா கூச்சத்துடன் உள்ளே சென்றாள். அவளைச் சோபாவில் உட்கார்த்திவிட்டு உள்ளே சென்ற விசாலம் நேந்திரம்பழங்களைக் கொண்டு வந்து வைத்தாள். ''சின்ன வயசில் உனக்கு ரொம்பப் பிடிக்கும். சாப்பிடும்மா!'' என்று பரிவோடு உபசரித்தாள்.

''தேங்க்ஸ் அத்தை!'' மிருதுவாக முணு முணுத்தாள் உமா.

''ரொம்பக் கூச்சப்படறியே உமா! நான் யாரு? உனக்கு அம்மா மாதிரிதானே? உம்! நீ பிறந்தப்போ, பிரசவ அறையிலேயே உங்கம்மா போய்ட்டாள். நானும் உங்கம்மா ஜானகியும் உயிருக்குயிராய்ப் பழகினவங்க. எனக்கு அப்போது குமார் ரெண்டு மாசத்திய குழந்தை.'' விசாலம் பழைய நினைவுகளின் சுமையில் பெருமூச் செறிந்தாள்.

தான் பார்க்காத தாயின் நினைவு வேதனையை அளித்தது உமாவுக்கு.

''அந்த நேரத்திலே, தான் பிழைக்க மாட்டோம்னு தோணின அந்த நேரத்திலே, பக்கத்திலே கிடந்த உன்னைப் பார்த்து அவ

மனசு பொங்கிப் போச்சு. என் கையைப் பிடிச்சுண்டு 'ஓ'ன்னு குமிறினா. என் குழந்தையை நீ வளர்க்கணும்டின்னு சத்தியம் வாங்கிட்டுப் போனாள் உன் அம்மா. அவ இப்ப இருந்து உன்னைப் பார்த்தாள்னா எப்படிப் பொங்கிப் பூரிச்சுப் போவாள்!'' மிகுந்த ஏக்கத்துடன் கூறினாள் விசாலம்.

''நான் உங்களுக்கு ரொம்பக் கடமைப் பட்டிருக்கேன் அத்தை! உங்க அன்புக்கு எப்படி நன்றி சொல்லி எல்லை காணமுடியும்? அப்பா உங்களைப்பத்தி நிறையச் சொல்லியிருக்கிறார்.'' நாணம் சற்று விலக, சுபாவமாகப் பேசினாள் உமா.

''நீ இந்த வீட்டுப் பெண்ணாகப் போறே; நன்றி சொல்றதாவது ஒண்ணாவது?'' என்றாள் விசாலம்.

உமாவின் முகத்தில் சிந்தூரக் குழம்பு கரைந்தது. மனத்துக்குள் பெருகும் பரவசம் கண்களில் வழியத் தன்னைத் தாயாக நின்று வளர்த்தவளை நெகிழ்ச்சியுடன் பார்த்தாள்.

''வந்ததிலேருந்து குமார் எங்கேன்னு ஒரு வார்த்தை கேட்பேன்னு பார்க்கறேன். கேட்கவே இல்லையே?'' மெல்லச் சிரித்தாள் விசாலம்.

''நீங்களாகச் சொல்லுவீங்கன்னு நானுந்தான் எதிர்பார்த்துக் கிட்டிருக்கேன்!'' சன்னக் குரலில் தன்னை வெளிப்படுத்திக் கொண்டாள் உமா.

''அப்படி வா, வழிக்கு. லைப்ரரிக்குப் போய்ட்டு வரேன்னான். வருகிற நேரந்தான்'' என்று கேலியாகக் கூறினாள் விசாலம்.

''அம்மா! குமார் ஐயா கிச்சன்லே வந்து காபி சாப்பிட்டுட்டு இங்க வந்தாரே'' என்றான் அங்கு வந்த சமையற்கார வேம்பு.

''இங்கே வரக் காணோமே! ஓ! வாசல்லயே உங்கப்பாவைப் பார்த்ததும், வெட்கப்பட்டுக் கிட்டு இங்கே வராமப் போய்ட்டானா? குமார்! குமார்! இங்கே வாயேன்'' என்று அழைத்தாள் விசாலம்.

''இதோ வரேம்மா!'' பக்கத்து அறையிலிருந்து அவன் குரல் கேட்டது.

இத்தனை நேரமும் அவர்கள் பேசியதை அவன் கேட்டுக்கொண் டிருந்தானோ?

குமார் அவர்கள் இருப்பிடம் வந்தான். உமா எழுந்து கொண்டாள்.

''வா உமா! சௌக்கியந்தானே?''

தன் எதிரே வலிமையும், வனப்பும் ஒருங்கிணைந்த வண்ணம் நிற்கும் குமாரைப் பார்த்துத் தலையாட்டினாள் உமா.

''இப்படி உட்காருடா குமார்! உமா! நீயும் உட்காரும்மா'' என்றாள் விசாலம்.

குமார், உமாவின் எதிரில் அமர்ந்துகொண்டான்.

பூத்த மலரைப் போல், புன்னகையும், கனிவுமாக அவனைப் பார்த்தாள் உமா. அவள் பார்வையில் நம்பிக்கையின் இனிமைகளும், நயத்தின் பரிசயங்களும் கலந்திருந்தன. யௌவனத்தின் சோபையில் அழகின் முத்திரைகள் மேனியெங்கும் பளிச்சிட நின்ற உமாவைப் பார்த்துக் குமார் மெல்லச் சிரித்தான்.

''என்னடா சிரிக்கறே?'' என்றாள் விசாலம்.

''இந்த உமாவைக் குச்சிச் சடையும், குட்டைக் கவுனுமாய்க் கற்பனை செய்து பார்க்கிறேன்ம்மா. எப்போது பார்த்தாலும் டமார் டமார் என்று கீழே விழுந்து விட்டு முழங்கால் சிராய்ப்போடு 'ஹோ' வென்று அழுவாளே! அடிக்கடி ஜுரம் வந்துடும். மிக்சர் வாங்கித் தந்தால் 'க்கச்சக்குது!'ன்னு கண்ணைக் கசக்கிக்கொண்டு ஓடுவாளே! அதையெல்லாம் நினைச்சால்,.. அந்த உமாவா இன்னிக்கு டாக்டர் உமாவா..சாது உமாவா.. அழகு உமாவா.. இருக்கான்னு, பிரமிப்பாயிருக்கு.'' பழைய ஞாபகங்களைக் கிளறினான் குமார்.

உதட்டைச் செல்லமாகக் கடித்தவாறே சிரித்தாள் உமா.

''என்ன உமா! என்னுடைய சேஷ்டைகளைப் பற்றி நீ என்ன சொல்லப் போறே? சொல்லேன்'' என்று தூண்டினான் குமார்.

''கால் சட்டையை இழுத்து இழுத்து விட்டுக்கொண்டு பரட்டைத் தலையும், அழுக்கு மூஞ்சியுமாய்ப் பேட்டையும், பந்தையும் வைத்து ஆடிக்கொண் டிருப்பீங்களே! கொய்யா மரத்திலே ஏறிட்டு, கீழே இறங்கத் தெரியாம முழிச்சிட்டு நிப்பீங்களே! கோவத்திலே சிவப்பு இங்க் பாட்டிலை என் தலைமேலே சாய்ச்சுட்டு என்னை அழ வைப்பீங்களே! இப்படி எல்லாம் கேட்கத் தோணுதில்லே உமா?'' என்று தன்னைப் பற்றிய நிகழ்ச்சிகளையும் தானே அடுக்கினான் குமார்.

''நான் அப்படியெல்லாம் கேட்கலியே?'' 'களுக்'கெனச் சிரித்தாள் உமா.

''உன் மனசிலே அப்படியெல்லாம் தோணறது இல்லையா?''

''கொஞ்சம் கொஞ்சம்!'' என்று தயக்கத்தோடு ஒப்புக் கொண்டாள் அவள்.

''ஆக நாம ரெண்டு பேருமே இப்போது சின்ன வயசு விளையாட்டுக்களை நினைச்சு அசை போடறோம்; இல்லையா உமா?''

உமா கலகலவென்று சிரித்தாள். இத்தனை நேரம் அவள் முகத்தில் ஓடியிருந்த தயக்கமும், தன்னைக் காட்டிக் கொள்ளக் கூடாத வெட்கமும் மேகம் வெளிவாங்கினாற் போல் சற்றுக் கலைந்திருந்தன.

விசாலத்தின் நெஞ்சில் அன்பும், பரிவும் பொங்கி வழிந்தன. இந்த இரண்டு சிறுசுகளும் வாழ்க்கையை அமைத்துக் கொண்டு குறைவற்று வாழவேண்டும் என்று தனக்குள் ஆசி வழங்கினாள். ''பேசிக்கொண் டிருங்கள், வருகிறேன்'' என்று கூறிவிட்டு அவ்விடத்தை விட்டகன்றாள் அவள்.

ஒவ்வொன்றிலும் குமார் கொண்டிருந்த ஆழ்ந்த ஈடுபாட்டையும் அதன் பலனாய் ஏற்ற ஒரு தீர்மானமான மாறுபடாத கருத்துக்களையும் வரவேற்றாள் உமா.

''உனக்கு விளையாட்டில் விருப்பம் இல்லை போல் தெரிகிறதே உமா?''

''ஆமாம்! என்னுடைய வேலையின் தன்மை அப்படி. அலுத்துக் களைத்து வரும்போது, ஓய்வோடு ரசிக்கும் ரேடியோ, சங்கீதக் கச்சேரி, டி.வி. போன்றவையே மனத்துக்கு இதம் அளிக்க முடியும்.''

''உண்மைதான்!'' அவளை ஆமோதித்தான் குமார்.

''உங்களைப் போல் எல்லாவற்றிலும் ஒரு தீர்மானமான அபிப்பிராயம் எனக்கு இல்லை. நிரூபிக்கப்படும் ஆதாரபூர்வமான மாற்றங்களை நான் படிக்கும்போதோ, கேட்கும்போதோ அவற்றை ஏற்றுக் கொள்ளும் மனப்பக்குவம் பெற்றவள்.'' தன்னை முழுவதுமாக வெளியிட்டுக்கொள்ள வேண்டும், அதன் மூலம் தன் சிறப்பியல்புகளையும் அவன்

உணர்ந்துகொள்ள வேண்டும் என்ற ஆசையில் கூறினாள் உமா.

"நீ நன்றாகப் படிப்பாய் என்பதை நான் கேள்விப்பட் டிருக்கிறேன் உமா!" என்றான் குமார்.

அவள் கண்கள் சுடர்விடக் கேட்டாள்: "யார் சொன்னது?"

"உன் கிளாஸ்மேட் விமலா என் நண்ப னின் தங்கை. அவள் கூறியதாக என் நண்பன் கூறினான்."

'அப்படியா? என்னை நினைவில் வைத்துக் கொண்டு கேட்டீர்களா?' என்பது போல் அவனைப் பார்த்தாள் உமா.

அந்த நோக்கில் தென்பட்ட ஏதோ ஒன்று புரிந்ததுமே குமார் தூரப் பார்வையைத் திருப்பிக் கொண்டான்.

உமாவும், அவள் அப்பாவும் புறப்பட்ட போது அவர்களை டாக்ஸியில் ஏற்றிவிட்டு விட்டு, நண்பன் வீட்டுக்குச் சென்றுவிட் டான் குமார்.

அவன் வீடு திரும்பும்போது இரவு பத்து மணிக்கு மேலிருக்கும். எப்போதுமே அந்த நேரத்தில் அப்பாவும், அம்மாவும் தூங்கிவிட் டிருப்பார்கள். வேம்பு மட்டும் எழுந்து வந்து அவன் உணவை மேசைமீது வைத்துவிட்டுப் போய் மீண்டும் சுருண்டு கொள்வான்.

அன்று அவன் நுழையும்போது ஹாலில் விளக்கு எரிந்துகொண் டிருந்தது. வியப் போடு அவன் உள்ளே நுழைந்தபோது அப்பா வும் அம்மாவும் தாழ்ந்த குரலில் ஏதோ பேசிக்கொள்வது தெரிந்தது. அவனைக் கண் டதும் அப்பா எழுந்துவிட்டார். குமாருக்கு ஏதோ புரிவது போல் இருந்தது.

அவன் உள்ளே வந்ததும் உணவு மேசை யருகே வந்து உட்கார்ந்தாள் விசாலம். குமார் தட்டில் சாதம் பிசையும்போது, "உமா எப்படிடா இருக்கா?" என்று சாதா ரணமாகக் கேட்பதுபோல் கேட்டாள்.

"உமாவுக்கு என்ன! அழகாத்தான் இருக்கா!" என்று பதில் அளித்தான் குமார்.

ஒரு திருப்தியான புன்னகை உதிர, "அவங்க எதற்கு வந்தாங்க தெரியுமா?" என்றாள்.

"அதுக்கு ஒரு காரணம் வேணுமாம்மா?" என்றவாறே தயிரைக் கைகளில் விட்டுச் சுவாரசியமாக உறிஞ்ச ஆரம்பித்தான் அவன்.

"என்னடா அப்படிச் சொல்லிட்டே! உனக்கு உமாவைப் பிடிச்சிருக்கான்னு தெரிஞ்சுக்க வந்தார், அவள் அப்பா. இதிலே மறுக்கவோ, பிடிக்காமப் போகவோ என்ன இருக்கு? உனக்கும் படிப்பு முடிஞ்சாச்சு. நல்ல வேலையிலேயும் அமர்ந்தாச்சு. இனிமேல் வாழ்க்கைன்னு ஒன்றை அமைச்சுக்கறதுதானே அடுத்தபடி? சீக்கிரமே உங்களுக்குக் கல் யாணத்தை முடிச்சுடறேன்டா.."

"அம்மா!" என்று குறுக்கிட்டான் குமார்.

"இன்னும் கொஞ்சநாள் போகட்டுங்கறயா என்ன?"

"இல்லேம்மா..." என்று தயங்கியவாறே நிறுத்தினான் குமார்.

"என்னடா! சொல்லேன்." தூண்டினாள் விசாலம்.

"உமாவோட அம்மா அவள் பிறந்ததுமே இறந்துட்டான்னு சொல்லுவியே அம்மா.."

"ஆமாம்! அப்புறம் அவளை நான்தான் வளர்த்தேன்." பெருமையோடு கூறினாள் விசாலம்.

"ஒருகால் நான் அப்போது பிறந்திருக்க லேன்னா நீ உமாவை வளர்க்க முடியாதில் லையா?" என்றான் குமார்.

"எப்படி முடியும்?" ஆமோதித்தாள் விசாலம்.



''உமாவை நீ பெறவில்லேன்னாலும், எனக்கும் அவளுக்கும் ஒரே நேரத்திலே நீ தாயாத்தான் இருந்திருக்கே; இல்லையாம்மா?'' என்று எதையோ சுட்டிக் காட்ட முயன்றான் அவன்.

''ஆமாம்!'' என்ற விசாலம் அவனைக் குழப்பத்தோடு பார்த்தாள். ''அவளைப் பிடிக்கலேன்னு காரணம் சொல்லப் போறியா?''

''காரணம் ஒண்ணு இருக்குங்கறதைச் சொல்லியாகணுமே அம்மா!'' என்றவாறே குமார் தாயை நிமிர்ந்து பார்த்தான்.

விசாலத்தின் முகம் என்னவோ போலாகிவிட்டது. மேற்கொண்டு அவன் என்ன கூறப் போகிறானோ என்ற குழப்பத்தோடு அமர்ந்திருந்தாள்.

''அம்மா! என்னை நீ எத்தனை அன்புடன், பாசத்துடன் பசியாற்றினாயோ அதே அளவு அன்பும், பாசமும் இருந்திருந்தால்தான் வேறு ஒரு குழந்தையை நீ எடுத்து அமுதூட்டியிருக்க முடியும். அப்படி என்னையும் உமாவையும் ஒரு மடியில் அமுதூட்டிக் கண் வளர்த்தி வளர்த்த நீ, இன்று எப்படி யம்மா தம்பதியாக வாழவேண்டும் என்று எங்களை மனசு துணிந்து வாழ்த்த முன் வருகிறாய்?'' தட்டில் கையைக் கழுவியவாறே கூறினான் குமார்.

''குமார்! என்னடா சொல்றே?'' அதிர்ச்சியோடு வினவினாள் விசாலம்.

''உமாவை எனக்குப் பிடிக்கிறது அம்மா! அவள் நல்ல பெண். ஆனால் உன் கோணத்தில் அவளை நினைக்கவே எனக்குக் கூசுகிறது. அது என்னால் முடியாது. என் மனசு புரிஞ்சு இது விஷயமாக மீண்டும் வற்புறுத்த மாட்டேன்னு நினைக்கறேன்.'' தீர்மானமாகக் கூறிவிட்டான் குமார்.

''அவர்களுக்கு என்னடா பதில் சொல்றது?'' சங்கடப்பட்டாள் விசாலம். ''என்னிக்கோ தீர்மானிச்ச விஷயமாச்சே?''

''சீதா மாதிரிதானே உனக்கு உமாவும்? சீதா எனக்குத் தங்கைன்னா உமாவும் அப்படித்தானே? உண்மையைச் சொல்லிடும்மா.'' முடிவாகக் கூறிவிட்டு மாடியேறினான் குமார்.

ஆபீஸ் பையன் ஒரு காகிதத் துண்டைக் குமாரின் மேசைமேல் வைத்தான்.

அதில், ''டாக்டர் உமா!'' என்று எழுதியிருந்தது.

''இந்த அம்மா ரிசப்ஷனில் உட்கார்ந்திருக்கிறார்கள் ஸார்!'' என்றான் ஆபீஸ் பையன்.

என்னவோ போலிருந்தது குமாருக்கு. இது விஷயமாக நேரடியாகவே உமாவுடன் பேசும்படி நேரும் என்று அவன் நினைக்கவே இல்லை. எப்படி அவளிடம் பேசலாம் என்று வார்த்தைகளை யோசித்தவாறே அவள் இருப்பிடம் வந்தான்.

அவனைக் கண்டதும் உமா எழுந்தாள்.

''உட்கார் உமா!'' என்று கூறித் தானும் உட்கார்ந்தான் குமார்.

சற்று நேரம் கொடுமையான மௌனத்தை இருவரும் பகிர்ந்து கொண்டனர்.

''உங்கள் அலுவலக நேரத்தை நான் வீணாக்க விரும்பவில்லை குமார்! நான் எதற்கு வந்திருக்கிறேன்னு உங்களுக்குப் புரிகிறதா?'' சொற்களில் சுகந்தம் மீத அப்போல் மிருதுவான பொலிவுடன் ஆரம்பித்தாள் உமா.

தன்னைச் சோகமாக்கிக் கொள்ளாமல், தன் குரலைத் தழுதழுப்பாக்கிக் கொள்ளாமல் அவள் பேசிய விதத்தை அவன் மனத்துக்குள் வரவேற்றான்.

''புரிகிறது உமா..! ஆனால்..'' மேற்கொண்டு எந்த விதமாகத் தொடருவது என்பது புரியாமல் நிறுத்தினான் குமார்.

''சில போது இயல்பாக நடப்பவை கூட முறையான காரணங்களுக்கு நேரான பொருள் கூறுவது போல் அமைந்துவிடும். தவிர இது 'சென்டிமென்ட்'லான விஷயம் உமா! ஒவ்வொருவருக்கும் ஒரு மாதிரி தோன்றக்கூடிய விவகாரத்தில், அதைக் கண்டு அஞ்சுபவனை அங்கீகரிக்க வேண்டும். ஒரு தாயின் வள்ளன்மைக் குணத்தை ஒரு கொடுமையான சோகத்தில் சித்திரித்துக் காட்ட முயல்கிறேன் என்று நினைக்க மாட்டாயே?''

உமாவின் முகத்தில் பேசத் துடிக்கும் பாவம் தெரிந்தது. ஆனாலும் பேச்செழாப் பிரமிப்பில் ஆழ்ந்தாற்போல் வார்த்தைகள் நடுவில் சிக்கியவளாய், ''எனக்கு..எனக்கு என்ன பேசறதுன்னே தெரியலே..'' என்று முணுமுணுத்தாள்.

''என்ன நினைக்கிறேன்னு சொல்லு உமா!'' அவளுக்குப் பேசும் துணிவை ஊட்ட முயன்றான் குமார்.

''என்னுடைய வேலையை எவ்வளவு சுலபமாக ஆக்கிவிட்டீர்கள்! உண்மைதான் குமார்! உங்களால் உணர்ச்சிகளை விண்டுரைக்கவும், அதை விளக்கிக் கூறவும் முடிகிறது. நான் பொய்கை நீர் மெல்லக் கரையில் புரள்வதுபோல் தயங்கிக்கொண் டிருந்தேன்.'' உமா மனம் விட்டுப் பேசினாள்.

''உமா!'' என்று வியப்போடு அழைத்தான் குமார்.

''நீங்கள் அத்தையிடம் கூறியதை எல்லாம் என்னிடம் கூறினார்கள். அதே மாதிரிதான் நானும் எனக்குள் ஒரு தீர்மானத்தைச் சுமந்திருந்தேன். ஆமாம் குமார்! நான் என்னவெல்லாம் நினைத்தேனோ, என்னவெல்லாம் சொல்லியிருக்க வேண்டுமோ, எதைச் சொன்னால் என் உணர்வைப் பிறர் மதித்து ஆமோதிப்பார்களோ, அதை நீங்களே செய்து விட்டீர்கள். துளிச் சிரமம் கூட, துளி மனக்கிலேசம் கூட எனக்கு இல்லாமல் செய்துவிட்ட உங்களுக்கு நன்றி கூற மட்டும் நான் வரவில்லை. என் மனசைப் பற்றி நீங்கள் ஏதேனும் ஐயம் கொண்டிருந்தாலும் விளக்கிக் கூறவே வந்தேன்'' என்றாள் உமா தன் வழக்கமான, மிருதுவான குரலில்.

''உமா! உமா! மெய்யாகவா? நீ என்ன நினைத்திருக்கிறாய் என்பது புரியாமல் உன்னைப் புண்படுத்தி விட்டேனோ என்றுதான் நானும் வருந்திக்கொண் டிருந்தேன். நீ என்னைப் புரிந்துகொண் டிருப்பதைப் போலவே, நானும் உன்னை இந்த நிமிஷமே புரிந்து கொள்கிறேன் உமா. நம் இருவர் உணர்ச்சிகளும் சகோதர பாசத்துடன் சங்கமிப்பதை மற்றவர்களும் உணர்ந்து கொள்வார்கள். என் மனம் இப்போதுதான் நிம்மதி அடைகிறது.'' மனப் பாரம் நீங்கியவனாக மொழிந்தான் குமார்.

★




அன்புள்ள சிரஞ்சீவி ராஜகோபாலனுக்கு அம்மா ஆசீர்வாதம்.

'சிரஞ்சீவி' என்று எழுதும்போது இன்று ஒன்று தோன்றுகிறது. உலகத்தில் யார்தான் சிரஞ்சீவி? அன்றாடம் மனிதர்கள் இறப்பதைப் பார்க்கிறோம். மகாபாரதத்தில் தர்மபுத்திரர் சொன்னது போல் இங்கு நான் சொல்ல வரவில்லை. என்னை அவ்வளவு உயர்ந்தவளாய் நான் கருதிக்கொள்ளவில்லை. ஆனாலும் அவருக்கு எழுந்த சிந்தனையைப் போல் மற்ற யாருக்கும் ஏதாவது ஒரு சமயமாவது தோன்றக்கூடாதா என்ன? மிகமேலோருக்கும், மிகக் கீழோருக்கும் மனிதத்தன்மை என்ற அம்சம் பொதுதானே? உலகத்தவர் எல்லாருமே மகான்கள் அல்ல; ஆனால் மகான்களின் குடும்பத்தார். அதற்கு ஒரு மதிப்பு உண்டு.

என்ன சொல்ல வந்தேன்? வலி அதிகமானால் மருந்தை எல்லாம் விழுங்கிக்கொண்டிருக்கிறேன். வியாதி என்னை விழுங்கிக்கொண்டிருக்கிறது....ஆமாம், சிரஞ்சீவி...தினம் மரணங்களைப் பார்த்து வந்தும் - ஏன், இந்த உடலையே மரணத்தின் வித்து ஊன்றி வளரும் ஒரு மரமாகச் சுமந்துகொண்டிருந்துங்கூட - இன்னொருவரைச் சிரஞ்சீவி என்று சொல்ல முடிகிறதென்றால் அது விசித்திரமாக இல்லையா? ஆனாலும் அது பொய்யாக ஒலிக்கவில்லையே! அப்படியானால் சிரஞ்சீவி என்பது நாம் பார்க்கும் வாழ்வையும் மரணத்தையும் கடந்த ஏதோ ஒரு நித்தியத்தைக் குறிக்கிறது என்று நினைக்கிறேன். அந்தப் பெரியதையே ஒவ்வொரு தாயும் தன் பிள்ளைக்கு விரும்பி ஆசீர்வதிக்கிறாள், அவனைச் சிரஞ்சீவி என்று சொல்லும்போது.

சிரிக்கிறாயா ராஜகோபாலா? எனக்கும் சிரிப்பு வருகிறது. இன்று என்ன நான் இப்படியெல்லாம், திடீரென்று? நீ வேலையாகி வெளியூர் போன நாளாய் உனக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருக்கிறேன். வாரத்துக்கு ஒன்று தவறாமல் எழுதுகிறேன். உன் அப்பா உயிரோடு இருந்த காலத்தில்கூடக் கடிதம் எழுதும் வேலை எப்போதும் என்னுடையதுதான். ஒவ்வொரு கடிதத்தையும் 'சிரஞ்சீவி' என்றுதான் ஆரம்பிக்கிறேன். ஆனால் இன்று என்னவோ புது வழக்கமாய் இப்படியெல்லாம் அந்த வார்த்தையை ஆராய்ந்து கொண்டிருக்கிறேன். இப்போதெல்லாம் என்னவோ தெரியவில்லை, எதைப் பார்த்தாலும் அதைத் தாண்டி ஏதேதோ காட்சிகளும் அர்த்தங்களும் தெரிகின்றன. புதிதாக இரண்டு கண்களை வாங்கிக்கொண்டு வந்துவிட்டாற்போல் இருக்கிறது. நேற்று அப்படித்தான், நம் வேலைக்காரி அஞ்சலை கூடத்தைப் பெருக்கிக்கொண்டிருந்தபோது பார்த்தேன். அவளை இன்று நேற்றா தெரியும்? ஐந்து வருஷமாக நம்மிடம் வேலை பார்க்கிறவள். என்னவோ திடீரென்று நேற்று அவளைப் பார்த்தபோது 'நம்ம அஞ்சலை இத்தனை அழகானவளா?' என்று பிரமித்துப் போய்விட்டேன். அதே ஆனால் எல்லாம் புதிதுமாதிரி தோன்றின. எங்கிருந்தோ அழகுகள் வந்து அவள்மேல் உட்கார்ந்துகொண்டு விட்டன. இப்போதெல்லாம் அடிக்கடி இப்படித்தான் எதைப் பார்த்தாலும், எதை நினைத்தாலும் இப்படிப் புதிய தோற்றங்கள். வலியிலிருந்துதான் அழகு பிறக்கிறதா? என் வயிற்றில் வலி அதிகமாக ஆக உலகமே இப்படி மாறிப் போவானேன்? மரணம் ஒவ்வொருவரையுமே கவியாக்கி விடுகிறதா?..என்னென்னவோ எழுதுகிறேன் இல்லை? அம்மா சரியான லூஸ் என்று நினைத்துக்கொள்கிறாயோ? இப்படியெல்லாம் எழுதப் போகிறேனென்று நானே நினைக்கவில்லை. காகிதத்தில் பேனாவை வைத்து அதன் போக்குக்கு விட்டுவிட்டேன். அதன் உள்ளே அடைத்திருப்பது மசியா அல்லது எண்ணங்களா என்னும்படி அது பாட்டுக்கு ஏதேதோ எழுதிக்கொண்டே போகிறது. நான் பேசாமல் அதைப் பின்தொடர்ந்து போகிறேன்.

வலிக்கிறதடா ராஜகோபாலா! இப்போதெல்லாம் ரொம்பவும் வலிக்கிறது. ஆனால், ஏன் வலிக்கக்கூடாது? ராமகிருஷ்ணருக்கும் ரமணருக்கும் வலிக்கலாமென்றால் கேவலம் இந்தத் தங்கம்மாவுக்கு வலிக்கக்கூடாதா? உயர்ந்தவர்களையும் தாழ்ந்தவர்களையும் ஒரே மனித குலத்தவர்களாக்குவது சிந்தனைகள் மட்டும் அல்ல, நோவும் மரணமுங்கூடத்தான்.

சாரு என்னை ரொம்ப நன்றாய்க் கவனித்துக்கொள்கிறாள். நான் அவள் தாயல்ல, அவளுடைய குழந்தை என்கிறாப்போல் கண்ணுக்குள் வைத்துக் காப்பாற்றுகிறாள். இந்த வலியை இன்னொருவர் வாங்கிக்கொள்ள முடியாது; அதைத் தவிர மற்ற எல்லாம் செய்கிறாள். ஒன்றுவிட்டு ஒரு நாள் கரண்ட் வைத்துக் கொள்ள என்னை இன்ஸ்டிட்யூட்டுக்கு அலுக்காமல் சலிக்காமல் அழைத்துப் போவது மட்டும் இல்லை. வீட்டிலும் மருந்துகளை அளவோடு கொடுத்தபின் அலமாரியில் வைத்து ஜாக்கிரதையாய்ப் பூட்டிவிட்டு அஞ்சலையை என் பக்கத்தில் உட்கார்த்திவிட்டே வேலைக்குப் போகிறாள். எங்கே வலி பொறுக்காமல் தூக்க மாத்திரைகளை வேண்டுமென்றே நிறையச் சாப்பிட்டுவிடுவேனோ என்று பயம்! பைத்தியக்காரி. வாழ்க்கையின் எந்தக் கட்டத்தையும் நான் உதாசீனம் செய்ய

அங்கங்கள் என்றால் அவை தம் இஷ்டம் போல் உரிய காலத்தில் என்னை ஆக்கிரமித்துக் கொள்ளட்டும். வாழ்வில் நான் நிறையச் சந்தோஷத்தை அடைந்திருக்கிறேன். அதே வாழ்வு இப்போது நோவைக் கொடுத்தால் அதை மட்டும் ஒதுக்கிவிட்டுத் தப்பியோடி விடுவேனா? விளையாட்டுப் பருவத்தில்கூட நான் ஒருபோதும் தோற்றுப் போய்க்கொண்டிருக்கிறோமே என்பதற்காகப் பாதி ஆட்டத்தில் எழுந்து போனது கிடையாது. அழகு என்பது வெள்ளையாக மட்டுமல்ல, கறுப்பாகவும் இருக்கும் என்பதைப் புரிந்துகொண்ட இந்த வயதிலா அதைச் செய்யப் போகிறேன்?

ஆனால் சாருவுக்கு, பாவம், இது எப்படித் தெரியும்? அவள் பயந்து பயந்து என்னைப் பாதுகாக்கிறாள். தேய்பிறைச் சந்திரனை இரண்டு கைகளாலும் பற்றி நிறுத்த முயல்கிறாள். அவள் கவனிப்பை மீறிக்கொண்டு அடுத்த நாள் அது இன்னும் கொஞ்சம் தேய்கிறது. ஒரு நாள் அது முழுவதும் மறைந்தே போய்விடும். இதனால் அவள் கவனிப்பின் மதிப்புக் குறைந்துவிட்டது என்று அர்த்தம் அல்ல. தொழில் முறையாகவும் நர்ஸ் அல்லவா? நம் அம்மா என்ற பாசத்தோடு கூடப் பயிற்சியின் திறமையும் சேர்ந்து அவள் எனக்குச் செய்யும் பணிவிடைக்கு நான் அவள் வயிற்றில் குழந்தையாய்ப் பிறந்து சேவை செய்தால்தான்.... ஆனால் அது எங்கே? அவள்தான் கல்யாணம் என்றாலே சண்டைக்கு வருகிறாளே! அந்த விஷயத்தில் அவள் மனம் மாறவேயில்லை. நான் கண்ணை மூடுவதற்குள் அவளுக்கு ஒரு நல்ல காரியம் ஆகுமோ என்னவோ! அப்புறமாவது பண்ணிக்கொண்டாளானால் சரி. நீதான் பார்த்துப் பண்ணி வைக்கவேண்டும். உனக்கு ஒரு நல்ல மனைவி வாய்த்ததுபோல் அவளுக்கு ஒரு நல்ல கணவன் வாய்க்க வேண்டும். நல்லவர்கள் கல்யாணம் செய்துகொண்டு குழந்தைகளைப் பெற வில்லையானால் உலகத்தின் தரம் என்ன ஆகும்? யானைகள் பெருகாவிட்டால் பன்றிகள்தான் பெருகும். இதைச் சொன்னால் அவள் கேட்பதில்லை. மூன்று மாதத்துக்குமுன் அவளை வந்து பார்த்துவிட்டுப் போனானே ஒரு வரன் - என் வற்புறுத்தலுக்காக அவர்கள் வர இவள் ஒப்புக்கொண்டாள். அந்தப் பையன், இவளைத் தான் செய்துகொள்வேன் என்று ஒற்றைக் காலில் நிற்கிறானாம்; இல்லாவிட்டால் கல்யாணமே வேண்டாம் என்கிறானாம். இவள் மறுத்துவிட்டாலும் அவன் பிறகு வேறெந்தப் பெண்ணையும் பார்க்கவில்லையாம். இவள் மனசு மாறினால் எத்தனை நன்றாக இருக்கும்!

சுருக் சுருக் என்று வயிற்றுக்குள் வலி குத்துகிறதடா ராஜகோபாலா! வலியோடு கூடக் கரன்ட்டின் எரிச்சல் வேறு. பாராட்டக்கூடாதென்றுதான் பார்க்கிறேன். ஈசுவரன் சிரித்துப் புரமெரித்தது நாம் எல்லாம் கஷ்டங்களைச் சிரித்துச் சமாளிக்க வேண்டும் என்பதை உணர்த்தவே என்று நினைக்கிறேன். முன்பெல்லாம் சுலபமாயிருந்தது. இப்போது அப்படி இல்லை. வலி அதிகம்... இந்த மாதிரி சமயங்களில் உலகமே நழுவிப் போய்விடுகிறது.

என் விஷயம் கிடக்கட்டும். பல வருஷங்களுக்குப் பிறகு சமீபத்தில் ஒரு நாள் உன் அத்தை வந்திருந்தாள். சுலோசனா உங்களையெல்லாம் விசாரித்தாள். பாவம், ரொம்பக் கஷ்டப்படுகிறாள்.

ஏதேதோ எழுதிக்கொண்டு போகிறேனே, உன்னைப்பற்றி நான் கேட்கவே இல்லையேடா குழந்தை! நீ சௌக்கியமாய் இருக்கிறாயா? ஒவ்வொரு வாரமும் இப்படி விசாரித்தாலும் எனக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. 'நான் சௌக்கியம் அம்மா' என்று நீ சொல்லிக்கொண்டே இரு. எனக்கு அதுதான் தேவகானம். 'உனக்குப் பிள்ளைதான் உசத்தி' என்று சாரு சொல்கிறாள். அது உண்மை தானா? எனக்கு நீதான் உசத்தியா, ராஜகோபாலா? உன்னை நான் கூப்பிடும் விதத்தையே பாரேன்! எல்லாரையும்போல் உன் பெயரைச் சுருக்கி ராஜு என்று கூப்பிட எனக்கு எப்போதுமே பிடித்ததில்லை. சாரதா என்ற பெயரை மற்றவர்களைப்போல் சாரு என்று சுருக்குகிறேன். ஆனால் நீ எனக்கு என்றுமே ராஜகோபாலன்தான். உன்னை அழைக்கும்போது என் வாயில் அந்தப் பெயர் அப்படிப் பெரிதாக விரிவது உனக்காக என் வயிறு விரிந்ததற்குச் சமமாய் இருக்கிறது!

போன மாதந்தான் நீ வந்துவிட்டுப் போனாய். அதற்குள் மறுபடியும் உன்னைப் பார்க்கவேண்டும்போல் இருக்கிறது. எனக்குத்தான் எத்தனை பேராசை பாரேன்! உன் உத்தியோகம் என்ன ஆகும் என்ற கவலைகூட இல்லாமல் எத்தனை சுயநலம் எனக்கு! ஆனால் என் கண்கள் என் பேச்சைக் கேட்கவில்லை. மறுபடியும் எப்போது உனக்கு லீவ் கிடைக்கும்? பம்பாயில் இப்போது அடைமழையாமே? நனையாமல் ஜாக்கிரதையாய் இரு. வெளியே போகும்போது மறந்துகூட ரெய்ன்கோட் போட்டுக்கொள்ளாமல் போய் விடாதே. இங்கேயும் இந்த மாதம் நல்ல மழை. நம் தோட்டத்தில் செடிகள் பூத்துக் குலுங்குகின்றன. அதைப் பார்க்கும்போது உங்களையெல்லாம் நினைத்துக்கொள்கிறேன். ஒரு பூ என் ராஜகோபாலன், இன்னொன்று சாரு, இன்னொன்று என் நாட்டுப் பெண், இன்னொன்று என் பேரன், இன்னொன்று இனி வரவேண்டிய என் மாப்பிள்ளை, இன்னொன்று மறைந்துபோன உன் அப்பா, இன்னொன்று மறுபடியும் என் ராஜகோபாலன்... சாரு குற்றம் சாட்டுவது சரிதான்போல் இருக்கிறது!

உடம்பைப் பார்த்துக்கொள். உன் அகமுடையாள் சௌக்கியமா? குளித்துக்கொண்டிருக்கிறாளா? குழந்தை எப்படி இருக்கிறான்? அவனுக்குப் 'பாட்டி முத்தம்' என்று எனக்காக ஒரு முத்தம் கொடு. நேற்றுப் புடலங்காய்ப் பால்கூட்டுச் சாப்பிடும்போது உனக்குப் பிடிக்குமென்று நினைத்துக்கொண்டேன். நீ மறுபடியும் எப்போது வருவாய் ராஜகோ..

....அம்மா வலியில் துவண்டு சாய்ந்து விட்டாள். பேனாவைப் பிடித்து எழுத முடியவில்லை. ஆகவே கடிதத்தை நான் தொடர்ந்து எழுதுகிறேன். இந்தக் கையெழுத்து மாற்றம் இன்னும் எவ்வளவு பெரிய மாற்றத்துக்கு முன்னோடி! சிறிது சிறிதாய் உடல்நிலை மோசமாகி இப்போது கடிதங்கூட எழுத முடியாத அளவுக்கு அம்மாவின் வலி அதிகரித்துவிட்டது. நோயின் வளர்ச்சியில் இன்னுமொரு படி. இனி அம்மாவால் மறுபடியும் கடிதம் எழுத முடியுமோ என்னவோ?

வந்து சேரப்போகும் இது அவள் கடைசிக் கடிதமாகவே இருக்கலாம். இனி அவள் எவ்வளவு நாள் நம்மோடு இருக்கப்போகிருள், அண்ணு! கோபால்ட் 'தெரபி'யில்கூட ஒன்றும் பயனில்லை. கூடிய சீக்கிரமே மார்ஃபியாவில் வைக்கும்படி ஆகிவிடும்.

அம்மாவுக்கே தான் எத்தகைய நோய்க்குப் பலியாகியிருக்கிருளென்று தெரியும். இந்த வலி தன்னை எங்கே இழுத்துப் போகிறதென்று அவளுக்குத் தெரியும். தான் பிழைக்கப் போவதாக அவள் தன்னையே ஏமாற்றிக்கொள்ளவில்லை. ஆனல் அவள் முகத்தில் புன்சிரிப்பு மாறவே இல்லை, அண்ணு! அம்மா முகத்தின் அவயவங்கள்... இரு கண்கள், இரு காதுகள், இரு கன்னங்கள், ஒரு மோவாய், ஒரு நெற்றி, ஒரு மூக்கு, ஒரு வாய், ஒரு புன்னகை. சாகத் தயாராகிவிட்டால் அப்புறம் எல்லாமே ஒரு சிரிப்புத்தானு? முறையான மன வளர்ச்சி பெற்று வருபவர்கள், அழுகையில் பிறந்தாலும் சிரிப்பில்தான் இறக்கிருர்களா?



அம்மா எதற்குத்தான் சிரிக்கவில்லை? உனக்கு நினைவிருக்கிறதா அண்ணு? போன தடவை நீ வந்திருந்தபோது என்னிடம் சொன்னுய்: 'நீங்க ரெண்டுபேரும் என்கூட பாம்பேக்கு வந்துடுங்கோ சாரு. அம்மாவுக்கு அங்கே இன்னும் நல்ல வைத்தியம் பார்க்கலாம். அங்கே இல்லாட்டா, உலகத்திலே இதுக்கு எங்கே வைத்தியம் இருந்தாலும் நான் அழைச்சுண்டு போகத் தயார். செலவு பொருட்டில்லே.' நீ அப்படிச் சொன்னது தெரிந்து அம்மா பிறகு உன்னிடம் சொன்ஞளே, 'உலகத்திலே யமன் நுழையாத இடமாய் ஏதோ பார்த்து வச்சிருக்கியாமே ராஜகோபாலா, என்னை அழைச்சுண்டு போக!' என்று கூறிஞளே நினைவிருக்கிறதா? சொல்லிவிட்டுச் சிரித்தாளே, அந்த மாதிரி சிரிக்க அவளைத் தவிர வேறு யாரால் முடியும்! எப்போதும் அதே சிரிப்புத்தான், மறுமலர்ச்சிதான். சமீபத்தில்தான் அந்தச் சிரிப்பு அவ்வப்போது அவளுக்குத் துரோகம் செய்துவிடுகிறது; கைவிட்டு விடுகிறது. வலி அதிக

மாறும்போது தன்னைமீறி வேதனையில் முனகி விடுகிறாள். ஆனால் அது தாற்காலிகந்தான். ஓடிப் போன சிரிப்பை அம்மா மறுகணமே காதைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து விடுகிறாள். நோய் அவளை உருக்குலைத்து விட்டது. வயதாகாமலேயே கிழவியாகி விட்டாள். ஆனால், ஒரு போர்வை மூடுவது போல் சிதைவு பரவும்போதுகூட, வாய் வலியில் கோணும்போதுகூட, கண் ஓரங்கள் துடித்துச் சுருங்கும்போதுகூட, அந்த முகத்தில் எத்தகைய சாந்தி! அந்த வலிக்கும் தனக்கும் சம்பந்தம் இல்லை என்று சொல்கிற இந்தச் சாந்தி எங்கிருந்து வருகிறது?

இதுதான் எனக்குப் புரியமாட்டேன் என்கிறது. இது என்ன தன்மை? இத்தனை அமைதியோடு ஒருவரால் எப்படிக் கொஞ்சம் கொஞ்சமாய்ச் சாக முடிகிறது? வலி தாங்காமல் தற்கொலை செய்துகொண்டு விடப் போகிறாளோ என்று நான் முதலில் ரொம்பப் பயந்தேன். இப்போதும் மருந்துகளைப் பூட்டித்தான் வைக்கிறேன் என்றாலும் இது வெறும் பழக்கதோஷந்தான். அவள் அப்படி ஏதும் செய்துகொண்டுவிடமாட்டாள் என்று இப்போது எனக்குத் தெரியும்.

அம்மா உனக்கு எழுதிய கடிதத்தில் இப்படி அவளைப்பற்றிய என் எண்ணங்களை எழுதுவது என்னவோபோல் இருக்கிறது. நீங்கள் இருவரும் பேசிக்கொண்டிருக்கும்போது கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்து குறுக்கிடுவதுபோல் இருக்கிறது. ஆனால் நான் உண்மையில் உங்கள் 'ப்ரைவஸி'யைக் கெடுக்கவில்லை, தெரியுமா அண்ணா! அவள் எழுதியிருப்பதை நான் படிக்கவில்லை. கடைசி வார்த்தை முடிக்கப்படாமல் இருப்பதை மட்டும் பார்த்துவிட்டு மேலே கடிதம் எழுத உட்கார்ந்தேன். நான் கதவைத் திறக்கவில்லை. நீ அவளுடைய செல்லக் குழந்தை. (மறுக்காதே, வீண் வேலை!) உங்கள் இருவர்க்கிடையே நான் குறுக்கிடமாட்டேன்.

அம்மாவுக்கு வேண்டியவற்றைக் கவனித்த பின் அவள் மயங்கி உறங்கும்போது இந்த இரவின் அமைதியில் மேஜை விளக்கின் வட்ட வெளிச்சத்தில் நான் உனக்கு இப்படிக் கடிதம் எழுதிக்கொண்டிருக்கும் காரணம், அவளைப் பற்றிய வியப்பை உன்னோடு பகிர்ந்து கொள்ளத்தான்.

மரணம் நெருங்க நெருங்க அவள் மனசில் இருட்டுக்குப் பதில் புதிது புதிதாய் அழகும் ஒளியும் ஆனந்தமும் வளர்ந்துகொண்டிருக்கின்றன அண்ணா! வலியில் முகம் சுருங்குகிறது. அடுத்த நிமிஷம் 'இன்னிக்கு நட்சத்திரம் எல்லாம் எத்தனை பிரகாசமாய்த் தெரிந்தது!' என்று மகிழ்கிறாள். இது போன அமாவாசை இரவு நடந்தது.

நான் அம்மாவின் பக்கத்தில் இருந்து கவனித்துக்கொள்ளும்போது, ஒரு நோயாளிக்குப் பணிவிடை செய்யவில்லை, ஓர் அதிசயத்தைக் கூடவே இருந்து பார்த்துக்கொண்டிருக்கிறேன். ஏதோ ஒரு புது இனத்தைக் காண்பதுபோல் இருக்கிறது எனக்கு.

ஒரு நர்ஸ் என்ற முறையில் ஆஸ்பத்திரியில் நோயையும் அலறலையும் சாவையும் பார்த்துப் பார்த்து எனக்கு வாழ்க்கையே கசந்திருந்தது. கல்யாணத்தில் வெறுப்பும் எனக்கு அதனால்தான். வலியில் சிணுங்கும் முகங்களிலிருந்துதான் அழகு எத்தனை சீக்கிரம் வெளியேறுகிறது. ஏனென்றால் அவர்களெல்லாம் வலியைத் தமக்கு இழைக்கப்பட்ட அநீதியாய்க் கருதி எதிர்க்கிறவர்கள். 'ஸிஸ்டர், தாங்கலையே, நான் பிழைப்பேனா?' என்று எத்தனை பேர் என்னிடமே முறையிடுகிறார்கள் தெரியுமா? இத்தனைக்கும் அவை அநேகமாய்த் தாற்காலிக வலிகள்தாம்.

நூறு நாள் நோவில் துடித்தாலும் நூற்றோராம் நாள் குணம் பெற்று எழுந்து உட்காரலாம் என்பதுபோன்ற வியாதிகள்தாம். அம்மாவுக்கு அப்படியா? அவள் வலிக்கு நிவாரணமில்லை. அது மரணத்தின் தலைவாசல். நம்பிக்கையற்ற நிலைதான் நரகம் என்கிறார்கள். கான்ஸர் அதனால்தான் நரகம், கடைசியில் உயிர் குடிக்கிறது என்பதனால் இல்லை.

இந்தமாதிரி ஒரு நோயில், அம்மா எத்தனை அநாயாசமான சந்தோஷத்தோடு இருக்கிறாள்! அமாவாசை இருளிலும் சந்திரன் இல்லாததை யல்ல, நட்சத்திரங்கள் இருப்பதைப் பார்க்கிறாள். எவ்விதக் குற்றமும் இல்லாத வாழ்க்கை வாழ்ந்தவள். ஆனால் 'நல்லவளான எனக்கு ஏன் இது வரவேண்டும்?' என்று அவள் அலறவில்லை, இதைவிடச் சாதாரண கஷ்டங்களுக்கே பெரும்பாலான என் பேஷண்டுகள் அலறுவதுபோல்.

இது என்னைச் சிந்திக்கச் செய்கிறது. 'சாகமாட்டேன் சாகமாட்டேன்' என்று எதிர்த்துக் கொண்டே—'என் வாழ்க்கை', 'என் குடும்பம்', 'என் சொத்து' என்று அங்கலாய்த்துக் கொண்டே - இறப்பவர்களைப் பார்த்துப் பார்த்து மனித வர்க்கத்திடமே இகழ்ச்சியும் கசப்பும் கொண்டிருந்த என்னை, அம்மா 'நட்சத்திரம் எத்தனை பிரகாசமாய்த் தெரியறது' என்று சொல்லிச் சிந்திக்க வைக்கிறாள். சாவிலிருந்தும் என் மனசிலிருந்தும் ஒரு சேர விஷத்தை அகற்றிவிட்டு என்னைப் புதுவழியில் யோசிக்கத் தூண்டுகிறாள்.

நான்கு நாட்கள் முன்பு நம் அத்தை திடீரென்று வந்திருந்தாள். இந்த வீட்டில் கால் வைக்க அவளுக்கு எப்படித் தைரியம் வந்ததோ? பழைய நாளில் அப்பாவிடம் அம்மாவைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கதை கட்டிச் சொல்லி, அம்மாவைத் தள்ளி வைத்துவிட்டு வேறு கல்யாணம் செய்துகொள்ளும்படி ஆலோசனை சொன்னவளாம். அப்பாவும் அதைக் கேட்டுக்கொண்டு கொஞ்ச நாள் குதித்தாராமே! அப்புறம் ஏதோ நல்ல வேளையாய் எல்லாம் சரியாய்ப் போயிற்றாம். இல்லாவிட்டால் அம்மாவின் கதி என்னவாகியிருக்கும்? அப்படியெல்லாம் செய்தோமே என்று மனச்சாட்சி உறுத்தாமல் அத்தை வந்து நின்றாள். இத்தனை வருஷங்களாய்த் தொடர்பு விட்டுப் போயிற்றே என்ற தயக்கமாவது இருக்காதோ? ஊஹூம்... கொடுத்து வைத்தவள் போல் வந்து நுழைந்தாள். 'ஏண்டி தங்கம் சௌக்கியமா?' என்று அவள் கேட்டபோது எனக்கு அறையலாம்போல் வந்தது. அம்மா செத்துக்கொண்டிருக்கிறாள் என்று இவள் கேள்விப்படாமலேயா இருப்பாள்? சௌக்கியமாவாம், திமிர்தானே? நானாக இருந்தால் வாசற்படி ஏறவிட்டிருக்க மாட்டேன். ஆனால் இந்த அம்மா! 'வா கலோ' என்று சிரித்து வரவேற்றாள். அப்போது மட்டும் எனக்கு அந்தச் சிரிப்பைப் பார்த்துப் பற்றிக்கொண்டு வந்தது.

அத்தை ஒரு நாள் முழுவதும் இங்கே டேரா போட்டாள். நம்மையெல்லாம் பற்றி ஒப்புக்கு விசாரித்தாள். 'ஓ இவதான் சாரதாவா? நன்னா வளர்ந்துட்டாளே' என்று என்னை ஒருதரம் ஏற இறங்கப் பார்த்தாள். இருபது வருஷத்துக்கு முன் பார்த்த அதே சிறுமியாய் இருப்பேனென்று நினைத்தாளா? என்ன அர்த்தமற்ற வார்த்தைகள்! அப்புறம் உன்னைப்பற்றிக் கேட்டாள். ஆனால் எந்தப் பதிலையும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

இவள் வந்தது நிஜத்தில் தன்னைப்பற்றிப் பேசத்தான். அம்மாவிடம் நன்றாய் அழுது தீர்த்தாள். அவள் பிள்ளைகள் அவளைக் கவனிக்கவில்லையாம். தெருவில் விட்டு விட்டார்களாம். இவள் நம் அப்பா அம்மாவுக்கு நடுவில் கலகம் செய்ததுபோல் பிள்ளைகளுக்கும் மருமகளுக்கும் நடுவில் செய்திருந்தால் அவர்கள் இவளை விரட்டியடிக்காமல் வேறு என்ன செய்வார்களாம்? இப்போது எங்கேயோ ஒரு மைத்துனன் வீட்டில் அண்டிப் பிழைக்கிறாளாம். அலுத்துக்கொண்டே அரைவயிற்றுக்குச் சோறு போடுகிறார்களாம். தன் கஷ்டங்களையே சொன்னாளே தவிர, அம்மாவிடம் 'நீ இப்படி உருமாறிப் போய் விட்டாயே!' என்று ஒரு வார்த்தை கேட்கவில்லை. ஆனால் அம்மா அதைப் பொருட்படுத்தினால்தானே! இவளுக்கு ஆறுதல் சொல்லித் தேற்றினாள். கண்ணீரைத் துடைத்தாள். இரண்டு வேளையும் மூக்குப் பிடிக்கச் சாப்பிடச் சொன்னாள். அதைத் தவிரக் காபி பலகாரம் விமரிசைகள் வேறே! போகும் போது கையில் ஐம்பது ரூபாய் பணமும் கொடுத்து, 'ஒண்ணும் கவலைப்படாதே சுலோ. உனக்கு யாரும் நாதியில்லாமப் போய்ட்டால் என் குழந்தைகள் கிட்டே உன்னை ஆயுசுக்கும் சம்ரட்சிக்கணும்னு சொல்றேன். என் வார்த்தையை அவா மீற மாட்டா' என்றாள். எனக்கானால் ஆத்திரமான ஆத்திரம். சுடச்சுட ஏதாவது அத்தையைச் சொல்லியிருப்பேன். ஆனால், என்ன ஆச்சரியம்! அப்போது அத்தை திடீரென்று அப்படியே அம்மா காலில் விழுந்தாள். 'மன்னி, என்னை மன்னிச்சுடு' என்று கதறிவிட்டுத் திரும்பிப் பார்க்காமல் போய்விட்டாள்.

அன்று ராத்திரி நான் தூங்கவில்லை. கிருஷ்ணனின் விசுவரூபத்தைப் பார்த்த அன்று அர்ஜுனனும் தூங்கியிருக்கமாட்டானென்று நினைக்கிறேன்.

பகைவனுக்கருள்வாய் என்று ஏட்டில் அல்ல, வீட்டிலேயே பிரத்தியட்சமாய்ப் படித்துவிட்டேன் அண்ணா! மரணத்தின் அருகில் இருக்கும்போதுகூட அம்மாவால் இப்படி நடந்துகொள்ள முடிகிறது. அம்மா சாவுக்கு மேலே ரொம்பத் தூரம் போய்விட்டாள். இனி மரணம் அவளிடம் வரும்போது அதற்கு அர்த்தம் இருக்காது. அதனால்தான் அவள் தற்கொலை செய்து கொள்ள மாட்டாள் என்ற நிச்சயம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. சாவு அவள்முன் ஒரு திருணம். அதை ஒரு பொருட்டாய் மதித்து அவள் ஏன் அதை வலிய அழைக்கப் போகிறாள்?

என் மனசுக்குள் எல்லாம் தெரிகிறாப்போல் இருக்கிறது. நோவையும் சாவையும் பார்த்துப் பார்த்து வாழ்க்கை வெறுத்துப் போன எனக்கு அம்மா புதுப் பாடம் கற்பிக்கிறாள். நம் எண்ணத்திலிருந்தே அழகும் அர்த்தமும் பிறக்கின்றன என்று காட்டுகிறாள்.

அந்த நோயாளிகள் அரற்றுவதன் காரணம் அவர்களிடம் உள்ள பலவீனந்தான். அம்மா சாவையும் அழகாக்குவது அவளிடமே உள்ள அழகினால்தான். வெளிக் காட்சிகளில் என்ன இருக்கிறது? நம் தன்மையைத்தான் உலகத்துக்கு ஏற்றுகிறோம். இந்த மண் உருண்டையை எப்படி வேண்டுமானாலும் உருவாக்கலாம். அது அவரவர் கைத்திறமையைப் பொறுத்தது. நம் தரத்தையொட்டித்தான் உலகுக்கு எதிரொலிக்கிறோம். காட்சிகள் நம்முன் எழுப்பும் உணர்ச்சிகள் நம்மையே நமக்குக் காட்டும் கண்ணாடிகள் என்பதை இப்போது புரிந்து கொள்கிறேன்.

இத்தனை நாள் பாதி மட்டுமே பார்த்திருந்த உண்மையை இப்போது முழுதுமாய்ப் பார்க்கிறேன். உலகத்தில் அந்தப் பரிதாபத்துக்குரிய நோயாளிகள் மட்டும் அல்ல, அம்மாவைப் போன்றவர்களும் இருக்கிறார்கள் என்பதை உணரும்போது என் கசப்பு மெல்ல மெல்ல மறைகிறது.

கடிதம் ரொம்ப ஸீரியஸாய்ப்போய்விட்டது இல்லையா, அண்ணா? நீ ஒருவேளை சிரிப்பாயோ என்னவோ? ஆனால் மனசில் தோன்றியதையெல்லாம் அப்படியே உன்னிடம் சொல்ல வேண்டும்போல் இருந்தது. அதுவும் அம்மாவின் கடிதத்தைத் தொடர்ந்தே... ! அதில் ஒரு தனித் திருப்தி. அவளுடன், அவள் செல்லப் பிள்ளையுடன், இல்லை யில்லை, மறுபடியும் சொல்லவில்லை, கோபித்துக்கொள்ளாதே.

நீங்கள் எல்லாரும் எப்படி இருக்கிறீர்கள்? எனக்கு ஆஸ்பத்திரியில் வழக்கம்போல் வேலை மும்முரந்தான். இந்த மெட்ராஸிலேயே ஆரோக்கியமானவர்கள் கிடையாதோ என்று சந்தேகப்படும்படி எப்போதும் ஒரு கூட்டம். ஒரு நாள் ஒரு நோயாளியைப் பார்க்க வந்த விஸிட்டர்களில் குறிப்பிட்ட ஒருவர் என்னைப் பார்த்துத் தயங்கி நின்றுகொண்டே இருந்தார். "சௌக்கியமா?" என்று கேட்டார். அவர் என்னிடம் கோபமடையாமல் இருந்தது எனக்கு ஆச்சரியம் அளித்தது. அப்புறந்தான் காதில் விழுந்தது. அவர் எனக்குப் பின் வேறு எந்தப் பெண்ணையும் பார்க்கவில்லையாம்.

யார் கண்டார்கள்? ஒருவேளை நான் அவரை ... அம்மாவுக்குச் சந்தோஷமாயிருக்கும்.

அதென்ன கடிகாரத்தில் இரண்டா அடிக்கிறது? இத்துடன் நிறுத்திக்கொள்கிறேன் அண்ணா. போய்ப் படுக்கவேண்டும். அம்மாவும் அயர்ந்து தூங்குகிறாள். தூக்க மாத்திரை சாப்பிட்டுவிட்டுத்தான். அப்படியும் தூக்கத்தில் வலியினால் முனகினாளானால் 'ஐயோ' 'அப்பா' என்றெல்லாம் அரற்றுவதில்லை. 'ஈசுவரா' என்றுதான் வார்த்தை வருகிறது. நாம் எத்தகைய சொத்துக்கு வாரிசுகள் அண்ணா!

ரொம்ப நேரமாகிவிட்டது. நான் இப்போதாவது படுத்துத் தூங்கினால்தான் வேலைக்குப் போக ஃப்ரெஷ்ஷாய் இருக்கும். குழந்தைக்கு என் அன்பு.

அன்புள்ள உன் தங்கை
சாரு

பி.கு: கடிதமா இது? கத்தை கத்தையாய்ப் பக்கங்கள், கதைமாதிரி. புக்போஸ்டில்தான் அனுப்ப வேண்டும்.

சாரு ★






ஸி.ராஜப்பா

"ஜகதோ தாரகநாம உடுப்பி ஸ்ரீகிருஷ்ண" என்ற வியாஸராயர் பாடலுக்கு அபிநயம் பிடித்துக் கொண்டிருந்த பிருந்தா வின் அழகைக் கண்டு சங்கரி மெய்ம்மறந்து நின்றாள். யமுனா கல்யாணி ராகப் பாடலான 'கிருஷ்ணா நீ பேகனே பாரோ' என்றாலே அவளுக்கு உயிர். அதுவும் தன் பேத்தி பரத நாட்டியம் கற்றுக்கொண்டிருப்பதைச் சென்ற மாதம் சென்னை வந்த பிறகே சங்கரி தெரிந்து கொண்டாள். அன்று கிருஷ்ண ஜயந்தி; சின்னச் சின்னப் பாதம் தூக்கிக் கண்ணன் நடந்து வருவதை மாக்கோலத்தில் கூடம் முழுவதும் அடி அடியாக வரைந்து கொண்டி ருந்தவள், பிருந்தாவின் சதங்கையொலி கேட்டு, கைவேலையை மறந்து ஓடி வந்தாள்.

"பாட்டி! பிருந்தாவைப் பார்த்தா வைஜயந்தி நாட்டியம் ஆடற மாதிரியே இருக்கு!" என்று அக்காவுக்குப் புகழ்மாலை சூட்டினாள் சின்னப் பேத்தி சுதா.

"என் கண்ணுக்குக் கிருஷ்ண விக்கிரகமே நடந்துவராப் போலே இருக்குடா ரகுராமா!" என்று தன் மனத்தில் தோன்றியதை உள்ள படி சொன்னாள் சங்கரி. அவள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருக்கெடுத்தது. ஹாலில் மாட்டியிருந்த 'அவரு'டைய பெரிய புகைப்படத்தை ஒருமுறை நிமிர்ந்து பார்த்துப் பெருமூச்சு விட்டாள்.

"அப்பா இருந்து பார்க்கக் கொடுத்து வைக்கவில்லையடா ரகு! சங்கீதம், நாட்டியம் அப்படின்னா அவருக்கு அத்தனை ஆசை!" குரல் தழுதழுத்தது சங்கரிக்கு.

"ஆமாம் அம்மா!" என்ற பதிலோடு அவள் பிள்ளை ரகு நிறுத்திக் கொண்டார்.

"பாட்டி! இன்னைக்குக் கிருஷ்ணன் பொறக்கிறான் இல்லையா? ராத்திரி பன் னெண்டு மணிக்கா? முறுக்கு, சீடையெல்லாம் அப்பதான் நீ எனக்குத் தின்னத் தருவியா?" சிறுவன் குமாரின் கவலை அவனுக்கு.

"நகரு, நகரு! கிருஷ்ணன் பாதம் போட் டிண்டு வரேனே.... அதை மிதிக்காதே! இங்கே வாடா.... உனக்கு எல்லாம் சொல் லறேன் வா." சங்கரி பேரனை அழைத்து விட்டு அழகழகாகப் 'பாப்பா'வின் பாதங் களைக் கருநிறச் சிமிண்டுத் தரையில் பதிய வைப்பதில் முனைந்தாள். உள்ளேயிருந்து, "வெல்லச் சீடைக்குப் பாகு முற்றிவிட்டது" என்ற குரல் கேட்டதும், கோலமாவுக் கிண் ணத்தைக் கீழே வைத்துவிட்டுத் தள்ளாத வயதையும் மறந்து ஓடினாள் சங்கரி. குரல் கொடுத்தவள் மருமகள் பானுதான்.

பாட்டியைத் தொடர்ந்து குமாரும், சுதா வும் சென்றனர். தகுந்த பதத்தில்தான் வெல்லச்சீடைக்கான பாகு முற்றியிருந்தது. "ஹை!..நல்ல வாசனை வரதே..எனக்கு இந்த வாசனை ரொம்பப் பிடிக்கும்." குமார் தன்னை மறந்து குழந்தைச் சுபாவத்தில் சொன்னான். மருமகள் பானுவுக்கு எதையும் ரசிக்கப் பிடிக்கவில்லை. பாட்டி, பேத்தியின் நாட்டி யத்தைப் புகழ்ந்ததோ 'பெரியவர்' இல்லையே என்று அம்மாவும் பிள்ளையும் குறைப்பட்டுக் கொண்டதோ, குமார் வெல்லச்சீடை தின் னப் பறந்ததோ எதுவும் பிடிக்காததால் கோபத்தை அடக்கிக்கொண்டு சமையலறை யிலேயே வேலையாக இருந்தாள். ரகுராமன் அதைக் கண்டுகொள்ளவே இல்லை.

அவருக்குக் காரணம் தெரியும்; வாயைத் திறந்தால் நாளும் கிழமையுமாகப் பேச்சு வளர்ந்து, மனசு புண்படும். ஆகவே மௌன விரதம் மேற்கொண்டார்.

"கோலத்தைப் போட்டுவிட்டு, முறுக்கை நீங்களே சுற்றிவிடுங்கள்; மற்றதை நானும் பிருந்தாவுமாய்ப் பார்த்துக் கொள்கிறோம்" என்றாள் பானு.

"பாட்டி! நானும் குமாரும் சீடை உருட் டறோம் பாட்டி!" இதைச் சொல்லிச் சுதா நிறுத்தினதும் பானு சீறினாள். "போரும் போடி! நீ பெரிய மனுஷி! வேலை செய்ய வந்துட்டா! போடா குமார்! நீ போய் விளை யாடு. பொம்மனாட்டி மாதிரி சமையல் ரூமி யிலேயே சுற்றக்கூடாது. காணாதது கண்ட ஜன்மங்கள் போல் அலையறதே!" கடும் குரலில் பானு பேசுவதைக் கூடத்திலிருந்தே கேட்ட ரகுராமன், புயல் வீசும் சின்னம் தெரிகிறதே என்று உள்ளூற வருந்தினார்.

வீட்டில் பிருந்தாவின் பேச்சுக்கு மதிப்பு அதிகம். பி. எஸ்ஸி. படிக்கும் அவள் படிப்பி லும் பேச்சிலும் வீட்டு வேலையிலும் ஏன், வீட்டு நிர்வாகத்திலும் கூடக் கெட்டிக்காரி. "அம்மா! பாட்டி ஒருத்தி இங்கே ரெண்டு வாரமா இருக்கிறதாலே நமக்கு எத்தனை உப காரமாக இருக்கு, பாரு. வீட்டுவேலையிலே முக்கால்வாசியைப் பாட்டியே இந்தத் தள் ளாத வயசிலேயும் செய்து முடிச்சுடறா" என்று பிருந்தா சொன்னதுதான் தாமதம்; "ஓ! பேத்தியைப் பாட்டி புகழ்ந்தாகிவிட்டது. இப்ப உன் முறைபோல் இருக்கு!" என்று எகத்தாளமான பதிலே பானுவிடமிருந்து வெளிவந்தது. சங்கரி இத்தனை பேச்சையும் காதில் போட்டுக் கொள்ளவே இல்லை. ரகுராமனுக்கும் கூடத்தில் இருப்புக்கொள்ள வில்லை.

"கிருஷ்ணன் பொறந்த சேதியைக் கேட்டுக் கம்சன் பல்லைக் கடிச்சானாம். எப்படி? நற நற என்று கடிச்சானாம். அந்தச் சத்தத்தை நினைவு

படுத்தத்தான் கோகுலாஷ்டமிக்குச் சீடையும் முறுக்கும் செய்து நாம் அதைக் கடிச்சுத் தின்னு கம்ஸனுக்கு அழகு காட்டறோமாம்! அப்படின்னு நாங்கள்ளாம் சின்னப் பையன்களா இருந்தப்ப நீ கதை சொல்வாயே அம்மா எங்களுக்கு; அந்த ஞாபகம் இன்னிக்கு நீ கோகுலாஷ்டமி பட்சணம் பண்ணும்போது எனக்கு வரது. குமாருக்குச் சொல்லேன் அந்தக் கதையை?'' இப்படிப் பேசிக்கொண்டு ரகுராமன் சமையலறைப் பக்கம் வந்து நின்றதைக் கண்ட பானு, கோபவெறியால் ஸ்டௌவில் கையைச் சுட்டுக்கொண்டாள். அந்த எரிச்சலும் சேர்ந்தது.

''போருமே! குழந்தை இல்லாத வீட்டிலேதான் கிழவன் துள்ளி விளையாடணும். இங்கேதான் குழந்தைகள் இருக்கிறார்களே! இன்னும் நீங்கள் பச்சைக் குழந்தையாகப் பேசி, பல்லை இளிச்சுக்கொண்டு அம்மா பின்னாலே சுற்றணுமா?'' வெல்லச்சீடை வெடிப்பதைவிட வேகமாகவும் சத்தமாகவும் வார்த்தைகள் வெடித்தன, பானுவிடமிருந்து.

சங்கரி சிரித்துக்கொண்டாள்.

''ஹூம்! எத்தனை வயசானாலும் எனக்கு அவன் பிள்ளைதானே பானு? நானும் அவனுக்கு அம்மாதானே? மற்ற ரெண்டு பேரையும்விட அவனுக்கு என்னிடம் பாசம் அதிகம். 'மூத்த பிள்ளைன்னு உனக்கு என்னைக்கும் உசத்திதான்' என்று அவன் தம்பிகளே பொரிவார்கள்.'' சங்கரியின் பேச்சை ரசிக்காமல் பானு முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

''பதினெட்டு வருஷம் குடித்தனம் நடத்தின எனக்கு இந்தப் பாரதம் எல்லாம் தெரிந்த கதைதானே?'' என்ற அலட்சியப் பதில்தான் அவளிடமிருந்து சங்கரிக்குக் கிடைத்தது.

''அம்மா! எங்களுக்கு மட்டுமா உன்னிடம் பிரியம்? நினைவிருக்கிறதா உனக்கு? ஒரு தடவை இதே மாதிரி கோகுலாஷ்டமிக்குச் செய்திருந்த வெல்லச் சீடையை நீ நம் வீட்டில் சமையற்காரச் சீதம்மாள் இருந்தாளே, அவள் பிள்ளை ராமசந்திரனுக்கு எடுத்து வைத்திருந்தாயே! அதை நான் திருட்டுத்தனமாக எடுத்துக் கொண்டதும் என்னை என்ன பாடு படுத்திட்டே!, கையிலே சூடுகூடப் போட்டாயே அம்மா! இத பாரு, இன்னும் அந்தத் தழும்பு! இப்போ நினைத்தாலும் இன்னும் உடம்பு வலிப்பதுபோல் இருக்கம்மா'' என்று ரகுராமன் முப்பது வருஷங்களுக்கு முன்பு நடந்த சம்பவம் ஒன்றைக் குறிப்பிட்டார். சங்கரிக்கு அதைக் கேட்கச் சுவையாகத்தான் இருந்தது.

''அப்பா! நீ கூடத் திருடிட்டுப் பாட்டிகிட்டே அடி வாங்கினியா? சூடு போட்டாளா பாட்டி? எங்கே கையைக் காட்டு'' என்று சிறுவன் குமார் ஆவலுடன் அப்பா அருகில் ஓடி வந்தான்.

''சீதம்மா பிள்ளை வேறு, நீங்கள் மூணு பேரும் வேறுன்னு நான் என்னைக்கும் நினைச்சதில்லேடா ரகு! அந்த ராமசந்திரனுக்கும் என்னிடம் ரொம்பப் பாசம். கஷ்டப்பட்டுக் காலேஜ் படிப்பு முடிந்து வந்ததும் என் காலில் விழுந்து நமஸ்காரம் பண்ணி ஆசீர்வாதம் கேட்டானே பாவம்! எங்கேயோ நன்றாக இருந்தால் சரி. சமையற்காரியாக நம்ம வீட்டிலே பதினாறு வருஷம் இருந்தே தன் பிள்ளை படிப்பை முடித்தாள் சீதம்மா.'' முறுக்குச் சுற்றிக்கொண்டே பேச்சையும் தொடர்ந்தாள் சங்கரி.

''குழந்தைகள் எதிரிலேதான் நீங்கள் வெல்லச்சீடை திருடிச் சூடுபோட்டுக்கொண்ட கதையைச் சொல்லணுமா? நல்ல புத்தி சீக்கிரம் வரும் குழந்தைகளுக்கு!'' பானுவின் குற்றச்சாட்டு, ரகுராமனின் பேச்சுக்குத் தடைவிதித்தது. இருந்தாலும் அசட்டுச் சிரிப்புடன் பேசிக்கொண்டே நின்றார்.

''பானு! அந்த நாளிலே அம்மா எங்களைக் கூடக் கவனிக்க மறந்து விடுவாள். எங்கள் வீட்டுச் சீதம்மா பிள்ளையைக் கரிசனத்தோட கவனிப்பாள். 'ஏழை வீட்டுப் பிள்ளையடா ரகு! நாம் பார்த்து ஏதோ கொடுத்தால்தான் உண்டு' என்பாள். நாங்கள் கூடக் கேலியாக, 'அம்மா! உன் தத்துப் புத்திரன் வந்துட்டான்' என்று ராமசந்திரனைக் கண்டதும் சொல்வோம். அம்மாவுக்கு அதில் ரொம்பப் பெருமை. இல்லையா அம்மா?'' சங்கரி தலையை ஆட்டினாள்.

''உங்களுக்கு வேற வேலை ஒண்ணும் இல்லையா இன்னிக்கு? உங்கள் ஹைதராபாத் தம்பிக்குக் கடிதாசு எழுதறதாகச் சொன்னீர்களே; போய் அதைக் கவனியுங்கள்.'' பானு இதைச் சொன்னதும் பதில் பேசாமல் ரகுராமன் நகர்ந்துவிட்டார் இடத்தை விட்டு.

பிருந்தாவின் முகம் சிவந்தது; அம்மாவை ஒரு முறை முறைத்தாள். ''ஏண்டி கொடூரப் பார்வை பார்க்கிறே? உங்க அப்பா அவ அம்மாவை எப்படிப் புகழுகிறார் பாருங்கள்! உங்களுக்கு என்னைக் கண்டால் கரித்துக் கொட்டத்தான் தெரிகிறது'' என்று தன் ஆத்திரத்தைப் பெண்மீது வார்த்தைகளால் வடித்தாள் பானு.

பிருந்தாவுக்கும் காரணம் புரியும். சங்கரிக்கும் பானுவின் மனப்பொருமல் தெரியாமல் இல்லை. வாய்விட்டு எதையும் பேசமுடியாமல் அந்தக் குடும்பம் மனத்துக்குள் பொருமி வந்தது.

பானுவுக்கு இனிமேல் தன் மாமியார் இந்த வீட்டை விட்டு நகரவே போவதில்லை என்ற எண்ணம் உறுதியாகிவிட்டது. இந்தக் கிழத்தை எந்த விதம் நகர்த்துவது?

கிருஷ்ண ஜயந்திக்காகச் சங்கரி விழுந்து விழுந்து வேலை செய்வதைக் கண்டு அநுதாபப் படுவதுபோல் அன்று மத்தியான்னச் சாப்பாட்டின்போது பானு ஜாடையாகச் சொன்னாள்.

''அம்மாவை ஹைதராபாத்துக்கு அனுப்பி வைக்கலாமே! உங்கள் தம்பி மனைவி பிரசவத்துக்குப் பிறந்தகம் போனால் அவர் சாப்பாட்டுக்குத் தவிப்பாரே!'' என்று வாழைப் பழத்தில் ஊசி ஏற்றும் பாவனையில் பேச்சைத் தொடங்கினாள்.

ரகுராமனின் முகபாவம் மாறியது. பிள்ளையின் முகத்தை நிமிர்ந்து பார்த்தாள் சங்கரி. ஒன்றுமே சொல்லத் தோன்றாமல் அவன் விழிப்பதைக் கண்டு தன் நிலைக்குத் தானே வருந்தினாள்.

மீண்டும் பந்து இந்த இடத்திலிருந்து எங்கே உருளப் போகிறதோ?

ஹூம்! இரண்டாவது பிள்ளை சுந்தரத்தின் வீட்டை விட்டுக் கிளம்பினால் போதும், இனி அந்த வீட்டு வாசற்படி மிதிக்க வேண்டாம் என்ற வைராக்கியத்துடன் துடித்துக்

வேண்டும். அனுப்பிவை' என்று பம்பாயிலிருந்த தம் தம்பி சுந்தரத்துக்கு ரகுராமன் கடிதம் எழுதினர்.

'கடவுளாக இரக்கப்பட்டு அனுப்பிய பொன்னன சந்தர்ப்பந்தான் இது' என்று எண்ணிக்கொண்டு அடுத்த ரெயில் ஏறிப் பம்பாயிலிருந்து சென்னை வந்தாள் சங்கரி. வந்த இரண்டு வார காலத்தில் முதல் ஒரு வாரம் ராஜோபசாரம் நடந்தது அவளுக்கு.

''அம்மா! அம்மா!'' என்று தாயாரிடம் ரகுராமன் குழைவதைக் கண்டு அவருடைய குழந்தைகளே வியந்தன.

''அப்பா அவருடைய அம்மாவிடம் எப்படிப் பிரியமாக இருக்கிறார், பார்த்தீர்களா?'' என்று பானு குழந்தைகளுக்கு உதாரணம் காட்டிச் சொல்லும் அளவுக்குப் பாசத்தை வெளியிட்டார். ஆனல், தம் மனைவி பானு கீறிய கோட்டைத் தாண்டும் சக்தி அவருக்கு என்றுமே இடையாது. ஒரு வாரம் வெகு சீக்கிரம் ஓடி மறைந்தது.

''மூன்றே பேராக இருந்து கொண்டு சாப்பாடு போட மனம் இல்லாமல் விரட்டிவிட்டாரே; உங்கள் பம்பாய்த் தம்பி. நாம் இத்தனை பொறுப்புகளைச் சுமந்துகொண்டு அம்மாவைக் கவனிக்க முடியுமா? கல்யாணத்துக்குப் பெண் நிற்கிறது. அடுத்தவள் காலேஜ் சேர்ந்தாக வேண்டும். இதையெல்லாம் நீங்கள் யோசிக்க வேண்டாமா? பேசாமல் உங்கள் ஹைதராபாத் தம்பியிடம் அம்மாவை அனுப்பி விடுங்கள்; அவருக்கும் பொறுப்பு வரவேண்டாமா? அவர் கல்யாணமாகி ரெண்டு வருஷங்கள் ஜாலியாகத் தனிக் குடித்தனம் இருந்தாகிவிட்டதே!'' ஒரு வாரமாகப் பானு கீறல் விழுந்த கிராமபோன் ரிகார்டு மாதிரி இதையே ரகுராமனிடம் ஒலித்துக் கொண்டிருந்தாள். மௌனமாகக் கண்ணீர் வடிப்பதைத் தவிர அவள் பேச்சுக்கு அவரால் வாய்திறந்து எதுவும் பேச முடியவில்லை.

இன்று அம்மாவிடம் அவர் குழைவதைப் பார்த்தால், எங்கே சங்கரி அம்மாள் நிரந்தரமாகத் தன் வீட்டிலேயே தங்கிவிடுவாளோ என்ற திகில் பற்றிக் கொண்டது பானுவுக்கு. ஆகவே அவள், சங்கரி காதிலும் படும்படி ஹைதராபாத்துக்கு அவளை அனுப்பிவைக்கும் யோசனையைத் தெரிவித்து விட்டாள்.

நிவேதனப் பொருள்களைக் கிருஷ்ண விக்கிரகம் முன் ஒவ்வொன்ருகக் கொண்டு வைத்தாள் சங்கரி. குழந்தைகள் சூழ ரகுராமனும் பூஜையைக் கவனிக்க வந்து அமர்ந்தார். பிருந்தா, 'ஸ்ரீரங்கபுர விஹார' பாட்டைப் பிருந்தாவன சாரங்காவில் பாடியதைக் கேட்டு மெய்ம் மறந்தாள் சங்கரி. பூஜையை முடித்துத் தீபாராதனைக் காண்பித்தபோது அவள் வாய் முணுமுணுப்பது ரகுராமனின் காதில், ஏன் அருகில் நின்ற பானுவின் காதிலும், தெளிவாகவே விழுந்திருக்கவேண்டும்.

''ஸ்ரீ கிருஷ்ணு! குருவாயூரப்பா! நான் பெற்றது மூன்று. மூன்றும் மூன்று விதம்? கையிலிருந்த ரூபாயையும் அவர் மறைந்த பிறகு பாகம் பிரித்துக் கொடுத்து



விட்டேன். ஒருவேளைச் சோறும் முடங்கிக் கொள்ள இடமும் கிடைக்க இவ்வளவு தவிக்கிறேனே! நல்ல வேளை! ஐந்து வருஷங்களுக்கு முன்பே அவர் முந்திக்கொண்டு விட்டார். பாழும் ஜன்மம், நான் இப்படி அலைமோதுகிறேன். சீக்கிரம் என்னையும் உன்னிடம் அழைத்துக் கொண்டு விடப்பா!'' என்று கண்களில் நீர்மல்கச் சங்கரி வேண்டிக்கொள்வதை ரகுராமன் இமைகொட்டாமல் பார்த்துக் கொண்டு நின்றாரே தவிர, வாய் திறந்து ஒரு வார்த்தை பேசவில்லை.

''அம்மா! பாட்டி ஏம்மா அழறா?'' என்று சிறுவன் குமாரின் கள்ளங்கபடமற்ற கேள்விக்கு, ''உஷ்!'' என்ற அதட்டல்தான் பானுவிடமிருந்து பதிலாக வந்தது.

பாட்டி ஹைதராபாத் போகப் போவதை அறிந்துகொண்ட பேரன் பேத்திகள் பாட்டியைப் பிரிய மனம்இல்லாமல் அழுது பிடிவாதம் பிடித்தனர். இதற்காக அவர்களுக்குப் பானு கொடுத்தவை; முதுகில் நான்கு அறை; கன்னத்தில் பல கிள்ளு!

ரகுராமன் தம் அன்னையின் நிலையை உணர்ந்திருந்தும், பானுவின் வார்த்தையைத் தட்டாமல் ஹைதராபாத்திலிருக்கும் கடைசித் தம்பிக்குக் கடிதம் எழுதிவிட்டார். அம்மாவுக்கும் அவனோடு இருக்கவேண்டுமென்று ஆசையாம். அதனால் ஹைதராபாத்துக்குக் கிளம்புகிறாளாம்! தம் மனச்சாட்சியைக் கழற்றி வைத்து விட்டு எழுதிய அந்தக் கடிதத்தைக் கண்ணீர் வடித்தபடியே தபாலில் சேர்த்தார் அவர். இதன் பிறகு இரண்டு நாட்களில் சங்கரி ஹைதராபாத் கிளம்ப ஏற்பாடாயிற்று.

கடைசிப் பிள்ளை மட்டும் என்ன வாரிக் கொட்டப் போகிறானோ? அவள் பெற்ற மனம் தாங்க முடியாத சுமையைச் சுமந்துகொண்டு தவித்தது. புதிதாக வந்திருக்கும் மூன்றாவது மருமகள் எத்தகைய மரியாதை வைத்து நடத்துகிறாள் என்று இனி அங்கே போய் இருந்து பார்த்தால்தானே தெரியும்?

சென்னைச் சென்ட்ரலை விட்டு ரெயில் கிளம்பும்போது குழந்தைகள் கையில் ஆளுக்கு ஒரு முழு ரூபாய் நாணயத்தைக் கொடுத்தாள் சங்கரி. அம்மாவைப் பிரிய மனமின்றித் தன் மூத்த குழந்தை மௌனக் கண்ணீர் வடிப்பதைப் புரிந்துகொண்டாள் சங்கரி. அந்தக் குழந்தைக்கு முழு ரூபாய் நாணயம் கொடுத்துச் சமாதானப்படுத்த முடியும்? பந்து மீண்டும் உருளத் தொடங்கியது. அவர்களைப் பிரிக்கும் சக்தி எது என்று தாய்க்கும் மகனுக்கும் நன்றாகத் தெரியும். ஓர் அன்பைப் பெற மற்றதைத் தியாகம் செய்தே ஆகவேண்டுமோ? வெளியில் சொல்லிக்கொள்ள முடியாமல் ஒருவர் முகத்தை ஒருவர் நேரே பார்க்கத் தயங்கி, ஜீவனில்லாமல் எதையோ பேசிப் பொழுதைக் கழித்தனர். வண்டி எப்போது நகரும் என்ற தவிப்பு, பானுவுக்கு. நகர்ந்தும் விட்டது.

ஹைதராபாத் வந்துவிட்டாள் சங்கரி. ஊரோ புதிது. ரெயிலடியில் பிள்ளையைச் சந்தித்தால்தான் வீடு போய்ச் சேரமுடியும். தான் நிற்பதைக் கண்டுகொண்டு அவன் முன் வந்தால் நல்லது. ரெயிலடிக் கூட்டத்தில் அவனை எங்கே தேடிக் கண்டுபிடிப்பது? எது எப்படி

பல சிந்தனைகள் உருண்டோடின. இப்போது ஊரும் வந்து சேர்ந்துவிட்டாள்.

ஹைதராபாத் சென்ட்ரலில் தன்னந்தனியாக ஒதுங்கி நிற்கும் சங்கரிக்குக் கால் கடுக்க ஆரம்பித்தது. அவளுடைய மூன்றாவது பிள்ளை கடைக்குட்டி ராஜாமணி இன்னுமா வருகிறான்? தான் வரப்போவதை மூத்தவன் தெரிவித்திருந்தும் இந்த மரியாதையா? தான் இப்படி ஒரு வேண்டாத விருந்தாளியாகி விட்டதை நினைத்தபோது சங்கரியின் கண்களை நீர் மறைத்தது. தேவையற்ற ஒரு ஜன்மம் இருப்பதில் யாருக்குப் பயன்? பாஷை புரியாத ஊர்; எங்கே பார்த்தாலும் புது முகங்கள். யாரைப் போய் என்ன சொல்லிக் கேட்பது? பிள்ளையின் விலாசம் கையில் இருக்கிறது. கடைசியாக, யாரிடமாவது விசாரித்துக் கொண்டு, அவன் வீட்டுக்குத் தானாக அழையாத விருந்தாளியாகச் செல்லவேண்டியது தான். அந்த முடிவுக்கு வந்த பின் சங்கரி கிளம்பத் தயாராகிவிட்டாள்.

அப்போது..!

அவளருகில் தயங்கியபடி ஓர் உருவம் வருவதைக் கண்டாள். ''அம்மா!'' என்ற குரல்கேட்ட சங்கரி வியப்பு மேவிட நிமிர்ந்தாள். அவள் கடைசிப்பிள்ளை ராஜாமணி அங்கே நின்றான். அவனைத் தேடித்தானே அவள் போகிறாள்? பிள்ளை தன்னை வரவேற்க வந்திருப்பதைக் கண்டு அதுவரைபட்ட அல்லல்களை அடியோடு மறந்துவிட்டாள் சங்கரி.

''ராஜாமணி! வந்துட்டியா? நீ வந்திடுவேன்னு எனக்கு நிச்சயமாத் தெரியும்டா! ஏண்டா கண்ணா, இப்படிக் கறுத்து இளைச்சுப் போயிட்டே? சுந்தரி சௌக்கியமாடா?'' அதற்குமேல் பேச விருப்பந்தான். மூச்சுத் தடுமாறியது. பேச்சுத் தடைப்பட்டது. தொண்டை கரகரத்தது.

ராஜாமணி பேசினான்.

''அம்மா! அண்ணா இந்த ரெயிலில் நீ வருவதாகக் கடிதமும் எழுதித் தந்தியும் கொடுத்திருக்கான். நல்லதாகப் போயிற்று அம்மா!'' என்று சொன்னதும் நிம்மதிப் பெருமூச்சு வந்தது சங்கரிக்கு.

''ஆமாண்டா ராஜாமணி!''

''அது சரிம்மா, இத பாரு. நான் அவசரமா அலகாபாத் கிளம்பிண்டிருக்கேன். அங்கே இண்டஸ்ட்ரியல் பாங்க் கான்ஃபரன்ஸ் நாளைக்கு நடக்கிறது. எங்க கம்பெனி விஷயமா நான் போகணும். பிளேனுக்கு ஸீட் ரிஸர்வ் பண்ணியாச்சு.. புரிஞ்சுதாம்மா?'' அவள் பிள்ளை அம்மாவிடமும் வியாபார ரீதியில் பேசினான்.

''ஓ..புரியறதே..நன்றாகப் புரியறதடா.''

''சுந்தரியைப் போன வாரம் பிறந்த வீட்டுக்கு அனுப்பிவிட்டேன். டெலிவரி முடிந்துதான் வரப் போகிறாள். இன்னும் ஒரு மணி நேரத்திலே எனக்குப் பிளேனுக்குப் போகணும். இந்த நூறு ரூபாயை வைத்துக் கொண்டு நீ அண்ணாவிடமே போய் இன்னும் ஒரு மாசம் இருந்துடும்மா! அப்புறம் என்னிடம் வரலாம்மா!'' அருமைப் பிள்ளை பேசி நிறுத்தினான்.

''அப்படியா? பந்தை மறுபடியும் உருட்டறயாடா? சரி''. இரக்கமற்ற இதயத்திலிருந்து வந்த வார்த்தைகளை ஈடுகட்ட அந்த நூறு

நா பேச எழாமல், நடுங்கும் கரங்களில் தை வாங்கினுள் சங்கரி. "பூண்டா ராஜா ணி! உன் பிரயாணத்தையும் தாண்டிப் பிரயா கக்கே நானும் வந்து, திரிவேணி சங்கமத் லே கலந்துடலாமேன்னு தவிக்கிறதுடா என் நெஞ்சு. இப்படி வேண்டாத விருந்தாளியா ான் இன்னும் எத்தனே நாள் வாழணும்டா?" தைச் சொல்ல அவள் உள்ளம் துடித்தது. ஆனுல், அதைச் சொல்லி முடிக்க வேண்டிய நரம்கூட ராஜாமணி அங்கு நிற்கத் தயாராக ல்லே என்பதை அவன் பரபரப்பு வெளிப் டுத்தியது. "வரட்டுமா அம்மா?" என்று கட்டுக்கொண்டு, தான் செல்லவிருந்த மானத்தைவிட வேகமாகப் பறக்க இறக்கை ட்டிக்கொண்டான்.

"சரி" என்பதற்கு அடையாளமாகச் சங்கரி ன் தலே மட்டும் அசைந்தது.

சங்கரி மௌனமாக உட்கார்ந்தாள். 'இவ னல்லாம் வயிற்றில் பிறந்த பிள்ளே என்று ாரிடமாவது சொன்னுல் எவ்வளவு கேவலம்?' டுமாறி நடந்து சென்று காலியாக இருந்த ரு பெஞ்சில் உட்கார்ந்தாள். நூறு ரூபாய் நாட்டை வேண்டா வெறுப்பாகப் பத்திரப் டுத்தினுள். இனி அடுத்து என்ன செய்வது?

ஸ்டேஷன் மாஸ்டர் அறை வாசலில் நிழ ருவம் தென்படவே, "யார் அது?" என்ற அதிகாரக் குரலுடன் அவர் வெளிப்பட்டார். ங்கரி சப்த நாடியும் ஒடுங்க, அவரிடம் அடுத்த ரெயில் சென்னேக்கு எப்போது என்று கேட்கத் தயங்கி நின்ருள். ஒரு வயோதிகப் பெண்மணி நிற்பதைக் கண்டு அவரும் சற்றுப் பணிவுடன் அவள் முன் வந்து, "என்னம்மா வேண்டும் ங்களுக்கு?" என்று கேட்டார். சங்கரி பதில் சொல்லுமுன் ஏனே அழுதாள். அவள் முகத் தையே பார்த்தபடி நின்ருர் அவர். ஊர் திரும்ப வழியற்றவளோ? உற்றுக் கவனித் தார் ஸ்டேஷன் மாஸ்டர்.

"நீங்கள்.. நீங்கள்.. கடலூர்ச் சங்கரி பம்மாளா?" ஸ்டேஷன் மாஸ்டர் இப்படிக் கேட்கவும், சங்கரி தலே நிமிர்ந்து அவரையே பார்த்தாள். அவள் கண்களில் நம்பிக்கை ஒளி சுடர்விட்டது.

தெய்வமே தனக்கு முன்வந்து நிற்கிறதோ, கன் அவல நிலேக்கு மனமிரங்கி? ஒரு வேளே அவனே? அவனேதானே? எப்படிக் கேட்பது? தைரியத்தை வரவழைத்துக்கொண்டு கேட்டே விட்டாள் சங்கரி.

"யார் நீ? ராமசந்திரனு?" சங்கரி கேட்டு நிறுத்தினுள். "நான் ராமசந்திரன்தான் அம்மா! எங்கே நீங்கள் தனியாக வந்தீர்கள்? இந்த நிலேயில் உங்களேப் பார்க்க மிகவும் கஷ்டமாக இருக்கு அம்மா. ரகுராமனின் அப்பா எப்போது?.." கேட்டு நிறுத்திக் கண் களேக் கைகுட்டையால் துடைத்துக்கொண் டார், அந்த ஸ்டேஷன் மாஸ்டர். மதகை உடைத்துக்கொண்டு வார்த்தை வெள்ளம் பாயத் தொடங்கியது.

கடைசிப்பிள்ளே ராஜாமணி அங்கே ஹிமயத் நகரில் இருப்பதையும், அவனேப் பார்க்க வந்த தையும் சற்றுமுன் நடந்த சந்திப்பையும் அழுகைக்கிடையே கூறி முடித்தாள் சங்கரி.

ஸ்டேஷன் மாஸ்டரின் கண்கள் எரியும் நிலக்கரித் துண்டாக மாறியது. பல்லேக்

நடந்துகொள்ளும் விதமா இது? நீங்கள் சொல்வதைக் கேட்டு நான் ஆச்சரியமே அடையவில்லே அம்மா! உங்கள் கடைசிப் பிள்ளே ராஜாமணி மனிதனே அல்ல. எனக்கு ஏற்பட்ட அநுபவத்தைக் கொண்டே நான் என்றைக்கோ எடை போட்டுவிட்டேன்.

"ஆமாம் அம்மா! ராஜாமணியை நான் நான்கு மாதங்களுக்கு முன்பு பார்த்தேன். ரொம்ப நாள் கழித்துப் பார்த்த ஆசையில், ஆவலோடு 'டியூட்டி' நேரத்திலேயே பேச ஓடினேன். ஆனுல் முகம் கொடுத்து ஒரு வார்த்தை என்னேடு பேசவில்லே. 'தெரியாது! உன்னே எனக்கு ஞாபகம் இல்லே' என்று சொல் லிக்கொண்டே, தன் மனேவியுடன் அலட்சிய மாக என்னேப் பார்த்துக்கொண்டே போனுன். இங்கே ஹிமயத் நகரில் ராஜாமணி இருப்பது எனக்கும் தெரியும்." நீண்ட பெருமூச்சுடன் இதைக் கூறி முடித்துவிட்டு, "ஏய் போர்ட்டர் சலோ!" என்று குரல் கொடுத்தார் அவர்.

"அப்படியா?" சங்கரி ஆச்சரியத்தால் கண்களே அகல விரித்தாள். "ஏதாவது அவசர வேலேயாகப் போக வேண்டியிருந் திருக்கும்! நீ தப்பா நினேக்காதே ராஜா மணியை!" தாயுள்ளம் அந்த நிலேயிலும் தம் பிள்ளேயைப் பிறர் குறைகூற இடங் கொடுக்காமல் பூசி மெழுகுவதைக் கண்டு தமக்குள் சிரித்துக் கொண்டார் அந்த ஸ்டேஷன் மாஸ்டர்.

போர்ட்டர் வந்ததும் இந்தியில் ஏதோ சொன்னுர். போர்ட்டர் சங்கரியின் பெட்டி, கூடை இவற்றைத் தூக்கிக்கொண்டான். "நீங்கள் இவனுடன் என் குவார்ட்டர்ஸுக் குப் போங்கள். என் மனேவியிடம் இவன் விவரம் சொல்வான். நான் அரைமணியில் அடுத்த எக்ஸ்பிரஸை அனுப்பிவிட்டு வந்து விடுகிறேன்" என்ருன், சீதம்மாளின் பிள்ளே.

"ராமசந்திரா! உன் அன்புக்கு ஈடா என் வயிற்றில் பிறந்த பிள்ளேகளின் அன்பைச் சொல்ல எனக்கு வாயில்லேயப்பா!" என்று நன்றிப் பெருக்குடன் கைவணங்க முற்பட்ட சங்கரியைத் தடுத்து வணங்கினுன் ராம சந்திரன்.

"அம்மா மட்டும் உயிரோடிருந்தால் உங்களே எங்கள் வீட்டிலிருந்து போகவே விடமாட்டாள்" என்ற வார்த்தைகளே முடிக் கும்போது ராமசந்திரனின் கண்கள் பனித்தன.

"என்ன! சீதம்மா என்னே முந்திக்கொண்டு விட்டாளா? கொடுத்து வைத்தவள்" என்று சங்கரி சற்றுப் பொருமையோடு சொல்லிக் கொண்டாள். ஆம். அவள் எதிர்பார்த்த சீதம்மா இன்று இல்லே.

"பந்தாக நான் உருளுகிறேன் ராமா!" என்று முப்பது வருடங்களுக்கு முன்பு பரி வோடு, உரிமையோடு கூப்பிட்டுப் பேசும் பாணியில் சொன்னுள் சங்கரி.

"இனி உருளும் பந்து அல்ல அம்மா நீங்கள். என் மறைந்த அன்னேயின் அன்பை ஈடு செய்ய அன்னேயின் ஸ்தானத்தில் என் நெருங்கின 'பந்து'வாகிவிட்டீர்கள். என்னுடனேயே நீங்கள் இனித் தங்கிவிடலாமே!" உள்ளன் போடு வெளிவந்த அந்த வார்த்தைகள் அந்த அன்னேயின் நொந்த உள்ளத்துக்கு மிகவும் இத மாக இருந்தன.

இந்தப் பாச உணர்வோடு கூடிய வேண்டு கோள் யாரிடமிருந்து வரும் என்றுதானே சங்கரி இத்தனே நாளும் ஏங்கினுள்? ★

# வருவானோ?

## நெல்லை. ஆ. கணபதி



வழிமேல் விழிவைத்து—வீட்டில்
வாசல் கதவோரம்
அழியைப் பிடித்தபடி—தினமும்
அவள்ஏன் நிற்கின்றாள்!

சின்னஞ் சிறுசேயாய்—முன்பு
திரிந்தே மகிழ்ந்ததெல்லாம்
எண்ணிப் பொழுதெல்லாம்—ஏனோ
இன்பம் அடைகின்றாள்?

பருவம் அழகினையே—தந்து
பாங்குற வளர்த்திடினும்
வருவார் இல்லாமல்—மங்கை
வாடும் நிலைகொண்டாள்.

நாடி வரும்ஒருவன்—நிழலில்
நடந்து மகிழ்வுடனே
தேடிப் பணிவிடைகள்—வாழ்வில்
செய்யத் துடிக்கின்றாள்!

ஆயிரம் கனவுகளை—மனத்தில்
அடக்கித் தானுமொரு
தாயென ஆவதற்குத்—தானே
தவியாய்த் தவிக்கின்றாள்!

கண்ணே! மணியென்று—பெற்றுக்
களித்த தாய்தந்தை
பெண்ணோர் துயர்என்றே—இன்று
பேசும் நிலைகொண்டாள்.

வறுமை ஒருபக்கம்—ஏறும்
வயதோ மறுபக்கம்
பொறுமை இல்லாமல்—மனத்தைப்
புண்பட வைக்கிறது!

கன்னிப் பெண்களையே—மணக்கக்
காளையர் கேட்கின்ற
பொன்பொருள் சீர்வரிசை—அன்றோ
பூமியை ஆள்கிறது?

காலம் வருமென்று—நம்பிக்
காத்தே இருக்கின்றாள்!
ஞாலம் தனில்என்று—ஏற்ற
நாயகன் வருவானோ?

# அண்ணாமலை சூடிய மலர்

அழகான மலை; உயரம் சுமார் 2000 அடிக்குமேல் இருக்கலாம்; கிரி வலமாக வந்தால் சுமார் 8 மைல் ஆகும். இந்த 8 மைல் சுற்றளவில் 365 திருக் குளங்கள் இருக்கின்றன; ஒவ்வொரு குளமும் ஒவ்வொரு தீர்த்தம்; மலைக்குப் பின் பாரிசத்திலே அடி அண்ணாமலை அல்லது ஆதி அருணாசலம் என்னும் அழகான கோயில் ஒன்று இருக்கிறது; மலையைச் சுற்றி வரும்போது மற்றப் பக்கங்களிலிருந்தும் மலையைப் பார்ப்போம். ஒவ்வொரு புறத்திலிருந்தும் பார்க்கும்போது அண்ணாமலையின் தோற்றம் வெவ்வேறு விதமாகப் பொலியும்; குறிப்பிட்ட இடத்தில் நின்றுகொண்டு, ''உண்ணாமலைத் தாயே!'' என்று கூப்பிட்டால், ''ஏன்?'' என்று குரலொலி கேட்கும். ''பாலும் சோறும் தருகிறாயா?'' என்றால், ''தருகிறேன்'' என்று பதில் கிடைக்கும்....

கால் முடமான பக்தருங்கூடக் கிரிப் பிரதட்சிணம் வருவதைப் பார்க்கலாம்; மகிமை மிகுந்த அருணாசல புராணம் கூறுகிறது: ஊன்று கட்டைகளின் துணைகொண்டு ஒரு முடவர் கிரிவலம் வரப் புறப்பட்டாராம். இறைவன் எதிர்ப்பட்டு அவருக்குக் கால்களை வழங்கிக் கருணை காட்டினானாம்....

அண்ணாமலைத் தீபத்துக்குத் தேவஸ்தானத்திலிருந்து நெய் சிறிதளவே அனுப்புகிறார்கள். ஆனால் ஒவ்வொரு தர்ம ஸ்தாபனமும் நெய்யைக் குடம் குடமாக அனுப்பி வைக்கின்றது. பிரார்த்தனை செய்துகொண்டவர்கள் அனுப்பும் நெய்க் குடங்கள் எண்ண முடியாதவை;

தீபத்தன்று காலை முதல் மாலை வரை நெய்க் குடங்கள் மலைக்குமேல் சென்ற வண்ணமாக இருக்கும்; குடங்களை மலையுச்சியில் வாழ்கிற வேடர்களே சுமந்து செல்கிறார்கள்; மலையுச்சியில் இருக்கிற செப்புக் கொப்பரையில் நெய்யையெல்லாம் வார்த்துத் தீபம் போடுகிறார்கள். 'அண்ணாமலையானுக்கு அரோகரா!' என்ற பக்தர்களின் கோஷம் மலை எங்கும் எதிரொலிக்கும். விண்ணெல்லாம் ஜோதியாக ஒளிரும் அண்ணாமலையானின் கருணையைப் பக்தர் குழாம் மாந்தித் திளைக்கும். அது கண்கொள்ளாக் காட்சி.

நிற்க, பத்துப் பதினோர் ஆண்டுகளுக்கு முன் ஒரு புகைப்படக்காரர் அண்ணாமலையார் கோவிலுக்கு வந்தார். மூலவரை ஃபோட்டோ எடுத்தார். பின்னர்க் கோபுரத்தின்மீது ஏறி அங்கிருந்தும் சில ஃபோட்டோக்கள் எடுத்தார். அப்பால் அங்கிருந்தபடியே கீழே நின்ற ஒருவரிடம் தம் காமிராவைக் கொடுக்க முயன்றபோது அது கைதவறிக் கீழே விழுந்துவிட்டது. ஃபிலிம் சுருள் எல்லாம் பாழாகிவிட்டன; மீண்டும் அவர் பிடிவாதமாக மூலவரை ஃபோட்டோ எடுத்துக்கொண்டு திரும்பி

அந்தப் புகைப்படக்காரர் இறைவனடி சேர்ந்தார் என்று மட்டுமே தெரியவந்தது;..

இவைபோல என்ன என்னவோ சுவையான தகவல்கள், சுவாரசியமான விஷயத் தொகுப்புகள் எல்லாம் கொண்டு கலைக்களஞ்சியம் போல் அமைந்திருக்கிறது, அருள்மிகு அண்ணாமலையார் திருக்கோயில் கும்பாபிஷேக மலர்.

திருவண்ணாமலையின் தலச் சிறப்பு, தேரும் திருவிழாவும் முதலிய பல்சுவை விரவிய கட்டுரைகளின் கதம்பத் தொகுப்பு இது;

முன்னுரையில் வாகீச கலாநிதி திரு கி. வா. ஜ; குறிப்பிடுவதுபோல், ''இந்த மலர் முழுவதையும் படிக்கச் சில நாளாகும். படித்து முடித்துவிட்டால் நம் மனத்தில் திருவண்ணாமலை விசுவரூபம் எடுத்து நிற்கும். அண்ணாமலைக் கோயில் அருட்கதிர் வீசும் பேரொளி விளக்காய், வரலாற்றின் பல பகுதிகளையும் கண்டு வளர்ந்த மாளிகையாய், சிற்பக் கருவூலமாய், புலவர் போற்றும் புகழ்க் கோயிலாய், அருளாளர் பலரை வாழ்வித்த அரும் பதியாய், ஞானியர் வாழ்ந்த சாந்த நிலையமாய், பொருளுடையாரை அருளுடையராக்கிய புண்ணியத் தலமாய், மக்களை வாழ்விக்க ஓங்கிய மகோன்னதப் படைப்பாய், காலங் கடந்து நிற்கும் அற்புத சாதனையாய்த் தோன்றும்!''

தமிழகத்தில் இலக்கியத் துறையிலும், சமயத் துறையிலும், வரலாற்றுத் துறையிலும் சிறப்புற்று விளங்கும் வித்தகர் பலர் இந்த மணம் மிகுந்த மாமலரைப் படைக்க உதவியிருக்கிறார்கள்; ஆற்றலும் அனுபவமும் பெற்ற திரு சோமலெ பலபல அரிய செய்திகளை அங்கங்கே அழகுபடக் கோத்து ஆர்வத்தோடு பதிப்பித்திருக்கிறார்; அதோடு திருக்கோயிற் பகுதிகள், சிற்பங்கள், உற்சவ மூர்த்திகளின் படங்களும், அருளாளர் பலரின் அரிய ஃபோட்டோக்களும் மலருக்கு மேலும் அழகூட்டுகின்றன; ஏனைய சில கும்பாபிஷேக மலர்களைப் போல் அல்லாமல் இந்த அருணைக் குடமுழுக்கு விழா மலர் பொருள் பொதிந்து பொலிவதற்குப் பதிப்பாசிரியரின் உழைப்பே காரணமாக இருக்கக்கூடும்; ஆலயந்தோறும், ஆஸ்திகர் இல்லந்தோறும் இருக்க வேண்டிய இந்த அரிய மலரின் விலை ரூ; 35/-

32, ஹாடோஸ் ரோடு, நுங்கம்பாக்கம், சென்னை-600006;

அருள்மிகு அண்ணாமலையார் தேவஸ்தான அலுவலகம், திருவண்ணாமலை-606601;

மேலே குறிப்பிட்ட இரு முகவரிகளிலும் அன்பர்கள் மலரை வாங்கிக் கொள்ளலாம்;

## கவர்ச்சியான கருமைக் கூந்தலுக்கு

# கேசவர்த்தினி

பெண்மையின் எழிலுக்கு முழுமை அளிப்பது அழகிய கூந்தலின் கவர்ச்சிதான்! கேசவர்த்தினி உபயோகித்துக் கருமையான, பட்டுப்போன்ற மென்மையான, கவர்ச்சி மிக்க நீண்ட கூந்தலை உங்களுடையதாக்கிக் கொள்ளுங்கள். கூந்தல் உதிருமோ என்ற பயம் இனி வேண்டாம்.

உங்கள் விருப்பம் போலவே தேங்காய் எண்ணெய், ஆலிவ் எண்ணெய் அல்லது கடுகு எண்ணெய்யுடன் கலந்து உபயோகித்து மேலான பயன் பெறுங்கள்.

எல்லா நல்ல பழக்கங்கள் போலவே கேசவர்த்தினியை சிறுவயதி லிருந்தே ஆரம்பித்து விடுங்கள்.

உங்கள் ஆடவருடன்...உங்கள் முக்கிய ரகசியத்தைப் பகிர்ந்து கொள்ளுங்கள்... அவருக்கும் கேசவர்த்தினி உபயோகிக்கும் பெருமையை அளித்து, பிறகு அதிசய மாறுதலைக் கண்டு மகிழுங்கள்.




**கேசவர்த்தினி**
**பிராடக்ட்ஸ்,**
சென்னை-600 087.



பாவையரின் கூந்தல், கனவை நனவாக்குகிறது கேசவர்த்தினி
அன்றும். இன்றும் என்றும் கூந்தல் பராமரிப்பாளர்கள்.




"ஆண்ட்டீ''

மிக மெதுவான இனிய குரல் கேட்கிறது.

திரும்பிப் பார்க்கிறேன். அந்தச் சின்னப் பெண் நின்றிருக்கிறாள். நான் அடிக்கடி தெருவில் பார்க்கிற அந்தச் சின்னப் பெண்தான். சுருளான முடி, குறுகுறுப்பான கண்கள். கான்வென்ட் உடையில் தோளில் புத்தகப் பை ஊஞ்சல் ஆட எங்கள் ஃப்ளாட்டுக்கு எதிரில் ஸ்கூல் பஸ்ஸுக்காகக் காத்திருப்பாள். சில சமயங்களில் தன் தோழிகளுடன் 'ரிங்கா ரிங்கா ரோஸஸ்' என்று குதித்துப் பாடிக் கொண்டிருப்பாள்.

அந்தச் சின்னப் பெண்ணைப் பார்க்கிற போதெல்லாம், ஊரிலிருக்கும் என் குட்டித் தங்கையின் நினைவு வந்துவிடும் எனக்கு. அந்தப் பெண்ணைக் கூப்பிட்டு வைத்துக்கொண்டு அதன் கதுப்புக் கன்னங்களைக் கிள்ளி, முத்தம் கொடுக்க வேண்டுமென ஆசை உண்டாகும். பல தடவைகள் நான் அவளைக் கூப்பிட்டதுண்டு. முகத்தைத் திருப்பிக்கொண்டு அலட்சியமாக இருந்து விடுவாள் அவள். எனக்கு ஏக்கமாக இருக்கும்.

''என்ன ஆண்ட்டி, யோசிச்சுக்கிட்டு இருக்கீங்க? நான் கூப்பிட்டது காதில் விழவில்லையா?''

''ஓ, காதில் விழுந்ததே!'' என்றபடி அந்தச் சிறுமியை அணைத்து அதன் கதுப்புக் கன்னத்தில் முத்தம் கொடுக்கிறேன்.

''உன் பெயர் என்னம்மா?''

''என் பேரு சுஜாதா. எங்க அப்பா என்னைச் சுஜி என்று கூப்பிடுவா. எங்க அம்மா என்னைச் சுஜ்ஜுக்கண்ணு என்று கூப்பிடுவா.''

''உன் சிநேகிதி எல்லாம் எப்படிக் கூப்பிடுவா?'' என்று கேட்கிறேன்.

அந்தப் பெண் தன் சின்ன வாயைக் குவித்துக் கண்களைக் கொட்டிக் கொட்டிப் பேசுவது எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

''சுஜ்ஜி, சொஜ்ஜி, பஜ்ஜி என்று என்னைக் கேலியாகக் கூப்பிடுறாங்க ஆண்ட்டீ'' என்று அவள் முறையிட்டபோது எனக்கு மிகவும் வேடிக்கையாக இருக்கிறது.

''நாளைக்குச் சாயந்தரம் நான் வரட்டுமா ஆண்ட்டீ?'' சுஜாதா குழைகிறாள். நான் மெய்ம்மறந்து போய் உட்கார்ந்திருக்கிறேன்.

''நாளைக்கு நான் வரட்டுமா ஆண்ட்டீ?'' அழுத்தமாகக் கேட்கிறாள் சுஜாதா.

''ஓ வாயேன்'' என்று சொன்னதும், ஓடி வருகிறாள் சுஜாதா.

கதவைத் தாழிட்டு விட்டு வந்து உட்கார்ந்து கொள்ளுகிறேன்.

'என்னைப் பார், என் அழகைப் பார்' என்கிற மாதிரி, எதிரே வைத்திருந்த டெலிவிஷன் பெட்டியையே பெருமிதத்துடன் பார்த்துக்கொண்டிருக்கிறேன். பெட்டியின் பளபளப்பும், கண்ணாடித் திரையின் மினுமினுப்பும் மனசைக் கவ்வுகின்றன. கண்ணாடித் திரையில் என் பிம்பத்தைப் பார்த்து ரசித்துக்கொண்டிருந்தபோது, நகத்தின் நுனியால் மிக நாஸுக்காக யாரோ கதவைத் தட்டுகிறார்கள்.

கதவைத் திறக்கிறேன்; மிஸ் அனிதா மல்ஹோத்ரா நின்றிருக்கிறாள்.

''நான் உள்ளே வரலாமா?'' என்று அழகான இந்தியில் கேட்டபடியே உள்ளே வந்து உட்கார்ந்துகொள்கிறாள்.

என்ன பேசுவது என்று புரியாமல் திருதிருவென விழிக்கிறேன் நான். பிறகு இழுத்துச் செருகியிருந்த புடைவைத் தலைப்பை எடுத்துவிட்டு, புடைவைச் சுருக்கங்களை நீவி விட்டுக் கொள்கிறேன்.

''ஓ இந்தப் புடைவை எங்கே வாங்கினீர்கள்? மிக அழகாக இருக்கிறதே!''

நான் சொன்னேன். ''மதராஸ் புடைவைகள் என்றால் எனக்கு ரொம்பவும் பிடிக்கும். புடைவை மட்டும் அல்ல. உங்கள் காபி, இட்லி, மசாலா தோசை எல்லாமே மிகவும் பிடிக்கும்'' என்கிறாள். ''ஒரு நிமிஷம், இதோ காபி கொண்டு வருகிறேன்'' என்றபடி சமையல் அறைக்குள் புகுந்து கொள்கிறேன்.

அவளும் கூடவே வருகிறாள். எனக்குச் சங்கடமாக இருக்கிறது.

காபிப் பொடி அரைக்கிற மிஷினைச் சுழற்றிப் பார்க்கிறாள். காபி ஃபில்டரை எடுத்துப் பார்க்கிறாள். ''ஓ இதெல்லாம் என்ன?'' என்று ஆச்சரியத்தோடு கேட்கிறாள்.

காபிக் கொட்டையை அரைத்து டிகாக்ஷன் போடும் விதத்தை விவரமாக விளக்கியதோடு போட்டும் காட்டுகிறேன்.

''எவ்வளவு நேர்த்தியான காபி!'' என்றவாறே காபியைத் தொட்டி மாடுபோல் உறிஞ்சிக் குடிக்கிறாள்.

''எங்களுக்கு இந்த மாதிரியெல்லாம் காபி போட வராது: ப்ரூ காபிதான் எங்களுக்குப் போட வரும்'' என்று

கிருள் அவள். காபிக்கடையை முடித்துக் கொண்டு நானும் மிஸ் அனிதாவும் ஹாலில் வந்து அமர்ந்துகொள்கிறோம்.

அறையைச் சுற்றிலும் நோட்டம் விடுகிருள் மிஸ் அனிதா. ''ஓ நீங்கள் எப்போது டெலிவிஷன் வாங்கினீர்கள்?'' என்று ஆச்சரியத்தோடு கேட்கிருள்.

''நேற்றுத்தான்.''

பெருமையோடு சொல்கிறேன் நான்.

''டெலிராடா, டெலிவிஸ்டாவா, ஜே. கேயா, கிருஷ்ஷா, கிரிஸ்டல்லா என்ன மாடல்?'' என்று இந்தியாவிலுள்ள அத்தனை மாடல்களின் பெயரையும் அடுக்கிக்கொண்டே போகிருள் மிஸ் அனிதா.

அவள் சொல்லாத ஒரு மாடலின் பெயரைச் சொல்கிறேன் நான். ஓர் அசட்டுச் சிரிப்பு சிரித்துக்கொள்கிருள் அவள்.

''நீங்கள் என் வீட்டுக்கு வருவதேயில்லை'' என்று குற்றம் சாட்டுகிருள். ''அடிக்கடி நானும் வருகிறேன், நீங்களும் வாருங்கள். உங்களுக்கு 'ஸ்வெட்டர்' பின்னச் சொல்லித் தருகிறேன். நீங்கள் எனக்கு இட்லி, தோசை சாம்பார் முதலியன செய்யக் கற்றுக் கொடுங்கள்'' என்று ஏதோ பெரிய ஹாஸ்யம் பேசின மாதிரி பெரிதாகச் சிரிக்கிருள். நான் சகஜமாக அவளிடம் உரையாடும் நிலைக்கு வருமுன், ''நாளை மாலை வருகிறேன்'' என்றவாறே குதிகால் செருப்பு டக்கென ஒலிக்க விரைந்து சென்று விடுகிருள், மிஸ் அனிதா மல்ஹோத்ரா.

எனக்கு ஒரே வியப்பும் திகைப்புமாக இருக்கிறது. அனிதா எங்கள் 'பில்டிங்'கில் இருப்பவள்தான். இதே அனிதாவைப் பல தடவைகள் மாடிப் படிகளில், மொட்டை மாடியில், தெருவில், இன்னம் அநேக இடங்களில் சந்தித்திருக்கிறேன். என்னைப் பார்க்கிற போதெல்லாம் ஏதோ பல்லி, கரப்பானைப் பார்ப்பது போல மிகவும் அலட்சியப் பார்வையை வீசிவிட்டுப் போவாள். என்னை மட்டும் அல்ல; மதராசிகள் என்றுலே அவளுக்கு ஓர் அலட்சியம். ''கறுப்பும் சிவப்பும் நீலமுமாகத் தடித்த புடைவையைக் கட்டிக்கொண்டு, சதா காலமும் அந்தப் புடைவைத் தலைப்பை இழுத்துச் செருகிக் கொண்டு அடுப்படியிலே வளைய வருகிறவர்கள் இந்தப் பெண்கள்'' என்று என் காதுபடவே சொல்லிக் கொண்டிருப்பாள். அந்த அனிதா இப்போது என் வீடு தேடி வந்து, என்னை, என் வீட்டை, என் புடைவையை, என் வீட்டு அலங்காரத்தைப் புகழ்ந்து பேசுகிருளென்றுல்.. அதற்கு என்ன காரணம்?

மிஸ் அனிதாவின்

மிப்பாகவும் திகைப்பாகவும் பெருமையாகவும்கூட இருக்கிறது.

நான் டெலிவிஷன் பெட்டியையே பார்த்துக்கொண்டிருக்கிறேன். கதவைப் படபடவென்று யாரோ இடிக்கிருர்கள். கூடவே அழைப்பு மணியையும் அலற விட்டுக்கொண்டே, ''அம்புஜம்!'' என்று கூப்பிடுகிருர்கள். அவசரமாக எழுந்து கதவைத் திறக்கிறேன். எதிர் வீட்டு வயதான மாமி நின்றிருக்கிருர். பெரிய சரீரமாதலால் மேல் மூச்சு வாங்குகிறது.

''வாருங்கள் மாமி'' என்று அகமும் முகமும் மலர வரவேற்கிறேன். சோபாவில் உட்கார வைத்துவிட்டு மின் விசிறியை வேகமாகச் சுழலவிடுகிறேன். ஃபிரிஜ்ஜிலிருந்து ஜில்லென்று ஒரு டம்ளர் ஜலம் எடுத்து வந்து தருகிறேன். குடித்துவிட்டு, ''அம்மாடீ! பல் கூசுகிறது.'' என்கிருள் மாமி. ஈயம் பூசுகிறவனுடைய துருத்திபோல, இன்னமும் புஸ்புஸ்ஸென்று மூச்சு வருகிறது மாமிக்கு.

''நாலுபடி ஏறினுல் எப்படி மூச்சு வாங்குகிறது பார்த்தியோடிம்மா?'' என்று அங்கலாய்க்கிருர்.

''நீங்கள் வாசலில் நின்று ஒரு குரல் அம்புஜம் என்று கூப்பிட்டிருந்தால் நானே வந்திருப்பேனே'' என்று நானும் பதிலுக்கு அங்கலாய்க்கிறேன்.

'உன்னையா பார்க்க வந்தேன்? டெலிவிஷனையல்லாவா பார்க்க வந்தேன்?' என்கிற மாதிரி டெலிவிஷன் பக்கமாகத் திரும்பி உட்கார்ந்து கொள்கிருர் மாமி.

''ஏது இது அம்மா? வாங்கப் போறேன்னு சொல்லவே யில்லையே?''

''எனக்கே தெரியாது. நேற்றுத் திடீரென்று இவர் வாங்கி வந்தார்'' என்று மாமிக்குச் சமாதானம் சொல்லுகிறேன்.

''நேத்து எங்க பேரன் ஸ்கூல்லேருந்து திரும்பி வரப்போ சொன்னுன், பாட்டீ எதுத்த



''ரிங்கா ரிங்கா ரோஸஸ்...''

வீட்டுக்கு டி. வி. வந்திருக்குன்னு? ஆனாலும் எனக்கு நம்பிக்கைப்படலே. வாசலிலே வந்து அண்ணாந்து பார்த்தேன், தட்டாரப்பூச்சி மாதிரி ஏரியல் நின்னுண்டிருந்தது. ஆனாலும், உங்க வீட்டிலே வாங்கியிருக்கேளா, இல்லே, மேல் மாடியிலே அந்தப் பஞ்சாபிக்காரி வாங்கியிருக்காளான்னு பார்த்துவிட்டுப் போகலாம்னு வந்தேன்.''

மாமி மூச்சைப் பிடித்துக்கொண்டு பேசுகிருள். அத்தனை மூச்சும் சிறிது நேரத்துக்குப் புஸ் புஸ்ஸென்று சீறிக்கொண்டு வருகிறது.

''நாளைக்கி என்ன சினிமா காட்டறாளாம்?'' மாமி அசிரத்தையாகக் கேட்கிருள்.

''ஹிந்திப்படம் மாமி'' என்கிறேன்.

''அப்போ நாளைக்கிச் சாயந்திரமா வரேன்.'' மாமி மாடிப்படி இறங்குகிருள். கூடவே நானும் இறங்கி வழியனுப்புகிறேன்.

''எங்க வீட்டுப் பிள்ளை கூட, இன்னிக்கே டெலிவிஷன் வாங்கிண்டு வரேன்னு ஒத்தைக் காலில் நிற்கிறுன். நான்தான் வேண்டாமென்று சொல்லிட்டேன்'' என்கிருள் மாமி படியிறங்கியபடி.

''ஏன்?''

''ஏதுடீ அப்படிக் கேட்டுட்டாய்? சின்னப் பசங்கள் எப்பப் பத்தாலும் அதையே பார்த்துண்டு இருக்காதா? அப்புறம் படிக்கிறத்துக்கு நேரம் ஏது?''

மாமி போய்விட்டாள். நான் மாடியேறி வருகிறேன். மாமி சொன்னதை நினைத்தால் சிரிப்பு வருகிறது.

மாமி எதிர் வீட்டில் குடியிருக்கிருள். மூன்று பிள்ளைகள், மாட்டுப் பெண்கள், மூன்று பேரன் பேத்திகள். வீட்டில் நிறையப் பேர். சாதாரண வருவாய். நாள் முழுதும் வேலை சரியாக இருக்கும். மாமி சாயங்கால நேரங்களில் சற்று ஓய்வாக வாசல் திண்ணையில் உட்கார்ந்திருப்பாள். நான் தெருவில் வரும்போதும் போகும்போதும் என்னைப் பார்த்துச் சிரிப்பாள். கூப்பிட்டு விசாரிப்பாள். பேச்செல்லாம் பெரிய தோரணையாக இருக்கும்.

''எங்கள் வீட்டுக்கு வாருங்களேன்'' என்று கூப்பிடுவேன் நான்.

''ஐயோடியம்மா, எனக்கு மாடியேற முடியாது'' என்பாள்.

வரிசையாகப் பெரிய பெரிய வியாதிகளின் பெயரையெல்லாம் சொல்லி, எல்லா வியாதிகளும் தனக்கு இருப்பதாகப் பட்டியல் தருவாள் அந்த மாமி. மாடியேறி வந்து உட்கார்ந்து கொண்டு என்னுடன் பேசிக்கொண்டிருந்தாள் என்றால்....எதற்காக?

நான் ஆசையோடு டெலிவிஷன் பெட்டியைத் தடவிக் கொடுக்கிறேன். சின்னக் குழந்தையை முத்தமிடுவதுபோல அதற்கு ஒரு முத்தம் கொடுக்கிறேன்.

வீட்டிலேயே அமைதியாக உட்கார்ந்து சினிமாப் பார்க்கப் போவதை எண்ணிப் பார்க்கிறேன். மனம் மகிழ்ச்சியினால் பூரித்துப் போகிறது.

முன்பெல்லாம் தியேட்டரில் படம் பார்க்கப் போகும் அவலத்தை மனக்கண் முன் கொண்டு வருகிறேன். சிரிப்பு வருகிறது.

அவசரமாக டிபனை முடித்து, இரவு சமையலை முடித்துவிட்டு, அலங்காரத்தையும் முடித்துக்கொண்டு, பஸ் பிடித்து, தியேட்ட

களில் டிக்கெட் கிடைக்காமல் போகும். ஏமாற்றத்தோடு கடற்கரைக்குச் சென்ற எத்தனையோ நாட்கள் நினைவுக்கு வருகின்றன. சிரித்துக் கொள்கிறேன்.

''என்ன, தனக்குள்ளேயே சிரித்துக் கொள்கிருயே? சீக்கிரமாக வேலையை முடித்துக் கொண்டு வா. ஆறரை மணிக்கெல்லாம் படம் ஆரம்பித்துவிடும்'' என்கிருர் இவர்.

மணியைப் பார்த்தபடியே சோபாவில் உட்கார்ந்திருக்கிறேன் நான். இவர் டி. வி. யை 'ஆன்' பண்ணுகிருர். படம் ஆரம்பமாகி விடுகிறது. சினிமாவின் பெயர், நடிக, நடிகையர் பெயர் இவை எல்லாம் ஓடிக்கொண்டிருக்கும்போது வாசல் அழைப்பு மணி அலறுகிறது. கூடவே டிவியிலும் கொர கொர என்ற சப்தம். எழுந்து சென்று திறக்கிறேன்.

''குட் ஈவினிங் ஆன்டீ. குட் ஈவினிங் ஆண்ட்டி'' என்றபடி சுஜாதா உள்ளே வருகிருள்.

படம் பார்க்க ஆரம்பிக்கிறேன் ஆவலோடு.

மறுபடியும் வாசல் அழைப்புமணியின் அழைப்பு அலறல். அதே சத்தம் டி.வி. யிலும் எதிரொலிக்கிறது.

இவர் கோபமாக எழுந்து சென்று கதவைத் திறந்து விடுகிருர். கையோடு அழைப்பு மணியையும் 'டிஸ்கனெக்ட்' செய்து விட்டு வருகிருர்.

எதிர் வீட்டு மாமியும், பேரன் பேத்திகளும் சோபாவை அடைத்துக்கொண்டு விடுகிருர்கள்.

நான் உள்ளே சென்று சாப்பாட்டு மேசையடியில் கிடக்கும் மடக்கு நாற்காலிகளைப் பிரித்துப் போட்டுக்கொள்கிறேன். நானும் அவரும் உட்காருகிறோம். அவர் ஏதோ முணுமுணுக்கிருர்.

ஐந்து நிமிஷம் சென்றிருக்கும்.

கதாநாயகனும் கதாநாயகியும் முதல் முதல் சந்திக்கிற கட்டம். சுவாரசியமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறேன்.

படபடவென்று கதவு தட்டும் ஓசை கேட்கிறது. கதவு தட்டும் சத்தத்துக்கும் மேலாக, இவர் கோபத்தில் பல்லைக் கடிக்கும் சத்தமும் கேட்கிறது.

எழுந்து சென்று கதவைத் திறக்கிறேன்.

குப்பென்று ஃபாரின் ஸெண்ட் மணம் வீசுகிறது. அந்த மங்கிய ஒளியிலும் புடைவையில் தைத்திருக்கும் ஜிகினு மினுக்கிறது.

''ரொம்ப லேட்டாயிடுத்தா? ஸாரி!'' என்றபடி மிஸ் அனிதா உள்ளே வருகிருள். நேரே நான் உட்கார்ந்திருந்த நாற்காலியில், அதாவது இவருக்குப் பக்கத்தில் உட்கார்ந்து கொள்கிருள்.

எனக்குப் பகீர் என்கிறது.

சே! என்ன மினுக்கு, என்ன தளுக்கு? மாடியிலிருந்து கீழே வந்து டி.வி. பார்க்க இவ்வளவு அலங்காரம் தேவைதானு?

எனக்குக் கோபமும், ஆங்காரமும் குமுறிக் கொண்டு வருகின்றன.

வேறு வழியின்றி இவருக்கு மற்ருெருபுறத்தில் கிடந்த நாற்காலியில் அமர்ந்து கொள்ளுகிறேன்.

திரையில் கவனமே செல்லவில்லை.

திரையில் கதாநாயகனும், கதாநாயகியும் ஓடிப் பிடித்து, கட்டிப் புரண்டு விளையாடிக் கொண்டிருக்கிருர்கள்.

கண்கள் பளபளக்க, மிக உன்னிப்பாகப் படத்தைக் கவனித்துக் கொண்டிருக்கிருள் அவள்.

மாமியைப் பார்க்கிறேன்.

மாமி, சுவாரசியமாக, வெகு ரசனேயோடு படத்தைக் கவனித்துக் கொண்டிருக்கிருள்.

இவரைப் பார்க்கிறேன்.

சங்கடத்தோடு நெளிந்து கொண்டிருக்கிருர். நான் இவரைப் பார்த்ததும் கோபத்தோடு பல்லேக் கடிக்கிருர்.

''இன்னும் யாரையெல்லாம் 'இன்வைட்' பண்ணியிருக்கே?''

அடித்தொண்டையில் கேட்கிருர்.

எனக்கு அழுகை பொத்துக்கொண்டு வருகிறது.

''சரி சரி! இங்கு வந்து உட்கார்ந்துகொண்டு அழு'' என்றவாறே அனீதாவின் பக்கத்தில் இடத்தை எனக்கு விட்டு, நான் உட்கார்ந்து கொண்டிருக்கும் நாற்காலியில் அவர் உட்கார்ந்து கொள்கிருர்.

இப்போதுதான் அப்பாடா என்றிருக்கிறது.

மனஅமைதியோடு படம் பார்க்கிறேன்.

காதலர்கள் ஓட்டம் முடிந்து விட்டிருக்கிறது. வில்லன் கதாநாயகியின் ஆடையைப் பிடித்திழுத்து மானபங்கம் செய்ய முற்படுகிருன்.

எனக்கு மிகவும் வெட்கமாக, சங்கடமாக இருக்கிறது. அசிங்கமாக இருக்கிறது. இந்த மாதிரியான கட்டங்களில், தியேட்டர்களில் ஏற்படாத கூச்சம் எனக்கு ஏற்படுகிறது.

இதற்குள் கதாநாயகன் எங்கிருந்தோ வந்து குதித்து விடுகிருன்.

அவ்வளவுதான் ட்ஷ்யூ... ட்ஷ்யூ...

ஆரம்பமாகி விடுகிறது. திடுமென ஹால் நடுவிலிருந்து குரல்கள் கிளம்புகின்றன.

''உம் நல்லா ஒதை தின்னு வாத்தியாரே!''

''செமத்தியாக் குடு வாத்தியாரே.''

திடுக்கிட்டுப் பார்க்கிறேன்.

ஹால் நிரம்பி வழிகிறது.

ஐந்தாறு பெண்கள், சிறுவர்கள், சிறுமிகள் ஹாலே அடைத்துக் கொண்டிருக்கிருர்கள்.

''இதப் பாருங்கடா பசங்களா! ஐயா கோவிச்சுப் பாரு. கலாட்டாப் பண்ணுதீங்க!''

அஞ்சலேயின் குரல் கேட்கிறது.

அஞ்சலே என் வீட்டில் வேலே செய்கிறவள். டி. வி. வந்த அன்றே அவள் படம் பார்க்க வருவதாகச் சொல்லியிருந்தாள்.

இப்படியா குடும்பத்தோடு, அக்கம்பக்கத்தையும் அழைத்து வருவாள்?

''கதவைத் திறந்து வைத்து விட்டாயல்

ஹவுஸ் ஃபுல்.'' இவர் பல்லேக் கடித்தபடி சொல்கிருர்.

''ஏண்டியம்மா அம்புஜம், பாத்ரூம் எங்கேயிருக்கு? ஒரு தடவை காட்டிக் குடுத்துட்டியாளு சௌகரியமா இருக்கும். சே, இது ஒரு ஹிம்சை. ஐந்து நிமிஷத்துக்கு ஒருதரம். இதனலேதான் யார் வீட்டுக்கும் போறதில்லே!''

மாமி முடிக்குமுன் நான் எழுந்து சென்று பாத்ரூமைக் காட்டிக் கொடுத்துவிட்டு வருகிறேன்.

''பசிக்கிறது பாட்டி!''

பாட்டியின் பேரச் செல்வங்களில் ஒன்று, கீச்சுக் குரலில் கத்துகிறது. ''இருடா, ந்யூஸ் இண்டர்வெல்லில் போய்ச் சாப்பிட்டு விட்டு வரலாம்'' என்கிருள் பாட்டி. இது மாதிரி இடைவேளேயில் போய்ச் சாப்பிட்டுப் பழக்கம் போலும் அந்தக் குழந்தைகளுக்கு.

''எனக்கு போர்ன்விடாவாவது தா பாட்டி'' என்கிறது இன்ஞென்று.

''எழுந்து போய் எதற்கு எது எது வேண்டுமோ போட்டுக் கொடுத்துவிட்டு வா'' என்று இவர் என்னே விரட்டுகிருர். அரை மனசோடு எழுந்து செல்கிறேன்.

''எனக்குக் காபி, நேக்குப் பாலு, எனக்கு ஹார்லிக்ஸ், எனக்குக் கோக்கோ'' என்று பல குரல்கள் எழுகின்றன.

என்னேச் சுற்றிலும் பாட்டியின் பேரப் பட்டாளங்கள்.

எனக்கு ஓவென்று கதறியழ வேண்டும் போல இருக்கிறது. இருக்கிற பால் முழுதையும் காலி செய்தபின்பே அந்தப் பட்டாளங்கள் என்னே விட்டு விலகுகின்றன. மறுபடியும் நாற்காலியில் வந்து அமர்ந்தபோது ந்யூஸ் ஆரம்பமாகி விட்டது.



## வெற்றிக்கு முதற்படி

எந்தச் சுபகாரியத்தைச் செய்வதாயிருந்தாலும் ஆரம்பத்தில் விநாயகப் பெருமானை வழிபட்டுத் தொடங்குவது நம்மிடையே தொன்றுதொட்டு வரும் பழக்கம். எடுத்த காரியம் வெற்றியடைய யானை முகத்தான் உதவுவான் என்பது வேரூன்றிய நம்பிக்கை.

விநாயகப் பெருமானையே முழு முதற் கடவுளாக வணங்கும் வழிபாட்டு முறையும் இங்கே உள்ளது. ஆதிசங்கர பகவத்பாதர் வகுத்தருளிய ஷண்மார்க்கங்களில் காணபத்தியமும் ஒன்று.

விநாயகப் பெருமானின் அவதாரம், மகிமை, உபாசனா முறை முதலியவை விநாயக புராணத்தில் அடங்கியிருக்கின்றன. மகா கணபதி ஸஹஸ்ரநாம தோத்திரமும் அந்தப் புராணத்தில் உள்ளது. இந்தத் தோத்திரத்துக்கு ஸ்ரீவித்யா உபாஸகரான ஸ்ரீ பாஸ்கர ராயர் சுலோக உருவத்தில் உரை எழுதியிருக்கிறார்.

தமிழ் மக்கள் இந்த உன்னத நூலைப் படித்து அறியவேண்டும் என்ற நோக்கத்தில், 'கணேசப் பிரியை' என்ற பெயரில் விரிவான உரை எழுதி வெளியிட்டிருக்கிறார்கள்.

'மகாகணபதி ஸகஸ்ரநாம ஸ்தோத்திரம்' என்ற இந்த நூலை, திருவனந்தபுரம், வித்வான் வரகூர் ஸ்ரீ குருஸ்வாமி சாஸ்திரிகள், ஸ்ரீ பாஸ்கர ராயர் வியாக்யானத்தை அநுசரித்து எழுதியிருக்கிறார். மகா கணபதியை உபாஸிக்கும் பக்தர்களுக்கு இப்புத்தகம் மிகுந்த உதவியாக இருக்கும். ஐந்து ரூபாய் விலையில், ஸ்ரீ அழகிய கன்னி விநாயகர் கோயில் டிரஸ்ட், 35/867, சபாபதி கோயில் தெரு சாலை, திருவனந்தபுரம்-695023 என்ற முகவரியில் இந்த அரிய நூல் கிடைக்கும்.

---

சினிமாவில் இடைவேளை விட்டால் கூச்சலும் குழப்பமும் ஏற்படுமே அதுமாதிரி பசங்கள் கொம்மாளம் போட ஆரம்பிக்கிறார்கள்.

சில பசங்கள் கீழே இறங்கிப் போய் வாசல் முன்னாலேயே சிறுநீர் கழிக்க ஆரம்பித்து விடுகிறார்கள்.

மிஸ் அனிதா மிக ஒயிலாக எழுந்து நின்று இவரையே ஒரு பார்வை பார்த்துவிட்டு, ''கதவைத் தாழிடாதீர்கள்; வந்து விடுகிறேன்'' என்றவாறே மேல் மாடிக்குச் செல்கிறாள். பட்..

நானும் பாத்ரூம் சென்றுவிட்டுத் திரும்பும் போது, பட்....

எல்லா விளக்குகளும் அணைந்துவிடுகின்றன. டி.வி.யிலும் ஒளி வெள்ளம் மறைந்து புள்ளியாகிவிடுகிறது.

''கரண்டு கட்டாயிடுத்தாடி பொண்ணே?'' என்று கேட்கிறாள் மாமி.

''ஆமாமாம்; இப்போதைக்கு லைட் வராது. எல்லாரும் போகலாம்'' என்று வள்ளென்று விழுகிறார் இவர்.

எல்லாரும் இருட்டில் விழுந்தடித்துக் கொண்டு கீழே இறங்குகிறார்கள்.

''ஏண்டி பொண்ணே; எங்க வீட்டிலே லைட் இருக்கேடீ?'' என்று நீட்டி முழக்குகிறாள் மாமி.

''எங்க வீட்டிலே மட்டும் ப்யூஸ் போயிருக்கும்'' என்று பல்லைக் கடிக்கிறார் இவர்.

''என்ன இப்படி? நானும் பார்க்கிறேன். படம் ஆரம்பித்ததிலேருந்து இப்படிப் பல்லைக் கடிக்கிறீர்களே?'' ஓவென்று அழ ஆரம்பிக்கிறேன் நான்.

"என்ன இது அம்புஜி? சாயங்கால 'வேளை'யிலே, கதவையும் திறந்து போட்டுண்டு இப்படியா தூங்கறது? தூங்கினதோட இல்லே, ஏதோ கெட்ட சொப்பனம் வேறே கண்டிருக்கே போல இருக்கு.''

என் தோள்களை உலுக்கி எழுப்புகிறார் இவர். என்னது? அத்தனையும் சொப்பனமா? கண்ணைக் கசக்கி விட்டுக்கொள்கிறேன்.

''சொப்பனம் கண்டியா? என்ன சொப்பனம்?'' என்கிறார் இவர்.

''சொப்பனந்தான். டி.வி. வாங்குகிற மாதிரி'' என்கிறேன்.

''அடி சக்கை; பேச்சுக்குப் பேச்சு டி.வி.யைப்பத்திப் பேசிண்டிருந்தே; இப்ப, சொப்பனத்திலேயும் டி.வி. வாங்க ஆரம்பிச்சுட்டியாக்கும். அப்ப நிஜமாகவே டி.வி. வாங்கிவிட வேண்டியதுதான்?' என்கிறார் இவர்.

''ஐயோ வேண்டாமே'' என்று அலறுகிறேன் நான். ''ஏன்? என்ன ஆச்சு?'' திகைத்துப் போய்க் கேட்கிறார் இவர். கண்ட கனவு முழுவதையும் விவரமாகச் சொல்கிறேன் நான்.

இவர் விழுந்து விழுந்து சிரிக்கிறார்.

''டி.வி. வாங்கினால் இந்த மாதிரியெல்லாமா நடக்கும்?'' என்று பயத்தோடு கேட்கிறேன்.

''அட அசடே! இதற்கெல்லாம் யாராவது பயப்படுவார்களா? வா இப்போதே போய் டி.வி. செட்டுக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு வரலாம்'' என்கிறார் இவர்.

ஒரு கணம் மகிழ்ச்சியில் திளைத்து நிற்கிறேன்.

மறுகணம்....

விசித்து விசித்து அழுகிறேன்.

''அழாதே அம்புஜி, ஏன் அழறே? சொல்லிவிட்டு அழு'' என்று என்று என் தாடையைப் பிடித்துக்கொண்டு கெஞ்சுகிறார் இவர்.

''உங்கள் பல்லைக் காட்டுங்கள்'' என்கிறேன்.

இவர் திருதிருவென விழிக்கிறார்.

''நீங்கள் சொப்பனத்திலே பேச்சுக்குப் பேச்சுப் பல்லைக் கடித்தீர்கள். அதுதான் பல் எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்க்கிறேன்'' என்று சொல்லிவிட்டு மறுபடியும் விக்கி அழுகிறேன்.

''நீங்க சொப்பனத்திலே, என்னை ரொம்பவும் கோபித்துக்கொண்டீர்கள்'' என்று சொல்லிவிட்டுக் கேவுகிறேன்.

''அடி அசடே! இனிமேல் சொப்பனத்தில் கூட உன்னைக் கோபித்துக்கொள்ள மாட்டேன், எழுந்து டிரஸ் பண்ணிக்கொண்டு கிளம்பு. டி.வி. செட்டுக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு வரலாம்'' என்றபடியே என் கண்களைத் துடைக்கிறார் இவர். ★



# பிரியம்வதா + பஞ்சு + மர்ம நாவல்

"அகஸ்தியன்"

கொட்டங்கச்சியைக் காலால் தரையில் ஒரே வேகத்தில் தேய்த்தமாதிரி ஓசையை எழுப்பிக் கொண்டு திருவாளர் பஞ்சு நிம்மதியாகத் தூங்கிக்கொண் டிருந்தார். 'அகில உலகக் குறட்டை மன்னர்' என்ற பட்டத்தைக் கொடுக்க வேண்டுமானால் கண்ணை மூடிக்கொண்டு பஞ்சுவுக்குக் கொடுத்துவிடலாம்.

கூடத்தில் படுத்திருந்த பஞ்சு மாமிக்குத் தூக்கம் வரவில்லை. அன்றிரவு சமையல் வெங்காய சாம்பாரும் உருளைக்கிழங்குக் கறியும் பண்ணியது தன்னுடைய முட்டாள்தனம் என்று எண்ணிக் கொண்டாள் "கல்யாண சமையல் சாதம் காய்கறிகள் பிரமாதம்' என்று பாடாத குறையாகப் பஞ்சு வெளுத்துக் கட்டியிருந்தார். ஆகவே வழக்கத்தைவிடக் குறட்டை, வேகமாக, இரட்டை நாசி வழியாக, ஸ்டீரியோஃபோனிக் இசையாகப் பொழிந்து கொண்டிருந்தது!

இந்தச் சத்தத்துக்கு இடையில் பரண்மேல் ஏதோ கடமுடா என்று சத்தம் கேட்டது. திருடனோ என்று பயந்து பஞ்சு மாமி எழுந்தாள். பஞ்சுவை எழுப்பினாள்.

"பரண்மேலே ஓசை கேட்கிறது. எழுந்திருங்களேன். உங்களைத்தான்" என்று பல வித உணர்ச்சி பாவங்களுடன் (பயம், கோபம், வெறுப்பு, சலிப்பு) பஞ்சுவை உலுக்கிக் குலுக்கி எழுப்பினாள்.

"என்னடி, என்ன சேதி?" என்று கேட்டார்.

"நல்ல சேதிதான். கடலை எண்ணெய் விலை குறையப் போகிறது. காட்டாங்குளத்தூரில் மழை பெய்திருக்கிறது. லெபனானில் சண்டை நிற்கலாம்! ஹூம்...சேதி கேட்கிறார்! பரண்மேலே திருடன் போல இருக்கிறது என்கிறேன்."

"திருடனாக இருக்காது, குருடனாக இருக்கும். அங்கே இருக்கிற பழைய குப்பையைக் கண் இருக்கிறவன் திருட வரமாட்டான்" என்று அவர் சொல்லிக்கொண் டிருந்த போதே, வானொலி வர்த்தக ஒலிபரப்பு விளம்பரம் மாதிரி மறுபடியும் கடமுடா, கடமுடா என்று இரண்டு தரம் பரணில் ஒலி கேட்டது. பஞ்சுவுக்குத் தொண்டை வறண்டது.

"ஆமாண்டி, மெள்ளப் போய்ப் பக்கத்து வீட்டுக் காயாம்பூவை எழுப்பிக் கொண்டு வருகிறேன்."

இந்தச் சமயம் மறுபடியும் சத்தம் கேட்டது.

"பெருச்சாளியோ எலியோதான் பரணில் கலாட்டா பண்ணிக் கொண்டிருக்கிறது" என்றாள் பஞ்சு மாமி.

பஞ்சுவுக்குச் சிறிது தைரியம் வந்தது. விளக்கைப் போட்டார். பெரிய தடியை எடுத்துக்கொண்டு பரணில் இரண்டு மூன்று தடவை தட்டினார். தடாலென்று ஒரு பெரிய எலி குதித்து, சர்க்கஸ் பார் வித்தைக்காரன் மாதிரி சுற்றும் முற்றும் பார்த்துவிட்டு ஒரு லாங் ஜம்ப் செய்து ஜன்னல் வழியாகப் பாய்ந்து வெளியே ஓடிவிட்டது.

"இதோ பாருங்கள், நாளைக்கு உங்களுக்கு லீவு தான். முதல் வேலையாகப் பரணைச் சுத்தம் செய்யுங்கள். உங்கள் தாத்தா காலத்துப் புத்தகங்கள், வக்கீல் நோட்டீஸ்கள், கணக்கு நோட்டுப் புத்தகங்கள் எல்லாம் இருக்கின்றன. கால்காசு பெறாத சாமான்கள் எல்லாவற்றையும் தூக்கி எறியுங்கள்."

"அடியே, அதெல்லாம் பரம்பரைச் சொத்துடி."

"அந்த அந்தப் பரம்பரையிலே சொத்து காணிக் கணக்கிலே இருக்கும். உங்க பரம்

பரைச் சொத்து. கோணிக்கணக்கிலே பரண் மேலே இருக்கிறது. தாயக்கட்டை, சீட்டாட்டம், குதிரை முதலியவற்றில் சொத்து மொத்தத்தையும் ஒழித்த குடும்பந்தானே?''

''பஞ்சு மாமி, ராத்திரி மணி இரண்டு. இப்போது எதற்கு எல்லாரையும் சாடுகிறாய்?''

''சாடவும் இல்லே, பாடவும் இல்லே. முதல் வேலையா நாளைக்குப் பரண் சுத்தமாக ஒழிஞ்சாகணும்.''

''நாளைக்கு வந்து. ''

''என்ன வந்தும் பொந்தும்?''

''இல்லே.. நாளைக்குப் பிரியம்வதா ஃபாமிலி பிளானிங் புரோகிராமுக்காக வேலவையூர் கிராமம் போகணும் என்றாள்.''

''அவள் வேலை மெனக்கெட்டு எங்கேயாவது போகட்டும்; நீங்கள் அவள் பின்னால் பல்லை இளித்துக்கொண்டு போகவேண்டாம். ஊரிலே பேசிக் கொள்கிறது காதால் கேட்க முடியவில்லை. கல்யாணம் ஆகாத அந்தப் பொண்ணு குடும்பக் கட்டுப்பாடு திட்டப் பிரசாரம் செய்கிறாள்! வெட்கக்கேடு! காபரே காட்சிகளுக்குத் தடை வருகிற மாதிரி இவள் போல அரைகுறை டிரஸ் செய்து கொள்கிறவர்களுக்கு..''

'ஹாவ்' என்று பலமாகக் கொட்டாவி விட்டுக் கொண்டே பஞ்சு படுக்கச் சென்றார்.

* * *

தலையிலே முண்டாசு கட்டிக்கொண்டு பரணைச் சுத்தம் செய்து கொண்டிருந்தார் பஞ்சு. 'ஏய் கஸ்தூரி', 'ஏய் வாசு' என்று சத்தமும் செய்து கொண்டே சுத்தம் செய்யும் பணியில் ஈடுபட்டிருந்தார். பழைய சைக்கிள் டயர், மூன்று சக்கர வண்டி, உளுத்துப் போன பழைய மரப் பலகைகள், கட்டுக் கட்டாகப் புத்தகங்கள். ''ஒவ்வொரு வகுப்பிலும் நாலு வருஷம் படித்தால் இவ்வளவு புத்தகம் சேராமல் என்ன செய்யும்?'' (பஞ்சு மாமியின் குத்தலான விளக்கம்) துருப்பிடித்த வாளி, ஒட்டையாகிப் போன அலுமினியப் பாத்திரங்கள், பெரிய எழுத்து மதன காமராஜன் கதை போன்ற புத்தகங்கள் இப்படிப் பலவற்றைக் கீழே இறக்கிக்கொண்டிருந்தார் பஞ்சு.

இந்தச் சமயத்தில் வாயிலில் ஒரு குரல் கேட்டது. அது பிரியம்வதாவின் வாயிலிருந்து வந்த அமுதக் குரலோசை! "அங்கிள்" என்று குரலைக் கேட்டுப் பஞ்சு ஒருகணம் இறங்கிப் போனாலும் பரணிலிருந்து கீழே இறங்கிப் போகத் துணிவு வரவில்லை. பஞ்சு மாமி இரவுண்ட் ஸ்டேஷனிலிருந்து கண்ணால் கொடுத்த சிக்னல், அவரைச் செயலிழக்கச் செய்து விட்டது.

''யாரு, பிரியம்வதாவா? வாம்மா! என்ன விஷயம்?''

''சாரைப் பார்க்கவேண்டும் என்று வேலையாக வந்தேன்.''

''அவர் பரணில் இருக்கிறார். இன்னும் இரண்டு மணி நேரமாகும் சுத்தம் செய்து முடிக்க. ஒரே அழுக்கும் ஒட்டடையுமாக இருக்கிறார். குழந்தை, நீ சாயங்காலம் வாயேன்'' என்றாள்.

நெற்றியில் தோன்றிய ஏமாற்றத்தைச் சென்ட் மணம் நிரம்பிய சின்னக்கைக்குட்டையால் பிரியம்வதா ஒற்றி எடுத்துக்கொண்டிருக்கும்போது 'தடால்' என்ற பெரிய ஓசை பரணிலிருந்து கேட்டது.



"என்ன ஆச்சு? உருண்டு விழுந்திட்டீங்ளா?" என்று கேட்டுக்கொண்டே உள்ளே சென்றாள் பஞ்சுமாமி. அவளைத் தொடர்ந்து பிரியம்வதாவும் உள்ளே சென்றாள்.

"ஒண்ணும்இல்லே. இந்த மூட்டையை நகர்த்தினேன். கரப்பான் பூச்சிக் காலனிப் படை ரெண்டு என்மீது போர் தொடுக்க வந்து விட்டது. அடேடே, பிரியம்வதாவா? பரணில் ரொம்பக் குப்பை சேர்ந்துவிட்டது. சுத்தம் பண்ணுகிறேன். ஹாலில் உட்கார். பத்து நிமிஷத்தில் வருகிறேன்" என்றார், பஞ்சுமாமி யின் பக்கமே பார்வையை ஓட்டாமல். அவர் மேல் ஒரே அழுக்கு!

கீழே கிடந்த புத்தகக் குவியலில் அகப்பட்ட ஒரு புத்தகத்தைத் தூசு தட்டி எடுத்துக் கொண்டு முன்பக்க அறைக்குச் சென்றாள் பிரியம்வதா.

பரண் வேலை முடிந்து குளித்து விட்டுப் பஞ்சு வரும்போது பிரியம்வதா அந்தப் பழைய நாவலில் ஆழ்ந்து ஈடுபட்டிருப்பதைக் கண்டார்.

"என்ன புஸ்தகம்? சேஸ், கார்ட்டர் ராபின்ஸ் படிக்கிற உனக்கு இந்தமாதிரி புஸ்தகங்கள் எல்லாம்.."

"நோ நோ அங்கிள்! இந்தப் புஸ்தகம் இருக்கிறதே விநோதரஞ்சனி அல்லது திருக்கழுக்குன்றத்து மர்மக் கொலை, ரொம்ப சுவாரசியமாக இருக்கிறது. ஒரே மூச்சில் ஐம்பது பக்கம் படித்துவிட்டேன்."

"புஸ்தகத்தை எடுத்துக்கொண்டு போயேன். ஊளம்பலாமா? அடியே போய் விட்டு வருகிறேன்" என்றார் பஞ்சு. பஞ்சு மாமிக்கு மூன்றும் கண் இல்லாததால் அவர் பிழைத்தார்.

* * *

"உங்களுக்கு எவ்வளவு படிச்சுப் படிச்சுச் சொன்னாலும் ஏன் தெரியமாட்டேன் என்கிறது? சின்னப் பிள்ளையாக இருந்தால் இழுத்து நாலு சாத்துச் சாத்தி, புத்தியைத் திருத்தலாம். தொட்டுத் தாலி கட்டிய உங்களை என்ன செய்வது? அந்தப் பொண்ணோட சங்காத்தத்தை விட்டுத் தொலையுங்கள் என்றால் கேட்டால் தானே? இந்த வயசிலும் என்ன சபலமோ? சினிமா நடிகைகளே பார்த்துக் கூசும்படியாக இவள் டிரஸ் பண்ணிக் கொள்கிறாள். தோளில் முன்றானை நிற்பதில்லை. ஹூம்..."

"அடியே. சரியான பட்டிக்காடு நீ. கோடி வீட்டுச் சேஷன்தான் ஏதோ புரளி பரப்புகிறான் என்றால் அதை நீ நம்பிவிடுவதா? படிச்ச பெண்! சமூக சேவை செய்கிறாள். நீ சொல்கிறமாதிரி சபலமும் இல்லே, மண்ணாங்கட்டியும் இல்லே."

வாசலில் கார் ஹார்ன் கேட்டது. பிரியம்வதா! பஞ்சு மாமி பல்லை நறநற வென்று கடித்துக் கண்ணை உருட்டுவதைப் பஞ்சு கண்டு கொள்ளவில்லை.

"நமஸ்தே மாமி. நமஸ்தே அங்கிள்."

"வாம்மா பிரியம்வதா. என்ன இவ்வளவு காலையில்?"

"அங்கிள், அந்த நாவல், ரொம்ப மார்வலெஸ். டாப். திருக்கழுக்குன்றத்து மர்மக் கொலை, அப்படியே ரத்தத்தை உறைய வைக்கிறது. த்ரில்லிங்!"

"ஒரேயடியாகப் புகழ்கிறாயே. அவ்வளவு



பிரமாதமாகவா இருக்கிறது? ஆவடி கோவிந்த சாமி முதலியார் நாவல் என்றால் அந்தக் காலத்தில் பலர் உயிரை விடுவார்கள். அற்புத மாக இருக்கும்.''

''எல்லாம் கொலைக் கதைகள்தானே? உயிரை விடாமல் என்ன செய்வார்கள்?''

இந்த மட்டமான ஜோக்குக்குப் பஞ்சு ஹாஹா என்ற பலமாகச் சிரித்தார். சொன்னது, எழிலரசி, கவர்ச்சிப் பாவை, காந்தமோகினி, கண்ணழகி பிரியம்வதா வாயிற்றே!

''ஆனால் அங்கிள். பெரிய பிரச்னை: இந்தப் புஸ்தகத்தில் கடைசிப் பக்கம் இல்லை. ஜமீன் தாரைக் கொன்றது தம்பி இளையவனா, சிற்றப்பா ஜீவகனா, ஒற்றன் ஜயந்தனா அல்லது இளவரசி விநோதினியா என்று தெரியவில்லை. யார் கொன்றார்கள் என்று தெரிந்துகொள்ள ஒரே துடிப்பாக இருக்கிறது. கடைசிப் பக்கம் உங்கள் வீட்டில்தானே இருக்கும்?''

''வீடு எல்லாம் சுத்தம் பண்ணியாகி விட்டது. யாரோ கொலை பண்ணினார்கள். ஜமீந்தார் செத்துவிட்டார். ஆளை விடு! ஏன், இதற்கு உயிரை விடுகிறாய்?''

''நன்றாக இருக்கிறதே, நீங்கள் சொல்வது! துப்பறியும் துரைசிங்கின் சாமர்த்தியம் கடைசிப் பக்கத்தில்தானே வெளியாகும்? ஐயோ, இந்தக் கடைசிப் பக்கம் இங்கே இல்லையே!''

''அது லாஸ்ட் (Last) பேஜ் மட்டுமல்ல. எல். ஓ. எஸ். டி - லாஸ்ட் (Lost) பேஜ்கூட!'' என்று சொல்லி, தம் சிலேடையை எண்ணித் தாமே மனத்துக்குள் பாராட்டிக்கொண்டார்.

''அங்கிள் எப்படியாவது இந்தப் புஸ்த கத்தின் வேறு ஒரு பிரதியையாவது கண்டு பிடித்து வாங்கியாக வேண்டும். நீங்கள் படித்துப் பாருங்கள். கடைசிப் பக்கத்தைப் படிக்காவிட்டால் பைத்தியம் பிடித்துவிடும் போல் இருக்கும்.''

''சரி. படிக்கிறேன். பழைய காலப் புஸ்தகம். வேறு காபி யாரிடம் இருக்கும் என்று தேட வேண்டும்.''

''தேடித்தான் ஆகவேண்டும்.''

* * *

பஞ்சு மாமியின் சாபங்களையெல்லாம் ஒதுக்கிவிட்டு, ஆவடி கோவிந்தசாமி முதலியா ருக்குள் ஐக்கியமாகிவிட்டார் பஞ்சு. 'சொல் லக் கூடாது, திகில் ஊட்டும்படியாகத்தான் எழுதியிருக்கிறார் ஆவடியார்' என்று எண்ணிக் கொண்டே சோடா புட்டிக் கண்ணாடியைக் கழற்றாமல் படித்தார், இரவு வெகு நேரம் வரை.

வந்துவிட்டது கடைசிப் பக்கம்வரை கதை. ஆனால் கடைசிப் பக்கந்தான் இல்லையே! பஞ்சு வுக்கும் மிகவும் துடிப்பு ஏற்பட்டது. யார் கொலையாளி என்று கடைசிவரை ஊகிக்க முடியாதபடி எழுதியிருந்த நாவலில் புதிர் வெளியாகும் பக்கம் காணோமே! எப்படியும் மூர்மார்க்கெட்டிலாவது தேடிப் பிடித்து வாங்கிப் படித்தால்தான் திருப்தி ஏற்படும். பிரியம்வதா சொன்னது உண்மைதான். ஆவடியார் அசகாயசூரர் என்பதில் கடுகளவு சந்தேகம் இல்லை.

* * *

''பிரியம்வதா, நீ சொல்லவே வேண்டாம் எப்படியும் இந்த நாவலை நாம் முழுதும் படித்து முடிப்போம். பழைய புஸ்தகக் கடை, நூலகங் கள் எல்லாவற்றையும் அலசுவோம். வெற்றி நமதே!''

''ஆனால் அங்கிள். சீக்கிரம் கிடைக்க வேண்டுமே. என்னால் இந்தச் சஸ்பென்ஸைத் தாள முடியவில்லை.''

''எவ்வளவு செலவு ஆனாலும் புஸ்தகத்தைத் தேடிப் பிடித்து இந்தச் சஸ்பென்ஸிற்கு முடிவு கட்டுவோம். இது நம் முடிவு'' என்று நாடக பாணியில் சொன்னார் பஞ்சு. நாகரிகம் தெரிந்த பெண்ணாகையால் பிரியம்வதா நாசுக் காகக் களுக்கென்று சிரித்து வைத்தாள்.

அடுத்த பத்துத் தினங்களுக்குப் பிரியம் வதாவும் பஞ்சுவும் மூர்மார்க்கெட், சைனா பஜார், பழைய புத்தகக் கடைகள், எல்லா வற்றையும் அலசினார்கள். இடையே சில 'ஏ' படங்களைப் பார்த்தார்கள். பீச் மெல்பாவை மென்றார்கள். கோக் குடித்தார்கள்.

பஞ்சுவும் சந்தர்ப்பம் கிடைக்கும்போதெல் லாம் சொந்தப் பிரதாபங்களை அளந்தார். நிறுத்தல், நீட்டல், முகத்தல் ஆகிய எல்லா வித அளவைகளிலுமாக!

புத்தகம் மட்டும் கிடைக்கவில்லை.

''ஆவடியார் புஸ்தகம் இப்போ ஏதுங்க? கோடம்பாக்கத்திலே ஒருத்தர் சமீபத்திலே இருபது வருஷத்துக்கு முன்னே ஒரு பதிப்புப் போட்டாரு. உம், கிடைக்கிறது கஷ்டமுங்க'' என்று பலர் கையை விரித்துவிட்டனர்.

''அங்கிள் கன்னிமராவில் இருக்குமே. 'ரேர் புக்' டிபார்ட்மென்டில்.''

''கன்னிப் பெண்ணே, கன்னிமராவில் இம் மாதிரி புஸ்தகங்களை எதற்கு வைத்திருக்கப் போகிறார்கள்? சரி, போய்ப் பார்க்கலாம்.''

கன்னிமரா லைப்ரேரியனுக்கு, முருகப் பெரு மான் மாதிரி பன்னிரு கைகள் இருந்திருந் தால், அத்தனையையும் விரித்திருப்பார். புகை யிலை மணமும் தமிழ் மணமும் கமழ, ''மார், மூண்டமுத்தகம் மிங்கே மிம்மையே'' என்றார், டெக்னிகலர் ஷவர்பாத்தைப் பொழிந்து கொண்டே!

பிரியம்வதாவின் தாமரை போன்ற முகம், அப்படியே வாடியது. அதைக் கண்ட பஞ்சுவின் மனத்தில் வருத்தம் பெருக்கு எடுத்து ஓடியது. அவருக்கு வருத்தத்துடன், பஞ்சு மாமியின் மேல் கோபமும் உண்டாயிற்று. அவள்தானே பரணை ஒழிக்கச் சொன்னாள்? அதனால்தானே புத்தக மூட்டையைக் கீழே இறக்க வேண்டிய தாயிற்று? அதில் புத்தகம் இருக்கவேதானே பிரியம்வதா அதைப் படிக்க விரும்பினாள்? அந்தப் புத்தகத்தைப் பற்றி இப்படிக் கேள் விக்குறிகள் கியூவில் வந்தன!

''அங்கிள், எனக்கு ஒரு ஐடியா. இந்த ஆவடி யாரின் சொந்த ஊரைத் தேடிப் போய் அவர்கள் பேரன், பேத்தி யாராவது இருந்

தால் அவர்களைக் கேட்டால் புஸ்தகம் கிடைக்கும் அல்லவா?''

'என்னடா, இந்தப் பெண் நம்மைக் கொல்லுகிறாள்' என்று மனத்தின் ஒரு மூலையில் தோன்றிய எண்ணத்தைப் பஞ்சு ஒரே கணத்தில் விரட்டி அடித்துவிட்டார். சாதாரணப் பெண்ணா இவள்? ஆயிரம் ஆயிரம் பட்டு ரோஜா மலர்களையெல்லாம்....

''என்ன அங்கிள், யோசனையில் ஆழ்ந்து விட்டீர்கள்?''

''ஆவடியார் வீட்டை எப்படிக் கண்டு பிடிப்பது என்று யோசிக்கிறேன்.''

மண்ணடியில் ஒரு பிரஸ்காரருக்குத் தெரியும் என்று யாரோ சொன்னார்கள். அவர், ஆவடியார் ராணிப்பேட்டையில் இருக்கலாம் என்றார். அங்கே போனால், ''ஆவடியாரா? அவர்தான் டிமிக்கி கொடுத்துவிட்டுப் போய்ட்டாரே எப்பவோ? என் பொடிக் கடைக்கு மூன்று ரூபா பாக்கி'' என்றார் பொடிக் கடைத் தொண்டுக் கிழவர்.

பஞ்சுவும் பிரியம்வதாவும் இப்படிப் பல இடங்களில் அலைந்தார்கள். ஆர்க்காடு, மணல்மேடு, திருவண்ணாமலை, செய்யாறு என்று பல ஊர்களிலும் காடு, மேடு, மலை, ஆறு ஆகிய இடங்களிலும் அலைந்தனர். ஆவடியாரைப் பற்றி ஒரு விஷயமும் தெரியவில்லை. அவர்களுக்குத் தெளிவாகத் தெரிந்தது, அவர் பல பொடிக் கடைகளில் பாக்கி வைத்துவிட்டு ஊரைக் காலிசெய்துவிட்டார் என்பது.

பிரியம்வதா பஞ்சுவுடன் ஊர் ஊராகச் சென்றாள். பெரிய கொலைகாரனை வேட்டை ஆடும் தீவிரம் அவரிடம் இருந்தது. பார்க்கப் போனால், ஜமீந்தாரைத் தொண்ணூற்று ஆறும் பக்கத்தில் கொன்றவன் யார் என்பதைக் கண்டு பிடிக்கத்தானே அவர்கள் பாடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள்?

கடைசியில், கண்டங்கத்திரிக்குப்பம் என்ற கிராமத்தில் ஆவடியாரின் கொள்ளுப் பேத்தி இருப்பதாகத் தகவல் கிடைத்து அங்கே சென்றார்கள், 'ப' வும் "பி" யும். படுகுக்கிராமம் அது. மூன்று மைல் ஒற்றையடிப் பாதையில் நடந்து சென்று அடைந்தார்கள். இருந்த ஒன்பது வீடுகளில் ஆவடியாரின் சந்ததியின் வீட்டைக் கண்டு பிடிப்பது சிரமமாக இல்லை.

கதவை லேசாகத் தட்டினார் பஞ்சு. அழுத்தமாகத் தட்டினால் வீடே சாய்ந்து விடும்; அல்லது குறைந்தபட்சம் கதவு நிலையோடு நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவிடும்.

கதவை யாரோ ஒரு பெண்மணி திறந்த போது உள்ளே இருந்த இருள் சரக்கென்று வெளியே ஓடியது.

பிரியம்வதாவின் டிரஸ்ஸைப் பார்த்து அந்தப் பெண்ணுக்குக் கூச்சம் ஏற்பட்டு முன்றானையால் தன்னைப் போர்த்துக் கொண்டாள். நவநாகரிகமான இவர்கள் யார் என்ற கேள்விக்குறியுடன் அவள் முகத்தில் கலவரமும் தோன்றியது.

''இது, ஆவடி கோவிந்தசாமி முதலியார் குடும்பத்தின் வீடுதானே?''

யாரோ பொடிக் கடைக்காரர்கள் பாக்கி வசூலிக்க வருகிறார்களோ என்று ஒரு கணம் துணுக்குற்ற அந்தப் பெண், ''இல்லிங்க..'' என்று இழுத்தாள்.

''அவரோட நாவலைப் படிச்சுப் பிரமிச்சுப் போனவங்க நாங்க......'' பிரியம்வதா சொன்னாள்.

அந்தப் பெண்ணும் சற்றுத் தைரியமடைந்து, ''பெரிய தாத்தா எழுதின கதையைச் சொல்றீர்களா? எவ்வளவோ எழுதினார். எவ்வளவோ பணம் சம்பாதிச்சார். பாட்டி சொல்லும். ஹூம்.. 'நிக்கறீங்களே! குந்துங்க'' என்றாள். இருவரும் திண்ணையில் உட்கார்ந்தார்கள்.

''ஆமாம், அவர் எழுதின 'விநோதரஞ்சனி' புஸ்தகம் உங்களிடம் இருக்குதா? அதைப் பத்திக் கேட்கத்தான் வந்தோம்.''

''ஏதோ புஸ்தகங்கள் இருக்குது. பத்து வருஷத்துக்கு முன்பு பட்டணத்திலேருந்து ஒருத்தர் வந்து புஸ்தகம் போடறேன்னு எடுத்துக்கிட்டுப் போனார், கொஞ்சம் புஸ்தகங்களை..இருங்க, கொண்டாறேன்.''

அந்தப் பெண் வரவை ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருந்தார்கள், பெரிய கொலைகாரனைக் கைது செய்யப்போகும் போலீஸ் அதிகாரிகள் மாதிரி.

ஏழெட்டுப் புத்தகங்களைக் கொண்டு வந்து கொடுத்தாள். தூசி தட்டிப் பார்த்தாள் பிரியம்வதா. அல்லி அரசாணி மாலை, விநாயக புராணம், சந்திரமதி புலம்பல் போன்ற புத்தகங்களுக்கு இடையே தலையை நீட்டியது 'விநோதரஞ்சனி!'

பரபரப்புடன் பிரியம்வதா கடைசிப் பக்கத்தைப் புரட்டினாள். அந்தோ! கடைசிப் பக்கமே இல்லை, அந்தப் புத்தகத்திலும்!

''அங்கிள். இந்தப் புஸ்தகத்திலும் கடைசிப் பக்கம் இல்லையே!''

''அட பாவமே.. கொலைகாரன் இப்படி டிமிக்கி கொடுக்கிறானே! இதற்காகவா இவ்வளவு தூரம் செத்துச் சுண்ணாம்பாகி அலைந்து திரிந்து வந்தோம்?''

''நாம் சரியான முட்டாள்கள். ஒரு கதையைப் படித்து விட்டுப் பைத்தியக்காரர் மாதிரி இப்படியா அலைவது?''

இவர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்ட அந்தக் கிராமத்துப் பெண் சொன்னாள். ''ஓ! திருக்கழுக்குன்றத்துக் கொலைப் புஸ்தகத்தைப் பத்திப் பேசறீங்களா? அதுலே கடைசிப் பக்கமே கிடையாது. எங்க பாட்டி, இந்தப் புஸ்தகத்தைப் பார்த்தாலே ''ஓ'வென்று அழுதுடும். எங்க பெரிய தாத்தா இந்தக் கதையை எழுதிக் கிட்டிருந்தார். பாட்டி சாப்பிடக் கூப்பிட்டு இருக்காங்க. 'இன்னும் ஒரு பக்கந்தான் இருக்கு! கதை முடிஞ்சிடும். வந்துடறேன்..ஒரு டம்ளர் தண்ணிமட்டும் கொண்டா'ன்னு அவர் சொல்லியிருக்கார். பாட்டியும் ஜலம் எடுத்துக் கிட்டுப் போய்க் கொடுத்தது. ஒரு முழுங்கு குடிச்சார் தாத்தா. 'கெக்' என்று விக்கல் எடுத்தது. அப்படியே உக்காந்தபடியே எங்க தாத்தா செத்துப் போயிட்டார். ''ஐயோ தாத்தா!'' என்று உரத்த குரலில் அந்தப் பெண் அழ ஆரம்பித்தாள்.

பஞ்சுவுக்கும் பிரியம்வதாவுக்கும் அதே சுருதியில் தாங்களும் அழலாமா என்று தோன்றியது!



# தோடுகள்

'கல்பனா'

ஸஞ்சிப் பின்னலும் ஸ்ரீசூர்ணமுமாக, வைஷ்ணவக் கட்டில் அம்மாவைப் பார்த்துவிட்டு வாய் பிளந்து நிற்கின்றன குழந்தைகள்.

''படா ஜோரா இருக்கிறாய், அம்மா, இன்றைக்கு!'' என்கிறான் மூத்தபிள்ளை கண்ணன்.

''சாட்சாத் தாயார் மாதிரியே இருக்கே, அம்மா'' என்கிறாள் அம்பு.

''எப்படியம்மா, இந்தத் தலைப்பு இவ்வளவு ஜோராகச் சுற்றி வந்து விசிறிவாழை மாதிரி அழகாக விசிறிக் கிடக்கு?....அட, விசிறி வாழையேதான்'' என்று தொட்டுப் பார்க்க வருகிறாள் கமலி.

''அடீ, அடீ, தொட்டுடாதேடி, என்னை'' என்று பின்வாங்கிக்கொண்டு சிரிக்கிறாள் சம்பா; ''இன்னிக்கி நான் மடீடீ!''

''என்னம்மா விசேஷம் இன்றைக்கு?'' என்று கேட்கிறான் கண்ணன்.

''உங்க தாத்தா வரார்டா, இன்னிக்கி!''

''ஹை....தாத்தா கம்மிங்.... அந்தக் கிழவரா?..எந்த ட்ரெயின்லே அம்மா வரார்?'' என்று குதிக்கிறான் அம்பு.

''சுவாமி கிட்டே போனவாளெல்லாம் ரெயிலில் வரமாட்டா. மனுஷ ரூபத்திலே தான் வருவா..வந்து கூடத்துலே உட்கார்ந்து நாம பக்தியோட போடற உணவைச் சாப்பிட்டுவிட்டு நம்மை ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போவா.''

''ஹை..அதான் தளியலறையிலே மணம் மூக்கைப் பிய்க்கிறதா?'' என்று மூக்கை உறிஞ்சுகிறாள் கமலி.

''இப்பவே சொல்லிட்டேன். மத்யானம் வரை அங்கெல்லாம் நீங்க யாரும் போகக் கூடாது.. ஆமாம்.''

''நான் அப்பவே உனக்குத் தெரியாமல் நைஸா எட்டிப் பார்த்துட்டேன். வடை, சுகியன், ரவாகேசரி, பகாளாபாத் எல்லாம் புதுசா ஒரு மாமி வந்து பண்ணிண்டிருக்கா'' என்கிறான் கண்ணன்.

''சரி, சரி, எல்லாரும் சமத்தா மாடிக்குப் போய்க் கேரம் விளையாடிண்டிருங்கோ. பல் தேய்ச்சாச்சு இல்லையா?'' என்று கேட்கிறாள் சம்பா.

''எல்லாம் ஆச்சு. காபிதான் இன்னும்

''எல்லாம் வரும். டிரைவர் ஹோட்டலுக்குப் போயிருக்கிறான், உங்களுக்கு டிபன், காபி வாங்கிண்டு வர. வந்ததும் மேலே அனுப்பறேன். தின்னுட்டு அங்கேயே இருங்கோ. இறங்கி வந்து யாரையாவது எதையாவது தொட்டுக்கிட்டு வச்சுடாதேயுங்கோ. அப்பாவுக்குக் கோபம் வந்துடப் போறது. இன்னிக்கித் தாத்தாவுக்குச் சிராத்தம்.''

குழந்தைகள் அரைமனசோடு மேலே ஏறிப் போகிறார்கள். கமலி காலில் கட்டுடன் நொண்டிக்கொண்டே ஏறிப் போவதைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. திரும்பித் திரும்பி அம்மாவைப் பார்த்துக்கொண்டே போனாள்.

தளியலறைக்குப் போய் மாமி என்ன செய்கிறாள் என்று பார்க்கத் திரும்புகிறாள் சம்பா. எதிரே கூடத்துப் பீரோவில் பதித்த பெரிய நிலைக்கண்ணாடியில் அவள் உருவம் தெரிகிறது. திகைப்பாக இருக்கிறது. 'இது நான்தானா?' என்று; எவ்வளவு ஜோராக இருக்கிறேன் என்று.

அம்மா உயிரோடு இருந்த நாட்கள் நினைவில் வருகின்றன. பண்டிகை நாட்களிலும் நாள் கிழமைகளிலும் சும்மா கெஞ்சோ கெஞ்சு என்று கெஞ்சுவாள், சம்பிரதாயக் கட்டுக் கட்டிக்கொள்ளும்படி.

''போ, அம்மா! உனக்கு வேறே வேலையில்லை. சுத்தப் பட்டிக்காடுமாதிரி!'' என்று அக்காள், தங்கை இருவருமே தட்டிக் கழித்து விடுவார்கள்.

அதிலும் அக்கா மிகவும் கறார். ''உன் சம்பிரதாய காலம் எல்லாம் மலையேறி ரொம்ப நாள் ஆகிவிட்டது, அம்மா! இது ஜீன்ஸ், மாக்ஸி, மினிகாலம். ஞாபகம் இருக்கட்டும்'' என்று பட்டென்று சொல்லிவிடுவாள்.

''சம்பா! நீயாவது கட்டிக்கோடி! இந்தக் குரங்கைவிட உனக்குத் தாண்டி பாந்தமா இருக்கும்!''

''ஐயோ, நான் மாட்டேன்! எங்க காலேஜ்லே தெரிஞ்சா கோட்டா செய்தே என்னை உண்டு, இல்லை என்று பண்ணிவிடுவார்கள். இந்தக் குரங்கே போய்ச் சொல்லிக் கொடுத்துவிடும்.''

''நீ ரொம்பக் கிளி, கடலூர்க் கிளி! மூ

''சுப்ரதீபங்களா, என் வயிற்றில் வந்து பிறந்தீர்களே!'' என்று அம்மா தலையில அடித்துக்கொண்டு உதவிக்கு அப்பாவைக் கூப்பிடுவாள் ''ஏன்னு, இத்தைக் கேளுங்கோளேன், சித்தே வந்து!''

''எதைக் கேட்கணும்?'' என்று பேப்பரும் கையுமாக எழுந்து வருவார் அப்பா.

''இந்தக் 'கட்'டைப் பரிகாசம் பண்றது கன்னு, இதுகள் ரண்டும். இது பட்டிக் காட்டுக் கட்டாம்....''

அப்பா சிரித்துக்கொண்டு பேசாமல் இருப்பார்.

''உங்க அப்பா என்னைப் பொண் பார்க்க ராஜவல்லிபுரத்துக்கு வந்தப்போ நான் இந்தக் 'கட்'டைத் தாண்டிக் கட்டிக்கொண் டிருந் தேன்; இதிலே மயங்கித் தாண்டி உங்கப்பா என்னைப் பண்ணிண்டார். உண்டா, இல்லையா? சொல்லுங்கோன்னு.''

''அப்போ ஜோராகத்தான் இருந்தாய்!''

''இப்போ கழுதையாகிவிட்டேனு? அதென்ன இழுத்தாற்போல் பேசுகிறேள்? இப்பவும் ஜோராகத்தான் இருக்கேன். நம்ப கட்டு, நம்ப டிரஸ் எல்லாமே எந்த வயசி லேயும் அழகாத்தான் காட்டும். அடி பெண்டு களா, இங்கிலீஷ் டிரஸ்மாதிரி இல்லே. தெரிஞ்சுக்குங்கோ.''

''தெரிஞ்சுண்டாச்சு, விடு'' என்பாள் அக்கா.

''எப்படி விடறது? எம்பெருமான் ஸ்ரீரங்க நாதரே, ஆண்டாளை இந்தக் கட்டிலே பார்த்துட்டுத்தான், மோகிச்சுப் போய் ரங்கமன்னராகக் கல்யாணம் பண்ணிக்க ஓடிவந்தார். ரங்கமன்னர் மட்டுமில்லே. ஸ்ரீவில்லிபுத்தூருக்குப் போயிப் பாரு, நாலு சாமிகள், ஊருக்கு வெளியிலே நாலு திக்கிலேயும் வந்து நிக்கறது. எல்லாம் ஆண்டாளைப் பண்ணிக்க எங்கெங்கிருந்தோ இருந்தெல்லாம் பறந்து வந்தது. ரங்க மன்னர் முந்திண்டுட்டார்ன்னதும் அங்கங்கே சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு 'டக்'குன்னு நின்னுட்டா. திருப்பதி வெங்கடாசலபதியே ஏழாவது மைல்லே நிக்கரூர். அப்புறம் என்ன வேணும்?''

''உன் ஆண்டாள் ப்லூ ஜீன்ஸ் போட்டிண் டிருந்தா இன்னும் எழுநூறு சாமிகள் ஓடிவந் திருக்கும்'' என்பாள் அக்கா.

''பிசாசு வந்திருக்கும். பிரம்மஹத்தி!'' என்பாள் அம்மா ஆத்திரமாக.

''ஏன், ஜானு? ஆண்டாளைப் பண்ணிக்க வந்தபோது உங்க ரங்கமன்னர் டபிள்நிட் பாண்ட் போட்டிருந்தாராமே, வாஸ்தவந் தானு?'' என்று கேட்பார் அப்பா, அப்பாவி மாதிரி.

''கேளுங்கோ, அப்பா, நன்னு, கேளுங்கோ!'' என்று ஆர்ப்பரிப்பாள் அக்கா.

''சேர்ந்துண்டுட்டேளா, நீங்களும் இதுக ளோட! ஏற்கனவே ஜீன்ஸ், பூன்ஸுன்னு தலை கிழாக் குதிச்சுண்டிருக்குகள். இனிமே உங்க கூட மனுஷாளால பேச முடியுமோ?'' என்று எழுந்து போவாள் அம்மா.

அம்மா, அம்மா! நீ இப்போது இங்கிருந்து என்னைப் பார்க்காமல் போனுயே! இந்தக் 'கட்'டைத்தான் நான் தினம் தினம் மனசுக்குள்ளே கட்டிப் பார்த்துக் கதறிண் டிருக்கேன், அம்மா! என்னை ஆட்கொள்ள

கட்டம்மா, இது! என்னை இந்தக் 'கட்'டிலே வரச் சொல்லிப் பார்த்துப் பூரிச்சுப் போன தெய்வம்மா, அது....

''சம்பா! சித்தே இங்கே வந்துட்டுப் போயேன்'' என்று சமையற்கார மாமியின் குரல் கேட்கிறது, தளியலறையிலிருந்து. ''முந்திரிப் பருப்பு எங்கே இருக்குன்னு தெரி யலே.''

''இதோ வந்துட்டேன், மாமி!''

## 2

''இதோ பக்கத்திலேயே வச்சுண்டிருக் கேளே!'' என்று முந்திரிப் பொட்டலத்தை எடுத்துக் கொடுக்கிறுள், அம்மா.

''கண் தெரியலையடியம்மா; வயசாயி டுத்தோ இல்லையோ?''

''எல்லாம் ஆயிடுத்தோ இல்லையோ? இதோ இப்ப வந்துடுவா, பிராமணுளும், வாத்தி யாரும்.''

''எல்லாம் ஆயிடுத்துடி; கொத்தமல்லியைக் கிள்ளிப் போட்டுச் சாத்துமதுவை இறக்கிட்டு, அடுப்பிலே கடாயை ஏத்தினேன்னு பதினஞ்சு நிமிஷத்திலே வறுவலை வறுத்து எடுத்துட மாட்டேனு?'' என்கிறுள் மாமி.

மாமியைச் சுற்றிச் சின்னச் சின்ன எவர்ஸில் வர் பாத்திரங்களில் பாகற்காய்ப் பிட்லேயும், சேம்பு மிளகுகறியும், எள்ளுருண்டைகளும், வாழைக்காய்க் கறியும் மணக்க மணக்க உட் கார்ந்திருக்கின்றன. ஓர் அடுப்பில் புஸ் ஸென்று மோர்க் குழம்பு நுரைத்துக்கொண்டு வருகிறது. தூக்கு நிறையக் கேசரியும், அப்பளமும், பாயசமும்.

''சம்பா! அந்தக் கறிவேப்பிலையை ஆய்ந்து, பதினஞ்சு மிளகாயும் காம்பு கிள்ளிக் கொடேன், சட்னிக்கு? இஞ்சி இருக்கோ, இல்லையோ?''

''வேணது வாங்கிண்டு வந்திருக்கான், நடேசன்.''

திடீரென்று மாமி ஏறிட்டுப் பார்த்து, கண்கள் அகலச் சொல்கிறுள்; ''சம்பா, உனக்கு இந்தச் சம்பிரதாயக் கட்டுத்தான் நன்ருக இருக்கிறது. சாட்சாத் ஆண்டாள்மாதிரியே இருக்கே.''

ஆண்டாள் மாதிரியா? ஆண்டாள் மாதிரியா?

குபுக்கென்று நீர் பொங்குகிறது கண்ணுக் குள். ''இதோ வந்துட்டேன், மாமி'' என்று சமாளித்துக்கொண்டு ஹாலுக்கு வருகிறுள்.

இன்னும் வாத்தியாரும் பிராமணர்களும் வரவில்லை. போட்ட கோலமும், மணைகளும் வெறிச்சிட்டுக் கிடக்கின்றன

ஆண்டாள் மாதிரி இருக்கே! ஆண்டாள் மாதிரி இருக்கே!

விரட்டுகிறது குரல்! ஆண்குரலாக மாறிவிட் டது இப்போது. கடகடவென்று ரெயிலோசை காதில் செவிடுபடுகிறது. இதோ ரெயில் போகிறது. இதோ பெண்கள் பெட்டியில், இதே 'கட்டுக்'கட்டிக் கொண்டு உட்கார்ந் திருக்கிறுள்.

இதோ வருகிறது, அந்தச் சின்ன ஓட்டு வீடு. இதோ ஹரிக்கேனை ஏற்றி வைத்துக் கொண்டு, புத்தகத்தை விரித்துப் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறுன், சின்ன இருஷ்.

இதோ பையும் கையுமாக வந்து ஸ்கூல்



"அட நீயா, சாட்சாத் ஆண்டாள் மாதிரியே வந்து நிக்கறயே!" என்கிறார் ஸ்ரீராம்.

இதோ....

விருட்டென்று காமரா அறைக்குள் ஓடி, சுவரில் சாய்ந்து கொண்டு விம்மி விம்மி அழுகிறாள் சம்பா.

பெரிய சம்பத்து ஒன்றை இழந்துவிட்ட மாதிரி இருக்கிறது. வேதனையாக இருக்கிறது. அதே சமயம் அந்த வேதனையே இதமாகவும் இருக்கிறது.

அவள் முகமே, ஆண்டாளின் முகமாக, அவன் கண்ணுள் பளபளத்துக்கொண்டு தோன்றுகிறது; அதோ, அன்றைக்குப் போட்டுக்கொண்டு போன மூக்குத்தி.. அடேயப்பா.. என்னமாய் வலிக்கிறது....

கண்களைத் துடைத்துக்கொண்டு நகைப் பெட்டியைத் திறந்து, அந்த மூக்கு நத்தைத் தேடி எடுத்துப் பார்க்கிறாள் சம்பா.

எடுக்கும்போது, அதன்கீழே, நாலாய் மடித்த ஸ்ரீராமின் கடிதம், பழுப்பேறி, நெருடுகிறது. எடுத்துப் பிரிக்கிறாள்.

கண்ணீரில் எழுத்துத் தெப்பமாய் மிதக்கிறது.

'எட்டு மாதமாய், உன்னை உன் கடிதங்களிலே பார்த்துப் பார்த்து கண் பூத்துப் போய் விட்டது. உன்னைப் பார்க்கவேண்டும் போலிருக்கிறது. நீ எப்படி இருப்பாய்? பெயருக்கேற்றாற்போல் சண்பக மலர்போல இருப்பாயா? இல்லை, தாமரைப்பூவிலே நிற்பாளே, சாட்சாத் மகாலக்ஷ்மி, அவள் மாதிரி இருப்பாயா? இல்லை, சூடிக்கொடுத்த சுடர்க்கொடி மாதிரி இருப்பாயா? நீ வரும் போது உங்க சம்பிரதாயக் கட்டில் வரணும். கடலூர்க் கிளி, கடலூர்க்கிளின்னு கையெழுத்துப் போடறதுனாலே ஏதாவது பழத்தைக் கொத்திண்டு வந்து நிக்காதே. தெரிஞ்சுதா?"

என்ன எழுத்து? என்ன சொல்வீச்சு? இப்படிச் சரளமாக எழுத அவனையன்றி வேறு யாருக்கு வரும்?

ஓ! எத்தனை கடிதங்கள் எழுதினார்! எத்தனை, எத்தனை...

கல்லூரி மாணவியாக இருந்தாள். அப்போது ஒவ்வொரு மாணவியும் ஓர் எழுத்தாளரை அபிமான எழுத்தாளராக மனத்தில் வரித்துக் கொண்டு, பைத்தியமாகத் திரிந்த காலம் அது. 'பொன் வீடு' என்ற கதையைப் படித்து விட்டு, ஸ்ரீராமை மனசில் ஏற்றிக்கொண்டு பித்தாக அலைந்தாள் அவள். ஒரு கதை வெளி யாக வேண்டியதுதான். உடனே பாராட்டி எட்டுப் பக்கம் எழுதிவிடுவாள். பதில் வரும்; அப்படி எத்தனை கடிதங்கள் வந்தன!

ஒவ்வொன்றின் முக்கிய வரியும் மனப் பாடம்.

முதல் கடிதத்துக்கு வந்த பதில்: "நான் யாருக்கும் லெட்டர் எழுதறதே இல்லே. எனக்கு மனுஷாளைக் கண்டாலே பிடிக்காது. இவா காரியங்கள் எனக்கு உடன்பாடே இல்லே. எழுத்துத்தான் என் தவம், உலகம். உனக்காக மட்டுந்தான் என் மனக்கதவு முதல் தடவை யாகத் திறந்திருக்கு. ஏனென்று தெரிய வில்லே."

இன்னொரு கடிதம்: "உங்க ஊர்லே தோப்பு களிலே மந்தை மந்தையாய்க் கிளிகள் அடைஞ்சு கிடக்கும் என்று நீ எழுதினதைப் படித்ததி லிருந்து ஒரே பயமாக இருக்கு. திடீரென்று ஒரு நாள் நான் உங்க ஊருக்கு வந்தால், என் விசிறிக் கிளியை அந்தக் கூட்டத்திலே எப்படித் தேடிக் கண்டு பிடிக்கப் போகிறேமோ, என்று.

"அத்தனை கிளிகளும் இடும் எச்சத்தையும் நாற்றத்தையும் கத்தலையும் சகித்துக்கொண்டு எப்படித்தான் உங்க ஊர்க்காரா இருக்கிறார் களோ?

"ஒரு கிளி வந்து தினசரி, உன் வீட்டுக் கொல்லை அத்தி மரக்கிளையில் உட்கார்ந்து, ரொம்ப நேரம் ஏதோ சொல்ல முயலுகிற மாதிரி இருந்துவிட்டுப் போயிற்று என்று நீ எழுதியிருப்பது ரொம்ப வாஸ்தவம்; அது நானேதான். நான் புதுசா எழுதிண்டிருக்கிற கதையைச் சொல்லத்தான் வந்தேன்.

"நீ கிளிகளைப் பத்தி எழுதினப்பறம் எனக் கும் ஒரு கிளியாகவே ஆகிவிடணும்னு ஒரே ஆசையாக இருக்கு. கிளியா மாறிட்டா மனுஷாளோடே வாழவேண்டாம்; பழக வேண்டாம்; அவா தந்திரங்களுக்கு ஈடு கொடுத்துக் களைப்படைய வேண்டாம். சாண் வயிற்றுக்காகத் தினமும் எட்டு மணி நேரம் ஒரு பகல் நேர ஜெயில்லே போய் முடங்கிட்டுச் சாயந்தரம் பரோல்லே வரவேண்டாம்."

இந்தக் கடிதம் வந்த அன்றைக்குக் கர்வத் தால் தலையே கழுத்துமீது நிற்க மறுத்தது.

ரெயிலில்தான் தினமும் காலேஜ் போய்த் திரும்பவேண்டும். ஒரு பெரிய பட்டாளமே ரெயிலில் கூட வரும். எல்லாமே ஸல்வார் கம்மீஸ் பட்டாளம். எல்லாவற்றுக்குமே ரெயி லில் ஏறினதும் தலைகால் புரியாது.

ரெயிலிலேயே 'ஆண்'வால்களுக்குச் சம மாக இவளும் இரண்டொரு பெண்களுடன் பெட்டிக்குப் பெட்டி கம்பியைப் பிடித்துக் கொண்டு தாவிப் போவாள்.

இந்தக் கடிதம் வந்த அன்றைக்கு, அப்படித்

உட்கார்ந்திருப்பதுபோல் இருந்தது. "சம்பா சம்பா! ஜாக்ரதை. கால் சறுக்கிவிட போவுது. உன்னோடு நானும் விழுந்துவிட போகிறேன்" என்று கத்திற்று கிளி.

வெறும் தோளைத் திரும்பிப் பார்த்து, 'அட பயந்தாங்குளி, சுகப்பிரம்மமே! உன் வீர பிரதாபம் எல்லாம் எழுத்தோடு சரிதானா?' என்று சிரித்தாள்.

மறுநாள் எழுதினாள்:

"கிளியாக மாத்தித்தான் வச்சுக்கணுமா உங்களை ஒரு குழந்தையாக மாத்தி வச்சுக்க படாதா? உண்மையில் நீங்கள் உலகமறியாத குழந்தை என்பதைத் தவிர வேறு என்ன குழந்தையாக இருந்தால் இமையிலே வச்சுக் காப்பாத்துவேன். கவலையில்லாமல் நீங்கள் எழுதிக் குவிக்கலாமே! ஆயிடறேளா..?"

சட்டென்று கடிதப் போக்குவரத்து நின்று விட்டது. அவள் பதறிப் போனாள்.

பத்துநாள் கழித்து ஒரு கடிதம் வந்தது, ஒரு பெண் கையெழுத்தில். "அவருக்கு இரண்டு வாரமாய் உடம்பு சரியில்லே. ஆசுபத்திரியிலே இருந்தார். நேத்துத்தான் ஆதுக்கு அழைச் சுண்டு வந்தோம். ஆமா, இவ்வளவு வக்க ணையா நாலு நாளைக்கு ஒரு தடவை கத்தை கத்தையாக எழுதறயே; ஏதேது, விட்டா அவரையே கல்யாணம் பண்ணிக்கொண்டு விடுவே போலிருக்கே. உனக்கு வெட்கமா யில்லே? இப்படிக்கு, சீதா."

பதைபதைப்பு, ஆர்வம் எல்லாம் மாறிக் கடிதத்தின்மீது கோபம் பொங்கியது. 'சீ! நீயும், உன் கோணல் கையெழுத்தும்; உன் மனசு மாதிரிதான் இருக்கு. ஆமாம். பண்ணிண்டாலும் பண்ணிப்பேன். உன்னைப் போல அவரோட அருமை தெரியாத மண்டுகம் இல்லே' நீயார் கேட்கறதுக்கு?'

சுக்குச் சுக்காகக் கடிதத்தைக் கிழித்துப் போட்ட பிறகு மனசு திசை திரும்பிற்று: "உடம்பு சரியாக இல்லாமலா இருந்தீர்கள்? ரொம்பக் கஷ்டப்பட்டீர்களா? ஐயோ, நீங்கள் அங்கே அவ்வளவு கஷ்டப்பட்ட போது, பாவி நான், உடனே பறந்து வந்து உங்கள் கிட்ட இருந்து சுசுருஷை செய்யாமல், காபியும் டிபனும் சாப்பிட்டுக் கொண்டு இருந்துவிட்டேனே.."

'ஜிவ்'வென்று அப்போதே ராஜா ராணிக் கதையில் வருகிறமாதிரி, ஆகாசத்தில் பறந்து போய், அந்த அரக்கியிடமிருந்து அவரை 'லபக்'கென்று பறித்துக்கொண்டு வந்து தன் ஏழடுக்கு உப்பரிகையில் வைத்துக் காயங் களுக்கு மருந்திட்டுக் கட்டவேண்டும்போல் இருந்தது.

"நானே இந்த வாரம் வருவதாக இருந் தேன். உங்கள் கட்டளைப்படி எங்கள் கட்டு டன் வர ஆசைப்பட்டேன். அதற்குள் இப்படி ஒரு கலக்குக் கலக்கிவிட்டீர்கள். உங்களைப் பார்த்தபின்தான் மனசு சமாதானம் அடை யும். வரட்டுமா?" என்று எழுதினாள்.

இரண்டாம் நாள் ஒரு சின்னப்பிள்ளையின் கையெழுத்தில் ஒரு கடிதம் வந்தது: 'அப்பா வுக்கு இன்னும் உடம்பு தள்ளலே. அவர் சொல்படி எழுதறேன். அம்மாவுக்குத் தெரி யும். அப்பா உங்களைப் புறப்பட்டுவரச் சொல் றார். வாங்கோ. இப்படிக்கு, சின்ன கிருஷ்...'

சின்னகிர்ஷா! அப்பாவா! அப்படி ஒரு உலகம் அவரைச் சுற்றி அங்கே இருக்கிறதா?

இருதயமே வெடித்துவிடும்போல் இருந்தது. தேற்றிக்கொள்ளவே மறுத்துத் தேம்பித் தேம்பி விசும்பியது மனம்.

வெறிபிடித்து கூவவேண்டும்போல் இருக்கிறது. கடலூர்த் தோப்புக் கிளிகள் எல்லாமே திடீரென்று குரங்குகளாக மாறிவிட்டமாதிரி இருக்கிறது. அத்தனையையும் அடித்து விரட்டிவிட்டு, 'சீ, கழுதைகளா?' என்று கதற வேண்டும்போலிருக்கிறது.

அப்பா, சாய்வுநாற்காலியில் சாய்ந்து கொண்டு, ''என்னம்மா ஆச்சு, உனக்கு? காலேஜுக்குக்கூட ரெண்டுநாளாப் போகலியே?'' என்று கேட்டார்.

''ஒண்ணும் இல்லையே, அப்பா'' என்று பூசி மெழுகினாள் சம்பா; ''மெட்ராஸ் வரை போயிட்டு வரலாமான்னு பாக்கிறேன் அப்பா.''

''என்னம்மா, மெட்ராஸிலே, திடீரென்று?''

''மிஸ்டர் யதிராம் ரொம்ப உடம்பு சரியில்லாமப் படுத்திண்டிருக்காராம், அப்பா!''

''ஓ, உன் குரு; அபிமான எழுத்தாளர். இல்லையா?''

''ஆமாம், அப்பா!''

''என் கிட்டே ஏனம்மா கேட்கிறாய்? பையன்களுக்கெல்லாம் சுதந்தரம் கொடுத்திருக்கிற மாதிரி உனக்கும் கொடுத்திருக்கிறேனே! உன்னைக் காப்பாத்திக்க உனக்குத் தெரியும்னு எனக்குத் தெரியும்.''

அன்றைக்கு அம்மாவுக்கும் பாட்டிக்கும் ஒரே ஆச்சரியம்: ''ஏய்! என்னடி இது? காலம் மாறிடுத்தா? மாக்ஸி, லோஹிப் இதெல்லாம் போய் இதென்னடி, இன்னிக்கு எங்க கட்டுப் பெட்டி வைஷ்ணவக் கட்டு?''

''என்னமோ தோணித்து உடுத்திண்டேன். கூடாதா?''

ரெயிலடியில், வண்டி புறப்படுகிறபோது அப்பா தணிந்த குரலில் கேட்டார்: ''நீ அவனைக் காதலிக்கிறாயா?''

வண்டியோடு ஓடி வருகிற அவரைப் பார்த்துக் கண்ணீருடன் சிரித்தாள். ''எனக்கே தெரியலே, அப்பா!''

ஐயோ, எவ்வளவு நல்ல அப்பா! அப்பா, எங்க மாதிரி ஓர் அப்பாவை இந்த லோகம் முழுக்கத் தேடினாலும் கிடைப்பாரா?

''சம்பா! எங்கே இருக்கிறாய்? இதோ வாத்தியார் வந்துட்டார். சட்டுனு எல்லாத்தையும் ரெடி பண்ணு. டைம் ஆயிடுத்து'' என்று 'அவர்' குரல் கேட்கிறது.

விழி நீரைச் சுண்டி எறிந்துவிட்டு, ''இதோ வந்துட்டேன்'' என்று கிளம்பிப் போகிறாள் சம்பா.

## 3

சின்ன ஸ்டோர்தான் அது. எட்டு வீடுகள் கொண்ட ஒரே வரிசை. எட்டு வீடும் வந்து கூடியிருக்கின்றன, அவள் ரிக்ஷாவிலிருந்து வந்து இறங்குவதைப் பார்க்க. எல்லாக் கண்களும் அகல விரிந்திருக்கின்றன.

ஒரு வீட்டுப் பெண்மணி, பின்பக்கமாக, அவசரமாக ஓடி, மூங்கில் தட்டி மேலாக எட்டிப் பார்த்து, ''மாமி! சீதா மாமி! உங்காத்துக்கு யாரோ வந்திருக்கா, வைஷ்ணவாக் கட்டும், ஸ்ரீசூர்ணமுமாக'' என்று பரக்கப் பரக்கச் சேதி சொல்கிறாள்.

''வந்துட்டாளா, சூர்ப்பணகை?'' என்றவாறே கையைத் தலைப்பில் துடைத்துக் கொண்டு போய்க் கதவைத் திறக்கிறாள் வீட்டு யஜமானி.

''நான்... நான் கடலூர்லேர்ந்து வந்திருக்கிறேன்.'' தயங்குகிறாள் வந்தவள். மனசையும் தொண்டையையும் ஏதோ அடைக்கிறது.

''ஓ கடலூர்க் கிளியா? வாடியம்மா, வா!'' என்ன நக்கல்; எகத்தாளம்! திரும்பிப் போய் விடலாமா என்றுகூடத் தோன்றுகிறது.

பல்லைக் கடித்துக்கொண்டு, ''ஸார் இல்லையா?'' என்று உள்ளே வருகிறாள்.

சுவரோரமாக, ஒரு சின்னக் கள்ளிப்பெட்டியருகில் நோட்டுகளையும் புத்தகங்களையும் அகலப் பரப்பிக்கொண்டு உட்கார்ந்திருக்கிறான் ஒரு சின்னப் பையன். ஆச்சரியத்துடன் நிமிர்ந்து பார்க்கிறான்; அள்ளிக் கொள்ளலாம் போலிருக்கிறது.

''உங்க ஸார் அத்தனை சீக்கிரம் ஆத்துக்கு வந்துட முடியுமா? அதுவும் இன்னிக்குத்தானே ஸ்கூலுக்கே போயிருக்கிறார்? வருவார், வருவார். வந்து உட்காரு.''

''என் பேரு சம்பா. கடலூரிலே புரொபஸரா இருக்கேன், ஸாரோட விசிறி.''

''அதான் லெட்டர்லே எல்லாம் வரிஞ்சு வரிஞ்சு எழுதிண்டிருக்கியே. என்ன விசிறியோ, என்ன அங்கவஸ்திரமோ? நான் என்ன கண்டேன்?'' தோள்பட்டையில் மோவாயை இடித்துக்கொண்டு உள்ளே போகிறாள் வீட்டு யஜமானி.

அப்படி ஒரு மகத்தான மனிதருக்கு இப்படி ஒரு மனைவியா? ஜீரணிக்கவே முடியாமல் மனம் பதைக்கிறது. கண்களில் நீர் கரை கட்டுகிறது.

''உஷ்! அழாதேயுங்கோ'' என்று ஒரு சின்னக் கை புடைவையைப் பிடித்து இழுப்பதைக் கண்டு திரும்புகிறாள். அழகாக, நட்புரிமையாகப் புன்னகை செய்கிறான் சின்ன கிருஷ். ''எங்க அம்மா சுபாவம் அப்படி. மனசிலே வச்சுக்காதேயுங்கோ.''

''எவ்வளவு சமத்தாகப் பேசுகிறாயடா, ராஜா'' என்று அங்கேயே மண்டியிட்டு அவனை வாரி அணைத்துக்கொண்டு, அவன் கையில் ஒரு சின்னச் சாக்லேட் பெட்டியை வைக்கிறாள் வந்தவள்.

''ஐயா சாக்லெட்!'' என்று புருவங்களை விரிக்கிறான் பையன்.

''இந்தாடியம்மா, காபி, குடிச்சுக்கோ'' என்று கொண்டு வந்து 'ணங்' என்று வைத்து விட்டு எதிரில் உட்கார்ந்துகொள்கிறாள் சீதா. நூல் புடைவையில் லாலிலாலியாகக் கிழிசல் தொங்குகிறது. கழுத்தில் பழைய மஞ்சள் சரடு. எண்ணெய் இறங்கிய தோடுகள். கையில் கண்ணாடி வளையல்கள்.

''உங்களைப்பத்தி ஸார் எழுதவே இல்லையே?'' என்று ஏதோ பேசவேண்டுமே என்பதற்காக உளறி வைக்கிறாள் வந்தவள்.

''எப்படி எழுதுவார்? ரோடிலே போகிற பஜாரிகளையும் கழுத்தறுப்புகளையும் பத்தி எழுதவே அவருக்கு நேரம் போதவில்லையே!''

''நீங்கள் ரொம்பப் பாக்கியம் செய்தவர்கள், இந்தமாதிரி ஒரு மகத்தான கலைஞரை..''

''போதுமே! என் பாக்கியத்தின் லட்சணம் நீதான் மெச்சிக்கணும்.'' குபுக்கென்று பொங்கி வருகிறது கண்ணீர். ''உஞ்சவிருத்தி எடுத்துண்டு, ராமநாம சங்கீர்த்தனம் பண்ணிண்டு அவனைத் தவிர லோகத்துலே

ஒரு துரும்பைக்கூட நினைக்க மாட்டேன்னு அலைஞ்சுதே, திருவையாத்துலே ஒரு பைத்தியம், அது மாதிரி ஒன்றைக் கட்டிக்கப் பெரிய பாக்கியம் தாண்டியம்மா பண்ணியிருக்கணும்.''

வேதனை மின்னலாக நெஞ்சில் இறங்குகிறது வந்தவளுக்கு. ''நீங்க அவரை நன்னாத் தெரிஞ்சுக்கலை'' என்று அரற்றுகிறாள்.

''தெரிஞ்சுண்டிருந்தால் ஏண்டியம்மா இந்த அவலத்துலே வந்து என் கழுத்தை நீட்டப் போகிறேன்? தெரிஞ்சுக்காமத்தான் போயிட்டேன். ஸ்ரீராமன்னு பேரு வைச்சிருக்காளே. லோகத்தையே கோதண்டத்தாலே அடக்கியாண்டு, அயோத்தியிலே கூட உட்கார வைச்சுண்டு பட்டாபிஷேகம் பண்ணிக்காட்டாலும், பாத்துண்டிருக்கிற ஸ்கூல் டீச்சர் உத்தியோகத்தையானும் ஒழுங்காப் பாத்து வயத்தைக் காயப் போடாமல் இருப்பாராக்கும்னு பார்த்தேன். இது ஆகாசத்தைன்னு பாத்துண்டு அலையறது. பாட்டுன்னு பாடறது, அடிக்கடி பெரிசா. என்ன பாட்டு..? அது.. கிஷ்ணு.''

''பாரதியார் பாட்டும்மா. 'பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்'ன்னு வருமே.''

''லோகத்துலே கிருகஸ்தாசிரம தர்மங்களுக்குச் செஞ்சாச்சு. இனிமே..''

''மாமி, மாமி!'' என்று பதற்றத்துடன் இடைமறிக்கிறாள் வந்தவள்: ''அவர் சுதந்தர புருஷர், கலைஞர். கலைஞர்களெல்லாம் அப்படித்தான் இருப்பா. நாம பெரிசா நினைக்கிற பட்டம், பதவி எல்லாம் அவாளுக்குத் துரும்பாப் படும்.''

''இப்போ வயித்துச் சோறு உத்தியோகம்னு துரும்பாப் பட ஆரம்பிச்சுடுத்து. 'நீங்கள் எல்லாம் இல்லையானா நான் எப்பவோ இந்தப் பகல்நேர வெயில்லேர்ந்து விடுதலையாகி எங்கோ போயிருப்பேன்'னு சொல்ல ஆரம்பிச்சிருக்காரே. காஞ்ச மாடுடியம்மா இது: எப்போ கட்டுத் தறியை அறுத்துக்கொண்டு ஓடி வந்துடுமோன்னு பயமா இருக்கு.''

''அதெல்லாம் ஒண்ணும் பண்ணமாட்டார்!''

''ஸ்ரீராமன்னு பேர் வைச்சிருக்காளே! ஸ்ரீராமன் ஒருநாள் திடீரென்று பட்டையும் பீதாம்பரத்தையும் தூக்கி எறிஞ்சுட்டு மரவுரி தரிச்சிண்டு காட்டுக்குக் கிளம்பிடலையா? புருஷா நினைச்சுட்டாத் துணியைக் கிழிச்சு எறிஞ்சிட்டுப் போக எத்தனை நாழியாகும்?''

''உத்தியோகம், சம்பாத்தியம் எல்லாந்தான் பட்டும் பீதாம்பரமுமா? இதிலே கட்டிக் கிடக்கறதுதான் வாழ்க்கையா? ஏன் இப்படி நினைக்கிறேள்? பாரதியார் ஒருத்தருக்கு ஆயுள் முழுக்கக் கைகட்டிச் சேவகம் பண்ணியிருந்தா நமக்கு இத்தனை அமர கவிதை..''

''போருமே நீயும் உன் பாரதியும்!'' என்று தோளில் மோவாயை இடித்துக்கொள்கிறாள் சீதா. ''அதோ உன் பாரதியே வருகிறார், அவர் கிட்டே ராத்திரி சமைக்க அரிசி கொண்டு வந்திருக்காரான்னு கேட்டுச் சொல்லு.'' விருட்டென்று எழுந்து உள்ளே போகிறாள்.

'வந்துவிட்டாரா?' புல்லரிக்கிறது, வந்தவளுக்குத் தன்னை அறியாமலே. பக்தியுடன் எழுந்து நின்று கண்களில் நீர் பாரமாக மறைக்க வாசற்படியைப் பார்க்கிறாள்; 'என்

என்ன பரிதாபக் கோலம்! சிவப்பாக ஒடிசலாக.... ஐயோ, இது இதென்ன கோலம்! கீழ்முனையில் கிழிந்து தொங்குகிறது ஜிப்பா. பழுப்பு மடிப்பு அங்கவஸ்திரத்தில் யாரோ கையைத் துடைத்திருக்கிறார்கள். கழுத்து எலும்புக்குள் கால்படி எண்ணெய் ஊற்றலாம் போலிருக்கிறது. கண்கள் எங்கோ ஆழத்தில் இடுங்கிக் கிடக்கின்றன. ஐயோ, இது என்ன கோலம்!

ஓடிப் போய்க் கையிலுள்ள சஞ்சியை வாங்கி வைக்க வேண்டும் போலிருக்கிறது; மெது வாகப் பிடித்து வந்து நாற்காலியில் உட்கார வைக்க வேண்டும் போலிருக்கிறது. உள்ளே ஓடிச் சுடச்சுட ஒரு கப் காபி கொண்டு வந்து கொடுத்து இளைப்பாற்ற வேண்டும் போலிருக்கிறது.

முடியாமல், இயலாமல், திகைத்து உருகிச் சிலையாக நிற்கிறாள். ''நமஸ்காரம்!''

''நமஸ்காரம்.. நீ.. நீ.. நீங்கள்.''

''சம்பா!'' பேசமுடியவில்லை. குரல் அடைக்கிறது. ஓடிப் போய்க் காலடியில் விழுந்து கதறித் தீர்த்து விடவேண்டும் போலிருக்கிறது. ஐயோ, என்ன கோலம்!

''சம்பாவா...?'' திகைக்கிறார்.

''நம்ப கடலூர் மாமி, அப்பா'' என்று உற்சாகமாகக் குரல் கொடுக்கிறான் சின்ன கிருஷ்.

''ஓ, நீங்களா? வாங்கோ, வாங்கோ! எப்ப வந்தேள்?'' கண்களில் பளிச்சென்று புதிய உற்சாகத்தின் சுடர் ஏறிக் கொள்கிறது.

''இப்பத்தான் சித்தே மிந்தி. நீன்னே என்னைக் கூப்பிடலாம்.''

திடீரென்று ஸ்ரீராம் கேட்கிறான்; ''சம்பா உனக்கு 'வாரணமாயிரம்' பாசுரம் தெரியுமா! உன்னைப் பார்த்தா சாட்சாத் ஆண்டாள் மாதிரியே இருக்கு.''

லஜ்ஜையில் கூம்புகிறாள் வந்தவள், தலை தாழ. ''நான் பாடினா எங்க ஊர்லே இருக்கிற கிளிகள் எல்லாம் தற்கொலை பண்ணிண்டுடும்னு எங்க அண்ணா சொல்வான்.''

கடகடவென்று சிரிக்கிறான் சின்ன கிருஷ்.

''கிருஷ்! டேய்! இங்கே வா, வந்து அம்மாவுக்குச் சித்தே ஒத்தாசை பண்ணு. இந்த ஆத்துலே ஒத்தாசைக்குக்கூட மனுஷா கிடையாது'' என்று குரல் கேட்கிறது. எழுந்து போகிறான் பையன்.

''இங்கே தற்கொலை பண்ணிக்கக்கூடத் தகுதியில்லாத கழுதைகள்தான் இருக்கு'' என்கிறார் ஸ்ரீராம் வெறுப்புடன். ''இப்ப அவசரம் ஒண்ணுமில்லே; ராத்திரி பாடினாப் போதும். நிலாவிலே மொட்டை மாடியிலே சொப்பனத்துலே வர்ற மாதிரி ஒரு பெண் - ஆண்டாள் பாசுரம் பாடிக் கேட்கணும்போல இருக்கு.''

''நான் சாயந்தரமே திரும்பிடலாம்னு இருக்கேன்.''

''என்ன அத்தனை அவசரம்? ரெண்டு நாள் இருந்துட்டுப் போனா என்ன?''

''லீவு இல்லே. பல நாள் மாலை போட்டுண்டு முயற்சி பண்ணி, அப்புறம் ஒரு நாள் திடீரென்று சபரிமலைக்குக் கிளம்பிப் போகிற மாதிரி வந்திருக்கிறேன்.''

''ஊர்லே குழந்தை குட்டி எல்லாம் அம்மா வரலையேன்னு மறுகி மாய்ஞ்சு போயிடுமா!'' சிரிக்கிறார்.

லஜ்ஜையில் வெட்கி ''எனக்கு ஒரே ஒரு

ஆச்சரியமாகப் பார்க்கிறார் அவர்: 'நீங்கதான் அது: உங்களைத்தான் மடியிலே போட்டுண்டு, மார்லே சாத்திண்டு சீராட்டணும் போலிருக்கு' என்று மனசிலே நினைத்ததைச் சொல்ல முடியாமல், "உங்க எழுத்துத்தான்" என்கிறாள்.

"ப்சு...என் எழுத்தா...ப்சு" என்று உதட்டைப் பிதுக்குகிறார் அவர். "எதுக்கு உபயோகம் அது? யார் கேக்கறா அதை? நுனிப் புல்லு வேண்டியிருக்கு எல்லாருக்கும். ஜீரண சக்தியே இல்லாத மனுஷான்னு வந்துட்டா. இப்பல்லாம் நான் ஒருத்தன் இருக்கேன்னே இந்த இலக்கிய உலகத்துக்கே நினைப்பு இல்லையே!"

"யார் நினைச்சாலும் நினைக்காவிட்டாலும் நான் இருபத்துநாலு மணி நேரமும் உங்க எழுத்தைத்தான் நினைச்சுண்டிருக்கேன்."

"சாட்சாத் அந்தக் கலைவாணியே வந்து சொல்ற மாதிரி இருக்கு. என் தபஸே இல்லே; காட்டிலே ஆச்ரமம் போட்டுண்டு இருந்துண்டு இடையிடையே பக்கத்து ஊருக்குப் போய்ப் பிச்சை எடுத்துட்டு வர்றவன் பண்ற தபஸ்மாதிரிதான். காட்டிலேயே இருந்துட எனக்குப் பாக்கியமில்லே."

"நீங்க நிறையப் பெறணும்."

"குறிஞ்சி தினம் தினம் பூக்காது! பன்னெண்டு வருஷம் தபஸ் பண்ணித்தான் குறிஞ்சிச் செடி பூக்கறது. காட்டிலேயே இருந்தாத்தான் குறிஞ்சிச் செடி பூக்கறது. காட்டிலேயே இருந்தாத்தான் என்னாலே தபஸே பண்ணமுடியும். காட்டுலே மூணு வயித்தைக் காப்பாத்த யாரும் இல்லையே."

"சபரி மாதிரி ஒருத்தி காத்திண்டிருந்தா வந்துடுவேளோ?"

"என்ன சொல்றேள்?"

"நான் உங்களுக்கு ஒரு பரிசு கொண்டு வந்திருக்கேன்."

"எங்கே? கையிலே ஒண்ணையும் காணுமே."

"நன்னாப் பாருங்க. நிமிர்ந்து பார்த்தாத்தானே தெரியும்?"

பார்க்கிறார் நிமிர்ந்து: விழிகள் விரிகின்றன: அவற்றுள் புகுந்துவிடத் துடிப்பவள்போல் தன் விழிகளால் உருகிக்கொண்டு நிற்கிறாள் வந்தவள்.

"தெரியலையே."

"தெரியலே? தெரியலே?"

பின்புறம் நடையில் சரசரவென்று யாரோ நகருகிற ஓசைபோலக் கேட்கிறது. பயத்துடன் திரும்பிப் பார்த்துவிட்டு அவசரமாகத் திரும்பி, "நான் என்னையேதான் கொண்டு வந்திருக்கிறேன்" என்று குரல் நடுங்கச் சொல்கிறாள்.

"உன்னையா?" திகைப்பூண்டை மிதித்தவர் போலக் கேட்கிறார் ஸ்ரீராம். அவர் குரலும் நடுங்குகிறது. "என்ன சொல்றே?"

தலையை குனிந்துகொண்டு பொலபொலவென்று கண்ணீர் உதிர்க்கிறாள் வந்தவள்.

"எதுக்கு அழறே?"

"அழாமே என்ன பண்றது? என் கற்பனைக் கோட்டை எல்லாம் அழிஞ்சு போயிடுத்தே! ரெண்டு நாளாக அடக்கி வைச்சதெல்லாம் அணை புரண்டு வர்றது! அழாமே என்ன பண்றது?"

"கண்ணைத் தொடைச்சிக்கோ! யாரோ வர்ரா."

சட்டென்று கண்ணைத் துடைத்துக்கொள்வதற்கும் வாசற்புறம் நிழல் தட்டுவதற்கும் சரியாக இருக்கிறது.

"யாரு? வாங்க உள்ளே."

"நான்தான் சபேசன். என்ன இது? வேலையை ராஜிநாமாப் பண்றதா ஸ்கூல் முழுக்க பேசிக்கிறாளே."

"ஆமா, அப்படித்தான் யோசனை!"

"என்ன திடீரென்று?"

"திடீர்னு ஒண்ணுமில்லே. ரொம்ப நாளாகவே முள் காலிலே தைச்சிண்டிருக்கு. இப்போ ரொம்ப நெருடுகிறது. புடுங்கி எறிஞ்சுடலாம்னு..."

"முள்ளைப் புடுங்கி எறிஞ்சுட்டா நடந்துடலாம். சோறு போடற தொழிலை..."

"நமக்குத் தொழில் சம கணங்களையும் சமா கணங்களையும் கட்டிக்கொண்டு மாரடித்தல் இல்லை. நமக்குத் தொழில் கதை எழுதுதல், இலக்கியம் படைத்தல்."

"யோசிச்சு செய்யும்."

"எல்லாம் யோசிச்சாச்சு. பூமியில் எவர்க்குமினி அடிமை செய்யோம்; பரிபூரணனுக்கே அடிமை செய்து வாழ்வோம்."

அவர் போனதும், "அவர் கிடக்கார்! கட்டுத் தறியையே சுதந்தரமா நினைக்கிற அல்ப ஜன்மம். நீங்க வாங்கோ, சாப்பிடலாம்" என்று எழுந்தார் ஸ்ரீராம்.

## 4

நிலா பாலை வாரி விசிறியிருக்கிறது கொல்லையில். அற்புதமாக இருக்கிறது உலகம்.

பகலில் தகித்த மதமாச்சரியங்களின் சூடு இல்லை. சத்தியத்தின் உடம்புபோல, குளிர்ந்திருக்கிறது, இயற்கையின் உடம்பு.

தளதளவென்று நிற்கின்றன, பெரிய வாழைகள் கிணற்றடியில். ஒரு மல்லிகைப் பந்தர் பூத்துச் சொரிந்திருக்கிறது.

கைகால் அலம்பச் செம்பை ஸ்ரீராமிடமிருந்து வாங்கிக்கொள்ளும்போது வந்தவள், அந்தரங்கமான பிரீதியுடன் கேட்கிறாள்: "நிஜமாகவே வேலையை விட்டுவிடப் போகிறீர்களா ஸ்ரீராம்?"

"ஆமாம்!"

"அப்புறம்?"

"அதைப்பத்தி இப்போ என்ன?"

"அதைப் பத்தி என்னவா? நினைச்சா வயித்தைக் கலக்குகிறதே."

பேசாமல் இருக்கிறார் அவர்.

"நான் ஒன்று சொல்லட்டுமா? கேட்பேளா?"

"என்ன?"

"கடலூர்க்கு வந்துடுங்கோ, எல்லாரையும் அழைச்சுண்டு. எனக்கு அறுநூறு ரூபாய் வருகிறது. போராதா, நம் எல்லாருக்கும்? போராதுன்னு எங்க அண்ணா ஒரு அச்சகம் வைச்சிருக்கான்; புஸ்தகம் எல்லாம் போடறான். ஒரு பத்திரிகை ஆரம்பிக்கணும்னு சொல்லிண்டிருக்கான். உங்களை 'எடிட்'டரா வைச்சு ஆரம்பிச்சுடச் சொல்றேன்."

"பேஷா இருக்கிறதே நீங்க சொல்றது!" சிரிக்கிறார் ஸ்ரீராம்.

"நான் ஸீரியஸாகத்தான் சொல்றேன், ஸ்ரீராம். பெரிய வீடு இருக்கு. மாடி முழுக்க ஒழிச்சு விட்டுடறேன். கவலையில்லாமஉட்கார்ந்து நீங்க எழுதிக் குவிக்கலாம்."

''உம்'' என்று பெருமூச்செறிகிறார் ஸ்ரீராம்.

அவள் குரல் கேவுகிறது: ''சொல்லுங்க ஸ்ரீராம். நான் உங்களுக்கு அந்நிய மனுஷியா?''

''எனக்கே தெரியலே, சம்பா!'' என்று குரல் கம்மக் கூறுகிறார் ஸ்ரீராம். ''உன் குரல் எத்தனையோ ஜன்மமா கூடவே பேசிண்டு வந்த குரல் மாதிரிதான் இருக்கு... ஆனா.. ஆனா...''

''வேலையில்லாமே, வருமானம் இல்லாமே, நீங்க இங்கே பசியும் பட்டினியுமா இருந்தா, அங்கே எனக்கு ஒரு கவளம் சோறு இறங்காது ஸ்ரீராம்.''

''பறவைகளுக்கும் மீன்களுக்கும் யார் சோறு போடுகிறார்கள் சம்பா?''

''பறவை மீன் எல்லாம் தெய்வ ஜாதி; நாம் கேடு கெட்ட பிறவி ஆயிற்றே!''

''கால் அலம்பிக்கோ; நேரமாச்சு; அப்புறம் ரெயிலுக்கு நேரமாயிடும்.''

''நான் போகப் போகிறதில்லே, உங்களை விட்டுட்டு...''

''அசடு, வெறும் அசடு! யாராவது கேட்டாச் சிரிப்பா. கண்ணைத் துடைச்சுண்டு பின்னாலே வா.''

முன்னாலே கம்பீரமாகப் போகிறவரைப் பார்க்கும்போது அந்த நிமிர்வு பாரதியாரையே நினைவூட்டுகிறது. கண்ணைத் துடைத்துக் கொண்டு பின்னால் போகிறாள்.

''மிக நல்ல மாமி. நான் மாமி கூடத்தான் உட்காருவேன்'' என்று அடம் பிடித்து மாமியோடுகூட ஒட்டிக்கொண்டு உட்கார்ந்து கொள்கிறான் சின்ன கிருஷ்.

''அடபோக்கிரி, அதற்குள்ளே என் நல்லதனம், பொல்லாத்தனம் எல்லாம் தெரிஞ்சுடுத்தா உனக்கு?'' என்று ஆசையோடு அவனை இடக்கையால் அணைத்துக் கொள்கிறாள் வந்தவள்.

''சீதா! ரெண்டு அப்பளம் பொரிச்சு, ஒரு பாயசம் பண்ணியிருக்கக்கூடாது?'' என்று இலைமுன் அமர்ந்ததும் கேட்கிறார் ஸ்ரீராம்.

''என்ன விசேஷம் இன்னிக்கு, பாயஸத்துக்கும் அப்பளத்துக்கும்? ஆடியா, அமாவாசையா? என்ன வந்திருக்கு?'' என்று கடுகடுப்புடன் கேட்கிறாள் சீதா.

''பார்த்தாத் தெரியலேயா? என் விசிறிடி, என் விசிறி வந்திருக்கா.''

''ஓ. விசிறியா? அப்படிச் சொல்லு!'' என்று எகத்தாளமாக நக்கல் பண்ணுகிறாள் சீதா. ''எனக்கென்ன தெரியும்? விசிறியும் கிசிறியும், நான் என்ன கண்டேன், குமட்டியிலே நெருப்பைக் கனிய வைக்கிற விசிறியைத் தவிர?''

சட்டென்று கரண்டியும் கையுமாக வந்தவள் திரும்பிக் கேட்கிறாள்: ''ஏண்டியம்மா, நீ எதை விசிறிவிட வந்திருக்கே சூர்ப்பணகை மாதிரி?''

''அக்கா!'' என்று பதறுகிறாள் வந்தவள்.

''சீதா!'' என்று திகைக்கிறார் ஸ்ரீராம். கையில் எடுத்த கவளம் அப்படியே இருக்கிறது.

''ஏன் பதறுகிறீர்கள் ரெண்டு பேரும் திருடர்கள் மாதிரி? நான் எல்லாம் கேட்டுண்டு தான் இருந்தேன், கொல்லையிலே நீங்க பேசினதை எல்லாம்.''

''சீதா!''

''என்னை ஏமாத்தப் பாக்க வாண்டாம்; நான் மூடம் இல்லே. நான் விடமாட்டேன்; இந்த மாயக்காரியோடு உங்களைப் போகவிட மாட்டேன். கேட்டுக்குங்கோ நன்றாக. அன்னிக்குத் தண்டகாரண்யத்துலே சீதையைப் பர்ணசாலையில் விட்டுட்டு லக்ஷ்மணன் கோடு கிழிச்சுட்டுப் போனானே, அந்த மாதிரி நானும் இப்போ, உங்களைச் சுத்தி என் வாக்காலே என் கழுத்துல கட்டியிருக்கிற தாலிச் சரட்டிலே நீங்க ஏத்திவைச்ச மந்தரங்களாலே ஒரு கோடு கிழிக்கிறேன்; நீங்க அதைத் தாண்டி இவ பின்னாலே போகப் படாது, போகப்படாது. போகவேகூடாது!''

மூச்சு இறைக்கிறது. பேசமுடியாமல் ஆவேச அக்கினியால் உடம்பெல்லாம் புது ஒளி பெற்று ஒளிர்கிறது.

''இதை மீறிண்டு போனா நீங்க ஸ்ரீராமன் இல்லே.'' சமையலறைக்குப் போய்விட்டாள்; 'பட்டிக்காட்டு ஜன்மமாயிற்றே! கொள்ளியைக் கிள்ளியை இழுத்து வச்சுப் பத்திக் கொண்டுவிடக் கூடாதே' என்று பதறிக் கொண்டு பின்னால் போகிறார் ஸ்ரீராம்.

அங்கே அவள் ஏற்றிவைத்த விளக்குகளின் முன், சிரிக்கும் பட்டாபிஷேகப் படத்தின் முன் நெடுஞ்சாண்கிடையாய் விழுந்து கிடப்பதைப் பார்த்தபிறகே உயிர் வருகிறது.

மூச்சுத் திணறுகிற மாதிரி இருக்கிறது: நெருங்கி வரும் ஒரு வளையத்துக்குள் சிக்கிக் கொண்டு விட்டமாதிரி இருக்கிறது.

வந்தவள் என்ன ஆனாளோ என்று பதை பதைப்புடன் கூடத்துக்கு வருகிறார். இலையில் இட்ட அன்னமும் கறியும் அப்படியே கிடக்கின்றன.

கையைக் கழுவிக்கொண்டு கைப்பையை எடுத்துக்கொண்டு, ''நான் வரேன்'' என்று ஈனஸ்வரத்தில் எங்கோ பார்த்து முனகிக் கொண்டு, கிளம்பிக்கொண் டிருக்கிறாள் வந்தவள்.

பேசாமல் பின்னாலேயே வந்து நிற்கிறார் ஸ்ரீராம். குனிந்திருக்கிறது அவர் தலையும்.

''நான் வர்ரேண்டா என் தங்கக் கிருஷ்.''

'குபுக்' கென்று வெடித்து விடுகிறது துயரச் சுனை. பையனை அப்படியே இழுத்து மார் புடன் அணைத்துக்கொண்டு உச்சி மோந்து விட்டு தள்ளாடியவாறே கிளம்புகிறாள் வந்தவள்.

''நான் வர்றேன்.''

எங்கோ பார்த்துக்கொண்டு சொல்லிவிட்டுப் படி இறங்கி ஓர் ஆட்டோவைக் கைதட்டிக் கூப்பிட்டு ஏறியவளைப் பார்த்துக் கொண்டே படியில் நிற்கிறார்கள் தந்தையும் மகனும்.

மகனின் கையை கெட்டியாகப் பிடித்துக் கொள்கிறார் தந்தை: 'நான் வரேன், நான் வரேன்' என்ற அந்த ஒரு வார்த்தையே திரும்பத் திரும்ப வேகவேகமாகக் காதில் ஒலிக்கிறது! தலை சுழல்கிறது.

''கண்ணா, அடேயப்பா என்னைப் புடிச்சுக் கோடா, சட்னு.''

## 5

''அம்மா சித்தே அக்னி கொண்டு வரேளா.''

''இதோ கொண்டு வருகிறேன், மாமா.''

கண்ணில் படலமாக விழுந்த துயரத்தைச் சுண்டிவிட்டு அகப்பையில் தணலை அள்ளிக் கொண்டு வருகையில், ஈரப் பஞ்சகச்சத்திலும், தடிமனான கண்ணாடியிலும், இளம்

தொப்பையுடனும் நிற்கிற அவருடைய புருவங்களும் ஊயப்பால் ஏறி இறங்கி 'அட ஜோரா இருக்கிறாயே, இந்தக் கட்டில்' என்கின்றன.

'போங்கண்ணா' என்று புருவத்தாலேயே செல்லமாகக் கடிந்து கொண்டு விட்டுக் குமட்டியில் அகப்பையைக் கவிழ்க்கிறாள் சம்பா.

''இந்தக் கோதாவரிக் குண்டு போருமோண்ணா? பிண்ட சாதம் வடிக்கிறதுக்கு?''

''யதேஷ்டம்; யதேஷ்டம்!''

அரிசியையும் தண்ணீரையும் கலந்து குமட்டியில் வைத்துவிட்டு, ''நாராயணா! ஊதுடா நன்னா! பதினைஞ்சு நிமிஷத்துலே அன்னம் ரெடியாயிடணும்'' என்கிறார் வாத்தியார்.

புகை மண்டுகிறது வீடு முழுக்க.

பலகை போட்டுத் தருப்பைகளைக் கிள்ளித் தீர்த்தத்தை ஊற்றி, ''எள்ளு எங்கே இருக்கு?'' என்று கேட்டுவிட்டு, பொட்டலத்தைப் பிரித்துக்கொண்டே, ''ஏண்டா நாராயணா, அந்தப் பிரகஸ்பதியை இன்னும் காணோமே? எட்டு மணிக்குள்ளே வந்துடறேன்னுதே'' என்கிறார்.

''என்னிக்கு வந்திருக்கு, அது சொன்ன டயத்துக்கு?'' என்கிறான் நாராயணன். ''எங்கேயாவது மோட்டைப் பார்த்துண்டு உட்கார்ந்து குருட்டு யோசனை பண்ணிண்டிருக்கும்.''

''இல்லேடா; பையனுக்கு ஜுரம்னுண்டா; எப்படி இருக்கோ?'' என்றார் பட்டாசாரியார்.

''வந்துடுவாரோ இல்லையோ? ஆபீஸ் டயத்துக்குள்ளே முடிச்சுடுவேளோல்லியோ? நான் புதுசா மாத்தி வந்திருக்கேன். லேட்டா கிட்டா எல்லாம் போகமுடியாது.''

''அதெல்லாம் கவலையேபடாதீங்கோ. 'டான்'னு ஒன்பது நாற்பதுக்கு நீங்க சாப்பிட்டுட்டுக் கிளம்பிடலாம். நாணுச்சு.''

''சம்பா! சமையல் எல்லாம் ரெடியா?''

''ஓ அப்பவே ரெடி.''

''பூணூலை மாத்திக்குங்கோ. இப்படி உட்காருங்கோ. இந்தத் தர்ப்பையைப் பவித்ர விரலில் போட்டுக்குங்க. அட, அதோ வந்துட்டாரே ராமு! வாய்யா வா? என்ன இப்படி நாழி பண்ணி விட்டே!''

''என் பிள்ளைக்குச் சின்ன கிருஷ்ணுக்கு ஜுரம்...!''

''எக்ஸ்ப்ளனேஷனல்லாம் வாண்டாம். கொல்லையிலே போய், ரெண்டு சொம்பு தண்ணியை இறைச்சுத் தலையிலே கொட்டிண்டு, மூணாவது நிமிஷம் இங்கே வந்து உட்காரணும். ஆமா, சொல்லிட்டேன்! யஜமான் காத்துண்டிருக்கார்.''

'என் பிள்ளை சின்ன கிருஷ்ணுக்கு ஜுரம்!' தூக்கிவாரிப் போடுகிறது, தாழ்வாரத்தில் இலை நறுக்கிக் கொண்டிருக்கிற சம்பாவுக்கு.

நிமிர்ந்து பார்க்கிறாள். பாதாதிகேசம் பதறுகிறது. அவர்தாம்; அவளுடைய அபிமான எழுத்தாளர்தாம்! ஐயோ அவந்தரையான கோலம். அழுக்குத் துணி; நரைத்த தாடி, மீசை; கிழிசல் அங்கவஸ்திரம். பெரிய சாளேசுவரக் கண்ணாடி. உயிரற்ற ஏதோ ஒன்று நடந்து போகிறமாதிரி இருக்கிறது. வயிற்றைக் கலக்குகிறது.

'ஸ்ரீராம் உங்களுக்கா இந்தக் கதி?' என்று விரிட்டுக்கொண்டு போய் அவர் காலடியில் விழுந்து உடல் மரத்துவிட வேண்டும்போலிருக்கிறது.



நூறாயிரம் கேள்விகள் மனத்தில் எழுகின்றன. எப்போது இவர் வந்தார், இந்தக் கடலூருக்கு ஏன் வந்தார்? என்னைத் தேடிக்கொண்ட நான் கல்யாணம் பண்ணிக்கொண்டு போ

ிட்டேன் என்றதும் இந்தக் கோலத்தில் ருக்கிறாரா? எங்கே இருக்கிறார் கடலூரில்?

''அம்மா! சித்தே வந்துவிட்டுப் போயேன்'' ன்று மாமி கூப்பிடுகிறாள்.

''என்ன மாமி?'' என்று எழுந்து போகிறாள் ம்பா. உயிரில்லாத கூட்டைச் சுமந்து கொண்டு போகிற மாதிரி இருக்கிறது.

''எல்லாம் பண்ணி ஆயிடுத்து. நான் புறப் டட்டுமாடி, சம்பா. ஆத்திலே என் பேரன் ராம்பப் படுத்துண்டிருக்கான்டி. தனியாக ிட்டுட்டு வந்திருக்கேன்'' என்று எழுகிறாள் ாமி.

''புறப்படறேளா? சாப்பிடாமலேயா? ிதோ ஆயிடும் சிராத்தம், சாப்பிட்டுவிட்டே பாங்கோ.''

''அதெப்படி இதோ ஆயிடும்? இப்பத் ானே என் பிள்ளையே வந்திருக்கிறான்?''

''உங்க பிள்ளையா?''

''ஆமா. அதோ கொல்லையிலே தண்ணியை மாண்டு கொட்டிண்டிருக்கிறானே, அவன் ான் பிள்ளை!''

''ஆங்'' என்று அதிர்கிறாள் சம்பா? ''மாமி! மட்ராஸா, உங்களுக்கு? நான் வந்திருந்த பாது உங்களைப் பார்க்கவே இல்லை.''

''நீ வந்திருந்தாயா எங்காத்துக்கு? ப்போ? எனக்குத் தெரியாதே!'' என்கிறாள் ாமி. ''நீ எப்படிப் பார்த்திருக்க முடியும், ன்னை? அந்த ராட்சசி இருந்தவரைக்கும் ன்னைத்தான் படி ஏற விடவில்லையே? நான் ிலாப்பூரிலே ஓர் ஆத்துலே சமையல் ண்ணிப் போட்டுண்டுன்னு இருந்தேன்.''

''எப்போ வந்தேள், இந்த ஊருக்கு?''

''அந்த ராட்சசி, இவனுக்கு வேலை போன ும் சண்டை போட்டுண்டு போனப்பறம், ிங்கே புறப்பட்டு வந்தோம், ஏழெட்டு ாசம் கழிச்சு. என்னமோ இந்த ஊர்லேதான் ிளி கொஞ்சறதாம். இந்தத் தோப்புகளிலே த்திண்டிருந்தாலே ஜன்மா சாபல்யமாயிடு ாம். இதுதான் அவனுக்குக் கோகுலமாம்.''

உள்ளூற ஊடுருவியது உயிர். புரிந்துவிட்டது ல்லாம். அவனைத் தேடிக்கொண்டுதான் ந்திருக்கிறார்.

''எனக்கும் இந்த ஊர்தான் மாமி. பக்கத் லே ஒரு ஊர்லேதான் எங்க அப்பா வேலையா ிருந்தார். நான் இந்த ஊர்க் காலேஜிலேதான் டிச்சு, பாஸ் பண்ணினேன். கல்யாணமானப் றம் இப்பத்தான் ரெண்டு வருஷத்துக்கொரு ரம் டேராவைத் தூக்கிண்டு ஊர் ஊரா ுத்யறேன். உங்க பிள்ளை எழுதற கதைன்னா னக்கு உயிர். ஒரு காலத்துலே பைத்திய ாகவே அலைஞ்சேன்.''

''ரொம்பக் கிட்ட நெருங்கி வந்துட்டயேடி, ம்பா!''

''எங்கே குடியிருக்கேள்?''

''தேரடித் தெருவிலே பதினெட்டாம் ம்பர் வீட்டிலே.''

''உங்க பிள்ளை நல்ல வாத்தியார் வேலை லே இருந்தாரே.''

''அது அடிமை வாழ்க்கையாம். அதைவிட த்ருக்களா உட்கார்ந்து பிண்டத்தை ஒத்துக்க ரமாம். இப்போ சுதந்தரமாக இருக்கானாம். னுஷாளையே பிடிக்கலையடி, அவனுக்கு. யார் ட்டேயும் பேசறதுகூட இல்லை. பிள்ளைப் ரசம் ஒண்ணுதான் பிடிச்சு வைச்சிண் ருக்கு.''

''சின்னக் கிருஷைப் பார்க்கணும்போலி ருக்கு மாமி!''

''வாயேன் எங்காத்துக்கு, ஒரு தபா.''

''கட்டாயம் வரேன், மாமி. கிருஷ்கிட்டே சொல்லுங்கோ மாமி. அவனோட சாக்லேட் மாமி அவனை நிமிஷங்கூட மறக்கவே இல் லேன்னு, சொல்லுங்கோ!'' குரல் அழுகையாக வெடிக்கிறது.

''ஏண்டி பொண்ணே, இப்படி விசிச்சு விசிச்சு அழறே?''

''என்னமோ நினைச்சுண்டுட்டேன். மாமி! தாங்கலை, மாமி!''

## 6

பரம கிலமாகக் கிடக்கிறது, தேரடித் தெரு. பதினெட்டாம் நெம்பர் வீடு. ஆனையடி திரும்பியதும் பதினெட்டாம் நம்பர்தான்.

அல்வாக்கடையில் அரைச் சேர் வாங்கிக் கொண்டு காரிலிருந்து இறங்கிப் படியேறு கிறாள் சம்பா. கூரை வீடுதான். முதல் படியில் கால் வைத்ததுமே, கூரையிலிருந்து இற்றுப் போன ஒரு துணுக்குத் தலைமீது விழுகிறது.

தரித்திரம் தாண்டவமாடுகிறது வீடு முழுக்க. கூடத்தில் தரையில் பாயில் படுத்திருக் கிறான். சின்னகிருஷ் பெரிய கிருஷாகிவிட்டான் இப்போது. குண்டு மூஞ்சியும், வட்டக் கண்களும் மட்டுந்தான் அடையாளம் சொல் கின்றன.

''என்னைத் தெரிகிறதாடா, சின்ன கிருஷ்?'' என்றவாறே மண்டியிட்டு அருகில் உட்கார்ந்து ஆதரவோடு தலையைக் கோதுகையில் தாய்மை கண்களிலும் மார்பகங்களிலும் பொங்குகிறது.

''தெரியலையே!'' என்று கூசி நெளிந்து மலங்க விழிக்கிறான் பையன்.

''கடலூர் மாமிடா, நான்! உன் சாக்லேட் மாமி! தெரியலை?''

பளீர் என்று ஒரு மின்னல் மின்னுகிறது பையனுடைய கண்களில். ''ஓ நீங்களா? அடையாளமே தெரியலையே! இது என்ன மூஞ்சி யெல்லாம்! அப்போ இல்லையே.''

''இதா! இது சுவாமி எதுக்கோ எனக்குக் கொடுத்த தண்டனை. கடலூர்க் கிளி, கடலூர்க் கிளின்னு ரொம்பக் கர்வப்பட்டுக்கொண்டிருந் தேனே இல்லையோ? அதுக்காக இருக்கலாம். உங்காத்துலேருந்து வந்ததும் ஜுரமாப் படுத்துண்டிருந்தேன். ஒரு மாசம் கண்ணே திறக்கலை. அப்போ சுவாமி மூஞ்சி நிறைய முத்தா வாரி விசிறிட்டார்.''

''அப்படியா?'' என்று பிரலாபிக்கிறான் பையன். ''எவ்வளவு நன்னா இருந்தேள்? கண்லேயே நிக்கறதே! ஆண்டாள் மாதிரியே வந்து நின்னேளே!''

'வந்து நின்னு என்ன பிரயோசனம்? என் ரங்கநாதர்தான் என்னை அப்போது ஒத்துக் கலையே' என்று மனத்துக்குள் ஏக்கம் கேவு கிறது. வெளியில் சொல்ல முடியுமோ?

''அப்பா, பாட்டி எல்லாம் எங்கேடா?'' என்று கேட்கிறாள்.

''பாட்டி, அப்பளம் விக்கப் போயிருக்கா. அப்பா எங்கேயானும் ஒரு தோப்புலே, ஒரு கிளிகிட்டே பேசிண்டு நிப்பா!''

''படிக்கிறயாடா, சின்ன கிருஷ்?''

''எட்டாவது மாமி!'' பூவாக மலர்ந்து விட்டான் பையன். மிகவும் ஆப்தமான ஒருவரே வந்துவிட்டதுபோல மனசு வேற

மலர்ந்திருக்கிறது: 'ஹாய் மாமீ' என்று எழுந்து உட்கார்ந்து அவளைக் கட்டிக்கொள்ள வேண்டும்போலிருக்கிறது. கையைப் பிடித்துக் கொள்கிறான்.

வீட்டைச் சுற்றிப் பார்வை சுழல்கிறது. இரண்டு அழுக்கு வேஷ்டிகளும், மாமியின் புடைவையும் ஒரு ஸ்கூல் யூனிபாரமும் கொடியில் தொங்குகின்றன.

ஒரு மூலையில் ஒரு சின்ன மேஜை: அதன் மீது கற்றை கற்றையாகக் காகிதக் கட்டுக்கள். கதைகளா?

"மாமி! நீங்க அந்த நாள்ளே அப்பாவுக்கு எழுதின லட்டர் எல்லாம் அதோ அந்தச் சஞ்சியிலே இருக்கு."

'ஆங்: இருக்கிறதா அதெல்லாம் இன்னும்? இன்னுமா வைத்துக்கொண்டிருக்கிறார், அந்த அசட்டுப் பிசட்டை எல்லாம்?'

எடுக்க நீண்ட கை ஏனோ பின்னடைந்து திரும்புகிறது.

"ஏன், மாமி? வேணும்னா எடுத்துப் பாருங்கோ! அப்பாவே தினமும் எடுத்துப் படிக்கிறாரே."

மெய் சிலிர்க்கிறது.

"உங்களை அவர் மறக்கவே இல்லை, மாமி. வாய் திறந்தால் உங்க பேச்சுத்தான்."

சுவரைப் பார்க்கத் திரும்பிக்கொண்டு உதட்டைக் கடித்துக்கொள்கிறாள் சம்பா.

சட்டென்று எழுந்து உட்கார்ந்து அவள் கையைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்கிறான் சின்னகிருஷ்: "மாமி! இப்போ எங்க அம்மாவும் இல்லே, அவள் கிழிச்ச கோடும் இல்லே. நீங்க எங்காத்துக்கே வந்துடுங்கோ."

"ஆங்! நானா?" என்று கையை மெதுவாக உருவிக்கொள்கிறாள் சம்பா. பையில் கொண்டு வந்திருக்கிற பழங்கள், பட்சணங்கள், புது டிராயர், சட்டைகள் எல்லாவற்றையும் எடுத்து வரிசையாக வைக்கிறாள். மனசுக்குள் பதைபதைப்பு உதைக்கிறது.

"நிஜமாகத்தான், மாமி வந்துடுங்கோ, மாமி. ப்ளீஸ்."

'கிருஷ்..!' என்று கூவி அவனைக் கட்டிக்கொண்டு, 'இனிமே உங்களை விட்டு நான் எங்குமே போகமாட்டேன்டா, கண்ணே' என்று கதறத் துடிக்கிறது மனசு.

ஆனால், நேர்மாறாக இருக்கிறது அவள் செய்கையும் வாக்கும். பையைத் தலை கீழாகக் கொட்டிக் கவிழ்த்துக்கொண்டே நிதானமாகச் சொல்கிறாள்.

"கோடுகள்ளே ரெண்டு விதம் இருக்கு: காகிதத்திலேயும் தரையிலேயும் மனுஷா வரையற கோடுகள். இதை யார் வேணும்னாலும் எப்போ வேணும்னாலும் கிழிச்சுப் போட்டுட்டுப் போயிடலாம். ஆனால் தாண்ட முடியாத - தாண்டக்கூடாத கோடும் ஒண்ணு இருக்கு. அது தர்மம் என்கிற சக்தி வரைகிற கோடு. மந்திரங்களாலே, ரிஷிகளைச் சாட்சியா வச்சுண்டு, தர்மம் வரைஞ்ச கோடு. பகவான், இப்ப என்னைச் சுத்தியும் அப்படி ஒரு கோட்டை வரைஞ்சுட்டார். நான் அதை மீறிட்டு வந்தா, கோயில்லேருந்து வெளியிலே வந்து விழுந்த 'கல்'லாயிடுவேன். கோயிலுக்குள்ளே கர்ப்பக்கிருகத்துக்குள்ளே இருக்கிற வரைக்குந்தான் பெண் தெய்வமாகவும், லோகத்துக்கெல்லாம் மாதாவாகவும் இருப்பாள். அப்படி இருந்தாத்தான் தன் குழந்தைகள் எல்லார் மேலேயும் அவளாலே தாராளமாக அன்பைப் பொழியவும் முடியும். நான் எனக்கு விதிச்ச கோட்டுக்குள்ளேயே இருந்துண்டே என் பிள்ளையான உனக்கு என்றைக்கும் அன்பைப் பொழியும் அன்னையாக இருப்பேன். எனக்கு அது போதும். நான் வர்ரேன்."

வாசற்படியைத் தாண்டுகையில், சின்ன நடையில் இருளில் பெஞ்சிமீது நிழல்மாதிரி சின்ன கிருஷின் அப்பா உட்கார்ந்திருப்பது தெரிகிறது.

நிற்கவோ, பேசவோ முயலாமல், மனச்சலனம் சிறிதுமின்றி, கர்ப்பக்கிருகத்திலிருந்து நகர்வலம் முடிந்து திரும்பிப் போகிற களங்கமற்ற அம்பாளைப் போலவே கம்பீரமாகக் கழுத்தை உயர்த்திக்கொண்டு போய்க் காரில் ஏறிக்கொள்கிறாள், சம்பா.

சீறிப் பாய்கிறது கார். கோயில் வாசலைக் கடக்கையில் மண்டபத்து அண்ணாவி கடையில் சரம்சரமாகத் தொங்கும் மாலைகளிலிருந்து சம்பகப்பூவின் மணம் 'கம்'மென்று மூக்கைத் துளைக்கிறது?

ஹா! சம்பகம் சம்பகந்தான்! என்ன தூய மணம் அதற்கு?

## பதினொரு கதைகள்

சிறு கதை எழுதுவதில் இப்போது எவ்வளவோ உத்திகள் கையாளப்படுகின்றன. ஒரே பக்கத்தில் எழுதும் கதைகள்கூட மனத்தை விட்டு அகலாமல் பதிகின்றன. பதினோர் இளம் எழுத்தாளர்கள், ஆளுக்கு ஒன்றாக எழுதிய பதினொரு கதைகளைத் தொகுத்துத் தாங்களே புத்தகமாக வெளியிட்டிருக்கிறார்கள். இந்தப் பதினோர் எழுத்தாளர்களுமே முப்பது வயதுக்குட்பட்டவர்கள். வாழ்க்கை அநுபவம் சிலருக்கு அதிகம் இல்லாவிட்டாலும், வாழ்க்கையில் கண்டவற்றை அப்படி அப்படியே எழுத்தில் சுவையாக வடித்திருக்கிறார்கள்.

வாசகன் என்ற அமைப்பு இந்தச் சிறுகதைத் தொகுப்பை வெளியிட்டிருக்கிறது. இதுவரை ஆறு நூல்களை வெளியிட்டுள்ள இந்த அமைப்புக்கு இது ஏழாவது நூல். இதிலுள்ள பதினொரு கதைகளும் வெவ்வேறு சுவையுடன், இளைஞர்களின் மனவோட்டத்தைப் பிரதிபலிக்கின்றன. திரு ஆதவனின் கதை, தொகுப்பின் முதலில், முதல்தரக் கதையாய் அமைந்திருக்கிறது. ஸிந்துஜா, கலாஸ்ரீ, பாலகுமாரன் ஆகியவர்களின் கதைகள் மூளைக்கு வேலை கொடுக்கின்றன.

ஆறு ரூபாய் விலையில், மதராஸ் யூத் ஃபோரம், 173, லாயிட்ஸ் சாலை, சென்னை-14 என்ற விலாசத்தில் இந்தச் சிறுகதைத் தொகுப்புக் கிடைக்கும்.

"நீங்கள் தெளிவற்ற வார்த்தைகளையே கேட்டுத் திகைத்துத் தேம்பி அழுது அழுது, மற்றவர்கள் சலித்து வெறுப்பதனுல் தன்னம்பிக்கை இழந்து இருக்கலாம். இனி அப்படி இருக்கக்கூடாது. முதலில் உள்ளத்தை உற்சாகத்தோடு வைத்துக் கொள்ள வேண்டும். உங்கள் குறையையே பெரிதாக எண்ணி ஏங்கக்கூடாது: "காதிலே விழுகிறதா நான் சொல்வது?" என்று சற்று மெதுவாகவே கேட்கிருர்: அந்த நபர், "விழுகிறதுங்க" என்று பதிலளிக்கிருர். சித்தர் நம்பிக்கையோடு மேலும் கூறுகிருர்: "சிரத்தையோடு வார்த்தைகளைக் கேட்பதற்காக உற்று நோக்கி மற்றவர்கள் வாய் அசைவையே பார்த்துப் பேசக் கூடாது. உணர்ச்சியோடு நீங்கள் வாய்விட்டு, மனம் விட்டுப் பேசுங்கள். சொல்லும் வார்த்தைகளைப் புன்னகையோடு கேளுங்கள். நீங்களே எதையாவது எண்ணிச் சம்பந்தமில்லாத வார்த்தைகளைப் பேசாதீர்கள்."

சித்தர் சொல்லி வரும்போதே சில கேள்விகளை அவரிடம் கேட்கிறேன். "காதில் இரைச்சல் இருப்பவர்களுக்கு நீங்கள் சொல்லும் யோசனை என்ன?"

"காதில் இரைச்சல் இருந்தால் உங்கள் கவனத்தை அதன் மேலேயே செலுத்திக் கொண்டிருக்காதீர்கள். எந்தத் தெளிவான சத்தத்தையும் அப்போது உங்களால் கேட்க முடியாது. அந்த நிலையில் மூக்கை அடைத்துக் கொண்டு. காது நரம்புகளைத் தளரவிட்டால் நல்லது. உங்கள் சிந்தனையை, பார்வையை, செயலை வேறு பக்கமாக மாற்றினல், இரைச்சல் சிறிது சிறிதாகக் குறைந்துவிடும்; இரைச்சல் இருக்கிறதா என்று எண்ணி அதைப் பற்றி ஆராய்ச்சி செய்யாமல் இருந்தால் அது உங்களை விட்டுச் சிறிது சிறிதாக நீங்கி விடும். காது, மூக்கு, தொண்டை மூன்றும் ஒருங்கே செயல்படும் சக்தி பெற்றவை ஆயிற்றே!"

அப்போது அங்கே ஒருவர் வந்தார். அவரிடம், "எப்படி இருக்கிறீர்கள்?" என்று சித்தர் கேட்டார். அவர் ஏற்கனவே சிகிச்சை பெற்றுக் குணமாகிச் சென்றவர். சித்தரின் கேள்விக்குப் பதில் சொல்லிக்கொண்டே அவர் தம் காதருகில் கையைக் கொண்டு போனுர். சித்தர் சீறினுர். "ஐயா, உமக்கு ஒரு காது மட்டும் கேட்கவில்லை என்று என்னிடம் வந்தீர்கள். ஒரு காது அறுவை சிகிச்சை செய்தும் கேளாத வேறு ஒருவரையும் அழைத்து வந்தீர்கள். மருந்து விட்டுக் குணப்படுத்தினேன். இப்போது நான் கேட்ட கேள்விக்குச் சாதாரணமாகப் பதிலும் சொன்னீர்கள். மிகவும் சந்தோஷம். ஆனுல் ஒரு பக்கமாகச் சாய்ந்து கேட்டு, கையைக் காதின் அருகில் வைத்து என் முகத்தைச் சந்தேகத்தோடு பார்த்துப் பதில் சொல்கிறீர்களே! இந்தப் பழக்கத்தைத் தவிர்த்துவிடுங்கள் என்று ஏற்கனவே சொல்லியிருக்கிறேன், இல்லையா? இன்னும் உங்களை நீங்களே செவிடாகக் கருதாதீர்கள்" என்று கடுமையாகச் சொன்னுர். எதிரே நின்றவர் சித்தரைத் தவருக நினைக்காமல், "சரி, இனிமேல் நீங்கள் சொல்வதுபோல் நடந்து கொள்கிறேன்" என்றுர். மனேதத்துவ ரீதியில் தாம் கூறும் அறிவுரைகளை நோயாளிகள் கடைப்பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்துவது அவர்கள் நன்மைக்குத்தான் என்கிருர் சித்தர்.

"ஊமைகள் கேட்கும் சக்தி இழந்தவர்களா?" என்று சித்தரைக் கேட்டதும், "ஊமைகளுக்குக் காது கேட்காது. ஆனுல் உள்நாக்கு உள்ள ஊமைகளுக்கு மட்டும் சிகிச்சை அளித்துக் காது கேட்கும்படி செய்ய முடியும். ஓரளவு பேசவும் வைக்கலாம்" என்கிருர் இந்த வைத்திய நிபுணர்.

சித்தரிடம் சிகிச்சை பெற்று அறிவுரை கேட்டவர்கள் 'நம்மையும் அவர் மனிதராக மதித்து நடத்துகிருரே!' என்ற மனநிறைவுடன் திரும்புகிருர்கள். அவர்களில் சிலரிடம் மெதுவாகக் கேள்வி கேட்டாலும் பதில் சொல்லவே, "பாம்புக் காதோ, உங்களுக்கு?" என்று எனக்குக் கேட்கத் தோன்றியது.

"பிறவிச் செவிடர்களை நீங்கள் குணப்படுத்துவீர்களா? காது சம்பந்தமான எந்தவிதக் குறையையும் உங்களால் தீர்க்கமுடியுமா?"

"காது கேட்க வேண்டும் என்பதற்காகச் செயற்கைக் கருவியை உபயோகித்துப் பழக்கமானவர்களுக்கு என்னுல் சிகிச்சை அளிக்க இயலாது. யார் வந்தாலும் குணமாக்குவேன் என்று நான் சொல்வது ஏமாற்றத்தைத்தான் அளிக்கும். சிலரைச் சோதித்தபின் 'உங்களுக்குச் சிகிச்சை செய்தால் பலன் இருக்காது' என்று ஆரம்பத்திலேயே சொல்லி அனுப்பி விடுவேன். என் சிகிச்சையை மட்டும் நான் நம்பியிருக்காமல் தெய்வ அருளையும் கோருபவன். நான் இயற்றிய 'கூடவே இருப்பான் குமரன்' என்ற பாடலை நானே முணுமுணுத்தபடி சிகிச்சையளிப்பேன்."

"நீங்கள் சித்த வைத்தியம் மட்டும் கற்றவரா?"

"அரசு பதிவு பெற்ற ஹோமியோபதி வைத்தியன் நான். சித்த மருத்துவப் பண்டிட் என்ற பட்டமும் பெற்றிருக்கிறேன். காது சம்பந்தமான பாகங்கள் பற்றி விவரமாகத் தெரிந்து கொள்ள லண்டனிலிருந்து காது, மூக்கு, தொண்டை சம்பந்தமான மருத்துவக் குறிப்புப் புத்தகங்கள் சிலவற்றைத் தருவித்தேன். படங்களோடு கூடிய அவற்றில் உள்ள விளக்க உரைகளையும் கற்றுத் தெரிந்து கொண்டேன்."

கல்லூரியில் படிக்கும்போது கேட்கும் சக்தி இழந்து, பிறகு குணமடைந்து பட்டம் பெற்ற பட்டதாரி மாணவி, தன் காது குணமானபின் நன்றி உணர்வோடு எழுதிய கடிதத்தைக் கண்டேன். சாமிகிரி சித்தர், மதுரை சித்த வைத்திய சங்கம் சென்ற ஜூலை மாதம் மதுரைமாநகரில் நடத்திய பொன்விழாவில் கலந்து கொண்டு இந்திய மருத்துவத் துறைப் பிரமுகர்களின் பாராட்டுகளைப் பெற்றுள்ளார்.

முன்னுள் இந்திய ஜனதிபதி திரு வி. வி. கிரி, மத்திய அமைச்சர்கள் திரு டி. ஏ. பை, திரு ஸி. சுப்பிரமணியம், தமிழக ஆளுநர் திரு சுகாதியா ஆகியோர், இவர் நடத்தும் காதொலி நிலையச் சேவையைப் பாராட்டி வாழ்த்துரை வழங்கியுள்ளார்கள். ★




"அவுங்களுக்கும் ரொம்பப் பிடிச்சிருக்காம்; கடிதம் வந்திருக்கு; நம்ம பதிலை உடனே எதிர்பார்க்கறாங்களாம். என்னன்னு எழுதறது?"

பதிலொன்றும் சொல்லாமல் ஸ்டெதாஸ்கோப்பை ஆணியில் மாட்டிவிட்டு, கோட்டைக் கழற்றினாள் சுசீலா.

நாலைந்து பிரசவக் கேஸ்களைத் தொடர்ந்தாற்போல் கவனித்ததாலோ என்னவோ அவளுக்கு அதிகக் களைப்பாக இருந்தது.

குழாயடிக்குச் சென்று முகம் கழுவிக் கொண்டு திரும்பினாள். அம்மா நீட்டிய சூடான காபியை வாங்கிக் குடித்தாள். உடம்பை அழுத்திக்கொண்டிருந்த சுமை 'சட்'டென்று இறங்குவது போலிருந்தது.

அவள் காபியருந்தியவுடன் டம்ளரை எடுத்துச் சென்றுவிடும் பழக்கமுள்ள அம்மா, இன்றைக்கு அப்படிச் செய்யவில்லை.

"என்னடி பெண்ணே? நான் கேட்டுக் கொண்டேயிருக்கிறேன். நீயானா வாயைத் திறக்கமாட்டேன் என்கிறாய்."

அம்மாவின் குரலில் அழுத்தம் இருப்பது அவளுக்குப் புரிந்தது. பதில் சொல்லாமல் தட்டிக் கழிக்க முடியாது என்பதை உணர்ந்தாள்.

"என்னை ஏம்மா கேட்கறே? நான்தான் ஏற்கனவே சொல்லிவிட்டேனே! என்ன வேணுமானாலும் எழுதிவிடு."

கையில் எடுத்த டம்ளரை மறுபடியும் 'ணங்'கென்று ஓசைபட மேசைமீது வைத்தாள் அம்மா. மேகம் மூடிய வானத்தைப் போல் சட்டென்று ஏமாற்றத்தால் சுருங்கியது முகம்.

"என்னடி இது? பித்துக்குளியாட்டம் பேசறே? அந்தப் பையனுக்கு என்ன குறைச்சல்? ராஜா மாதிரி இருக்கிறான்; கை நிறையச் சம்பளம், கைகட்டிச் சேவகம் செய்ய ஆயிரம் பேர்; அதிகாரம் கொடி கட்டிப் பறக்கிறது; இன்னும் நாலைந்து வருஷத்திலே ஜில்லா சூப்ரெண்டெண்ட் பதவிக்கு உயர்ந்திடுவானாம். இப்படிப்பட்ட வரனை வேண்டாம்னுட்டு வேறு யாரைத்தான் கல்யாணம் செய்துக்கப் போறே?"

காபி அருந்தியதால் ஏற்பட்ட கொஞ்சம் தெம்பும் குறையத் தொடங்கியது. தலையைப் பிடித்துக் கொண்டாள் சுசீலா. அம்மாவும் சிறிது நேரம் அவளையே வெறித்துப் பார்த்தாள். பிறகு வேகமாக அந்த அறையை விட்டு வெளியேறினாள்.

'அப்பாடா' என்றிருந்தது சுசீலாவுக்கு. மேஜைமேல் கிடந்த பத்திரிகைகளை எடுத்துப் புரட்டினாள். மனம் அவற்றில் ஈடுபடவில்லை. தூக்கி எறிந்து விட்டுச் சாய்ந்து கொண்டாள்.

கடந்த வாரம் அவளை வந்து பார்த்துச் சென்ற வரன் அம்மா கூறுவதுபோல் உண்மையிலேயே நல்ல இடம் என்பதில் அவளுக்குச் சந்தேகம் இல்லை.

இந்தக் கல்யாணம், அவள் தோழிகளில் ஒருத்தி அல்லது பக்கத்து வீட்டுப் பெண்கள் சம்பந்தப்பட்டதாக இருந்து, வரனைப்பற்றி அவளுடைய அபிப்பிராயத்தைக் கேட்டால் அப்படித்தான் சொல்லியிருப்பாள்.

ஆனால் இது அவளுடைய சொந்தப் பிரச்னை. இதில் யாருடைய அபிப்பிராயத்துக்கும் இடம் இல்லை. முடிவுதான் என்றோ தீர்மானிக்கப்பட்டு விட்டதே!

சுசீலாவின் முடிவு என்னவென்று தெரிந்தால் அம்மாவுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

அம்மா மட்டுந்தானா? அப்பா, அண்ணன், அக்கா, ஏன் இந்த ஊர்க்காரர்கள் எல்லாருமே அதிர்ச்சியடையவே செய்வார்கள்.

கூடத்தில் அரவம் கேட்டது. அப்பா வந்துவிட்டார். அம்மா பொரிந்து தள்ளினாள்.

"கேட்பதற்குப் பதில் சொன்னால்தானே ஏதாவது தெரிந்து கொள்ளலாம்? அவள்தான் வாயைத் திறக்கமாட்டேன் என்கிறாளே! இப்படி ஊமையாக இருந்து கொண்டு எப்படித்தான் டாக்டர் வேலை பார்க்கிறாளோ? கடவுளுக்குத்தான் வெளிச்சம்."

அப்பா அடக்கினார்.

"நீ பக்குவமாகக் கேட்டிருக்க வேண்டும். ஒரேயடியாக மேலே விழுந்து பிடுங்கினால் அப்படித்தான்! ஒருவேளை அவள் மனத்தில் வேறு யாராவது இருப்பார்களோ?"

''அதையாவது சொல்லித் தொலைத்தால் தானே? ஆமாம். ஆஸ்பத்திரியில் இவளுடன் வேலை செய்கிறனே இன்னொரு டாக்டர்! அவன் கல்யாணம் ஆகாதவன்தானே?''

''எனக்கும் அதே சந்தேகந்தான்.''

''அப்படியே இருந்தாலும் போலீஸ் டெப்டி சூபரெண்டெண்ட் வரனுக்கு அவன் ஈடா வானு என்ன?''

''அது சுசீலாவின் மனத்தைப் பொறுத்த விஷயம். அவள் அந்த டாக்டரை விரும்பினால் கல்யாணம் செய்து கொடுத்துவிட வேண்டியதுதான். நானே அவளிடம் பேசிப் பார்க்கிறேன்.''

எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்த சுசீலாவின் மனம் படபடக்கத் தொடங்கியது பயத்தினால்!

சுப்புரத்தினம், பிறர் பார்த்துப் பயப்படும்படியான முரட்டு மனிதர் அல்ல. உருவம் கொஞ்சம் ஆஜானுபாகுவாக இருந்தாலும் உள்ளம் மிகவும் மென்மையானது.

தம் குழந்தைகள் மூவர் மேலும் அவருக்கு அன்பு அதிகம். குறிப்பாகக் கடைக்குட்டி சுசீலா மீது கொள்ளை ஆசை.

முதல் இரண்டு பிள்ளைகளையும் அவர்கள் விரும்புகிறபடி வாழ்க்கை அமைக்க விட்டுவிட்டுச் சுசீலாவை மட்டும் தன் விருப்பத்துக்கேற்ப அதிகமாகப் படிக்க வைத்து டாக்டராக ஆக்கினரென்றால் அதற்குக் காரணம் அவளிடம் அவர் கொண்டிருந்த அலாதிப் பிரியந்தான்.

அப்படிப்பட்ட அன்பே உருவான தந்தை, தன்னிடம் நேரில் வந்து விசாரித்தால் எதையும் மறைக்க முடியாதே என்ற எண்ணம் சுசீலாவை நடுங்க வைத்தது.

அம்மா வந்து கதவைத் தட்டினாள்.

''என்னடி பெண்ணே! சாப்பிடாமல் கூடப் படுத்துவிட்டாய். எழுந்து வா, அப்பா காத்திருக்கிறார்.''

சுசீலாவுக்குப் பசிக்கவில்லை. ஆனாலும் அப்பா காத்திருக்கும்போது அவள் போகாமல் இருக்க முடியாது.

'பசியில்லை' என்று அவள் ஒரு பேச்சுக்காகச் சொன்னாலும் பதறித் துடித்து விடுவார் அவர்.

மெதுவாக எழுந்து கால்கள் தயக்கத்தினால் பின்னலிட நடந்தாள் சுசீலா. தந்தையின் பக்கத்தில் உட்கார்ந்து ஒப்புக்காக இரண்டு பருக்கைகளைக் கொரித்தாள்.

அப்பா ஏதாவது கேட்டுவிடுவாரோ என்று நடுங்கியது உள்ளம். அப்படிக் கேட்டால் என்ன பதில் சொல்வது என்று குழம்பித் தவித்தாள். ஆனால், நல்ல வேளை, அவர் எதுவும் கேட்கவே இல்லை.

சுப்புரத்தினத்துக்குத் தெரியும், இந்தக் காலத்துப் பிள்ளைகளை எப்படிக் கையாள வேண்டும் என்று!

அப்போதைக்கு ஆறுதலாக இருந்தபோதிலும் தந்தையின் மௌனம் அவள் உள்ளத்தில் அமைதியை உண்டாக்கவில்லை.

படுக்கையில் விழுந்து கண்களை மூடிக்கொண்டாள். நினைவுகள் அணிவகுத்து நடைபோட்டன. தூக்கம் வரவேண்டுமே!

நெஞ்சம் விம்மித் தணிந்தது.

காலையில் டிபன் சாப்பிடும்போது பேச்சைத் துவக்கினார் அப்பா.

''கொழந்தே! லால்குடியிலிருந்து வந்த கடிதாசியைப்பற்றி உனக்குத் தெரியும். அவுங்களுக்கு நாம பதில் எழுதியாகணும். நீ என்ன சொல்றே?''

வாயில் போட்ட இட்டிலி விள்ளல் தொண்டையில் சிக்கிக்கொண்டது போன்ற தடுமாற்றம்! எச்சிலைக் கூட்டி விழுங்கிக்கொண்டு சொன்னாள் சுசீலா.

''அம்மாவிடம் நேற்றே சொல்லிவிட்டேன், அப்பா.''

அம்மா குறுக்கிட்டாள்.

''என்னத்தெச் சொன்னே? 'மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்தான்'கிற கணக்காய் 'இப்ப எனக்குக் கல்யாணம் வேண்டாம்'னு சொல்லிட்டாச் சரியாப் போயிடுமா? உனக்கும் வயசாகல்லயா? என்னதான் டாக்டரம்மாவா இருந்தாலும் பொண்ணுன்னு பொறந்திட்டா ஆண் துணையில்லாம வாழமுடியுமா என்ன?''

''ஆமா கொழந்தே! நாங்களும் எங்களோட கடமையைச் செய்யவேணும், இல்லையா? உனக்கு இந்த வரன் பிடிக்கலேன்னு சொல்லிடு. வேறே இடத்திலே பார்க்கலாம்'' என்றார் அப்பா.

அம்மா சொன்னாள்: ''இவ்வளவு அருமையான இடம் எப்படிப் பிடிக்காமல் போயிடுமாம்? போலீஸ் டிப்டி சூபிரண்டெண்டை விட ஒரு டாக்டர் உசத்தியாகப் போய்விடுவானே?''

மகளை ஆராய்வது போலப் பார்த்தார் தந்தை.

''ஏம்மா! அப்படியா? நீ அந்த டாக்டரைத்தான் விரும்பறேன்னாலும் எனக்கு ஆட்சேபம் இல்லை. மனத்தில் இருக்கிறதைச் சொல்லிவிடு.''

அம்மாவின்மேல் கோபம் கோபமாக வந்தது சுசீலாவுக்கு.

அவள் சொல்லப் போகத்தானே அப்பாவும் பிடித்துக்கொண்டார்? அந்த அபத்தத்தை உடனடியாகத் துண்டித்தெறியாவிடில், தனக்கும் டாக்டருக்கும் தொடர்பு இருப்பதாகவே தீர்மானித்துக் கல்யாணத்தையும் செய்து வைத்துவிடுவார்போல் தோன்றியது.

தன்னுடன் ஆஸ்பத்திரியில் பணியாற்றும் டாக்டர் பாஸ்கரைப்பற்றிச் சுசீலா கனவில் கூட நினைத்துப் பார்த்ததில்லை என்பதை அம்மாவுக்கு எப்படித் தெளிவாக்குவது?

இப்போது அதைப்பற்றிப் பேச்செடுத்தாலும் வம்பு.

''டாக்டரையும் விரும்பவில்லையென்றால் வேறு யாரைத்தான் மனத்தில் வைத்திருக்கிறாய்?'' என்று துளைத்தெடுத்தாள் அம்மா.

பதில் சொல்லாமல் தலை குனிந்து நின்ற மகளை கசக்கிப் பிழிய விரும்பவில்லை சுப்புரத்தினம். ஆனாலும், அவளுக்குத் தன் மனதில் உள்ளதை வெளியிட அவகாசம் கொடுப்பது போன்ற பாவனையில் அவளையே பார்த்துக்கொண்டிருந்தார்.

மதிய உணவுக்குச் சுசிலா வீட்டுக்கு வந்த போது அப்பாவைக் காணவில்லை. அது ஒரு விதத்தில் ஆறுதலாக இருந்தபோதிலும் அம்மா விட்டுவைக்க வேண்டுமே!

மோர்க் குழம்பை ஊற்றிக்கொண்டே, டாக்டரைப் பற்றி விசாரித்தாள்.

சம்பந்தமே இல்லாத விஷயம் திரும்பத் திரும்பத் தன்னிடம் கேட்கப்படுவதைச் சுசிலாவால் சகித்துக் கொள்ள முடியவில்லை. எரிமலையாய் வெடிக்கிறாள்.

டாக்டருடன் சுசிலாவுக்குத் தொடர்பில்லை என்ற உண்மை தாயாருக்கு நிம்மதி அளித்தது. ஆனால் மறுகணமே அது சுக்குநூறு கும்படி ஒரு குண்டு வந்து விழுந்துவிட்டதே!

கேள்விகளினாலேயே தன்னைப் பிய்த்துப் பிடுங்கியெடுத்த அம்மா, அதிர்ச்சியின் மிகுதியால் பேசும் சக்தியை இழந்து நிற்பது கண்டு சுசிலா மனத்தில் ஒரு குரூரமான எக்களிப்பு!

வேலை நேரம் முடிந்தபின்னும் ஆஸ்பத்திரியிலேயே உட்கார்ந்திருந்தாள் சுசிலா.

''குட்மார்னிங் டாக்டர்.''

யாருடைய குரல்? சுற்றுமுற்றும் பார்த்தாள். ஒருவரும் இல்லை.

எதிரில் காலியாகக் கிடந்த நாற்காலியில் ஹெட்மாஸ்டர் சுகவனம் வந்து உட்கார்ந்தார்.

கண்களைக் கசக்கிக்கொண்டாள் சுசிலா. ச்சே!.. பிரமைதானா?

வானம் மப்பும் மந்தாரமுமாயிருக்கிற இந்த நேரத்தில் ஹெட்மாஸ்டரின் மூச்சிரைப்பு எப்படி இருக்கிறதோ?

ஒரு நாள் வந்து ஊசி போட்டுக் கொள்ளா விட்டால் கூடச் சர்க்கரை அதிகமாகிவிடுகிறதே அவருக்கு!

ஏழுமுறை அடித்தது கடிகாரம். மெதுவாக எழுந்து புறப்பட்டாள்.

ஈஸிச்சேரில் சாய்ந்திருக்கும் அப்பாவின் முகம், வழக்கத்துக்கு மாறாகக் கடுகடுவென்றிருந்தது.

சுசிலா வீட்டுக்குள் நுழைந்தவுடன் அவளைப் பார்க்க விரும்பாதவர்போல் முகத்தைத் திருப்பிக்கொண்டார். அவள் தன் அறைக்குள் சென்று உடைமாற்றி முகம் சுத்தம் செய்து கொள்ளும்வரை அமைதி பரிபூரணமாக நிலவியது அந்த வீட்டில்.

பெற்றோரின் காலடிச் சத்தம் கேட்டு எழுந்து உட்கார்ந்துகொண்டாள் சுசிலா.

அம்மா வாயிற்படியில் நின்றிருந்தாள். அப்பா வந்து கட்டிலில், சுசிலாவின் பக்கத்திலேயே அமர்ந்தார். அவர் முகத்தில் இப்போது கடுகடுப்பு இல்லை.

''கொழந்தே! உங்கம்மா சொல்றதெல்லாம் உண்மைதானா?''

சுசிலாவின் உடல் லேசாக நடுங்கியது. என்றாலும் சமாளித்துக்கொண்டாள். 'ஆம்' என்பதுபோல் தலையை அசைத்தாள்.

''அந்த மனுஷனுக்கு ஐம்பது வயசுக்கு மேலே இருக்குமேம்மா.''

அம்மா குறுக்கிட்டுச் சொன்னாள்:

''அரைக்கிழம்னு சொல்லுங்கோ பச்சையா!'' சுசிலாவுக்கு எங்கிருந்து தைரியம் வந்தது என்று தெரியவில்லை. நடுக்கமின்றிப் பேசினாள்.

''கிழம் மட்டுமில்லே அம்மா; நிரந்தரமான நோயாளியுங்கூட! ஆஸ்த்மா, சர்க்கரை வியாதி எல்லாம் இருக்கிறது.''

''இதையெல்லாம் தெரிஞ்சுண்டுமா அவரைக் கல்யாணம் பண்ணிக்கிறதாகச் சொல்றே?''

''உனக்கென்னடி தலையெழுத்தா ரெண்டாந்தாரமாக வாழ்க்கைப்படறதுக்கு? சரின்னு தலையாட்டினாப் போதுமே, அந்தப் போலீஸ் டிப்டி வரன் தயாராயிருக்கிறானே, ராஜா வாட்டம்.''

சுசிலாவின் நெஞ்சு படபடத்தது. தன் பெற்றோருடன்தானா பேசுகிறோம் என்று அவளுக்கே சந்தேகம் வந்தது. தொடர்ந்து கூறினாள்.

''ராஜாவாட்டம் இல்லேம்மா, ராஜாவே தான் அந்த வரன். அதனால்தான் அவரைக் கல்யாணம் செய்துகொள்ள முடியவில்லை என்னால்.''

''ஏன் கொழந்தே அப்படிச் சொல்றே? உனக்கென்ன குறைச்சல்?''

அப்பாவின் நெகிழ்ச்சி மிக்க இந்தக் கேள்விக்கு அவளால் பதில் சொல்ல இயலவில்லை.

கதகதவென்று திரண்ட நீர் விழிகளில் திரையிட, வாயைத் திறந்தால் அழுகை வந்துவிடுமோ என்று பேசாமலே இருந்தாள்.

சங்கடப்பட்ட பெற்றோர் பெருமூச்சுவிட்டுக் கொண்டு எழுந்தனர்.

பவித்திரனைப் பற்றிய எண்ணங்கள் பனி மூட்டமாய்ச் சுசிலாவின் நெஞ்சில் படர்ந்தன.

அவன் மட்டும் இப்போது இருந்தால்..! ஒடிந்த கொடியாய்ப் படுக்கையில் கிடக்கும் அவள் மெலிந்த உடல் குலுங்கியது.

மருத்துவக் கல்லூரியில் ஒன்றாகச் சேர்ந்து படித்த இனிமையான நாட்கள்! மனம் திறந்து எண்ணங்களைப் பரிமாறிக்கொண்ட நேரங்கள்! அருகருகே உட்கார்ந்து எதிர்காலத்தைப் பற்றித் தீட்டிய திட்டங்கள்!

எதை மறக்க முடியும் அவளால்?

அவன் யாரோ? அவள் யாரோ?

உயர்நிலைப்பள்ளியில் அவள் படித்துக்கொண்டிருந்தபோது, பவித்திரனின் குடும்பம் அந்த ஊருக்கு வந்தது, தந்தையின் உத்தியோக மாறுதலை முன்னிட்டு.

அப்போது அவர்களுக்குள் அறிமுகம் இல்லை. மருத்துவக் கல்லூரியில் பவித்திரன் மூன்றாண்டு மாணவனாகவும், சுசிலா முதலாண்டு மாணவியாகவும் இருந்தபோதுதான் பழக நேர்ந்தது.

அந்தப் பழக்கம் அவர்களை உயிருக்குயிராய்ப் பிணைத்துவிடும் என்று அவர்கள் எதிர்பார்க்கவேயில்லை.

பவித்திரனுக்கு இறுதியாண்டு. பரீட்சை நெருங்கிக்கொண்டிருந்தது. மாணவர்கள் ஏற்பாடு செய்திருந்த 'பிக்னிக்'கில் கலந்து கொள்ள அவனுக்கு விருப்பம் இல்லை,



சுசீலாவின் வற்புறுத்தலுக்காகச் சேர்த்துக் கொண்டான்.

மகிழ்ச்சி துள்ளும் உள்ளத்துடன் பிக்னிக் சென்ற சுசீலா, மூர்ச்சை தெளியாத நிலையில் கொண்டு வரப்பட்டாள், ஆம்புலன்ஸில்!

தன்னுடைய நீச்சல் திறமையைக் காட்டுவதற்காக உயரே இருந்து தண்ணீரில் குதித்த பவித்திரனின் உடல், பாறையில் மோதிச் சின்னபின்னமாகி ரத்தக் குழம்பாய் மிதந்த கோரம் நினைவுக்கு வரும்போதெல்லாம், அவளுக்குப் பிரக்ஞை தவறியது.

அவன் மரணத்துக்குக் காரணம் தானே என்று அவள் உள்ளம் சுட்டெரித்தது.

நான்கு ஆண்டுகள் ஓடிவிட்டன. அவள் மனப் புண் ஆறவில்லை. ஆறப்போவதும் இல்லை.

இந்த நிலையில் கல்யாணமா? இன்ப சுகம் தருவதற்காக ஒரு கணவனா?

காலையில் சுசீலா ஆஸ்பத்திரிக்குப புறப்படும் போது அப்பா பிடித்துக்கொண்டார்.

அவளைப் போலவே பெற்றோர்களும் இரவு சாப்பிடவில்லை என்பதை முகம் காட்டியது.

குரலில் பிடிவாதமும், ஏமாற்றமும், கவலையும் இழையோட அப்பா சொன்னார்.

''கொழந்தே! நல்லா யோசித்துப் பாரு. நீ சின்னப் பெண். உனக்கு ஒன்றும் புரியாது. ஒரு கிழவனைக் கல்யாணம் செய்துகொண்டு உன்னால் சந்தோஷமாக இருக்க முடியாது. அப்படித்தான் என்ன அந்தக் குடும்பம் பிக்கல் பிடுங்கல் இல்லாத சின்னக் குடும்பமா? இன்னும் ரெண்டு பையன்கள் படித்துக்கொண்டிருக்கிறாங்க. கல்யாண வயதிலே, உனக்குச் சமமாக ஒரு பெண் இருக்குது. அவுங்களையெல்லாம் காப்பாற்றிக் கரை சேர்த்தாக வேண்டும். அந்த மனுஷனுக்கும் இன்னும் அதிக நாள் சர்வீஸ் இருக்காது. ரிட்டயர்டு ஆயிட்டா எல்லாச் சுமையும் உன் தலைமேல் தான் விழும். அதையெல்லாம் யோசித்துப் பார்த்தாயா? தாங்க முடியுமா உன்னால்?''

வறட்சியால் ஒட்டிப் போயிருந்த சுசீலாவின் தொண்டையைப் பிளந்துகொண்டு திடமான சத்தம் வந்தது.

''எல்லாவற்றையும் என்னால் தாங்க முடியும் அப்பா!''

அத்தனை நேரமும் மனத்துக்குள்ளாகவே புழுங்கிக்கொண்டிருந்த அம்மா சீறினாள்:

"ஏன்டி அந்தத் தலை விதி உனக்கு? ஆசையாய்க் கல்யாணம் செய்துக்கிட்ட புருஷன் பாரத்தைச் சுமக்கலாம்! அருமையாய்ப் பெற்றெடுத்த குழந்தைகளின் பாரத்தைச் சுமக்கலாம். ஆனால் இவர்கள் பாரத்தை ஏன் சுமக்க வேண்டும்? இவர்கள் யார் உனக்கு?"

"என்னைச் சேர்ந்தவர்கள் அம்மா! என்னால் காப்பாற்றப்பட வேண்டியவர்கள் அம்மா!"

"என்ன கொழந்தே இது?"

"என்னடி பெண்ணே உளர்றே?"

'எந்தப் பவித்திரனை, என் இதயம், கணவருக்குரிய மரியாதை கொடுத்து ஏற்றுக் கொண்டதோ, அந்தப் பவித்திரனின் தந்தையையும், தம்பி, தங்கைகளையும் நான் உறவினர்களாக நினைப்பதில் என்னம்மா தவறு? அவர்களின் பாரத்தைச் சுமப்பதில் என்ன கேவலம்? எங்கள் எதிர்காலத்தைப் பற்றிப் பேச்சு வரும் போதெல்லாம் அவர் சொல்வார்: 'சுசீலா, என் தம்பிகளும் தங்கையும் என்னை எதிர் பார்த்து நிற்கிறார்கள். அப்பாவும் இத்தனை காலம் உழைத்து ஓய்ந்துவிட்டார். மனைவியை இழந்து வியாதிகளுடன் போராடிக்கொண்டு எங்களுக்கெல்லாம் தாயாகவும் தந்தையாகவும் எத்தனை காலம் இருக்க முடியும்? எனக்கு வேலை கிடைத்தவுடன் அப்பாவின் பாரத்தை என் தோள்களுக்கு மாற்றிக்கொள்ளப் போகிறேன். நீ என்னை மணந்துகொள்ள விரும்பினால் சுமையில் பாதியை உன் தலையில் ஏற்றுக் கொள்ள வேண்டும். அதற்கெல்லாம் சம்மதமென்றால்தான் நம் அன்பு உறவாக ஒன்றுபட முடியும்' என்று. எல்லாவற்றுக்கும் சம்மதித்து அன்று அவருக்குக் கொடுத்த வாக்கை இப்போது எப்படியம்மா மீறுவேன்? பவித்திரன் கழுத்தில் மாலையிட வேண்டியது போக, அவர் தந்தை ஹெட்மாஸ்டர் சுகவனத்துக்கு மனைவியாகும் ஒரே வித்தியாசத்துடன், அந்தக் குடும்பத்தின் பாரத்தைச் சுமக்க வேண்டியது என் கடமை அல்லவா அம்மா? சுகவனத்தை நான் மணக்க நினைப்பதுகூட, கணவன் வேண்டும் என்பதற்காக அல்ல, அந்தக் குடும்பத்தைச் சுமப்பதற்கு உரிமை வேண்டும் என்பதற்காகத்தான்.'

இப்படியெல்லாம் மனத்தில் தேங்கிக் கிடப்பதைக் கொட்டிவிட நினைத்தாள் சுசீலா. ஆனால் வார்த்தைகள் பெயர்ந்தால்தானே!

அப்பாவின் கடைசிக் கேள்வி தொய்ந்து விழுந்தது. "அப்படியானால் உன் முடிவு அதுதானா கொழந்தே? லால்குடிக்காரர்களுக்குப் பதில் எழுதிவிட வேண்டியதுதானா?"

ஆமாம் என்பதுபோல் தலையசைத்தபோது சுசீலாவின் கண்ணீர்த் துளிகள் சிமெண்ட் தரையில் விழுந்து பட்டென்று தெறிக்கின்றன. அதைத் துடைத்துவிட்டு வேகமாகக் கிளம்பினாள்.

ஆஸ்பத்திரியில் நீண்ட 'க்யூ' அவளுக்காகக் காத்திருக்குமே! ★



Edited and Published by R. Narayanaswamy, for and on behalf of the Kalaimagal Office and Printed at the M.L.J. Press Private Ltd., 55/56, Mundakakanni Amman Koil Street, Madras 600004.

அது ஓர் அற்புத நடனம். நடனக் கலையின் பொலிவும் பொருளும், லயமும் லாவண்யமும், கனிவும் கவர்ச்சியும், வேகமும் விந்தையும், பாவமும் தாளமும் ஒருங்கே மலர்மாரியாகப் பொழியும் எழிற்கோலம். நடனம் மட்டுந்தானா? அதற்கு ஏற்ற இசையும் உண்டு, ஆட்டுவிக்கும் மகுடிநாதமாக. ஆடும் அந்த அழகு மங்கையர் நிச்சயமாக அமரர் உலகத்து ஆடலரசியராகத்தான் இருக்கவேண்டும். எத்தனை நெளிவு! எத்தனை குழைவு! எத்தனை தெய்விகம்! நடனக்கலை, தெய்விகக் கலை என்பதை நிரூபிக்கும் ஆடல் அல்லவோ அது?

'எங்கே அந்த நடனம்? இப்போதே பார்த்து விடவேண்டும்' என்றுதானே கேட்கத் துடிக்கிறீர்கள்?

நாட்டியம் நடைபெறும் இடம்! புதுவைக்கு அருகே பாகூர் என்ற தலம்.

மேடை! பாகூரில் உள்ள ஸ்ரீமூலநாதர் ஆலயம்.

ஆம்! நடனப் பேரரசி ஒருத்தி துவக்கம் முதல் இறுதிவரை முழுமையாகப் பதம் பிடித்துப் பாவம் ததும்ப நாட்டியம் ஆடுவதை அங்கேதான் காண்கிறோம். சோழர் கலைப் படைப்பான பாகூர் ஸ்ரீமூலநாதர் ஆலயத்துச் சிற்பச் சிறப்புக்கு இந்த நடனச் சிற்பங்களும் ஒரு காரணம். இறைவனின்

இந்தக் கோயிலில் ஆண்டுதோறும் பல திருவிழாக்கள் விமரிசையாக நடக்கின்றன. இந்தப் பகுதி மக்களின் வாழ்வோடு கலந்தது அந்த ஆலயம்.

ஸ்ரீமூலநாதர் ஆலயத்து நடனச் சிற்பங்களின் சிறப்பு, அந்தச் சிற்பங்கள் நடனத்தின் துடிப்பான பல கட்டங்களை அடுத்தடுத்துப் படம் பிடித்துக் காட்டுவதுபோல் அமைக்கப்பட்டிருப்பதுதான். ஒரு பதத்துக்கு அபிநயம் பிடிப்பதுபோல் இந்தச் சிற்பங்கள் அமைந்திருக்கின்றன.

இறைவனின் முன்பு ஆடும் அந்தத் தேவ சுந்தரியரின் நடனத்துக்கு ஏற்பப் பக்கவாத்தியக்காரர்களும் உடன் தாளம் போடுபவர்களும் சித்திரிக்கப்பட்டிருக்கிறார்கள். லாகவமும் பாவமும் கைகோத்து மலர்ந்திருக்கின்றன.

**நடனக் கலையை இறைவனுக்கு அர்ப்பணம் செய்து அழகு பார்த்தது தமிழ் நாடு. ஸ்ரீமூலநாதர் கோயிலில் காணும் நடனக் காட்சிகள் இவை!**

# கல்லில் ஒரு காவியம்

— வசுந்தரா —

சந்நிதியில், கல்லைக் கற்கண்டாக மாற்றி நடன அரசிகளை உலவ விட்டிருக்கிறார்கள், சோழர் தேசத்துச் சிற்பிகள்.

சோழ மண்டலத்தை ஒட்டி உள்ள புதுவைப் பகுதிகளில் சோழர் காலச் சிற்ப எழிலுக்குக் கட்டியம் கூறும் ஆலயங்கள் பல உள்ளன. அவற்றில் குறிப்பிடத்தக்க ஒன்று பாகூரில் உள்ள சிவாலயம். ஸ்ரீமூலநாதருக்கான அந்த ஆலயத்தின் வெளித்தோற்றம் எளிமையாகக் காணப்பட்டாலும் உள்ளே சென்றால் அருமையான கட்டிட அமைப்பையும், அமைதி தவழும் சூழ்நிலையையும், இறைவனின் சந்நிதிப் பிராகாரச் சுவர்களில் அழகான சிற்பங்களையும் காணலாம்.

ஸ்ரீமூலநாதர் ஆலயத்தின் உள்ளேயும், வெளிப்புறச் சுவர்களிலும் காணப்படும் கல்வெட்டுக்கள் சோழர், ராஷ்டரகூடர் பொறித்தவை.

அவை சோழர், ராஷ்டிரகூடரின் பெருமைகளைப் பகருவதுடன் அவர்களது சிவபக்தியையும் எடுத்துச் சொல்கின்றன. 9-ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு சுமார் 350 ஆண்டுகள் சோழ மன்னர்களின் ஆதிக்கம் புதுவைப் பகுதியில் கொடிகட்டிப் பறந்தது. அந்தச் சமயத்தில் அங்கே பல கோயில்கள் எழுந்தன. அவற்றில் ஒன்றாகத் திகழ்கிறது ஸ்ரீமூலநாதர் ஆலயம்.

தேர்ந்த நடன மாதரசி, முதல்தர நடன நிகழ்ச்சி அளிப்பதுபோல், அந்தக் காட்சி விளங்குகிறது. ஒவ்வொரு நடனச் சிற்பத்தின் முகபாவத்தில்தான் எத்தனை எத்தனை உணர்ச்சி மாறுதல்கள்!

ஓர் உண்மையான நடனக் சச்சேரியையே சிற்ப வடிவில் நடத்திக் காட்டியிருக்கும் அற்புதத்தை இவை புலப்படுத்துகின்றன. இந்தத் தெய்விக நடனத்தைக் கண்டு தேவ கணத்தில் ஒன்று தன்னை மறந்து குட்டிக்கரணம் போடும் காட்சியையும், தேவகன்னியருடன் அன்னை பராசக்தியும் தன்னை மறந்து தலைவனின் முன்பாக அழகு நடனம் பயிலும் நேர்த்தியும் அந்த நடனச் சிற்பங்களுக்கு - சுறுசுறுப்பான அந்த நாட்டியத்துக்கு - முழுமை தந்துவிடுகின்றன.

மூன்று ரசிகர்கள். தேவர் உலகத்து ரசிகர் போலும்! கலை நுணுக்கம் அறிந்தவர்கள் அவர்கள். நடனத்தைக் கண்டு மகிழ்வதுடன் ஆடலுக்கு ஏற்ப அவர்கள் தாளம் போட்டு மகிழ்வதையும் காண்கிறோம். அந்தச் சிற்ப நடனத்தை - அழகு மங்கயர் அரங்கேற்றத்தை - அவர்கள் ரசிக்கும் பாங்கு அடுத்தடுத்த சிற்பச் சுந்தரியரின் நடனக் கோலங்களைக் காணும் ஆவலை நம்முள் தூண்டுகிறது. அங்கே காணப்படும் சிற்பச் சுந்தரியரின்







பல வகைச் சிற்ப் நடனக் கோலங்கள்

முக அமைப்பும் ஆடை அலங்காரங்களும் அநேகமாக ஒரே மாதிரியாகவே இருப்பதால் அது பல மங்கையர்களின் நடனக் கோலங் களின் சிற்பச் சித்திரிப்பு என்பதைவிட ஒரே நாட்டியத்தின் பல சுழல்வேகக் காட்சிகள் அவை என்பதையே புலப்படுத்துகின்றன.

அதோ, ஆடல் அழகியரின் நடனம் துவங்கப் போகிறது. நாட்டியமாடச் சேடிப் பெண் ஒருத்தியுடன் தயாராக வந்து நிற்கும் அந்தச் சிற்ப மகளிடந்தான் எத்தனை கனிவு! கம்பீரம்! ஆடுவதற்குத் தயாராக உள்ள அந்த அணங்கு மயில் தோகை விரிப்பதைப் போல மெல்ல அசைகிருள்.

ஆடல் பிறக்கிறது! பாடல் பிறக்கிறது! சுருதி சேர்ந்துவிட்டது! அடுத்தடுத்த பத்துச் சிற்பங்களிலும் நடனக் கலேயே பெண் உருவம் கொண்டு ஸ்ரீமூலநாதருக்காகச் சிற்ப வடி விலே சிங்கார நடம் பயிலுவதைக் காண் கிரும். அந்த நடன நங்கையின் கரங்கள் சுழல்வதும், கால்கள் மின்னலெனப் பாய் வதும், இடை இடையே இடை லாகவமாக வளைவதும், விழிகள் கதை சொல்வதும், இதழ்கள் துடிப்பதும் பரமனின் முன்பு பக்திப் பரவசத்துடன் பின்னிய கல்வில் ஒரு காவியமாக அமைந்துவிட்டன.

ஆலயங்களில் சுரசுந்தரியர் எனப்படும் தேவமாதர் சிற்பங்களையும், அப்சரஸ்கள்,







இசைக் கருவிகளை
இசைக்கும் சிற்பங்கள்



சில வகை நடனமுறை



மோகினி, மேனகை, திலோத்தமை, யட்சிகள் போன்ற எழிலரசியர் சிற்பங்களையும் அமைப்பது அவற்றுக்குப் பொலிவு கூட்டுவதுடன், கோயில்கள் புனிதக் கலைகளின் பிறப்பிடம், புகலிடம் என்பதையும் விளக்குகின்றது. இந்தத் தேவகன்னியர் வடிவங்கள் நடனக் கோலங்களிலும், மலர் சுமப்பது போலவும், கூந்தல் முடிப்பது, கண்ணாடியில் முகம் பார்ப்பது, திலகம் இடுவது போன்ற கவர்ச்சிக் கோலங்களிலும் கலை எழில் மிக்க பல ஆலயங்களில் அமைக்கப்பட்டுக் காண்கின்றன. சோழர், ஹொய்சளர், விஜயநகர வேந்தர், நாயக்கர் படைப்பில் மலர்ந்த பல ஆலயங்களில் அழகு மங்கையரின் சிற்பத் திருமேனிகளைக் காண்கிறோம்.

நடன மங்கையர் சிற்பங்கள் பொதுவாகத் தனிச் சிற்பமாக ஆலயத் தூண்களிலோ, மண்டபங்களின் மேற்புற விளிம்புகளிலோ அமைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

ஒரு நடன அரசியின் எழிலாட்டம், அதன் பரபரப்பான அடுத்தடுத்த காட்சிகள் தொடர்ச்சியாகப் பாகூர் ஸ்ரீமூலநாதர் ஆலயத்தில் சித்திரிக்கப்பட்டிருப்பது தனிச் சிறப்பே



# Dr. சாமிகிரி சித்தரின் அற்புதமான சாதனை!

# காதொலி வழங்குகிறார்

## காது கேளாதவர்களைக் காது கேட்கச் செய்கிறார்



**காது கேளாதவர்களே! வாருங்கள்...**

★ உங்கள் நலனில் அக்கறை கொண்டோருடன் வாருங்கள். 3 நாள் - 6 வேளை சித்த வைத்திய சிகிச்சை பெறுங்கள். ★ சந்தேகமில்லாத சந்தோஷத்தோடு காது கேட்டுச் செல்லுங்கள். ★ காதுக் கருவி உபயோகித்தவர்களுக்கும், ஊமைத்தன்மை உள்ளவர்களுக்கும் சிகிச்சை அளிப்பதில்லை. ★ அறுவைச் சிகிச்சை செய்தும் குணமாகாதவர்களுக்கும் சிகிச்சை அளிக்கப்படும். ★ இயற்கைச் சிகிச்சை இது. என்றும் பலன் அளிக்கும்.




விவரங்களுக்கு:-

**Dr. சாமிகிரி சித்தர்**

**காதொலி நிலையம்**

97, சரோஜினி ரோடு, ராம் நகர்
கோயமுத்தூர்-641009.





# மலரும் நெருப்பும்

'அன்னம்'

வேலூர் ஆஸ்பத்திரியிலிருந்து அன்று தான் நித்தியாவை 'டிஸ்சார்ஜ்' செய்திருந்தார்கள். சிக்கலான இருதயக் கோளாறுக்காக ஒரு மாதத்துக்கும் மேல் அங்கே தங்கும்படியாகி விட்டது. தாங்க முடியாத நெஞ்சு வலியின் நிமித்தம் அவசரம் அவசரமாக வேலூரில் கொண்டு சேர்த்தார்கள். பிழைப்பாளோ, மாட்டாளோ என்ற நிலை மூன்று தினங்களுக்கு நீடித்தது. நிறுவனத்தின் பெயர் ராசியோ, அல்லது நித்தியாவின் ஆயுள் கெட்டியோ, அவள் அந்தக் கண்டத்திலிருந்து மீண்டு விட்டாள்.

தன்னைத் திரும்பவும் சென்னையிலுள்ள தங்கள் வீட்டுக்கு அழைத்துப் போகத் தன் கணவர் பரமகுரு நிச்சயம் வருவார் என்று நித்தியா எதிர்பார்த்தாள். டெலிபோனில் ஆஸ்பத்திரியிலிருந்து முதல் நாளே சொல்லியிருந்தார்கள். ஆனால் அவர் வரவில்லை. காருடன் டிரைவரை மட்டும் அனுப்பி இருந்தார். ஒப்புக்கு ஒரு வாரம் முன்பு வந்து பார்த்து ஐந்து நிமிஷங்கள் நின்று போனதுடன் சரி. ஒரு கடிதம் கூடக் கிடையாது.

அவரைச் சொல்வதிலும் குற்றம் இல்லை. பிரபலத் தொழில் அதிபரான அவருக்கு வெளிநாட்டு நிறுவனங்கள் பலவற்றுடன் தொடர்பு உண்டு. அப்படிப்பட்ட ஸ்தாபனங்களில் ஒன்றின் பிரமுகர்களை மீனம்பாக்கத்தில் வரவேற்று உபசரிக்க வேண்டிய பொறுப்பு அவருக்கு இருந்தது. அப்படி ஒரு கடமை இல்லாவிட்டாலும் அவர் வந்திருப்பாரா என்பது சந்தேகந்தான்.

தன் பொருள்களை ஆஸ்பத்திரி முன் வாயிலில் கொண்டு வந்து வைத்துக் காத்திருந்த நித்தியா, டிரைவர் மட்டும் வந்ததைக் கண்டு பெருத்த ஏமாற்றம் அடைந்தாள், இதுவரை எப்படி இருந்தாலும் சரி, இனி மேலாவது குடும்பத்துடன் எப்படி எப்படி எல்லாம் இணைந்து செயல் படவேண்டும் என்று பத்து நாட்களாகப் படுக்கையில் படுத்தபடி திட்டமிட்டாள். ஆரம்பத்திலேயே தடுமாறிவிட்டது. பரமகுரு அவளை ஏமாற்றி விட்டார்.

அவளுக்குத் திருமணமாகி இருபது வருஷங்கள் ஆகிவிட்டன. வசதி மிகுந்த குடும்பத்தில் பிறந்திருந்த அவள், அதையும் விடச் செல்வச் சிறப்பு உள்ள வீட்டில் வாழ்க்கைப்பட்டாள். திருமண நாளன்று தன் அருகே கம்பீரமாக நின்ற பரமகுருவைக் கண்டு நித்தியா பெருமிதம் அடைந்தது என்னவோ உண்மைதான். ஆனால் தனிமையில் அதே கணவனின் கரங்கள் அவளைத் தீண்ட வரும்பொழுதெல்லாம் அவள் மனம் பாதாளத்தில் அமிழ்ந்துவிடும். தன்னையே அர்ப்பணிக்க வேண்டிய தருணத்தில் அக்கறை ஏதும் காட்டாமல் முடங்கிக் கொள்வாள். பரமகுரு ஏமாந்து திரும்புவார்.

அவர்களுடைய தாம்பத்தியம் முற்றும் வறண்ட பாலைவனமாக ஆகாமல் ஒரு மொட்டுப் பூத்தது. விரிந்து மலர்ந்து வளர்ந்தது. அவள்தான் ராஷ்மி. பதினெட்டு வயது முடிந்து இரண்டு மாதங்கள் ஆகியிருக்கும். கல்லூரியில் பி.எஸ்ஸி. படித்துக் கொண்டிருந்தாள். பரமகுருவின் காம்பீர்யமும் நித்தியாவின் சௌந்தர்யமும் சேர்ந்த மொத்த உருவம்.

பரமகுருவுக்குப் 'பிஸினஸ்' தான் மூச்சு. எப்போதும் ஓட்டந்தான். அப்படி ஓடி

யிருக்காவிட்டால், அவர் தந்தை விட்டுப் போனதைப் போல், மூன்று மடங்கு சேர்த்திருக்க முடியுமா? நகரில் பெரிய மனிதர்களில் ஒருவராகத் தான் வளைய வரமுடியுமா?

தம் குடும்பத்தைப் பற்றி முக்கியமாகத் தம் மனைவியைப் பற்றி அவருக்கு நினைக்க நேரம் இருப்பது அபூர்வம். அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களிலும் கூட நித்தியா, நத்தை தன் உடலை ஓட்டுக்குள் சுருட்டிக் கொள்வதைப் போல, தொட்டாற் சுருங்கி இலையைப் போல முடங்கிக் கொள்வாள். அவருக்கு ஏமாற்றமும் விரக்தியுந்தான் மிஞ்சும்.

நித்தியா அவரிடந்தான் இப்படி நடந்து கொண்டாளே தவிர, மற்றப்படி தன் வீட்டை மிக நேர்த்தியாக வைத்துக்கொண்டாள். திருமதி நித்தியா பரமகுரு பங்கு பெறாத சமூக நல நிகழ்ச்சிகள் நகரத்தில் ஏதும் இல்லை. ஒவ்வொரு மாதர் சங்கத்திலும் அவள் தலைவியாகவோ, காரியதரிசியாகவோ அல்லது வேறு ஏதாவது முக்கிய பதவியிலோ இருந்தாள். தன்னைக் கவனிப்பதற்கு ஒருவரும் இல்லை எனப் பரமகுரு குறைப்பட்டுக் கொள்ள அவள் சந்தர்ப்பம் அளித்ததில்லை. அவருக்குப் பொருந்துமாறு புதுப் புது உடைகள் அவர் கேட்காமலேயே பீரோவில் சேரும். அதே போல் அவரும் அவளுக்கு வேண்டியவற்றை அவளைக் கேட்காமலேயே வாங்கி வருவார். ''உங்கள் செலெக்ஷன் அபாரம்? இது அருமையாகப் பொருந்தியிருக்கிறது!'' என்ற இதமான வார்த்தைகளை மட்டும் பரமகுரு நித்தியாவிடமிருந்து எதிர்பார்த்தார். ஆனால் அவள் அதைச் சொல்ல மாட்டாள். நாளடைவில் பரமகுரு தம் வீட்டையும் தாம் நடத்தும் நிறுவனங்களில் ஒன்றாக-நித்தியா எனும் திறமை மிக்க நிர்வாகியின் கையில் ஒப்படைக்கப்பட்ட ஸ்தாபனமாக நினைக்க ஆரம்பித்தார்.

தன்னுடைய குறைகளைத் தெரிந்து கொள்ள நித்தியாவுக்கு வேலூர் ஆஸ்பத்திரி வாசம் உதவியது. கணவரின் லௌகிகத் தேவைகளைத் திருப்திப்படுத்த முடிந்த அவள் அவர் மனத்தின் அடித்தளத்தில் விழைந்த நெருக்கத்தைத் தர மறந்த தன் தவற்றை உணர்ந்தாள். தன்னுடைய வாழ்நாள் முடியப் போகிறது என்று அஞ்சிய அந்தச் சில நாட்களில் எத்தகைய பொன்னான சந்தர்ப்பத்தை வீணடித்து விட்டோம் என்பது புரிந்தது. கடந்த கால நடத்தைக்குப் பிராயச்சித்தமாக இனியாவது புது நித்தியாவாக நடந்துகொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு வந்து, தன்னைத் தன் கணவன் வந்து அழைத்துப் போவான் என்று நம்பினாள். நம்பி ஏமாந்தாள்.

பரமகுருவும் மனிதர்தாமே? வெளியூர்களிலும், ஏன் சென்னையிலுங்கூட, அவருக்கு விரும்பத் தகாத சில உறவுகள் உண்டு என்பது அவளுக்குத் தெரியும். தன் தவற்றை உணர்ந்து திருந்தாமல் இன்னும் விலகி இருந்துவிட்டாள்.

ஆஸ்பத்திரிக்குப் போவதற்கு முன்பே சில மாதங்களாக நித்தியாவின் மனத்தில் ஏதோ நெருடியது. பரமகுருவை எத்தனையோ பொருள் பொதிந்த விழிகளால் பார்ப்பாள். அவர் கவனிக்கவே மாட்டார். தானே உணவு பரிமாற வந்தாலும், ''சமையற்காரன் எங்கே?'' என்று கேட்பாரே தவிர, நித்தியாவின் முகத்தில் தெரிந்த ஒரு புது ஒளியைக் கவனிக்க மாட்டார். அவள் நெருங்க முற்பட்டபோது வெகுதூரத்துக்கு அவர் மனத்தளவில் விலகிவிட்டார். அவருக்காக அவள் விழித்துக் காத்திருந்த நாட்களில் பன்னிரண்டரை மணிக்கு வீடு திரும்பி உடனே படுத்து மறு விநாடி அயர்வில் உறங்கிப் போவார். அவர் முன்னேரத்தில் வீடு திரும்பக்கூடிய நாட்களில் நித்தியாவுக்குத் தட்ட முடியாத வெளி அலுவல்கள் வந்து சேரும்.

நித்தியாவுக்கே தனக்கு இத்தனை காலம் கழித்து, பதினெட்டு வயது முடிந்த பெண் இருக்கையில், ஏற்படும் மனவிகாரங்களை எண்ணி வெட்கம் கூட ஏற்படும். அவள் பெண்மை விழித்துக் கொள்ள இத்தனை ஆண்டுகள் தேவைப்பட்டனவே!

* * * *

நித்தியா வீடு திரும்பிய போது வேலைக்காரர்களைத் தவிர வேறு யாரும் இல்லை. ராஷ்மியும் கூட வெளியே போனவள், இருட்டியும் கூட வீடு திரும்பவில்லை. நல்ல வரவேற்பு!

நித்தியா காத்திருந்து காத்திருந்து சலித்தும் போனாள். தன்னை ஒரு பொருட்டாகத் தன் கணவன் மட்டும் அல்ல, ஒரே மகள்கூட மதிக்கவில்லை என்ற ஏக்கம் ஆற்றாமையாக மாறியது. இரவு ஒன்பது மணிக்குத் தன் உணவை முடித்துக்கொண்டவள் வாயிற்படியை எதிர்நோக்கியபடி, கையில் ஒரு பத்திரிகையுடன் சோபாவில் சாய்ந்தாள்.

பத்தரை மணிக்கு ஒரு கார் வந்து நின்றது. டிரைவர் ஆசனத்திலிருந்து இறங்கிய வாலிபன் மறுபக்கம் ஓடிக் கதவைத் திறந்து விட்டவுடன், அதிலிருந்து ஒயிலாக ராஷ்மி இறங்கினாள்.

வாயிற்படியில் குதித்துக் கொண்டு ஏறிய ராஷ்மி திரும்பிப் பார்த்தாள். ''பை! பை! பாஸ்கர்!'' என உற்சாகமாகக் கைகளை ஆட்டி விடை கொடுத்தாள். உதட்டில் ஒரு ஹிந்தித் திரைப்பட ட்யூன் நெளிய உள்ளே வந்த ராஷ்மி மாடிப் படியை நோக்கி விரைந்தாள். ஏதோ உணர்வு வந்தவளாகச் சட்டென்று திரும்பியவள் நடு ஹாலில் மௌனமாகத் தன்னையே பார்த்தபடி அமர்ந்திருந்த நித்தியாவைக் கண்டாள். சட்டென்று நின்றவள் திரும்பி நிதானமாக இறங்கித் தன் காலணிகள் சப்திக்கத் தாயின் அருகே வந்தாள்.

''நீ எப்பொழுது வந்தாய், அம்மா? இப்போது நெஞ்சில் வலி ஒன்றும் இல்லையே?'' எனக் கேட்டபடி அன்னையின் கைகளைத் தன் கைகளில் ஏந்திக் கொண்டாள்.

நித்தியா தன்னை விடுவித்துக் கொண்டாள். ''ஐந்து மணிக்கு வந்தேன். அப்போது வலி இல்லை. இப்போது இங்கு நடப்பதைப் பார்க்கும்போதுதான் நெஞ்சு வலி ஏற்படும் போலிருக்கிறது. ஆமாம், இத்தனை நேரம் நீ எங்கே போயிருந்தாய்?''

''சினிமாவுக்கு'' என்று அலட்சியமாகப் பதில் சொன்னாள் ராஷ்மி.

''நான் வரப்போவது தெரியுமல்லவா? அப்படி என்ன சினிமா?''

''நீ என்னை இருக்கச் சொல்லி இருந்தால் இருந்திருப்பேன். வேலூருக்கே வரச் சொல்லியிருந்தாலும் வந்திருப்பேன். நீ அம்மா மாதிரி நடந்துகொண்டால் நானும் பெண் மாதிரி இருப்பேன். இது ஒரு ஹாஸ்டல்; நீ வார்டன். நானும் அப்பாவும் விருந்தாளிகள்'' எனப் பொரிந்து தள்ளினாள் மகள்.

''அதிகம் பேச வேண்டாம். கூட வந்த அந்தப் பையன் யார்?''

''என் 'பாய்-ஃப்ரெண்ட்'.''

''பாய்-ஃப்ரெண்டா?... அர்த்த ராத்திரி வரையில் ஒரு கன்னிப் பெண்ணுடன் கொட்ட மடிக்கும் அவன் யார்?''

''அவன், இவன் என்றெல்லாம் பேசாதே; பெரிய இடத்தைச் சேர்ந்தவராக்கும்!''

''இரவு பத்தரை மணி வரையில் திருமண மாகாத ஒரு பெண்ணுடன் சுற்றுபவன் எத்தனை பெரிய இடத்தைச் சேர்ந்தவன் ஆனாலும் பொறுப்பில்லாத கயவன்தான். யாரிடம் கேட்டுக் கொண்டு போனாய்?'' என்று கத்தினாள் நித்தியா.

''சொல்வதற்கு யார் இருந்தார்கள் இங்கே? அப்பாவுக்கு ஆபீஸ், உனக்கு ஆஸ்பத்திரி. ஆனால் இம்முறை நான் அப்பாவிடம் 'போனி'ல் சொல்லிவிட்டுத்தான் போனேன்!'' என்று பதிலுக்கு இரைந்தாள்.

''அவர் காதில் வாங்கிக் கொண்டிருக்கவே மாட்டார். எங்கேயோ எண்ணெய் மழை பெய்கிறது என்கிறது போல் பேசாமல் இருந்திருப்பார்.''

''என்னம்மா நீ. பழையபடியே கடுகடு வென்று இருக்கிறாய். ஆஸ்பத்திரியிலிருந்து வரும்போது எங்கள் பிரிவு உன்னை மாற்றி இருக்கும் என்று எதிர்பார்த்தேன். பாஸ்கர் ஒன்றும் சாதாரணப்பட்டவர் அல்ல. நம் ஊருக்கு மாற்றி வந்திருக்கும் போலீஸ் கமிஷனர் தேவநாதனுடைய பிள்ளையாக்கும்!''

''யார்? போலீஸ் கமிஷனர் தேவநாதனுடைய மகனா?'' என அதிர்ந்து போய்க் கேட்டாள் நித்தியா. பதில் சொல்ல அங்கே ராஷ்மி இல்லை.

நித்தியாவின் தலை சுற்றியது.

* * * *

தேவநாதன்?

அவனாகத்தான் இருக்கும். போலீஸில் பெரிய ஆபீஸராக இருப்பதாகத்தான் சொல்லிக் கொண்டார்கள். நித்தியாவின் மனத்தில் பயங்கரமாக நினைவுகள் அலைமோதின. எதை மறக்க இத்தனை வருடங்கள் ஆயினவோ அது வேறு ஒரு கோணத்தில் பயங்கரமாக விசுவரூபம் எடுத்து நின்றது.

அப்போது நித்தியாவுக்கும் பதினெட்டு வயதுதான். ராஷ்மியைப் போல் பிடிவாதம் உண்டு. தன் தாய் ஒரு பத்தாம் பசலி என்ற எண்ணம் இருந்தது.

பக்கத்துப் பங்களாவில் ஓய்வு பெற்ற ராணுவ அதிகாரி ஒருவர் உண்டு. அவர் அப்பாவின் நெருங்கிய நண்பர். அவர் பிள்ளைதான் இந்தத் தேவநாதன். கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தான்.

தேவநாதனைப் பார்க்கும் பொழுதெல்லாம் நித்தியாவின் உள்ளத்தில் இனம் புரியாத ஒரு கிளர்ச்சி எழும். அவன் பார்வையில் தெரிந்த ஒரு கவர்ச்சி அவளைக் காந்தம் போல் அவன் பால் இழுத்தது.

ஏதாவது சாக்குச் சொல்லிக்கொண்டு அடுத்த பங்களாவுக்குப் போய்த் தேவநாதனுடன் மணிக்கணக்கில் பேசிக்கொண்டிருப்பாள்.

நித்தியாவின் தாய் அவள் இப்படிப் பழகுவதை வன்மையாகக் கண்டித்தாள். ஆனால் அவள் தந்தை அதை ஒரு பொருட்டாக மதிக்கவில்லை. ''தேவநாதன் மிகவும் நல்ல பிள்ளை... நம் வீட்டுக்கு மருமகனாக அவன் வர நாமே கொடுத்து வைத்திருக்க வேண்டும்'' என்றார்.

''நானா வேண்டாம் என்கிறேன்? இவள் கழுத்தில் முதலில் மூன்று முடிச்சு போடட்டும்; சாப்பாட்டைக்கூட அடுத்த வீட்டுக்கு அனுப்பி வைக்கிறேன். இருபத்து நாலு மணி நேரமும் பேசிக்கொண் டிருக்கட்டும்'' என்று அவள் சொல்லியும் அவர் காதில் போட்டுக் கொள்ள வில்லை; நித்தியாவையும் கண்டிக்கவில்லை.

அன்று—மறக்க முடியாத தினம்—நித்தியாவின் தந்தையும் தாயும் பக்கத்து ஊருக்குத் திருமணம் ஒன்றில் கலந்து கொள்ளச் சென்றார்கள். தேவநாதனின் தந்தையும் உடன் போயிருந்தார். நித்தியா தனியாக இருந்தாள். பொழுது போகவில்லை. ஏதோ தீர்மானத்துக்கு வந்தவளாய்த் தேவநாதன் வீட்டுக்குப் போனாள்.

தேவநாதன் வீட்டுக் கதவைத் திறந்து அவளை வரவேற்றான். இடுப்பில் ஒரு லுங்கியும் மேலே ஒரு டர்க்கி டவலுமாக அவன் நின்றான். அவன் உடல்கட்டில் மயங்கினாள் நித்தியா. தன் அறைக்கு அவளை அழைத்துச் சென்ற தேவநாதன் அவளை ஒரு நாற்காலியில் உட்காரச் சொல்லித் தானும் எதிரில் உட்கார்ந்தான். இருவரும் ஏதேதோ பேசிக்கொண்டேயிருந்தார்கள், நேரம் போனது தெரியாமல்.

சட்டென்று பேச்சு நின்றது. அசாதாரணமான ஒரு மௌனம் நிலவியது. அவளை அவனும் அவனை அவளும் தங்கள் தங்கள் விழிகளால் விழுங்கலாயினர்.

எந்தச் சைத்தான்—எந்தப் பூதம்—தேவநாதனை ஆட்கொண்டதோ, அவன் திடீரென்று எழுந்தான். திடீரென்று பாய்ந்து நித்தியாவைத் தன் மார்புடன் இழுத்து அணைத்துக் கொண்டான். அவன் தோள் துண்டு தரையில் விழுந்தது.

நித்தியா இதை எதிர்பார்க்கவில்லை. அவள் பயந்து போனாள். ''என்னை விடுங்கள். என்னை விட்டு விடுங்கள்!'' எனத் திமிறினாள்; பற்களால் கடித்தாள்; நகத்தால் பிறாண்டினாள்.

தேவநாதன் விடுவதாக இல்லை. பிடியை மேலும் மேலும் இறுக்கினான். பக்கத்து அறையின் கதவுகளைக் காலால் உதைத்துத் திறந்தவன் அங்கிருந்த படுக்கையின்மேல் நித்தியாவுடன் சாய்ந்தான். நித்தியாவுக்குக் குரல் எழும்பவில்லை. தேவநாதன் முரட்டுக்கரம் வாயை இழுத்து மூடியிருந்தது.

தன் பசியைத் தீர்த்துக் கொண்ட புலி கட்டிலை விட்டு நகர்ந்தது. நித்தியா அங்கே அலங்கோலமாக்கப்பட்டுக் கிடந்தாள். எது நடக்கக்கூடாது என்று அவள் தாய் பயந்தாளோ, அது சில நிமிஷங்களில் அழிக்க முடியாத கறையாகப் படிந்து விட்டது.

தேவநாதனின் ஆவேசம் அடங்கியது. தன் செய்கையின் விபரீதம் அவனுக்குப் புரிந்தது. தன் தலையில் மடேர் மடேர் என்று போட்டுக் கொண்டான். சிறு குழந்தையைப் போலத் தேம்பித் தேம்பி அழுதான்.

''நான் தப்புச் செய்து விட்டேன், நித்தியா.. மிருகமாக நடந்து கொண்டு விட்டேன். வெறியனாக நடந்து கொண்டு விட்டேன்... ஆனால் இது சத்தியம் நித்தியா.., நீ தான்...'' என்று கூறியபடி அவளைத் தொட்டுத் தைரியம் சொல்ல விரைந்தான்.

''என்னைத் தொடாதே!'' என்று தன் மூச்சைப் பிடித்துக் கொண்டு நித்தியா கூவினாள். தள்ளாடியபடி தன் வீட்டுக்கு மெதுவாகப் போய்ச் சேர்ந்தாள். நல்ல வேளை யாரும் கவனிக்கவில்லை! குளியல் அறையில் நுழைந்து அரைமணி நேரம் நீராடினாள். தேவநாதன் கரங்கள் பட்ட இடங்களைச் சீவி எறிந்துவிடத் துடித்தது அவள் மனம்.

அழுது அழுது கண்கள் சிவக்கப் படுத்திருந்த தன் மகளைப் பார்த்த தாய் தவித்துப் போனாள். ''என்ன நடந்தது?'' என்று கேட்டுப் பதறினாள்.

நடந்து முடிந்த அவலத்தைச் சொல்ல வாய் எடுத்த நித்தியா மிகுந்த சிரமத்துடன் தன்னை அடக்கிக் கொண்டாள். ''தலையை வலிக்கிறது, அம்மா!'' என்று புளுகினாள்.

உண்மையைச் சொன்னால், அடுத்த முகூர்த்தத்தில் அந்த முரடனுக்கு அவளைத் திருமணம் செய்து வைப்பார்கள். வாழ்நாள் முழுவதும் அந்த மிருகத்துடன் அல்லவா கழிக்க வேண்டும்? தேவநாதன் முகத்தை மட்டும் அல்ல, ஆண் வர்க்கத்தையே அவள் வெறுத்தாள்.

இது மறைக்கக்கூடிய விஷயமல்ல என்று அவளுக்குத் தெரியும். அப்படி ஏதும் விபரீதம் நேர்ந்தால், ஒரு முழக் கயிற்றில் தொங்க அவள் முடிவு செய்தாள். தேவநாதன் கரங்களால் தாலி கட்டிக் கொள்வதைவிட அது எவ்வளவோ மேல்.

அவள் பயந்த பயங்கரம் நடக்கவில்லை. நடந்தவற்றைக் கெட்ட கனவாக்கி மறக்கத் தைரியம் வந்தது.

ஆனால் தேவநாதன் சும்மா இருந்து விடவில்லை. தன் தந்தையிடம் தான் நித்தியாவை மணக்க உத்தேசித்திருப்பதைத் தெரிவித்தான். அவர் நித்தியாவின் தந்தையை அணுகினார். நித்தியா கல்யாணப் பேச்சை அறவே வெறுத்தாள். அவள் பெற்றோர் வற்புறுத்தவே, தான் தேவநாதனைத் தவிர வேறு யாருடனும் வாழ்க்கையைப் பகிர்ந்து கொள்ளத் தயார் என்றாள்.

''உம்... இந்தப் பெண்களின் மன ஆழத்தை யாரால் புரிந்து கொள்ள முடியும்?'' என்று அலுத்துக் கொண்டார், அவள் தந்தை.

தேவநாதன் பலமுறை நித்தியாவைத் தனியாகச் சந்திக்க முயன்றான். நித்தியா இடம் தரவில்லை. ஏதோ சாக்குச் சொல்லி வேறு ஊரில் இருந்த தன் அத்தையை நாடிப் போய் விட்டாள். அங்கேதான் பரமகுருவின் வீட்டார் அவளைப் பெண் பார்த்து நிச்சயம் செய்தனர்.

சோபன அறையிலும் அதற்குப் பிறகும் பரமகுரு அவளை நெருங்கி வந்தபோது எல்லாம் அந்தப் பழைய சம்பவம் அவள் கவனத்துக்கு வந்தது. பரமகுருவின் செய்கை அருவருப்பை ஊட்டியது. முகத்தைச் சுளித்தாள். உடல் கூசினாள். உள்ளத்தைச் சுருக்கிக் கொண்டாள்.

இந்தப் புண் முழுமையாக ஆற நித்தியாவுக்குப் பதினெட்டு ஆண்டுகள் தேவைப்பட்டன. தன் கணவன், தன் வீடு, தன் மகள், தன் வாழ்க்கை என அவள் உணர்ந்து தன்னை அவற்றில் ஐக்கியப்படுத்திக்கொள்ள அவள் விழைந்த போது, பரமகுரு குடும்பப் பற்று விட்டுப் போய் வெகு தூரத்துக்கு விலகிவிட்டார். தான் செய்த தவற்றுக்குத் தண்டனையாக அவள் இதைக் கருதித் தன்னைச் சமாதானப் படுத்திக் கொள்ள யத்தனிக்கும் இந்த வேளையில், அந்தப் பாவி தேவநாதன பிள்ளை அல்லவா பெரும் பூதம்போல் அவள் மகள் வாழ்க்கையில் விளையாட முன்வந்து நிற்கிறான்?

* * * *

தன் நெற்றியில் யாரோ கைவைத்துப் பார்ப்பதை உணர்ந்த நித்தியா திடுக்கிட்டுக் கண் விழித்தாள். பரமகுருவே நின்றுகொண்டிருந்தார். சுவர்க் கடிகாரம் பன்னிரண்டு அடித்து ஓய்ந்தது.

''என்னை மன்னித்துவிடு, நித்யா. என்னால் நேரில் வர முடியவில்லை. எல்லாம் நல்லபடியாக நடந்திருக்கும் என்று நினைக்கிறேன். ஏன் படுக்கையறைக்குப் போகாமல் இங்கே சோபாவில் சாய்ந்துவிட்டாய்? வா! வா!...ரொம்ப நேரமாகிறது!'' என்று அழைத்தார்.

நித்தியா எழுந்தாள். தன்னை அவர் ஆதரவுடன் அணைத்தபடி மாடிக்கு அழைத்துச் செல்வார், படுக்க வைப்பார், அந்த அன்பான கரங்களின் வெதுவெதுப்பில், அரவணைப்பில், தன் ஏக்கங்களையெல்லாம் மறக்கலாம் என்று ஏங்கினாள் அவள். ஆனால் அவர் பாடம் ஒப்பிப்பதுபோல் பேசிவிட்டு எப்பொழுதோ மாடி ஏறிப் போய்விட்டிருந்தார்.



மறுநாள் காலை. தந்தையும் மகளுமாகக் காலை உணவுக்காக மேஜை அருகே வந்து அமர்ந்தார்கள். நித்தியாவே என்றும் இல்லாத புதுவிதமாகப் பரிமாற முன் வந்தாள்.

''நீ ரெஸ்ட் எடுத்துக்கொள், நித்தியா. வேலைக்காரர்கள் பார்த்துக் கொள்வார்கள்!'' என்று தடுத்தார் பரமகுரு.

''வேண்டாம், வேண்டாம். அதுதான் ஒரு மாதம் அங்கும் இங்கும் நகராமல் படுக்கையில் இருந்தாயிற்றே. அதோடு நான் முக்கியமாக ஒரு விஷயம் சொல்ல வேண்டியிருக்கிறது!'' என்றாள் நித்தியா.

ராஷ்மி வியப்புடன் அன்னையைப் பார்த்தாள். அம்மா, அப்பாவுடன் முக்கியமான விஷயம் ஏதும் பேசி அவள் அறிந்ததில்லை.

''என்ன அது? சீக்கிரம் சொல்!'' என்று அவசரப்படுத்தினார் பரமகுரு.

''அவசரம் வேண்டாம். எந்த முக்கிய வேலையையும் ஒத்திவைத்து விட்டு எனக்காகப் பத்து நிமிஷங்கள் ஒதுக்கக்கூடாதா?'' என்று கேட்டாள்.

பரமகுரு திரும்பிப் பார்த்தார். 'இவளுக்கு என்ன நேர்ந்தது?'

''நேற்று இரவு பத்தரை மணிக்குமேல் உங்கள் பெண் ஒரு தடிப்பயலுடன் காரில் வந்து இறங்கியிருக்கிறாள். நன்றாக இருக்கிறதா? நீங்களே கேளுங்கள்!'' என்று வெகுண்டாள் நித்தியா.

''யாரம்மா அந்தத் தடிப்பயல்? எனக்குத் தெரிந்தவரையில் என் நண்பர்கள் எல்லாம் ஒல்லிதானே?'' என்று கேலி செய்தார் பரமகுரு.

''விளையாடுகிற சமாசாரம் இல்லை. நீங்கள் ராஷ்மியை ஸ்கர்ட் போட்டுக் கொண்டு கான்வெண்ட் போகிற சின்னப் பெண்ணாகவே நினைக்கிறீர்கள். வயது வந்த பெண் அவள். ஞாபகம் இருக்கட்டும்'' என்று வெடித்தாள் நித்தியா.

ராஷ்மி தலையைக் குனிந்துகொண்டாள். ''நம்ம பாஸ்கரைத்தான் அம்மா தடிப்பயல் என்கிறாள்'' என்றாள் மெதுவாக.

''ஓ! பாஸ்கரா? நானே உன்னிடம் சொல்ல வேண்டும் என்று இருந்தேன். நித்தியா, அந்தப் பையன் நல்லவன். அவன் அப்பாவைக்கூட நான் பார்த்தேன். நல்லவர். எனக்கு ரொம்பப் பிடித்துவிட்டது. நம்ம ராஷ்மிக்குக்கூட அந்தப் பையனை....''



''வேண்டாம், வேண்டாம்! வேண்டவே வேண்டாம்! அந்தப் பேச்சை எடுக்காதீர்கள்!'' என்று தன் காதுகளைப் பொத்திக் கொண்டாள் நித்தியா.

நித்தியாவின் குரல் கிரீச்சிட்டது. அவள் உடல் ஆடியது. முகம் வெளுத்தது. நெற்றியெங்கும் வேர்வை துளிர்த்தது. பதற்றத்துடன் ராஷ்மியின் தோளின்மேல் கையை ஊன்றிக்கொண்டாள்.

''என்ன வந்துவிட்டது உனக்கு? ஏன் அப்படிக் கத்தினாய்?'' என்று தம் இடத்தில் எழுந்து நின்ற பரமகுரு கேட்டார்.

''ஒன்றும் இல்லை. ஒன்றும் இல்லை. நமக்கு அந்த வரன் வேண்டாம்'' என்றாள் நித்தியா.

ராஷ்மி தன் தாயின் கைகளைத் தோளிலிருந்து விலக்கினாள். ''ஏன் வேண்டாம்?'' என்று கேட்டாள். அவள் குரல் உயர்ந்திருந்தது.

''எனக்குப் 'பிடிக்கவில்லை'' என்றாள் நித்தியா சுருக்கமாக.

''எனக்கு அது அக்கறை இல்லை. எனக்குச் சம்மதம். நான் பாஸ்கரைக் காதலிக்கிறேன்'' என்று ராஷ்மி தீர்மானமாகச் சொன்னாள்.

''ராஷ்மி!'' என உரத்த குரலில் அதட்டினாள் நித்தியா.

''சும்மா கத்தாதே அம்மா! நீ தானே சொன்னாய், நான் சின்னப் பெண் அல்ல என்று? காலம் மாறிவிட்டது. பாஸ்கரை நீ நேராக இதுவரை பார்த்ததும் இல்லை; பேசியதும் இல்லை. பிடிக்கவில்லை என்று சொன்னால் எப்படி? ஏன் பிடிக்கவில்லை என்பதற்குச் சரியான, ஒப்புக் கொள்ளக் கூடிய ஒரு காரணம் சொல், பார்ப்போம்!'' எனச் சவால் விடுவது போல் அழைத்தாள்.

''என்னைக் கேள்வி கேட்கும் அளவுக்கு நீ இன்னும் பெரியவளாகிவிடவில்லை, ராஷ்மி! இதோ பாருங்கள். எனக்கு அவர்கள் குடும்பத்தைப் பற்றி நன்றாகத் தெரியும்.''

''குடும்பம் என்றால் பாஸ்கரின் அம்மா, அப்பாவா? இல்லை தாத்தா பாட்டியா?'' என்று குத்தலாகக் கேட்டாள் ராஷ்மி.

''வாயை மூடு, ராஷ்மி!'' என்றார் பரமகுரு. நித்தியா தன்னைப் பரிதாபமாகப் பார்ப்பதைக் கவனித்த

வுடன், "சொல், நித்தியா! நிதானமாகச் சொல். உனக்கு ஏன் இந்தச் சம்பந்தம் பிடிக்கவில்லை?" என்று கேட்டார்.
"அந்தப் பையனின் அப்பா..."
"யார்? மிஸ்டர் தேவநாதனா?"
"ஆமாம்."
"அவருக்கு என்ன? பார்த்துப் பழகத் தங்க மானவராகத்தான் தெரிகிறது."
நித்தியா தயங்கினாள். "சின்ன வயதில் அவர் நடத்தை அவ்வளவு சரியில்லை."
"அப்படியா? உனக்கு எப்படித் தெரியும்?"
நித்தியா தடுமாறினாள். என்ன சொல்வது? எப்படிச் சொல்வது? மெதுவாகத் தலையை நிமிர்த்தினாள்.
"அவர்கள் எங்கள் பக்கத்து வீட்டில்தான் குடியிருந்தார்கள். கேள்விப்பட்டது தான்..." என்றாள் நிதானமாக.
"கேள்விப்பட்டதுதான் இல்லையா? உனக்கே தெரியாது. அது உண்மையாகவும் இருக்கலாம். பொய்யாகவும் இருக்கலாம். உண்மை என்றே வைத்துக் கொண்டாலும், அப்பாவின் தவறான நடத்தைக்குப் பாஸ்கர் எப்படிப் பொறுப்பு?" என்று கேட்டாள் ராஷ்மி.
அவள் அதிகம் பேசுவதாகப் பரமகுருவுக்குப் பட்டது. "நீ சும்மா இரு ராஷ்மி. அம்மா சொல்வதிலும் நியாயம் இருக்கிறது. யோசிக்க வேண்டிய விஷயந்தான்."
"அப்பா! நீங்கள் கூட அம்மாவின் பக்கம் சாய்ந்து..." என்று ஆற்றாமையுடன் பொரும ஆரம்பித்தாள் ராஷ்மி.
"பொறுமையாக இரு அம்மா! கல்யாணம் என்பது யோசித்து, மிகவும் யோசித்துச் செய்ய வேண்டிய விஷயம். நானும் தீர விசாரிக்கிறேன். எத்தனையோ எச்சரிக்கையுடன் நிச்சயித்த திருமணங்கள்கூட வெளியே தெரியக் கூடாத அளவுக்குப் பெருத்த ஏமாற்றமாக அமைந்திருக்கின்றன" என்று கூறிய பரமகுரு கைகழுவ எழுந்தார்.
பரமகுரு எதைக் குறிப்பிட்டார் என்று நித்தியாவுக்குப் புரியாமல் இல்லை.

* * * *

அன்று இரவு ராஷ்மி வீடு திரும்பவில்லை. தனக்குத் தெரிந்த ராஷ்மியின் தோழிகள் வீடுகளில் எல்லாம் நித்தியா டெலிபோன் மூலம் விசாரித்தாள். பலன் இல்லை. கௌரவம், அவள் அடைந்த கலவரத்தை வெளிக்காட்ட அனுமதிக்கவில்லை.
பன்னிரண்டு மணிக்கு வழக்கம்போல் வீடு திரும்பிய பரமகுருவிடம் நிலைமையை விளக்கினாள் நித்தியா. அவர் தேவநாதனுக்குப் போன் செய்தார். தேவநாதன் ஊரில் இல்லை. மறுநாள் காலையில்தான் வருகிறாராம். பாஸ்கரும் அன்று வீடு திரும்பவில்லை. பரமகுரு நித்தியாவிடம் முழு விவரத்தையும் கூறி அச்சுறுத்தவில்லை.
"கவலைப்படாமல் தூங்கு. காலையில் பார்த்துக்கொள்ளலாம்!" என ஆறுதல் சொன்னார் பரமகுரு. ஆனால் நித்தியாவின் விழிகள் மூட மறுத்தன.
காலையில் ஏழரை மணிக்குப் போன் அலறியது. நித்தியாதான் கையில் எடுத்தாள்.
"நான்தான் அம்மா, ராஷ்மி பேசுகிறேன்!"
நித்தியாவுக்கு ஆத்திரம் எல்லை கடந்தது. "ஏண்டி, என்ன துணிச்சல் உனக்கு? நான் இரவு பூராவும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக் கொண்டு தவிக்கிறேன். எங்கேடி தொலைஞ்சு போனே? என்ன தைரியம் இருந்தால் போனில் கூப்பிடுவாய்?" என இரைந்தாள்.
"சும்மா வளவளவென்று கத்தாதே! உனக்கு நெஞ்சு வலி வந்துடும். நான் செய்தது தப்போ, சரியோ? போனில் கண்டிப்பது நாகரிகம் இல்லை. பக்கத்தில் இருப்பவர்கள் சிரிக்கிறார்கள்."
"நாகரிகத்தைப் பற்றி நீயா எனக்குச் சொல்லித் தருகிறாய்? எங்கேயிருந்து நீ பேசுகிறாய்? பெற்ற கடனுக்குக் காரை எடுத்துக்கொண்டு நான் வருகிறேன்."
"உஸ். அம்மா.... நான் சொல்வதைக் கொஞ்சம் கேள். நேற்று முழுவதும் நானும் யோசித்துப் பார்த்தேன். என்னால் பாஸ்கரை விட்டு இருக்க முடியாது. நீ சம்மதிப்பாய் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. உன்னைத் தெரியாதா எனக்கு? டாடியும் கூட உனக்கு ஒத்துப் போகிற மாதிரி பேச ஆரம்பித்து விட்டார்."
"ஏய்! ஏய்! என்னவெல்லாம் பேசுகிறாய்? சரி..சரி...நீ வீட்டுக்கு முதலில் வாடி.... எல்லாம் உன் இஷ்டப்படியே நடக்கும்."
"ஐயோ அம்மா! குதிரைக்குப் புல் கட்டுக் காண்பிக்கிறது போல் பேசுகிறாயே! நம்ம வீட்டுக்கு நான் வராமல் எங்கே போவேன்? நாளைக்குக் காலை கட்டாயம் வருவேன். தனியாக அல்ல.. உன் மாப்பிள்ளையுடன்."
"அடியே! அசட்டுத்தனமாக எதையும் செய்து வைக்காதேடி!" நித்தியா பதறினாள்.
"உன் பெண் அவசரக் குடுக்கை அல்ல. இன்றைக்குக் காலை பத்தரை மணிக்குக் கோவிலில் சாஸ்திரோக்தமாகக் கல்யாணம். எங்கள் சிநேகிதர்கள் பத்துப் பேர் வருகிறார்கள். இன்றிரவு ஒரு ஹோட்டலில் எங்கள் குடித்தனம் தொடங்குகிறது. நாளைக்கு நேரா உன் காலடியில் வந்து விழுந்து...."
"உன்னைக் கேட்பாரே கிடையாதா? கொஞ்சம் நான் சொல்வதைக் கேள். அம்மா என்று மதிக்க வேண்டாம். என் வயசுக்கு மதிப்புக் கொடடி. உன் அப்பா பக்கத்தில் இருக்கிறார் பேசுடி..."
"வேண்டாம் அம்மா. நீயே அவரிடம் சொல்லிவிடு..."
"எங்கேயடி கல்யாணம்? பெற்ற கடனுக்கு நானும் அவருமாக வந்து இரண்டு அட்சதையாவது போடுகிறோம்."
"ஸாரி, மதா! இப்போது சொல்வதற்கில்லை. நாளைக் காலை நேரில் வருகிறோம். இரண்டு அட்சதை என்ன? ஒரு படியே போட்டு ஆசீர்வாதம் செய்!"
"ஆசீர்வாதமா? உனக்கா? நானா? மாட்டேண்டி, மாட்டேன். இனிமே நீ என் மூஞ்சியிலே முழிக்க முடியாதுடி. எக்கேடு கெட்டுப் போ."
"உன் பெண் கல்யாணம் இன்னிக்கு. இப்படிச் சபிக்கலாமா? டேக் இட் ஈஸி, மம்மி!" என அவள் போனை வைத்து விட்டாள்.
பரமகுரு பக்கத்தில்தான் இருந்தார். அவருக்கு விஷயம் புரிந்தது.
"என்ன சொல்கிறாள் கேட்டீர்களா? இன்றைக்குக் காலை பத்து மணிக்கு அவளுக்குக் கல்யாணமாம்."
நித்தியா தேம்பினாள். பரமகுரு அவள் முதுகில் தட்டிக் கொடுத்தார்.

''அலை தலைக்குமேல் போய் விட்டது. இப்போது நிமிர்ந்து நிற்பதில் பலன் இல்லை. வளையத்தான் வேண்டும்.''

''காரை எடுங்கள். எல்லாக் கோவில்களும் சுற்றுவோம். எப்படி இந்தக் கல்யாணம் நடக்கிறது என்று பார்த்துவிடலாம்.''

''வீண் பிரயாசை! உன் பெண் நம்மைவிடப் புத்திசாலி. நாம் தேடக்கூடிய இடங்களில் அவள் இருக்க மாட்டாள்'' என்றார்.

நித்தியாவின் திருப்திக்காகப் பரமகுரு, ''எதற்கும் பார்க்கலாம்?'' என்ற எண்ணத்துடன் புறப்பட்டார். நித்தியா என்ன செய்வது என்று புரியாமல் அங்கும் இங்கும் உலவினாள்.

ஏதோ தீர்மானத்துக்கு வந்தவளாக டிரைவரை அழைத்தாள். இன்னொரு வண்டியை எடுக்கச் சொன்னாள். நேராகப் போலீஸ் கமிஷனர் தேவநாதனின் பங்களாவுக்குச் செலுத்தச் சொன்னாள்.

தேவநாதன் பங்களா வாசலில் இருந்த காவலாளி நித்தியாவைப் பணிவுடன் உள்ளே செல்ல அனுமதித்தான்.

நித்தியாவுக்கு உடம்பெல்லாம் கூசியது. பாவிப் பெண், இந்த மனித மிருகத்திடம் போய்க் கையேந்தும் நிலைக்கு அவளை ஆளாக்கி விட்டாளே! கண்களில் காமவெறி தாண்டவமாட, கொடூரமான முகத்துடன் கூடிய ஒரு தேவநாதன் அவள் கற்பனையில் விரிந்து நின்றான். தன்னைப்போல எத்தனை பெண்கள் அவனை நம்பி ஏமாந்தார்களோ? வாயிற்படி ஏறும்போதே கால்கள் தடுமாறின. எப்படியோ சமாளித்துக் கொண்டு உள்ளே நுழைந்தவள் வரவேற்பு அறையில் இருந்த சோபாவில் அமர்ந்தாள்.

தலையெல்லாம் நரைத்துப் போய், நெற்றியில் திருநீறும், குங்குமமும் துலங்க, முகத்தில் சாந்தம் கமழ ஓர் உருவம் உள்ளே வந்தது. அவளைப் பார்த்து, ''நித்தியாவா?'' எனக் கேட்டு அதிசயித்தது. நித்தியாவுக்கே அந்த உருவத்தில் பழைய தேவநாதனின் சாயலைக் கண்டுகொள்ளச் சில கணங்கள் பிடித்தன. அவள் எழுந்து தலையைக் குனிந்து ''உம்'' என்றாள்.

''நான் எதிர்பார்க்கவில்லை. இத்தனை நாட்கள் கழித்து நீயாக, உம்.. நீங்களாக என்னைத் தேடிக் கொண்டு ...'' தேவநாதன் தம் கைகளைக் குவித்துக் குவித்துத் திறந்தார்.

''நானும் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. இந்த வீட்டு வாயிற்படி ஏறும் துர்ப்பாக்கியம் எனக்கு ஏற்பட்டு விட்டது'' என்றாள் நித்தியா நிஷ்டுரமாக.

அதைத் தேவநாதன் பொருட்படுத்தவில்லை. ''உட்காருங்கள், நித்தியா! உங்களைப் பார்த்ததில் எனக்கு மட்டில்லா மகிழ்ச்சி.''

''உட்கார நேரம் இல்லை. பாஸ்கர் எங்கே? எந்த இடத்தில் இருப்பான் என்று சொல்ல முடியுமா?''

''எனக்குத் தெரியாது. நேற்று இரவு கூட அவன் வீடு திரும்பவில்லை என்று சமையற்காரர் சொன்னார். ஆமாம்! அவனை ஏன் நீங்கள் தேடுகிறீர்கள்?''

''அவனை நான் உடனே பார்த்தாக வேண்டும். அவனுடன் என் பெண் ராஷ்மி..''

தேவநாதனின் கண்கள் ஆச்சரியத்தால் விரிந்தன. ''ராஷ்மி உன் ... உங்கள் மகளா? மிக மிக நல்ல பெண். அப்படியானால் பரமகுரு...'' என்று இழுத்தார் தேவநாதன்.

''என் வீட்டுக்காரர்..'' என்றாள், நித்தியா அழுத்தம் திருத்தமாக. ''பாஸ்கரும் அவளும் எங்கே போயிருக்கிறார்கள்?''

காலையில் ராஷ்மி டெலிபோனில் பேசிய விவரங்களை நித்தியா தேவநாதனிடம் சொன்னாள். ''உங்கள் பிள்ளை அவளை இன்று காலை பத்து மணிக்கு ஏதோ கோவிலில் திருமணம் செய்துகொள்ளப் போகிறான்; அதைத் தடுத்து நிறுத்த வேண்டும்.''

தேவநாதன் தம் கைகளை அகல விரித்தார்.

''ஆண்டவனே! இது என்ன குழப்பம்? பாஸ்கர் ... முட்டாள்! ... அவசரப்பட்டு விட்டானே!''

நித்தியாவால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள இயலவில்லை.

''உங்கள் பிள்ளைதானே? அவசரப்படாமல் இருப்பானா?'' தன் உதட்டைக் கடித்துக் கொண்டாள்.

சாட்டையடி பட்டது போல் சிலிர்த்துத் திரும்பினார் தேவநாதன். நித்தியா நடுங்கிப் போனாள்.

''நித்தியா ... புரிகிறது! போலியாக மரியாதை வைத்து உன்னை அழைப்பது எனக்கும் பாந்தமாகப் படவில்லை. உன் முகத்தைப் பார்த்தாலே எனக்குப் புரிகிறது. அன்று நடந்த தவற்றை நீ இன்னும் மறக்கவில்லை. செம்புண்ணாக அது உன் உள்ளத்தில் இன்றும் இருக்கிறது. உன் வாழ்க்கையையும், ஏன் உன் ஆரோக்கியத்தையுங்கூட அது பெரிதும் பாதித்திருக்கிறது. மிஸ்டர் பரமகுருவின் குடும்ப வாழ்க்கை திருப்திகரமாக அமையவில்லை என்று மட்டும் கேள்விப்பட்டேன். ஆனால் நீதான் அவர் மனைவி என்று எனக்கு இப்போது தான் தெரியும்.''

''அதெல்லாம் இப்போது எதற்கு? என் தலைவிதி அது. இப்போது எப்படியாவது ராஷ்மியைத் தேடிக் கண்டுபிடித்து...''

''நித்தியா, மணி இப்போது ஒன்பதரை ஆகிறது... இனிக் கண்டு பிடித்தாலும் பலன் இல்லை. இரண்டு பேரும் மேஜர். நம்மை நாமே அவமானப்படுத்திக் கொள்வோம். நான்கு பேர் நம்மைப் பற்றிக் கேவலமாகப் பேசுவார்கள்.''

''இது என்னுடைய மகளின் வாழ்க்கைப் பிரச்னை!'' என்றாள் அவள், சொல்லவொணா வேதனையுடன்.

''என் பிள்ளையின் எதிர்காலமும் இதில் சம்பந்தப்பட்டிருக்கிறது'' என்றார் தேவநாதன்.

''எனக்கும் புரிகிறது. உங்கள் மனம் என்னைக் கண்டு பரிகசிக்கிறது. என்னை மட்டம் தட்ட, பழி வாங்க, நல்லதொரு சந்தர்ப்பமாக இதை நினைக்கிறீர்கள்.''

தேவநாதன் விரக்தியுடன் சிரித்தார்.

''இப்படி உட்கார், நித்தியா!''

''வேண்டாம். நான் நிற்கிறேன்'' என்றாள் நித்தியா.

''நான் சொல்வதைக் கேள். உட்கார்!'' என்று கர்ஜித்தார் தேவநாதன்.

நடுநடுங்கிப் போய் நித்தியா உட்கார்ந்தாள். தேவநாதனின் குரலில் கடுமை மறைந்தது. ''என்னை மன்னிக்கவேண்டும், நித்தியா! நான் என்னை மறந்துவிட்டேன். இருபது வருஷங்களுக்கு முன் நடந்த அந்தச் சம்பவம் வெறுக்கத் தக்கதுதான்; சரியில்லாதது

தான். அதை எந்தச் சமாதானமும் சொல்லிச் சரிப்படுத்த முடியாது. என்னையே நொந்துகொண்டேன்.''

நித்தியா சிலையாகிப் போனாள். தேவநாதன் பேசியது அத்தனையும் உண்மை என்று அவள் உள் மனம் சொல்லியது. தேவநாதன் எவ்வளவு தூரம் மனம் வருந்தியிருப்பார் என்றும் புரிந்தது.

''அன்று நடந்து போன சம்பவத்துக்கு நான் மட்டுந்தானா பொறுப்பு? நீயுந்தான். உன் அழகு, பருவம், இளமை, பார்வை அத்தனையுந்தான். கால் வழுக்கி விழுந்தால் காலை வெட்டுவதில்லை. மனம் சலனப்பட்டுத் தவறு நேர்ந்தால் ஏன் பெரிய தண்டனை? இப்படியெல்லாங் கூட நான் என்னைச் சமாதானப் படுத்திக் கொண்டேன். இருந்தாலும் பொறுப்பு என்னுடையது என்று நம்பினேன். பிராயச்சித்தம் செய்யும் வாய்ப்பை அளிக்க நீ மறுத்து விட்டாய். தண்டனையை நானே மனமுவந்து ஏற்றுக் கொண்டேன்.''

நித்தியா நிமிர்ந்து பார்த்தாள்.

''நீ நம்பாமல் போனாலும் போகலாம். ஆனால் உண்மை இதுதான். அன்று உன்னைத் தீண்டிக் களங்கப்படுத்திய நான் வேறு யாரையும் மனத்தால்கூடத் தொடவில்லை. காக்கி உடை அணிந்த சந்நியாசி நான். பாஸ்கர் என் பிள்ளை அல்ல. ஊர் பேர் இல்லாத அநாதை. என்னைத் திருமணம் செய்துகொள்ள வற்புறுத்திய என் நண்பர்களின் வாயை அடைக்க என் கற்பனையில் உதித்து மறைந்த என் மனைவி பெற்ற பிள்ளை. இனியாவது என்னை மன்னிப்பாயா, நித்தியா?''

நித்தியா கண்களில் நீர் பொங்கியது. தேவநாதன் தமக்குத் தாமே விதித்துக் கொண்ட தண்டனையை நினைத்தாலே மெய் சிலிர்த்தது. ஆனால் அவள் ஒரு பெண்? வேறு ஒருவனுக்கு மாலையிட முடிந்தது. இல்வாழ்வில் விருப்பத்துடனே, இல்லாமலோ ஈடுபட முடிந்தது. ஆனால் ஏற்றுக் கொண்ட பொறுப்பைச் சரியாகச் செய்து முடித்தாளா? நல்ல மனைவியாகவும் நடக்கவில்லை, பொறுப்புள்ள தாயாகவும் இருக்கவில்லை. அவள் மனம் அவளைச் சுட்டது. எத்தனை கேவலமாக அவள் வாழ்ந்து விட்டாள்!

மௌனமாகக் காரில் ஏறி அமர்ந்த நித்தியா விம்மினாள். அவள் நெஞ்சு தாங்க முடியாத வலியால் தவித்தது. வீட்டு வாசலில் காரின் கதவைத் திறக்க முனைந்த காவலாளி எஜமானியின் நிலை கண்டு பதறிப் போனான்.

* * * *

மறுநாள்.

வேகமாக வந்து நின்ற டாக்ஸியிலிருந்து ராஷ்மியும் பாஸ்கரும் இறங்கினார்கள். திருப்பதியில் அவர்கள் திருமணம் நடந்து முடிந்திருந்தது.

பங்களா வாசலில் ஏன் இத்தனை கூட்டம்? ஏன் இப்படி அசாதாரண மௌனம்?

ஹாலின் மத்தியில் போட்டிருந்த பெஞ்சியில், பக்கத்தில் சுடர் விளக்கு எரிய, நெற்றியில் பெரிய குங்குமப் பொட்டும் கழுத்தில் மாலையுமாக நித்தியா படுத்திருந்தாள்; இல்லை, படுக்க வைக்கப்பட்டிருந்தாள்.

ராஷ்மி திகைத்துப் போய் நின்றாள். நிதானமாகத் தன் கணவன் பக்கம் திரும்பினாள். ''என் அம்மா, பாஸ்கர், என்னைவிடப் பிடிவாதக்காரி. என்னை ஆசீர்வதிக்காமலேயே, என் முகத்தில் விழிக்காமலேயே போய் விட்டாள்!''

நெஞ்சு வெடிக்க அவள் கதறினாள். சமாதானம் சொல்ல யாருக்கும் அங்கே துணிவு இல்லை! ★

---

## தங்கக் கோயில்கள்

பாலைவனம் என்று நினைக்கும் ராஜஸ்தானத்தில் அழகிய சில கோயில்கள் உள்ளன. பல கலைகளும் அந்த மண்ணுக்கே ஏற்ற எழிலுடன் விளங்கி வருகின்றன.

உதயபூரிலிருந்து 35 மைல் தொலைவில் மூன்று தலங்கள் உள்ளன. மூன்றும் அந்தப் பக்கத்தில் புகழ் பெற்றவை. நாதத்வார், காக் ரோலி, ஏகலிங்கஜி என்று பெயர்.

முதல் இரண்டு கோயில்களிலும் கண்ணனே மூல தெய்வம். பொன்னாலும் வைரத்தாலும் இழைத்த திருவுருவங்கள். நாதத்வார் மலைகளுக்கு இடையில் அமைந்துள்ளது. இங்கே கண்ணன் ஒரு கையை மேலே தூக்கியும், மற்றக் கையில் மாலை ஏந்தியும் காட்சி அளிக்கிறான். 'சிருங்கார தரிசனத்'தின்போது கண்ணனைப் பார்க்க இரண்டு கண் போதாது. கர்ப்பக்கிருகத்தின் கதவுகள் முழுவதும் வெள்ளியினால் ஆனவை.

கோயிலின் ஒரு பகுதிக்குக் கோவர்த்தன சௌக் என்று பேர். தீபாவளிக்கு அடுத்த பஞ்சமி அன்று கோ பூஜை அங்கே சிறப்பாக நடக்கும். ஆயிரக்கணக்கான புறாக்களுக்கும் அன்று அங்கே தீனி போடுவார்கள். கஸ்தூரியும் குங்குமப்பூவும் அரைப்பதற்காக, தங்கத்தினால் செய்த யந்திரம் இருக்கிறது. மீராபாய் தம் கடைசி நாட்களை இங்கே கழித்ததாகக் கூறுகிறார்கள்.

காக்ரோலிக் கோயில் ஏரிகரையில் அமைந்திருக்கிறது. எழில் மிக்க சூழ்நிலை. இந்தக் கோயிலில் பிரசாதம் நிறையக் கொடுப்பார்கள். ராஜபுத்திர அரசர்களின் குலதெய்வமாக, ஏகலிங்கஜி கோயில் விளங்கியதால், கோயில் கதவுகள் எல்லாம் வெள்ளியால் ஆனவை. மூல விக்கிரகம் கறுப்புச் சலவைக்கல்லில் ஆன அழகான லிங்கோத்பவர். உற்சவமூர்த்தியைச் சலவைக் கல்லில் செய்திருக்கிறார்கள்.

—ராஜி பரமேசுவரன், தேவாஸ் (ம. பி.)




பொட்டலம் அவிழ்ந்தாற் போலப் பத்துப்பதினைந்து பேரைக்கொட்டி விட்டுப் பஸ் நகர்ந்து போய்விட்டது. வீட்டு வாசலிலிருந்து பஸ் ஸ்டாப்பில் இறங்கியவர்களை அடையாளம் பார்த்துத் தேடினுள் சுமித்ரா. சட்டை நிறம், கைப்பெட்டி, நடையின் சாயல்?..ஊஹூம்..ராகவன் அந்தப் பஸ்ஸில் வரவில்லை?

பிள்ளையார் கோவில் மணி அடிக்கத் தொடங்கிவிட்டது. வெள்ளிக் கவசக் கோலத்தைத் தரிசிக்கத் தலைகள் மட்டும் தெரியும் கூட்டம். சுமித்ரா அவர்களில் ஒருத்தியாய் நிமிடங்கள் நகருவது தெரியாமல் நிற்பதுண்டு. அவை ராகவன் தாமதமாய்த் திரும்பும் சாதாரண நாட்கள். அன்று ராகவன் சீக்கிரமாகத் திரும்பி வருவதாகச் சொல்லி இருக்கிருன். வெளியே போகலாமென்று ஆவலைத் தூண்டி விட்டிருக்கிருன்.

மேலே ஃப்ளாட்டில் மகாலட்சுமி தன் பையனுக்கு ஹிந்திப் பாடம் சொல்லிக் கொடுப்பது காதில் விழுகிறது. உள்ளே அமர்ந்து ரேடியோக் கேட்கும் பத்மா ஜன்னல் வழியாக எட்டிப் பார்க்கிருள். பலகணி திறந்தது போன்ற புன்னகை வெளிச்சம்? சுமியின் பரபரப்பு, புரிந்தது போலக் கேட்கிருள்:

"இன்னும் மாமா வரவில்லையா??

அந்தக் கேள்வியிலேயே தொனிக்கிறது இரக்கக்குரல். அன்று போகவேண்டிய சினிமாவைப் பற்றி அவளிடம் பேசியது நினைவிருக்கிறது. பத்மா பார்த்த படந்தான் அது. நடிப்பையும் காட்சிகளையும் ஒவ்வொன்ருக வருணித்தது, மீண்டும் மனத்தில் படமெடுத்தது போலப் பொருந்திக் கலைகிறது. கற்பனையிலேயே திருப்தி அடைய வேண்டியது தாளு?

மணி ஏழு. வாசற்படியில் சிறு வெளிச்சம் தேங்கி நின்றது. மாற்றி உடுத்துக் கொண்ட உடையைக் கலைக்க மனமில்லாமல் அங்கேயே தயங்கி நின்ருள் சுமித்ரா. ராகவனுக்குப் பிடித்த இள நீலவர்ணப் புடைவை. அதற்கு இணையாய் ஒவ்வொன்றிலும் நீலம்; நெற்றிப் பொட்டு முதல் கையில் குலுங்கும் வளைகள் வரை.

வாசல் விளக்கை அணைத்துவிட்டுச் சுமித்ரா உள்ளே போய்விட்டாள். திரைப் படத்தில் இந்நேரம் இடைவேளை வந்திருக்கும். சோபாவில் அமர்ந்து கண்ணை மூடிக் கொண்டாள். இமையைத் திறக்க மனமில்லை. மணம் செய்துகொள்ளு முன், அப்பாவிடம் சண்டை போட்டுச் சினிமாவுக்குப் போன ஞாபகம். புதுப்படத்தில், முதல்நாள், முதற் காட்சியில்?

"இப்படி ஒரு வழக்கம் செய்து கொள்ளாதே? அப்புறம் உன் கணவர் அழைத்துக் கொண்டு போக மறுத்து விட்டால் உனக்கு

ரொம்ப வருத்தமாக இருக்கும்'' என்பாள் அம்மா.

விளையாட்டாக, ''சுமித்ராவை ஒரு சினிமா நடிகருக்கே கல்யாணம் செய்து கொடுத்து விட்டால் போகிறது'' என்பார் அப்பா. அவள் சளைத்தவள் அல்ல; பளிச்சென்று அப்போது பிரபலமாக இருந்த, ஓர் அரும்பு மீசை இளம் நடிகனின் பெயரைச் சொல்லிக் காட்டுவாள்.

மணி எட்டு. சுமித்ரா சமையலைத் தொடங்கி விட்டாள். 'காஸ்' அடுப்பு நீலப் பூக்குடை விரித்தது. தீநாக்குகள் துள்ளி விளையாடின. அன்று மாலை வெளியிலேயே சாப்பிடலாமென்று திட்டம். அதனால் மாலை மூன்று மணிக்கே அடுப்பைத் துடைத்தாகிவிட்டது. இப்போது மீண்டும் அடுப்பில் அனல் வெளிச்சம். அதன் மௌனமான சூட்டைப் போன்ற மனப்புழுக்கம்.

சுமித்ரா புடைவையை மாற்றிக் கொண்டு வந்து அடுப்பெதிரே உட்கார்ந்தாள். முழங்கால் மேல் வைத்த தலை நிமிரவே இல்லை. பளிச்சென்ற உடை மாறியது போல, அந்த மாலை நேரத்து உற்சாகமும் மங்கிவிட்டது. முழங்கால்களை அணைத்தாற்போலக் கட்டிக் கொண்டு அமர்ந்த உருவம் பாதி இருளில் மங்கலாகப் பிதுங்கிற்று. அசதியில் மயங்கும் கண்கள். அன்று காலையிலிருந்தே ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. இடுப்பு இப்போதே அகல ஆரம்பித்து விட்டது.

•

மணி பத்து. கடைசிப் பஸ் உறுமிக்கொண்டு போகும் சத்தம் கேட்டது. அவள் எழுந்து போய் வாசலில் நின்று எட்டிப் பார்க்கவில்லை. இரவின் இருளில் ஒலிகள் எல்லாம் கேட்டு மறைகின்றன. கடைசியில் ராகவன் உள்ளே வரும் கால்பூட்ஸின் ஒலி கேட்டது.

எழுந்து ஹால் விளக்கைப் போட்டாள். அவன் முகத்தில், ஏற்றிய வெளிச்சத்தில், தாம்பூல வாய் அரிந்த தக்காளியாய் மின்னிற்று. உள்ளே போய் விட்டாள். அவள் சாப்பிட அழைக்க வில்லை. சாப்பாட்டு மேஜையின் மீது தட்டை வைக்கும் சத்தத்திலிருந்து புரிந்துகொள்ளட்டும்!

கழற்றிக் கொண்டிருந்த சட்டைக் குள்ளிருந்து அவன் குரல் கேட்டது: ''நான் சாப்பிட்டாயிற்று, சுமி! நீ சாப்பிடலாம்.''

ஒரே எண்ணத்தின் நடுத் தண்டிலிருந்து முளைத்து அதையே சுற்றிப் படர்ந்த ஏமாற்றம் இப்பொழுது அகலக் குடை விரித்தது. தனக்குள்ளே புழுங்கிக் கொண்டு பாத்திரங்களை அடுக்க ஆரம்பித்தாள். தனியே சாப்பிட மனம் இல்லை. ஹோட்டலில் பாதரஸவிளக்கின் நீலத் தளிர் ஒளியில், படம் முடிந்த பின் விமரிசன விவாதங்களின் துணையோடு சாப்பிடும் கற்பனை. இந்தத் தனித்தட்டும் கவளமும் ரஸிக்க முடியா.

சுற்றிலும் கட்டிடங்களின் மாடி அடுக்குகளில், ஜன்னல் கட்டங்களில் விளக்குகளின் வெளிச்சம் மறைந்து விட்டது. ராகவன் கட்டிலில் சாய்ந்து, அன்று வந்த பத்திரிகையை வட்டமான மேஜை விளக்கின் வெளிச்சக் குடையில் புரட்டிக்கொண்டிருந்தான்.

சுமித்ரா உள்ளே வந்தாள். செம்பினுள் தம்ளரைப்போல மனமும் ததும்புகிறது. வழக்கத்தை விடக் கெட்டியாய்க் கால் மெட்டி ஒலிக்கிறது. வயிற்றின் கனம் அழுத்துவதாலா அல்லது வேண்டுமென்றேயா? ராகவனின் முகம் நிமிரவில்லை. அந்த அலட்சியத்தில் கண்ணீர் விழாத துளியாய் இமை முனையில் நின்றது.

மேஜைமேல் செம்பை வைத்து விட்டு எதிரே உட்கார்ந்தாள். புன்னகை மலர ராகவன் நிமிர்ந்தான்.

''என்ன, படம் எடுத்திருக்கிறாற் போல இருக்கு?''

அவள் பதில் சொல்லவில்லை. கோபத்தில் உதடுகள் சுளித்தன. அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவள் கழுத்தை அணைத்துத் தன் பக்கமாய் இழுத்துக் கொண்டான். அவள் தன்னை விடுவித்துக் கொண்டாள். பிடிவாதம் புரிந்தது.

''இன்று எதிர்பாராத வேலை. ஆபீஸர் விடவில்லை. அதனால்தான் சொன்னபடி வரமுடியாமல் போய்விட்டது. நாளைக்குப் போகலாம்.'' அவள் மறுப்பை இணக்கமாய் மாற்ற முயலும் மென்மையான குரல்.

''அந்தப் படத்தை நாளைக்கு இருக்கச் சொல்லி இருக்கிறீர்களா?'' என்று தெறிந்தாற் போலக் கேட்டாள் சுமித்ரா.

ஒரு நிமிஷம் பதில் சொல்ல முடியாமல் தவித்தான் ராகவன். பிறகு அவளைச் சமாதானப்படுத்த விரும்புவது போல நகர்ந்து அருகில் உட்கார்ந்தான். பகலில் நேர்ந்து விட்ட வேலையின் சுமையை மறக்க விரும்பிய மனம், அந்த நேரத்தில் உல்லாசத்தையே நாடிற்று. அவள் மடிமீது அவன் விரல்கள் படிந்தன.

சுமித்ரா சட்டென்று எழுந்து நின்றாள். அவன் முகம் விழுந்தது. அவள் முகத்தில் ஒரு விபரீதமான திருப்தி தோன்றிற்று.

''படத்துக்குப் போகலாம், வெளியிலேயே சாப்பிடலாம், எல்லாமே நாளைக்கு!'' என்று எழுந்து ஜன்னலருகே போய் நின்றாள்.

முகத்தில் எறிந்தது போன்ற அந்தப் பதில் அவன் மனம் நாடியதை அவள் அப்படி அலட்சியப்படுத்தி விட்டதை, அந்தப் பேச்சில் படர்ந்த ஒதுக்கத்தின் முழு அர்த்தத்தை, உணர்ந்தபோது உள்ளே ஏதோ கொதித்து எழுந்து அடங்கிற்று. குத்தினாற்போன்ற மனத் தவிப்பு.

''வார்த்தைகளை அளந்து பேசு சுமி! எதிர் வார்த்தை சொல்வதற்கும் ஓர் எல்லை இருக்கிறது. எனக்குப் பிடிக்கவில்லை இது!''

''என்னையும் பிடிக்க வேண்டாம்.''

அவன் எழுந்து வந்து பின்னால் நின்று தொட்டுச் சமாதானப்படுத்துவான் என்று காத்திருந்தாள் சுமித்ரா. அவன் எழுந்து வாசற் கதவைத் திறந்துகொண்டு, வெளியே போய்ப் படியில் உட்கார்ந்து விட்டான். சுமித்ராவின் உள்ளம் ஒரு கணம் இளகி விட்டது. அவனைச் சமாதானப்படுத்தி உள்ளே அழைத்து வரவே விரும்பினாள். ஆனால் ஏனோ விட்டுக் கொடுக்க மனம் இல்லாமல் ஒரு பிடிவாதம். விளக்கை அணைத்துவிட்டுக் கட்டிலில் தனியாகப் படுத்துக்கொண்டாள்.

திறந்த கதவின் வழியே அறையின் காட்சி தெரிந்தது. சஞ்சலிக்கும் அவள் உள்ளம் போல, குத்து விளக்கின் சுடர் அலைந்தது. அந்த ஒளியாட்டத்தில் சுவரும் தரையும் நடுங்கின.

ராகவன் திறந்த வெளியைப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான். சுமித்ரா

அவ்வளவு பிடிவாதமாக இருப்பாளென்று அவன் எதிர்பார்க்கவில்லை. அன்று அலுவலகத்திலேயே ஆபீஸருடன் ஒரு சிறு மோதல். அதில் ஏற்பட்ட மனஸ்தாபங்களை அவளுடைய மெல்லணைப்பில் மறக்கவே அவன் மனம் விரும்பிற்று. இது ஓர் ஏமாற்றந்தான்!

இதே போல் தூக்கி எறிந்தாற்போல அவன் ஆபீஸரிடம் சொன்ன வார்த்தைகள்.

''இவ்வளவுதான் என்னால் முடியும் ஸார்! உங்களுக்கு என்னைப் பிடிக்கவில்லை என்றால் லீவு போட்டு விடுகிறேன். மாற்றல் உத்தரவு போட்டுவிடுங்கள்.''

வார்த்தைகளைக் கொட்டிக் கவிழ்த்துவிட்டு வெளியே வந்து விட்டான். அங்கே அவன் அளந்து பேசவில்லை. இங்கே சுமித்ராவும் அப்படித்தான். திரும்பிப் பார்த்தான். ஜன்னல் வழியே அவள் உருவம் தெரிந்தது. முதுகுப்புறம் காட்டித் திரும்பிப் படுத்துக் கொண்டிருந்தாள் சுமித்ரா.

அவள் மனமும் அப்படித்தான் திரும்பிச் சுருண்டு ஒதுங்கிக் கிடந்தது. சகோதரர்களுக்கு நடுவில் ஒரே பெண்ணாய், செல்லக் குழந்தையாய் வளர்ந்தவள் அவள். அப்பாவுக்கு அவ்விடம் தனியான பிரியம். அவள் கேட்டு இல்லை என்று சொன்னது ஏதும் கிடையாது. அம்மாவின் கோபமும் மேலளவில்தான்; அப்பாவின் சிபாரிசில் அது தண்ணீர் தெளித்த பாலாய், பொங்கிய வேகத்தில் அடங்கிவிடும். எதிர்த்து எதைச் சொன்னாலும் சுமித்ராவை அவர்கள் கண்டித்ததில்லை. கண்களில் தணல் தெறித்த பார்வையை அவள் அறிந்ததில்லை.

மணம் செய்துகொண்டு வந்த புதிதில் கணவனிடமும் அப்படி ஒரு சுவாதீனமான அன்பையே அநுபவித்து விட்டாள் அவள். எதிர்வீச்சாய் அவள் பதில் விழும்போது அவன் சிரித்துக் கொண்டு ஒதுங்கி விடுவான்.

இருவருமாகக் கடற்கரையில் உட்கார்ந்திருந்தபோது, அவள் கோபித்துக் கொண்டு முதுகைத் திரும்பி உட்கார்ந்து கொள்வாள். அவள் முதுகின்மேல் முதுகை வைத்துச் செல்லமாய்ச் சாய்ந்தபடி ராகவன் சொல்லுவான்.

''சுமீ! இந்த அலைகளைப் பார்த்தாயா? தொடர்ந்து இணைந்தாற்போல, இழைந்தோடி வரும் அலைகள்தாம் கரையை எட்டி அழகாக மீண்டும் திரும்புகின்றன. சீறிக்கொண்டு எதிரலையாக வருபவை, வழியிலேயே வலுவிழந்துபோய் விடுகின்றன. என் சுமியின் பேச்சும் அழகாக இனிமையாக அமைய வேண்டும் என்பதுதான் என் ஆசை.''

அவன் பேச்சின் இனிமையில், சொல் ருசியில், அவள் மனம் இளகிப்போகும். சட்டென்று திரும்பி நாக்கை நீட்டி அழகு காட்டுவாள். இருவரின் சிரிப்பும் சுழித்துக் கலந்து கொள்ளும் வேகத்தில் கோபத்தின் ஆற்றாமை, கடலலை மணலைத் தழுவியது போல, நழுவி மறைந்து போகும்.

ராகவன் விட்டுக் கொடுத்துப்போய்விடுவது தான் வழக்கம். கொஞ்ச நாட்களாக அவன் முகத்திலும் வேலையின் சோர்வு. அதன் நிழலாய்ப் பேச்சில் ஒரு சலிப்பு. அவள் பேச்சின் செருக்கிற்குக் கடிவாளம் கட்டி நிறுத்துவதுபோல, அவன் இறுகிய பார்வை பிடித்து இழுத்து நூலாய் நிற்கும். இந்த ஆறுமாதங்களில் இரண்டு மூன்று தடவைகள் இப்படி நேர்ந்து விட்டன.

விடிந்து விட்டது. விசுவநாதன் தம் பெண் ஜெயஸ்ரீயுடன் காலாற நடந்துவரப் புறப்பட்டு விட்டார். வாசலில் புள்ளி வைத்துக் கோலம் போட்டுக்கொண்டிருந்தாள் சுமித்ரா. கோலக் கோடுகள் போல, நினைவுகள் சுற்றிச் சுற்றி வந்தன. புள்ளி வைக்கும் விரலாய் மனம் தயங்கித் தயங்கி நின்றது.

காலையிலேயே காபி சாப்பிட்டு விட்டு ராகவன் கிளம்பிப் போய்விட்டான். நேர்ப்பார்வையாக ஒரு சந்திப்புக்கூட இல்லை. மனம் விட்டு வராத பேச்சு. வீடெங்கும் அரசாண்ட நிசப்தம். அவளுக்கும் எதுவும் பிடிக்கவில்லை. பெயருக்கு ஒரு சமையலை முடித்து விட்டுப் படுத்துக் கொண்டிருந்தாள்.

வீட்டில் வேலை செய்ய வழக்கமாகக் காலையிலேயே வந்துவிடும் ரத்னாவைக் காணோம். சற்றுத் தாமதமாகவே வந்து நின்றான், அவளுடைய கணவன் ஆறுமுகம். வாய் திறவாமல்



கடைவாயில் புகையிலையை அதக்கிக்கொண்டு அவனே அவள் செய்ய வேண்டிய காரியங்களை எல்லாம் மளமளவென்று செய்யத் தொடங்கினான்.

வேலை செய்து கொண்டே தன் மனைவியைப் பற்றிச் சொன்னான், அவளுக்கு உடம்பு முடியவில்லை என்று அவன் ஆஸ்பத்திரிக்கு அழைத்துக்கொண்டு போனதைப் பற்றி. மடியில் பிரித்து வைத்த பத்திரிகையைப் பார்த்துக் கொண்டே சுமித்ரா அதைக் கேட்டாள். கண் வரி நழுவாமல் படிக்க முயன்றது; மனம் தடுமாறிக்கொண் டிருந்தது. அந்தப் பரிவும் அக்கறையும்! இன்று அவளை வேலை செய்ய விடாமல் அவன் வந்து முகம் கசங்காமல் ஈடுபடுகிற நுதாப உணர்ச்சி!

''அவளுக்கு என்ன உடம்பு ஆறுமுகம்?''

துணியை அலசிக்கொண் டிருந்தவன் தலை நிமிர்ந்தான். அவன் முகத்தில் சந்தோஷமும் திருப்தியும் குழம்பி நின்றன. பெருமையை மறைத்துக்கொள்ளத் தெரியவில்லை அவனுக்கு.

''உங்க மாதிரி தாங்க'' என்று வெட்கத்துடன் இழுத்தாற்போலச் சொன்னான்.

''ஓ!'' என்று சுமித்ரா மீண்டும் படிக்கத் தொடங்கினாள். கருத்தோட்டம் நின்று விட்டது. நினைவு ஒரே கீறலில் ஓடிக்கொண்டிருந்தது. அவளுக்குத் தெரியும்: ஆறுமுகம் கோபக்காரன். திடீரென்று எழும் வேகத்தில் அடிகூட விழும். பேச்சுச் சில சமயம் தெறித்தாற்போலக் கொட்டிவிடும். ஆனால் அவளுக்குத் தெரிந்த அந்த உருவம் வேறு; இப்போது பார்க்கும் உருவம் வேறு. நெஞ்சுள் ஏதோ இளகிப் புரண்டது. அவள் மேல்தான் பிசகோ?

பிற்பகல் நேரம். ரத்னு வேலைக்கு வந்துவிட்டாள். கண்களில் லேசான ஆயாசம் தெரிந்தது. சுமித்ரா மிகுத்துப் போட்ட சாப்பாட்டைக்கூடத் தொடவில்லை.

''இப்போ உடம்பு தேவலையா?'' என்று கேட்டாள் சுமித்ரா. 'என்னிடம் எதையும் சொல்லவில்லையே?' என்று கேட்பதைப் போலக் கண் பார்த்தது.

''கொஞ்சம் தேவலாம். அவுரு தூங்கிக்கிட்டிருந்தாரு. நானே செய்துட்டுப் போகலாம்னு வந்தேன்.''

''காலையில் ஆறுமுகம் சொன்னான். அவன் குரலும் பேச்சும் வேடிக்கையாக இருந்தன.''

''எல்லாமே வேடிக்கைதாம்மா. ஒரு சமயம் எரிஞ்சு விழுவாரு. ஒரு சமயம் குழைஞ்சு போயிடுவாரு. ருசியறிஞ்சு சோறு போடுற மாதிரி மனசறிஞ்சு போவணும். அவ்வளவுதான். எப்பவும் முரட்டு நடை இல்லீங்களே? நாம ஜதையா கால்நடை போட்டுப் போகப் பழகினாச் சரிதான்.''

''உன்னைக் குறை சொல்லமாட்டானா?''

''சொல்றதுதான். காலையிலேகூடத் தூங்குமூஞ்சின்னு திட்டிப்புட்டுத்தான் வந்தாரு. ஆனா எல்லா வேலையும் அவரே செய்யலீங்களா? இப்போ அவர் தூங்கிக்கிட்டிருக்கிறதைப் பார்த்தேன். 'ஐயோ பாவம்னு நானே எப்படியோ எழுந்து வந்திட்டேன்.''

''கொஞ்சம் சாப்பிடேன்.''

''வாண்டாம்மா. எடுத்து வையுங்க. எனக்குப் பிடிக்கலே. வூட்டுக்குக் கொண்டு போனா அத்தான் சாப்பிடும்.''

சுமி அவளையே பார்த்தாள். அவள் என்ன நினைத்துக்கொண்டாளோ? சிரித்துக் கொண்டே, ''பசிக்கலீங்களே? என்ன செய்யுறது? ஒங்க மாதிரிதான்'' என்றாள்.

பளீரென்று தேய்த்துவைத்த பாத்திரத்தைப் போல, அவள் மனத்தையும் கழுவி எடுத்து வைத்த மாதிரி இருந்தது. 'என் மாதிரியா?' என்று கேட்டுக் கொண்டாள். முதல் நாள் இரவு நடந்ததைப் போல ஒரு சம்பவம் அவர்களிடையே நடந்திருந்தால்? அவள் என்ன சொல்லி இருப்பாள்?

'என்னை வச்சிருக்கிற லட்சணத்துக்கு ஒனக்கு ஏது வாய்?' என்று அவள் பொருமி இருப்பாள். 'சீ வாயை மூடு!' என்று ஆறுமுகம் ஒரு போடு போட்டிருப்பான். ஆனால் அத்துடன் பேச்சு முடிந்திருக்கும். அப்புறம் அவர்களிடையே இதைப் போல ஒரு திரை கனத்து இறங்கி இருக்காது.

ராகவனும் அவளைச் சமாதானப்படுத்தவே விரும்பினான். ஏமாற்றத்தை மறந்து அவளுடன் இழையும் ஓர் ஆவலைக்கூட அவனிடம் அவளால் புரிந்துகொள்ள முடிந்தது. ஆனால் அவள் விட்டுக் கொடுக்கவில்லை. ஏதோ ஒரு வேகம், அவனை மறுக்கும் எதிரலையின் வேகம். இப்போது அதில் என்ன திருப்தியை அவள் அடைய முடிந்தது?

தன்னுடைய மனக்குறையை மட்டுந்தான் அவள் பார்த்தாள். கணவனின் மனக்குறை அவள் கண்ணுக்குப் படவில்லை. பகல் முழுவதும் வேலை செய்துவிட்டு, அந்தச் சிரமத்தை அவன் எடுத்துச் சொன்னபோது கூட, அவள் புரிந்து கொள்ள முன்வரவில்லை. எதிர்த்துப் பதில் பேசுவதில்தான் அவள் முனைந்திருந்தாள். ராகவன் கசந்து கொண்டு வெளியில் போனபோதுங்கூட அவள் அவனைச் சமாதானப் படுத்தவில்லை. அந்த எண்ணத்தில் மாலையில் பூத்த பூப்போல நெஞ்சு கசிந்தது இப்போது.

ராகவன் பஸ்ஸில் திரும்பி வந்துகொண்டிருந்தான். அன்று முழுவதும் வீம்பாக அசையாமல் உட்கார்ந்து ஆபீஸர் சொன்னது அவ்வளவையும் திருப்திகரமாகச் செய்து முடித்துவிட்டான். பக்கத்து வீட்டிலிருந்த ரமணி எழுந்து வந்து அவன் முதுகில் தட்டிக் கொடுத்தபோது மணி ஐந்து.

''புறப்படு. இன்றைக்கு இவ்வளவு போதும். ஆபீஸர் நிச்சயம் நல்ல சர்ட்டிபிகேட் கொடுத்து விடுவார்'' என்றான்.

''நான் அதற்காக வேலை செய்யவில்லை'' என்று நிமிர்ந்தான் ராகவன்.

''பின்னே எதற்காக?''

''என்னாலும் செய்து விடமுடியும் என்று காட்டுவதற்காக; அவர் மறுபடி என்னிடம் அந்த மாதிரி பேசக்கூடாது என்பதற்காக.''

ரமணி சிரித்துக் கொண்டான். ''இன்று செய்வதை நேற்றே செய்திருக்கலாம். இந்த வம்பு அவசியமே இல்லை. வேலைக்கு என்று வந்து தாலி கட்டிக் கொண்டாகி விட்டது. எதிர்த்துப் பேசி என்ன பலன்?''

''தாலி கட்டிக் கொண்டவள் கூடக் கேட்டுக்கொண் டிருப்பதில்லை. எதிர்த்துப் பேசி விடுகிறாள்.''

''சொந்த அநுபவமோ?'' என்று சிரித்தான் ரமணி. ''என்னுடைய 'பிலாஸபி', பொறுமையாக விட்டுக் கொடுத்து விட்டுப் போய்விடுவதுதான். எதிர்த்துச் சண்டை போடலாம்; நம்முடைய சாமர்த்தியத்தைக் காட்டலாம். ஆனால் ஜயித்த பிறகும் அந்த உறுத்தல் கூடவே இருந்து கொண்டே இருக்கும். வேவுகி

காரியிடம் அப்படி நடந்து கொண்டு விட்டால் அப்புறம் நிம்மதியாகவே இராது. வீட்டுக்குப் போனாலும் அமைதி கிடைக்காது. கணவனிடம் சண்டை போட்டுக் கொண்டு மனைவி ஜயித்து நிம்மதியாக இருக்கமுடியுமா? அதைப் போலத்தான்.''

'ஃபைலை'க் கட்டி வைத்துவிட்டு எழுந்தான் ராகவன். அப்புறம் ரமணி பேசிக்கொண்டே வந்தான். ஆனால் அந்தப் பேச்சு எதுவும் அவன் மனத்தில் கால் ஊன்றவில்லை. அவன் எடுத்துக் காட்டிய உவமையிலேயே மனம் இழை பாய்ந்துகொண் டிருந்தது. ஆபீஸ் வேலையும், வீட்டில் தாம்பத்தியமும் ஒரே மாதிரிதான். நிம்மதி வேண்டும் என்றால் எதிரலைகளுக்கு இடம் இல்லை.

பஸ் அடையாற்றுக்கு வந்து விட்டது. இன்னும் இரண்டு ஸ்டாப். மணி ஆறு ஆகவில்லை. பக்கத்திலேயே ஏதாவது ஒரு சினிமாவுக்குப் போகலாம். அதற்கு நேரமாகவில்லை.

சுமித்ரா உள்ளே காரியமாக இருந்தாள். அவன் கால் செருப்பொலி கேட்டதும் வெளியே வந்தாள். முகம் கழுவிக் கொள்ளக்கூட இல்லை. வீட்டு வேலையில் நைந்து போன உடம்பைப் போலக் கசங்கிப் போன புடைவை. முன்றானையில் ஈரக் கையைத் துடைத்துக்கொண்டு உள்ளே போய்விட்டாள். ஏதோ பேச வந்தவள்தான்; ஏதோ ஒன்று அவளை அப்படிச் சகஜமாகப் பேசவிடாமல் தடுத்து விட்டது.

அவன் அளந்து பேசச் சொன்னதனாலா? நெஞ்சில் எங்கேயோ இடித்தது.

அவள் டிபனை மேஜைமேல் வைத்திருந்தாள். 'வாஷ்பேஸினி'ல் கையைக் கழுவிக் கொண்டவன், ஈரக்கையை அந்தப் பக்கமாக வந்த சுமித்ராவின் புடைவைத் தலைப்பைச் சட்டென்று இழுத்துத் துடைத்துக் கொண்டான். அவள் 'பக்'கென்று சிரித்து விட்டாள். நேருக்கு நேர் அவன் முகத்தை அப்போதுதான் அவள் பார்த்தாள். காலையில் அங்கே தெரிந்திருந்த வெறுமை இப்போது அங்கே இல்லை. அந்தச் சிரிப்பில் ஒரு மலர்ச்சி தெரிந்தது.

''இன்றைக்கு ஒரு படத்துக்குப் போகலாம். கிளம்பு. நேரமானால் டாக்ஸியிலேயே போகலாம். நான் இன்றைக்கு 'ரெடி'யாக வந்திருக்கிறேன்'' என்றான் ராகவன்.

''நானும் ரெடிதான். ஆனால் சினிமாவுக்குப் போவதற்கு இல்லை. பீச்சுக்குப் போய் உட்கார்ந்திருக்கலாம். இன்றைக்கு அங்கே நிலா வெளிச்சம் ரொம்ப நன்றாக இருக்கும். நிதானமாகப் பேசிக்கொண் டிருக்கலாம்.''

சட்டென்று நிமிர்ந்து பார்த்தான் ராகவன். அந்தக் குரல், பார்வை, புன்னகை எல்லாமே நிலா வெளிச்சமாக, நெஞ்சைத் தொடும் குளுமையாகவே தோன்றின, அவனுக்கு. புழுக்கம் மறையக் குளிர்ந்து படர்ந்த தென்றல்.

''என்ன மாறுதல் இது?'' என்று கேட்கத் தோன்றியது அவனுக்கு. 'பீச்'சில் உட்கார்ந்து பேசும்போது கேட்டுக் கொள்ளலாம் என்று நினைத்து அப்படியே விட்டுவிட்டான். வீட்டில் நடந்ததைச் சொல்ல நினைக்கும் கற்பனையை உருவாக்க எண்ணியபடி, காபி எடுத்து வர உள்ளே போனாள் சுமித்ரா. ★

# கூண்டுக்கிளி



வி.முத்துசாமி

மணி ஆறடித்து விட்டது. இன்னும் ஒரு மணி நேரத்தில் ராமமூர்த்தியும் அவர் கம்பெனியின் வெளிநாட்டுத் தொழில் வள நிபுணர் ஜான்ஸனும் விருந்துக்கு வந்து விடுவார்கள். சமையல்கார மாமி ஊருக்குப் போயிருந்ததால், ராமமூர்த்தியின் மனைவி அலமேலுவும், ஸ்டெல்லா மேரிஸ் காலேஜில் ஸைகாலஜி படிக்கும் அவர்கள் மகள் ரமாவுமே சமையலறையில் காரியம் செய்துகொண்டிருந்தனர்.

''இந்த ராஜு எங்கே போய்விட்டான்?'' குளிர்பதனப் பெட்டியைத் திறந்த அலமேலு குரலை எழுப்பினாள்; ''சாப்பாடு முடிந்த பிறகு கொடுக்கலாம் என்று வைத்திருந்த ஐஸ் க்ரீமை எல்லாம் சாப்பிட்டு விட்டான். தடிக் கழுதை!''

''நான் காலேஜிலிருந்து உள்ளே வரும்போது தான் அவன் டென்னிஸுக்கு ஸ்கூட்டரில் கிளம்பிப் போனான். ஏழரை மணிக்குத் திரும்புவதாகக் கத்திக் கொண்டே போனான்'' என்று ரமா கூறினாள்.

வாசல் வராந்தாவில் உட்கார்ந்துகொண்டு சுந்தர காண்டம் படித்துக்கொண்டிருந்த ராமகிருஷ்ண ஐயருக்கு இவை தெளிவாகக் காதில் கேட்டன. உள்ளே போய்த் தாம் கடைத் தெருவுக்குப் போகத் தயார் என்று அவர் சொல்ல விரும்பினாலும், சிறிது தயக்கத்துடன் பேசாமல் இருந்தார். அந்த வீட்டில் அவருக்கு உள்ள அந்தஸ்தும், நிலைமையும் பற்றி அவருக்கே நன்றாகத் தெரியும். அவர் வேலையிலிருந்து ஓய்வு பெற்றுத் தம் பிள்ளை ராமமூர்த்தியுடன் வந்து இருக்க ஆரம்பித்துப் பத்து வருஷங்கள் ஆகிவிட்டன. வந்த முதல் இரு வருஷங்களுக்கு அவருக்கும், அவர் மனைவி காமாட்சிக்கும் அந்த வீட்டில் மதிப்பு இருக்கத்தான் இருந்தது. மாதம் மாதம் தவறாமல் வரும் பென்ஷன் பணந்தான் சல்லிசாக வீட்டுச் செலவுக்குச் சென்றுவிட்டதே! பின் மதிப்புக்கு என்ன குறைவு? ஆனால் இது கடவுளுக்குப் பொறுக்கவில்லை போலும்! குருவாயூருக்கு க்ஷேத்திராடனம் செய்யப் போகும் போது பஸ் விபத்தில் காமாட்சி மரணமடைய, ராமகிருஷ்ண ஐயரும் ஆஸ்பத்திரியில் பலத்த காயத்துடன் ஆறு மாதம் தங்க வேண்டி வந்தது. அவர் பூரண குணமடைந்தார் எனினும், ஆஸ்பத்திரி, டாக்டர், மருந்து என்று செலவுக்கு அவருடைய மொத்தப் பென்ஷன் தொகையையும் சமயத்தில் வாங்கி விழுங்க நேரிட்டது. வீட்டிற்கு வந்த பிறகு அவருக்குக் கிடைக்கிற உபசாரம் சிறிது சிறிதாக மாறி வந்தது. 'தாத்தா, பாட்டி' என்று வளைய வளைய வந்து கொண்டிருந்த ரமாவும், ராஜுவும், வயதானதாலோ என்னவோ இப்போது நாளுக்கு ஒரு முறை 'ஹாய்' என்று பத்தடி தூரத்திலிருந்து கத்திக் கொண்டே செல்வார்கள்; மற்றப்படி பேச்சு வார்த்தை இல்லை. விடியற்காலையில் 'வாக்'கிலிருந்து திரும்ப வரும்போது காபியுடன் காத்துக்கொண்டிருந்த அலமேலுவோ, இப்போது காலையில் புட்டியுடன் 'டிப்போ பால் க்யூவிற்கு' அவரை அனுப்புகிறாள்; காப்பி அப்புறந்தான். மற்றும் சில எடுபிடி வேலைகளும்—மாலையில் பால் க்யூ, ரேஷன் கடை, கறிகாய் மார்க்கெட்—அவர் 'டிபார்ட்மெண்டுக்கு'க் காத்திருந்தன. முன் கோபமுள்ள அலமேலுவுக்கு அவரிடம் சற்றும் மரியாதை இல்லை என்று சொல்ல முடியாது; எனினும், பெண் கல்யாணத்தையும் பிள்ளையின் படிப்பையும் முக்கியமாகக் கருதும் அவளுக்கு ராமகிருஷ்ண ஐயர் ஓர் அநாவசியச் செலவாக அடிக்கடி தோன்றுவார். அதை வார்த்தைகளாலும் அவர் காதில் விழும்படியும் அவள் சொன்னதுண்டு. அவர் பிள்ளை ராமமூர்த்தி தம் அப்பாவைப் பற்றி அதிகம் கவலைப்படுவதே இல்லை.

''ஏம்மா! தாத்தாவைப் போகச் சொல்லேன். ஒரு நாள்தான் ராமர் கோவிலுக்குப் போய் அரட்டை அடிக்காட்டால் என்ன?'' இது பேத்தி ரமா. காலேஜில் 'டிபேட்டிங் ஸொஸைட்டி'யின் காரியதரிசியான அவளுக்கு, பகவத் கீதையைப் பற்றி அவர் சிநேகிதரான ஸம்ஸ்கிருத பண்டிதர் சங்கர ஐயருடன்

கோவிலில் பேசுவது வம்பாகப் போயிற்று. சுய மரியாதை இன்னும் காற்றில் பறந்து போகாமல் இருப்பதற்காக, அவர் எழுந்து உள்ளே போய், "நான் கடைத்தெருவுக்குப் போய் வருகிறேன். ஐஸ் கிரீம்தான் வேண்டுமா, இல்லை, ஜிலேபி பிழியலாமா?" என்றார்.

அலமேலு, "காதில் கேட்டுக்கொண்டுதானே இருந்தீர்கள், பேசியதை எல்லாம்? ஐஸ்கிரீம் மட்டுந்தான், பேக்கரியில் கணக்கில் வாங்கி விடுங்கள்" என்றாள். என்றைக்கும் இல்லாமல் குனிந்து நிமிர்ந்து சமைத்ததன் அலுப்பு அவளுக்கு.

"அதற்கில்லை; ஏதோ சீமைக்காரன் வருகிறானே அவனுக்கு நம்ம ஊர்த் தித்திப்புப் பக்ஷணம் போட்டால் சரியாயிருக்கும், ஐஸ்கிரீம் அவனுக்குப் பழக்கப்பட்டதாயிருக்கும் என்பதற்காகக் கேட்டேன்" என்று ராமகிருஷ்ண ஐயர் சொன்னார்.

"எனக்குத் தெரியாதா இது? சமையல்கார மாமி இல்லாத போது யார் பக்ஷணம் பண்ணுவது இப்போ? நீங்க வந்து ஜிலேபி பிழியுங்கள்" என்று அலமேலு இரைந்தாள்.

ராமகிருஷ்ண ஐயர் பதில் பேசவில்லை. இது மாதிரி அவர் ஏதாவது யோசனை சொன்னாலும் இளக்காரமாகப் பதில் கிடைப்பது சகஜந்தான். அதனால் கூடிய மட்டும் அவர் அதிகம் பேசுவதில்லை; எனினும், அவரும் அந்த வீட்டில் வசிக்கும் ஒரு மனிதர்தாமே? சில சமயம் பேச வைத்து விடும். கால் செருப்பை மாட்டிக் கொண்டு அவர் கடைவீதிக்கு மெள்ள நடந்து சென்றார்.

நுங்கம்பாக்கம் சென்று கொண்டிருந்த காரில் ராமமூர்த்தியும் ஜான்ஸனும் தங்கள் நினைவுகளில் ஆழ்ந்திருந்தனர். ஜான்ஸன் சென்னைக்கு வேலை விஷயமாக வந்து ஒரு மாதமாய்விட்டது. அதுதான் சென்னையில் அவர் தங்கும் கடைசி நாள். போவதற்கு முன் அவருக்கு வீட்டில் சமைத்த சாப்பாடு போடுவதற்காக ராமமூர்த்தி அழைத்திருந்தார். ஜான்ஸன் இந்தியாவிற்குப் புதியவரல்ல என்றாலும், இந்தியக் குடும்ப வாழ்க்கையை அருகிலிருந்து பார்த்தறிய வாய்ப்புக்கள் அவருக்கு அதிகம் கிடைத்ததில்லை. அதிலும் எல்லாத் தலைமுறையும் சேர்ந்து வாழும் குடும்பங்களைப் பற்றி அவர் படித்திருக்கிறாரே தவிர, நேரில் அறிந்ததில்லை. ராமமூர்த்தியின் தலைமை அதிகாரி, கல்யாணம் ஆகாதவர். ஆதலால் இந்தப் பொறுப்பை ராமமூர்த்தியின் தலையில் கட்டினார்.

அன்று தம் மனைவி எலிஸபெத்திடமிருந்து வந்திருந்த கடிதத்தை மறுபடியும் படிப்பதற்காகப் பிரித்தார் ஜான்ஸன்.

லாஸ் ஏஞ்ஜல்ஸ்,
காலிபோர்னியா,
25-3-'76.

டார்லிங்,

உங்கள் வேலை நன்றாக நடந்திருக்கும் என்று நம்புகிறேன். உங்களுக்குச் சாப்பாடு ஒத்துக்கொள்கிறதா? மிகவும் உஷ்ணமான மதராஸ் சாப்பாடு சாப்பிட வேண்டாம்.

இன்று 'பாரடைஸ் முதியோர் விடுதி'க்குக் குழந்தைகளை அழைத்துக் கொண்டு, உங்கள் அப்பாவைப் பார்க்கச் சென்றேன். அவர் அறையில் இன்னும் மூன்று பேர்கள் இருக்கின்றனர். அப்பாவையும் விட வயோதிக நிலை அடைந்தவர்களாகத் தோன்றுகிறார்கள், அவர்களைப் பார்த்தால். சாப்பிடும் கூடம், இளைப்பாறும் இடம் எல்லாம் சௌகரியமாக இருக்கின்றன. ஒவ்வொரு படுக்கையிலும் டெலிவிஷன், ரேடியோ பொருத்தப்பட்டிருக்கின்றன. அவருக்கு இந்த விடுதியில் இடம் கிடைத்தது நமது அதிர்ஷ்டந்தான்.

இவ்வாறு இருந்தும், அப்பா திருப்தி இல்லாதவர் போலத்தான் பேசுகிறார். 'நான் என் சுதந்தரத்தை இழந்து விட்டேன்' என்கிறார். 84 வயதில், தனிமையாக இருப்பதில் இவருக்கு என்ன சுதந்தரமோ தெரியவில்லை. போகப் போகப் பழகிவிடும் என்று பிரார்த்தித்துக் கொள்ளவேண்டும். விடுதி மேட்ரனும் அப்பாவை எல்லா 'ஸோஷியல்'களிலும் கலந்து கொள்ள வைக்க முயற்சி பண்ணுவதாகச் சொல்லியிருக்கிறார். நிலைமை சரியாகிவிடும் என்று நம்புவோம். அன்பு.

லீஸா."

"ஊரில் எல்லாரும் சௌக்கியந்தானே?" ராமமூர்த்தியின் கேள்வி ஜான்ஸனை இவ்வுலகிற்குக் கொண்டு வந்தது.

"சௌக்கியந்தான்; நன்றி!" ஜான்ஸனிடமிருந்துப் பதில் வந்தது. ஆனால் உடனே தம் மனத்தைக் கடந்த சிலகாலமாக அரித்துக் கொண்டிருந்த தம் தகப்பனார் விஷயத்தைப் பற்றி ராமமூர்த்தியிடம் சொன்னால் என்னவென்று தோன்றிற்று. "என் அப்பாவைப் பற்றி மனைவி கடிதம் எழுதியிருக்கிறாள்" என்றார்.

ராமமூர்த்திக்கு என்ன பதில் சொல்லுவது என்று தெரியவில்லை. ஆனால் அவர் ஜான்ஸனைக் கூர்ந்து பார்த்தவிதம் அவரை மேலும் பேசும்படி செய்தது.

"அது நீண்ட கதை" என்று ஜான்ஸன் இழுத்தார்.

"சொல்லுங்கள், கேட்கிறேன்."

அவருக்கு வயது எண்பத்தாறு; எனினும் உடம்பில் வலுவும் மனத்தில் திடமும் இருந்தன. தினமும் தம் வீட்டில் தோட்ட வேலை செய்தும், வாரத்தில் இருமுறையாவது 'கோல்ப்' விளையாடியும் வந்துகொண்டிருந்தார். சொந்தச் சமையல்தான். அறுபது வருஷ மண வாழ்க்கைக்குப் பிறகு அவருடைய மனைவி இரண்டு வருஷத்துக்கு முன்தான் காலமானார். இரண்டு மாதத்துக்கு முன் அவர் குளியலறையில் வழுக்கி விழுந்தார். எலும்பு முறிந்து நன்றாக அடிபடவில்லை. எனினும் அவர் இரண்டு மாதம் ஆஸ்பத்திரியில் இருக்க நேரிட்டது.

அப்போதிலிருந்து அவர் தேகநிலை சற்றுத் தளர்ந்தே இருந்தது. தம் வீட்டிலேயே இருந்து கவனித்துக்கொள்ள ஓர் ஆளைப் போடுமளவுக்கு ஜான்ஸனுக்குப் பணவசதி இல்லை. ஆதலால் ஜான்ஸன் தம் தகப்பனாரிடம் வயது வந்தோர் விடுதிக்குச் சென்று இருக்குமாறு பல முறை வற்புறுத்திய பிறகே அவர் செல்வதற்கு ஒப்புக்கொண்டார். அங்கு அவர்

சந்தோஷமாக இருக்க வேண்டும் என்பதே இப்போது ஜான்ஸன் தம்பதியின் கவலை.

''ஏன், உங்கள் தகப்பனர் உங்களுடன் வீட்டிலேயே வந்து இருக்க முடியாதா?'' என்று கேட்டார் ராமமூர்த்தி.

''அது கொஞ்சம் கஷ்டம்'' என்று ஜான்ஸன் சொன்னர்; ''எனக்குப் பள்ளிக்குப் போகும் வயதில் மூன்று குழந்தைகள். அவர்களைச் சமாளித்துக் கொண்டு, வேலைக்கும் போய்வரும் என் மனைவிக்கு இன்னும் அதிக வேலை கொடுப்பது சரியென்று எனக்குப் படவில்லை. நான் சொல்லுவது உங்களுக்கு அதிர்ச்சியைத் தருகிறதா?''

''அதிர்ச்சி ஒன்றும் இல்லை. அமெரிக்காவின் பழக்க வழக்கங்கள் வேறுவிதம் என்று தெரிந்ததுதான். நீங்கள் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டீர்கள் என்றுல் ஒரு சிறிய கேள்வி கேட்கிறேன்.''

''கேளுங்களேன்.''

''உங்கள் மனைவி வேலைக்குப் போகத்தான் வேண்டுமா? வீட்டில் இருந்தால் குழந்தைகளையும் கவனித்துக் கொண்டு உங்கள் அப்பாவையும் பார்த்துக் கொள்ள முடியும் அல்லவா? எங்களது வழக்கப்படி அது அவளுடைய கடமை; சமூகம் அதை அவளிடமிருந்து எதிர் பார்க்கும்'' என்றுர் ராமமூர்த்தி.

''என் சம்பளத்திலேயே என் குடும்பம் நன்ருக வாழ முடியும் என்பது உண்மைதான். ஆனுலும் அதை நான் என் மனைவியின் நோக்கிலிருந்து பார்க்கவேண்டும். எங்களுக்கு முதல் குழந்தை பிறக்கும் வரை அவள் சமூக வேலை செய்து கொண்டிருந்தாள். பிறகு குழந்தைகளைக் கவனிக்க வேண்டியிருந்ததால் கடந்த பதினெட்டு வருஷங்களாக வீட்டு வேலையில் ஈடுபட்டிருந்தாள். இப்போது கடைசிச் சிறுவனுக்கு வயது பதினலு. எல்லாரும் வளர்ந்து விட்டதால் அவள் திரும்பவும் சமூக வேலைக்குப் போக ஆரம்பித்து நான்கு மாதமே ஆகின்றன. என் தகப்பனரைப் பார்த்துக் கொண்டு வீட்டில் இரு என்று அவளிடம் எப்படிச் சொல்லுவது? அவளுக்கு என்று ஒரு வாழ்க்கை இருக்க வேண்டாமா?'' என்று ஜான்ஸன் பேசினர்.

'தனக்கு மிஞ்சித் தர்மம்' என்று ராமமூர்த்தி நினைத்துக் கொண்டார். ஆனல் சொல்லவில்லை.

கார் ராமமூர்த்தியின் வீட்டு வாசலில் வந்து நின்றது. தாமே ஜான்ஸனைக் காரில் அழைத்துச் செல்வதாகக் கூறி ராமமூர்த்தி சாரதியை வீட்டுக்கு அனுப்பிவிட்டார்.

ஜான்ஸன் சமையலை வெகு நன்ருக ருசித்துச் சாப்பிட்டார். அதிகம் காரம் இல்லாமல் இருந்ததைப் பற்றி அவர் ஆச்சரியப்பட்டார்.

''எங்களூரில் உள்ள இந்தியன் ரெஸ்டாரன்டில் சாப்பிடச் செல்வது ஒரு தனி அநுபவம். மிக அதிகமாகக் காரம் போடுவதால், பாதி சாப்பிடும்போதே தலையெல்லாம் அரிக்கும். குளிர்பதன அறையிலும் முகமெல்லாம் வேர்த்துக் கொட்டும்'' என்று ஜான்ஸன் சிரித்துக் கொண்டே சொன்னர். அலமேலுவிடமிருந்து பதார்த்தங்களை எவ்வாறு செய்வது என்று கேட்டுத் தெரிந்து கொண்டார்.

அலமேலு அவரிடம் ஐஸ்கிரீமைக் கொண்டு வந்தபோது வேண்டாமென்று சொல்லிவிட்டார். சாப்பாடு முடிந்து கூடத்துக்கு வரும் போது, ஜான்ஸனுக்கு ஒரு 'பீடா' கொடுக்க



லாம் என்று ராமமூர்த்திக்குத் தோன்றியது. வீட்டிலோ ஒருவருக்கும் வெற்றிலை பாக்குப் போடும் பழக்கம் இல்லாததால் கடைக்குப் போய்த்தான் வாங்கி வரவேண்டும் என்று தெரிந்தது.

''ராஜு எங்கே, இன்னும் வரவில்லையா?'' என்று அலமேலுவைக் கேட்டார்.

''அவன் சிநேகிதன் வீட்டிலிருந்து போன் பண்ணினன். சினிமாவுக்குப் போயிருக்கிறான்'' என்றாள் அலமேலு.

என்ன செய்வது என்று தோன்றவில்லை. எனினும் ஜான்ஸனிடம் 'பீடா'வின் மகிமையைப் பற்றிச் சொல்லி, வீட்டுக்குப் போகும் வழியில் வாங்கித் தருவதாக ராமமூர்த்தி பேசிக் கொண்டிருந்தார். கம்பெனி விஷயங்களைப்பற்றியும் பொது விஷயங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தனர். நிமிஷங்கள் பல கழிந்தன.

''இந்தா ராமு, பீடா வாங்கி வந்திருக்கிறேன்'' என்று நான்கு பீடாக்களுடன் ராமகிருஷ்ண ஐயர் உள்ளே வந்தார். அவரை ஜான்ஸன் பார்ப்பது இது இரண்டாம் முறை. வீட்டிற்கு உள்ளே நுழைந்தவுடன் வராந்தா சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் தம் தந்தைக்கு ஜான்ஸனை ராமமூர்த்தி அறிமுகம் செய்துவைத்தார்.

சாப்பாட்டுக்கு முன் சிறிது நேரம் மூன்று பேரும் பேசினர். சாப்பாடு ஆரம்பிக்கும் போது, ராமகிருஷ்ண ஐயர் ஜான்ஸனிடம் தாம் இரவு வேளையில் வயசு காரணத்தால் பாலும் பழமுமே சாப்பிடுவது என்று சொல்லி, பிறகு, ''படுக்கப்போகிறேன்'' என்று விடை பெற்றுச் சென்றார்.

''உங்களுக்கு எப்படித் தெரிந்தது, பீடாவைப் பற்றி?'' என்று மகிழ்ச்சி மிக்க குரலுடன் அவருக்கு நன்றி செலுத்தி, ஜான்ஸன் ஒரு பீடாவை வாங்கிக் கொண்டார்; ''நீங்கள் படுக்கப் போவதாக அல்லவா சென்றீர்கள்?''

''ஏதோ 'டெலிபதி' என்று வைத்துக் கொள்ளுங்களேன். பீடா பிடித்திருக்கிறதா?'' என்று பட்டும் படாமலும் பதில் கூறினர் ராமகிருஷ்ண ஐயர். அரைகுறைத் தூக்கத்தில் இருந்த தம்மை அலமேலு எழுப்பிக் கடைக்கு அனுப்பினள் என்று அவரிடம் எவ்வாறு சொல்வது? இதில் ஏதோ சங்கதி இருக்கிறது என்று ஊகித்த ஜான்ஸனும் அதைப் பற்றி மேலும் கேள்வி கேட்காமல் பேச்சை வேறுபக்கம் திருப்பினர்.

விடை பெற்றுக் கொள்ளும் நேரம் வந்து விட்டது. காரை ஷெட்டிலிருந்து எடுக்கச் சென்ற ராமமூர்த்தி திரும்பிக் கோபத்துடன் உள்ளே வந்தார்.

''அந்த டிரைவர் வாசு சுத்த மடையன். கார் ஹெட் லைட்டை அணைக்காமல் வீட்டுக்குப் போய்விட்டான். பாட்டரி தீர்ந்து விட்டது'' என்று கூறினர்: ''மன்னிக்க வேண்டும் ஜான்ஸன், கார் ஓடாது.''

ஜான்ஸன் பதற்றம் அடையாமல், ''பரவாயில்லை, நான் டாக்சியில் போய் விடுகிறேன்'' என்றார்.

ராமமூர்த்தி யோசித்துக் கொண்டே, ''அதுதான் சரி; ஆனல் இங்கே இந்த வேளையில் டாக்சி கிடைக்காதே; சுமார் ஒரு மைலாவது நடக்க வேண்டுமே'' என்று சொன்னர்; ''சற்று இருங்கள், வந்து விடுகிறேன்'' என்று சொல்லித் தம் தந்தையிடம் சென்று ஏதோ கூறினர். உடனே ராமகிருஷ்ண ஐயர் செருப்பை மாட்டிக் கொண்டு வெளியே செல்லப் போவதைப் பார்த்த ஜான்ஸனுக்கு அவர் எதற்காகச் செல்கிறார் என்று புரிந்து விட்டது.

''கொஞ்சம் பொறுங்கள். எனக்கு ஒன்று தோன்றுகிறது. உங்கள் அப்பாவை நீங்கள் டாக்ஸி கொண்டுவர அனுப்புகிறீர்கள் என்று நினைக்கிறேன். நானும் அவருடன் நடந்தே டாக்ஸி ஸ்டாண்ட் வரை சென்று அங்கிருந்து போகிறேன். இவ்வளவு பிரமாதமான சாப்பாட்டிற்குப் பிறகு சிறிது நடந்தால் தேவலை என்று படுகிறது'' என்று சொல்லி, ராமமூர்த்தி மறுபதில் சொல்வதற்கு முன் விடை பெற்றுக் கிளம்பி, முன்னே சென்று கொண்டிருந்த ராமகிருஷ்ண ஐயருடன் சேர்ந்து நடக்க ஆரம்பித்தார்.

சிறிது நேரம் மௌனமாக நடந்தனர். ''இந்த இருட்டு வேளையில் வழிகாட்டும் உங்கள் உதவிக்கு மிகவும் நன்றி. உங்களை இவ்வாறு சிரமப்படுத்துகிறேனே என்று வருத்தமாக இருக்கிறது'' என்றார் ஜான்ஸன்.

''அதெல்லாம் ஒன்றும் இல்லை. ஏதோ என்னல் முடிந்ததை என் பிள்ளைக்காகச் செய்கிறேன்'' என்றார் ராமகிருஷ்ண ஐயர்.

''நீங்கள் உங்கள் பிள்ளையின் வீட்டில் சந்தோஷமாக இருக்கிறீர்களா?'' என்றார் ஜான்ஸன்.

''என் வயதில் சந்தோஷம் துக்கம் என்றெல்லாம் அவ்வளவாகப் பிரித்துச் சொல்ல முடியாது. ஏதோ இவ்வளவு நாள் இருந்தாய் விட்டது. மீதி நாட்களையும் ஓட்ட வேண்டியதுதான்'' என்று சொல்லிவிட்டு, ''எதற்காக அவ்வாறு கேட்கிறீர்கள்?'' என்று பதில் கேள்வி போட்டார்.

''என்னுடைய அப்பாவை வயோதிகர் விடுதியில் சேர்த்திருக்கிறேன். ஆனல் அங்கே அவர் சந்தோஷமாக இருக்கவேண்டுமே என்ற கவலை. அதே மாதிரி வயதுள்ளவர் ஆதலால் தான் உங்களையும் கேட்டேன். மேலும் நான் இங்கு வருவதற்கு முன் கூட்டுக் குடும்பத்தைப் பற்றி வேறு விதமாக நினைத்துக் கொண்டிருந்தேன்.''

''எவ்வாறு?''

''வீட்டிற்குப் பெரியவர் எல்லாவிதத்திலும் அதிகாரம் செலுத்துபவராகவும், மற்றவர்கள் எல்லோரும் அவரிடம் மிக்க மரியாதை காட்டுபவர்களாகவும் இருப்பார்கள் என்று நம்பினேன். ஆனல் உங்கள் வீட்டில் அவ்வாறு இல்லையோ என்று தோன்றுகிறது. ஆதலால் கூட்டுக் குடும்பத்தைப் பற்றிய என் கருத்துச் சரியா இல்லையா என்று தெரியவில்லை.''

''உங்கள் கருத்துச் சரிதான். ஆனல் அந்த மாதிரி குடும்பங்கள் இருப்பது மிகவும் சிலவே. நகர வாழ்க்கையின் நெருக்கடியாலும், அவசரத்தாலும், பணமுடை காரணமாகவும், மற்றச் சமுதாயத்தின் பழக்க வழக்கங்களின் தொடர்பினலும் நடைமுறையில் இந்தக் காலத்தில் அவ்வாறு எப்போதும் இருப்பதில்லை'' என்ற ராம

கிருஷ்ண ஐயர், மேலும், ''எங்கள் அப்பா உயிருடன் இருந்த காலத்தில் அவரைக் கேட்காமல் ஒரு காரியமும் நடக்காது. ஆனால் காலம் மாறிவிட்டது'' என்றார்.

''இம்மாதிரி மதிப்புக் குறையுமென்றுதான் என் தகப்பனார் என்னுடன் தங்காமல் தனியாக வயது வந்தோர் விடுதியில் தங்குகிறார். நான் அந்த விடுதிக்கான பணமும் பிறகு கைச்செலவுக்கும் கொடுக்கிறேன். அவர் தம் சுதந்தரத்தையும் மதிப்பையும் காப்பாற்றிக் கொள்ள முடிகிறது. என் மனைவியோ, நானோ அவரை எடுபிடி ஆளாக உபயோகிப்பதில்லை. ஆனால் இவ்வூரில் அத்தகைய விடுதிகள் இல்லையென்று நினைக்கிறேன்'' என்றார் ஜான்ஸன்.

''நீங்கள் சொல்வது ஓரளவுக்குச் சரியே. இந்தியாவில் வயோதிகர்களைக் கவனிப்பது சமூகத்தின் பொறுப்பல்ல. அது அவரவர்களுடைய குடும்பங்களின் பொறுப்பாகும். ஆனால் நீங்கள் என்னுடைய நிலையைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை.''

''எப்படி?''

''நான் வீட்டு வேலைகள் செய்து வருவதற்குப் பல காரணங்கள் உண்டு. ஒரு வீட்டில் எல்லோரும் சேர்ந்து இருந்தால், ஒவ்வொருவரும் தம்மால் முடிந்த பொதுக்காரியங்களைச் செய்யவேண்டும் என்பது என் கருத்து. நான் வயதானவன் என்ற நோக்கோடு வேலை செய்யாமல் ஜடமாக உட்கார்ந்து கொண்டு இருப்பது என்னுடைய தேகத்திற்கும் நல்லதல்ல; என்னுடைய சுய மரியாதைக்கும் நல்லதல்ல. உங்களுடைய அப்பா தனியே வாழ்ந்து தம் கௌரவத்தைக் காப்பாற்றுகிறார். நான் என்னுடைய பிள்ளையின் குடும்பத்துடனேயே வாழ்ந்தாலும், வீட்டிற்கு என்னால் முடிந்தவரை உபயோகமாக இருப்பதன் மூலமே என் சுய மரியாதையைக் காப்பாற்ற முடியும்.''

''ஆனால் நீங்களாகவே முன் வந்து செய்வதற்கும், உங்களை மற்றவர்கள் வேலை செய்யுமாறு கேட்பதற்கும் வித்தியாசம் உண்டு; இல்லையா?''

''நிச்சயம் உண்டு. நான் முன்பு சொன்ன மாதிரி, என் மாதிரி தம் பிள்ளை அல்லது பெண் குடும்பத்தினரின் கருணையை எதிர்பார்த்திருக்கும் வயோதிகர்கள் பல பேர். அவர்களுக்குத் தனியே பண வசதியும் இல்லையென்றால், அவர்களுடைய நிலை இன்னும் பரிதாபத்துக்குரியதுதான். ஏதோ வீட்டிலிருந்து விரட்டி விடாமல் வேளை வேளைக்குச் சோறு போடுவதோடு, கல்யாணம் கார்த்திகைகளில் ஒப்புக்கு முகமன் கூறுவதுடன் பெற்றோருக்குத் தாம் செய்யும் கடமை தீர்ந்து விடுவதாக நினைப்பவர்கள் அதிகம். இன்றைய இந்து சமூகத்தில் வயோதிகர்களுக்கு முன்பு இருந்த கௌரவமும், மதிப்பும் இப்போது இல்லை.''

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் விடுதியில் இருக்கும் என்னுடைய அப்பாவின் நிலையே சிறந்ததுபோலத் தோன்றுகிறது'' என்றார் ஜான்ஸன்.

''அவரை நீங்கள் அடிக்கடி பார்க்கப் போவீர்களா?''

''ஏதோ முடிந்தவரை உண்டு. ஆனால் குறைந்தது மாதம் ஒரு முறையாவது ஞாயிற்றுக்கிழமை போய் இரண்டு மணி நேரம் பார்த்து விட்டு வரலாம் என்றிருக்கிறோம். மேலும், கிறிஸ்துமஸ் தினம் அன்று அவரை வீட்டுக்குக் கட்டாயம் அழைத்து வந்து பரிசுகள் வழங்குவோம்.''

''அப்படி என்றால் உங்கள் அப்பாவின் நிலைக்கும், எனது நிலைக்கும் வித்தியாசம் இல்லை என்றே தோன்றுகிறது. தங்கக் கூண்டில் அடைபட்ட கிளி போல் வைத்து அவருடைய சுய மரியாதையைக் காப்பாற்றுவதாக எண்ணி, நீங்கள் உங்களையே ஏமாற்றிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் விடுதியில் வைத்து உங்கள் அப்பாவின் தேகத்தைக் காப்பாற்றுகிறீர்கள். என் பிள்ளை வீட்டிலேயே வைத்து அதைச் செய்கிறான். இருவருமே வயோதிகர்களின் மனத்தை, சுய மரியாதையைக் காப்பாற்றுவதாகத் தெரியவில்லை.''

டாக்ஸியில் ஏறி விடைபெற்றுக் கொள்ளுமுன் ஜான்ஸன் கூறினார்: ''நான் உங்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளேன். என் மனத்தை அரித்து கொண்டிருந்த பிரச்னைகளுக்கு ஒரு புதிய கண்ணின் மூலம் பார்க்க உதவி செய்தீர்கள்'' என்றவர் பிறகு, ''இவ்வாறு நீங்கள் ஏன் உங்கள் மகனிடம் பேசவில்லை?'' என்று கேட்டார்.

''நான் அதை எவ்வாறு செய்ய முடியும்? நீங்கள் மூன்றும் மனிதர். நீங்கள் கேட்டதாலேயே என் எண்ணங்களைச் சொன்னேன். நான் சொன்னாலும் கிழத்துக்குச் திருப்தி கிடையாது என்றே எங்கள் சமூகம் சொல்லும்'' என்றார் ராமகிருஷ்ண ஐயர். பிறகு சிரித்துக்கொண்டே, ''கவலைப்படாதீர்கள். என் பிள்ளை அமெரிக்கா வரும்போது உங்கள் அப்பாவிடம் பேசச் சொல்லுங்கள்'' என்று சொல்லித் திரும்பி நடந்து சென்றார். ★

## மெய்த் தொண்டர்

இந்தியத் தேசியக் காங்கிரஸ் மாநாடு லாஹோரில் நடைபெற்றது. ஜவஹர்லால் நேரு தம் பேருரையை முடித்துக் கொண்டவுடன், தமக்கென அமைக்கப் பெற்றிருந்த கூடாரத்துக்குச் சென்றுவிட்டார். ஐரோப்பாவிலிருந்து திரும்பி வந்தவுடனேயே அவருக்குத் தலைமைப் பதவி கொடுக்கப்பட்டது. சிறிது நேரம் கழித்துச் சில தேச பக்தர்கள் ஜவாஹர்லாலின் இருப்பிடம் சேர்ந்தனர். சென்றவர் காட்சியொன்று கண்டு வியந்து நின்றனர். ஏன் தெரியுமா? அவர் பெரிய பெரிய தோற்பெட்டிகளை ஒவ்வொன்றாக எடுத்துக் கூடாரத்துள் வைத்துக்கொண்டிருந்தார். அப்போது அங்கே சென்றிருந்த ஹரிபாவூ உபாத்யாய என்பவர், ''தொண்டர்கள் யாரும் இல்லையா! நாங்கள் வேண்டுமானால் எடுத்து வைக்கிறோமே'' என்றார். புன்னகை பூத்த வண்ணம் நேரு, ''ஏன், நான் ஒரு தொண்டன் அல்லவா? இவற்றைக் காட்டிலும் பெரிய பெரிய பெட்டிகளைக்கூட என்னால் தூக்கிவைக்க முடியும்! தலைவனாகிவிட்டால் என்ன? இதெல்லாம் செய்யக் கூடாதா?'' என்று கேட்டார். அவர் குரலிலே நிறைவும் பெருமிதமும் இழைந்தன.

—வி. ஜி. சீனிவாசன், மதுரை-1



முற்போக்குடைய
இளந் தாய்மார்கள் மேலும் மேலும்
உபயோகிப்பது
விவா ஏனெனில் இதில்.

போஷாக்குக்
கொடுக்கும்
அதிகப் பால்
சக்தியைப் பெருக்கும்
கூடுதல் மால்ட்
பாட்டிலுக்கு அதிகக்
கோப்பைகள்






# ஓட்டும் பாசம்



அநுத்தமா

தீபாவளிக்கு இன்னும் இரண்டு நாட்களே இருந்தன. கடைகள் கல்யாணக்கோலம் பூண்டு காண்போர் கருத்தைக் கவர்ந்தன. லீலாவுக்கு உற்சாகம் கரை புரண்டு ஓடியது. கடைத்தெருவின் நெரிசல் அவளுக்கு இன்பமாக இருந்தது. அவள் தோழி விமலா அவள் முகத்தைப் பார்த்து ரசித்துக்கொண் டிருந்தாள்.

''தலை தீபாவளிப் பொண்ணு மாதிரி நீ துள்ளுவதும் இளிப்பதும் பார்க்க ரொம்ப வேடிக்கையாக இருக்கிறது'' என்றாள் விமலா, காரைச் செலுத்தியபடியே.

''இதுவும் ஒரு விதத்தில் தலை தீபாவளி தானே?'' என்றாள் லீலா, தன் கையிலிருந்த ஜவுளிக்கடைப் பெட்டிகளைத் தடவியபடியே.

''புதிய பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறீர்கள். செலவைச் சற்றுக் கட்டுப்படுத்துங்கள். பிறகு சிரமப்படும். இனிமேல்தானே இருக்கிறது எல்லாமும்? படிப்பு, உடுப்பு, அது, இது என்று நிறையச் செலவழியும், லீலா'' என்றாள் விமலா.

''ஆமாம், விமலா, அதெல்லாம் நன்கு ஆலோசித்தே இருக்கிறோம். மூலதனம் கொஞ்சம் முதலில் போட வேண்டாமா? அப்பத்தானே லாபம் கிடைக்கும்?''

''யோசித்துச் செய்தால் சரிதான்'' என்று தோழி ஆமோதித்தாள்.

இதற்குள் லீலாவின் வீடு வந்து விட்டது. இரண்டு சிநேகிதிகளும் சாமான்களை எடுத்துக் கொண்டு இறங்கினார்கள்.

ரவி வீட்டின் வாசல்படியிலேயே நின்று கொண்டிருந்தான். விமலா அவனிடம் ஒரு பிஸ்கோத்துப் பொட்டலத்தை நீட்டினாள். உடனே கைநீட்டி வாங்கின அவன், எட்டப் போய் நின்று பொட்டலத்தைப் பிரிப்பதில் முனைந்தான்.

''மாமிக்கு நன்றி சொல்லுடா!'' என்று பணித்தார் வீட்டு எஜமானர் பஞ்சு.

''சொல்லு, அப்பா, சொல்லு. கண்ணல்ல?'' என்று உடன் வலியுறுத்தினாள் லீலா.

தன் உருண்டைக் கண்களை உருட்டி உருட்டிப் பார்த்துக் கொண்டு நின்றானே தவிர, அசங்கவில்லை ரவி.

''பரவாயில்லை. நாளைக்கு வரும்போது சொல்லுவான். இல்லையா, ராஜா?'' என்று கன்னத்தில் தட்டிவிட்டுக் காரைக் கிளப்பிக் கொண்டு விமலா தன் வீடு கிளம்பினாள். அதற்குள்ளாகவே ரவி தன் கன்னத்தில் பதிய வந்த கைவிரல்களை முரட்டுத்தனமாகத் தள்ளிவிட்டு அவர்களுக்கு முதுகு திருப்பிக்கொண்டு நின்றான்.

லீலா அவமானத்துடன் குன்றினாள். பஞ்சுவும் அவளைப் பரிதாபமாகப் பார்த்தார். இதெல்லாம் சகஜம் என்கிற மாதிரி கண் ஜாடை காட்டிவிட்டு விமலா தன் காரைச் செலுத்திக் கொண்டு போய்விட்டாள்.

அடுப்படியில் வேலை செய்து கொண்டிருந்த தன் அக்காவைப் பார்க்கப் போனாள் லீலா. பஞ்சு டெலிபோனில் யாருடனோ பேச முன் பக்கம் போனார்.

''என்னடி லீலா, இந்தப் பிசாசைக் கட்டி மாரடிக்கணும் என்று ஆண்டவன் உன் தலையில் எழுதியிருக்கிறானே; அதைச் சொல். யார் செய்த பாவமோ?'' என்று அலுத்துக் கொண்டே தலையில் அடித்துக் கொண்டாள் தமக்கை.

''பேசவிடுடா! போன் செய்யும்போது தொந்தரவு பண்ணாதே'' என்று பஞ்சு மன்றாடுவது கேட்டது. அவர் எண்களைத் திருப்பி விட்டுப் பேச ஆரம்பிக்க வேண்டியது, உடனே ரவி பித்தானை அழுத்திப் பேசவிடாமல் தொடர்பை அறுக்க வேண்டியது.

இப்படி ஒரு போராட்டம் முன்பக்க அறையில் நடப்பதைத் தன் தமக்கை கவனிக்கிறாளோ என்று பார்க்கக்கூட லீலாவுக்குத் துணிவு இல்லை. அவள் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண் டிருந்தாள்.

''முத்து முத்தாகக் குழந்தைகள் இந்தப் பக்கமும் அந்தப் பக்கமும் இருக்க, எங்கேயிருந்தோ ஊர் பேர் இல்லாத அநாதையைச் சுவீகாரம் செய்து கொள்ள வேண்டுமென்று தோன்றிற்றே, அதைச் சொல்'' என்று தமக்கை முணுமுணுத்தாள்.

''நாதன் அற்றவர்களுக்குத்தான் நாதி அளிக்கவேண்டும்'' என்றாள் லீலா. ஆனால் அவள் குரலில் திடம் இல்லை.

''போதுமே, சமத்துப் பேச்சு! நம்மரகு அண்ணா பிள்ளை சேகர், நம் தங்கை காந்தி பிள்ளை சிவு, உன் மைத்துனர் பிள்ளை ராமு, உன் நாத்தனார் பிள்ளை சோமு—எதையாவது

தத்து எடுத்தாலும் நாளைக்கு மறுநாள் உதவும். ரத்த பாசம் பேசும். இந்த ஒட்டுப் பாசமெல்லாம் ஏட்டுச் சுரைக்காய்தான்.''

''அன்பினால் அன்பைப் பெறமுடியும் என்று நாங்கள் இரண்டு பேரும் நம்புகிறோம். ஒட்டுப் பாசம், ரத்த பாசம் என்று என்ன பேசுகிறாய், அக்கா! என் மனசைக் கலைக்காதே. நீ குறிப்பிடும் குழந்தைகளில் யாரையேனும் நான் கொண்டு வந்தாலும் அவர்கள் அப்பா, அம்மாவுடன் பகிர்ந்து கொள்ளத்தானே வேண்டும்? இவன் எனக்கே சொந்தம். யாரும் பந்தம் கொள்ளமுடியாது.''

''எங்கே பிறந்ததோ, யாருக்கு எப்படிப் பிறந்ததோ? அது வளர்ந்த விதம் எப்படியோ? குலத்துக்கேற்ற குணம் என்பார்கள். இந்தப் பிள்ளை எந்தக் குட்டையிலிருந்து வந்த சேறோ? படித்த முட்டாள்கள் நீங்கள்'' என்று முத்தாய்ப்பு வைத்து விட்டுத் தமக்கை தன் வீடு போய் விட்டாள்.

லீலா தன் வேலை முடிந்து முன் பக்கம் வந்தாள். ரவி தரையில் சாக்குக் கட்டியால் என்னவோ கிறுக்கிக்கொண்டிருந்தான். பஞ்சு எதிரே நாற்காலியில் அமர்ந்து புத்தகம் படிக்க முடியாமல் தவித்துக் கொண்டிருந்தார். ''வேண்டாமடா; தரையெல்லாம் பாழ் பண்ணாதே. யாராவது வரும்போது வீடு அசிங்கமாக இருக்கும். எழுந்திரு. இந்தத் துணியைப் போட்டுத் துடை'' என்றார் அவர்.

''எழுந்திரு. அப்பா சொல்வதைக் கேள்; உம்'' என்று அதட்டினாள் லீலா.

''வெவ்வெவ்வே'' என்றான் ரவி. அவள் பேச்சிற்குச் செவி சாய்க்கவே இல்லை.

''சரி, இன்றைக்கு உனக்கு ஐஸ்கிரீம் கிடையாது; அவ்வளவுதான்'' என்றாள் லீலா.

ரவி லட்சியமே செய்யவில்லை. இன்னமும் ஜன்னல், ரேடியோ, நாற்காலி, கதவு எல்லாவற்றிலும் கிறுக்கிவிட்டே ஓய்ந்தான்.

ஈரத்துணியை எடுத்துவந்து அத்தனை இடத்தையும் சுத்தம் செய்த லீலாவுக்குக் கண்ணில் வழியும் நீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை.

ரவி தெருப்பக்கம் தாழ்வாரத்தில் கட்டியிருந்த நாயுடன் விளையாடப் போய் விட்டான்.

''லீலா, அசடு! இதற்கெல்லாம் கண் கலங்கலாமா? கொஞ்சம் காலம் போகவேண்டும். நாற்று எடுத்து ஊன்றினால் வேர் பிடிக்க நாளாகாதா?'' என்றார் அவள் கணவர்.

''என்னவோ? எனக்கு எதிலும் நம்பிக்கை போய்விட்டது'' என்றாள் லீலா, நிராசையுடன்.

''அப்படியெல்லாம் நம்பிக்கையை இழந்து விட்டால் என்ன இருக்கிறது, சொல். நம்மால் என்ன ஆகிறது?'' என்று உற்சாகமூட்டினார் பஞ்சு.

''அதைவிட முட்டாள்தனமான சவால் இருக்க முடியாது. இந்தப் பூதத்தை வசீகரிக்க ஃப்ரிட்ஜ், டெலிவிஷன் செட், ஒரு நாய், பேய்....''

''நாய் கிட்டே போய்ப் பார். இந்தப் பேய் கூடப் பசுமாதிரி இருக்கிறது!'' என்று கூறிச் சிரித்தார் எஜமானர்.

அவர் ரசனையோடு எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார். ஏழு வயது ரவி அந்த நாயுடன் கட்டிப் புரண்டு விளையாடிக் கொண்டிருந்தான். இனம் புரியாத செல்லப் பாஷையில் என்னவோ பிதற்றினான். அந்த நாயும் அதை ஏற்றுக் கொண்டு மகிழ்ந்தது.

எட்டிப் பார்த்த லீலாவின் முகத்தில் புன்சிரிப்பு உதயமாயிற்று. ரவியின் முகத்தில் அப்படி ஓர் ஒளி வீசியது.

''நீங்கள் ஊருக்குப் போய்விட்டால் நான் எப்படி இருக்கப் போகிறேனோ தெரியாது. குடல் நடுங்குகிறது. தீபாவளிக்குள் இவன் நம் வீட்டுக்கே வத்தி வைத்துவிடுவானோ என்னவோ!''

''தைரியத்தை இழக்காதே, சே! இதென்ன கோழைத்தனம்? நாம் இரண்டு பேரும் சேர்ந்து இந்தக் காரியத்தில் இறங்கினோம். நாமே சமாளிப்போம். அவனோ குழந்தை. நிறைய உற்சாகம் இருக்கிறது. அப்பா அம்மா இரண்டு பேரும் தீ விபத்திலே ஒரே நாளில் போய் விட்டார்கள். என்ன அதிர்ச்சியோ? நம்மிடம் பிடிப்பு வர நாளாகாதா? பொறு, பொறு!'' என்றார் பஞ்சு.

மறுநாள் அவர் தம் அலுவலக வேலை நிமித்தமாக வெளியூர் கிளம்பி விட்டார். ரவியைத் தழுவிக்கொண்டு, ''ரவி, அம்மாவைப் படுத்தாதே. ஜில்லியைப் பார்த்துக் கொள்'' என்றார்.

''நீ என் அப்பாவும் இல்லே; அது அம்மாவும் இல்லே. என் அப்பா அம்மா செத்துப் போய்ட்டா.''

''சரிடா, அதுக்குத்தான் உனக்குப் புது அப்பாவும் அம்மாவும் கடவுள் தந்திருக்கிறார்.''

''ஹக்!'' என்றான் ஏளனமாக, பிள்ளை.

லீலா முகத்தைத் திருப்பிக்கொண்டாள். ''லீலா!'' என்று பஞ்சு அதட்டல் போட்டார். அவள் சமாளித்துக் கொண்டு விட்டாள்; ''போய் வாங்கோ'' என்றாள்.

அவர் ஊருக்குப் போன அன்று மாலையே ஒரு நிகழ்ச்சி நடந்தது. டெலிவிஷனில் நாடகம் பார்த்துக்கொண்டே இருந்தார்கள், ரவியும் லீலாவும். பாதி நடந்துகொண்டிருந்தபோது லீலா தன் நகைகளைக் கழற்றிப் பெட்டிகளில் வைத்தபடியே படம் பார்த்தாள். ரவி நின்ற இடத்தில் நிற்காமல், குறுக்கேயும் நெடுக்கேயும் நடப்பதும், டெலிவிஷன் யந்திரத்தின் பிருடைகளை இயக்குவதுமாகத் தொல்லை கொடுத்தான்.

வெளியே போய்விட்டு வந்த அலுப்பு ஒரு புறம், கணவன் ஊரில் இல்லாதபோது இவனைச் சமாளிப்பது எப்படி என்ற கவலை மறுபுறம், தமக்கையின் பேச்சினால் எழும்பிய வேதனை வேறு. அவன் ஆர்ப்பாட்டத்தைத் தாளமுடியாமல், ''ரவி! சும்மா இரு'' என்று அதட்டினாள் லீலா.

ரவி அவளையே ஒரு கணம் உற்று நோக்கினான். பிறகு பிசாசுத்தனமாக வெறியனைப் போல் அவள் மடியிலிருந்த நகைப் பெட்டியை எடுத்து வீசினான். அது திசைமாறி டெலிவிஷன் ஸ்கிரீன்மீது பட்டு, விரிசலை உண்டாக்கியது.

லீலா ஒரே ஒரு விநாடி தயங்கினாள். 'அன்பினால் அன்பைப் பெறலாம்; நாங்கள் வழி காட்டுகிறோம்' என்று கணவனும் மனைவியுமாக நண்பர்கள் கூட்டத்தில் சவால் விட்டதும், அநாதை ஆசிரமத்தில் இந்தப் பிள்ளையின் முகம் தம் முகச் சாயலுக்கு ஒத்திருக்கிறது என்று தேர்ந்தெடுத்ததும், அதிர

மத்தில் இவர்களை ஒரு மாதம் வைத்திருந்து பார்க்கும்படி கூறியும் கேளாமல் பதிவு ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்து முடித்ததும்—எல்லாம் நினைவில் குத்திட்டு நின்றன. வசதியற்ற அந்த அநாதைக்கு விசேஷமான சலுகைகளும் வசதிகளும் தந்தால் எளிதில் அவனைக் கவர்ந்து விடலாம் என்று திட்டமிட்டுத் தவணை முறையில் ரெஃப்ரிஜிரேடரும் டெலிவிஷனும் வாங்கினதும், அந்தப் பிள்ளை எந்தக் கட்டுக்கும் பிடிபடாமல் பிரம்மராட்சஸனாகத் திகழ்வதும்...

லீலாவுக்கு அவனை மீறி ஆவேசம் வந்து விட்டது. அவள் எழுந்து அவனை ஓர் உலுக்கு உலுக்கிவிட்டு, அருகில் இருந்த ஒரு கைத்தடியினால் விளாசிவிட்டாள். "சனியனே! என்னை ஏன்டா இப்படிப் படுத்தறே?" என்று கூவினாள்.

அந்தக் குழந்தையும் அவள் அடியைத் தாங்க மாட்டாமல் கதறிவிட்டான். அவனது இளமையான முகம் பீதியிலும் வேதனையிலும் கஷ்டப்படுவதைப் பார்த்ததும் அவளுக்கும் தாங்கவில்லை. தாய் தகப்பனற்ற குழந்தை, அதை அடித்துவிட்டோமே என்று அவள் மனம் நொந்துவிட்டது.

"என்னை ஏன்டா இப்படிப்பழி வாங்குகிறாய்?" என்று கதறியபடி அவள் தன் தலையிலும் இரண்டு அடி போட்டுக்கொண்டாள். ரவியை வாரி அணைத்துக்கொண்டாள். அவனும் திமிரவில்லை. அப்படியே விசித்து விசித்து அழுதுகொண்டே அவன் அவள் பிடியில் அடங்கினான். அவன் தூங்கும் வரையில் அவள் பேசாமல் இருந்தாள். பிறகு அவனைப் படுக்கையில் தூக்கி விட்டுவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

'அவசர புத்தி! ஒட்டாத பையனை ஒட்ட வைத்துத்தான் என்ன பயன்? இதிலிருந்து விடுபடுவது எப்படி?' என்று யோசித்து யோசித்து அவள் மண்டையே மரத்து விட்டது.

மறுநாள் காலை எழுந்திருக்கும்போதே அவள் தலை கனத்தது. வழக்கம்போல ரவியை அவளால் கவனிக்க முடியவில்லை. அவள் மனமும் அதில் லயிக்கவில்லை. ஒருவித நிராசை கசந்தது அவள் உள்ளத்தில்.

ரவி நேரம் கழித்து எழுந்து வந்தான். பல் துலக்கிவிட்டு மலங்க மலங்க விழித்துக்கொண்டு சமையலறை மூலையில் நின்றான்.

ஒரு கணம் லீலாவின் மனம் பாகாக உருகியது. அவன் தலையைச் செல்லமாகக் கலைக்க வேண்டுமென்று அவள் கை துடித்தது. ஆயினும் அவள் தன்னைக் கல்லாக்கிக் கொண்டாள். "என்னடா குடிக்கப் போறே?" என்று அவன் முகத்தை ஏறிட்டுப் பார்க்காமலே கேட்டாள்.

"காபி" என்றான் ரவி.

சாதாரணமாக இப்படித்தான் ஆரம்பிக்கும். காபி கூடாது, ஓவல்டின், போர்ன்விடா, ஹார்லிக்ஸ், பூஸ்ட் என்று வரிசையாகக் காட்டி, ஏதாவது ஒன்றைச் சாப்பிடும்படி கெஞ்சுவாள். பஞ்சு கதை சொல்லி நல்லதனப்படுத்தி, ஒன்றைத் தாமே ஆய்ந்தெடுத்து அவனுக்குக் கொடுக்கச் சொல்வார். அவனுக்காகவே அவரும் அதையே அருந்துவார். அவன் அடம் பிடித்து, பிறகு படிப் படியாக இறங்கி, பாதி சாப்பிடுவான்; பாதி மீத்திவிடுவான். இன்று லீலா ஒன்றுமே பேசவில்லை. நிறையச் சர்க்கரையைப் போட்டுக் காபி கலந்து அவன் முன் வைத்து விட்டுப் போய்விட்டாள். சற்றைக்கெல்லாம் அந்தத் தம்ளர் காலியாகிவிட்டது தெரிந்தது.

லீலா வேலைக்காரியை அழைத்து, "பூவாயி, தம்பியைப் பள்ளிக்கூடம் போவதற்குத் தயார் பண்ணு. எனக்குத் தலை வலிக்கிறது" என்று கூறினாள்.

"அது என் கிட்டே வராதே, அம்மா" என்று இழுத்தாள் பூவாயி.

"வராவிட்டால் வீட்டிலேயே கிடக்கட்டும்!" என்றாள் லீலா, சலிப்பாக.

அவள் படுக்கையில் படுத்துக்கொண்டு கண்ணை மூடிக் கொண்டாள். பூவாயி என்னவோ முணுமுணுத்தாள். லீலா செவிடாகிவிட்டாள். ஆனாலும் அவ்வப்போது ஓரக்கண்ணால் பார்வையைச் செலுத்தியபடியே இருந்தாள்.

ரவி தானாகவே குளித்துவிட்டு வந்தான். பள்ளிக்கூடத்துச் சீருடையை அணிந்து கொண்டான். ஆனால் அவனுக்கு டை கட்டிக் கொள்ளத் தெரியவில்லை. பூவாயி செய்வதறியாமல் தவிப்பது தெரிந்தது.

"இங்கே வாடா!" என்றாள் லீலா. இப்பொழுதும் அவன் அருகே வராமல் வம்பு செய்தால் என்ன செய்வது என்பதே அவளுக்குப் பெரிய பிரச்னையாக எதிரே நின்றது.

ஆனால் பணிவாக அவன் எதிரே வந்து நின்றான். அவன் டையைச் சீராகக் கட்டிவிட்டு, தலையை வாரி, முகத்தை இழுத்துத் துடைத்தாள். பவுடர் அப்பினாள்.

"பூவாயி, என்னால் இன்றைக்குக் கொண்டு விட முடியாது. நீயே போய் ஸ்கூல் பஸ்ஸில் ஏற்றிவிடு. டிபன் ஒன்றும் செய்யமுடியவில்லை. ஓட்டலுக்கு அழைத்துப் போய் இட்லி வாங்கிக் கொடு. சாப்பிட்டால் சரி, இல்லாவிட்டால் அப்படியே பள்ளிக்கூடத்துப் பஸ்ஸில் சேர்த்துவிட்டு வா" என்றாள் லீலா. மீண்டும் படுக்கையில் படுத்துக் கொண்டாள்.

ரவி பூவாயி பின்னால் கிளம்பி விட்டான். அவர்களுக்குக் காசு கொடுத்து விட்டுத் தெருக் கதவைத் தாழிட்டுக் கொண்டு லீலா படுக்கையில் விழுந்தாள். அவள் தலைவலி அதிகரித்துக் கொண்டே இருந்தது.

டெலிஃபோனை எடுத்து அவள் தன் தமக்கையை அழைத்தாள். "அக்கா, எனக்குத் தலைவலி தாங்க முடியவில்லை. தீபாவளிப் பட்சணம் வேறு செய்ய வேண்டுமே! நீ வந்து இரண்டு நாட்கள் எனக்குத் துணை இருப்பாயா?" என்று கேட்டாள்.

"உன் வீட்டுக்கா என்னை அழைக்கிறாய்? உன் பிள்ளைப் பிசாசு இருக்கிற இடத்திலே என்ன வேலை ஓடும்? உன் கணவர் வேறு ஊரில் இல்லை. நான் இங்கேயே பட்சணம் செய்து அங்கே கொண்டு வந்து தருகிறேன்" என்றாள் தமக்கை.

லீலாவுக்கு ஏமாற்றமாக இருந்தது. அக்காவுக்குத்தான் வீட்டுப் பொறுப்பு அதிகம் இல்லை. தங்கை காமுவை அழைத்தாள். "லீலா, நீ தப்பாக நினைச்சுக்காதே, அம்மா, அந்தப் பிள்ளை பிடாரியாகப் படுத்துகிறது. உனக்கு அடங்கவும் மாட்டேன் என்கிறது. என் குழந்தைகளோ அவர்கள் அப்பாவுக்குச் செல்லம். அவன் அடித்துவிட்டால் இவர் பொறு

மாட்டார். அதுதான் யோசனையாக இருக்கிறது'' என்று இழுத்த மாதிரி பேசினாள் தங்கை.

லீலாவுக்குச் சப்பிட்டு விட்டது. எதற்கும் தன் அண்ணன் வீட்டையும் அழைத்துப் பார்ப்பது என்ற நைப்பாசையுடன் எண்களைச் சுழற்றினாள். மதனி விசாலம் பேசினாள். லீலா விவரத்தைக் கூறினாள். ''நான் அங்கு வரட்டுமா?'' என்று நேரிடையாகக் கேட்டாள்.

''வீட்டைப் பூட்டிக்கொண்டு வருவது இந்தக் காலத்தில் நல்லதில்லை, லீலா. டாக்டரை வீட்டுக்கு வரவழைத்துச் சிகிச்சை செய்துகொள். பத்திரம்..என்ன?'' என்றாள் மதனி இங்கிதமாக.

''தலைவலிக்காகவா டாக்டர் என் வீடு தேடி வர வேண்டும்?'' என்று கேட்டுவிட்டு லீலா வறட்சியாகச் சிரித்தாள்.

''இரு, உன் அண்ணா பேச வேண்டுமாம்'' என்றாள் விசாலம்.

லீலாவின் அண்ணா குரல் மிதந்து வந்தது. ''இவள் சுற்றி வளைத்துப் பேசுகிறாள். நான் விஷயத்தை உடைத்துச் சொல்கிறேனே! நீ மட்டும் வருவதானால் இங்கே ஆவலோடு எல்லாரும் காத்திருப்போம். உன் அழகான பிள்ளையையும் அல்லவா கூட்டி வருவாய்? அவனை அநாதை ஆசிரமத்திலே இரண்டு நாள் விட்டு வை. கேட்டுப் பார், வைத்துக் கொள்வார்கள். பஞ்சு வந்த பிறகு அழைத்து வரலாம். நீயும் நிம்மதியாக இருந்துவிட்டுப் போ.''

''அண்ணா, நம் கடைக்குட்டி முகுந்தன் மட்டும் சாதுவா? அவனை எந்த இடத்தில் விட்டு விட்டு நீங்கள் போகிறீர்கள்?'' என்று கேட்டாள் லீலா, ஆத்திரமாக.

''அது வேறு விஷயம். எதற்கும் எதற்கும் முடி போடுகிறாய்?'' என்று எரிச்சலுடன் கேட்டு விட்டு அண்ணா தொடர்பைஅறுத்துவிட்டார்.

லீலா யோசனையுடன் அமர்ந்துவிட்டாள். சமைக்கக்கூடத்தோன்றவில்லை அவளுக்கு. தலைக்குத் தலைவலித் தைலம் தடவிக்கொண்டு பேசாமல் படுத்தே இருந்தாள்.

முதல்நாள் ரவியை அடித்ததும், பிறகு அவனை அணைத்ததும் ஞாபகம் வந்ததும் அவளுக்கே வெட்கமாகி விட்டது. தன் உடன் பிறந்தவர்கள் மூவரும் மூன்று விதமாகத் தன்னை விலக்கியதை நினைத்ததும் அவள் நெஞ்சு வலித்தது. 'இவர்களா எனக்கே எனக்கென்று ஒரு குழந்தையைச் சுவீகாரம் தருவார்களாம்? என் கஷ்டத்தை அறிந்தும் அதைப் பகிர்ந்துகொள்ள முன் வரவில்லையே!' என்று திரும்பத் திரும்ப அதே நினைவாக அசை போட்டாள். புக்ககத்தினர் யாரையும் அணுக அவளுக்குத் துணிவு வரவில்லை. கணவன் இல்லாதபோது அவர்கள் மட்டும் இசைவார்களா என்று விட்டுவிட்டாள்.

பூவாயி வந்து கதவைத் தட்டியதும் திறந்தாள் லீலா. ''என்ன, வண்டியில் யாருடனாவது சண்டை போட்டானா?'' என்று கேட்டாள்.

''இல்லையம்மா, பள்ளிக்கூடத்துப் பசங்களோடு நல்லாத்தான் பழகுது. எனக்கு டாடா கூடக் காட்டிச்சு'' என்றாள் பூவாயி.

தினமும் லீலாவை அவன் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டான். தோழர்கள் மத்தியில் எங்கே போய் ஒளிந்து கொள்வானோ? சிறு ஏமாற்றத்துடன் மனசைத் தேற்றிக்கொண்டு வீடு திரும்புவாள் அவள்.

''ஏன் அம்மா, நீங்க சமையல் செய்யலீங்களா?'' என்று பூவாயி விசாரித்தாள்.



''தலை வலிக்கிறது, பூவாயி! பேசாமல் தூங்கி எழுந்திருக்கிறேன். பிறகு பார்த்துக் கொள்வோம்.''

பூவாயி காவலுக்கு வெளிப்பக்கம் அமர்ந்து விட்டாள்.

லீலா கொஞ்சம் படுத்திருந்ததும் அவள் தலைவலி குறைந்து விட்டது. அவள் வேண்டா வெறுப்பாக எழுந்து ஒரு சாதம் வடித்தாள். மோரை விட்டுக் கொண்டு ஒரு கவளம் சாப்பிட்டு விட்டு, வெளியே வந்து பூவாயியை அவள் வீட்டுக்கு அனுப்பினாள். அவள் மனம் மட்டும் நிலை கொள்ளாமல் தவித்தது. மாலை வரை வீட்டைச் சுத்தப்படுத்துவதும், ஏதோ தைப்பதுமாகக் காலம் கழித்தாள்.

பூவாயி வரும்போதே கூக்குரல் இட்டுக் கொண்டு வந்தாள். ''அம்மா, தம்பி பள்ளிக்கூடத்தை இன்னிக்குச் சீக்கிரமே அடைச்சிட்டாங்களாம். பஸ் வந்திடுச்சு. தம்பி வரவில்லையே?'' என்று பதறிக் கொண்டே அவள் வந்தாள்.

''எல்லாம் வருவான், கவலைப்படாதே. இந்தப் பாத்திரங்களைத் தேய்'' என்று அசுவாரசியமாகப் பதில் கொடுத்தாள், லீலா.

பூவாயி தன் வேலையில் இறங்கினாள். இரவு சாப்பாட்டுக்காக மறுபடியும் சோறு மட்டும் வடித்து வைத்துவிட்டு லீலா தோட்டத்தில் ரவிக்காக மாட்டியிருந்த ஊஞ்சலில் அமர்ந்தாள். 'வீட்டுக்கு வர வழி தெரியாமல் எங்காவது தொலைந்து போகட்டும். அதுதான் சரி' என்று அசுரத்தனமான ஆசைகூடத் தோன்றியது அவளுக்கு. ஆனால், எங்காவது விபத்துக்கு ஆளானுனே என்று நினைக்கையில் அவள் உடல் நடுங்கிற்று.

பூவாயியிடம் வீட்டை ஒப்படைத்துவிட்டு நாயைப் பிடித்துக்கொண்டு பள்ளிக்கூடப் பக்கமாக நடக்க ஆரம்பித்தாள் லீலா. ஐந்து மைலுக்கு அப்பால் இருக்கும் பள்ளிக்கூடத்துக்கு நடந்து போய் எட்டமுடியுமா என்று கூட நினைத்துப் பார்க்கத் தோன்றவில்லை அவளுக்கு. ஒரு குழந்தையைக் கொன்ற பாவம் வந்து சேருமோ என்று நினைக்கையில் அவளால் யோசிக்கவே முடியவில்லை.

அவள் வேகமாக நடந்துகொண்டேயிருந்தாள். கால் வலிக்கத் தொடங்கினவுடன் வழியில் சென்ற டாக்ஸி ஒன்றைப் பிடித்துக் கொண்டு பள்ளிக்கூடம் போய்ப் பார்த்தாள். அங்கு ஆள் நடமாட்டமே இல்லை. மீண்டும் வீட்டுக்கு ஓடி வந்தாள். டாக்ஸிக்காரனை அனுப்பி விட்டுத் தன் வீட்டுப் படிகளில் ஏறப்போனாள். தன் கணவன் சொன்ன புத்திமதி அவள் மனச்சாட்சியைக் குத்தியது. ''நாமாக இறங்கின விஷயத்தை நாமே சமாளிப்போம்'' என்றார் அவர். அவளோ ஆசிரமத்து நிழலில் இருந்த குழந்தையை வெளியுலகத்தில் கொண்டு போட்டுவிட்டாள். இனிப் போலீஸ் ஸ்டேஷன்களைத் தான் டெலிஃபோன் மூலம் கேட்க வேண்டுமென்று நினைத்து அவள் படிக்கட்டில் ஏறினவுடன் இரண்டு பேர் எதிரே நிற்பது தெரிந்தது. அவள் நெஞ்சு திக்கென்றது. ''உட்காருங்கள். உங்கள் மகன் சுகமாக இருக்கிறான். சுட்டிப் பயல்!'' என்று யாரோ கூறுவது ஒரு மைலுக்கு அப்பாலிருந்து பேசுவது போலச் செவியில் விழுந்தது. நிலை தடுமாறுமல் சுவரில் சாய்ந்தபடி அவள் அமர்ந்தாள். ''உங்களுக்கு நன்றி சொல்லித் தீராது'' என்றாள் கை கூப்பியபடி.



''பரவாயில்லை. மனித தர்மம் இவ்வளவு கூட இல்லாவிட்டால் எப்படி? இன்று உங்கள் குழந்தையை அழைத்து வந்தால், நாளை எங்கள் குழந்தையை வேறு யாராவது கொண்டு சேர்க்கமாட்டார்களா?'' என்றார் ஒருவர். ''குழந்தை காலிலே அடிபட்டுக் கொண்டுவிட்டான், பாருங்கள். ஒரு மைலுக்கு மேல் நடந்துவிட்டான்'' என்றார்கள்.

அவர்களை அனுப்பிவிட்டு ரவியின் காலைக் கவனித்தாள் லீலா. கட்டை விரலைப் பெயர்த்துக்கொண் டிருந்தான் குழந்தை. புண்ணைக் கழுவி மருந்து போட்டுக் கட்டினாள். தன் பொறுப்பில் ஏற்றுக்கொண்ட பொருளைச் சரியாகப் பாதுகாக்காமல் தன்னலத்தோடு இருந்துவிட்டோமே என்ற அவமானம் அவளைப் பிடுங்கித் தின்றது. எதிரே இருப்பது ஒரு சிசு என்ற எண்ணமே அவளுக்கு வரவில்லை. வாமனாவதார மூர்த்தியே தன்னைச் சோதிக்க நிற்பது போலவும் தன் எதிரே விசுவரூபமெடுத்துப் பயமுறுத்தக் கூடும் என்றும் தோன்றிவிட்டது.

ரவிக்கு ஒரு தட்டில் மிக்ஸ்சரும் மைசூர்ப் பாகும் கொண்டு தந்தாள். போர்ன்விடா கலந்துகொண்டு வந்து கோப்பையும் கையுமாக அவன் அருகில் அமர்ந்தாள். தினம்போல அவன் ரகளை செய்யவில்லை. அவனுக்குப் பசிபோலும்! தின்று முடித்துப் பானத்தையும் குடித்தான் ரவி.

பூவாயி வந்து பேசின பிறகுதான் அங்குள்ள புழுக்கம் கலைந்தது. ''அம்மா, அடுத்த வீட்டிலே ஐயா பட்சணங்கள் எல்லாம் ஆர்யபவனிலேந்தும், கல்கத்தா, பம்பாயிலேந்தும் வரவழைச்சாங்களாம். ஐந்நூறு ரூபாய் ஆச்சுதாமே? அப்படிக்கூட இருக்குமா, அம்மா?'' என்று கேட்டு அதிசயித்தாள் அவள்.

''அவர்கள் பணக்காரர்கள். செலவழிப்பார்கள்'' என்றாள் லீலா, அசட்டையாக.

ரவி லீலாவின் முகத்தை உன்னினான். ''அம்மா, நீங்கள் பணக்காரர்கள் இல்லையா?'' என்று கேட்டான்.

''உனக்கு என்னடா, பணக்காரனும் பிச்சைக்காரனும்?'' என்றாள் லீலா.

''எனக்குப் பணக்காரான்னாப் பிடிக்காது. அவா சாமானை நான் உடைப்பேன். அதனால் தான் டெலிவிஷனை உடைச்சேன்'' என்று அழுத்தம்திருத்தமாகப் பேசினான் ரவி.

லீலாவின் மூளைக்குள் எங்கோ ஒரு கீற்று வெளிச்சம் நுழைந்தது. இதுவரை அவனுடைய பெற்றோரைப் பற்றியே அவள் விசாரித்ததில்லை. அதனால் அவன் தன்னிடம் ஒட்டமாட்டானோ என்ற பயம் அவள் வாயை அடைத்து வைத்திருந்தது. இன்று அவள் துணிந்து கேட்டுவிட்டாள். ''ஏன்டா, உன் அப்பா, அம்மா பணக்காரர் இல்லையா?'' என்று, மெதுவாக.

''இல்லை. நீல பங்களாக்காராதானே பணக்காரா? அங்கேதானே அப்பா கார் ஓட்டினா? அம்மா சமைச்சா? அம்மாவைத் திட்டுவார்கள். அன்னிக்கு நெருப்பிலே கொளுந்திப் போனபோது அவாளெல்லாம் ஆஸ்பத்திரிக்குப் போனாளே; அப்பா, அம்மா மட்டும் தாழ்வாரத்திலேயே கிடந்தாளே! எங்க பக்கத்து வீட்டு மாமி சொன்னாளே! ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தால் அப்பா, அம்மா செத்துப் போயிருக்கவே மாட்டாளாம். நீங்க பணக்காரா இல்லியே?'' என்ற திடீரென்ற வெடிகுண்டுடன் பேச்சை முடித்தான் சிறுவன்.

''பணக்காரா எல்லாம் கெட்டவா இல்லைடா, ராஜா. இப்ப நீகூட முன்னைவிடப் பணக்காரன்தான். நீ உடைச்சயே, அது யார் சாமான்? உனக்காக அப்பா வாங்கினது தானே? உன் பணத்தை வச்சு நாலு பேருக்கு நல்லது செய்யணும். உனக்கு அப்பா இல்லை, அம்மா இல்லை. நாங்கள் ரெண்டு பேரும் உனக்கு அப்பா, அம்மாவாக இருக்கலாம்னு நினைச்சோம். அங்கே ஆசிரமத்திலே தனியா யாருடனும் பேசாமல் இருந்தயே? உனக்குன்னு ஒரு வீடு தந்தோம். பணம் இல்லாட்டா முடியுமா, கண்ணு? இப்பக்கூட நீ பட்சணம் நிறைய எடுத்துண்டு போய் அநாதாசிரமத்திலே கொடுக்க முடியும்.''

''நிஜம்மாவா?''

''ஆமாம். கொடுக்கிறயா?''

''சரி'' என்றான் ரவி, மகிழ்ச்சியுடன். பிறகு அவன் எழுந்து நாயுடன் விளையாடப் போய்விட்டான்.

பூவாயி லீலாவைப் பார்த்து முறுவலித்தாள். ''ஐயா வந்தூட்டாருபோல, எப்படி அடங்கிடுச்சு பாருங்க'' என்று கிசுகிசுத்தாள்.

லீலாவுக்கு ஒன்றும் பேசவே தோன்றவில்லை. பிரமையாக இருந்தது அவளுக்கு. ஒரு குழந்தையைப் புரிந்துகொள்வது எவ்வளவு சிரமம் என்று நினைத்து வியந்தாள் அவள். ஏதோ ஒருவிதப் புதுத் தெம்பு தோன்றியது மட்டும் தெரிந்தது. ''மறுபடியும் இதற்குப் பிசாசுத்தனம் வருவதற்குள் ஏதேனும் செய்து வைப்போம்'' என்று சொல்லிக் கொண்டே அவள் பட்சணம் செய்ய ஆரம்பித்தாள்.

வேலையில் ஈடுபட்டிருந்ததில் அவளுக்கு நேரம் போனதே தெரியவில்லை. பூவாயியும் வீட்டுக்குப் போய்விட்டாள். லீலா முன் பக்கம் வந்தபோது ரவி அந்த நாயைக் கட்டிக் கொண்டு வெளித் தாழ்வாரத்திலேயே உறங்கி விட்டிருந்தான்.

லீலா மெதுவாக அவனை எழுப்பி அழைத்து வந்து மோருஞ்சாதம் போட்டாள். அவன் சாப்பிட்ட பிறகு அவனுக்கு விழிப்பு வந்துவிட்டது போலும்! அவன் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தான். அவள் அடுப்படி வேலைகளை முடித்துக்கொண்டு, தானும் ஒரு வாய் சாப்பிட்டுவிட்டு ஹாலுக்கு வந்தாள். ரவி, தான் உடைத்த டெலிவிஷன் ஸ்கிரீனைப் பார்த்தவண்ணம் சோஃபாவில் அமர்ந்திருந்தான். லீலா அதைக் கவனித்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை. வெற்றிலை இழிப்பதில் முனைந்தவளைப்போல இருந்தாள்.

ரவி மெதுவாக அவள் அருகில் வந்து நின்றான். ''கால் வலிக்கிறது'' என்றான்.

லீலா அவன் முகத்தை உன்னினாள். அவன் அழகான வதனம் அவள் நெஞ்சை அள்ளியது. 'பேயோ, பிசாசோ, குழந்தை குழந்தைதானே?' என்று நினைத்தவள், அவனை அருகில் இழுத்துக் கொண்டாள். சோஃபாவில் கிடத்தி அவன் காலைத் தன் மடிமீது வைத்துக்கொண்டாள். பாதமெல்லாம் வீங்கியிருந்தது. மெதுவாகப் பிடித்துவிட்டாள். ரவி அவளையே பார்த்தான். பிறகு, ''அம்மா, நான் வரலையேன்னு நீ அழுதயா?'' என்று

லீலாவுக்கு வெட்கமாகிவிட்டது. இப்படிப் பிறரையே ஒன்றி வாழும் குழந்தை திசை தப்பி ஓடி விடட்டும் என்று மனசால் அறுத்துவிட்டுவிட்டோமே என்று மனம் குமைந்தாள் அவள்.

''ஏம்மா பேசமாட்டேன் என்கிறே?'' என்று கேட்டான் சிறுவன்.

''ஆமாமடா, அழுதேன். உன்னைத் தேடிண்டு நானும் ஜில்லியும் ஸ்கூல்வரை போனோமே!''

''நான்கூட அழுதேன். பஸ் போகும்வரை ஒளிஞ்சிண்டு இருந்தேன். அவா என்னைத் தேடுவான்னு நினைச்சேன். விட்டுட்டுப் போயிட்டா; நடந்தே வந்தேன். காலை வலிச்சுது. வழி தெரியலை. அழுதுண்டே 'அம்மா, அம்மா'ன்னு கூப்பிட்டுண்டே வந்தேன். அப்பத்தான் அந்த ரெண்டு மாமாவும் ஸ்கூட்டரிலே ஏத்திண்டு வந்தா. நம் வீட்டு அட்ரெஸ் சொன்னேன்.''

''எந்த அம்மாவைக் கூப்பிட்டே?'' என்ற கேள்வி அவள் வாய் சோர வந்துவிட்டது. உடனே நாக்கைக் கடித்துக் கொண்டாள்.

''தெரியாது..'அம்மா'ன்னு அழுதேன்'' என்றான் அவன், வேதனையுடன்.

''சரி, போகட்டும். நீதான் வந்து சேந்துட்டயே? டெலிஃபோன் நம்பர்தான் தெரியுமே; அதிலே பேசறதுதானே?''

''நாம்ப நல்ல பணக்காரான்னு தெரியாது. அதையும் உடைக்கணம்னு நினைச்சேன்'' என்றான் ரவி.

'பூ இதழில் படும் காயம் ஆழமாகத்தானே படும்?' என்று ஓடியது லீலாவின் மனம்.

''சரி, தூங்கு. அப்பா நாளைக்கு வந்து விடுவார்'' என்றாள் அவள்.

ரவி எழுந்து அவள் மடிமீது ஏறிப் படுத்துக் கொண்டான். அவள் அவனை ஒரு கையால் செல்லமாகத் தட்டிக்கொண்டே மற்றக் கையால் காலை நீவிவிட்டாள். குழந்தையும் உறங்கி விட்டான். லீலா மட்டும் விடிய விடிய எண்ணங்களில் சிக்கித் திணறிக்கொண் டிருந்தாள்.

விடிந்தவுடன் அவள் கணவர் வந்து விட்டார். ''ஏது இவ்வளவு சீக்கிரம்?'' என்று கேட்டாள் அவள்.

''என்னவோ மனசே சரியாக இல்லை. திரும்பிவிட்டேன். ரவியை வைத்துக்கொண்டு நீ என்ன கஷ்டப்படுகிறாயோ? நான் நினைத்த படியே ஆகிவிட்டதே!'' என்றார் பஞ்சு, டெலிவிஷனைப் பார்த்து.

''உஷ்! ஒரு யுகமே கடந்துவிட்டது. புதிய சகாப்தம் ஆரம்பித்துவிட்டது. வாருங்கள், உள்ளே'' என்று அமைதியாக அழைத்தாள் லீலா.

சூரியோதயத்தின் செவ்வொளி வீடெங்கிலும் பரவிப் பொன் மயமாக்கியது. ★



# இரத்தம்

சேஷநாராயணா

ராமநாதையா காட்டு இலாக்காவில் வேலை செய்து இப்போது ஓய்வு பெற்றிருக்கிறார். இன்றைய கர்நாடகம், அன்றைய மைசூர் மாநிலத்தின் காட்டுப் பிரதேசங்களில் எல்லாம் துப்பாக்கியை ஏந்தி அவர் சஞ்சரித்திருக்கிறார். பண்டீபுரம், மூலே ஹொளே, பிரிகிமி, ரங்கன்குன்று, பூதிபடகம், காகன கோட்டை, புணஜூர், கோழிப் பாளையம் - இப்படிப் பல வனாந்தரங்கள்.

அந்த இலாக்காவில் வாசிமேன் வேலைக்குச் சேர்ந்து, பிறகு கார்டு ஆகி அதற்கு அப்புறம் பாரஸ்டராக உயர்ந்து, அவர் ஓய்வு பெற்றிருக்கிறார். மேற்படிப்பு இருந்தால் அவர் ரேஞ்சரும் ஆகியிருக்கலாம்; கன்ஸர்வேட்டரும் ஆகியிருக்கலாம். ராமநாதையா பள்ளிக்கு ஆரம்பத்தில் சில நாட்களே சென்றிருந்தார்.

* * * *

பள்ளிப் படிப்பு ராமநாதையாவுக்கு இல்லாவிட்டாலும் இயற்கை யென்னும் கல்லூரியில் அவர் எவ்வளவோ பாடங்களைக் கற்று முன்னேறினார். சிறு வயதிலேயே அவர் காட்டு இலாக்காவில் வேலைக்குச் சேர்ந்தார். நல்ல வேளை. அவருக்குக் கெட்ட பழக்கங்கள் எதுவும் ஏற்படவில்லை. பொதுவாகப் போலீசிலும், காட்டு இலாக்காவிலும் சேருபவர்களைச் சில கெட்ட பழக்கங்கள் பிடித்துக்கொள்ளும். ராமநாதையா இதற்கு விலக்கு. அவர் சாத்விகக் குணமுள்ளவர்; நல்லவர்.

சாத்விகம் என்றவுடன் அந்த இலாக்காவில் அப்படி இருக்க முடியுமா என்று கேட்கலாம். முடியும், ராமநாதையா அப்படித்தான் இருந்தார். அவர் வேலையில் கெட்டிக்காரரர். ஒழுக்கம் நிறைந்தவர். குறி பார்த்துச் சுடுவதில் தேர்ந்தவர்.

அந்தக் காலத்தில் காடு என்றால் மிகப் பயங்கரம். ஐம்பது வருஷங்களுக்கு முன்பு பண்டீபுரத்திலோ, நீலகிரி எல்லையிலோ. தாளவாடியின் உட்புறத்திலோ போயிருந்தவர்களுக்கு, இப்போது அங்கே உலாவினால் இங்கே காடா இருந்தது என்று தோன்றும். அந்தக் காலத்திலிருந்த காடு எல்லாம் இப்போது தேய்ந்து வரு[illegible] மேலும் ஐம்பது வருஷங்கள் கழிந்தால் காட்டை மியூஸியத்தில் தான் பார்க்க வேண்டும்.

சாத்விக ராமநாதையா வேட்டையில் நிபுணர். அவர் குறி என்றும் தவறியதே இல்லை. ஐந்து ஆறு புலிகளை அவர் சுட்டுக் கொன்றிருக்கிறார். காட்டுப் பன்றி, சிறுத்தை முதலியவை எத்தனையோ? அந்தக் காலத்தில் துஷ்டப் பிராணிகளைக் கொன்றவருக்கு அரசாங்கம் பரிசு அளித்து ஊக்குவித்தது. புலியைச் சுட்டவன் அந்தக்காலத்தில் மாவீரன். செத்த புலியோடு அவனையும் உட்காரவைத்து, மாலை போட்டுக் கிராமங்களில் ஊர்வலமாக வருவார்கள்; ஜயகோஷம் எழுப்புவார்கள்.

ஒரு சமயம் ராமநாதையாவுக்கும் அவர் நண்பருக்கும் விவாதம் ஏற்பட்டது. "எங்கே, நீங்கள் அவ்வளவு நிபுணராக இருந்தால் அந்தப் பறவையைச் சுட்டு வீழ்த்துங்கள்" என்றார் நண்பர்.

நீலவண்ண இறக்கையுடன் சிறு பறவை ஒன்று தென்னமரத்தின் பச்சை இலைகளின் நடுவில் உட்கார்ந்திருந்தது. அது ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தது. அவ்வப் பொழுது தன் இறக்கைகளைப் படபடவென்று அடித்துக் கொள்வதனாலேயே அங்கே ஒரு பறவை இருப்பது தெரிந்தது.

அந்த அழகிய பறவையின் கழுத்து, தங்க வர்ணம். கால்கள் தெரியவில்லை. உரித்த தேங்காய் அளவு பருமன்.

அந்த அழகிய பறவையைச் சுட்டு வீழ்த்த ராமநாதையாவுக்கு விருப்பமில்லை. ஆனால் என்ன செய்வது? பேச்சு வளர்ந்துவிட்டது! பந்தயம் வைத்தாகிவிட்டது.

உடனே அவர் துப்பாக்கியை மேலே தூக்கிக் குறிவைத்தார். மறு விநாடியில் டமார் என்னும் சத்தம், புகை. அவ்வளவு உயரத்திலிருந்த அந்தப் பறவை தொப்பென்று கீழே விழுந்தது.

ராமநாதையா அத்தகைய சூரர். அவரது குறி ராமபாணமேதான். ஆனால் புலியைப் போன்ற கொடூரம் யானைக்கு இல்லை. யானை இருக்கட்டும்; யானையைவிடப் பலசாலியான சிங்கத்துக்குக்கூடப் புலியைப்போல் இரத்த தாகம் இல்லையென்று தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இதன் இரகசியம் என்ன?

பச்சை இலைகளைச் சாப்பிடும் விலங்குகள் எல்லாமே சாதுவானவை என்றும் சொல்ல முடியாது; அதே போல் மாமிசத்தைச் சாப்பிடும் பிராணிகள் எல்லாம் கொடூரத்தன்மை கொண்டவை என்றும் நிர்ணயிக்க முடியாது.

இந்த இயற்கை அதிசயத்தை அறிய ராமநாதையாவுக்கு விருப்பம் அதிகம். அதனால் அவர் விலங்குகளைக் குட்டியாயிருக்கும்போதே பிடித்து வந்து வளர்ப்பார். அவை உண்ணும் விதம், வளர்ந்து பெரிதானதும் சேஷ்டை செய்யும் முறை ஆகியவற்றைக் கவனிப்பார். பூனை, நாய், மான், மயில், காட்டுக் கோழி இப்படி. ஒரு சந்தர்ப்பத்தில் புலிக்குட்டி ஒன்று அவரிடம் அகப்பட்டது. அதன் கதை சுவாரசியமானது.

கர்நாடக-கேரள மேற்கு எல்லைப் பகுதியில் ஓர் ஆறு. காட்டில் மரங்களை வெட்டிக் கள்ளக் கடத்தல் செய்பவருக்கு இந்த ஆறு உதவியது.

காலனின் வாயைப் போல் பயங்கரமான வனத்தின் நடுவே இந்த ஆறு பாய்வதனால், மரங்களை வெட்டும் திருடர்கள், ஆற்றுக்குள் மரங்களை வீழ்த்தி, மிதக்கச் செய்து கேரளாவுக்குக் கொண்டு செல்வார்கள். சில அதிகாரிகளைச் சரிப்படுத்திக்கொண்டு இந்த வேலையைத் திறமையாகச் செய்து முடிப்பார்கள். லட்சக் கணக்கான ரூபாய் மதிப்புள்ள சந்தனம் போன்ற விலையுயர்ந்த மரங்களை வெட்டித் திருட்டு வியாபாரம் நடத்தினார்கள்.

கேரளாவிலிருந்து வந்த சில திருடர்கள் ஆற்றங்கரையில் தங்கியிருக்கிறார்கள் என்ற துப்பு, ராமநாதையாவுக்கு எட்டியது.

கடந்த இரண்டு மாதங்களாகவே இந்தத் திருடர்கள் தங்கள் வேலையைத் திறமையாகச் செய்து கொண்டிருந்தார்கள். இலாக்காவினர் எவ்வளவு முயற்சி செய்தும் இந்தத் திருடர்களைப் பிடிக்க முடியவில்லை.

இந்தத் தடவை எப்படியும் இந்தக் கும்பலைப் பிடித்தே தீர வேண்டும் என்று ராமநாதையா சபதம் செய்தார். ஓர் இரவு, நம்பிக்கையான சில ஆட்களுடன் துப்பாக்கி ஏந்தி, நீளமான கோட்டு அணிந்து அவர் காட்டுக்குள் போனார்.

ராமநாதையா தம் உதவியாட்களுடன் நிலா வெளிச்சத்தில் காடு முழுதும் சோதனையிட்டார். ஊஹூம், ஒரு பிரயோசனமும் இல்லை. மனித நடமாட்டம் எங்கேயும் காணப்படவில்லை. ஒரு சமயம் அவர் சோதனையிடவருவது அந்தக் கும்பலுக்குத் தெரிந்துவிட்டதோ? அதுவும் யோசிக்க வேண்டிய விஷயந்தான். மிகுந்த நம்பிக்கைக்குரியவனே பணத்தாசையால் அவர்களுக்கு முன்னெச்சரிக்கை கொடுத்திருக்கலாம்.

தமக்குச் சந்தேகம் தோன்றிய இடத்தை எல்லாம் சுற்றிச் சுற்றி ராமநாதையாவின் கால்கள் வலி எடுக்கத் தொடங்கின. சற்று உட்கார்ந்து ஓய்வு எடுத்துக்கொள்ள விரும்பினார். அவர் சகாக்களும் சோர்வடைந்தனர். குளிர், தேகத்தைக் குடைந்து எடுத்தது.

சற்றுத் தொலைவில் இருந்த ஒரு பாறுங் கல்லின் மேல் ஏறி உட்கார்ந்தார் ராமநாதையா. உதவியாளர்களும் அவரைத் தொடர்ந்தனர். பனி விழுந்து அந்தக் கல் ஜில்லென்றிருந்தது. எல்லாரும் தலையில் மப்ளரைச் சுற்றிக் கொண்டு உட்கார்ந்திருந்தனர்.

காலை மணி நாலரை. சுக்கிர உதயம் ஆகியிருந்தது. சந்திரன் மேற்கே இறங்கி விட்டான்.

ராமநாதையா சட்டைப் பைக்குள்ளிருந்து வெற்றிலை பாக்கு எடுத்து எல்லாருக்கும் கொடுத்தார். புகையிலையும் அளித்தார். சிலர் பீடியைப் பற்றவைத்தனர். ராமநாதையாவுக்குப் புகைபிடிக்கும் வழக்கம் கிடையாது.

இன்று, அந்தத் திருட்டுக் கும்பல் இங்கே வருகிறது என்ற செய்தி, பொய் அல்ல; உண்மையானதுதான். அப்படியிருந்தும் ஏன் அவர்கள் அகப்படவில்லை?

அங்கே இருந்த ஃபாரஸ்டு கார்டு ஒருவன் மீது அவருக்கு ஏனோ சந்தேகம்.



கோபமே வராத ராமநாதையாவுக்கு இப்போது தாங்காத கோபம். ''அரசாங்கத்தின் உப்பைத் தின்று யாரோ அயோக்கியர்கள் துரோகம் செய்திருக்கிறார்கள்'' என்று அவர் சத்தம் போட்டார்.

அப்போது அவர்களில் ஒருவன் 'உஷ்' என்று அந்தப் பக்கம் விரலைக் காட்டினான். எல்லாரும் அந்தப் பக்கம் பார்த்தனர்.

அங்கே, கொஞ்ச தூரத்தில் இரண்டு புலிகள் நின்றிருந்தன. ஒன்று, கிழக்கு நோக்கித் திரும்பிக்கொண் டிருந்தது. மற்றது தரையில் படுத்துக்கொள்ளுவதும் எழுவதுமாய் இருந்தது.

எல்லாரையும் அப்படி அப்படியே தலையைத் தாழ்த்திப் படுத்துக்கொள்ளும்படி ராமநாதையா கட்டளையிட்டார். தலையில் கட்டியிருந்த டவல்களை எடுக்கச் சொன்னார். ஒரு சமயம் அந்தப் புலிகள் இந்தப் பக்கம் திரும்பினாலும் கல்லின் மீது மனிதக் கும்பல் இருப்பது தெரியக்கூடாது அல்லவா?

ஆனால் அந்தப் புலிகள் எந்தப் பக்கமும் திரும்பிப் பார்க்கவில்லை. ஒரு புலி எழுவதும் நிற்பதுமாக ஏன் இருக்கிறது? ஒரு சமயம் காதல் விளையாட்டு ஆடிக்கொண் டிருக்கின்றனவோ? அப்படியும் தெரியவில்லையே!

கடைசியாகப் புரிந்தது! நின்றும் படுத்தும் தவிக்கும் புலிக்குப் பிரசவ வேதனை; அதனால் தான் அது அப்படித் துடித்துக்கொண் டிருந்தது. பிறப்பையும் இறப்பையும் பிராணிகளுக்கும் சரி, மனிதர்களுக்கும் சரி, இயற்கை ஒரே ரீதியில் அளித்திருக்கிறது. வேதனை பொதுதான்.

அந்தப் பெண் புலி வேதனையுடன் கால்களை அகற்றிக்கொண்டு நின்றது. மெதுவாகப் புலிக் குட்டி....

ஆகா, அற்புதமான காட்சி!

ராமநாதையா எப்போதும் காட்டிலேயே வசிப்பவர். எத்தனையோ புலிகளைப் பார்த்திருக்கிறார். அவற்றுடன் போராடிச் சுட்டு வீழ்த்தியிருக்கிறார். ஆனால் புலி குட்டி போடும் போது பார்ப்பது இதுதான் முதல் தடவை.

குட்டி பிறந்ததும் பின்னாலேயே மற்றொன்று. தாய் தன் குழந்தைகளை ஒரேயடியாக நக்கத் தொடங்கியது.

அந்தச் சமயத்தில் பக்கத்தில் நின்ற புலி இந்த மூன்றையும் சுற்றி வந்து கர்ஜித்தது. ஒவ்வொரு குட்டியையும் மோந்து பார்த்தது. பிறகு தாய்ப் புலியின் தலையை நக்கியபடி, ''பார்த்தாயா, என்னால்தான் இந்தக் குழந்தைகள் உனக்குக் கிடைத்தன'' என்பது போல் அதைப் பார்த்தது. அதனுடைய விளையாட்டையும் போக்கையும் பார்த்தால், 'நிச்சயமாக அது ஆண் புலியே, இந்தப் பெண்ணின் கணவனே' என்று யாரும் சொல்லிவிடலாம். பகிரங்கமாக இப்படி மகிழ்ச்சியைத் தெரிவிப்பது கணவன் அல்லாமல் கள்ளக் காதலனால் முடியுமா?

ராமநாதையாவுக்கு இப்போது மிகுந்த பயம், எங்கே அந்த ஆண் புலி இந்தக் குட்டிகளைத் தின்று விடுமோ என்று.

இயற்கையின் விந்தைதான் என்ன? பசு ஒரு கன்றைத்தான் போடுகிறது; புலியோ ஒரு தடவைக்கு இரண்டு குட்டிகள். ஆனால் பசு பெருகுவது போல் புலிக்கூட்டம் பெருகுவதில்லை. சில சமயங்களில் நான்கு குட்டிகளைப் போடும் இந்தப் பிராணி ஆடுமாடுகளைப் போல் வளர்ந்தால் காட்டின் கதி என்ன ஆகும்? நினைக்கவே குடல் நடுங்குகிறது.

அப்படி நேர்ந்தால் என்ன ஆகும்? காட்டில் எந்தப் பிராணியுமே ஜீவித்திருக்க முடியாது; இந்த அசுர மிருகம் எல்லாவற்றையும் தின்று ஏப்பமிட்டுவிடும்.

ஆனால் புலிக்கு விரோதி வேறு யாரும் அல்ல. தனக்குத் தானே சத்துரு; தன் இனத்தைத் தானே தின்று விடுகிறது.

அதனால் அந்த ஆண் புலி ஆர்ப்பாட்டம் செய்துகொண்டு இவற்றைச் சுற்றுவதைக் கண்டு ராமநாதையாவுக்கு மிகுந்த திகில்; இந்த ஆண் புலி, இந்தக் குட்டிகளைத் தின்று விடுமே! எப்படியாவது



இந்தக் குட்டிகளைப் பிடித்துச் செல்ல அவர் விரும்பினர்.

ஆனல் இங்கேயும் இயற்கையின் நியமம் வேலை செய்கிறது. தாயோ தகப்பனே, தங்கள் குட்டிகளைக் கொல்லாது. இயற்கை அப்படிப்பட்ட ஈனச் செயல்களை யாருக்கும் போதிப்பதில்லை. வேற்றுப் புலிகளே இவற்றைக் கொன்று தின்னும்.

குட்டி போட்ட பிறகு தாய்ப் புலி கம்பீரமாகப் படுத்துவிட்டது. அது கம்பீரமா, ஆயாசமா? ஆண் புலி மட்டும் துள்ளித் துள்ளிக் கர்ஜனை செய்துகொண்டிருந்தது.

ராமநாதையாவுக்கு இப்போது ஒன்றுமே புரியவில்லை. குறி பார்த்துச் சுடுவதென்றால், அந்த ஆண் புலி, ஓர் இடத்தில் உட்காராமல் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருக்கிறது; குண்டு விச்சு, பெரிய புலிகளை விட்டுக் குட்டிகளைத் தாக்கிவிட்டால்?

இத்தகைய வாய்ப்பு இனித் தமக்குக் கிடைக்காது என்று தீர்மானித்த ராமநாதையா, துப்பாக்கியை எடுத்து ஆகாயத்தைப் பார்த்து டமார் டமார் என்று இரண்டு குண்டுகளைப் பொழிந்தார். ஹோ என்ற இரைச்சலுடன் தாம் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து கீழே குதித்தார். உதவியாளர்களும் அவ்வனமே நடுங்கும்படி கூச்சலிட்டனர்.

எதிர்பாராத இந்தச் சத்தத்தினல் அந்தப் புலிகள் நடுங்கிவிட்டன. ராமநாதையா மேலும் இரண்டு குண்டுகளை ஆகாயத்தைப் பார்த்து வெடித்துவிட்டு ஓடினர்.

பெரும் சத்தத்தைக் கேட்டு அந்தப் புலிகள் பிரமித்தன. இடியைப் போன்ற சத்தம். உடல் தளர்ந்த அந்தப் பெண் புலி பயத்தினல் வேறு பக்கம் ஓடியது. பயத்தில் அது தன் குட்டிகளை மறந்தேவிட்டது. ஆண் புலி மட்டும் ஒரு குட்டியைக் கவ்விய வண்ணம் பக்கத்து மூங்கில் புதருக்குள் ஓடியது.

இவர்கள் அந்த இடத்துக்கு விரைந்தார்கள். ஒருவன் புலிக் குட்டியைத் தூக்கிக் கொண்டான். எல்லாரும் கூச்சலிட்டபடி திரும்பி அந்தக் கல்லின் மீதே வந்து உட்கார்ந்தனர். மோப்பம் பிடித்துப் புலி மீண்டும் வந்து தாக்கலாம் என்ற பயத்தினல் ராமநாதையா அந்த மூங்கில் புதர்ப்பக்கம் டமார் டமார் என்று குண்டுகளைப் பொழிந்தார். பெரிய புலிகள் இரண்டும் போன இடம் தெரியவில்லை.

பாறுங்கல் மீது குட்டியை வைத்துக் கொண்டு, சுற்றி அமர்ந்து 'ஹா ஹா ஹோ ஹோ' என்று இரைச்சலிட்டனர். எல்லாரும் அந்தக் குட்டியைத் தடவிக் கொடுத்தனர்.

குழந்தையானல் என்ன? அதன் முகத்திலும் கொடூரம் தெரிந்தது. 'கர் புர்' என்று உறுமியபடி அது எல்லாரையும் பார்த்தது.

பொழுது விடிந்துவிட்டது. புலிக்குட்டியைத் தூக்கிக்கொண்டு, இருப்பிடத்துக்கு வந்தார்.

காட்டு இலாக்காவில் பணிபுரியும் எல்லாருக்கும் சேர்த்து அங்கே ஏழு எட்டு வீடுகள் இருந்தன. எல்லா வீட்டுக்காரர்களும் விரைந்து வந்து புலிக்குட்டியைப் பார்த்தனர். யாவருக்கும் குதூகலம்; அதன் உடலை அத்தனை பேரும் தடவிக் கொடுத்தார்கள்.

அவர்கள் எல்லாரும் காட்டுவிடையே வாழ்வதால் [illegible] மிருகங்களை அன்றாடம் பார்த்திருக்கிறார்கள். இந்த அனுபவம் மட்டும் புதியதுதான்: புலிக்குட்டி ஒன்றைத் தொட்டுத் தடவிக் கொடுப்பது.

அப்போது அவர்களில் ஒருவன் அந்தக் குட்டியின் வாலைப் பிடித்துத் தூக்கிப் பார்த்து, "இது பெண்குட்டிதான்" என்றான்.

ராமநாதையாவின் மனைவி சுந்தரம்மா முணுமுணுத்தாள்.

"இதுக்கும் ஆகாரம் செய்து போட்டாகணும்."

காட்டுப் பிராணிகளைச் சிறியதாக இருக்கையில் பிடித்து வந்து வளர்ப்பதைச் சுந்தரம்மா அவ்வளவாக விரும்புவதில்லை. ஆனல் அவளுக்கும் புலிக்குட்டி வந்ததில் கொஞ்சம் விருப்பந்தான்.

ராமநாதையா மூங்கிலினல் பெரிய கூண்டு ஒன்று தயார் செய்தார். அந்தக் கூண்டை இரண்டு பிரிவாகப் பிரித்தார்; கதவு மட்டும் ஒன்றுதான். இரண்டு பிரிவுகளின் நடுவே உட்பக்கம் சிறு கதவு. இரண்டு பாகங்களிலும் சிறிய பக்கெட்டுகளில் தண்ணீர் வைத்தார். தரையில் மணலைப் பரப்பினர். குட்டியை ஒன்றிலிருந்து அடுத்த பகுதிக்கு மாற்றிச் சுத்தம் செய்வதற்காக இந்த ஏற்பாடு.

இவை எல்லாம் சரி. முக்கியமான பிரச்னை, இந்தப் புலிக்குட்டிக்கு என்ன ஆகாரம் கொடுப்பது?

அசுரப் பிராணியான புலி இரத்தத்தை உறிஞ்சியே வளருகிறது. மாமிசந்தான் இதன் ஆகாரம். மாமிசம் சாப்பிடும் சில பிராணிகள் சைவ உணவையும் உட்கொள்ளுகின்றன: உதாரணம், பூனைக்குப் பால் என்றால் உயிர். வாசனையினலேயே வெண்ணெய் இருக்குமிடத்தை அறிந்து பாயும். ஆனல் புலிக்குப் பால் கொடுக்க முடியுமா? வெண்ணெயை அது கண்ணெடுத்தும் பார்க்காதே!

வீட்டின் சந்து பொந்துகளில் இருக்கும் மூட்டைப் பூச்சி கூட இரத்தத்தைச் சாப்பிட்டே வளரும் பூச்சி; இரத்தம், மாமிசம் என்றவுடன் ராமநாதையாவுக்குப் பழைய சம்பவம் ஒன்று நினைவுக்கு வந்தது:

ஒரு தடவை அவர் காட்டில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது ஒரு புலி, தன் இரண்டு குட்டிகளுடன் விளையாடுவதைத் தூரத்திலேயே பார்த்துவிட்டுப் பதுங்கி நின்றார்.

அந்தப் பெண் புலி ஒரு மானைப் பிடித்து வந்திருந்தது. மரணத்தின் வாயில் அகப்பட்ட அந்த மான்குட்டி புரண்டு புரண்டு அல்லல் பட்டுக் கொண்டிருந்தது. புலிக் குட்டிகளோ அதன் மீது விழுந்து விழுந்து துள்ளிக் கொண்டிருந்தன. தாய்ப் புலி குர்ர் என்றபடி குட்டிகளைப் பார்த்துக்கொண்டிருந்தது. அதாவது குட்டிப் புலிகளுக்கு வேட்டையாட அது கற்றுக் கொடுத்தது. தாய்ப் புலியின் முகம் திருப்தியுடன் காணப்பட்டது. ஆமாம், பிறர் அல்லல்படுவதைப் பார்த்து மகிழ்வது கொடுமையாளர்களின் குணவிசேஷந்தானே?

இந்த அசுரப் பிராணி இரத்தத்தை உறிஞ்சிச் சாப்பிடும் விதமும் அலாதிதான்.

நாம் பாண்டா, கோக்கோ கோலாவைப் பாட்டிலுக்குள் 'ஸ்ட்ரா'வைப் போட்டு உறிஞ்சிச் சாப்பிடுகிறதில்லையா, அதுமாதிரி! கூரிய தன் பற்களினல் பிடித்துக் கவ்வி இரத்தத்தை உறிஞ்சுகிறது. பிறகு இரத்தம் தோய்ந்த தன் உதட்டினை [illegible] தன் நாக்கினல் தடவிக் கொள்ளும். பிறகே அந்தப் பிராணியைக் [illegible] பின் மாமிசத்தைச் சாப்பிடுகிறது.

புலிக்கு மாமிசத்தை விட இரத்தத்தில்தான் விசேஷ ருசி.

ஆனால் இந்தப் புலிக் குட்டியைப் பற்றி ராமநாதையா வேறு விதமாக எண்ணினார். 'புலிக்குட்டி பிறந்து இரண்டு நாட்களே ஆகின்றன. இன்னும் இதற்கு இரத்தம், மாமிசம் என்றால் என்ன என்று தெரியாது. இது ருசித்ததில்லை. அதனால் சைவ உணவையே இதற்குக் கொடுத்துப் பழக்கினால், வளர்ந்தாலும் குரூரமான சுபாவத்தை மறந்து சாதுப் பிராணியாக மாறிவிடலாம் அல்லவா?'

ராமநாதையாவின் கருத்தை யாரும் ஏற்றுக் கொள்ளவில்லை.

ஆனால் ராமநாதையா செம்பு நிறையப் பாலையும், பாலுடன் சாதத்தைக் கலந்து ஒரு தட்டிலும் வைத்தார்.

அந்தப் புலிக்குட்டி, பாலையும் சாதத்தையும் மாறி மாறிப் பார்த்துவிட்டு, ஒரு மூலையில் போய்ப் படுத்துவிட்டது.

இரண்டு நாட்கள் இந்தப் போராட்டம் நடந்தது. பலன் ஏற்படவில்லை,

சுந்தரம்மா இரைச்சலிட ஆரம்பித்தாள்! "அநியாயமாக இதை நீங்கள் கொன்று விடுகிறீர்கள், அவ்வளவுதான்!" என்றாள்.

இரண்டு நாட்களுக்குள் புலிக்குட்டி மிகவும் இளைத்துவிட்டது. அதைப் பார்க்க மிகப் பரிதாபமாக இருந்தது. தட்டின் பக்கம் வந்து எட்டிப் பார்த்துவிட்டு ஏமாந்து போய்ப் படுத்துவிடுகிறது.

ஆனால் ராமநாதையா தம் பிடிவாதத்தைத் தளர்த்தவில்லை. அவர் சுபாவமே அப்படித்தான். 'எத்தனை நாள் இது இப்படி ஆகாரம் இல்லாமல் இருக்கப் போகிறது, பார்த்து விடுவோமே!' என்று நிதம் பரீட்சை செய்தார். கடைசியாக ராமநாதையா தம் முயற்சியில் வெற்றியடைந்தார். ஆகாரமே இல்லாமல் அது நாட்களைக் கழிக்க முடியுமா என்ன? ஒரு நாள் அது பால் பாத்திரத்துக்குள் மெள்ள நாக்கை நீட்டியது.

எல்லாருக்கும் மிகுந்த உற்சாகம்; ஆச்சரியப் பட்டார்கள்.

புலிக்குட்டி பாலை நக்கிச் சாப்பிட்டது. நம்ப முடியாத நிகழ்ச்சி கண்முன்னே நடந்தது.

'புலியின் தேக அமைப்புக்கேற்ப, மாமிசம் சாப்பிட்டே வளர வேண்டும். பாலும் பழமும் சாப்பிட்டு உயிர் வாழ முடியுமா?' என்பதே பலருடைய கேள்வி.

எப்படியோ இவரிடம் அகப்பட்டுக்கொண்ட அந்த ஏழைப் புலிக்குட்டி இப்போது பாலை உண்ணத் தொடங்கியது. சாதத்தை ருசி பார்க்கவும் ஆரம்பித்து விட்டது.

புலிக்குட்டிக்கு நல்ல பெயரை வைக்க வேண்டும் என்று ராமநாதையா விரும்பினார். சாந்தமான பெயராக இருக்கட்டும் என்று எண்ணி, "சாந்தா என்றே இருக்கட்டுமே" என்றார்.

"ஓ....சாந்தா....சாந்தம்மா...."

சாந்தா சாதுச் சிறுமியாக அந்தக் கூண்டில் வளரத் தொடங்கியது. சைவ உணவு பழகிப் போயிற்று.

காலையில் ஒருபெரிய பாத்திரம் நிறைய பால், மத்தியான்னம் பாலில் கலந்த சாதம். சாந்தா விருப்பத்துடன் சாதத்தைச் சாப்பிட்டது.

புலிக்குட்டியான சாந்தா இப்போது ராமநாதையாவின் வீட்டில் பூனைக்குட்டியாக வளர்ந்தது. கூண்டைவிட்டுச் சில சமயம் சாந்தாவை வெளியே விடுவதும் உண்டு. வெளியே வந்தால் சாந்தா அங்கேயும் இங்கேயும் துள்ளி விளையாடும். பார்வை மட்டும் பயங்கரமாக இருக்கும்.

ராமநாதையா சாந்தாவின் உடலைத் தடவி விடுவார். புலிக்குட்டி அவர் தோளை நக்கித் தன் மகிழ்ச்சியைத் தெரிவிக்கும். அது தன் வாயைத் திறந்து நீண்ட சிவப்பான நாக்கை நீட்டினால் பார்க்கிறவர்களுக்குப் பயமாக இருக்கும். குட்டியுடன் விளையாடிய பிறகு, "உம், இன்றைக்கு இவ்வளவு போதும். உள்ளே போ" என்று அவர் அதைக் கூண்டிற்குள் அனுப்புவார்.

இப்படியே சில நாட்கள் சென்றன.

ஒரு நாள் ராமநாதையாவுக்கு வேண்டிய ஒருவன் பத்துப் பன்னிரண்டு இளநீர்களை ஒரு கோணிப் பையில் போட்டுக் கட்டிக்கொண்டு வந்து கொடுத்தான்.

காட்டுக் குடியிருப்பில் தென்ன மரங்கள் இல்லை. அதனால் இளநீர் என்றால் எல்லாருக்கும் ஆசை. அந்தச் சமயத்தில் ஆட்கள் எங்கோ சென்றிருந்ததனால், ராமநாதையா இளநீரைத் தாமே சீவி எல்லாருக்கும் கொடுத்தார். கடைசியாகத் தாம் சாப்பிட அரிவாளை எடுத்துச் சீவினார். தவறிப் போய் அரிவாள் வீச்சு அவர் கையில் பட்டதும், "அப்பா!" என்று அலறினார்.

இந்தச் சம்பவம் நடந்தபோது சாந்தா வெளியே உலாவிக்கொண்டிருந்தது. ராமநாதையாவின் அலறல் சாந்தாவின் கவனத்தைத் திருப்பியது. அது ஓடி வந்து தரையில் வழிந்திருந்த இரத்தத்தை நக்கத் தொடங்கியது. இரத்தத்தின் ருசியைச் சுவைத்ததும் என்றும் காணாத மகிழ்ச்சி அதன் கண்ணில் தோன்றியது. பார்வை பயங்கரமாக மாறியது. இரத்தத்தின் ருசியை அறிந்தது இது முதல் தடவை அல்லவா அதற்கு?

இதற்குள் வீட்டிலிருந்தவர்கள் எல்லாரும் ராமநாதையாவைச் சுற்றிக் கொண்டனர்.

"எவ்வளவு பெரிய காயம்! இரத்தம் எவ்வளவு சிந்தியிருக்கிறது!" என்று கூறி வருந்தினர். அவர் பெரிய மகள் ருக்மிணி தந்தையின் கையில் ஈரத்துணியைச் சுற்றிக் கட்டினாள். அப்படியும் இரத்தம் கசிந்தது. வெள்ளைத் துணியே சிவந்து காட்சியளித்தது.

கும்பல் அதிகமானதும் இரத்தத்தை நக்கிக் கொண்டிருந்த சாந்தா நகர்ந்து போய் அந்த ரத்தப் பெருக்கையே பார்த்துக்கொண்டிருந்தது. ராமநாதையாவுக்குக் கையில் நல்ல வலி.

இந்தக் கலவரம் ஓரளவு முடிந்ததும் ராமநாதையா சாந்தாவைக் கூண்டுக்குள் போகுமாறு துரத்தினார். சாந்தாவைக் கூண்டிலிருந்து வெளியே விடுவதும் திரும்பி உள்ளே அனுப்பிக் கதவை மூடுவதும் அவர் வேலை. அவர் இல்லாவிட்டால் வீட்டு வேலையாள் பரசன் செய்வான்.

ஆனால் இன்று சாந்தா கூண்டுக்குள் செல்லத் தயங்கியது. இத்தனை நாள் காணாத குரூரம் இன்று அதன் முகத்தில் தாண்டவமாடியது. கண் விழிகள் விரு விருவெனச் சுற்றின. ரத்தத்தை நக்கின நாக்கினால் அது தன் உதடுகளைத் தடவிக் கொண்டது.

துரத்தித் துரத்திப் பலவந்தமாக அவர் அதைக் கூண்டுக்குள் அனுப்பிக் கதவைச் சாத்தினார். புலிக்குட்டியின் நடத்தையில் ஏற்பட்ட மாறுதல் அப்போது அவருக்குச் சரியாகத் தெரியவில்லை.

சூரிய உதயம் ஆகும் சமயம்.

ராமநாதையா குளித்து முடித்து மந்திரங்களை உச்சரித்தபடி சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்தார்.

சூரிய நமஸ்காரத்தின் பெருமைபற்றி ராமநாதையா மணிக்கணக்கில் கூறுவார். "கடவுள் பூசையுடன் தேகப் பயிற்சியும் கிடைத்து ஆரோக்கியம் உண்டாகிறது" என்று சொல்லுவார்.

இப்படி ஒரு நல்ல பழக்கம் இருந்ததனுல் ஐம்பதுக்கு மேலாகியும் அவர் வாலிபன் மாதிரி காணப்பட்டார்.

குழந்தைகள் இன்னும் எழுந்திருக்கவில்லை. தூங்கிக்கொண் டிருந்தார்கள். ருக்மிணி இத்தனை நேரம் தன் குழந்தையைப் பக்கத்திலேயே படுக்க வைத்திருந்து பால் கொடுத்துவிட்டுத் தொட்டிலுக்குள் போட்டாள்.

அவளுக்கு ஓர் அழகான ஆண் குழந்தை இருந்தது. மூக்கும் முழியுமாகக் குழந்தை அழகாக இருந்தது.

ருக்மிணி மறுநாள் கணவன் வீட்டுக்குத் திருப்பவேண்டும். அதனுல் அவளுக்கு இன்று எண்ணெய் தேய்க்க வேண்டும் என்று குளியலறையில் இருந்தபடியே தாய் கூப்பிட்டாள்:

"வா, ருக்மிணி! குழந்தை தொட்டிலில் தூங்கி விட்டதா?"

ருக்மிணி குளியலறைக்குச் சென்று பின்னலை அவிழ்த்து எண்ணெய் தேய்த்துக் கொள்ளத் தொடங்கினுள்.

அப்போது வீட்டின் பின்புறம் வேலையாள் பரச்சன் மாட்டுத் தொழுவம், சாந்தாவின் கூண்டு ஆகியவற்றைப் பெருக்கிச் சுத்தம் செய்ய வந்திருந்தான். அவன் கூண்டின் கதவைத் திறந்தான்.

கூண்டின் ஒரு பிரிவில் படுத்திருந்த புலிக்குட்டி எழுந்து வெளியே வந்தது. கதவைத் திறந்தால் படுத்திருக்கும் அது எழுந்து பக்கத்துப் பிரிவுக்குப் போவதும் சுத்தம் செய்ததும் உள்ளே வருவதும் மாமூல் நிகழ்ச்சி. அதனுல் பரச்சன் அதன் பக்கம் கவனம் செலுத்தவில்லை.

வாலை வீசிக்கொண்டு எழுந்து வந்த புலிக்குட்டி திறந்த கூண்டின் வழியாகப் பாய்ந்து வீட்டுக்குள் ஓடிவிட்டது. புலிக்குட்டி பாய்ந்து வந்ததைச் சூரிய நமஸ்காரம் செய்து கொண்டிருந்த ராமநாதையா கவனிக்கவில்லை.

வீட்டில் யாரும் இல்லை; எல்லாரும் படுத்துத் தூங்கிக்கொண் டிருந்தார்கள்; பின்புறம் குளியலறையில் தாயும் பெண்ணும் குளித்துக்கொண் டிருந்தார்கள்.

சாந்தா மெதுவாக நடந்து அந்தத் தொட்டில் பக்கம் போயிற்று. தொட்டிலில் ருக்மிணியின் குழந்தை. தாய் போர்த்து விட்டுச் சென்றிருந்த துணியைத் தள்ளிவிட்டுக் குழந்தை தன் பிஞ்சுக் கால்களைத் போர்வையின்மேல் போட்டிருந்தது. காலை உதைத்துக் கொண்டு விளையாடிய குழந்தையின் பாதங்கள் சிவந்து காணப்பட்டன.

இரத்தம் மாதிரி சிவந்து காணப்பட்ட அந்தப் பாதங்களைப் பார்த்தவுடன் சாந்தாவுக்குப் பழைய ருசி ஞாபகம் வந்துவிட்டது போலும்! அதன் கண்களும் பார்வையும் பயங்கரமாக மாறின. கடந்த இரண்டு நாட்களாகவே அதன் போக்கில் மாறுதல் ஏற்படத் தொடங்கியிருந்தது. பாலை முன்போல் சுவைத்துச் சாப்பிடவில்லை, சாதத்தையும் வயிறார உண்ணவில்லை.

புலிக்குட்டி ஒரு துள்ளுத் துள்ளி, தொட்டிலில் பாய்ந்து குழந்தையின் சிவந்த பாதங்களைக் கவ்விப் பிடித்தது.

"குவா!" என்று குழந்தை ஒரு தட்வை வீரிட்டது. அவ்வளவுதான். அதற்குள் ருக்மிணியின் தங்கை சுநீதி விழித்துக்கொண்டு "ஐயோ.... அம்மா!" என்று கத்தினுள்.

ராமநாதையா உள்ளே ஓடிவந்தார். எல்லாரும் விழித்துக்கொண்டு வந்துவிட்டார்கள். "என்னடீ.... என்ன ஆச்சு?" என்று கூக்குரலிட்டுக்கொண்டு சுந்தரம்மாள் ஓடிவந்தாள். நீர் சொட்டச் சொட்டச் சேலையைச் சுற்றிக்கொண்டு ருக்மிணியும் ஓடி வந்தாள்.

ஒரு தடியை எடுத்து ராமநாதையா சாந்தாவின் மீது பலமாக வீசினுர். குழந்தையின் கால்களைக் கவ்விஇருந்த புலிக்குட்டி தாவிக் கீழே பாய்ந்தது.

ராமநாதையா மீண்டும் அதன் மீது தடியை ஓங்கி வீசி[illegible]. இரண்டாவது அடி விழுந்ததும் சாந்தாவி[illegible]கம் உக்கிரமாக மாறிவிட்டது. காளியைப் [illegible]ால. அதைப் பார்க்கவே பயங்கரமாக இருந்தது. மீண்டும் அடிக்கத் தடியை ஓங்கியதும் அது அவர் மீதே பாய்ந்தது.

இ[illegible]குள் வீட்டின் பின்பக்கம் இருந்த பரச்ச[illegible] [illegible]டிவந்தான். என்ன நடந்திருக்கிறது [illegible]து அவனுக்குத் தெரிந்துவிட்டது. "இ[illegible] [illegible]டிய விடக்கூடாது. இரத்தத்தின் ரு[illegible]சி கண்டுவிட்டது; இனிமேல் [illegible]தான்" என்று கூறியபடி அதன் [illegible] ஒரு [illegible]காடரியை வீசினுன்:

கோட[illegible]யைப் [illegible]ார்த்த புலிக்குட்டி அவன் மீது பாய[illegible]ந்தது. ஆனுல் பரச்சன் மிகவும் பலசாலி. அவ[illegible] புலிக்குட்டியின் நெற்றியிலும் வயிற்றிலும் மாறி மாறிக் கோடரியால் போட்டான்.

சாந்தா மலையே அதிரும்படியாக 'ஆ' வென்று அலறியபடி கீழே சாய்ந்துவிட்டது. கீழே விழுந்த பிறகும் பரச்சன் விடாமல் அடித்தான்.

சாந்தாவின் இரத்தம் அங்கே பெருகி ஓடி உறைந்தது.

சூரியோதய[illegible]ம் ஆயிற்று. கிழக்கு வானம் இரத்தம்போல் சிவந்து [illegible]ாணப்பட்டது. வானத்தைச் சேர்ந்த [illegible]ம் இரத்தம் கலந்தது மாதிரி ய[illegible] பு[illegible] உய[illegible]த்தில் வட்டமிட்டுக்கொண்[illegible] ஆரு பருந்தும் இரத்தம் தோய்ந்தது [illegible] [illegible]து சிவப்பாகத் தோன்றியது.

குழந்தைக்கா[illegible] [illegible]ணி அழுத அழுகை அந்தக் காடு மு[illegible] எதிரொலித்தது. அந்த வனப் பிரதேசமே [illegible]கலி அழுவதுபோல் 'உர் உர்' என்று காற்றின் சப்தம் கேட்டது. பறவைகளின் ஓசையும் அப்படியே தோ[illegible]றியது. ஆமாம். இப்பொழுது ருக்மிணி[illegible] தேற்றுவதற்கு அழாமல் இருப்பவர் யார்

Edited and Published by R. Narayanaswamy, for and on behalf of the Kalaimagal Office
Printed at the M.L.J. Press Private Ltd., 55/56, Mundakakanni Amman Koil Street, Mad[illegible]

